# جاء الحق

# அசத்தியம் அழிந்தது

உருது மூலம்:_

ஹகீமுல் உம்மத், அல்லாமா அஹ்மது யார்கான் முப்தி

[றஹ்மதுள்ளாஹி அலைஹி]

தமிழில் :-

கலீபத்துல் காதிரி, அல்ஹாஜ், மௌலவி பாஸில் ஷெய்கு

ஏ.எல்.பதுறுத்தீன் ஷர்கி,

[பரேலவி, ஸூபி, நக்ஷபந்தி]

# சமர்ப்பணம்

ஜாஅல்ஹக் என்ற இந்த நூலை தமிழ் கூறும் நல்லுலகுக்கு முதன்முதலில் அறிமுகம் செய்தவர்களும், தேவ்பந்தி வஹாபிகளின் நச்சுக்கருத்துக்களை தமிழ் பேசும் மக்கள் மத்தியில் முதன் முதலில் தோலுரித்திக் காட்டியவரும்,வாழ் நாள் முழுக்க மக்களுக்கு நல்லுரை கூறி வழிகாட்டுவதில் தன்னை முழுமையாக அற்பணித்தவர்களுமான கொழும்பு குப்பியாவத்தை மைய்யவாடியிலிருந்து ஆத்மீக அரசோச்சும் எனது உயிரிலும் மேலான குருநாதர், ஞானக் கடல், சத்திய இஸ்லாத்தின் போர்வாள் ஆஷிக்குர் ரஸூல் அல்ஆரிபுபில்லாஹ் அஷ்ஷாஹ் **ஷைகு அப்துல் காதிர் ஸூபி ஸித்தீக்கி காதிரி, நக்ஷபந்தி கத்தஸல்லாஹு ஸிர்ரஹுல் அஸீஸ்** அவர்களுக்கு இந்த நூலை அன்னாரின் நல்லாசி வேண்டி இதயத்தின் காணிக்கையாக சமர்ப்பணம் செய்கின்றேன்.

யாஅல்லாஹ்! எனது குருநாதரின் திருக்காட்சியை கனவிலும், நினைவிலும் நிரந்தரமாக்கியருள்புரிவாயாக! மறுமையில் அன்னாரின் அவையில் அடியேனுக்கு இடம் தருவாயாக ! ஆமீன் யாப்பில் ஆலமீன்.

# பொருளடக்கம்...

கட்டார் ஹமத் பின் கலீப் பல்கலைகழகத்தின் சமய ஒப்பீட்டாய்வு துறை ஆய்வுப் பேராசியரும், சர்வதேசத்தில் நன்கு மதிக்கப்படும் சிறந்த அறிஞரும், சிந்தனையாளரும் எனது ஆரம்ப கால ஆத்மீக நண்பருமான பேராசியர் **டொக்டர், தீன் முஹம்மத் அஸ்ஹரி** அவர்கள் மனம் கனிந்து வழங்கிய

# *மதிப்புரை*

சொல்லாலும், மனத்தாலும் தொடவொண்ணா பெருஞ்சோதி அல்லாஹ்வுக்கே சர்வ புகழும்! அல்ஹம்துலில்லாஹ்! அல்லாஹ்வின் பேரருளாய் படைப்பில் முதன்மையாகவும், தோற்றத்தில் இறுதியாகவும்; தனக்கு முந்திய நபிமார்கள் அனைவர் மூலம் நன்மாராயம் கூறப்பட்டவருமான சத்திய நபிகள் திலகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் மீது ஸலவாத்தும், ஸலாமும் கூறியவனாகவும்; அன்னாரின் பரிசுத்த குடும்பத்தினர்கள், தோழர்கள், மற்றும், அவர்களின் முன்மாதிரியின் கீழ் வாழ்ந்த முன்னோர்கள்; பின்னோர்கள் அனைவரையும் வாழ்த்தி அன்புடன் நினைவு கூர்ந்தவனாகவும்; பின்வரும் வசனங்களைப் பதிவு செய்ய விரும்புகின்றேன்.

கடந்த 300 வருடங்களாக முஸ்லிம்கள் மத்தியிலே பாரிய பிரச்சினை ஏற்படுவதற்கான பல முயற்சிகள் எதிர் சக்திகளால் மேற்கொள்ளப்பட்டன, பதிமூன்று நூற்றாண்டுகள் நடைமுறையினாலும், ஞானவான்களினதும், உலமாக்களினதும், அறிவியல் தியாகங்களிலிருந்தும் பாதுகாக்கப்பட்டு வந்ததும், முஸ்லிம்களின் வெற்றிக்கும், முன்னேற்றத்திற்கும் அத்திவாரமாகி அமைந்த இஸ்லாத்தின் அறிவியல் பாரம்பரியத்தினை, அதன் வழிபாட்டு முறையினை, அதன் ஒழுக்க ஆன்மீக வழியினை அழித்து அதில் குழப்பத்தை ஏற்படுத்த பல இயக்கங்களும், சிந்தனைப் பிரிவுகளும் இஸ்லாமிய உலகில் விதைக்கப்பட்டு, அவை வளர்வதற்கான சகல காரணிகளையும் உருவாக்கி தனித்துவமற்ற குழப்பங்கள் நிறைந்த சமுதாயமாக முஸ்லிம் சமுதாயத்தினை மாற்றுவதில் தெரிந்தோ தெரியாமலோ மும்முரமாக ஈடுபட்டு வந்ததையும், வந்து கொண்டே இருப்பதையும் நாம் காண்கின்றோம்;

மறுமலர்ச்சி, சீர்திருத்தவாதம், மறுமலர்ச்சி, மார்க்க சிந்தனைக்கு புத்துயிர் அளித்தல் போன்ற கவர்ச்சியான சுலோகங்களுக்குப் பின்னால் மறைந்திருந்து கொண்டு மக்களை சீர்குலைப்பதிலும்,

இஸ்லாமிய மரபுகளிலிருந்து தூரமாக்குவதிலும், விழுமியங்களிலிருந்து விலக்குவதிலிருந்தும் ஓரளவு வெற்றி கண்ட இந்த இயக்கங்களில் "வஹாபிசம்" என்று அறியப்படும்" நஜ்திவாதம்" முதன்மையானதாகும்.

இருபதாம் நூற்றாண்டில் இந்நஜ்திய வாதத்தினைத் தழுவிய நாடுகள் கண்ட எதிர்பாராத பொருளாதார வளர்ச்சி, வஹாபிஸப் பிரச்சாரத்திற்கும், அதன் கணிசமான வெற்றிக்கும் காரணமாக அமைந்தன; பலதரப்பட்ட உயர் கல்வி நிலையங்களை நிறுவி, கவர்ச்சியான சலுகைகளை வழங்கி, ஆயிரக்கணக்கான பிரச்சாரகர்களை உருவாக்கி, வஹாபிஸப் பிரச்சாரத்திற்கு வழி வகுத்தது மட்டுமல்லாமல் முஸ்லிம் சமூகத்தில் முன் எப்போதும் இல்லாத "அறிவியல் விபச்சாரம்" என்ற ஒரு நிலையை ஏற்படுத்திய பல அறிஞர்களை சிக்க வைத்த நிலைகளையும், தொடர்ந்து கொண்டிருக்கும் அதன் அகோர விளைவுகளையும் இன்றும் கண்கூடாக கண்டு கொண்டிருக்கின்றோம்.

சத்திய இஸ்லாத்தின் அத்திவாரமான அல்குர்ஆனையும், அதன் முதல் தெளிவானதும், நடைமுறை மிக்கதுமானதுமான நபி போதனையையும், வழிகாட்டல்களையும், முன்மாதிரிகளையும் குழப்பமாக்கி விளங்குவதற்கு அல்லாஹ்வால் அல்குர்ஆனில் அறிமுகப்படுத்தப்பட்டு நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களால் தெளிந்துரைக்கப்பட்ட "அல்லாஹ்வைப் பயந்த அறிஞர்களின் அதிகாரம்" அவ் அறிஞர்களின் பெரும்பான்மை முடிவின் ஆளுமைகளை முறியடித்து, அதன் மூலம் இஸ்லாத்தை விளங்குவதில் குழப்பத்தை ஏற்படுத்துவதிலும், முஸ்லிம் ஒற்றுமையை குலைப்பதிலும் வஹாபிஷமும் அதன் தொண்டர்களும் செய்யும் முயற்சிகள் குறைந்தவை யல்ல!

உலமாக்களின் பொடுபோக்கினாலும், வறுமையின் தாக்கத்தினாலும் வஹாபிஸத்தின் காலடியில் விழுந்து சிறைபிடிக்கப்பட்ட சில எழுத்தாளர்களின் பிரச்சாரங்களினாலும் வஹாபிஸ உலகில் தொழில் வாய்ப்புகளுக்குச் சென்று அதன் சிந்தனை வலையில் சிக்கிய அப்பாவி தொழிலாளர்களினாலும் இந்த வஹாபிகளின் குழப்பங்களும், பித்தலாட்டங்களும் தமிழ் பேசும் முஸ்லிம் உலகில் பயங்கரமான முறையில் பரவி வருவது மிக வருந்த க்கூடிய விடயமாகும்;

இந்த அலையை நிறுத்தும் முயற்சிகள் மிகவும் குறைவாகவே இருந்திருக்கின்றது என்பதும், அவற்றினை எதிர்த்துப் போராடவும், அதற்கென தங்களை அர்ப்பணிக்கும் நிலையில் பெரும்பாலான சுன்னத்துல் ஜமாத் உலமாக்கள் இல்லாமலிருப்பதனால் வழி தவறியவா்களை நோ்வழிக்கு கொண்டு வர ஆக்கமான முறையில் செயல்படும் திறனற்றவா்களாகி சுன்னத்துல் ஜமாத் முஸ்லிம்கள் தட மாற்றத்தில் இருந்து கொண்டிருக்கும் இந்த சூழலில் தான் இந்த வஹாபிகளின்

வழிகேடுகளை விளக்கி உண்மையான சத்தியத்தின் தெளிவை முன் வைக்கும் முயற்சியில் மௌலவி பாஸில் பதுறுத்தீன் ஷர்க்கி பரேலவி அவர்கள் ஈடுபட்டுள்ளார்கள் என்பது ஒவ்வொரு முஸ்லிமுக்கும் பெருமை தரும் ஒன்றாகும்.

நீண்ட காலமாக பித்அத்துக்கள் வழிகேடுகளை எதிர்கொள்வதிலும் உண்மையை விளக்குவதிலும் பேச்சிலும் எழுத்திலும் தனது எந்த ஒரு தனிப்பட்ட நலனுமின்றி காலத்தை கழித்து வரும் மௌலவி பதுறுத்தீன் அவர்கள் தமிழ், அரபு உருது ஆகிய மொழிகளில் பரிட்சியம் பெற்றவர், இலங்கையிலும் இந்தியாவிலும் உயர் கல்வி பெற்றவர், பேராதனை பல்கலைக்கழகத்தில் மெய்யியல்துறையில் இளமானி சிறப்புப் பட்டம் பெற்றவர்.

முஹ்யத்தீன் இப்னு அரபி கத்தஸல்லாஹு ஸிர்ரஹுல் அஸீஸ் அவர்களது(வஹ்தத்துல் வுஜூத் என்ற) தத்துவ சிந்தனையையும், வேதாந்தத்தின் தந்தையான ஆதிசங்கரரின் (அத்வைதம் என்ற)தத்துவ போதனைகளையும் ஒப்பீட்டு ரீதியாகப் படித்து இவர் சமர்ப்பித்த ஆராய்ச்சிக் கட்டுரை எந்த ஒரு சர்வதேச பல்கலைக்கத்திலும் கலாநிதிப் பட்டத்திற்காக ஏற்றுக் கொள்ள படும் தகுதி பெற்றதாகும் என்பது எனது கருத்தாகும்.

வஸீலா, ஹிக்மா ,புஷ்ரா உள்ளிட்ட மாத இதழ்கள் மூலமும், மற்றும் பல நூற்கள் மூலமும் சத்திய இஸ்லாமிய சிந்தனையை பரப்பி வழிகேடுகளிலிருந்து முஸ்லிம்களைப் பாதுகாக்க இவர் எடுத்த அறிவியல் முயற்சி என்றும் பாராட்டப்பட வேண்டியதாகும்; அதே முயற்சியின் தொடரில் இன்று அவர் வழங்கும் ஜாஅல்ஹக் அசத்தியம் அழிந்தது! என்ற நூல் அனைத்து விளக்கங்களையும் உள்வாங்கிய சிறந்த பெரும் தொகுப்பாகும்.

"ஜாஅல்ஹக்" என்ற உருது நூலை இந்தியாவிலும், பாகிஸ்தானிலும் மிகவும் பிரபல்லியமான முப்தி அல்லாமா அஹ்மது யார் கான் றஹ்மத்துள்ளாஹி அலைஹி என்பவரால் உருது மொழியில் எழுதப்பட்ட இந்த பெரு நூலை அழகிய தமிழில் பல சிரமங்களுக்கு மத்தியில் மொழி பெயர்த்திருக்கின்றார் மதிப்புக்குரிய எனது அன்பு நண்பர் பதுறுத்தீன் மௌலவி!

இன்று வஹாபிகளால் பிரச்சனைகளாகக் காட்டப்படும் சகல விடயங்களையும் திருக்குர்ஆன், திருநபிமொழி, தப்ஸீர், ஹதீஸ், ஃபிக்ஹ் அறிஞர்களின் ஆதாரங்கள், மறுப்பாளர்களின் விளக்கங்கள், பகுத்தறிவு விளக்கங்கள், இவை தொடர்பான கேள்வி, பதில்கள் மூலம் தெளிவாகவும், அழகிய முறையிலும் விளக்கி சந்தேகங்களை போக்கும்

இந்த நூல் தமிழ் பேசும் முஸ்லிம்களுக்கும், மற்றும் சத்தியத்தை விரும்பித் தேடுபவர்களுக்கும் ஒரு வரப்பிர சாதமாகும்.

இஸ்லாமிய அறிவியல் பாரம்பரியத்திலிருந்து மாறுபடாமல் இஸ்லாத்தின் அடிமூலங்களை ஆதாரமாகக் கொண்ட இந்த நூல் வஹாபிகளின் குழப்பங்கள் பற்றிய தெளிவினை இலகுவான மொழியிலும், இன்பத் தமிழிலும் தக்க ஆதாரத்துடன் முன்வைக்கின்றது.

இஸ்லாமிய அறிவியல் பாரம்பரியத்தின் முடுக்கெல்லாம் சென்று அங்கு மறைந்து கிடந்த முத்துக்களையெல்லாம் தேர்ந்தெடுத்து ஆதாரப்பூர்வமாக சுன்னத்துல் ஜமாத்தின் உலமாக்கள் விளங்கும் வகையில் எழுதப்பட்டுள்ள இந்நூல் ஆலிம்களுக்கும், படித்தவர்களுக்கும், மாணவர்களுக்கும் பாமரர்களுக்கும் ஏன் எல்லோருக்கும் பொதுவான ஒன்றாகும்;

வஹாபிஷ வலையில் சிக்கிக் கிடக்கும் மாணவர்கள், உலமாக்கள்; தெளிவு தேடி நிற்கும் மற்றவர்கள் எல்லோருமே படித்துப் பயன்பெற வேண்டும் என்று ஆவல் வைக்கும் அதே நேரத்தில் இந்நூலின் ஆசிரியருக்கும், இதனை தமிழ் படுத்தித் தந்த மௌலவி, பாஸில் ஏ.எல். பதுறுத்தீன் ஷர்க்கி பரேலவி அவர்களுக்கும் ஈருலகப்பேற்றினை ஆசீர்வதித்துப் பிரார்த்திகின்றேன்.

மேலும், மேலும் இவரது முயற்சியைத் தொடர இவருக்கு அல்லாஹ் தவ்பீக் செய்ய வேண்டும் என்றும், நோய்நொடிகளிலிருந்து இவரைப் பாதுகாத்து சுகம் நிறைந்த நீண்ட ஆயுளை வழங்க வேண்டும் என்றும் அவனைப் பிரார்த்திக்கின்றேன்.

*தீன் முஹம்மத்*
*சமய ஒப்பாய்வு, தற்கால குர்ஆனிய ஆராய்ச்சிகள்;*
*மனித நாகரீகத்தில் முஸ்லிம்களின் பங்களிப்பு ஆய்வு*
*மையத்தின் ஆய்வுப் பேராசிரியர்*
*ஹமதான் கலீல் பல்கலைக்கழகம்,*
*கட்டார்*
*30/6/2024.*

இலங்கையில் அஹ்லுஸ் ஸுன்னத் வல் ஜமாஅத்தின் மூத்த ஆலிமும், முன்னாள் ஆசிரிய ஆலோசகரும், தற்போது வக்ப் வாரியத்தின் உறுப்பினரும் கொழும்பு பெரிய பள்ளிவாசலின் பிரதம கதீபும் எனது நீண்டகால நண்பருமான **மௌலவி இஜ்லான் காஸிமி அவர்கள்** மனமுவந்து வழங்கிய

# அணிந்துரை

கலீபத்துல் காதிரி, மௌலவி, பாஸில் ஏ.எல் பதுறுத்தீன் ஷர்க்கி, பரேலவி காதிரி, நக்ஷபந்தி அவர்கள் மொழிபெயர்த்து வெளி யிட்டிருக்கும் இந்நூல் பாக்கிஸ்த்தானைச்சேர்ந்த பன்னூலாசிரியர் ஹகீமுல் உம்மத், முப்தி ,அஹ்மத் யார்கான் றஹ்மத்துள்ளாஹிஅலைஹி அவர்கள் உருதுவில் எழுதிய ஜாஅல் ஹக், வஸஹகல்பாதில் 'சத்தியம் வென்றது, அசத்தியம் அழிந்தது" என்ற நூலின் தமிழாக்கமாகும். இந்நூலை எவரும் எழிதில் விளங்கும் வகையில் அழகு தமிழில் மொழிபெயர்த்து 'அசத்தியம் அழிந்தது!' என்று தலைப்பிட்டு வெளியிட்டுள்ளார்கள்.

மௌலவி பாஸில் பதுறுத்தீன் அவர்கள் எனது நீண்ட கால நண்பர், பன்னூலாசிரியர், பத்திரிகையாசிரியர், இலங்கையில் சிதறிக் கிடந்த அஹ்லுஸ்ஸுன்னத் வல்ஜமாஅத் உலமாக்களை ஒன்று திரட்டி 'மஜ்லிஸ் உலமாயி அஹ்லிஸ் ஸுன்னத் வல் ஜமாஅத்', என்று ஓர் அமைப்பை நிறுவியும், பலமத்ரஸாக்களை நிறுவியும் அஹ்லுஸ் ஸுன்னத் வல் ஜமாஅத்திற்கு அரும் பணியாற்றியவர்களாகும்.

இலங்கையில் 1950ம் ஆண்டுக்குப் பின் வஹாபிஸத்தின் நச்சுக் கொள்கைகள் பல பெயர்களில் அறிமுகமாயின, ஆயினும், இவர்களின் கொள்கைகள் 1975க்குப் பின், தலதூக்கி, 1990க்குப் பின்புதான் வீரியம் பெற்றது. இக்காலத்தில் இவர்களின் வீரியத்தை முறியடிப்பதில் அருமை நண்பர் மௌலவி பதுறுத்தீன், ஷர்க்கி, பரேலவி அவர்கள் நாடுமுழுவதும் சுற்றிச்சுழன்று சூறாவளிப்பிரச்சாரம் செய்து வஹாபிஸத்தின் நச்சுக்கருத்துக்களை முறியடிப்பதில் இவர்கள் ஆற்றிய பங்களிப்பை எழிதில் எவரும் மறந்து விடலாகாது!

உங்கள் கையிலுக்கும் இந்நூலை ஆரம்பம் முதல் இறுதிவரை படித்தேன், தற்காலத்தில் குழப்பவாதிகளால் பிரச்சினையாக்கப்பட்டு அதிகம் பேசுபொருளாக்கப்பட்டு விவாதிக்கப்படும் விடயங்களில் 26 ஆய்வுகள் இதில் இடம் பெற்றுள்ள; ஒவ்வொரு ஆய்வும் தனித்தனி சிறு

நூலாக அமைந்துள்ளது, இவற்றுள் 'இல்முல் ஙைப்' மறைஞானம் பற்றிய ஆய்வு அரிய விரிவாகவும், நுட்பமான ஆய்வாகவும் அமைந்திருப்பது கவனிக்கத்தக்கது. ஏனைய நூற்களைப்போன்றில்லாமல் இதன் ஆய்வுப்பாங்கு தனித்துவமாக இருப்பதை அவதானிக்க முடிகின்றது, இதில் ஆச்சரியமான விடயம், தற்கால குழப்பவாதிகள் தாங்கள் புதிதாக ஆய்வு செய்து கண்டுபிடித்ததாகக் கூறும் குற்றச்சாட்டுகள் அனைத்தையும் இசகு பிசகில்லாமல் அப்படியே நூறு ஆண்டுகளுக்குமுன் குழப்பவாதிகள் கூறியவை என்பதை 'குற்றச்சாட்டுக்களும், தக்க பதில்களும் 'என்ற பகுதிகள் புட்டுவைக்கின்றன இதன்மூலம் நூறு ஆண்டுகளுக்கு முன் வழிகேடர்கள் முன்வைத்தையைத்தான் தற்காலத்து குழப்பவாதிகள் கிளறுகிறார்கள் என்பது வெளிச்சமாகி விட்டது.

'ஜாஅல்ஹக், அசத்தியம் அழிந்தது'! என்ற இந்த நூல் படித்தவர் பாமரர் உள்ளிட்ட அனைவரும் படித்து விளங்கும் வகையில் எழிய நடையில் எழுதப்பட்டுள்ளது, அனைத்து பிரச்சினைகளுக்குமான பூரணமான விளக்கத்தை தொகுப்பாக ஒரே பார்வையில் பார்க்கக்கூடியதாக இருப்பது இதன் சிறப்பம்சமாகும், இந்த அமைப்பில் இதற்கு முன் இப்படியொரு நூல் இதுவரை தமிழில் வெளிவரவில்லை; இந்த வகையில் மௌலவி பதுறுத்தீன் ஷர்க்கி, பரேலவி அவர்கள் மிகப் பெரிய பங்களிப்பை தமிழ் பேசும் முஸ்லிம் சமுகத்திற்கு வழங்கியிருக்கின்றார்கள் என்றே கூறவேண்டும்.

இந்த நூல் ஒவ்வொரு அஹ்லுஸ்ஸுன்னத் வல்ஜமாஅத் உலமாக்கள், பள்ளிவாசல் இமாம்கள், தஃவா பிரச்சாரகர்கள் உள்ளிட்ட அனைவரிடமும் இருக்க வேண்டும், குறிப்பாக மத்ரஸாக்களில் இதை பாடத்திட்டத்தில் சேர்த்து மாணவர்களுக்கு கருத்தூண்றி படிக்க வழிகாட்டப்பட வேண்டும் என்பது எனது விருப்பம், வசதியுள்ளவர்கள் இதைவாங்கி குழம்பிப் போயிருப்பவர்களுக்கு வழங்தினால் இன்ஷாஅல்லா நிச்சயம் தெளிவடைவார்கள்; அல்லது மௌனிப்பார்கள்.

இந்த நூலில் நஜ்தி வஹாபிஸம் தோன்றிய வரலாறும், இந்தியாவில் வஹாபிஸம் 'தேவ்பந்திகள்' என்ற பெயரில் அறிமுகமான வரலாறும் விளக்கமாகக் கூறப்பட்டுள்ளன, ஆயினும், இந்நூலில்' தேவ்பந்தி வஹாபி'களால் முன்வைக்கப்படும் பிரதானமான பிரச்சினைகளுக்கே விளக்கம் கூறப்பட்டுள்ளன; இந்நூலை வாசிப்பவர்கள் 'தேவ்பந்திகள் எந்தளவு ஆபத்தானவர்கள் என்பதையும், இவர்களின் போலியான வேசத்தையும் நன்கு புரிந்து கொள்வார்கள்.

அருமை நண்பர் மௌலவி, பாஸில் பதுறுத்தீன் ஹளறத் அவர்கள் இதற்குமுன், சிறந்த பல நூற்களை வெளியிட்டுள்ளார்கள், இவர்களால்

இலங்கையில் வெளியிடப்பட்ட "ஹிக்மத், புஷ்றா உள்ளிட்ட மாதாந்த சஞ்சிகைகளில் பல ஆய்வுக்கட்டுரைகளை வெளியிட்டிருந்தார்கள், அவற்றையும் தொகுத்து நூலாக வெளிவருமாயின், மிக்க பயனுள்ளதாக இருக்கும் என்று நம்புகின்றேன், இது போன்று இன்னும் பல சிறப்பான நூற்கள் இவர்கள் மூலம் வெளிவர பூரண உடல் ஆரோக்கியத்தையும், அதற்கான தௌபீக்கையும் வல்ல நாயன் வழங்க வேண்டும் என்றும், இந்நூலின் மூல ஆசிரியருக்கும், மொழி பெயர்ப்பாசிரியருக்கும் றஹ்மான் பேரருள் புரிய வேண்டும்என்றும் பிராத்தித்து முடிக்கின்றேன்.

வஸ்ஸலாம்.

*மௌலவி, இஜ்லான் காஸிமி*
*பிரதம கதீப்*
*பெரிய பள்ளிவாசல் ,*
***கொழும்பு.***
*26 / 10 / 2024*

காயல்பட்டினம் மஹ்லறத்துல் காதிரிய்யா அரபுக் கலா பீடத்தின் முதல்வரும், நாடறிந்த பேச்சாளரும், எனது நண்பருமான கண்ணியத்திற்குரிய **மௌலவி, அஸ்ஸெய்யித் அப்துர்ரஹ்மான் தங்கள் பாகவி, பாக்ஸில் அஹ்ஸனி அவர்கள்** மனமுவந்து வழங்கிய

# *வாழ்த்துரை*

அளவற்ற அருளாளன் நிகறற்ற அன்புடையோன் அல்லாஹ்வின் பெயர் போற்றி அருள்தூதர் முஹம்மது صلى الله عليه وسلم அவர்கள் மீது ஸலாத்து ஸலாம் கூறியவனாய்...

அல்லாஹ் ஆதம் عليه السلام அவர்களை படைத்த காலத்திலிருந்தே அவ்ரகளின் மக்கள் வழியாக முஸ்லிம்கள் அல்லாஹ்வை நம்பி வணங்கி வருகின்றனர். அவ்வாறே நபிமார்கள் தொடராக வந்து முத்திரை முழுமதியான முஹம்மது நபி صلى الله عليه وسلم அவர்களை அல்லாஹ் அனுப்பி நபிமார்களின் வருகையை நிறைவுபடுத்தினான். நிறைவு சமுதாயமாக முஹம்மது صلى الله عليه وسلم அவர்களின் உம்மத்தை நிறைவு படுத்தி இறுதிநாள் வரை நிலைபடுத்தியுள்ளான். இச்சமுதாயத்திற்கு சீரான வழிகாட்டுதல் இருந்தாலும், வழிகேடுகள் ஏற்பட்டு பிரிவினைகள் ஏற்படும் என்றும் அதில் வெற்றி பெறும் சமுகத்தையும் அண்ணல் முஹம்மது صلى الله عليه وسلم அறிமுகப்படுத்தி அவர்களின் அடையாளத்தையும் தெளிவு படுத்தியுள்ளார்கள்.

நிச்சயமாக பனூ இஸ்ரவேலர்கள் 72 பிரிவினர்களாக பிரிந்தனர் என் சமுதாயம் 73 பிரிவினர்களாக பிரிவார்கள். நானும் என் தோழர்களும் சென்ற பாதையில் செல்லாத 72 பிரிவினர்களும் நரகம் செல்வார்கள். அவர்கள் வழிகேடர்கள் என அண்ணல் நபி صلى الله عليه وسلم அவர்கள் வெற்றி பெறும் சமுகத்தை அறிமுகப்படுத்தியுள்ளார்கள்.

தற்காலத்தில் வழிகெட்ட எல்லா கூட்டத்தினரும் நாங்கள் தான் வெற்றி பெற்ற கூட்டத்தினர் என தம்மைத் தாமே அறிமுகப்படுத்துகின்றனர். மற்றவர்களை இணைவைப்பாளர்கள், பித்அத்காரர்கள் என குறைபடுத்தியும் வருகிறார்கள். இக்கால கட்டத்தில் சத்திய கொள்கையை ஆதாரங்கள் மூலமாக தெளிவுபடுத்த சிறந்த நூற்கள் தேவைப்படுகின்றன.

14 நூற்றாண்டுகளாக அஹ்லுஸ் ஸுன்னத் வல் ஜமாஅத்தினர் தான் வெற்றி பெற்றவர்கள் என்பதை தூய இஸ்லாமிய உலகம் சாட்சி சொல்கின்றது. வெற்றிபெற்ற சத்திய கூட்டத்தை தெளிவுபடுத்த அவர்களின் கொள்கைகள் மற்றும் செயல்பாடுகள் அல்லாஹ், ரஸூல், மற்றும் நேர்வழி பெற்ற ஸஹாபாக்களின் வழிமுறையே என்பதை தெளிவுபடுத்தி காட்டவேண்டும்.

இத்தெளிவுபடுத்துதலை சீரான முறையில் நிறைவான ஆதாரங்களுடனும், முன்னோர்களின் வழிகாட்டுதலுடனும் உருது மொழியில் முஃப்தி, ஹகீமுல் உம்மத், அல்லாமா யார் கான் ரஹ்மதுல்லாஹி அவர்கள் جاء الحق (சத்தியம் வந்தது) என்ற தலைப்பில் மிகச் சிறந்த நூலை வெளியிட்டார்கள். இந்நூல் குழப்பவாதிகளுக்கு சிம்ம சொர்ப்பனமாகவும், நல்லோர்களுக்கு தென்றலாகவும் அருமருந்தாகவும் அமைந்தது. ஸுன்னத் வல் ஜமாஅத்தின் சிறப்பான வழிகாட்டியாக திகழ்கிறது.

இந்நூல் ஸுன்னத் வல் ஜமாஅத்தின் கொள்கை கோட்பாடுகளையும் செயல் முறைகளையும் குர்ஆன், ஹதீஸ், மற்றும் நல்லோர்களின் வாக்குகள் மூலம் ஆதாரப்பூர்வமாக இதன் ஆசிரியர் தெளிவுபடுத்தியுள்ளார்கள். இந்நூல் உருது மொழி அறிவு பெற்ற மக்கள் மட்டுமே பலன் பெற்று பாராட்டி துஆ செய்த சூழலில் தமிழகம் பலன் பெற்று சீரான பாதையில் அஹ்லுஸ்ஸுன்னதி வல் ஜமாஅத்தின் அடிப்படையில் வாழ அன்பு சகோதரர் மௌலவி பாக்ஸில், அல் ஹாஜ் ஏ, எல், பத்ருத்தீன் ஷர்கி பரேலவி ஸூபி நக்ஷபந்தீ அவர்கள் இனிய தமிழில் எளிமையாக கால்த்திற் கேற்றார் போல் மொழி பெயர்த்து தந்துள்ளார்கள். இப்பணி மிக தேவையான அல்லாஹ், ரஸூலின் திருப்பொருத்தத்தை பெற்றுத் தரும் பணி என்பதில் சந்தேகமில்லை.

இந்நூலில் நாற்பெரும் இமாம்களை ஏற்று ஒருவரை பின்பற்றி வாழும் தக்லீதைப் பற்றியும் அதன் நிர்பந்த தேவைகளைக் குறித்தும் மிகத் தெளிவான ஆதாரங்களுடன் விளக்கப்பட்டுள்ளது. தூய இமாம்களின் நிறைவான ஆற்றலையும் அவர்களுக்கு அல்லாஹ் கொடுத்த தனித் திறமைகளையும் விளக்கி நமது மார்க்க ரீதியான பலஹீனத்தை தெளிவு படுத்தி இமாம்களை பின்பற்றுவதன் அவசியத்தை மிகத் தெளிவாக விளக்கிய மாண்பு ஆச்சிரியப்படவைக்கிறது. தக்லீதிற்கு எதிரான வாதங்களையும் எடுத்து வைத்து அதற்கான பதில்களும் சிறப்பாக எழுதப்பட்டுள்ளது. இமாம்களை பின்பற்றுபவர்களின் ஆதாரமாகவும் சந்தேக நோய்களுக்கு அருமருந்தாகவும் எதிர்வாதங்களை ஒடுக்கும் ஏவுகனைகளாகவும் திகழ்கிறது.

மௌலித், மற்றும் மீலாதுகளின் ஆதாரங்கள் விரிவாக அலசப் படுவதுடன் மறைந்த நபிமார்கள் மற்றும் வலிமார்களுக்கு அல்லாஹ் கொடுத்த ஆற்றலின் அடிப்படையில் உதவி தேடுவது சம்பந்தமான ஆதாரங்கள் விளக்கப்படுவதுடன் குருட்டுத்தனமான குறுக்குக் கேள்விகளுக்கு நிறைவான பதில்களும் நூலில் ஆழமாக கிடைக்கிறது. நபிமார்கள் மற்றும் வலிமார்களுக்கு அல்லாஹ் கொடுத்த மறை ஞானத்தை குர்ஆன் ஹதீஸ் ஒளியில் விளக்கமும், தெளிவும் நூலின் சுரங்கத்திலிருந்து அள்ளிக் கொள்ளலாம். மறைந்த வலிமார்களின் ஸியாரத் செய்வது ஸுன்னத் என்பதை நிலை நிறுத்துவதுடன் ஸியாரத்திற்கான பயணம் மார்க்கத்தில் அனுமதிக்கப்பட்டது என்பதனை இஸ்லாமிய ஞான ஒளியில் விளக்கம் பெறுவதற்கு இந்நூல் கலங்கரை விளக்காக விளங்குகிறது.

வாழ்வியலில் ஸுன்னத்தான நடமுறைகளை பித்அத் நவீன வாதம் என ஊளையிடுபவர்களின் வாதங்களை வரிசைப்டுத்தி விளக்கம் தருவது ஒரு நல்ல அறிஞர் நேரடியாக விளக்கம் தருவதைப் போன்று இந்நூல் ஓர் நல்ல தோழனாக செயல்படுகிறது.

மொத்தத்தில் அஹ்லுஸ் ஸுன்னத்தி வல் ஜமாஅத் என்ற ராஜா பாதையில் பயணம் செய்பவர்களுக்கு இந்நூல் ஒரு நல்ல வழிகாட்டியாக உற்ற தோழனாக, வழி தவறாமல் நேர் வழிகாட்டும் கலங்கரை விளக்காக ஜொலிக்கிறது. ஸுன்னத் வல் ஜமாஅத்தினர் வீடுகளில் இந்நூல் பாதுகாக்கப்பட வேண்டிய பெட்டகமாக, வளரும் தலைமுறையினருக்கு சுவர்க்கம் அழைத்துச் செல்லும் பாலமாக திகழ்கிறது.

கண்ணியமிகு மூல நூலாசிரியருக்கும், மொழிபெயர்ப்பாளருக்கும் அல்லாஹ் நிறைவான அருளையும, ஈருலக வெற்றியை கொடுத்து அல்லாஹ்விடத்தில் அங்கீகரிக்கப்பட்ட நல் அமலாக ஏற்றுக் கொள்வானாக. கியாமத் நாள் வரையிலும் பலனை தொடரச் செய்வானாக. நல்லோர்களுக்கு வழிகாட்டி வழிதவறியவர்களை சீராக்க இந்நூலை ஓர் வஸீலாவாக ஆக்கி அங்கீகரிப்பானாக ஆமீன்.

*மௌலவி, அஸ்ஸெய்யித் அப்துர்ரஹ்மான்*
*பாகவி பாஸில் அஹ்ஸனி*
*அதிபர் மஹ்லறத்துல் காதிரிய்யா*
*அரபுக் கலா பீடம்.*
*காயல்பட்டினம்*
*26 / 11 / 2024*

# பீடிகை

بسم الله الرحمن الرحيم

வஹாபிகள், தேவ்பந்திகள் உள்ளிட்ட வழிகேடர்களின் வழிகெட்ட கொள்கைகளை தக்க ஆதாரத்துடனும், தர்க்க நியாயத்துடனும் நிறுவி வெளிவந்த அற்புத நூல். ஜாஅல் ஹக்! இதனை மிகவும் பிரசித்தி பெற்ற பேரறிஞர், ஹகீமுல் உம்மத், அல்லாமா, முஃப்தி அஹ்மத் யார்கான் றஹ்மதுள்ளாஹி அலைஹி அவர்கள் எழுதியுள்ளார்கள். இவர்கள் பயன் மிக்க பல நூற்களை சமூகத்திற்கு சமர்ப்பித்துள்ளார்கள்.

அவற்றுள் தப்ஸீர் நயீமி, மிர்அத்துல் மனாஜீஹ் (மிஷ்க்காத் விரிவுரை) ஜாஅல் ஹக், உலூமுல் குர்ஆன். ஷஃனே ஹபீபுர் றஹ்மான் உள்ளிட்டவை மிகப் பெறுமதியானவையாகும். ஹகீமுல் உம்மத் அவர்களின் நூற்களை தமிழ் உலகம் படித்துப் பயன் பெற வேண்டும் என்ற பேரவாவில் அன்னாரின் நூற்களைத் தமிழாக்கத் துணிந்தேன்.

அல்லாஹ்வின் கிருபையால் ஜாஅல் ஹக், சல்தனத்தே முஸ்தஃபா, இஸ்லாம் கி சார் புன்யாதுல் உஸூல், உலூமுல் குர்ஆன், ஷஃனே ஹபீபுர் றஹ்மான் ஆகிய நூற்கள் தமிழ் வடிவம் பெற்றுள்ளன.

இவற்றுள், உலூமுல் குர்ஆன், 'திருக்குர்ஆனை மொழி பெயர்ப்புச் செய்வது எப்படி?' என்ற தலைப்பிலும், இஸ்லாம்கீ புன்யாத் என்ற நூல் இஸ்லாத்தின் அடிப்படை மூலக் கோட்பாடு-4 என்ற தலைப்பிலும், ஸல்தனத்தே முஸ்தஃபா என்ற நூல் சட்ட உருவாக்கத்தில் முஸ்தஃபா மாநபியின் அதிகாரம்' என்ற தலைப்பிலும், ஜாஅல் ஹக் 'அசத்தியம் அழிந்தது' என்ற தலைப்பிலும், ஷஃனே ஹபீபுர் றஹ்மான் 'மாமறை போற்றும் மாநபி' என்ற தலைப்பிலும் அடியேனால் தமிழாக்கப்பட்டுள்ளன.

அஹ்லுஸ் ஸுன்னத்வல் ஜமாஅத்தினருக்கு குறிப்பாக உலமாக்களுக்கு இவை ஒரு வரப் பிரசாதமாகும்.இவற்றை தொடர்ந்து படிப்பதன் மூலம் வழிகேட்டின் அசிங்கங்களை விளங்கி தன்னைப் பாதுகாத்துக் கொள்ள முடியும்.

ஹகீமுல் உம்மத் அவர்களின் அனைத்து நூற்களையும் தமிழில் கொண்டு வரவேண்டும் என்ற அவா என் மனதில் ஆழமாக உள்ளது. எனது விருப்பத்தை கிருபை உள்ள றஹ்மான் கபூல் செய்து இவற்றை எனது மறுமையின் வெற்றிக்கு காரணமாக்கி வைப்பானாக! ஆமீன்...!

ஜாஅல் ஹக்கின் அனைத்து ஆய்வுகளையும் 'அல்பத்ரு' என்ற எனது சமூக வலை தளத்தில் தொடார்ச்சியாக வெளியிட்டு வந்தேன். அதனை இப்போது நூல் வடிவில் உங்கள் முன் சமர்ப்பிக்கிறேன்.

இஸ்லாம் உலகில் தோன்றி 14 நூற்றாண்டுகள் கடந்து விட்டன. இக் காலத்திற்குள் இஸ்லாம் பல்லாயிரம் சோதனைகளுக்கு முகம் கொடுத்திருக்கின்றது. நபிகள் நாயகம் முஹம்மது முஸ்தஃபா ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்களுக்கும், அவர்களுக்கு எதிராகக் கிளர்ந்தெழுந்த பல்வேறு சூறாவளிகளுக்கும் நபிகள் திலகம் ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லமவர்கள் முகம் கொடுத்துள்ளார்கள். இவை அனைத்தும் அதன் பலத்தை காட்டி விட்டு தடயம் இல்லாமல் மறைந்து போய்விட்டன அல்ஹம்துலில்லாஹ்.!

இவற்றின் தாக்கத்தினால் இஸ்லாம் பாதிக்கப்படவில்லை.! இஸ்லாம் என்ற நந்தவனத்தின் பொலிவு மங்காமல், காயாமல் கருகாமல், பசுமையாக காட்சி தந்து கொண்டிருக்கிறது. இஸ்லாம் என்ற கதிரவனை மறைப்பதற்கு பல கார்மேகங்கள் போட்டி போட்டு முயற்சித்தன. ஆயினும்; இஸ்லாத்தின் பிரகாசத்தை அவற்றால் மறைக்கவோ மங்க வைக்கவோ முடியவில்லை! இஸ்லாமியச் சூரியன் அதன் பிரகாசத்தை கம்பீரமாக பரப்பிக் கொண்டே இருக்கிறது. காரணம்! இஸ்லாத்தின் முழு பொறுப்பையும் பாதுகாக்கும் பாரிய பொறுப்பையும் பார் உலகை படைத்தாளும் படைப்பாளன் பாரம் எடுத்துள்ளான்.

***அல்லாஹுத்தஆலா திருக்குர்ஆனில் கூறுகிறான்.***

إِنَّا نَحْنُ نَزَّلْنَا ٱلذِّكْرَ وَإِنَّا لَهُۥ لَحَٰفِظُون

***நிச்சயமாக நாம் தான் இந்த குர்ஆனை இறக்கி வைத்தோம்; நிச்சயமாக நாமே அதனை உறுதியாக பாதுகாக்கவும் இருக்கின்றோம்.***

*(அல் குர்ஆன் 15: 09)*

இஸ்லாமிய வரலாற்றின் கார் மேகங்கள் இஸ்லாமிய சூரியனுக்கு எதிராக வட்டமிட்டன. ஹஜ்ஜாஜ் இப்னு யூசுபின் புழுதிப்புயலும் பலமாக வீசி பார்த்தது, கலீஃபா மஃமூனின் அதிகார பலமும் மோதிப் பார்த்தது தாத்தாரியர்களின் அட்டூழியங்களும் அக்கிரமம் செலுத்தியது.

இது போன்று கவாரிஜ்களின் கலகங்களையும், ஷீஆக்களின் சதிகார நாசங்களையும் இஸ்லாம் பல முறை சந்தித்தும் அசையவில்லை! மோதியவர்கள் இடம் தெரியாமல் மறைந்து விட்டனர். இஸ்லாமிய வரலாற்றில் பல்வேறு சோதனைகளைச் சந்தித்தும் நஜ்திலிருந்து தோன்றிய குழப்பம்தான் படுமோசமான கறைபடிந்த சோதனையாக வரலாற்றில் பதிவாகியுள்ளது.

வஹ்ஹாபிகளின் சோதனைகளைப் பற்றி ஏற்கனவே ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் தீர்க்க தரிசனமாகக் கூறியுள்ளார்கள். வஹாபிகளின் சோதனைகள் பல்வேறு வடிவங்களில் முஸ்லிம்களை பதம் பார்க்கின்றன. ஒரு தினம் ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கோபமாக காணப்பட்டார்கள். அப்போது பெருமானாரின் திருச்சபையில் எமன், ஷாம், நஜ்து நாட்டினர் இருந்தனர்.

இந்த சந்தர்ப்பத்தில் ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் இரு திருக்கரங்களையும் உயர்த்தி பின் வருமாறு பிரார்த்தனை செய்தார்கள்.'யா அல்லாஹ்! ஷாம் பிரதேசத்திற்கு பரக்கத் செய்வாயாக! எமன் பிரதேசத்திற்கு பரக்கத் செய்வாயாக!' சபையில் இருந்த நஜ்து வாசிகள் நஜ்துக்கும் துஆச் செய்யுமாறு வேண்டினர். அதை காதில் வாங்காமல் மீண்டும் மீண்டும் ஷாமுக்கும், எமனுக்கும் துஆச் செய்தார்கள்.

நஜ்து வாசிகள் தொடர்ந்தும் வேண்டுகோள் விடுத்துக் கொண்டிருந்தனர். இறுதியாக ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் இவ்வாறு கூறினார்கள், "நஜ்தில் குழப்பங்களும், அதிர்ச்சி தரும் நிகழ்வுகளும் ஏற்படும்.ஷைத்தானின் கூட்டமும் அங்கிருந்து தான் வெளிப்படும்".

*(அறிவிப்பவர் : இப்னு உமர் ரலியல்லாஹு அன்ஹுமா,*

*நூல்: புகாரி).*

பொதுவாக முஸ்லிம்கள் சந்திக்கும் படுமோசமான சோதனை தஜ்ஜாலின் சோதனை தான்! இதற்கு நிகரானது எதுவும் இல்லை. தஜ்ஜாலின் சோதனைக்கு அடுத்த பயங்கரமான சோதனை இருக்குமாயின், அது வஹாபிஸ

சோதனையாகும்.! நபிகள் நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வசல்லம் அவர்களின் மேற்படி கூற்று இதையே உறுதி செய்கிறது.

ஒருதினம் யுத்தத்தில் கிடைத்த கொள்ளை(ஙனீமத்) பொருட்களை ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் பங்கீடு செய்து கொண்டிருந்தார்கள். அப்போது ஒருவர் ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கு பின்னால் நின்று கொண்டு 'முஹம்மதே! (ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்) நீதி செய்யுங்கள்!' என்று கூறினான். இதை கேட்டதும் நபியவர்களுக்கு கோபம் வந்தது. 'எனக்கு பின் என்னை விட அதிகம் நீதி செய்யும் ஒருவரை நீர் காண மாட்டீர்' என்று கூறிவிட்டு,

அவரைச் சுட்டிக்காட்டி, "இவர் பரம்பரையில் ஒரு கூட்டம் வரும். அவர்கள் குர்ஆனை ஓதுவார்கள். அது அவர்களின் தொண்டைக் குழியைத் தாண்டாது, (மனதை தொடாது. வெற்றுச் சப்தமாக இருக்கும்.) வில்லிலிருந்து அம்பு வேகமாக சீறிப் பாய்வது போன்று இஸ்லாத்தை விட்டும் வெளியேறி விடுவார்கள். இவர்களுக்கான அடையாளம் முடியை சிரைப்பதாகும். இவர்களின் இறுதி நபர் தஜ்ஜாலுடன் சேரும் வரை தொடர்ச்சியாக இருப்பார்கள். நன்கு தெரிந்து கொள்ளுங்கள்! இவர்கள் தான் படைப்பில் மிகக் கேடு கெட்டவர்கள்!" என்றுரைத்தார்கள்.

மற்றொரு அறிவிப்பு 'சிலை வணங்கிகளை விட்டு விட்டு முஸ்லிம்களை கொலை செய்வார்கள்.'

*(அறிவிப்பவர்: ஹளரத் அபூ பெருசா ரலியல்லாஹு அன்ஹு*

*(ஆதாரம்: நஸஈ, மிஷ்காத்)*

வேறொரு அறிவிப்பு 'இவர்களை நான் சந்தித்தால் ஆது, தமூது கூட்டத்தினரைக் கொல்வது போன்று கொலை செய்வேன்' என்றும் ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள்.

*(ஆதாரம்: மிஷ்காத். பாடம்: அற்புதங்கள்).*

வேறொரு அறிவிப்பு 'இவர்களை நான் சந்தித்தால் ஆது, தமூது கூட்டத் தினரைக் கொல்வது போன்று கொலை செய்வேன்' என்றும் ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள்.

*(ஆதாரம்: மிஷ்காத். பாடம்: அற்புதங்கள். (முஃஷிஸாத்.)*

இக்கூட்டத்தின் அடையாளமான “முடியைச் சிரைத்தல்”என்பதை வஹாபிகளிடம் காண முடியும். தேவ்பந்திகளான தப்லீக் ஜமாஅத்தினர் மீசையை மழிக்கின்றனர். ஆக,"சிரைத்தல்" என்ற அடையாளம் இவ்விரு கூட்டத்திடமும் காணப்படுவதை அவதானிக்கலாம்.

வஹாபிகளும், தேவ்பந்திகளும் அஹ்லுஸ் ஸுன்னத் வல்ஜமாஅத் கொள்கையை பின்பற்றுகின்ற உண்மையான முஸ்லிம்களை வெறுக் கின்றனர். புறக்கணிக்கின்றனர். தேவ்பந்திகள் வஹாபிகளோடு ஒட்டி உறவாடுகின்றனர்.

குறிப்பாக! புனித மக்கா மதீனாவில் வாழுகின்ற அஹ்லுஸ் ஸுன்னத் வல் ஜமாஅத்தினரை வஹாபிகள் கடுமையாக வெறுப்பது வெளிப்படையானதே. ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் தீர்க்கதரிசன முன்னறிவிப்பின் பிரகாரம் முஹம்மத் இப்னு அப்துல் வஹ்ஹாப் நஜ்தி தோன்றினான். புனித மக்கா மதீனாவில் வாழ்ந்த மக்களுக்கு வரலாறு காணாத துன்பங்களை கொடுத்தான். இவன் புரிந்த அட்டூழியங்களை "சைபுல் ஜப்பார்","அன்வாறுல் முஹம்மதியா" போன்ற நூல்களில் காணலாம்.

வஹாபிகள் புரிந்த அக்கிரமங்களில் சிலவற்றை அல்லாமா ஷாமி ரஹ்மத்துல்லாஹி அலைஹி தங்களுடைய நூலான ரத்துல் முக்தாரில் பின்வருமாறு கூறுகின்றார்கள். சமகாலத்தில் முஹம்மது பின் அப்துல் வஹ்ஹாப் நஜ்தியைப் பின்பற்றுபவர்களால் கலகம் நடந்திருக்கிறது. இவர்கள் நஜ்திலிருந்து புறப்பட்டு புனித மக்கா மதீனாவை ஆக்கிரமித்தனர்.

இவர்கள் தங்களை ஹம்பலி மத்ஹபைப் பின் பற்றுவதாகக் கூறிக் கொண்டாலும், தாங்கள் மட்டும் தான் முஸ்லிம்கள், தங்கள் கொள்கைகளை பின்பற்றாதவர்கள் முஸ்லிம்கள் அல்ல, "முஷ்ரிக்குகள்" என்ற கொள்கையில் இருக்கின்றனர், இவர்களின் கொள்கையைப் பின்பற்றாதவர்களை கொல்வது ஆகும் என தீர்ப்பு கூறுகின்றனர். இதன் காரணமாக இவர்கள் கொள்கைகளை பின் பற்றாத ஸுன்னத் வல்ஜமாஅத்தினர்களையும், உலமாக்களையும் கொலை செய்கின்றனர்.

அல்லாஹுத்தஆலா இவர்களின் பலத்தை முறியடித்து ஹிஜ்ரி 1233ல் அவர்களின் பிரதேசங்களை நாசம் செய்து முஸ்லிம் படைகளுக்கு வெற்றியைக் கொடுத்தான்.

ஸைபுல் ஜப்பார் என்ற நூலில் வஹாபிகள் செய்த கொடுமைகளை பின் வருமாறு விளக்கிக் கூறப்பட்டுள்ளது.

புனித மக்கா, மதீனாவில் உள்ள மக்களை வகை தொகையின்றி கொலை செய்தனர்; அங்குள்ள பெண்களையும், சிறுமிகளையும் கற்பழித்து

அடிமைகளாக்கினர்; அஹ்லுல் பைத்துகளை அதிக அளவில் கொலை செய்தனர்; புனித மஸ்ஜிதுன் நபவியில் இருந்த விலை மதிப்பற்ற பொருட்களை சூறையாடி நஜ்துக்கு எடுத்துச் சென்றனர்; அஹ்லுல் பைத்துகள் உள்ளிட்டோரின் கபுரு ஷரீஃபுகளை இடித்து தரைமட்டமாக்கினர்.

காலையிலும் மாலையிலும் மலக்குகளால் ஸலவாத் ஓதப்படுகின்ற ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் புனித பச்சைக் குப்பாவையும் இடிக்கத் துணிந்தனர், இத்தீய எண்ணத்துடன் ஒரு கொடியவன் புனித ரவ்ழாவை நெருங்கினான். ஒரு விஷப் பாம்பை அவன் மீது அல்லாஹுதஆலா சாட்டினான்; அது அவனைக் கொன்றது. ரப்புல் ஆலமீன், ரஹ்மத்துன் ஆலமீனின் புனித இடத்தைப் பாதுகாத்தான். இவர்களின் அக்கிரமங்களை எழுத வார்த்தையில்லை!

அஹ்லுல் பைத்துகள் மீது அடாவடித்தனத்தை காட்டிய யஸீத் வீழ்ந்து போனான். ஆயினும், மரணித்தவர்களை அவன் அழிக்கவில்லை. ஆனால் 13 நூற்றாண்டுகள் கழித்து இவர்களின் புனித கப்ருகள் வஹாபிகளால் துவம்சம் செய்யப்பட்டன. இப்னு சவூத் செய்த கொடுமை களின் எச்சங்களை, தடயங்களை ஹஜ்ஜுக்குச் செல்வோர் இப்போதும் காண முடியும்.!

மக்கத்துல் முகர்ரமாவில் எந்த ஒரு ஸஹாபியின் கப்ருகளிலும் அடையாளங்கள் இல்லை.! இதை என் கண்ணால் பார்த்துள்ளேன்; அவர்களுக்கு அருகில் நின்று இவர்களுக்காக யாரும் பாத்திஹா ஓதுவது இல்லை. ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் பிறந்த முபாரக்கான வீட்டுக்கருகில் நாய்களும், கழுதைகளும் சர்வ சாதாரணமாக திரிகின்றன.

ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் பிறந்த புனிதமான இடத்தில் ஒரு ‘குப்பா’ முதலில் நிர்மாணிக்கப்பட்டிருந்தது. மக்கள் அந்த இடத்தில் தொழுவார்கள். அந்த இடத்தை ஸியாறத்தும் செய்வார்கள். இந்தப் புனிதமான இடம் அன்னை ஆமினா ரலியல்லாஹுத் தஆலா அன்ஹா அவர்களின் வீடாகும். இஸ்லாமிய பேரொளி ரஹ்மத்துன்லில் ஆலமீன், ஸெய்யிதுல் முர்ஸலீன்; ஷஃபீஉல் முத்னிபீன் இந்த முபாறக்கான வீட்டில்தான் உதித்தார்கள்.

மக்கத்துல் முகர்ரமாவில் புனித கஃபத்துள்ளாஹ்வுக்கு அடுத்த சிறப்பான இடமும் இது தான்! இப்பொழுது இந்த இடத்திற்கு எந்த மரியாதையும் இல்லை. இந்த அக்கிரமத்தை அல்லாஹுத்தஆலாவிடம் முறையீடு செய்வதைத் தவிர மாற்று வழி நமக்கு இல்லை. இது அரபு நாட்டின் கதை!

அடுத்து, இந்தியாவின் பக்கம் நமது பார்வையைச் செலுத்துவோம்.!

## இந்தியாவில் வஹாபிசம்!

இந்தியாவின் தலைநகர் தில்லியில் இஸ்மாயில் என்ற பெயர் கொண்ட ஒருவர் பிறந்தார், இவர் முஹம்மத் இப்னு அப்துல் வஹாப் நஜ்தியி "கிதாபுத் தவ்ஹீத்" என்ற நூலை தழுவி" "தக்வியத்துல் ஈமான்" என்ற பெயரில் ஒரு நூல் எழுதி வெளியிட்டார். பல இலட்சம் பிரதிகள் பிரசுரிக்கப்பட்டு முழு இந்தியாவிலும் இந்த நூல் பரப்பப்பட்டது; ஆங்கில அரசு தான் இக்காரியத்தை முழு வீச்சில் செய்தது.

இஸ்லாத்திற்கு விரோதமான தீய நச்சுக் கருத்துக்களை இதில் இவர் எழுதியதனால் பஞ்சாப் மாநிலத்தில் உள்ள "சர் ஹிந்து" என்ற இடத்தில் வாழ்ந்த பட்டாணி இன முஸ்லிம்களால் இவர் வெட்டிக் கொலை செய்யப்பட்டார்; ஆகவே, இவரை வஹாபிகளும், தேவ்பந்திகளும் "ஷஹீத்" என்று கூறுவதைக் காண முடியும்.!

உண்மை வரலாற்றை "அன்வாறே ஆப்தாப்" என்று உருது மொழி நூலில் காணலாம்! முஸ்லிம்களால் இவர் கொல்லப்பட்டதை மூடி மறைத்துவிட்டு சீக்கியர்களால் கொல்லப்பட்டதாக கதைக்கின்றனர் தேவ்பந்திகள். பஞ் சாப்பில் சீக்கியர்கள் அதிகமாக வாழும் இடம் “அமித்தரஸ்” அல்லது, பஞ் சாப்பின் கிழக்கு பிரதேசமாகும்;

இஸ்மாயில் திஹ்லவி சீக்கியர்களால் கொல்லப்பட்டிருந்தால், சீக்கியர்கள் வாழும் பிரதேசத்தில் அவர் கொல்லப் பட்டிருக்க வேண்டும்; ஆனால், இவர் கொல்லப்பட்டது முஸ்லிம்கள் செறிவாக வாழும் “சர்ஹிந்து” என்ற இடத்தில். இவர் முஸ்லிம்களால் தான் கொல்லப்பட்டார் என்பதற்கு அவர் கொல்லப்பட்ட இடமே தக்க ஆதாரமாகும். இவர் மீது முஸ்லிம்கள் வைத்திருந்த தீராப் பகையால் இவரின் உடல் அடக்கம் செய்யப்படாமலேயே அழிக்கப்பட்டது.

## வழி கெட்ட இரு பிரிவினர்.

இஸ்மாயில் திஹ்லவியை பின் பற்றியவர்கள் இரு பிரிவினர்களாகச் செயல்படுகின்றனர் .

### 1. கைறு முதல்லிது.

இவர்கள் இமாம்களைப் பின்பற்றுவதை மறுக்கின்ற வஹாபிகள்.

## 2. தேவ்பந்திகள்.

இவர்கள் தங்களை ஹனபிகள் என்று வெளியில் கூறிக்கொண்டு மக்களை ஏமாற்றுகின்ற பச்சோந்திகள். தொழுகை, நோன்பு உள்ளிட்ட வணக்கங்களை நம்மை போன்றே இவர்கள் கடைபிடித்தாலும் இவர்கள் ஆபத்தானவர்கள்.

## தீர்க்கதரிசனம் வெளிப்படல்.

நஜ்தில் ஷைத்தானின் கூட்டம் என்ற 'கர்னுஷ் ஷைத்தான்' வெளிப்படும் என்று ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்கள் தீர்க்கதரிசனமாகக் கூறினார்கள். இக்கூட்டம் இந்தியாவில் தேவ்பந்து என்ற பெயரில் வெளிப்பட்டது.

'கர்னுஷ் ஷைய்தான்' என்பதற்கு உருதுவில் 'தேவ்பந்து' என்பதே சரியான மொழி பெயர்ப்பாகும். உருதுவில் 'தேவ்' என்றால் 'ஷைய்தான்' என்று பொருள். 'பந்து' என்றால் 'கூட்டம்' நபியவர்களின் தீர்க்கதரிசனத்தின் அற்புதத்தை கவனித்துப் பாருங்கள்!

வஹாபி, தேவ்பந்தி ஆகிய இருவர்களும் செயல் சார்ந்த சில விடயங்களில் சில முரண்பாடுகள் இருந்தாலும், அகீதாவில் இருவரும் முஹம்மத் இப்னு அப்துல் வஹாப் நஜ்தியையே பின்பற்றுகின்றனர். வஹாபி அகீதாவை மக்கள் மயப்படுத்துவதில் இவர்கள் அயராது பாடுபடுகின்றனர்.

தேவ்பந்துகளின் குருபீடமான ரஷீத் அஹ்மது கங்கோஹி சாஹிப் தனது பதாவா றஷிதிய்யா பாகம்1 பக்கம் 119ல் 'தக்லீத்' என்ற பாடத்தில் பின் வருமாறு எழுதுகின்றார். முஹம்மத் இப்னு அப்துல் வஹ்ஹாப் நஜ்தியை பின்பற்றுகின்றவர்களை "வஹாபிகள்" என்கின்றனர், இவரின் அகீதா மிகவும் நல்லது. இவரின் மத்ஹபு ஹன்பலி; இவரின் சுபாவத்தில் "கடினம்" காணப்பட்டது; இவரைப் பின்பற்றுவோர் நல்லவர்கள்; இவரின் செயற்பாடுகள் எல்லை தாண்டியதால் குழப்பம் ஏற்பட்டது. எல்லோருடைய அகீதாவும் ஒன்றுதான்! செயலில் ஹனபி, ஷாபியி, மாலிகி, ஹன்பலி என்று வேறுபாடுகளைப் போன்று இங்கும் உள்ளது.

இரு கூட்டத்தின் அந்தரங்கத்தை உற்று நோக்கி பார்த்தால், மத்ஹபு களைப் பின் பற்றாத கைறுமுகல்லிதை விட மத்ஹபுகளை பின் பற்றுவதாகப் பாசாங்கு செய்யும் தேவ்பந்திகள் ஆபத்தானவர்கள்!

காரணம், பொதுமக்கள் இவர்களை அடையாளம் காண்பது கடினம்! ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களைப் பற்றி

''முஷ்ரிக்குகள்'' கூறாத அளவு அசிங்கமான வார்த்தைகளை இவர்கள் தங்கள் நூல்களில் எழுதியுள்ளனர்.

இவ்வாறு அசிங்கமான வார்த்தைகளை எழுதிய பின்பும் கூட, இவர்கள் இன்னும் முஸ்லிம்களின் தலைவர்களாகவே இருக்கின்றனர்.

தேவ்பந்துகளின் மற்றுமொரு குருபீடம் அஷ்ரப் அலி தானவி என்பவர் தனது நூல் 'ஹிப்லுல் ஈமான்' என்ற நூலில், "ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வசல்லம் அவர்களின் அறிவை பைத்தியக்காரன், சிறு மழலை, மிருகங்களின் அறிவுக்கு ஒப்பிட்டு எழுதியுள்ளார்.

"கலீல் அஹமத் அம்பேட்டேவி என்ற தேவ்பந்தின் மேலும் ஒரு குருபீடம், தனது "பராகினே காதிஆ" என்ற நூலில்,'ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் அறிவை விட ஷைத்தானுக்கும், மலக்குல் மவ்த்திற்கும் அதிக அறிவு உண்டு' என்று எழுதியுள்ளார்.

தேவ்பந்துகளின் தானைத் தலைவர் மௌலவி இஸ்மாயில் திஹ்லவி "ஸிராதுல் முஸ்தகீம்" என்ற நூலில்,"தொழுகையில் ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் நினைவு வருவது கழுதை, ஆடு, மாடுகளின் நினைவு வருவதை விட மோசமானது" என்று எழுதியுள்ளார்;

தேவ்பந்தின் நிறுவனர் மௌலவி காசிம் நானோதவி என்பவர் "தஹ்தீருன் நாஸ்" என்ற தனது நூலில், ரஸூலுல்லாஹ் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் "காத்தமுன் நபிய்யீன்" என்பது இறுதி நபி என்பதை மறுக்கின்றார. இவர் பின்வருமாறு எழுதுகின்றார்;

ரஸூலுல்லாஹ் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்குப் பின் புதிதாக ஒரு நபி வந்தாலும், நபியவர்கள் காத்தமுன் நபி என்பதில் மாற்றம் இல்லை (ஏனெனில்) "காத்தம்" என்றால், அடிப்படையான (மூல) நபி என்பது பொருளாகும். ஏனைய நபிமார்கள் தற்செயல் நபிமார்கள் என்கின்றார்.

மிர்சா அஹ்மத் காதியானியும் இதே கருத்தைத்தான் கூறினார். அதாவது, "நானும் தற்செயல் நபியாகவும் இருக்கின்றேன்!" இந்த வகையில், இவர்களும், குலாம் அஹ்மத் காதியானியின் சீர்மிகு சீடர்களாக இருப்பதை காண முடியும்!

## இப்லீஸின் தவ்ஹீத்

ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களையும், நபிமார்களையும், வலிமார்களையும் தரம் தாழ்த்தி பேசுவதற்கு மறு பெயர்தான் இவர்களிடத்தில் தவ்ஹீதின் பொருளாகும்! றாஃபிழிகளான ஷீயாக்கள் அமீருல் மூஃமினீன் அலி ரலியல்லாஹு அன்ஹு அவர்களை நேசிப்பதாக கூறிக்கொண்டு ஏனயை ஸஹாபாக்களை நிந்திக்கின்றனர். வஹாபிகள் அல்லாஹ்வை தவ்ஹீத் செய்வதாக கூறிக் கொண்டு ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களையும், ஏனைய நபிமார்கள், வலிமார்களையும் நிந்திக்கின்றனர்.

உண்மையில் இது ஷைத்தானியத்தான தவ்ஹீத் ஆகும். நபி ஆதம் அலைஹிஸ்ஸலாம் அவர்களின் மகத்துவத்தை இப்லீஸ் மறுத்தான். அல்லாஹ் அல்லாத எவருக்கும் சிரம் பணிய மாட்டேன் என்றான். இப்படி கூறியவனின் முடிவு என்ன ஆனது என்பதை மக்கள் இதுவரை கன்டு கொண்டுதான் இருக்கின்றனர்.

## இஸ்லாமிய தவ்ஹீத்

அல்லாஹ் ஒருவன் என்பதை ஏற்பதும், அல்லாஹ்வின் நேசர்களைக் கண்ணியப்படுத்துவதும் இஸ்லாம் இயம்புகின்ற தவ்ஹீத் ஆகும்!

வணக்கத்திற்கு தகுதியானவன் அல்லாஹ்வைத் தவிர வேறு எவரும் இல்லை. முஹம்மத் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அல்லாஹ்வின் திருத்தூதர் ஆகும் என்பது தான் தவ்ஹீதின் போதனையாகும்.

தவ்ஹீதின் முதற்பகுதி அல்லாஹ்வின் ஏகத்துவத்தையும், பிந்தியப் பகுதி ரஸூலுல்லாஹ் ஸல்லல்லாஹு அலைஹி வசல்லம் அவர்களின் மகத்துவத்தையும் வெளிப்படுத்துகின்றது!

## தேவ்பந்தி, பரேலவி
## மோதல்களின் மூலக் காரணங்கள்!

சமகாலத்தில் தேவ்பந்திகளுக்கும், அஹ்லுஸ் ஸுன்னத் வல்ஜமா அத்தினராகிய பரேலவிகளுக்கும் இடையில் கருத்து மோதல் நடந்து வருவது யாவரும் அறிந்த விடயமே! இக்கருத்து மோதல்களுக்கான மூலகாரணங்களை ஆராய்ந்து பார்த்தால், அவற்றைப் பின்வரும் தலைப்பு களுக்குள் உட்பட்டு இருப்பதை அவதானிக்க முடியும்.

1, ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் மறைவான ஞானம்,

2, ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களை ஹாளிர், நாளிர் என்று கூறுவது,

3, மௌலித், மீலாது விழாக்கள் நடத்துவது,

4, மரணித்தவர்களுக்காக கத்தம், பாத்திஹா ஓதுவது,

5, வலிமார்களின் கப்றைத் தரிசிப்பது,

6, அவர்களின் கப்றுகளில் கட்டடம் கட்டுவது, மற்றும் குப்பா எழுப்புவது, மேலும் இவை தொடர்பானவை.

இவை தொடர்பாக பல விவாதங்கள் நடந்துள்ளன. நடந்தும் வருகின்றன! மேற்கண்ட தலைப்புகளில் ஸுன்னத் வல் ஜமாஅத்தைச் சார்ந்த தலை சிறந்த உலமாக்கள் சிறப்பான பல நூல்களை எழுதி உள்ளனர்.

குறிப்பாக, இமாம்களை பின்பற்றலாமா? என்ற தலைப்பில் மௌலானா ரிசாத் ஹுசைன் அவர்களின் "இஃதிசாறுல் ஹக்" என்ற நூலையும், இல்முல் கைப் பற்றி எனது ஆசிரியரும், ஷெய்கும், சத்றுல் அஃபாழிலுமாகிய முகம்மது நயீமுள்ளாகான் மொராதாபாதி அவர்களின் "அல் கலிமத்துல் உல்யா" என்ற நூலையும், மரணித்தவர்களுக்காக கத்தம், பாத்திஹா ஓதுவது பற்றி மௌலானா அப்துல் சமீஃ எழுதிய "அன் வாறுஸ் சாதிஆ" என்ற நூலையும்,

பல்வேறு பிரச்சினைகளப் பற்றி இமாம் அஹ்மது ரிழாகான் பாஸில் பரேலவி ரஹ்மத்துல்லாஹி அலைஹிம் எழுதிய ஆதாரக் களஞ்சியங்களான அன்னாரின் நூற்களையும் குறிப்பிடத்தக்க நூற்களாகக் கூற முடியும்.

இவை அனைத்தையும் ஒன்று திரட்டி ஒரே பார்வைக்குள் கொண்டு வந்ததால் நமது ஸுன்னத் வல்ஜமாஅத்தினர் மறுப்பாளர்களுக்கு தக்க பதிலடி கொடுக்க ஏதுவாயிருக்கும் என்ற ஓர் எண்ணம் என் மனதில் தோன்றியது, காலப்போக்கில் அவ்வெண்ணம் வலுப்பெற்றது!

அல்லாஹ்வின் மீது தவக்குல் வைத்து, எப்படியாவது இதை எழுதியே ஆகவேண்டும் என்ற முடிவுக்கு வந்தேன். ஆயினும் தகுதியிலும், அறிவிலும் குறைவுள்ள நான் எப்படி இதில் துணியலாம்? என்ற குற்ற உணர்வு என் கண் முன்னே தோன்றித் தோன்றி மறையத் தொடங்கியது.

இறுதியாக, "தொடங்குவது நமது கடமை! முடிவு வரை தடையின்றி சேர்த்து வைப்பது ரப்புல் ஆலமீனின் கொடையைச் சேர்ந்தது"என்ற முடிவுக்கு வந்தேன்;

எனது பாசத்திற்குரிய நண்பர், குஜராத் ஸூஃபிகளின் தொண்டர்கள் சபையின் செயலாளர் ஜனாப் முன்சீப் அவர்களுக்கு எனது ஆழ்ந்த நன்றிகள் உரித்தாகட்டுமாக!

சகல உதவிகளையும் அவர் மனமுவந்து எனக்கு நல்கினார். இந்த நூலை அச்சடிக்கும் முழு பொறுப்பையும் அவர் ஏற்றார். அல்லாஹுத் தஆலா இவருடைய செல்வத்திலும், பிள்ளை குட்டிகளிலும் பரக்கத் செய்வானாக!

இந்த நூலில் அனைத்து பிரச்சினைகளையும் உள்ளடக்கி சுருக்கமாக ஆராயப்பட்டுள்ளன, "இல்முல் கைப்'' பற்றி விரிவான விளக்கத்தை நாடினால் "அல்கலிமத்துல் உல்யா" என்ற நூலைப் பார்க்கவும்.

"இல்முல் கைப்" பற்றி இதை விடச் சிறந்த வேறு நூல் இல்லை. இது தவிர்ந்த ஏனைய பிரச்சினைகளை முஜத்தித் இமாம் அஹ்மது ரிளாகான் ரஹ்மத்துல்லாஹி அலைஹி அவர்கள் எழுதிய ஆதார களஞ்சியங்களான அன்னாரின் நூல்களைப் பார்க்கவும்.

இந்நூலில் பின் வரும் விடயங்கள் கவனத்திற் கொள்ளப்பட்டுள்ளன.

1) தனது தரப்பு வாதத்தை முன் வைத்து தெளிவுபடுத்துதல்.

2) இதற்கான ஆதாரத்தை குர்ஆன், ஹதீஸ், பெரியோர்களின் நூல் களான முஜ்தஹிதுகள், முபஸ்ஸிரீன்கள் உள்ளிட்டோரின் கூற்றுக்களை முன்வைத்தல்.

3) தனது வாதத்திற்கு வலுவூட்டக் கூடிய ஆதாரங்களை மறுப் பாளர்களின் நூல்களிலிருந்தும் முன் வைத்தல்.

4) மறுப்பாளர்கள் முன் வைக்கும் ஆதாரங்கள் மற்றும் குர்ஆன், ஹதீஸ், சட்ட அறிஞர்களின் கூற்றுக்களை முன் வைத்தல்.

5) மறுப்பாளர்கள் தங்களுக்குச் சாதகமாக முன் வைக்கின்ற குர்ஆன், ஹதீஸ், மற்றும் சட்ட அறிஞர்களின் ஆதாரங்களை முன் வைத்தல்.

6) மறுப்பாளர்கள் முன் வைக்கின்ற பகுத்தறிவு ரீதியான ஆதாரங்களைக் கூறுதல்.

7) மறுப்பாளர்களின் பகுத்தறிவு ரீதியான விளக்கங்களுக்கு அதே பாணியில் பகுத்தறிவு ரீதியாக விளக்கங்களை எடுத்துக் கூறுதல்.

அன்புக்குரிய வாசகர்களே! இந்த நூலை ஆழ்ந்து பக்கச் சார்பின்றி சிந்தனை செய்து பார்த்தால், இன்ஷா அல்லாஹ்! இதனை ஒரு சமுத்திர மாகவே கண்டு கொள்வீர்கள்! விலை மதிப்பற்ற வைரங்களும், முத்துகளும், பவளங்களும் நிறைந்திருப்பதை நிச்சயமாக காண்பீர்கள்.

இந்த நூலில் கடின வார்த்தைகளை நான் பாவிக்கவில்லை. நடு நிலையில் நின்று இந்த நூலை வாசிப்பவர்கள் உண்மையை விளங்கி வழிகேட்டிலிருந்து விலகி நேர் வழி பெறுவார்கள் என்று திடமாக நம்புகிறேன்.

இந்த நூலில் விளக்கிக் கூறப்படுகின்ற அஹ்லுஸ் ஸுன்னத் வல் ஜமாஅத்தின் கொள்கையில்தான் இம்மை மறுமையின் வெற்றி அடங்கி யுள்ளது. இந்தப் பணியை செய்து முடிப்பதற்கான நல்லுதவி அல்லாஹ்வை கொண்டே அல்லாது வேறில்லை. அவன் பக்கமே எனது சகல பொறுப்பு களையும் பாரப்படுத்துகின்றேன். அவன் பக்கமே மீளுகின்றேன்.

ஹஜ்ரத் கிப்லா ஆலிம் பெருந்தக அமீருல் மில்லத், அல் ஆலிமுல் ரப்பானி, பீர் செய்யது ஜமாஅத் அலி முஜத்தித் அலிபூரி தாமத் பறக்காதுஹுல் குத்ஸிய்யா அவர்கள் இந்த நூலுக்கு “ஜாஅல் ஹக் வஸஹகல் பாதில் – சத்தியம் வந்தது, அசத்தியம் அழிந்தது.!” என்று பெயர் சூட்டினார்கள்.

அன்னார் சூட்டிய பெயரை உச்சமரியாதையோடு நாமும் சூட்டு கிறோம். பெயருக்கேற்றாற் போல் இந்த நூலில் அதன் உள்ளடக்கமும் அமைய அல்லாஹ்விடம் ஆதரவு வைக்கின்றேன்.

அவனருளாலும்., நன்கொடையாலும் இதனை அங்கீகரிக்குமாறு இறைஞ்சிக் கேட்கின்றேன்.

எனது குற்றங்களுக்கு இந்த நூலை குற்றப்பரிகாரமாக ஆக்கி வைப்பானாக! எனது முடிவை நல்ல முடிவாக ஆக்கி வைப்பானாக! என்றும் பிரார்த்தனை செய்கின்றேன். ஆமீன்.!

**முக்கிய குறிப்பு:**

மேலும் நான்கு வாதங்கள் இந்த நூலில் மேலதிகமாக சேர்க்கப்பட்டுள்ளன.

1) முஸ்தஃபா நபியின் அதிகாரம்.

2) நபிமார்களின் பாதுகாப்பு! (இஸ்மத்துல் அன்பியா)

3) தராவீஹ் 20 ரக்ஆத்துக்கள்.

4) முத்தலாக்

இந் நான்கு தலைப்புகளும் இதற்கு முன் இணைக்கப்பட்டிருப்பினும் இந்த பதிப்பில் மேலதிக ஆதாரங்கள் சேர்க்கப்பட்டுள்ளன. இப்பணியை அல்லாஹுத் தஆலா பொருந்திக் கொள்வானாக.! ஆமீன்..!

*இப்படிக்கு*
*அகமது யார்கான் உன்ஜானி,*
*பதாயூனி. குத்தாமுல்*
*மத்ரசா ஆசிரியர்.*
*குஜ்றாத். பஞ்சாப்.*
*3 ஷஃபான் . 1361*

# முன்னுரை.

உங்கள் கையில் இருக்கும் இந்த நூலில் ஒவ்வொரு பிரச்சனை களுக்குமான தக்க ஆதாரங்கள் திருக்குர்ஆனிலிருந்தும், தஃப்ஸீர்களி லிருந்தும் கூறப்படும்.

திருக்குர்ஆனிலிருந்து விளக்கம் பகர்வதாயின், பின் வரும் விடயங்கள் கவனத்தில் கொள்ளப்படல் வேண்டும்.

1. திருக்குர்ஆனுக்கான தஃப்ஸீர் (விளக்கம்)

2. திருக்குர்ஆணுக்கான தஃவீல் (வலிந்துரை)

3. திருக்குர்ஆனுக்கான தஹ்ரீப் (புரட்டல்) இவை ஒவ்வொன்றிற்கும் தனித் தனியான வரைவிலக்கணங்களும், சட்டங்களும் இருக்கின்றன.

அவை வருமாறு,

1. தஃப்ஸீரில் சுயகருத்துக் கூறுவது ஹராமாகும். தான் முன்வைக்கும் விளக்கத்திற்கான ஆதாரம் காட்டப்படல் வேண்டும்.

2. திருக்குர்ஆனுக்கு ஆகுமான தஃவீல் (வலிந்துரை) தனது அறிவின் அடிப்படையில் கூறுவது அனுமதிக்கப்பட்டுள்ளது. இவ்வாறு கூறுவது வரவேற்கப்பட்டதாகும்.

3. திருக்குர்ஆனின் கருத்துக்கு மாற்றமான வேறு (தஹ்ரீப்) செய்வது குஃப்றாகும்.

## தஃப்ஸீர் என்றால் என்ன?

தஃப்ஸீர் என்பது, திருக்குர்ஆனில் புத்திக்கு புலப்படாத நிலைகளை விளக்குவதைக் குறிக்கும். இவ்வாறு விளக்கம் பகர்வதற்கு சான்று காட்டப்பட வேண்டும். அத்துடன் வசனங்கள் இறங்கிய காரணங்கள், திருவசனத்தில் நாசிக், மன்சூக் (மாற்றியது, மாற்றப்பட்டுள்ளது) உள்ளிட்டவையும் அறிந்திருத்தல் அவசியமாகும்.

எவராவது ஒருவர் ஆதாரம் இல்லாமல் தனது சுய கருத்தில் ஏதேனும் ஒரு திருவசனத்தை மாற்றியது (நாசிக்) அல்லது, மாற்றப்பட்டது (மன்சூக்) என்று கூறினால் அதனை தஃப்ஸீராக கருதப்படமாட்டாது.

இவ்வாறு கூறுபவரை (திருக்குர்ஆனுக்கு) விளக்கம் பகர்பவர் என்று கூறவும் முடியாது. இப்படிப்பட்டவரை குற்றவாளியாகவே பார்க்க வேண்டும்.

ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் கூறினார்கள்.

من قال فى القرآن برأيه فاليتبوأ مقعده فى النار

"எவராவது ஒருவர் திருக்குர்ஆனுக்கு சுய விளக்கம் பகர்வாராயின் அவர் தனது இடத்தை நரகத்தில் எடுத்துக் கொள்ளவும்."

من قال فى القرآن برأيه فاصاب فقد اخطأ

எவராவது ஒருவர் திருக்குர்ஆனுக்கு சுயவிளக்கம் பகர்வாராயின், அவ்விளக்கம் சரியாயினும் அவர் தவறிழைத்தவராவார்.

*(ஆதாரம் மிஷ்காத்)*

## விளக்கங்களின் தராதரங்கள்.

### 1. தஃப்ஸீர்:

திருக்குர்ஆனுக்கு, திருக்குர்ஆன் கூறும் விளக்கம்தான் தஃப்ஸீர்களில் முதன்மையானதாகும். அடுத்து, ஹதீஸ் கூறும் விளக்கமாகும். திருக்குர்ஆனை நபிகள் நாயகம் முஹம்மது முஸ்தஃபா ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கு அல்லாஹ் இறக்கியதோடு அதன் முழு விளக்கத்தையும் கற்றுக் கொடுத்தான். ஹதீஸ் மூலமான தஃப்ஸீருக்கு அடுத்த நிலையில் ஸஹாபாக்களின் விளக்கம் கவனத்தில் கொள்ளப்படும்.

குறிப்பாக ஸஹாபாக்களில் ஃபுகஹாக்கள், மற்றும் குலபாஉர்ராஷிதீன் களின் விளக்கங்கள் முன்னுரிமை பெறும். அடுத்து தாபிஈன்கள், தபஉத் தாபியீன்களின் விளக்கம் முறையான அறிவிப்புகளோடு காணப்படின் ஏற்கப்படும்.

*(ஆதாரம்: இஃலாஉ கலிமத்துல்லாஹ் அல்லாமா கோல்வழவி ரஹ்மதுல்லாஹி அலைஹி)*

## 2. தஃவீல்:

திருக்குர்ஆனின் உட்கருத்தையும், நுட்பமான அதன் விளக்கத்தையும் யாப்பிலக்கணம், சொல்லணி உள்ளிட்டவையுள் பொதிந்துள்ள நுட்பங்களை வெளிப்படுத்துவதை "தஃவீல்" (வலிந்துரை) எனப்படும்.

இவ்வாறு வலிந்துரை செய்வதற்கான முழுத் தகுதி அறிஞர்களுக்கு மட்டுமே உண்டு. இதற்கான சான்றுகள் திருக்குர்ஆன், ஹதீஸ் புகஹாக் களின் மேற்கோள்களிலிருந்து காட்டப்பட வேண்டும்.

அல்லாஹுத்தஆலா கூறுகின்றான்.

أَفَلَا يَتَدَبَّرُونَ الْقُرْآنَ وَلَوْ كَانَ مِنْ عِندِ غَيْرِ اللَّهِ لَوَجَدُوا فِيهِ اخْتِلَافًا كَثِيرًا

***"திருக்குர்ஆனை அவர்கள் ஆராய்ந்து பார்க்க வேண்டாமா? அல்லாஹ் அல்லாதவரிடமிருந்துள்ளதாக இது இருந்தால் இதில் ஏராளமான முரண்பாடுகளைக் கண்டிருப்பார்கள்."***

*அல் குர்ஆன் (4:82).*

இத்திருவசனத்திற்கு தப்ஸீர் றூஹுல் பயானில் பின்வருமாறு விளக்கப்பட்டுள்ளது.

يتأملون ويتبصرون ما فيه

திருக்குர்ஆனில் புதைந்து கிடக்கின்ற சிறப்புகளை ஏன்? நீங்கள் கருத் தூன்றி ஆராய்ந்து பார்க்க கூடாதா? அமீருல் மூமினீன் அலீ கர்ர மல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்களை ஒருவர் சந்தித்து பின் வருமாறு கேட்டார். "திருக்குர்ஆனுக்கு அப்பால் ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களிடமிருந்து விசேடமாக நீங்கள் பெற்றுக் கொண்ட காணிக்கைகள் ஏதும் உண்டோ"?

இதற்கு,

ما عندنا الا ما فى القرآن الا فهما يعطى رجلا فى كتابه

"திருக்குர்ஆனைத் தவிர்த்து வேறு எதுவும் எம்மிடம் இல்லை. திருக்குர்ஆன் தொடர்பாக வழங்கப்பட்ட விளக்கமும், அறிவு (நுட்பமு)ம் எம்மிடம் இருக்கின்றன" என்று விடை பகர்ந்தார்கள்.

*(ஆதாரம் மிஷ்காத்-பாடம் பழிக்கு பழி)*

மிஷ்காதின் விரிவுரையான ("மிர்காத்") என்ற நூலில் பின் வருமாறு விளக்கம் எழுதப்பட்டுள்ளது.

والمراد منه ما ينتبط به المعانى ويدرك به الاشارات والعلوم الخفية

இதன் பொருள்,

திருக்குர்ஆனின் கருத்துக்களை ஆய்வின் மூலம் பெறப்படும். திருக்குர்ஆனின் விளக்கத்தின் மூலமாக அது கூறும் சிலேடை கருத்துக் களையும், அதனுள் மறைந்துள்ள விசேஷமான கருத்துக்களையும் தெரிந்து கொள்ள முடியும்.

அதாவது ,

1) ஆழ்ந்த சிந்தனை மூலம் திருக்குர்ஆனை ஆய்வு செய்வது,

2) மெய்யறிவு, பகுத்தறிவு உள்ளிட்டவையின் மூலமாக பிரச்சினை களுக்குரிய தீர்வைத் தேடுவது,

3) ஷரீஆத் அனுமதித்த சிறந்த முறையாகும். என்பதை மேற்படி எடுத்துக்காட்டுகள் மூலம் தெரிந்து கொள்ள முடிகின்றது.

நாம் செய்யும் அனைத்திற்கும் வெளிப்படையான ஆதாரங்களை முன் வைக்க வேண்டிய அவசியம் கிடையாது,

தஃப்ஸீர் ஜமலில் தப்ஸீர், தஃவீல் என்பதற்கு பின்வரும் விளக்கம் பதியப்பட்டுள்ளது.

اصل التفسير : الكشف ، واصل التأويل ، الرجوع ، وعلم التفسير ، علم عن احوال القرآن من حيث دلالته على مراد الله بحسب الطاقة البشرية وتأويل ، وهو ما يمكن ادراكه بالقواعد العربية فهو مما يتعلق بالدراية

வெளிப்படுத்துதல் என்பது "தஃப்ஸீா்" என்ற பதத்தின் அகராதிப் பொருள் ஆகும். "தஃவீல்" என்பது "மீளுதல்" என்ற பொருளைக் கொடுக்கும். தஃப்ஸீா் கலை என்பது, திருக்குா்ஆனின் போங்குகளையும், அல்லாஹூத் தஆலாவின் நோக்கத்தையும் விளக்கி மனித அறிவு, ஆற்றலைக் கருத்திற்கொண்டு விளக்கம் பகிா்வதைக் குறிக்கும்.

## தஃப்ஸீர் இருவகைப்படும்.

### 1) தஃப்ஸீா்:

திருக்குா்ஆன் இறங்கிய காரணிகளை கண்டறிவதற்கு முகாந்திரங்கள் அவசியமாக இருப்பது போன்றே திருக்குா்ஆனின் உட்பொருட்களையும், அதன் விளக்கத்தையும் தெரிந்து கொள்வதற்கும் ஆதாரம் அவசியமாகும்.

### 2) தஃவீல்

அரபு இலக்கணம், இலக்கியம் மூலம் திருக்குா்ஆனின் நுட்பங்களை புரிந்து கொள்வதைக் குறிக்கும். ஆகவே, இதைப் புரிதல், அறிவாராய்வு மூலம் விளங்கிக் கொள்ளல் உள்ளிட்டவையைக் குறிக்கும்.

தஃவீலில் அதன் நிபந்தனைகளுடன் திருக்குா்ஆனுக்கு சுய விளக்கம் சொல்ல அனுமதி கொடுக்கப்பட்டுள்ளது. இந்த அனுமதி தஃப்ஸீருக்கு கிடையாது. இதன் இரகசியம் யாதெனில்,

தஃப்ஸீா் என்பது, திருக்குா்ஆனின் ஒரு வாா்த்தையின் அல்லது, ஒரு திருவசனத்தின் பொருளில் அல்லாஹுத்தஆலா நாடிய பொருள்.

இதுதான் என்று அல்லாஹ்வின் மீது சாட்சி பகா்ந்து அக்கருத்தை அறுதியிட்டுக் கூறுவதைக் குறிக்கும், ஆகவே, சுருதியான ஆதாரமின்றித் திருக்குா்ஆனுக்கு விளக்கம் (தஃப்ஸீா்) கூறுவது தடை செய்யப்பட்டுள்ளது.

மேற்கண்ட விளக்கத்தை ஒட்டியே ஹாகிம் ரஹ்மத்துல்லாஹி அலைஹி அவா்களின் பின்வரும் தீா்ப்பு அமைந்திருக்கிறது. ஒரு ஸஹாபியின் திருக்குா்ஆனுக்கான தஃப்சீா் "மா்பூஆன" ஹதீதுக்கு சமனாகும்.

"தஃவில்" என்பது வாய்ப்பான சில கருத்துகளில் சிலதை விட சிலதை அறுதியிட்டுக் கூறாமல் முன்னுரிமை வழங்குவதாகும்.

மிஷ்காத் என்ற நூலின் விரிவுரை நூலான "மிர்காதில்" அறிவு ஞானம் என்ற பாடத்தில் திருக்குர்ஆனுக்கு விளக்கம் கூறல் என்ற பகுதியில் பின் வருமாறு எழுதப்பட்டுள்ளது.

اي تكلم فى معناه او فى قراءته من تلقاء نفسه من غير تتبع اقوال الأيمة من اهل اللغة والعربية للقواعد الشرعية بل بحسب ما يقتضيه عقله وهو مما يتوقف على النقل كاسبابه النزول والناسخ والمنسوخ

திருக்குர்ஆனுக்குச் சுய விளக்கம் பகர்தல் என்பதன் பொருள், "அரபு மொழியறிவும், யாப்பிலக்கண இலக்கிய ஞானமுமிக்கவர்களின் சான்றுகளை ஆராயாமலும், குர்ஆனின் கருத்திலும், அதன் கிராஅத்திலும் விளக்கம் பகர்தலும், திருக்குர்ஆன் வசனம் இறங்கிய காரணங்கள், திருக்குர்ஆனில் மாற்றப்பட்ட திருவசனம், மாற்றிய திருவசனம் உள்ளிட்டவையை கூறுவதில் மேற்கோள் காட்டாமல் தனது சுயகருத்தை முன்வைத்தல் ஆகும்".

ஜாமிஉத் திர்மிதியில் தஃப்ஸீர் பற்றிய அத்தியாயத்தில் பின் வருமாறு விளக்கம் கூறப்பட்டுள்ளது.

وهكذا روي عن بعض اهل العلم من اصحاب النبي صلى الله عليه وسلم وغيرهم ، انهم شدوا فى هذافى ان يفسر القرآن بغير علم

ஸஹாபாக்களும், அவர்கள் அல்லாதவர்களும் அறிவில்லாமல் திருக் குர்ஆனுக்கு விளக்கம் கூறுவதைக் கடுமையாகக் கண்டித்தார்கள் என்று ஸபாக்களின் அறிவார்ந்த சிலர் மூலமாக அறிவிக்கப்பட்டுள்ளது.

மேற்படி, ஹதீதுக்குரிய ஓரக் குறிப்பில் "மஜ்மஉல் பிஹார்" என்ற நூலிலிருந்து மேற் கோள்காட்டி பின் வரும் குறிப்பு பதியப்பட்டுள்ளது.

لا يجوز ان يراد ان لا يتكلم احد فى القرآن الا بما سمعه فان الصحابة قد فسروا واختلفوا فيه على وجوه وليس كل ما قالوه سمعوه منه ولانه لا بقيد دعاءه عليه السلام"اللهم فقهه فى الدين وعلمه التأويل

பெருமானார் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களிடமிருந்து கேட்காதவற்றை திருக்குர்ஆனுக்கு (விளக்கமாக) கூறக்கூடாது. என்பது மேற்கண்ட ஹதீஸின் பொருள் என்று கூறுவது சரியல்ல! காரணம், ஸஹாபாக்கள் திருக்குர்ஆனுக்கு விளக்கம் கூறியிருக்கின்றார்கள், பலரும் பல கருத்துக்களை கூறி இருப்பதால் அவர்களுக்கு மத்தியிலேயே அதிகமான விடயங்களில் கருத்து வேறுபாடும் தோன்றி இருக்கிறது.

ஸஹாபாக்கள் கூறிய அனைத்தும் ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களிடம் இருந்து நேரில் கேட்டவை அல்ல!

அவருக்கு மார்க்கத்தில் விளக்கத்தை கொடு! அதன் வலிந்துரை "தஃவீல்" பற்றிய அறிவையும் கொடு! என்று நபியவர்கள் கேட்டிருக்க வேண்டியதில்லை. நபியவர்கள் கேட்ட பிரார்த்தனைக்கும் பொருள் இல்லாமல் ஆகிவிடும்.

அறிஞர்களின் மேற்கோள் ஆதாரமின்றி (நேரடியாக) திருக் குர்ஆனைப் புரிந்து கொள்வது சாத்தியமில்லை.

மேலும் கூறுகின்றார்கள்.

திருக்குர்ஆனுக்கு வெளிப்படையான பொருளும், அந்தரங்க அகமிய பொருளும் உண்டு! ஆலிம்கள் வெளிப்படையான பொருள்களையும், ஸூஃபியாக்கள் அந்தரங்கமான பொருளையும் ஊர்ஜிதம் செய்து கூறுகின்றனர்.

ஹளறத் அலி ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் கூறுகிறார்கள்.

'நான் விரும்பினால் ஸூரத்துல் ஃபாத்திஹாவுக்கு மட்டும் 70 ஒட்டகங்கள் சுமக்கும் அளவு விளக்கம் பகர்வேன்.' மேலும் கூறினார்கள், 'திருக்குர்ஆனின் பொருளை விளங்கிக் கொண்ட ஒருவரால் ஏனைய அறிவுகளை எளிதாக அறிய முடியும்.' திருக்குர்ஆனுக்கு சுய விளக்கம் பகர்பவர் தவறிவிட்டார் என்ற ஹதீதின் பொருள், அறிஞர்களின் சான்றுகள் இன்றி தனக்குத் தெரியாதவற்றில் விளக்கம் கூறுவது (ஷரீஅத்தில்) ஹராமாகும்.

மேலதிக விளக்கம் அதே நூலில் பின் வருமாறு பதியப்பட்டுள்ளது,

திருக்குர்ஆனுக்கு விளக்கம் கூறுவதில் அறிஞர்களுக்கு மத்தியில் அதிகமான கருத்து வேறுபாடுகள் ஏற்பட்டன. ஒருவர் திருக்குர்ஆனில் ஓரிடத்தில் நிறுத்தி ஓத வேண்டும் என்பார். மற்றொருவர் இல்லை வேறு இடத்தில் நிறுத்த வேண்டும் என்பார். ஓர் அறிஞர் ஒருவசனத்தில் ஒரு சட்டத்தை எடுக்கையில் மற்றொரு அறிஞர் அதே திருவசனத்திலிருந்து வேறு ஒரு சட்டத்தை எடுப்பார்.

உதாரணமாக,

விபச்சாரம் பற்றிய குற்றசாட்டை முன் வைப்பதற்கான சாட்சிகள் பற்றியும், முத்தஷாபிஹாத்தான திருவசனங்கள் பற்றிய சட்டங்கள் பற்றியவற்றையும் குறிப்பிடலாம். பொதுவாக திருக்குர்ஆனுக்கு சுய விளக்கம் கூறக் கூடாது என்றோ, அனைத்திற்கும் ஆதாரத்தை முன் வைக்க வேண்டும் என்ற ஒரு விதி இருக்குமாயின், அறிஞர்கள் மத்தியில் கருத்து முரண்பாடுகள் எப்படி வந்தன?

## 3) தஹ்ரீப் புரட்டு:

“தஹ்ரீப்“ என்பது திருக்குர்ஆனின் இஜ்மாஃ, இஸ்லாமிய அகீதாக் கோட்பாடுகள், முஸ்லீம்களின் இஜ்மாஃ உள்ளிட்டவைக்கு எதிராக விளக்கம் பகர்வதைக் குறிக்கும். அல்லது, திருக்குர்ஆனுக்கு திருக் குர்ஆன் கூறுவது விளக்கம் அல்ல! மாறாக தான் கூறுவது தான் சரியான விளக்கம் என்று கூறுவதாக ஆகும். இந்தக் கூற்று சுத்தமான குஃப்று ஆகும்!

தேவுபந்து மதரஸாவின் நிறுவனர் காஸிம் நானோத்தவி தஹ்தீறுன் நாஸ் என்ற நூலில் “காத்தமுன் நபி!” என்பதற்கு “அசல் நபி” என்றும், ”காதம்“ என்பதற்கு “முத்திரை” என்ற பொருள் மட்டுமல்ல, வேறு பொருளும் உண்டு என்றும் கூறி, நுபுவ்வத்தை, அடிப்படை மூலமானது, அடிப்படை மூலமற்றது என்று இரண்டாகப் பிரித்துக் கூறுகிறார். இவ்வாறு அவர் கூறியதற்கு எவ்வித ஆதாரமும் கிடையாது. ஆகவே, இவரின் கூற்று “தஹ்ரீப்” என்ற புரட்டு ஆகும். இவ்வாறு கூறுவது சுத்தமான குஃப்றாகும்.

இதன்படி, நபியவர்களின் சமகாலத்திலும் சரி, அவர்களுக்கு பின்பும் சரி, புதிய நபி வர முடியாது! ஆகவே, காசிம் நானோத்தவியின் இப்புதிய கருத்து ஐயமற திருக்குர்ஆனுக்கான “தஹ்ரீப்” புரட்டலாகும். ‘அல்லாஹ் அல்லாதவர்களை அழைக்க வேண்டாம்’ என்று திருக்குர்ஆனில் பல இடங்களில் கூறப்பட்டுள்ளன. இப்படியான திருவசனங்களில் வருகின்ற "அழைத்தல்" என்பதற்கு, "வணங்குதல்" என்று தான் பொருள் கொடுக்க வேண்டும் என்று அனைத்து முஃபஸ்ஸிரீன்களும் பொருள் கூறியிருக்கின்றனர்.

உதாரணத்திற்கு,

وَلَا تَدْعُ مِن دُونِ اللَّهِ مَا لَا يَنفَعُكَ وَلَا يَضُرُّكَ

*"நன்மையோ, தீமையோ செய்ய முடியாத அல்லாஹ் அல்லாதவற்றை வணங்க வேண்டாம்."*

*(அல் குர்ஆன்: 10: 106).*

இத்திருவசனத்தின் விளக்கத்தை மற்றொரு வசனத்தின் மூலம் அறியலாம்.

وَمَن يَدْعُ مَعَ اللَّهِ إِلَٰهًا آخَرَ لَا بُرْهَانَ لَهُ بِهِ فَإِنَّمَا حِسَابُهُ عِندَ رَبِّهِ إِنَّهُ لَا يُفْلِحُ الْكَافِرُونَ

***"எவன் ஒருவன் அல்லாஹ்வுடன் வேறு ஒரு நாயனை வணங்குகிறானோ அவனுக்கு அதற்கு எவ்வித ஆதாரமும் இல்லை. அவனுக்குரிய கணக்கெல்லாம் றப்பிடம் இருக்கிறது. நிச்சயமாக காபிர்கள் வெற்றி பெற மாட்டார்கள்."***

*(அல் குர்ஆன்: 23: 117).*

திருக்குர்ஆனின் விளக்கமும், முஃபஸ்ஸிருடைய விளக்கமும் மேற்கண்டவாறு இருக்கையில், அல்லாஹ் அல்லாதவர்களை அழைக்கக் கூடாது! என்று கூறுவது திருக்குர்ஆனில் செய்யும் புரட்டலாகும். ஆகவே, நாம் முன்வைத்த விளக்கங்களை நன்கு கவனித்திற் கொண்டு அடுத்து வரும் தொடர்களைப் படியுங்கள்.

# ஆய்வு - 01

# தக்லீத் (التقليد) பற்றிய ஆய்வு

## அத்தியாயம்: 1

தக்லீத் என்றால் என்ன?

தக்லீத் என்ற அத்தியாயத்தில் ஐந்து விடயங்கள் கவனத்தில் கொள்ள வேண்டியது அவசியமாகும்.

1) தக்லீதின் பொருளும், அதன் வகைகளும்.

2) எவரைத் தக்லீத் செய்வது கடமை! தக்லீத் செய்யத் தடையானது எது ?

3) தக்லீத் கடமையானவர் யார்?

4) தக்லீத் கடமை என்பதற்கான ஆதாரங்கள்.

5) தக்லீத் பற்றிய மறுப்புரைகளும், அதற்கான பதில்களும்.

6) தக்லீத் பற்றிய ஆய்வு ஐந்து அத்தியாயங்களைக் கொண்டுள்ளது.

### பாடம்: 1

### தக்லீதின் பொருள், மற்றும் அதன் வகைகள்.

தக்லீத் என்ற சொல்லுக்கு இருவகையான பொருட்கள் உள்ளன.

(1) அகராதிப் பொருள்

(2) ஷரீஅத்தின் பொருள்

{அ} கழுத்தணி, கழுத்துப் பட்டி என்பது அகராதிப் பொருளாகும்.

{ஆ}ஷரீஅத் சட்டங்களில் நிபுணத்துவம் பெற்ற பண்டிதரின் சொல்லும், செயலும் தனக்கு ஆதாரம் என்று நம்பி, அவரைப் பின் பற்றுவது ஷரீஅத்தில் கடமை என்று நம்புதல்.

எடுத்துக் காட்டாக, ஷரீஅத்தின் சட்ட விதிகளில் இமாமுல் அஃழம் அபூஹனீஃபா றஹிமஹுல்லாஹ் உள்ளிட்ட முஜ்தஹிதுகளின் சொல், செயல்களை ஆதாரமாகக் கொள்வது, ஷரீஅத்தின் விதிகளுக்கான ஆதாரத்தைத் தானே தேடி ஆராயாமல் மேற்கண்ட பண்டிதர்களான இமாம்களை பின் பற்றி நடப்பதை "தக்லீத்" என்று ஷரீஅத்தில் கூறப்படும்.

'ஹுஸாமி' என்ற நூலின் ஓரக் குறிப்பில் "றஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களைப் பின்பற்றல்" என்ற பாடம் பக்கம் 86ல் "ஷறஹு முக்தஸறுல் மஆனி" என்ற நூலின் சொற்றொடருடன் பின் வருமாறு எழுதப்பட்டுள்ளது.

التقليد، اتباع الرجل غيره فيما سمعه بقول او في فعله علي زعم انه محقق بلا نظر في الدليل

இதே வாக்கியம் 'நூறுல் அன்வார்' என்ற நூலிலும் பதிவாகியுள்ளது. ஒருவர் ஷரீஅத்தில் கசடறக் கற்றுத் தேர்ந்த பண்டிதர் (முஜ்தஹிது) என்று நம்பி அடுத்தவரின் ஆதாரத்தைக் கவனிக்காமல் அவரின் சொல், செயல் களைப் பின் பற்றுவது "தக்லீத்" ஆகும்.

ஹுஜ்ஜத்துல் இஸ்லாம் இமாம் கஸ்ஸாலி றஹ்மதுள்ளாஹி அலைஹி "முஸ்தஸ்ஃபா" என்ற நூலில் பாகம்: 2 பக்கம்:387ல் கூறுகின்றார்கள்.

التقليد هو قبول قول بلا حجة

ஆதாரத்தைக் கவனிக்காமல் ஒருவரின் கூற்றை ஏற்பதற்குப் பெயர் "தக்லீத்" ஆகும்.

'முஸல்லமது துபூத்' என்ற நூல் பின் வருமாறு கூறுகின்றது.

التقليد العمل بقول الغير من غير حجة

ஆதாரமின்றி அடுத்தவரின் கூற்றின் படி செயல்படுவது "தக்லீத்" ஆகும்.

மேற்கண்ட விளக்கத்தின்படி, றஸூலுல்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களைப் பின்பற்றுவதற்கு "தக்லீத்" என்று கூற முடியாது. காரணம், அன்னாரின் ஒவ்வொரு சொல்லும், செயலும் ஷரீஅத்தின் ஆதாரங்களாகும். ஷரீஅத்தின் ஆதாரங்களைக் கவனத்தில் கொள்ளாமல் ஒருவரைப் பின்பற்றுவதற்குத்தான் "தக்லீத்" என்று கூறப்படும்.

இதன் காரணமாகவே நபியவர்களைப் பின்பற்றுவோரை அன்னாரின் "உம்மத்" என்கின்றோம். "முகல்லித்" என்று கூறுவதில்லை. இந்த வகையில், ஸஹாபாக்கள், முஜ்தஹிதான இமாம்கள் உள்ளிட்டவர்கள் "முகல்லிது"கள் அல்ல! "உம்மத்" ஆகும்.

அறிஞர்களைப் பாமர மக்கள் பின்பற்றுவது "தக்லீத்" அல்ல. காரணம், இவர்களின் சொல், செயல், அங்கீகாரம் ஷரீஅத்தின் அங்கீகாரமாவதில்லை. இவர்கள் ஷரீஅத்தின் சட்டங்களை நன்கு கற்றுத் தேறியவர்கள் என்ற ரீதியில் அவர்களுக்கு வழிப்படுகின்றனர்.

இவ்வாறான அறிஞர்கள் ஏட்டறிவுள்ளவர்கள் என்பது மக்களுக்குத் தெரியும். ஏட்டிலுள்ளவைக்கு மாறான கருத்துக்களை இவர்கள் கூறினால் மக்கள் இவர்களை நிராகரித்து விடுவர்.

முஜ்தஹிதான இமாமுல் அஃழம் அபூஹனீஃபா றஹ்மதுள்ளாஹி அலைஹி உள்ளிட்டவர்களின் கருத்துக்கள் திருக்குர்ஆன், ஹதீதுகள், இஜ்மாஃ, கியாஸ் அடிப்படையில் அமைந்தவையாதலால் இவர்கள் சாதாரண ஏட்டறிவுள்ளவர்களல்ல என்பதைப் புரிந்து கொள்ள வேண்டும். நுட்பமான இந்த வேறுபாட்டை அவசியம் கவனத்தில் கொள்ள வேண்டும்

## தக்லீதின் வகைகள் இருவகைப்படும்.

**1: ஷரீஅத்திற்குட்டபட்டது.**

**2: ஷரீஅத்திற்கு அப்பாற்பட்டது.**

(அ) ஷரீஅத்திற்குட்பட்ட "தக்லீத்" என்பது ஷரீஅத்தின் சட்ட விதிகளில் ஒருவரைப் பின் பற்றுதல். எடுத்துக் காட்டாக, தொழுகை, நோன்பு, ஸக்காத், ஹஜ் உள்ளிட்ட சட்டங்களில் இமாம்களைப் பின்பற்றுவதைக் குறிப்பிடலாம்.

(ஆ) ஷரீஅத்திற்கு அப்பாற்பட்ட “தக்லீத்” என்பது உலக விவகாரத்தில் ஒருவரைப் பின் பற்றுவதைக் குறிக்கும்.

உதாரணமாக, அபூ அலி ஸீனாவை மருத்துவத்தில் பின்பற்றுகின்றனர். உருதுக் கவிதையில் லோக், தாங், அமீர்மிர்ஸா, காலிப் உள்ளிட்ட வரை கவிஞர்கள் பின்பற்றுகின்றனர். அரபி இலக்கணத்தில் ஸீபவி, கலீல், ஷமக்ஷரி உள்ளிட்டோரைப் பின்பற்றுகின்றனர்.

இவ்வாறு ஒவ்வொரு துறையிலும் நிபுணத்துவம் உள்ள பண்டிதர் களை பின்பற்றுகின்றனர். இவ்வாறான பின்பற்றுதலை உலகியல் தொடர்பான பின்பற்றல் எனலாம். கண்ணியமிக்க ஸூஃபியாக்கள் அன்றாடம் வழக்கமாக ஓதக் கூடிய வழீஃபாக்களிலும், கிரியைகளிலும் ஷைகுமார்களைப் பின்பற்றுகின்றனர்.

இச்செயல்கள் மார்க்க ரீதியானதாக இருந்தாலும், இப்பின்பற்றுதலை “தக்லீத்” என்று பொதுவாகக் கூறாமல், தரீக்கத்தைப் பின்பற்றும், “தக்லீத்” என்று கூறப்படும். காரணம், இதில் ஷரீஅத்தின் மூலக்கோட்பாடான ஹலால், ஹறாம் சம்பந்தப்படவில்லை. ஆகவே இதனை தீனியாத் தொடர்பான தக்லீத் என்று கூறலாம். ஷரீஅத்திற்கு அப்பாற்பட்ட தக்லீதில் ஷரீஅத்திற்கு விரோதமானவை இருப்பின், அவர்களைப் பின்பற்றுவது ஹறாமாகும்.

உதாரணமாக, திருமணச் சடங்கில் தங்களின் பாட்டன், பாட்டிகள் மற்றும் மூதாதையர்களால் தோற்றுவிக்கப்பட்ட கவலைகளை ஏற்படுத்தும் துன்பியல் சடங்குகள் ஷரீஅத்திற்கு மாறான ஹறாமான செயலாகும்.

(மாப்பிள்ளை மருதாணி போடுவது, தங்க மோதிரம் அணிவது, விதவைப் பெண்கள் அழகிய ஆடை அணியக் கூடாதென்பது, விதவைப் பெண்கள் மணமகளுக்கு சவரணம் (நகை) அணிவிக்கக் கூடாதென்று கூறுவது உள்ளிட்ட இவையனைத்தும் ஷரீஅத்த அனுமதிக்காதவையாகும்.)

மருத்துவத்தில் அபூஅலி ஸீனாவைப் பின்பற்றுவதில் ஷரீஅத்திற்கு விரோதமானவை இல்லையாயின், அவரைப் பின்பற்றலாம. ஆனால், விஞ்ஞானம், தத்துவம் உளிட்ட துறைகளில் டார்வீன் போன்றவர்களின் ஷரீஅத்திற்கு விரோதமான கருத்துக்களைப் பின்பற்றுவது ஹறாமாகும்.

(பொதுவாக ஷரீஅத்தின் சட்ட விதிகளுக்கு எதிரான விதிகளை, அரசாங்கம் கூறினாலும் ஏற்கக்கூடாது. ஏற்பது ஹறாம்.)

**பின்பற்றத் தகாத தக்லீத் என்பதற்குரிய ஆதாரங்கள்.**

وَلَا تُطِعْ مَنْ أَغْفَلْنَا قَلْبَهُ عَن ذِكْرِنَا وَاتَّبَعَ هَوَاهُ وَكَانَ أَمْرُهُ فُرُطًا

*"எனது நினைவிலிருந்து மறைந்து போனவர்களைப் பின்பற்ற வேண்டாம். அவர் (பல்காம் இப்னு பாகூறா) தனது மனோ இச்சைக்குப் பின்னால் சென்றுள்ளார். அவர் காரியம் எல்லை கடந்து விட்டது."*

*அல் குர்ஆன் (18:28).*

وَإِن جَاهَدَاكَ عَلَىٰ أَن تُشْرِكَ بِي مَا لَيْسَ لَكَ بِهِ عِلْمٌ

*"உமக்கு அறிவில்லாதவையில் எனக்கு இணை வைக்க (உமது பெற்றோராகிய) அவ்விருவரும் உம்மை நிர்பந்தித்தால் அவ்விருவருக்கும் நீர் வழிப்படாதே!"*

*அல்குர்ஆன் (31:15).*

وَإِذَا قِيلَ لَهُمُ اتَّبِعُوا مَا أَنزَلَ اللَّهُ قَالُوا بَلْ نَتَّبِعُ مَا أَلْفَيْنَا عَلَيْهِ آبَاءَنَا

*"அல்லாஹ் இறக்கிய வேதத்தின் பக்கம் வாருங்கள் என்று அவர்களுக்குக் கூறப்பட்டால், எங்கள் மூதாதையர்கள் இருந்த வழியைப் பின்பற்றுவோம் என்று கூறுவர்."*

*அல்குர்ஆன் (31:21).*

وَإِذَا قِيلَ لَهُمْ تَعَالَوْا إِلَىٰ مَا أَنزَلَ اللَّهُ وَإِلَى الرَّسُولِ قَالُوا حَسْبُنَا مَا وَجَدْنَا عَلَيْهِ آبَاءَنَا أَوَلَوْ كَانَ آبَاؤُهُمْ لَا يَعْلَمُونَ شَيْئًا وَلَا يَهْتَدُونَ

*"அல்லாஹ் இறக்கிய வேதத்தின் பக்கமும், இன்னும் ரஸூலின் பக்கமும் வாருங்கள் என்று அவர்களுக்குக் கூறப்பட்டால், எங்கள் மூதாதையர்களை எதிலிருக்கக்கண்டோமோ அதிலேயே இருப் போம் என்று கூறுவார்கள். அவர்கள் அறிவற்றவர்களாகவும், நேர்*

*வழியில் இல்லாதவர்களாகவும் இருந்தாலும் சரிதான்.”*

*அல் குர்ஆன் (5: 104)*

இது போன்று பின்பற்றத் தகாத வழிகள் பற்றித் திருக்குர்ஆனில் கூறப்பட்டுள்ளன. இவையனைத்தும் ஷரீஅத் அனுமதிக்காத வழியில் அவர்களின் மூதாதையர்கள் உருவாக்கிய தீய அநாச்சாரங்களாகும்; இவர்கள் அவர்களின் மூதாதையர் உருவாக்கியவையில் ஆகுமானது, ஆகாதது என்ற வேறு பாடில்லாமல் கண்மூடித்தனமாக சகலதையும் பின்பற்றினார்கள். இவ்வாறான கண்மூடித்தனமான பின் பற்றுதலை திருக்குர்ஆன் தடை செய்துள்ளது.

ஷரீஅத் அனுமதித்த தக்லீதிற்கும், இமாம்களைப் பின்பற்றுவதற்கும், இத்திருவசனங்களுக்கும் எவ்வித தொடர்பும் கிடையாது. இத்திருவசனங் களை ஆதாரமாகக் கொண்டு இமாம்களைப் பின் பற்றக்கூடாது அவ்வாறு பின்பற்றுவது ஷிர்கு, ஹறாம் என்று உளறுவது மார்க்க மற்றவர்களின் அபவாதமாகும்.

## பாடம்: 2

## பின்பற்றத் தக்க தக்லீத், பின்பற்றத் தகாத தக்லீத்

ஷரீஅத்தின் அடிப்படையிலான பின்பற்றல் தொடர்பான சில அடிப்படை விளக்கங்களைக் கவனத்தில் கொள்ள வேண்டும்.

1: அகீதா கோட்பாடுகள்.

2: திருக்குர்ஆன், ஹதீதுகளில் ஆய்வுக்கு அவசியமில்லாமல் தெளிவாக உறுதி செய்யப்பட்ட சட்டங்கள்.

3: திருக்குர்ஆன், ஹதீது மூலம் ஆய்வு செய்யப்பட்டு எடுக்கப்பட்ட சட்டங்கள். உள்ளிட்டவை கவனத்தில் கொள்ள வேண்டிய முக்கியமானவை யாகும்.

### (அ) அகீதாவில் அடுத்தவரைப் பின் பற்ற முடியாது.!

தஃப்ஸீர் றூஹுல் பயானில் 11: 109, வசனத்திற்குக் கீழ் பின் வருமாறு எழுதப்பட்டுள்ளது.

وهو قول الغير بلا دليل وهو جائز في الفروع والعمليات ولا يجوز في اصول الدين والاعتقاديات بل لا بد من النظر والاستدلال

"தக்லீத்" என்பது ஆதாரத்தைப் பார்க்காமல் அடுத்தவரின் கூற்றை ஏற்பதைக் குறிக்கும். இவ்வாறு பின்பற்றுவது, கிளைச் சட்டத்திலும், கிரியைகளிலும் அனுமதிக்கப்பட்டுள்ளது.மார்க்கத்தின் உஸூல் என்ற மூலக் கோட்பாட்டிலும், அகீதா (என்னும் இறையியல், மற்றும் நம்பிக்கை) தொடர்பானவையிலும் அடுத்தவரைப் பின்பற்ற முடியாது. இவற்றை ஆதாரத்தின் மூலம், சிந்தித்து அறிவது அவசியமாகும்.

தவ்ஹீது, நபித்துவம் உள்ளிட்டவையில் யாரை நீங்கள் பின்பற்று கின்றீர்கள்? என்று எம்மைக் கேட்டால், இமாமுல் அஃழம் அபூஹனீபா றஹிமஹுல்லாஹி அலைஹி அவர்களின் பிக்ஹுல் அக்பர் என்ற நூலைப் பின்பற்றுவதாக கூற மாட்டோம்.

மாறாக, இக்கோட்பாட்டில் அடுத்தவரைப் பின் பற்றுவதற்கு அனுமதி யில்லாத காரணத்தால் ஆதாரத்தினடிப்படையில் தான் தவ்ஹீத், றிஸாலத் கோட்பாடடைப் பின்பற்றுவதாகக் கூறுவோம்.

ஹனபி மத்ஹபின் பிரபலமான சட்ட நூலான ஷாமி (றத்தல் முக்தார்) என்ற நூலிலின் முன்னுரையில் பின் வருமாறு எழுதப்பட்டுள்ளது.

(عن معتقدنا) أي عما نعتقده من غير المسائل الفرعية مما يجب اعتقاده على كل مكلف بلا تقليد لأحد، وهو ما عليه أهل السنة والجماعة وهم الأشاعرة والماتريدية

கிளைச்சட்டம் (ஃபிக்ஹு) தவிர்ந்த நிர்ணயம் கொள்ள வேண்டிய அகீதா தொடர்பானவையில் அடுத்தவரைப் பின்பற்றாமலிருக்க வேண்டியது பருவ வயதையடைந்த, புத்தியுள்ள அனைவர் மீதும் கடமையாகும். இதுவே அஹ்லுஸ்ஸுன்னத் வல்ஜமாஅத்தாகிய அஷாயிறா, மாத்துருதியா பிரிவினரின் கோட்பாடாகும்.

தப்ஸீர் கபீரில் 9:6 இலக்க திருவசனத்தின் கீழ் எழுதுகின்றார்கள்

هذه الآية تدل علي ان التقليد غير كاف في الدين وانه لا بد من النظر والاستدلال

மார்க்கத்தின் அடிப்படைக் கோட்பாட்டில் அடுத்தவர்களைப் பின்பற்ற முடியாது. ஆதாரத்தைச் சிந்தித்து எடுப்பது கடமையாகும் என்று தான் இத்திருவசனம் குறிப்பிடுகின்றது.

## தெளிவான சட்டத்திலும் அடுத்தவரைப் பின்பற்ற முடியாது!

ஐவேளைத் தொழுகை, தொழுகையின் எண்ணிக்கை, றமழானில் முப்பது நாட்கள் நோன்பு நோற்பது, நோன்பு பிடித்திருக்கும் போது உண்ணல், குடித்தல் ஹறாம் என்பன போன்ற சட்டங்கள் திருக்குர்ஆன், ஹதீதுகளில் சந்தேகத்தற்கு இடமின்றி நிரூபிக்கப்பட்டுள்ளன.

ஐவேளைத் தொழுவதற்கும், றமழானில் ஒருமாதம் முழுவதும் நோன்பு நோற்பதற்குமான காரணம் இது தான் என்று விளக்க முடியாது. இதற்கான காரணத்தை இமாமுல் அஃழம் றழியல்லாஹு அன்ஹு அவர்கள் தங்களின் ஃபிக்ஹுல் அக்பர்என்ற நூலில் கூறியுள்ளார்கள் என்று வாதிக்க முடியாது. மாறாக திருக்குர்ஆனிலிருந்தும், ஹதீதிலிருந்துமே ஆதாரம் காட்டப்படல் வேண்டும்.

திருக்குர்ஆன், ஹதீது, இஜ்மாஉல் உம்மத்திலிருந்து ஆய்வு செய்து எடுக்கப்பட்ட சட்டத்தை முஜ்தஹிது அல்லாதவர்கள் பின்பற்றுவது வாஜிபாகும். நாம் முன்வைத்த விளக்கத்தின்படி, பின் பற்றத்தக்கவர், பின் பற்றத்தகாதவர் யார், யார்? எதில் பின்பற்ற வேண்டும்? எதில் பின்பற்றக்கூடாது? என்ற அனைத்தையும் கவனத்தில் கொள்ள வேண்டியது அவசியமாகும்.

இமாம்களைப் பின் பற்றக் கூடாது என்று கூறும் வஹாபிகள் மக்களைக் குழப்பும் எண்ணத்தில் சில குற்றச் சாட்டுக்களை முன்வைக்கின்றனர். அவற்றில் பின்வரும் குற்றச்சாட்டு பிரதானமானதாகும்.

மத்ஹபுகளைப் பின் பற்றுகின்ற முகல்லிதுகளுக்கு ஆதாரங்களிலிருந்து நேரடியாகச் சட்டங்களை எடுக்கும் உரிமை இல்லையெனில், தொழுகை ஸகாத், நோன்பு உள்ளிட்டவைக்கு திருக்குர்ஆனிலிருந்தும் ஆதாரங்களை முன் வைப்பது ஏன்? நீங்கள்தானே ஆதாரத்தை பார்க்காமல் பின்பற்றுபவர்களாயிற்றே!

இவர்கள் அறியாமையை என்னவென்பது?

தொழுகை, ஸகாத், நோன்பு உள்ளிட்ட சட்டங்கள் சந்தேகத்திற்கு இடமின்றி நிரூபிக்கப்பட்டவை. இதில் ஆய்வுக்கு இடமில்லை. இவை தக்லீதின் வட்டத்திற்கு அப்பாற்பட்டவை.

சட்டங்கள் தவிர்ந்த வரலாறு சார்ந்தவற்றிலும், இது தவிர்ந்தவையிலும் அடுத்தவரைப் பின்பற்ற முடியாது. உதாரணமாக, யஸீதின் குப்று பற்றியது போல், யஸீது (ஹளறத் ஹுசைன் றழியல்லாஹு அன்ஹு அவர்களைக் கொலை செய்த காரணத்தால்) காஃபிரானானா? இல்லையா? என்பது வரலாற்றோடு தொடர்பானது. இதில் தக்லீத் கூடாது.

கியாஸ் (ஒப்பாய்வு) மூலம் எடுக்கப்படும் சட்டப் பிரச்சினைகளுக்கான தீர்வின் ஆதாரங்களை அறிஞர்கள் முன் வைப்பது தீர்ப்பை உறுதிப்படுத்தவே தவிர பின்பற்றுவதற்கல்ல!

முகல்லிது என்பவர் ஆதாரத்தைக் கவனிக்காமல் பின்பற்றுபவர் என்பதனால், ஆதாரங்களைப் பார்க்கவே கூடாது என்பது கருத்தாகாது. முகல்லிது நேரடியாக ஆதாரங்களிலிருந்து சட்டங்களை எடுக்க முடியாது என்பதே முகல்லிதின் பொருளாகும்.

## பாடம் : 3

## தக்லீத் வாஜிபானவர், தக்லீத் வாஜிபல்லாதவர். யார்?

பருவ வயதையடைந்த பகுத்தறிவுள்ள முஸ்லிம்கள் இருவகைப் படுவார்கள்.

1. முஜ்தஹிது.
2. முஜ்தஹிது அல்லாதவர்.

### முஜ்தஹித் என்றால் யார்?

திருக்குர்ஆனின் சிலேடை, சைக்கினை, சங்கேத கருத்துக்களைத் தெளிவாக விளங்கும் திறன் கொண்ட மகா மதிகளையே "முஜ்தஹிது" எனப்படும். இவர்கள் தங்களின் கூர்மையான அறிவுத் திறன் மூலம் திருக்குர்ஆனின் உட்பொருட்களை புரிந்து பிரச்சினைகள் தொடர்பான சட்டங்களை விளங்கி அதற்கான தீர்வை முன்வைப்பார்கள்.

திருக்குர்ஆனின் வசனங்களில் நாசிக், (மாற்றிய வசனம்) எது? மன்ஸூக் (மாற்றப்பட்ட வசனம்) எது? என்று மிகத் தெளிவாக விளங்கியவர்கள்.

அரபு மொழியில் சொல்லணி, யாப்பிலக்கணம், இலக்கியம், அணி இலக்கியம் உள்ளிட்டவற்றில் நிபுணத்துவம் பெற்ற (அதிதிறமையுள்)வர்கள், சட்டம் தொடர்பான திருவசனங்களையும், ஹதீதுகளையும், முழுமையாகக்

கற்றறிந்தவர்கள். இதற்கப்பால் மதியூகமும், விவேகமும் நிரப்பமாகப் பெற்றவாகளாவார்கள். இதுதொடர்பான பூரண விளக்கத்தை ‘‘தப்ஸீர் அஹ்மதி” உள்ளிட்ட நூற்களில் காணலாம்.

முஜ்தஹிதின் இத்தகுதிகளை அடையாதவர் முகல்லிதாவார். இவர் முஜ்தஹிதைப் பின்பற்றுவது கடமையாகும்.

## முஜ்தஹின் வகைகள்.

ஒரு "முஜ்தஹிது" மற்றொரு "முஜ்தஹிதை"ப் பின்பற்றக் கூடாது. முஜ்தஹிது என்ற உயர் நிலையை அடைந்தவர்கள் பின்வரும் ஆறு படித்தரங்களில் இருக்கின்றனர்.

1. ஷரீஅத்தில் முஜ்தஹிது
2. மத்ஹபில் முஜ்தஹிது
3. சட்டப் பிரச்சினைகளில் முஜ்தஹிது
4. தெளிவு படுத்தும் திறன் உள்ள முஜ்தஹிது
5. சரியான கருத்தைக் கண்டறிந்து அதற்கு முன்னுரிமை கொடுக்கும் திறன்கொண்ட முஜ்தஹிது
6. பல கருத்துக்களை தரம்பிரித்துக் கூறும் முஜ்தஹிது.

*(ஆதாரம்: ஜாமி, முன்னுரை)*

### 1. முஜ்தஹிதுஷ் ஷரீஆ,

ஆய்வு செய்வதற்கான விதிகளை வகுப்பவர்களான இமாமுல் அஃழம் அபூ ஹனிஃபா, ஆலிமுல் மதீனா இமாம் மாலிக், சட்டமேதை ஆலிமுல் குறைஷ் இமாம் ஷாபிஈ, தியாகச் செம்மல் இமாம் அஹ்மத் இப்னு ஹன்பல் றஹ்மதுள்ளாஹி அலைஹிம் உள்ளிட்டவர்கள் இத்தகுதியை அடைந்தவர்களாகும்.

### 2. மத்ஹபில் முஜ்தஹிது,

முஜ்தஹிது முத்லக்கான மேற்கண்ட இமாம்கள் வகுத்த விதிகளுக்குட்பட்டு ஷரீஅத்தின் கிளைப் பிரச்சினைகளில் ஆய்வு செய்து அதற்கான தீர்வைக் கண்டு சட்டம் வகுப்போர்.

ஹனபி மத்ஹபில் இமாம் முஹம்மத், இமாம் யூஸுஃப், இமாம் அப்துல்லாஹ் இப்னு முபாறக் உள்ளிட்டோரும்; ஷாஃபியி மத்ஹபில் இமாம் முஸ்னி, இமாம் புவைதி, இமாம் கப்பால் றஹிமஹுமுல்லாஹ் உள்ளிட்டோரும் இவ்வகையைச் சேர்ந்தவர்கள்.

## 3. முஜ்தஹிது பில் மஸாயில்

மூல விதிகளிலும், கிளைச் சட்டங்களிலும் முஜ்தஹிது முத்லகான இமாமைப் பின்பற்றுபவர்கள். ஆயினும், இமாம்கள் தெளிவுபடுத்தாமல் விட்டவையில் திருக்குர்ஆன், ஹதீது மற்றும் ஏனைய ஆதாரங்களின் அடிப்படையில் தீர்வைத் தெளிவுபடுத்துவார்கள்.

இத்தகுதியைப் பெற்றவர்களில் ஹனஃபி மத்ஹபில் இமாம் தஹாவி, காழிகான், ஷம்ஸுல் அயிம்மா, ஸர்கஸி உள்ளிட்டோரும்,ஷாஃபிஈ மத்ஹபில் ஹுஜ்ஜத்துல் இஸ்லாம் இமாம் கஸ்ஸாலி றஹ்மதுள்ளாஹி அலைஹிம் போன்றவர்களும் குறிப்பிடத் தக்கவர்களாகும்.

## 4. அஸ்ஹாபுத் தக்றீஜ்

இவர்களுக்கு இஜ்திஹாத் செய்யும் திராணியில்லை, இமாம்களின் கருத்துக்களில் மயக்கமான கருத்துக்களை தெளிவு படுத்தும் திறண் உள்ளவர்கள். இவர்கள் தங்களது இமாமின் மூலவிதிகளை அத்துப்படியாக அறிந்தவர்கள். ஹனஃபி மத்ஹபில் இமாம் கர்கி அவர்ளும், ஷாஃபிஈ மத்ஹபில் இமாம் றாபிஈ, இமாம் நவவி றஹ்மதுள்ளாஹி அலைஹிம் உளிட்டடோர் குறிப்பிடத் தக்கவர்களாகும்.

## 5. அஸ்ஹாபுத் தர்ஜீஹ்

இவர்கள் தங்களின் இமாமுக்குரிய இரு கருத்துக்களில் தக்க ஆதாரத் தினடிப்படையில் ஒன்றுக்கு முன்னுரிமை வழங்குபவர்கள். அதாவது, இமாமுல் அஃழம் இமாம் அபூஹனிஃபா றஹ்மதுள்ளாஹி அலைஹி அவர்களுக்கு ஒரு சட்டப் பிரச்சினையில் இரண்டு விதமான கருத்துக்கள் காணப்படின், அவற்றில் மிகச் சரியானதைக் கண்டறியும் திறண் கொண்டவர்கள்.

இவ்வாறே, இமாமுக்கும், அவர்களின் பிரதான மாணவர்களுக்கு மிடையில் முரண்படும் கருத்துக்கள் காணப்படின், அவற்றில் ஆதாரமிக்கதை கண்டறியும் திறணும் இவர்களுக்குண்டு, பல கருத்தில்

அஸஹ்ஹு, ஸஹீஹ், எவை? என்பதை இவர்களால் கூற முடியும். ஹனபி மத்ஹபில் இமாம் குதூரி, ஹிதாயா உள்ளிட்ட நூலின் ஆரியர்களும்; ஷாபி மத்ஹபில் இமாம் நவவி, இமாம் றாபிஈ உள்ளிட்டோரும் றஹ்மதுள்ளாஹி அலைஹிம் குறிப்பிடத்தக்கவர்களாகும்.

## 6. அஸ்ஹாபுத் தம்மீஸ்

இவர்கள் தரம் பிரிப்பவர்கள். மேற்கண்டவர்களின் கருத்துக்களில் சரியானது (ஸஹீஹ்), மிகச் சரியானது (அஸஹ்ஹு) பலவீனமானது (ளயீஃப்) என்று தரம் பிரிக்கும் திறன் உள்ளவர்கள், இவர்களின் முடிவால் பலவீனமானதையும், நிராகரிக்கப்பட்டதையும் அறிந்து கொள்ளும் வாய்ப்புக் கிட்டுகின்றது.

இத்திறண் படைத்தவர்கள் ஹனஃபி மத்ஹபில் கன்ஸுத்தகாயிக், துர்ருல் மன்தூர் ஆசிரியர்களும், ஷாஃபிஈ மத்ஹபில் இமாம் இப்னு ஹஜர், இமாம் றமலி றஹ்மதுள்ளாஹி அலைஹிம் உள்ளிட்டோர் குறிப்பிடத் தக்கவர்களாகும்.

மேற்கண்ட ஆறு தகுதிகளும் இல்லாதவர்கள் முழுமையான முகல்லிதுகளாகவே கருதப்படுவார்கள். இக்காலத்தில் இருக்கின்ற சகல அறிஞர்களும் முகல்லிதுகளாகும்.

இவர்கள் மேற்கண்ட இமாம்களின் நூற்களிலிருந்து சட்டங்களுக்கான தீர்வைத் தேடிக் கண்டெடுத்து கூறுபவர்கள். இதன் காரணமாவே 5வது 6வது தரத்திலிருபவர்களின் நூற்களை மத்ரஸாக்களில் பாடத்தில் வைக்கப்பட்டுள்ளன. முஜ்தஹிதுகளில் எவரும் ஏனைய முஜ்தஹிதுகளைப் பின்பற்ற முடியாது. இதன்படி, முஜ்தஹிதுகளில் எவரும் அவர்களுக்குக் கீழ் நிலையிலுள்ளவரைப் பின் பற்ற முடியாது; மேல் நிலையிலுள்ளவர் களையே பின்பற்றுவார்கள்.

சட்டம் எடுப்பதிலும், தரம் பிரிப்பதிலும் தர்ஜீஹ் – முன்னுரிமை கொடுப்திலும் இவர்கள் முஜ்தஹிதுகளாக இருப்பதனால் இவர்களை முகல்லிதுகள் என்று கூற முடியாது. இதைப் புரிந்து கொள்ளாத வஹாபிகள் முஜ்தஹிது இமாம்களை பின்பற்றுகின்ற முஜ்தஹிது மஸாயில்களான இமாம்களின் கருத்து வேறுபாட்டை மூல இமாமுக்கெதிரான கூற்றாகவே கருதி ஓலம் போடுகின்றனர்.

உதாரணமாக, முஜ்தஹிதுல் மஸாயில்களான இமாம் அபூ யூஸுஃப், இமாம் முஹம்மது ஆகியோர் இமாமுல் அஃழம் அவர்களின் கூற்றுக்கு மாறான கருத்துக்களைக் கூறியிருப்பதாக குற்றம் சுமத்துகின்றனர். இது வஹாபிகளின் அறியாமையாகும்.

இம்முரண்பாடு மூலக் கோட்பாட்டில் கிடையாது, மூல விதிக்குட்பட்டு எடுக்கப்படும் தீர்வில் கருத்து வேறுபாடான அபிப்பிராயங்கள் வருகின்றன என்பதை கவனத்தில் கொள்ள வேண்டும்; அதாவது மூலக் கோட்பாட்டில் இவர்கள் முகல்லிதுகள், கிளைச் சட்டப் பிரிவில் முஜ்தஹிதுகள்.

மேற்கண்ட விளக்கத்தை கவனத்தில் கொண்டால், முஜ்தஹிது முத்லக்கை கைவிட்டு விட்டு முஜ்தஹிது மஸாயில், முஜ்தஹிது தர்ஜீஹ் உள்ளிட்டவர்களின் தீர்ப்பை கொடுப்பது இமாமுக்குச் செய்யும் துரோகம் என்ற வஹாபிகளின் குற்றச்சாட்டு காற்றில் பஞ்சாய் பறந்து போய் விடும்.

அஸ்ஹாபுத் தர்ஜீஹில் பல அறிஞர்கள் காணப்படுகின்றனர், இவர்கள், இவர்களுக்கு முன்னுள்ளவர்களின் கருத்துக்களை நன்கு ஆழமாக ஆராய்ந்து மிகச் சரியான கருத்தையும், பலவீனமான கருத்துக்களையும் முன் வைத்து நமக்குரிய சிக்கலை இலகு படுத்தித் தந்துள்ளனர். ஆகவே, இவர்களின் விளக்கத்தின் அடிப்படையில் தீர்ப்புக்களை வழங்குகின்றோம்.

நீங்கள் உங்களை ஹனஃபிகள் என்பது தவறு! யூஸுஃபி, முஹம்மதி, முபாரக்கி என்பதுதான் பொருத்தம், காரணம், நீங்கள் இவர்களின் தீர்ப்பைத்தான் பின்பற்றுகிறீர்கள்; இமாமுல் அஃழம் அபூஹனீஃபா றஹ்மதுல்லாஹி அலைஹி அவர்களின் தீர்பை அல்ல! என்று கொக்கரிக்கும் வஹ்ஹாபிகளின் குற்றச்சாட்டுக்கும் பதில் கிடைத்து விட்டது.

முஜ்தஹிது மத்ஹபுகளான இமாம் அபூயூஸுஃப், இமாம் முஹம்மத், இமாம் இப்னுல் முபாறக் றஹ்மதுல்லாஹி அலைஹிம் உள்ளிட்டோர் மூல விதியில் இமாமுல் அஃழம் அபூஹனீபா றஹ்மதுல்லாஹி அலைஹி அவர்களை பின்பற்றிய முகல்லிதுகளாகும், எனவே இவர்களின் தீர்வுகள் எதார்த்தத்தில் இமாமுல் அஃழம் அவர்களின் தீர்பாகவும், அவர்களைப் பின் பற்றியதாகவுமே கணிக்கப்படும்.

உதாரணமாக,

ஹதீதைப் பின் பற்றுவது எதார்த்தத்தில் திருக்குர்ஆனைப் பின் பற்றுவதாகவே கருதப்படும். காரணம், ரஸூலுல்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களைப் பின்பற்றுமாறு திருக்குர்ஆன் ஆணையிட்டுள்ளது.

‘‘ஹதீது ஸஹீஹானால் அதுவே எனது மத்ஹப்” என்று இமாமுல் அஃழம் இமாம் அபூஹனீஃபா உள்ளிட்ட நான்கு முஜ்தஹிதான இமாம்களும் றஹ்மதுள்ளாஹி அலைஹிம் கூறியுள்ளனர்.

இதன்படி, ஒரு முஜ்தஹிதின் மத்ஹபைச் சேர்ந்தவர் ஸஹீஹான ஒரு ஹதீதின் படி செயற்பட்டால் அவர் இமாமைப் பின்பற்றாதவராக கருதப்படமாட்டார், முஜ்தஹிதான தனது இமாமின் விதிப்படி ஒரு ஹதீதை ஸஹீஹ் என்று தீர்மானிப்பாராயின், அவர் அந்த இமாமைப் பின் பற்றியவராகவே கருதப்படுவார்.

இது பற்றிய விரிவான விளக்கம் ஷாமி என்ற நூலின் முன்னுரையிலும், (ஷறஹுல் முஹத்தபின் முன்னுரையிலும்) விரிவாக கூறப்பட்டுள்ளது, விரிவாக அறிய விரும்புபவர்கள் அந்த நூற்களைப் பார்க்கவும். (இத்தலைப்பில நாமும் விரிவான ஒரு தொடர் எழுதியுள்ளோம். இன்ஷா அல்லாஹ் வெளிவரும்.) "ஹதீது ஸஹீஹானால் அதுவே எனது மத்ஹப்" என்ற சொற்றொடருக்கு இப்படியும் ஒரு விளக்கம் கூற முடியும்.

அதாவது, நான் முன் வைத்த சட்டப் பிரச்சினைகள் உள்ளிட்டவையில் காணப்படும் அனைத்து குறைகளையும் ஆழமாக ஆராய்ந்து பார்த்த பின்புதான் என் கருத்தை முன் வைத்தேன். என்னையறியாமல் என் விதிக்குட்பட்ட ஏதும் ஒரு ஸஹீஹான ஹதீது என் கருத்துக்கு மாறாக இருந்தால் அல்லது நான் கூறாத ஒரு மஸ்அலாவுக்கு விளக்கமாக அமையுமாயின், அந்த ஹதீதின் தீர்வும் எனது மத்ஹபுதான்.

இமாம்கள் ஒவ்வொன்றையும் ஆழமாக ஆராய்ந்த பின்புதான் தமது கருத்தைக் கூறியுள்ளனர், அப்படியிருந்தும் தமது ஆய்வில் இறுமாப்புக் கொள்ளாமல் தனது மாணவர்களும் ஆய்வு செய்து முடிவெடுக்கும் உரிமையை வழங்கியுள்ளனர். இமாம்களின் இக்கருத்தின் உட்பொருள் இதுவாகும். மேற்கண்ட சுருக்கமான நமது விளக்கத்தை கவனத்தில் எடுத்துக் கொண்டால், கணிசமான பிரச்சினைகளுக்கு தீர்வைக் கண்டுக் கொள்ளலாம்!

எங்களாலும். இஜ்திஹாது செய்ய முடியும்; ஆகவே எவரையும் நாங்கள் பின்பற்றத் தேவையில்லையென்று வஹாபிகள் இப்போது கூறுகின்றனர். இக்குறைமதியாளர்களுக்கு நீண்ட விளக்கம் அவசியமில்லை!

இஜ்திஹாத் செய்யக் கூடியவரிடம் இருக்க வேண்டிய தகுதிகளை இவர்களுக்கு தெரியப்படுத்தும்போது தான் இவர்களின் வண்டவாளம் வெளிச்சத்திற்கு வரும்.

கண்ணியத்திற்குரிய இமாம்களான இமாம் றாஸி, இமாம் கஸ்ஸாலி, இமாம் திர்மிதி, இமாம் அபூதாவூத், கௌதுல் அஃழம், ஆரிஃபுபில்லாஹ்

அபூயஸீதுல் பிஸ்தாமி, ஷாஹ் பஹாவுல் ஹக் நக்ஷபந்தி றஹ்மதுள்ளாஹி அலைஹிம் உள்ளிட்டவர்களான இமாம்கள், ஷைகுமார்கள், உலமாக்கள் மீது இஸ்லாமிய உலகம் கண்ணியம் வைத்திருக்கின்றனர் என்பதை சகலரும் நன்கு அறிவர்.

அப்படியிருந்தும் கூட இவர்களுள் எவருமே தங்களை முஜ்தஹிதுகள் என்று கூறவில்ல. இவர்கள் அனைவரும் முஜ்தஹிதான இமாம்களைப் பின் பற்றிய முகல்லிதுகள்தான். இவர்களையொத்த அறிஞர்களை சமகாலத்தில் காணமுடியுமா? இவர்களிடமிருந்த அறிவும், ஞானமும் முஜ்தஹிது முத்லக்காவதற்குப் போதாது என்றிருந்தால், இந்த சின்னஞ் சிறு விட்டில்களின் அறிவு என்னாவது?

இம்மகான்களின் பெயரையே உச்சரிப்பதற்குரிய தகுதி கூட இவர்களுக்குக் கிடையாது; ஹதீது நூற்களின் பெயரைக்கூட சரியாக உச்சரிக்கத் தெரியாதவர்கள் முஜ்தஹிது முத்லக்காக ஆராய்வதற்கு திட்டமிடுகின்றனர்.

ஒருவர் என்னிடம் வந்து இஜ்திஹாது செய்யும் தகுதி தனக்கும் உண்டு என்று வாதித்தார். அவரிடம் ஒரேயொரு கேள்வி தான் கேட்டேன். ஸூறா கௌதரில் எத்தனை சட்டங்களை உங்களால் எடுக்க முடியும்? அதில் எத்தனை ஹகீக்கத், மஜாஸ், ஸரீஹ், கினாயா, ழாஹிர், நஸ்ஸுகள், இருக்கின்றன.? இந்தப் பெயர்களையே இதற்கு முன் கேள்விப்படாதவர் வாயடைத்து இருந்த இடம் தெரியாமல் விரைவாக மறைந்து போனார்.

## பாடம் : 4

## தக்லீத் கடமை என்பதற்கான ஆதாரங்கள்.

இந்த ஆய்வில் இரு பகுதிகள் உள்ளன.

1. தக்லீத் செய்வதற்கான ஆதாரங்கள்.
2. தனி நபரைப் பின்பற்று வதற்கான ஆதாரங்கள்.

### தக்லீத் வாஜிப் என்பதற்கான ஆதாரங்கள்.

தக்லீத் வாஜிப் என்பதற்கான ஆதாரங்கள் திருக்குர்ஆன், ஹதீதுகள், சமுதாயத்தின் நடைமுறை, முஃபஸ்ஸிரீன்களின் கூற்றுக்கள் மூலமாக நிரூபிக்கப்பட்டுள்ளன.

பொதுவாக "தக்லீத்" என்பதில்,

1. ஒருவரைப் பின்பற்றல்.

2. முஜ்தஹிதான இமாமை பின்பற்றல்.

3. தனி மனிதரைப் பின்பற்றல்.

இவையனைத்திற்குமான ஆதாரங்கள் பின் வருமாறு,

اهْدِنَا الصِّرَاطَ الْمُسْتَقِيمَ. صِرَاطَ الَّذِينَ أَنْعَمْتَ عَلَيْهِمْ

***“எம்மை நேரான வழியில் நடத்திவை! அது நீ எவர்மீது அருள் புரிந்தாயோ அந்த வழி.”***

*அல்குர்ஆன் (1:5,6).*

நேர்வழி என்பது அல்லாஹ்வின் அருள் பெற்றவர்கள் சென்ற வழிதான் என்பதை இதன் மூலம் புரியலாம்.

அல்லாஹ்வின் அருளைச் சுமந்த அல்லாஹ்வின் நல்லடியார்களான முஃபஸ்ஸிரீன்கள், முஹத்திதீன்கள், ஃபுகஹாக்கள், வலிமார்கள், வலிமார்களில் உயர் தகுதிகள் பெற்ற கௌது, குத்புகள், அப்தால்கள் உள்ளிட்ட அனைவரும் மத்ஹபைப் பின் பற்றியவர்கள்தான். ஆகவே, மத்ஹபை தக்லீது செய்வதுதான் “நேரிய வழி” என்பதற்கான தக்க சான்றாகும்.

தக்லீதை மறுக்கின்ற வஹாபிகள் தரப்பிலிருந்து முஃபஸ்ஸிர், முஹத்தித், வலி, குத்பு, அப்தால்கள் உள்ளிட்ட எவருமே வந்ததில்லை. வஹாபிகள் முஜ்தஹிதுமில்லை! முகல்லிதுமில்லை! ஒருவர் முஜ்தஹிதாக இருந்து கொண்டே தக்லீது செய்யாவிட்டால் அவரை "ஙைறு முகல்லிது" தக்லீது செய்யாதவர் என்று கூற முடியாது. காரணம், முஜ்தஹிதுக்கு தக்லீது செய்வது தடை! (தன்னை முஜ்தஹிது என்றும், ஙைறு முகல்லிது என்றும் கூறுவது முரண்பாடான கூற்றாகும்.)

لَا يُكَلِّفُ اللَّهُ نَفْسًا إِلَّا وُسْعَهَا

***“அல்லாஹுதஆலா எந்த ஓர் ஆத்மாவிற்கும் அதன் சக்திக்குட் பட்டதை அன்றி கஷ்டம் கொடுக்க மாட்டான்.”***

*அல் குர்ஆன் (2:286).*

மனித சக்திக்கு அப்பாற்பட்டதை எவருக்கும் அல்லாஹுத்தஆலா நிர்பந்திப்பதில்லை என்பது மேற்கண்ட திருவசனத்தின் பொருளானால் இஜ்திஹாத் செய்து சட்டங்களை ஒவ்வொருவரும் தேடி எடுப்பது மனித சக்திக்கு அப்பாற்பட்டதை மக்கள் மீது அல்லாஹுத் தஆலா எப்படி விதியாக்குவான்.?

وَالسَّابِقُونَ الْأَوَّلُونَ مِنَ الْمُهَاجِرِينَ وَالْأَنصَارِ وَالَّذِينَ اتَّبَعُوهُم بِإِحْسَانٍ رَّضِيَ اللَّهُ عَنْهُمْ وَرَضُوا عَنْهُ وَأَعَدَّ لَهُمْ جَنَّاتٍ تَجْرِي تَحْتَهَا الْأَنْهَارُ خَالِدِينَ فِيهَا أَبَدًا ذَٰلِكَ الْفَوْزُ الْعَظِيمُ

*“முஹாஜிர்களிலும், அன்சார்களிலும் (ஈமான் கொள்வதில்) முதன் முதலாக முந்திக் கொண்டவர்கள், இன்னும் நற்செயலைக் கொண்டு அவர்களைப் பின்பற்றியவர்கள் (ஆகிய) அவர்களைக் கொண்டு அல்லாஹுத்தஆலா பொருந்திக் கொண்டான்; அவர்களும் அவனைப் பொருந்திக் கொண்டார்கள்; அவர்களுக்காகச் சொர்க்கங்களையும் அவன் சித்தம் செய்து வைத்துள்ளான்; அவற்றின் கீழ் ஆறுகள் ஓடிக் கொண்டிருக்கும். அவற்றில் எப்பொழுதும் நிரந்தரமாக இருப்பார்கள். இது மகத்தான வெற்றியாகும்.”*

*அல் குர்ஆன்: (2: 101).*

இத்திருவசனத்திலிருந்து பின் வரும் விளக்கங்களைப் பெறலாம்.

1) முஹாஜிர்கள், அன்சாரிகளை நல்லெண்ணத்துடன் பின்பற்றுவது கடமை.

2) இவர்களைப் பின்பற்றுவதில் அல்லாஹ்வின் பொருத்தம் உண்டு.

3) அல்லாஹுத் தஆலா வாக்களித்ததைப் பெற்றுக் கொள்வதில் அல்லாஹ்வை இவர்களும் திருப்தி காண்கின்றனர்.

4) ஸஹாபாக்களைப் பின்பற்று வோருக்கு சொர்க்கம் உண்டு அதில் எப்போதும் இருப்பார்கள்

5) ஸஹாபாக்களை நல்லெண்ணத்துடன் பின் பற்றுவதில் தான் மகத்தான வெற்றி இருக்கின்றது.

6) ஸஹாபாக்களை தொன்று தொட்டு பின் பற்றுவோர் அல்லாஹ்வின் திருப்பொருத்தத்தையும், மகத்தான வெற்றியையும் பெற்ற பாக்கியசாலிகள்.

7) ஸஹாபாக்களைப் பின் பற்றாமல் தனி வழி சென்றோர் அல்லாஹ்வின் கோபத்தைப் பெற்று நிரந்தர நரகத்தை தனதுஇடமாக ஆக்கிய அபாக்கிய சாலிகள்.

يَا أَيُّهَا الَّذِينَ آمَنُوا أَطِيعُوا اللَّهَ وَأَطِيعُوا الرَّسُولَ وَأُولِي الْأَمْرِ مِنكُم

***“மூஃமின்களே!, அல்லாஹ்வுக்கு வழிப்படுங்கள், இன்னும் (அவன்) ரஸூலுக்கும், உங்களின் அதிகாரம் உடையவர்களுக்கும் வழிப்படுங்கள்.”***

*அல் குர்ஆன் (4:59)*

இத்திருவசனத்தில் மூவரைப் பின்பற்றுமாறு மூஃமின்களுக்கு கட்டளையிடப்பட்டுள்ளது.

1) அல்லாஹுத்த ஆலா (அல்குர்ஆன்)

2) றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் (ஹதீது)

3) அதிகாரம் பெற்றவர்கள். (ஃபுகஹாக்கள்)

இத்திருவசனத்தில் “வழிப்படுங்கள்” என்ற வார்த்தை, அல்லாஹ்வுக்கும், றஸூலுக்கும், அதிகாரம் பெற்றவர்களுக்கும் என இரு இடங்களில் மட்டுமே வந்துள்ளது ஏனெனில், அல்லாஹுத்தஆலாவை அவனது சொல்லில் மட்டுமே பின்பற்ற முடியும். அவனது செயலில், அங்கீகாரத்தில் பின்பற்ற முடியாது!.

முஷ்ரிக்குகளுக்கும், காஃபிர்களுக்கும் அல்லாஹுத்தஆலா செல்வத்தை வழங்குகின்றான். சில சந்தர்பங்களில் முஸ்லிம்களுக்கு எதிராக வெற்றியையும் வழங்குகின்றான். இப்படியிருந்தும் அவர்கள் அல்லாஹ்வுக்கு எதிராகவே செயல்படுகின்றனர்.

உடனடியாக அவர்களுக்கு தண்டனை வழங்குவதில்லை; இப்படியான அவனது செயலில் அவனை நாம் பின்பற்ற முடியாது. அதாவது, காஃபிர்களுக்கு நாம் உதவ முடியாது.

இதற்கு மாறாக றஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம், மற்றும் முஜ்தஹிதான இமாம்களின் ஒவ்வொரு கட்டளை, செயல், அங்கீகாரத்திலும் வழிப்படல் வேண்டும்.

இந்த வேறுபாடு இருப்பதனால்தான் "வழிப்படுங்கள்" என்பதைத் தனித்தனியாகக் கூறியிருக்கின்றான்.

திருவசனத்தில் உள்ள "உங்களின் அதிகாரமிக்கவர்கள்" என்பது அரசர்களைக் குறிக்கும் என்று சிலர் வாதிப்பது சரியான கூற்றல்ல! ஏனெனில், ஷரீஅத்திற்குட்பட்ட விடயத்தில் மட்டுமே அரசரையும், அதிகாரிகளையும் பின்பற்ற முடியும். ஷரீஅத்திற்கு மாற்றமானவற்றில் அரசரை பின்பற்ற முடியாது. பின்பற்றவும் கூடாது.

ஷரீஅத்தின் சட்டங்களை முஜ்தஹிதான இமாம்களின் மூலமாகவே அரசர்களும் அறிந்து கொள்கின்றனர். இந்த வகையில் அரசர்களுக்கும் கட்டளையிடும் அதிகாரம் எதார்த்தத்தில் ஃபுகஹாக்களுக்குண்டு! சட்டத்தை நடைமுறைப்படுத்துபவர் அரசர்! சட்டம் சரியாக பின்பற்றப்படுகின்றதா? என்பதைக் கண்காணிக்கும் பொறுப்பு அரசரிடமுள்ளது.

அரசருக்கு சட்டத்தை கூறுபவர்கள் முஜ்தஹிதான இமாம்களாவார்கள், ஆகவே அதிகாரமிக்கவர்கள் என்பது முஜ்தஹிதான இமாம்களேதான் என்பது தெளிவாகி விட்டது.

மேற்படி திருவசனத்தில் "உலுல் அம்று"என்பதில் குறிப்பிடப்படுவோர் ஆட்சியாளர்கள் தான் என்று வைத்துக் கொண்டாலும் கூட "தக்லீத்" இங்கும் வந்து விடுகின்றது.

அல்லாஹ்வை பயந்த அறிஞர்களைப் பின் பற்றக்கூடாது, எனின், மன்னர்கள், மற்றும் ஆட்சியாளர்களை எப்படிப் பின்பற்ற முடியும்.? இத்திருவசனத்தில் "வழிப்படுங்கள்" என்று கூறப்படுவதின் உட்கருத்து ஷரீஅத்தின் அடிப்படையிலான வழிப்படுதலையே குறிக்கும் என்பதை கவனத்தில் கொள்ளல் வேண்டும். இங்கு நுட்பமான மற்றுமொரு விளக்கமும் இருக்கின்றது.

சட்டங்கள் மூன்று விதங்களில் இருக்கின்றன.

1) கணவன் மரணித்த விதவைப் பெண் நான்கு மாதங்கள் பத்து நாட்கள் இத்தா இருக்க வேண்டும்; இச்சட்டம் திருக்குர்ஆனில் தெளிவாகக் கூறப்பட்டுள்ளது. ''அல்லாஹ்வுக்கு வழிப்படுங்கள்" என்பது இங்கு பொருந்தும்.

2) ஆண்கள் வெள்ளி, தங்க ஆபரணங்களை அணிவது ஹறாம் (ஆண்கள் வெள்ளி மோதிரம் மட்டும் அணியலாம்) என்ற சட்டம் திருக் குர்ஆனில் குறிப்பிடப்படவில்லை; ஹதீதில் இச்சட்டம் தெளிவாக குறிப் பிடப்பட்டுள்ளது; இங்கு "றஸூலுக்கு வழிப்படுங்கள்" என்பது பொருந்துகிறது.

3) ஒரு பெண்ணின் பின் துவாரத்தில் புணருவது ஹறாம் என்பது திட்டவட்டமான சட்டமாகும்; இதற்கு திருக்குர்ஆனிலோ, ஹதீதுகளிலோ தெளிவான விளக்கம் இல்லை.

இச்சட்டத்தைக் கூறுபவர்கள் முஜ்தஹிதான இமாம்களாகும், ஆகவே, இச்சட்டத்தில் முஜ்தஹிதான இமாம்களை பின்பற்றுகின்றோம். சட்ட உருவாக்கம் மூன்று விதத்தில் இருப்பதை இதன் மூலம் புரிந்து கொள்ள முடியும்.

فَاسْأَلُوا أَهْلَ الذِّكْرِ إِن كُنتُمْ لَا تَعْلَمُونَ

***நீங்கள் அறியாதவர்களாக இருந்தால் அறிவுள்ளவர்களிடம் கேட்டுத் தெரிந்து கொள்ளுங்கள்."***

*அல்குர்ஆன் (21:07).*

ஏதாவது மார்க்கப் பிரச்சினைகளில் தெளிவான தீர்வை நீங்கள் அறியாதிருந்தால், அறிஞர்களிடம் கேட்டுத் தெரிந்து கொள்ள வேண்டியது கடமையாகும் என்பதை இத்திருவசனத்தின் மூலம் அறிந்து கொள்கின்றோம். இஜ்திஹாத் பெற வேண்டிய தீர்வை எம்மால் பெற முடியாது என்பது வெளிப்படையானது.

அப்படியாயின், அத்தீர்ப்பை முஜ்தஹிதான இமாம்களிடமிருந்துதான் கேட்டுத் தெரிந்து கொள்ள வேண்டும்.

இத்திருவசனத்திற்கு முன்னுள்ளவற்றை தொடர்பு படுத்திப் பார்க்கும் போது வரலாற்று நிகழ்வுகளை நீங்கள் அறியாதிருந்தால் வரலாறு தெரிந்தவர்களிடம் கேட்டுத் தெரிந்து கொள்ளுங்கள் என்பதுதான் இத்திருவசனத்தின் பொருள் என்று சிலர் கூறுகின்றனர்.

இது சரியான கருத்தல்ல! இத்திருவசனத்தில் எதையும் குறிப்பிடாமல் பொதுவாகவே குறிப்பிடப்பட்டுள்ளது. அடுத்தவரிடம் ஒன்றைக் கேட்பதன் நோக்கம் அதுபற்றிய அறியாமையாகும். எதைப்பற்றி அறிவில்லையோ அதைக் கேட்டு திட்டவட்டமான அறிவைப் பெற்றுக் கொள்வது கடமையாகும்.

(கடமையில்லாத வரலாற்றை கேட்டுப்படிக்க வேண்டுமாயின், அவசியம் அறிய வேண்டிய கடமைகளை சரியாகச் செய்வதற்குத் தேவையான சட்டத்தைக் கேட்கக்கூடாதா? அறிஞர்கள் கூறுகின்ற தீர்ப்பின் செயல்படுவது தப்பா? வஹாபிகளின் அறிவே அறிவு!)

وَاتَّبِعْ سَبِيلَ مَنْ أنابَ إِلَيَّ

*"என்பக்கம் மீண்டவர்கள் வழியை பின்பற்றுவீராக!"*

*அல்குர்ஆன் (31:15).*

அல்லாஹ்வின் பக்கம் மீண்டவர்களின் வழியைப் பின்பற்றுமாறு கூறும் அல்லாஹ்வின் இக்கட்டளை பொதுவானதாகும். இதில் எந்தவித கட்டுப்பாடும் குறிப்பிடப்படவில்லை.

(மரணத்தின் பின் மீண்டவர், உயிரோடு வாழும் போது அல்லாஹ்வின் திருச்சமூகத்தில் தன்னை அழித்து மீண்டவர் என்று குறிப்பிடப்பட வில்லை. இத்திருவசனம் இவ்விரண்டு கருத்துக்களுக்கும் பொருந்தும். ஆயினும், இரண்டாவது நபர் தான் பின்பற்றத்தக்கவர். அவரின் வாழ்விலும், போதனைகளிலும் தான் முன்மாதிரியும், படிப்பினையும், நல்லறிவும் உண்டு என்பதனை கவனத்தில் கொள்க!)

وَالَّذِينَ يَقُولُونَ رَبَّنَا هَبْ لَنَا مِنْ أَزْوَاجِنَا وَذُرِّيَّاتِنَا قُرَّةَ أَعْيُنٍ وَاجْعَلْنَا لِلْمُتَّقِينَ إِمَامًا

***"இன்னும், அவர்கள் எத்தகையோரென்றால் "எங்களுடைய றப்பே!, எங்களுடைய மனைவியர்களிலிருந்தும் எங்களுடைய சந்ததிகளிலிருந்தும் கண்குளிர்ச்சியை எங்களுக்கு வழங்குவாயாக! இன்னும் எங்களை பயபக்தியுள்ளவர்களுக்குத் தலைவர்களாக ஆக்குவாயாக!, என்று கூறுவார்கள்."***

*அல் குர்ஆன் (25:74).*

மஆலிமுத் தன்ஸீல் என்ற தஃப்ஸீரில் இத்திருவசனத்திற்கு பின் வருமாறு விளக்கம் எழுதப்பட்டுள்ளது.

نقتدي بالمتقين ويقتدي بنا المتقون

நாங்கள் பயபக்தியாளர்களைப் பின்பற்றுவோம். எங்களை பயபக்தி யாளர்கள் பின் பற்றுவார்கள். அல்லாஹ்வை அஞ்சி நடப்பவர்களையும், பயபக்தியாளர்களையும் பின்பற்றுவது கடமை என்பதை இத்திருவசனத்தின் மூலம் தெரிந்து கொள்கின்றோம்

فَلَوْلَا نَفَرَ مِن كُلِّ فِرْقَةٍ مِّنْهُمْ طَائِفَةٌ لِّيَتَفَقَّهُوا فِي الدِّينِ وَلِيُنذِرُوا قَوْمَهُمْ إِذَا رَجَعُوا إِلَيْهِمْ لَعَلَّهُمْ يَحْذَرُونَ

*“அவர்களில் நின்றும் ஒவ்வொரு கோத்திரத்தாரிலிருந்தும் ஒருகூட்டம் இருக்க வேண்டாமா? (பெருமானாரிடம் தங்கியிருந்து) மார்க்கத்தைக் கற்று (யுத்தத்திற்குச் சென்ற), அவர்கள் இவர்களிடம் திரும்பி வந்ததும் அச்சமூட்டி எச்சரிக்க வேண்டும் .(இதனால் அவர்கள்) பாவங்களைத் தவிர்த்துக் கொள்ளக்கூடும்.”*

*அல் குர்ஆன்: (9:122).*

சகலரும் படித்து முஜ்தஹிதாக வேண்டியதில்லை, சிலர் மார்க்கத்தைக் கற்று மற்றவர்கள் அதைக் கேட்டு இவர்களைப் பின்பற்ற வேண்டும் என்பது அல்லாஹுத்தஆலா ஏற்படுத்திய முறையாகும். ஆனால், வஹாபிகள் இதற்கு மாறாக எல்லோரும் படிக்க வேண்டும், சகலரும் முஜ்தஹிதாக வேண்டும் எவரிடமும் எவரும் படிக்கக் கூடாது என்று வாதாடுகின்றனர்.

وَلَوْ رَدُّوهُ أَلَى الرَّسُولِ وَأَلَىٰ أُولِي الْأَمْرِ مِنْهُمْ لَعَلِمَهُ الَّذِينَ يَسْتَنبِطُونَهُ مِنْهُمْ

*“அதனை, (அல்லாஹ்வுடைய) றஸூலிடமும் அவர்களில் அதிகார முடையவர்களிடமும் அவர்கள் தெரிவித்திருந்தால் அவர்களிலிருந்து அதனை ஆய்ந்தெடுப்பவர்கள் (நன்கு) அறிந்து கொள்வார்கள்.”*

*அல் குர்ஆன் (4:83).*

முதலில் ஹதீதுகளையும், திருக்குர்ஆனின் வசனங்களையும் முஜ்தஹிதான அறிஞர்களிடமே கூற வேண்டும். பின்னர், இவர்கள் கூறுவதைக் கேட்டு செயல்பட வேண்டும். யுத்த செய்திகளை விட திருக் குர்ஆனும், ஹதீதும் முக்கயமானதாகும். ஆகவே, அறிவார்ந்தவர்களின் முடிவிலும், தீர்ப்பிலுமே மற்றவர்கள் செயல்பட வேண்டும் என்பதை இத்திருவசனம் மிகத் தெளிவாக எடுத்துக் கூறுகின்றது.

يَوْمَ نَدْعُو كُلَّ أُنَاسٍ بِإِمَامِهِمْ

*"ஒவ்வொரு மனிதரையும் அவருடைய தலைவருடன் (இமாம்களுடன்), அழைத்திடும் நாளை (நபியே! நினைத்துப் பாருங்கள்.)"*

*அல் குர்ஆன் (17:71).*

தஃப்ஸீர் றூஹுல் பயானில் பின்வரும் விளக்கம் எழுதப்பட்டுள்ளது.

وقليل المراد به المذهب الذي كانوا يعبدون الله عليه فيقال يا حنفي ! يا شافعي! يا معتزلي!، ياقدري! ونحو ذلك

எந்த மத்ஹபின் சட்டத்தின் பிரகாரம் அல்லாஹுத்தஆலாவை வணங்கினார்களோ அந்த மத்ஹபின் பெயரை இணைத்து ஹனஃபிகளே! ஷாஃபிகளே! முஃதஸிலிகளே! கத்ரிகளே! இன்னும் இதுவல்லாத (வஹாபிகளே! றாஃபிழிகளே! மௌதூதிகளே! இல்யாஸிகளே!) போன்ற பெயர்களால் அழைக்கப்படுவார்கள். அல்லது மார்க்கத்தின் தலைவரே!, (மறுமையில்) ஹனஃபிகளே! ஷாஃபிகளே! என்று அழைக்கப்படும். (தப்ஸீர் ஸாவியிலும் இதே விளக்கம் எழுதப்பட்டுள்ளது.)

மறுமையில் ஒவ்வொரு மனிதர்களையும் அவர்களின் இமாமுடன் சேர்த்தே அழைக்கப்படும். ஹனஃபிகளே!, ஷாஃபிகளே! மாலிக்குகளே! ஹன்பலிகளே! செல்லுங்கள் என்று கூறப்படும், இமாம்களை பின் பற்றாதவர்களை எப்படி அழைப்பார்கள்?

இதற்குரிய விடையை ஸூஃபியாக்கள் பின் வருமாறு கூறுகின்றார்கள். "இமாம் இல்லாதவர்களுக்கு ஷைத்தான் இமாமாக இருப்பான்"

وَإِذَا قِيلَ لَهُمْ آمِنُوا كَمَا آمَنَ النَّاسُ قَالُوا أَنُؤْمِنُ كَمَا آمَنَ السُّفَهَاءُ

*"மனிதர்(களான சஹாபாக்)கள் ஈமான் கொண்டது போன்று நீங்களும் ஈமான் கொள்ளுங்கள்" என்று அவர் (முனாபிக்கு)களிடம் சொல்லப் பட்டால் "மூடர்கள் ஈமான் கொண்டது போன்று நாங்களும் ஈமான் கொள்ள வேண்டுமா?, என்று அவர்கள் கூறுகின்றனர்."*

*அல் குர்ஆன் (2:13).*

ஒரு மனிதனின் பெறுமதி ஈமான் கொண்டவர்களுடன் சேர்ந்திருக்கும் போதுதான் இருக்கின்றது. நன்மக்களுடன் சேர்ந்திருக்கும் போது தான் அவர்கள் சார்ந்த மத்ஹபும் நன்றாக இருக்கும். நன்மக்களான மத்ஹபுகளுக்குரிய இமாம்களுடன் இணைந்திருப்பதற்குப் பெயர் தான் "தக்லீத்" ஆகும்.

**ஹதீஸ்கள், முஃபஸ்ஸிரீன்கள், முஹத்திதீன்களின் முகாந்திரங்கள்.**

يَا أَيُّهَا الَّذِينَ آمَنُوا أَطِيعُوا اللَّهَ وَأَطِيعُوا الرَّسُولَ وَأُولِي الْأَمْرِ مِنكُمْ

*"அல்லாஹ்வுக்கு வழிப்படுங்கள், இன்னும் றஸூலுக்கும்; உங்களில் அதிகாரமுடையவர்களுக்கும் வழிப்படுங்கள்."*

*அல் குர்ஆன் (4:59).*

என்ற திருவாசகத்தில் வரும் "உலுல் அம்று" என்ற அதிகாரமுடையவர் என்பதன் பொருள், அறிவுள்ளவர்களும், ஃபிக்ஹு ஞானமுள்ளவர்களும் என்று ஹளறத் அதாஃ றழியல்லாஹு அன்ஹு கூறுகின்றார்கள்.

*(நூல்: தாரமி, பாடம்: உலமாக்களைப் பின்பற்றல்).*

**தஃப்ஸீர்கள்**

"உங்களுக்குத் தெரியாவிட்டால் அறிவுள்ளவர்களிடத்தில் கேளுங்கள்" அதாவது, திருக்குர்ஆனின் கருத்துக்களை அறிவார்ந்த அறிஞர் களிடம் கேளுங்கள்.

*(ஆதாரம்: தப்ஸீர் காஸின்).*

ஒருவர் தொழுது, நோன்பு நோற்று, ஹஜ் செய்து, புனிதப் போரில் பங்கேற்று யுத்தம் செய்தும் கூட (சிலவேளை) முனாஃபிக்காகவே இருக்கின்றார் என்று றஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறியபோது, அல்லாஹ்வின் திருத்தூதரே! நயவஞ்சகம் அவரில் எப்படி நுழைந்தது? என்று ஸஹாபாக்கள் கேட்டார்கள் "தான் பின்பற்றுகின்ற இமாமை குறை கூறியதால்" என்று றஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் பதில் கூறினார்கள்.

இமாம் என்றால் யார்? என்று ஸஹாபாக்கள் மீண்டும் கேட்டனர்: "உங்களுக்குத் தெரியாவிட்டால் அறிவுள்ளவர்களிடம் கேளுங்கள்" என்று அல்லாஹுத்தஆலா கூறியவர்கள். என்று மறு மொழி பகர்ந்தார்கள். அறிவிப்பவர்: அனஸ் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள்.

*( நூல்: தஃப்ஸீர் துர்ருல் மன்தூர்).*

وَاذْكُرْ رَبَّكَ اِذَا نَسِيْتَ

***"நீ மறந்தால் உமது இரட்சகனை நினைவு கூர்வீராக!"***

*அல் குர்ஆன் (18:24)*

என்ற திருவசனத்திற்கான விளக்கத்தை இமாம் கவ்வாலி றஹ்மதுல்லாஹி அலைஹி அவர்கள் பின் வருமாறு எழுதுகின்றார்கள்:

"நான்கு மத்ஹபுகள் தவிர்ந்த ஏனைய மத்ஹபுகளைப் பின்பற்றக் கூடாது. இவர்களின் கருத்துக்களுக்கு மாறாக ஸஹாபாக்களின் கூற்று, அல்லது ஸஹீஹான ஹதீது, அல்லது திருக்குர்ஆனின் வசனம் உள்ளிட்டவையாக இருந்தாலும் சரிதான்! நான்கு மத்ஹபுகளை விட்டும் வெளியேறியவர்கள் வழிகேடர்களும், வழிகெடுப்பவர்களுமாவார்கள். ஏனெனில், திருக்குர்ஆன், ஹதீதுகளிலிருந்து வெளிப்படையான பொருள் கொள்வது குற்றமாகும்."

*(ஆதாரம்: தப்ஸீர் ஸாவி. 9:3).*

## ஹதீஸ் ஆதாரங்கள்

"தீன்" மார்க்கம் என்பது "பிறர் நலன் நாடுதல்" என்று றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் கூறினார்கள்; யாருக்கு நலன் நாடுவது? என்று ஸஹாபாக்கள் கேட்டனர்.

“அல்லாஹ்வுக்கும், அவனது திருத்தூதருக்கும், முஸ்லிம்களின் தலைவர்களுக்கும்” என்று றஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வசல்லம் பதில் கூறினார்கள்.

*(அறிவிப்பவர். தமீமுத்தாரி ரழியல்லாஹு அன்ஹு, நூல். முஸ்லிம்).*

"முஸ்லிம்களின் இமாம்கள்" என்பது சன்மார்க்கத்தின் அறிஞர்களான இமாம்களுக்கும் இது பொருந்தும். "இவர்கள் மீது நல்லெண்ணம் வைத்தல்" என்பது இவர்களால் அறிவிக்கப்பட்ட ஹதீதுகளை ஏற்று (அவர்கள் இயற்றிய) சட்டங்களில் அவர்களைப் பின்பற்றுவதாகும் என்று இமாம் நவவி றஹ்மத்துல்லாஹி அலைஹி குறிப்பிடுகின்றார்கள்.

*(ஆதாரம் : ஷறஹு முஸ்லிம்)*

## தனிமனிதனைப் பின்பற்றல்.

من أتاكم وأمركم جميع على رجل واحد يريد أن يشق عصاكم أو يفرق جماعتكم فاقتلوه مسلم كتاب الامارة

நீங்கள் ஒருவருக்கு கட்டுப்பட்டு ஒற்றுமையாக இருக்கும்போது, உங்கள் ஒற்றுமையைக் குலைத்து உங்கள் கூட்டமைப்பை (ஜமாஅத்தை)யும் பிரித்திட உங்கள் மத்தியில் யாராவது வந்தால் அவரைக் கொன்று விடுங்கள்.

*(ஆதாரம்: முஸ்லிம், மிஷ்காத்)*

இங்கு சுட்டிக் காட்டப்படும் நபர் இமாமும், மார்க்க அறிஞர்களுமாகும், மார்க்கத்திற்கு முரணான காரியத்தில் ஆட்சியாளர்கள் ஈடுபட்டால் அவர்களைப் பின்பற்ற முடியாது. “ஒற்றுமை” என்பது ஷரீஅத்தில் தவிர, அரசியலில் அல்ல!

இமாம் முஸ்லிம் றஹ்மத்துள்ளாஹி அலைஹி தங்களின் ஸஹீஹ் முஸ்லிமில் "பாவமல்லாத விடயங்களில் ஆட்சியாளர்களுக்கு வழிப் படுவது வாஜிபு" என்று தலைப்பிட்டு ஒரு பாடமே அமைத்துள்ளார்கள்.

ஹளரத் அபூ மூஸா அஷ்அரி ரழியல்லாஹு அன்ஹு ஹளரத் அப்துல்லாஹ் இப்னு மஸ்ஊத் ரழியல்லாஹு அன்ஹுவைப் பார்த்து “இந்தப் பண்டிதர் உங்கள் மத்தியில் இருக்கும் வரை என்னிடம் எதுவும் கேட்காதீர்கள்” என்று கூறினார்கள்.

*ஆதாரம்: புகாரி ( மிஷ்காத்: 204),*

அறிவார்ந்த மேன் மகன் இருக்கையில் அவரை விட அறிவில், தகுதியில் குறைந்தவரிடம் கேட்பதோ அவரைப் பின் பற்றுவதோ கூடாது. முகல்லிதுகள் அனைவருக்கும் அவர் பின்பற்றும் இமாம் அவரை விட மேலான உயர்ந்தவர் தான் என்பதை மேற்கண்ட ஹதீதிலிருந்து தெரிய முடிகின்றது.

முஸ்லிம்கள் மத்தியில் அதிகாரமிக்க தலைவராக வருபவர்கள் முஸ்லிம்களுக்கு (காழி) நீதிபதியை நியமிக்கும் போது இவரை விட குர்ஆன் ஹதீதை அதிகம் தெரிந்தவர்அவர்கள் மத்தியில் இருப்பாராயின், அந்த அதிகாரி அல்லாஹ்வுக்கும், அவனது திருத்தூதருக்கும், முஸ்லிம் ஜமாஅத்திற்கும் துரோகம் செய்பவராகவே கருதப்படுவார்.

*ஆதாரம்: (ஃபத்ஹுல் கதீர்)*

من تولي أمر المسلمين شيئا فاستعمل عليهم رجلا ويعلم ان فيهم من هو اولي بذلك واعلم منه بكتاب الله وسنة رسوله فقد خان الله ورسوله وجماعة المسلمين ، فتح القدير

அறிவில் கூடியவர் இருக்கையில் அறிவில் குறைந்த வரை பின்பற்றக் கூடாது. தகுதி குறைந்த வரை பொறுப்பிலமர்த்துபவர் குற்றவாளியாவார் என்பது இதன்மூலம் தெரிய வருகின்றது.

றஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் கூறினார்கள்:

من مات وليس في عنقه بيعة مات ميتة جاهلية

ஒருவர் தனது கழுத்தில் (இமாமுக்குக் கட்டுப்பட்டு நடக்கும்) ஒரு பைஅத் இல்லாத நிலையில் மரணித்தால் அவர் ஜாஹிலியாக் காலத்தில் மரணித்தவர் போலாவார்.

*ஆதாரம்: (முஸ்லிம், மிஷ்காத் 350)*

இமாம்களை பின்பற்றும் பைஅத்தும், ஷைக்குமார்களிடம் பெறும் பைஅத்தும் இதில் அடங்கும். இதை மறுத்தால் வஹ்ஹாபிகள் இந்த ஹதீஸின் படி இந்தியாவில் (மற்றும் பிற நாடுகளில்) யாரிடம் பைஅத் பெற்று இந்த ஹதீஸின் படி அமல் செய்யப் போகின்றனர்? என்பதைத் தெரிவிக்க வேண்டும்.

குறிப்பிட்ட திருவசனங்களையும், ஹதீதுகளையும் மட்டுமே இங்கே குறிப்பிடப்பட்டுள்ளோம். இது தொடர்பாக ஏராளமான ஆதாரங்கள் உள்ளன. விரிவஞ்சி இத்துடன் சுருக்கிக் கொண்டோம்.

தபஉத்தாபியீன்கள் காலம் தொட்டு இது நாள் வரை உள்ள முஸ்லிம்கள் படித்தவர், பாமரர் உள்ளிட்ட முஜ்தஹிதல்லாத அனைவரும் முஜ்தஹிதான ஒரு இமாமைப் பின்பற்றி ஒழுகி வருவதை சற்று கவனித்துப் பாருங்கள்!

ஒரு சமுதாயம் ஒட்டுமொத்தமாக எடுக்கும் முடிவைத் தட்டிக் கழிக்க முடியாது. அதை பின்பற்றுவது அனைவர் மீதும் கடமை (வாஜிப்) என்பது அல்லாஹுத் தஆலாவின் கட்டளையாகும்.

அல்லாஹுத்தஆலா கூறுகின்றான்.

وَمَن يُشَاقِقِ الرَّسُولَ مِن بَعْدِ مَا تَبَيَّنَ لَهُ الْهُدَىٰ وَيَتَّبِعْ غَيْرَ سَبِيلِ الْمُؤْمِنِينَ نُوَلِّهِ مَا تَوَلَّىٰ وَنُصْلِهِ جَهَنَّمَ ۖ وَسَاءَتْ مَصِيراً

*“எவரேனும் ஒருவர் நேர் வழி (இன்னதுதான் என்று) தமக்கு தெளிவான பின்பும் (நம்முடைய) றஸூலுக்கு மாறு செய்துக் இன்னும் முஸ்லிம்களின் வழியல்லாத (வேறு வழிய)தை பின்பற்றுகின்றாறோ அவரை அவர் திரும்பிய (தவறான) வழியிலேயே நாம் திருப்பி விடுவோம். மேலும்க் நகரத்திலும் அவரைப் புகச் செய்வோம். சென்றடையும் இடத்தில் அது மிகக் கெட்டதாகும்.”*

*அல் குர்ஆன்: (4:115).*

பொதுவாக முஸ்லிம்கள் எந்த வழியை நல் வழியென்று ஏற்று பின்பற்றுகின்றனரோ அந்த வழியைப் பின்பற்றுவது. (வாஜிப) கடமை என்பது இதன் மூலம் தெரிய வருகின்றது. இத்திருவசனத்தின் படி, ஒருவரைத் தக்லீது செய்வது இஜ்மாஃவின் படி கடமையாகும்.

றஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வசல்லம் கூறினார்கள்:

اتبعوا السواد الاعظم فانه من شذ شذ في النار

"பெரும் கூட்டத்தைப் பின்பற்றுங்கள். யாராவது முஸ்லிம் கூட்ட (மாகிய ஜமாஅ)த்தை விட்டும் பிரிந்து (தனி வழியில்) செல்வாராயின், அவர் நகரத்திலும் தனித்து விடப்படுவார்."

*ஆதாரம்: (மிஷ்காத்)*

மேலும், றஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் கூறினார்கள்:

ما راه المسلمون حسنا فهو عند الله حسن

"முஸ்லிம்கள் எதை நல்லதாகக் காண்கின்றனரோ அது அல்லாஹ் விடத்திலும் நல்லதாகவே இருக்கும்."

நாம் கவனத்தில் கெள்ள வேண்டிய முக்கிய விடயம் இது தான்! பொதுவாக முஸ்லிம்கள் அன்றும் இன்றும் தனி மனிதராகிய ஒரு இமாமைப் பின்பற்றுவதை நல்ல செயலாகவே கருதி வந்துள்ளனர்.

அப்படியென்றால், இமாம்களை பின்பற்றாத நைறு முல்லிதுகளாகிய வஹாபிகள் முஸ்லிம் ஜமாஅத்தின் இஜ்மாஃவுக்கு எதிரானவர்கள், மாறு செய்தவர்கள் என்று கூறுவதில் என்ன தப்பு உள்ளது? சிந்தியுங்கள்!

நீங்கள் குர்ஆன், ஹதீஸை மட்டுமே ஏற்போம். இஜ்மஃ கியாஸை ஏற்க மாட்டோம் என்கிறீர்கள். அப்படியாயின், கலீஃபா செய்யிதினா அபூபக்ர் ஸித்தீக், அமீறுல் முஃமினின் உமர் ஃபாறூக் றழியல்லாஹு அன்ஹுமா ஆகிய இருவரின் கிலாஃபத்தையும் எந்த அடிப்படையில் அங்கீகாரிக்கப் போகின்றீர்கள்? இவர்களின் கிலாஃபத்துக்கள் இஜ்ஃமாவின் மூலம் நிரூபணமானவையாகும். இவர்கள் இருவரின் கிலாஃபத்தை மறுத்தவர் காஃபிராகி விடுவார் இதன் முழு விபரத்தையும் றத்துல் முக்தார் (ஷாமி) போன்ற நூற்களில் காணலாம். இந்த வகையில் தக்லீத் இஜ்மஃவின் படி ஊர்ஜிதமாகி விட்டது.

كُونُوا مَعَ الصَّادِقِينَ

***“நீங்கள் உண்மையாளர்களுடன் சேர்ந்து கொள்ளுங்கள்.”***

*அல் குர்ஆன்: (9:119).*

றஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் வபாத்திற்குப்பின் கிலாஃபத்தில் கருத்து முரண்பாடு ஏற்பட்ட போது, அன்ஸாரி ஸஹாபாக்கள் தங்களுக்குத் தனியாக ஒரு கலீஃபாவை நியமிக்க வேண்டும் என்று யோசனை கூறினார்கள். அப்போது அன்ஸாரிகளைப் பார்த்து செய்யதுனா அபூபக்கர் சித்தீக் றழியல்லாஹு அன்ஹு இவ்வாறு கூறினார்கள்.

إِنَّمَا الْمُؤْمِنُونَ الَّذِينَ آمَنُوا بِاللَّهِ وَرَسُولِهِ ثُمَّ لَمْ يَرْتَابُوا وَجَاهَدُوا بِأَمْوَالِهِمْ وَأَنفُسِهِمْ فِي سَبِيلِ اللَّهِ أُولَٰئِكَ هُمُ الصَّادِقُونَ

***“உண்மையான மஃமூமின்கள் யாரென்றால்க் அல்லாஹ்வின் மீதும் அவனது றஸூலின் மீதும் ஈமான் கொண்டு பிறகு (எவ்விதச்) சந்தேகமுமின்றி தங்களுடைய பொருட்களைக் கொண்டும்க் தம் உயிர்களை கொண்டும் அல்லாஹ்வின் பாதையில் அறப்போர் புரிந்தார்களோ அத்தகையோர்தாம் உண்மையாளர்கள்.”***

*அல் குர்ஆன்: (49:15).*

இந்த திருவாசகத்தில் முஹாஜிர்களை அல்லாஹுத்தஆலா உண்மை யாளர்கள் என்றும், மற்றொரு திருவசனத்தில், “உண்மையாளர்களுடன் சேர்ந்து கொள்ளுங்கள்” என்றும் கூறியிருப்பதால் அன்ஸாரிகள் தங்களுக்கென்று தனியான ஒரு கிலாஃபத்தை ஏற்படுத்தாமல் எங்களுடன் சேர்ந்து கொள்ளுங்கள் என்று அழைப்பு விடுத்தார்கள்.

இதன் படி, நைறு முகல்லிதுகளாகிய வஹாபிகளை பார்த்துக் கூறுகின்றேன்.

அன்ஸாரி ஸஹாபாக்கள் உண்மையாளர்களான முஹாஜிர்களில் செய்யிதினா அபூபக்கர் சித்தீக் றழியல்லாஹு அன்ஹு அவர்களைத் தக்லீது செய்தது போன்று நீங்களும் அவர்களைத் தக்லீது செய்து முகல்லிதுகளாகுங்கள்.

# *பாடம்: 5*
# *தக்லீத் பற்றிய குற்றச்சாட்டுக்களும், தக்க பதில்களும்.!*

நைறு முகல்லிதுகளாகிய வஹாபிகள் தக்லீதை மறுப்பதற்குரிய குற்றச்சாட்டுக்கள் இருவகையாக உள்ளன.

**1) நக்கல் நையாண்டி கிண்டல் பேச்சு.**

இப்படியான பேச்சுக்களுக்கு பதில் சொல்லி நமது தரத்தைக் குறைக்க வேண்டியதில்லை.

**2) மக்களை திசைதிருப்ப எடுக்கின்ற தந்திரமான பேச்சுக்கள்.**

இதற்கு நாம் பதில் கூறுவோம்.

மத்ஹபுகள் தேவையில்லை, இமாம்களைப் பின்பற்றுவது வழிகேடு என்பதற்கு வஹாபிகள் முன்வைக்கின்ற குற்றச்சாட்டுக்களை வரிசைப் படுத்தி விளக்கம் கூறுவோம். வாசகர்கள் கூர்ந்து கவனத்தில் கொண்டு படியுங்கள்! தெளிவு பெறுவீர்கள்.!

**வினா : 1**

தக்லீத் அவசியம் என்றால், ஸஹாபாக்கள் யாரைப் பின்பற்றினார்கள்.?

**பதில்:**

எவரையும் பின் பற்ற வேண்டிய அவசியம் கண்ணியத்திற்குரிய ஸஹாபாக்களுக்குக் கிடையாது. றஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் பறக்கத்தினால் அவர்கள் சமூகத்தின் தலைவர் களாக ஆகிவிட்டார்கள். கண்ணியத்திற்குரிய இமாமுல் அஃழம்

அபூஹனிஃபா, சட்டமேதை இமாம் ஷாஃபிஈ றஹிமஹுமுல்லாஹ் உள்ளிட்ட இமாம்கள் கூட இவர்களைத் தான் பின்பற்றினார்கள்.

றஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் கூறினார்கள்.

“எனது தோழர்கள் விண்ணில் மின்னுகின்ற தாரகைகள் போன்றவர்கள். அவர்களில் எவரைப் பின்பற்றினாலும் நேர்வழி பெறுவீர்கள்”,

*ஆதாரம்: (மிஷ்காத்)*

மேலும் கூறினார்கள். "எனது ஸுன்னத்தையும், நேர்வழி பெற்ற கலீபாக்களின் சுன்னத்தையும் பின் பற்றுவது உங்கள் மீது கடமையாகும்.

*ஆதாரம்: (மிஷ்காத்)*

நாங்கள் எவருடைய உம்மத்துமில்லை. ஏனெனில், றஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் எவருடைய உம்மத்தாகவு மிருக்கவில்லையே! என்று கூறுவது போன்று தான் இவர்களின் கேள்வி இருக்கின்றது.

றஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் சமுதாயத்தின் அதி உயர் தலைவர்களாக இருப்பதால் எவரையும் அவர்கள் பின்பற்றத் தேவையில்லை. அதனால், அவர்கள் எவருடைய உம்மத்தாகவுமில்லை என்பதை இவர்கள் புரிந்து கொள்வதில்லை.

நாம் றஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களை பின்பற்றுகின்றோம். அதனால் நாம் அன்னாரின் உம்மத்தாக உள்ளோம். இவ்வாறே ஸஹாபாக்கள் முஸ்லிம்களின் தாரகைகள் போன்று முஸ்லிம்களுக்கு வழி காட்டும் தலைவர்களாவார்கள்.

அதனால், அவர்களுக்கு யாரும் இமாம்கள் கிடையாது. அவர்களுக்கு இமாமாக வருகின்ற தகுதி முஸ்லிம்களில் யாருக்கும் உண்டோ? வயலுக்குப் பாய்ச்சப்படும் நீர் நதியிலிருந்த வாய்க்கால் வழியாகவே கிடைக்கின்றது. வயலுக்கு தூரத்தில்தான் "நதி" இருக்கும்.

ஜமாஅத் தொழுகையில் இமாமின் தக்பீர் சப்தம் கேட்காதவர்களுக்கு இமாமுக்குப் பின்னால் தூரத்திலிருந்து இமாமின் தக்பீர் சப்தத்தை பின்னாலிருப்பவர்களுக்கு ஒருவர் எத்தி வைப்பார். எத்தி வைப்பவர் இமாமுக்குப் பக்கத்திலிருப்பதில்லை.

அவ்வாறே, வயலுக்கு "நதி"அவசியப்படாது. முதல் வரிசையில் நின்று தொழுபவர்களுக்கு "முபல்லிகு" எத்திவைப்பவர் தேவைப்படாது. இவ்வாறுதான் கண்ணியமிக்க ஸஹாபாக்கள் முதல் வரிசையில் நிற்பவர்கள். எந்த விதமான இடை துணையுமின்றி நேராக றஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களிட மிருந்து உதவிகளைப் பெற்றவர்கள்.

நாம் அறிவுக் கடலிலிருந்து வெகு தூரத்திலிருக்கின்றோம். அதனால், நதியின் தேவை நமக்குத்தான் அவசியப்படுகின்றது. பல்லாயிரம் நதிகள் ஓடினாலும் அதற்கான நீர் சமுத்திரத்திலிருந்து தான் எடுக்கப்படுகின்றன. நதிகளுக்கான பெயர்கள் பலதாகலாம் மூலம் ஒன்றுதான்.

றஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் "றஹ்மத்தின்" சமுத்திரமாக இருக்கின்றார்கள். கண்ணியத்திற்குரிய இமாம்கள் நதிகளைப் போன்று இருக்கின்றார்கள்; றஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் என்ற அருட்கடலிலிருந்து இமாம்களின் நெஞ்சகங்களுக்கு அறிவுகள் ஒலித்து வருகின்றன. வரும் வழிகளை குறிப்பிட்டு, ஹனஃபி, மாலிகி, ஷாஃபிஈ, ஹன்பலி என்கின்றோம். பெயர்கள் மாறினாலும் பெறும் இடம் ஒன்றுதான் என்பதைப் புரிந்து கொள்க!

அதனால், மின் உற்பத்தி செய்யுமிடத்திலிருந்து மின் கடத்திக்குத்தான் முதலில் மின்சாரம் வரும். மின் கடத்தியிலிருந்து தான் ஏனையவர் களுக்கு மின்சாரம் கிடைக்கும். றஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் மின் உற்பத்தி நிலையத்தைப் போன்றவர்கள். ஸஹாபாக்கள் மின் கடத்தி போன்றவர்கள் என்பதைக் கவனத்தில் கொள்க !

**வினா : 2**

வழிகாட்டுவதற்கு திருக்குர்ஆனும், ஹதீதும் நமக்குப் போதுமானது. ஃபிக்ஹு சட்ட நூற்களில் காணப்படுகின்ற அனைத்தும் இவற்றிலும் உண்டு.

அனைத்து விடயங்களும் திருக்குர்ஆனில் இருப்பதாக திருக்குர்ஆனே குறிப்பிடுகின்றது.

وَلَا رَطْبٍ وَلَا يَابِسٍ إِلَّا فِي كِتَابٍ مُّبِينٍ

*"எந்தப் பசுமையானதும், எந்தக் காய்ந்ததும் பதிவேட்டில் (லவ்ஹுல் மஹ்பூழ், அல்லது திருக்குர்ஆனில்) இல்லாமலில்லை."*

*அல் குர்ஆன்: (6:59).*

وَلَقَدْ يَسَّرْنَا الْقُرْآنَ لِلذِّكْرِ فَهَلْ مِن مُّدَّكِر

*"திருக்குர்ஆனை நினைவுபடுத்த (உபதேசம் பெறத்) திட்டமாக நாம் இலேசாக்கி வைத்துள்ளோம்."*

*அல்குர்ஆன்: (54: 17).*

திருக்குர்ஆனில் சகலதும் இருக்கின்றன. அது சகலரும் விளங்கும் வண்ணம் எளிதாகவும் இருக்கின்றது. அப்படியிருக்க எதற்காக இமாம்களின் பக்கம் நாம் சார வேண்டும். ?

**பதில்:**

திருக்குர்ஆனிலும், ஹதீதிலும் சகலதுமே உண்டு என்பதும், வழிகாட்ட இவையிரண்டும் போதுமானதுதான் என்பதும் உண்மைதான்! அதில் எவ்வித சந்தேகமும் கிடையாது. ஆயினும், இவற்றிலிருந்து சட்டத்தை எடுப்பதற்கும், மயக்கமான சட்டச் சிக்கல்களைத் தீர்ப்பதற்கும் தகுதியும், திறனும் வேண்டாமா?.

சமுத்திரத்தில் முத்துக்களும், பவழங்களும் இருக்கின்றன. அதை எடுக்கும் திறன் சகலருக்கும் உண்டா? முத்துக் குளிக்கும் சுழியோடி களுக்கு மட்டும்தான் இதற்கான திறமையும், தகுதியும் இருக்கின்றன.

முஜ்தஹிதான இமாம்கள் கடலில் சுழியோடி முத்துக் குளிப்பவர்களை நிகர்த்தவர்கள். மருத்துவ நூற்களில் இருப்பதைப் பார்த்து வைத்தியம் செய்ய எம்மால் முடியாது. மருத்துவரின் மருத்துவ சீட்டின் படி செயல்பட வேண்டியது நமது கடமை!.

முஜ்தஹிதான இமாம்களும் மருத்துவர்களை நிகர்த்தவர்கள் தான். அவர்கள் தரும் விளக்கத்தின் படி நடக்க வேண்டியது தான் நம் கடமை! அப்போது தான் நமது பிணி நீங்கும்.

“திருக்குர்ஆனை நாம் இலகு படுத்தியுள்ளோம் என்பதன் பொருள், மனனம் செய்வதற்கு அன்றி சட்டம் எடுப்தற்கல்ல! திருக் குர்ஆனிலிருந்து எளிதாக சட்டம் வகுக்க முடியுமாயின், எதற்காக ஹதீதுகள் வேண்டும்? திருக்குர்ஆனில் சகலதும் உண்டு. அதை எளிதாகவும் புரிய முடியும் என்றிருந்தால் அதைக் கற்றுக் கொடுக்க றஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் ஏன் வரவேண்டும்.?

திருக்குர்ஆன் கூறுகின்றது. .

وَيُعَلِّمُهُمُ الْكِتَابَ وَالْحِكْمَةَ

***"அவர்களுக்கு வேதத்தையும், ஞானத்தையும் கற்றுக் கொடுப்பார்."***

*அல் குர்ஆன்: (2: 129).*

திருக்குர்ஆனும், ஹதீதுகளும் நோய்களைக் குணப்படுத்தும் சிறந்த ஆத்மீக மருந்துகளாகும். அதன் தன்மைகளையும், பிரயோகிக்கும் முறை களையும் அத்துப்படியாக அறிந்த மருத்துவர்களாக முஜ்தஹிதான இமாம்கள் விளங்குகின்றார்கள் என்பதை புரிந்து கொள்ள வேண்டும்.

**வினா : 3**

அடுத்தவர்களைத் தக்லீது செய்பவர்களைத் திருக்குர்ஆன் குறை கூறுகிறதே.!

اتَّخَذُوا أَحْبَارَهُمْ وَرُهْبَانَهُمْ أَرْبَابًا مِّن دُونِ اللَّهِ

***அல்லாஹ்வை விடுத்து (யூதர்கள்) தங்களுடைய அறிஞர்களையும் (நஸாறாக்கள்) தங்களுடைய பாதிரிகளையும் தெய்வங்(கள் போன்றவர்) களாக எடுத்துக் கொண்டுள்ளனர்."***

*அல் குர்ஆன்: (9:31).*

فَإِن تَنَازَعْتُمْ فِي شَيْءٍ فَرُدُّوهُ إِلَى اللَّهِ وَالرَّسُولِ إِن كُنتُمْ تُؤْمِنُونَ بِاللَّهِ وَالْيَوْمِ الْآخِرِ ذَٰلِكَ خَيْرٌ وَأَحْسَنُ تَأْوِيلًا

*"ஏதேனும் ஒருவிஷயத்தில் பிணங்கிக் கொண்டால், அல்லாஹ்வையும், இறுதி நாளையும் நீங்கள் ஈமான் கொண்டவர்களாக இருந்தால், அதனை அல்லாஹ்வின் பக்கமும், அவனின் திருத்தூதரின் பக்கமும் திருப்பி விடுங்கள். இது ( உங்களுக்கு) மிகச் சிறந்ததாகவும் மிக அழகிய முடிவாகவும் இருக்கும்."*

*அல் குர்ஆன்: (4:59).*

وَأَنَّ هَٰذَا صِرَاطِي مُسْتَقِيمًا فَاتَّبِعُوهُ وَلَا تَتَّبِعُوا السُّبُلَ فَتَفَرَّقَ بِكُمْ عَن سَبِيلِهِ ذَٰلِكُمْ وَصَّاكُم بِهِ لَعَلَّكُمْ تَتَّقُونَ

*“நிச்சயமாக இதுவே நேரான என்னுடைய வழியாகும். எனவே இதனையே நீங்கள் பின்பற்றுங்கள். (இதற்கு மாறுபட்ட வேறு) வழிகளைப் பின்பற்றாதீர்கள். (வேறு வழிகளைப் பின்பற்றினீர்களானால்) அவனுடைய வழியை விட்டும் அது உங்களைப் பிரித்து விடும். இது நீங்கள் (அல்லாஹ்வுக்கு அஞ்சியவர்களாக நடந்து கொள்ளும் பொருட்டு உங்களுக்கு இவற்றை அவன் வஸியத்துச்(செய்து ஏவு) கின்றான்."*

*அல் குர்ஆன்: (6:15).*

وَإِذَا قِيلَ لَهُمُ اتَّبِعُوا مَا أَنزَلَ اللَّهُ قَالُوا بَلْ نَتَّبِعُ مَا أَلْفَيْنَا عَلَيْهِ آبَاءَنَا أَوَلَوْ كَانَ آبَاؤُهُمْ لَا يَعْقِلُونَ شَيْئًا وَلَا يَهْتَدُونَ

*“மேலும் அல்லாஹ் இறக்கி வைத்த (வேதத்)தைப் பின்பற்றுங்கள் என்று அவர்களிடம் கூறப்பட்டால், அவ்வாறல்ல நாங்கள் எங்கள் மூதாதையர்களை எதன் பேரில் (இருக்கக் கண்டோமோ அதையே பின்பற்றுவோம்." என்று கூறுவார்கள்."*

*அல் குர்ஆன்: (2:170).*

அல்லாஹ்வுடையதும், றஸூலுடையதும் சட்டத்திற்கு முன்னால் இமாம்களின் விளக்கங்களை ஏற்பது காஃபிர்களின் வழிமுறையாகும் என்பதையே மேற்கண்ட திருவசனங்கள் தெளிவு படுத்துகின்றன. அதனால், நேரிய வழி ஒன்றுதான்! ஹனஃபி, மாலிகி, ஷாஃபிஈ, ஹன்பலி உள்ளிட்ட நான்கு மத்ஹபுகளும் குறுக்கு வழிகளாகும்.

**பதில்:**

யார் யாரைத் தக்லீது செய்யக் கூடாது என்ற பட்டியலை ஆரம்பத்திலேயே நாம் குறிப்பிட்டுள்ளோம். அதனால், மீண்டும் இதற்கு பதில் கூற வேண்டியதில்லை.

“பல வழிகளைப் பின்பற்ற வேண்டாம்“ என்பது இஸ்லாத்திற்கு மாறான யஹூதி, நஸாறாக்களின் வழிகள் என்பது தான் இதன் பொருளேயன்றி ஹனஃபி, மாலிகி, ஷாஃபிஈ, ஹன்பலி என்பன தனித்தனியான நான்கு வழிகள் அல்ல!, ஒரே இலக்கை நோக்கிச் செல்லுகின்ற நான்கு பாதைகளாகும். அல்லது ஒரே நதியிலிருந்து பிரிந்து செல்கின்ற நான்கு ஆறுகளாகும்.

நைறு முகல்லிதுகள் தனாயி, கஸ்னவி, என்று முட்டி மோதி பிரிந்து தனியாக நிற்கின்ற பிரிவுகளுக்கு என்ன பெயரோ? (தமிழகத்திலும், இலங்கையிலும் மத்ஹபுகளை விமர்சித்தவர்களுக்குள் உட்கட்சி பூசல் ஏற்பட்டு டஜன் கணக்கில் பிரிந்து ஒருவரை ஒருவர் அசிங்கமாக விமர்சித்து வருகின்றனர் என்பதும் கவனிக்கத்தக்கது.)

பிரிவுகள் சகலதும் இஸ்லாத்தின் மூலக்கோட்பாட்டிலேயே உருவானது. நான்கு மத்ஹபுகளும் மூலக் கோட்பாடான அகீதாவில் பிரியவில்லை. இவர்கள் சகலரினதும் அகீதா ஒன்றுதான். கிளைச் சட்டத்தில்தான் வேறுபடுகின்றனர். கிளைச் சட்டத்தில் ஸஹாபாக்கள் மத்தியிலும் கருத்து வேறுபாடுகள் காணப்பட்டன.

**வினா : 4**

முஸ்தஃபா மாநபியின் முத்தான கருத்து நமக்குண்டு!

அதனால், வேண்டாம் அடுத்தவர் கூற்று!

சத்திய மார்க்கத்தில் புதிதாய் மத்ஹபுகள்

நான்கு தோன்றி நபி மார்க்கத்தில் வந்ததே குழப்பம் !

என்ற பாடல் வரிகளில் எழுப்பப்படுகின்ற கேள்விக்கு உங்கள் பதில் என்ன?

இந்த பாடல் வரிகள் வழி தவறிய ஜக்கடலாவிகளுக்குரியது. இவர்கள் மத்ஹபை மறுக்கின்ற வஹாபிகளாவார்கள்.

**பதில்:**

நபி பேதம் நம்பாதேயென்று ஆணவத்தால் வந்ததே உன் பேச்சு!

பள்ளிகளிலும் மக்களைப் பிரித்து, மார்க்கத்திலும் வந்தது உன் குழப்பம்.!

நான்கு மத்ஹபுகளை பின்பற்றுவோர் கூறும் பதிலை நமது கவிதைத் தொகுப்பிலும் ஈரடியாக இவ்வாறு தந்துள்ளோம்.

திருத்தூதர்களும் நான்கு! ஆதிமலக்குகளும் நான்கு!

வேதங்களும் நான்கு ! வேதாந்திகளும் நான்கு !

விசித்திரமான நான்கு! மூலத்தில் வந்தது அகிலம்!

காற்று, தீ, மண், நீர் கூட்டில் விரிந்தது பிரபஞ்சம்.!

ஆனதெல்லாம் முடிந்தது நான்கில், ஆனதே கலீஃபாக்களும் நான்கே!

நான்கு என்ற எண் அல்லாஹ்வுக்கு மிகவும் விருப்பமானதாகும். பாருங்கள்! வேதங்கள் நான்கு!, மார்க்கமும் நான்கு!, மனிதனின் மூலமும் நான்கு! இலக்கைச் சென்றடையும் நான்கு வழிகளில் நாமிருக்க இலக்கை யடைவதில் தடை எப்படி வரும் ?

புனித கஃபத்துள்ளாஹ்வின் நான்கு திசைகளிலும் நான்கு மத்ஹபுகளின் ஜமாஅத்துக்கள் நடந்தேறி வருகின்றன. (இப்போது வஹாபிஸ சஊதி அரசாங்கம் அதை நிறுத்தி ஒரே ஜமாஅத்தாக ஆக்கியுள்ளனர்.)

அனைவருக்கும் திசை கஃபத்துள்ளாஹ்தான்.! றஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் ஈமானுக்கு கஃபத்துள்ளாஹ் வாகும்! இந்த கஃபாவைச் சுற்றித்தான் நான்கு இமாம்களும் வழி சமைத்துள்ளனர். இதில் எந்த வழியில் சென்றாலும் ஈமானிய கஃபாவை நோக்கியதாகவே ஈமானிய கஃபாவின் திசை இருக்கும்.

*ஒரு கவிஞர் இவ்வாறு பாடுகின்றார்.*

நான்கு மத்ஹபுகளும் நான்கு வழிகள்!

எவ்வழியில் நீ சென்றாலும் அடைவாய் உன் குறிக்கோளை!

வழியில் மாற்றம் தேடுபவன் வழியறியா கபோதி! கஃபாவை சிரம்

தாழ்த்தும் திசை நான்கில் நீ உள்ளாய் !

திருக்குர்ஆனை நீ விளங்க ஹதீதுகள் தேவைப்படுவது போன்றே ஹதீதுகளையும் விளங்க ஃபிக்ஹின் தேவை அவசியப்படுகின்றது. ஃபிக்ஹு என்பது திருக்குர்ஆனுக்கும், ஹதீதுக்கும் விளக்கமாகும். திருக்குர்ஆனிலும் ஹதீதிலும் நேரடியாக விளங்க முடியாத சட்டங்களை ஃபிக்ஹின் மூலமாக தெரிந்து கொள்கின்றோம். மார்க்கத்தின் விளக்கத்தை ஃபிக்ஹின் மூலமே பெற்றுக் கொள்ள முடியும்

**வினா : 5**

அல்லாஹ் அல்லாத ஒருவரை தங்களுக்கு நீதி வழங்குவதாக ஆக்கப் படுவதனால் ஷிர்க்கல்லவா வரும் ?.

அல்லாஹுத்த ஆலா கூறுகின்றான்.

اِنِ الْحُكْمُ اِلَّا لِلّٰهِ

***"அல்லாஹ்வையன்றி (நீதி வழங்கும்) அதிகாரம் (வேறு) எவருக்கும் இல்லை."***

*அல் குர்ஆன்: (6:57).*

**பதில்:**

அல்லாஹ் அல்லாதவர்களை நீதிபதிகளாகவும், அதிகாரிகளாகவும் ஏற்றுக் கொள்வது "ஷிர்க்" ஆயின், அனைத்து முஹத்திதீன்களும், முஃபஸ்ஸிரீன்களும் முஷ்ரிக்காவார்கள். (நஊது பில்லாஹ்)

ஏனெனில், இமாம்களான திர்மிதி, அபூதாவூத், முஸ்லிம் உள்ளிட்ட அறிஞர்கள் அனைவரும் முகல்லிதுகளாகும். மற்றும் இமாம் புகாரி றஹ்மதுள்ளாஹி அலைஹிம் உள்ளிட்டவர்கள் முகல்லிதுகளின் மாணவர்களாகும் .

இது பற்றிய தெளிவான விளக்கம் புகாரி ஷரீஃபின் விரைவுரை நூலான ஐனியில் பார்க்கலாம். இந்த வினாவுக்கான ஒருபதிலை எனது கவிதைத் தொகுப்பான "தீவானே ஸாலிகீன்" என்ற நூலில் ஒரு கவிதையில் இவ்வாறு குறிப்பிட்டுள்ளேன்.

"தக்லீது உம்மத்தில் ஷிர்க்" ஆயின், முஹத்திதுகள் சகலரும் முஷ்ரிகுகள்தான். புகாரி, முஸ்லிம், இப்னு மாஜா, இமாமுல் அஃழம் அபூஹனீஃபா ( றஹ்மதுள்ளாஹி அலைஹிம் ) உள்ளிட்ட முஹத்திதுகள், புகஹாக்கள் தொகைதான் எத்தனை? அத்தனைபேரும் நீங்கள் விதைத்த (ஷிர்கு) வித்தில் முளைத்த பயிர்கள் தான். உங்கள் ஆதரவில்லாத எவரும் இவ்வுலகில் முஸ்லிம்களாக முடியாது! ஒரு ஃபாஸிக் (பாவி) அறிவிப்புச் செய்கின்ற ஹதீதை ழயீஃப் (பலவீனம்) ஆகவே கருதப்படும். அல்லது புனையப்பட்டதாகக் கருதப்படும்.

இந்நிலையில்.

தக்லீத் செய்வது உங்கள் பார்வையில் ஷிர்காயின், ஷிர்க்கைச் செய் கின்ற முஹத்திதீன்களின் நிலை என்ன? முகல்லிதுகளான இமாம்கள் புகாரி, முஸ்லிம், திர்மிதி, அபூதாவூத், இப்னுமாஜா உள்ளிட்ட சகல இமாம்களும் முஷ்ரிக்காகி விட்டார்களே! நஊது பில்லாஹ்!

இதனால் அவர்களின் சகல அறிவிப்புக்களும் செல்லு படியற்றதாகிவிட்டது. இந்நிலையில் ஹதீதுகளை எங்கே தேடுவது?.

அல்லாஹுத்த ஆலா கூறுகின்றான்.

وَإِنْ خِفْتُمْ شِقَاقَ بَيْنِهِمَا فَابْعَثُوا حَكَمًا مِّنْ أَهْلِهِ وَحَكَمًا مِّنْ أَهْلِهَا إِن يُرِيدَا
إِصْلَاحًا يُوَفِّقِ اللَّهُ بَيْنَهُمَا إِنَّ اللَّهَ كَانَ عَلِيمًا خَبِيرًا

*"(கணவன் மனைவியாகிய) இருவருக்கிடையில் பிளவு உண்டாவதை நீங்கள் அஞ்சினால் அவனுடைய குடும்பத்திலிருந்து நீதியாள(ரான மத்தியஸ்தர் ஒரு)வரையும், அவளுடைய குடும்பத்தாரிலிருந்து நீதியாள(ரான மத்தியஸ்த)ரையும் (அவ்விருவரிடமும்) அனுப்புங்கள்."*

*அல் குர்ஆன் (4.35).*

ஹளறத் அலி கர்ரமல்லாஹு வஜ்ஹஹு, ஹளறத் முஆவியா றழியல்லாஹு அன்ஹு ஆகிய இருவரும் ஸிஃப்பீன் யுத்தத்தில் இரு தரப்பாருக்குமிடையில் பேச்சுவார்த்தை நடத்துவதற்காக சிலரை நீதி யாளர்களாக ஏற்பாடு செய்தனர். பனூ குறைழா கோத்திரத்தாரின் விடயத்தில் றஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் ஹளறத் ஸஃது றழியல்லாஹு அன்ஹு அவர்களை நடுவராகவும், தீர்பாளராகவும் நியமித்தார்கள். இப்படியிருக்க ஒருவரை நீதிபதியாக்கி அவர் தீர்ப்பை ஏற்பது எப்படி ஷிர்க்காகும்?)

அல்லாஹ் அல்லாதவர்களின் சட்டத்தை ஏற்பது ஷிர்க்காயின், இன்று உலகம் முழுவதும் வழங்கப்படுகின்ற நீதிபதிகளின் தீர்ப்புக்கள், பஞ்சாயத்துக்கள், செயலகங்களின் முடிவுகள், தீர்மானங்கள் உள்ளிட்ட வற்றை சகல மக்களும் ஏற்றுக் கொள்கின்றனர். உங்கள் கருத்துப்படி சகலரும் முஷ்ரிக்காகி விடுவார்களே!

**வினா : 6**

கியாஸ் (ஒப்பீட்டாய்வு) என்பது முஜ்தஹிதான இமாம்களின் வெறும் அனுமானங்கள் மட்டுமே. இப்படியான அனுமானங்களான எண்ணங்களை நம்புவது பாவமாகும். இதற்கு திருக்குர்ஆன் தடை விதித்துள்ளது.

திருக்குர்ஆன் கூறுகின்றது

يَا أَيُّهَا الَّذِينَ آمَنُوا اجْتَنِبُوا كَثِيراً مِّنَ الظَّنِّ إِنَّ بَعْضَ الظَّنِّ إِثْمٌ

*“முஃமின்களே! எண்ணங்களில் பெரும்பாலானவற்றை நீங்கள் தவிர்த்துக் கொள்ளுங்கள். நிச்சயமாக அவ்வெண்ணங்களில் சில பாவமாகும்.”*

*அல் குர்ஆன் (49: 12).*

அதனால் குர்ஆன் ஸுன்னாவின் படி மட்டுமே செயல் படவேண்டும்.

**பதில்:**

கியாஸ் ஒப்பாய்வு என்றால் என்ன? அதன் சட்டம் யாது? என்ற முழு விபரமும் பின்னால் வரும். இன்ஷா அல்லாஹ்!.

إذا صح الحديث فهو مذهبي

"ஹதீது ஸஹீஹ் ஆனால் அதுவே எனது மத்ஹபு!"

என்று இமாமுல் அஃழம் அபூஹனீஃபா றஹ்மதுள்ளாஹி அலைஹி கூறியுள்ளார்கள். அவர்களின் கூற்றுப்படியே ஹதீதுகளுக்கு மாறான அவர்கள் கருத்துக்களை தவிர்க்கின்றோம். நைறு முகல்லிதுகளான வஹாபிகளிடம் இருக்கின்ற மிகப் பெரிய ஆதாரம் இதுதான். இதை மிகைத்த பெரிய ஆதாரம் எதுவும் அவர்களிடம் கிடையாது.

**பதில் :**

மேற் கண்டவாறு இமாமவர்கள் கூறியிருப்பது உண்மையே! அதில் துளியும் சந்தேகம் கிடையாது.

எனது கருத்து ஸஹீஹான ஹதீதுகளுக்கு எதிராக வருமாயின், எனது கருத்தை தவிர்த்து ஹதீதின்படி செயல்பட வேண்டும். என்று இமாமவர்கள் செப்பியது அன்னாரின் தக்வாவின் உச்சத்தையே காட்டுகின்றது.

தெளிவான ஆதாரம் கிடைக்காத போது தான் முஜ்தஹிதானவர் ஒப்பாய்வு (கியாஸ்) செய்வார் என்பது தான் உண்மை! அனைத்து

ஹதீதுகளையும், அதன் அறிவிப்பாளர்களையும், முழுமையாக தெரிந்துள்ள ஒரு முஜ்தஹிதை இன்று உலகில் காணமுடியுமா? இமாமவர்கள் எடுத்த சட்டத்தின் ஹதீதை அறிய வேண்டுமாயின், இமாமவர்கள் அறிந்திருந்த அனைத்து ஹதீதுகளையும் தெரிந்திருத்தல் அவசியமாகும்.

இப்பொழுதுள்ளவர்களின் ஹதீதுப் பார்வைகள் ஸஹீஹான ஆறு கிரந்தத்திற்குள் சுருங்கிவிட்டன. இந்த இலட்சணத்தில் முழுத் தீர்வையும் ஹதீதிலிருந்து எப்படி எடுப்பது? இமாமுல் அஃழம் அபூ ஹனீஃபா றஹ்மதுள்ளாஹி அலைஹி இப்போதிருக்கின்ற எந்தவொரு ஹதீதுத் தொகுப்பு நூற்களிலிருந்தும் ஹதீதுகளை எடுக்கவில்லை. அறிவிப்பாளர்களிடம் நேரில் பெற்றுக் கொண்டார்கள்.

இப்படியும் ஒரு ஹதீது காணக்கிடைக்கின்றது அதை உங்கள் கவனத்திற்கு முன் வைக்கின்றேன். படியுங்கள்!

إذا بلغكم مني حديث فاعرضوه علي كتاب الله فان وافقه فاقبلوه وإلا فردوه

"என்னுடைய ஏதும் ஹதீது உங்களுக்குக் கிடைத்தால் அதனை திருக்குர்ஆனோடு ஒப்பிட்டுப் பாருங்கள். (திருக்குர்ஆனுக்கு) அது உடன்பட்டிருந்தால் எடுத்துக் கொள்ளுங்கள். இல்லையேல் தவிர்த்துக் கொள்ளுங்கள். அதிகமான ஹதீதுகள் திருக்குர்ஆனுக்கு முரண்படுகின்றன. அதனால் ஹதீதுகளையும் தவிர்க்க வேண்டியதுதான். என்று "ஜகடாவி" என்ற வஹாபிகள் கூறினால் ஏற்றுக் கொள்வீர்களா?

(இப்போது ஜகடாவிகள் திருக்குர்ஆன் மட்டும் போதும் என்று கூறுகின்றனர். தமிழ்நாட்டிலும், இலங்கையிலும் உள்ள வஹாபிகளில் ஒருபிரிவினர் தங்களை அஹ்லுல் குர்ஆன் என்று கூறிக்கொண்டு ஹதீதுகளை மறுக்கின்றனர்.)

அனைத்து சொத்துக்களையும் பங்கிடுமாறு திருக்குர்ஆன் கூறுகின்றது. ஆனால் நபியின் அனந்தரச் சொத்தைப் பங்கிடக் கூடாது என்று ஹதீது கூறுகின்றது. இக்கருத்தை எப்படி நிராகரிக்க முடியும்? இவ்வாறு தான் உங்கள் கருத்தும் நிராகரிக்கத்தக்கதாகும்.

**வினா : 7**

இமாமுல் அஃழம் அபூஹனீஃபா றஹ்மதுள்ளாஹி அலைஹி அவர்களுக்கு அதிகமான ஹதீதுகள் கிடைக்கவில்லை. அதனால், அவர்களின் ஹதீது பற்றிய அறிவும் குறைவு! அவர்கள் மூலம் வந்த ஹதீதுகளும் பலவீனமானவையே!

**பதில்:**

இமாமுல் அஃழம் அபூஹனீஃபா றஹ்மதுள்ளாஹி அலைஹி அவர்கள்மிகப் பெரிய முஹத்திதாக விளங்கினார்கள். ஹதீதுத் துறையில் அபாரஆற்றல் அன்னாருக்கு இல்லாதிருந்தால் பாரிய அளவு சட்டச் சிக்கல்களுக்கு அவர்களால் எப்படித் தீர்வுகளைக் கண்டிருக்க முடியும்?,

இவர்களின் மாணவர்களான இமாம் அபூ யூஸுஃப் அவர்களின் "முஸ்னத்," மற்றும் இமாமவர்களின் சிரேஷ்ட மாணவர்களான இமாம் முஹம்மத் அவர்களின் "முஅத்தா" உள்ளிட்ட நூற்களிலிருந்து இமாமவர்களுக்கு ஹதீதிலிருந்த திறமையை அறிந்து கொள்ள முடியும். ஸித்தீக்குல் அக்பர் செய்யிதினா அபூபக்கர் ரலியல்லாஹு அன்ஹு அவர்களால் அறிவிப்புச் செய்யப்பட்ட ஹதீதுகள் மிகச் சொற்பமானவை என்பதால் அவர்களுக்கு ஹதீதுகள் தெரியாது என்று கூறமுடியுமா? குறைந்தளவான அறிவிப்புக்கள் பேணுதலையே குறிப்பிடுகின்றது.

இமாமவர்கள் மூலம் அறிவிக்கப்பட்ட ஹதீதுகள் யாவுமே ஸஹீஹானதுதான் என்பதற்கான காரணம் இமாமவர்கள் றஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் காலத்திற்கு மிக நெருக்கமான காலத்தில் வாழ்ந்ததாகும். அதனால் பின்னால் வந்த அறிவிப்பாளர்களின் பலவீனம் இமாமவர்களை ஒருபோதும் பாதிக்காது. இப்படியான பலவீனம் பாரதூரமானதாக இருந்தாலும் சரிதான்!

சத்தியம் ஒன்றில் தான் இருக்க முடியும். நான்கு மத்ஹபுகளும் சத்தியத்திலிருப்பதாக எப்படி வாதிக்க முடியும்? இதுவும் சிலரின் வாதமாகும்.

தொழுகையில் ஜமாஅத்தாகத் தொழும் ஒருவர் ஸூறத்துல் ஃபாதிஹா ஓதுவது மக்றூஹுத் தஹ்ரீமா என்று இமாமுல் அஃழம் அபூஹனீஃபா றஹ்மதுள்ளாஹி அலைஹி குறிப்பிடும் அதே நேரம் சட்ட மேதை

இமாம் ஷாஃபிஈ றஹ்மதுள்ளாஹி அலைஹி ஒவ்வொரு றகஅத்திலும் ஸூறத்துல் ஃபாதிஹா ஓதுவது வாஜிப் என்கின்றார்கள். அப்படியாயின் இதில் எது சரி?

இங்கு சத்தியம் என்பதற்கான பொருள் சரியானது அல்லது எதார்த்தத்திற்கு நேர்பட்டது. நான்கு மத்ஹபில் ஒன்றைப் பின் பற்றுபவர் தண்டனைக்குரியவராகக் கருதப்படமாட்டார். ஏனெனில், ஒரு முஜ்தஹிதின் தவறும் மன்னிக்கப் படக்கூடியதே! ஹளறத் அமீர் முஆவியா றழியல்லாஹு அன்ஹு, ஹளறத் அலி றழியல்லாஹு அன்ஹு அன்னை ஆயிஷா ஸித்தீகா றழியல்லாஹு அன்ஹா ஆகியோர் யுத்தம் செய்தனர்.

இவ்விருவரில் ஒருவர் பக்கம் தான் சரியாக இருக்க முடியும். ஆயினும்இருவருமே சத்தியத்திலிருப்பதாகவே கூறப்படுகின்றது. அதனால் இவ்விருவரில் எவரும் குற்றவாளியாகக் கருதப்படமாட்டார்.

கானகத்தில் கஃபாவின் திசையை அறியாமல் தடுமாறுபவர் இஜ்திஹாது செய்து நான்கு றக்கஅத்துக்களையும் நான்கு திசையில் தொழுதாலும் தொழுகை நிறைவேறிவிடும். முடிவில் மாற்றம் வரும் போதெல்லாம் திசையை மாற்றியுள்ளார்.

ஆனால், கிப்லா ஒரு திசையில்தான் உண்டு. ஆயினும் தொழுகை நிறைவேறுகிறதே. இவ்வாறே ஒரு முஜ்தஹிது தனது இஜ்திஹாதில் தவறிழைத்தாலும் கூட இஜ்திஹாத் செய்ததற்காக ஒரு கூலி வழங்கப்படும்.

ஹளறத் தாவூத் நபி அலைஹிஸ்ஸலாம் அவர்களும், ஹளறத் நபி ஸுலைமான் அலைஹிஸ்ஸலாம் அவர்களும் ஒரு விடயத்தில் வெவ்வேறு விதமான தீர்ப்பைக் கொடுத்ததை திருக்குர்ஆன் கூறி விட்டு இதில் நபி ஸுலைமான் அலைஹிஸ்ஸலாம் அவர்களின் தீர்ப்பே சரியென்று கூறியதுடன் நபி தாவூத் அலைஹிஸ்ஸலாம் அவர்களைக் கண்டிக்க வில்லை.

திருக்குர்ஆன் கூறும் அழகைப் பாருங்கள்!

وَكُلًّا آتَيْنَا حُكْمًا وَعِلْمًا

*"நாம் (இவர்களில் நின்றும்) ஒவ்வொருவருக்கும் அறிவையும், ஞானத்தையும் கொடுத்திருக்கின்றோம்."*

*அல் குர்ஆன் (21:79)*

என்று பாராட்டியுள்ளது.

றஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்கள் கூறினார்கள்.

إذا حكم الحاكم فاجتهد واصاب فله اجران ، واذا حكم فاجتهد فاخطأ فله اجر واحد

ஒரு நீதிபதி ஆய்வு செய்து தீர்ப்பளித்து அது எதார்த்தத்திற்கு நேர்பட்டிருப்பின், இரண்டு கூலிகள் கிடைக்கும். இன்னும் ஒரு நீதிபதி ஆய்வு செய்து அதில் தவறிழைத்து தீர்ப்பளித்தால் ஒரு கூலி கிடைக்கும்.

*ஆதாரம்: (புகாரி, முஸ்லிம்.)*

ஷாஃபிஈ மத்ஹபைச் சேர்ந்தோர் தொழுகையில் கையை உயர்த்துவது சரியானது. ஆனால், ஙைறு முகல்லிதுகளான வஹாபிகள் கையை உயர்த்துவது குற்றமாகும். ஏனெனில், சட்ட மேதை இமாம் ஷாஃபிஈ றஹ்மதுள்ளாஹி அலைஹி ஒரு முஜ்தஹிதுல் முத்லக் ஆவார்கள். ஙைறு முகல்லிதுகளான வஹாபிகள் முஜ்தஹிது இல்லாமல் மனோ இச்சைப்படி செயல்படுகின்றனர். இது குற்றமாகும்.

"ஒரு முஜ்தஹிது தனது ஆய்வில் தவறிழைத்தாலும் கூட அதற்கு ஒரு நன்மை உண்டு! அதே நேரம் ஙைறு முகல்லிதுகள் சரியாகச் செய்தாலும் கூலி இல்லை. தண்டனை உண்டு! தன்னிச்சையாக ஒருவர் சட்டத்தைக் கையில் எடுத்து செயலில் இறங்குவது சட்டப்படி குற்றம் ஆனால், நீதிபதியின் தீர்ப்போடு செயல்பட்டாராயின் அது கடமையாக ஆகிவிடும்.

பத்று யுத்தத்தில் கைதியாகப் பிடிபட்டவர்களை தண்டப்பணம் பெற்று விடுதலை செய்வதென்று றஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்கள் தன்னிச்சையாகவே முடிவெடுத்தார்கள்.

“கியாஸ்” மூலம் நபியவர்கள் எடுத்த தீர்மானத்தை அல்லாஹுத் தஆலா திருப்தி காணவில்லை. அதே நேரம் பிணைப் பணம் திருப்பிக் கொடுக்கப்படவுமில்லை.

فَكُلُوا مِمَّا غَنِمْتُمْ حَلالا طَيِّبًا

*"நீங்கள் ஙனீமத்தாக (போரில்) பெற்றதிலிருந்து ஹலாலானதாக, மணமானதாகப் புசியுங்கள்."*

*அல் குர்ஆன் (8:69).*

தவறான ஆய்வுக்கு தண்டனை குறிப்பிடப்படவில்லை என்பதை கவனத்திற் கொள்க!

# முடிவுரை

## ஆய்வு-02

## (கியாஸ்)

## ஒப்பாய்வு பற்றிய ஆய்வு

கியாஸ் என்றால் என்ன?

இஸ்லாத்தின் மூலாதாரங்கள்,

1. **திருக்குர்ஆன்,**
2. **ஹதீது,**
3. **இஜ்மாஃ,**
4. **கியாஸ்.,**

"முஸ்லிம்களின் கூட்டமைப்போடு இணைந்திருங்கள். பிரிந்து விடாதீர்கள்" என்று திருக்குர்ஆனும், ஹதீது ஷரீஃபும் தெளிவாக வலியுறுத்திக் கூறுகின்றன. அதனால், முஸ்லிம்களின் கூட்டமைப்பை விட்டும் பிரிந்து தனிவழி செல்லுபவன் நரகவாதியாவான்.

"கியாஸ்" என் பதற்கான அகராதிப் பொருள், அனுமானித்தல்.

ஷரீஅத்தில், ஒருகிளைப் பிரச்சினையில் மூல அடிப்படைப் பிரச்சினையின் காரணத்தை தீர்ப்பில் இணைத்தல். அதாவது, திருக் குர்ஆனிலும், ஹதீதிலும் நேரிடையாக தீர்வு காணப்படாத ஒரு சட்டப் பிரச்சினைக்கு திருக்குர்ஆனிலும், ஹதீஸிலும் உள்ள அதை

யொத்த ஒரு தீர்ப்பின் காரணத்தைக் கண்டறிந்து இரண்டுக்கு மிடையில் ஒப்புவமை காண்பது.

அதாவது, மூலச் சட்டத்தின் காரணமும், கிளைச் சட்டத்தின் காரணமும் ஒன்றாயிருத்தல். காரணம் ஒன்றாயின் தீர்வும் ஒன்றாகும்.

உதாரணமாக,

ஒரு பெண்ணின் பின் துவாரத்தில் புணர்வது பற்றிய சட்டம் என்ன? என்று ஒருவர் கேட்டால், மாதவிடாய் காலத்தில் புணர்வது ஹறாம்,! காரணம் அசுத்தம். இதே காரணம் இங்கும் உண்டு அதனால் பின் துவாரத்தில் புணர்வது ஹறாம்.

தந்தை விபச்சாரம் செய்த பெண்ணை மகன் திருமணம் செய்வது ஹறாம் "புணர்தல்" என்ற காரணம் இருபக்கமும் உண்டு,

(இந்த சட்டம் ஹனஃபி மத்ஹபிற்குரியது, ஷாஃபிஈ மத்ஹபின் படி, சட்டரீதியான உறவினால் மட்டுமே உறவு வரும். இல்லாத் திருமணமான விபச்சாரத்தால் உறவு வராது. அதனால் திருமணம் முடிக்கலாம். விபச்சாரத்தில் பிறந்த தனது மகளைக் கூட மணமுடிக்கலாம். காரணம், விபச்சாரம் உறவைக் கொண்டு வராது என்பது ஷாஃபிஈ மத்ஹபின் சட்டமாகும்.)

நாய் பட்டால் ஏழு விடுத்தம் கழுவ வேண்டும். அதில் ஒரு தடவை புழுதியுள்ள சுத்தமான மண் கலக்கப்பட வேண்டும். என்பது ஹதீது ஷரீஃபில் உள்ள தீர்வு. பன்றி பட்டால் எவ்வாறு சுத்தம் செய்வது என்று திருக்குர்ஆனிலோ ஹதீதிலோ தீர்வு குறிப்பிடப்படவில்லை. நாயும், பன்றியும் கடுமையான நஜீஸ் ஆகும். அதனால், நாயின் சட்டம் பன்றிக்கும் பொருந்தும்.

திருக்குர்ஆனிலும், ஹதீஸிலும் புதைந்து கிடக்கின்ற சட்டங்களை "கியாஸ்" வெளிக்கொண்டு வருகிறது. அதனால் திருக்குஆன், ஹதீது, சஹாபாக்களின் நடைமுறை உள்ளிட்டவை கியாஸுக்கான மூலாதாரங் களாக இருக்கின்றன.

திருக்குர்ஆன் கூறுகின்றது.

فَاعْتَبِرُوا يَا أُولِي الْأَبْصَارِ

*"அகப் பார்வையுடையவர்களே! படிப்பினை பெறுங்கள்."*

*அல்குர்ஆன். (59: 02).*

அதாவது, காஃபிர்களுக்கு நேர்ந்த கதியைப் பற்றி நீங்களும் ஒப்பிட்டுப் பாருங்கள். நீங்களும் அவர்களைப் போன்று அக்கிரமம் புரிந்தால், அவர்களுக்கு நடந்ததுதான் உங்களுக்கும் நடக்கும்.

மறுமையைப் பற்றி தூக்கத்திற்கும், பயிர் (வேளாண்மை) பசுமையாக இருந்து பின் காய்ந்து வைக்கலாகி விடுவதை ஒப்பு நோக்கி திருக்குர்ஆன் குறிப்பிடுகின்றது.

தொடக்கம், இறுதி வரை காஃபிர்களைப் பற்றித் திருக்குர்ஆன் குறிப்பிடுகின்ற அனைத்து உதாரணங்களும் "கியாஸ்" தான்.

ஸஹீஹுல் புகாரி ஷரீஃபில் கியாஸைப் பற்றி "அல்லாஹுத்தஆலா தெளிவாக்கிய தீர்ப்பின் தெளிவான அடிப்படையை வைத்து அடுத்தவர் விளங்குவதற்காக தெளிவற்றதை ஒப்பிடுதல்" என்று ஒரு தலைப்பிட்டு அதற்கு ஆதாரமாக பின்வரும் ஹதீஸையும் பதிவு செய்துள்ளார்கள்.

ஒரு பெண்மணி றஸூலுல்லாஹி ஸல்லல்லாஹுஅலைஹி வஸல்லமவர்களிடம் வந்து பின் வருமாறு கூறினார். எனது தாய் ஹஜ் செய்வதற்கு நேர்ச்சை வைத்திருந்தார். எனது தாய்க்குப் பதிலாக நான் ஹஜ் செய்யலாமா? உமது தாய்க்கு கடன் இருந்தால் அதை நீ நிறைவேற்ற மாட்டாயா? (அது போன்று தான் இதுவும். நிறைவேற்றலாம்) என்று பதில் கூறினார்கள்.

இதைக் கேட்ட அப்பெண்மணி "நிச்சயமாக நிறைவேற்றுவேன்" என்று மறுமொழி கூறினார்.

நிறைவேற்றுவதில் அதிக பாத்தியதை மிக்கது அல்லாஹ்வின் கடனாகும். என்றும் றஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள். றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் வஃபாத்தாகுவதற்கு சற்று காலத்திற்கு முன், ஹளறத் முஆத் றழியல்லாஹு அன்ஹு அவர்களை எமனுக்கு காழியாக

நியமித்து வழியனுப்ப முன்னர், முஆதே! ஏதும் தீர்ப்புக் கேட்டு யாராவது உம்மிடம் வந்தால் எப்படித் தீர்ப்புக்கூறுவீர்? என்று கேட்டார்கள்.

திருக்குர்ஆனிலிருந்து தீர்ப்புக் கூறுவேன்.

அதற்கான தீர்வு அதில் இல்லாவிட்டால் என்ன செய்வீர்?

அல்லாஹ்வின் திருத்தூதரின் ஸுன்னாவிலிருந்து கூறுவேன்.

அதிலிலும் இல்லையாயின் யாது செய்வீர்?

اجتهد برأئي ولا الوا قال فضرب رسول الله صلي الله عليه وسلم علي صدره وقال الحمد لله الذي وفق رسول رسول الله صلي الله عليه وسلم ما يرضي به

எனது அறிவுத்திறனை வைத்து ஆய்வு செய்வேன். பின் வாங்க மாட்டேன் என்று ஹளறத் முஆத் ரழியல்லாஹு அன்ஹு கூறியதும் அவரின் நெஞ்சைத் தட்டி "அல்லாஹ்வின் திருத்தூதரின் தூதர் பொருந்திக் கொள்ளும் விடயத்தில் நல்லுதவி செய்த வல்ல நாயனுக்கே எல்லாம் புகழும்!" என்று பிரார்த்தித்தார்கள்.

மேற்கண்ட ஹதீஸில் கியாஸுக்கான ஆதாரம் மிகப் பிரகாசமாகத் தெரிகிறது.

றஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் உயிருடன் இருக்கும் போது இஜ்மாஃவுக்கான வாய்ப்பில்லை. அதனால் தான் ஹளறத் முஆத் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் இஜ்மாஃவைப் பற்றிக் குறிப்பிடவில்லை. ஸஹாபாக்களில் கணிசமானவர்கள் அதிகமான பிரச்சினைகளுக்கு கியாஸ் மூலமே தீர்வைக் கண்டார்கள் என்பது குறிப்பிடத்தக்கது.

ஹளறத் அப்துல்லாஹ் இப்னு மஸ்ஊத் றழியல்லாஹு அன்ஹு அவர்களிடத்தில் பின் வருமாறு ஒரு கேள்வி கேட்கப்பட்டது. மஹர் தொகையை நிர்ணயிக்காமல் திருமணம் செய்த ஒருவர் அந்தப் பெண்ணுடன் உறவு கொள்ள முன்பு மரணித்து விட்டார். இப்போது அந்தப் பெண்ணுக்கான மஹர் தொகை எவ்வளவு கொடுக்கப்பட வேண்டும்?

இதற்கான தீர்வை திருக்குர்ஆனிலிந்தோ, ஹதீதிலிருந்தோ நேரடியாக காண முடியவில்லை. சில நாட்கள் கழித்து பின்வருமாறு ஆய்வு செய்து தீர்ப்புக் கூறினார்கள். அப்பெண்ணின் தகுதியொத்த மற்றப் பெண்களின் மஹர் தொகைக்கு குறைவில்லாமல் வழங்கப்பட வேண்டும், இத்தாவையும் நிறைவேற்ற வேண்டும். கணவனின் சொத்திலிலிருந்து பங்கும் கொடுக்கப்பட வேண்டும்.

*ஆதாரம்: (நஸாயி)*

அதிகமான எண்ணங்களைத் தவிர்க்குமாறு திருக்குர்ஆன் கூறுவதாக வஹாபிகள் கூச்சலிடுகின்றனர். தீய எண்ணங்களைத் தவிர்க்குமாறே திருக்குர்ஆன் குறிப்பிடுகின்றது என்பதை வஹாபிகள் புரிந்து கொள் வதில்லை. அதாவது, முஸ்லிம்களைப் பற்றித் தப்பெண்ணங்கள் கொள்ளாதீர்கள்! என்பதே இதன் பொருளாகும். அதனால் தான். இதற்குப் பின், புறம் உள்ளிட்டவையைத் தவிர்க்குமாறு குறிப்பிடப்படுகிறது. அவ்வாறில்லை எனில் புறத்திற்கும், கியாஸுக்கும் என்ன தொடர்பு இருக்கின்றது?

அல்லாஹுத்தஆலா கூறுகின்றான்.

إِنَّمَا النَّجْوَى مِنَ الشَّيْطَانِ

***“ஆலோசனை செய்வதெல்லாம் ஷைத்தானின் தரப்பில் நின்று முள்ளதாக இருக்கும்.”***

*அல் குர்ஆன்: (58:10),*

இத்திருவசனத்தில் குறிப்பிடப்பட்டிருப்பதும் மேற்கண்ட திரு வசனத்தையே ஒத்திருக்கிறது. அதாவது, அனைத்து வகையான ஆலோசனைகளும் ஷைத்தானிய்யத்தான தல்ல!, முஸ்லிம்களுக் கெதிரான தீய எண்ணம் கொண்டு ஆலோசிக்கப்படுபவை யாவும் ஷைத்தானின் தரப்பில் உள்ளவையாகும்.

இங்கு "கியாஸு"க்கான காரணம் "தீமை"அதாவது, தீய எண்ணம், தீமை பயக்கும் ஆலோசனை உள்ளிட்ட யாவும் அல்லாஹ்வின் கட்டளைக்கு எதிராக வருபவையாகும்.

உதாரணமாக, ஷைத்தான் தவறான கியாஸ் பிடித்ததனால் தான் ஸுஜூதுச் செய்ய மறுத்து அல்லாஹ்வின் கட்டளைக்கு மாறு செய்தான். இவ்வாறான கியாஸ் குஃப்றை ஏற்படுத்தக் கூடியவையாகும்.

அல்லாஹுத்தஆலா கூறுகின்றான்.

اَنَّمَا اَتَّبِعُ مَا يُوحَى

***"என்மீது வஹி அறிவிக்கப்பட்டதையே நான் பின்பற்றுகின்றேன்."***

*அல் குர்ஆன்: (7: 203),*

இஜ்மாவும், கியாஸும் திருக்குர்ஆனில் வெளிப்படையாக விளங்க முடியாமல் புதைந்து கிடப்பவற்றை வெளிக் கொணர்பவை.அதனால் இஜ்மாவும் கியாஸும் திருக்குர்ஆன், ஹதீதில் உள்ளவையையே கூறுவதால் இவற்றைப் பின் பற்றுவது திருக்குர்ஆனையும் ஹதீதையுமே பின்பற்றுவதாக அமையும்.

இறுதியாக "கியாஸை" மறுக்கின்றவர்களிடம் ஒரு கேள்வியை முன் வைக்க விரும்புகின்றேன்.

திருக்குர்ஆனிலும், ஹதீஸிலும் தீர்வு காணப்படாதவற்றுக்கும், ஹதீஸில் வரும் முரண்பாட்டிற்கும் நீங்கள் முன் வைக்கின்ற தீர்வு என்ன?

உதாரணமாக,

1) விமானம் பறந்து செல்கையில் தொழுவதற்கான சட்டம் என்ன?

2) ஜும்ஆத் தொழுகையில் இரண்டாம் ரக்காஅத்தில் இமாமை விட்டும் பிரிந்த ஒருவர் ஜும்ஆவை தனியாகத் தொடரலாமா? அல்லது ழுஹர் தொழ வேண்டுமா?

இதை யொத்த கியாஸ் மூலம் தீர்வு காணப்பட வேண்டிய பிரச்சினை களுக்கு உங்களிடம் இருக்கின்ற தீர் வென்ன?

நிச்சயமாக இதற்குரிய தீர்வு உங்களிடம் கிடையவே கிடையாது. அதனால், ஒரு முஜ்தஹிதான இமாமைப் பின்பற்றுவதுதான் மிகச் சிறந்த தீர்வாக அமையும். அல்லாஹுத்தஆலா எமக்கும், அவர்களுக்கும் நல்லருள் பாலிப்பானாக! ஆமீன்.

وصلي الله علي سيدنا ونبينا محمد صلي الله عليه وسلم وعلي اله وصحبه وبارك وسلم عليه ، امين

# ஆய்வு: 03

# علم الغيب

# மறைஞானம் பற்றிய ஆய்வு

## அத்தியாயம்: 01

## முன்னுரை

மனிதனின் கண் காது உள்ளிட்ட புறப் புலன்களால் அறிய முடியாதவற்றை غيب மறை எனப்படும். புலச்சார்புள்ள ஆதாரமின்றி புத்திக்குப் புலப்படாத புலச்சார்பற்றவற்றை غيب மறை என்று விளக்கமாகக் கூறலாம்.

பஞ்சாப் மாநிலத்தில் வாழுகின்றவருக்கு மும்பாய் நகரம் மறையல்ல. மும்பாய் நகத்தை அவர் கண்ணால் காணாவிட்டாலும் அடுத்தவர் மூலமாகக் கேட்டு அறிந்து கொள்ள முடியும். இவ்வாறு இசையின் இன்பத்தையும், புஷ்பங்களின் சுகந்தத்தையும் கண்ணால் காண முடியா விட்டாலும் ஏனைய புலன்களால் அறிந்து கொள்ள முடியும்.

மலக்குகள், ஜின்கள், சொர்க்கம், நரகம் உள்ளிட்டவற்றை புலன்களாலோ, பகுத்தறிவாலோ அறிய முடியாது. அதனால், அவை நமக்கு மறை غيب ஆகும். ஆதலால் மறை غيب இரு விதத்தில் உள்ளன.

(1) ஆதாரத்தின் மூலம் அறியக் கூடியவை. அல்லாஹ்வின் தாத் (சத்) பண்புகள், மலக்குகள், ஜின்கள், சொர்க்கம், நரகம் உள்ளிட்டவற்றையும், பிரபஞ்சத்தின் படைப்புக்களையும் திருக்குர்ஆனின் சாட்சியங்களையும் வைத்து புரிந்து கொள்ள முடியும்.

(2) ஆதாரங்களினால் அறிய முடியாதவை, உதாரணம் மறுமை ஏற்படும் நாள், மனிதனின் மரணம், பெண்ணின் கருவறையில் இருப்பது ஆணா? பெண்ணா? சீதேவியா? மூதேவியா? என்பனவற்றை ஆதாரங்களினாலும் அறிய முடியாது.

இது பற்றித் திருக்குர்ஆன் பின் வருமாறு கூறுகின்றது.

عَالِمُ الْغَيْبِ فَلا يُظْهِرُ عَلَى غَيْبِهِ أَحَدًا إِلا مَنِ ارْتَضَى مِنْ رَسُولٍ

*"மறைவானவற்றை (அவன்) அறிகிறவன். எவருக்கும். அவன் வெளிப் படுத்தமாட்டான், றசூலில் அவன் பொருந்திக் கொண்டவர்களைத் தவிர."*

*அல்குர்ஆன்: (72: 26, 27)*

தஃப்ஸீர் கலை மேதைகளிடத்தில் غيب மறை என்பது புலச் சார்பற்ற வையையும், ஆதாரமின்றி புத்தியால் அறிய முடியாதவற்றையும் குறிக்கும்,

والمراد بالخفي الذي لايدركه الحس ولا تقتضيه بداه العقل - تفسي بيضاوي

தஃப்ஸீர் கபீரில் பின் வருமாறு பதிவு செய்யப்பட்டுள்ளது.

قول الجمهور المفسرين ان الغيب هو الذي يكون غاءبا عن الحاس ثم هذا ينقسم الي ما عليه دليل والي ما لا دليل عليه : تفسير كبير

பெரும்பான்மையான முஃபஸ்ஸிரீன்களின் கூற்றுப் படி மறை என்பது புலக்காட்சிக்குட்படாததாகும். பின்னர் மறை என்பது இருவகைப்படும்.

(1) ஆதாரத்திற்குட்பட்டது

(2) ஆதாரத்திற்குட்படாதது.

*(தப்ஸீர் கபீர்).*

தஃப்ஸீர் றூஹுல் பயானில் பின் வருமாறு எழுதப்பட்டுள்ளது.

وهو ما غاب عن الحس والعقل غيب, كامل, بحيث لا يدرك بواحدمنها ابتداء بطريق البداه, وهو قسمان لا دليل عليه وهو الذي اريد بقوله عنده مفاتح الغيب وهو قسم نصب عليه دليلكا الصانع وصفاته وهو المراد. :تفسير روح البيان

புலன், புத்தி இரண்டில் ஒன்றால் கூட அப்பட்டமாக அறிய முடியாது என்ற ரீதியில் புலனுக்கும், புத்திக்கும் முழுமையாக மறைந்திருப்தாகும். இது இரு வகைப்படும்.

1) ஆதாரத்தின் மூலம் அறிய முடியாதது. மறைவானவற்றின் திறப்புக்கள் அவனிடமே உள்ளன என்ற திருவசனம் இதனையே குறிக்கும்.

2) ஆதாரத்தின் மூலம் அறிய முடிபவை.

உதாரணம்.

அல்லாஹ்வின் தாத்தையும், அவனது பண்புகளையும் அறிவது. "மறைவானவற்றை ஈமான் கொள்வார்கள்" என்ற திருவசனம் இரண்டாவது வகையைக் குறிக்கிறது. வண்ணங்களை கண் பார்க்கிறது. வாசத்தை மூக்கு நுகர்கிறது. சுவையை நாக்கு ருசிக்கிறது, ஒலியைக் காது கேட்கிறது.

இந்த வகையில், நிறம் கண்ணுக்கும், ஒலிகாதுக்கும், சுவை நாக்கிற்கும், வாசம் நாக்குக்கும் மறை. ஒரு இறை நேசர் மணத்தையும், சுவையையும் அதனதன் ரூபத்தில் கண்ணால் கண்டாலும் "மறை" தான். எவ்வாறெனில், மறுமையில் அமல்களைப் பல்வேறு ரூபங்களில் காண முடியும்.

மறுமையின் காட்சிகளை இவ்வுலகில் யாராவது கண்ணால் கண்டால் கூட அதுவும் "மறை" தான் கௌதுல் அஃழம் முஹ்யித்தீன் அப்துல் காதிர் ஜீலானி கத்தஸல்லாஹு ஸிர்ரஹுல் அஸீஸ் அவர்கள் பின் வருமாறு கூறினார்கள்.

وَمَا مِنْهَا شُهُورٌ أَوْ دُهُورٌ . تَمُرُّ وَتَنْقَضِي إِلاَّ أَتَى لِي

மாதங்களும், காலங்களும் என்னிடம் வந்து அனுமதி பெற்றேயன்றி கடப்பதில்லை. தற்காலத்தில் கிடைக்காத ஒன்றும் வெகு தூரத்திலிருப்

பதும் கும்மிருட்டில் கண்ணுக்குப் புலப்படாததும். "மறை" தான். இவற்றை அறிவது "மறைஞான"த்தையே சேரும்,

எவ்வாறெனில், எதிர் காலத்தில் நடக்கக் கூடியதை முன் கூட்டியே றஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் கூறியிருக்கின்றார்கள்.

அமீறுல் முஃமினீன் உமர் ஃபாறூக் றழியல்லாஹு அன்ஹு மதீனத்துல் முனவ்வறாவில் வெள்ளிக்கிழமை குத்பாப் பிரசங்கம் நிகழ்த்திக் கொண்டிருக்கும் போது. "நஹாவந்" என்ற இடத்தில் போரிட்டுக் கொண்டிருந்த படைத் தளபதி ஹளறத் "ஸாரியா" றழியல்லாஹு அன்ஹு அவர்களுக்குக் கட்டளையிட்டார்கள், இக்கட்டளையை ஹளறத் "ஸாரியா" றழியல்லாஹு அன்ஹு கேட்டார்கள்.

இவ்வாறு யாராவது ஒருவர் பஞ்சாபிலிருந்துக் கொண்டு புனித மக்கத்துல் முகர்ரமாவில் நடப்பதை உள்ளங்கையில் வைத்துப் பார்ப்பது போன்று பார்ப்பாராயின், அதனை "மறை" யாகவே கருதப்படும்.

புலச்சார்பற்றதை ஒரு கருவியின் மூலம் காண்பதை "மறை" என்று கூற முடியாது.

எடுத்துக் காட்டாக, வயற்றிலிருக்கும் சிசுவைக் காண்பது, தொலை நோக்கி மூலம் பார்ப்பது, அலைபேசியூடாக தூரத்தில் உள்ளவருடன் பேசுவது. தொலைக்காட்சிக் கருவியில் பார்ப்பது உள்ளிட்ட எவையும் "மறை" ஆகாது,

காரணம். இங்கு புலனும், புத்தியும் தொடர்புபடுகின்றது, இவை இரண்டுக்கும் அப்பால் உள்ள தளம் மூலம் அறிவதையே "மறை" غيب எனப்படும்.

## கருத்தில் கொள்ள வேண்டிய முக்கிய விளக்கம்.

மறை ஞானம் பற்றிய தெளிவான. விளக்கத்தை அறிந்து கொள்வதற்கு முன் முக்கியமான சில அடிப்படை விளக்கங்களை அறிந்து கொள்வது பயன்மிக்கதாக அமையும். இதனால் வீணான சந்தேகங்கள் அகன்று விடும். எனவே பின்வரும் விளக்கத்தைக் கவனத்தில் கொள்க! அறிவுத் துறையில் குறையுள்ளது என்று எதுவும் கிடையாது. தீய நோக்கிலும், தீமை விளைவிக்கும் எண்ணத்திலும் கற்கும் கல்வி தான் குறைபாடுள்ளது, இழிவானது,

அறிவுத் துறையில் ஏற்றத் தாழ்வுண்டு. அகீதா, ஷரீஅத், தஸவ்வுஃப் உள்ளிட்ட துறைகள் ஏனைய துறைகளை விட உயர்வானவை. திருமறையில் சில வசனங்கள் சிலதை விட மேலானவை. ஸூறத்துல் இக்லாஸ் திருக்குர்ஆனின் 1/3 க்குச் சமன். இச்சிறப்பு அதற்கு அடுத்துள்ள அத்தியாயத்திற்குக் கிடையாது. இது பற்றிய விரிவான விளக்கத்தை தஃப்ஸீர் றூஹுல் பயானில் 4.82 திருவசனத்தின் விரிவுரையில் காணலாம்,

எது பற்றிய அறிவாயினும் அது தன்னில் குறையில்லை. அறிவில் குறையிருக்குமாயின், அந்த அறிவு அல்லாஹ்வுக்கு இருக்க முடியாது. காரணம், அல்லாஹுத்தஆலா குறைகள் அனைத்தையும் விட்டும் பரிசுத்தமானவன்.

மலக்குகளுக்கு அல்லாஹுத் தஆலாவின் தாத் (உள்ளமை) பண்புகள் பற்றிய அறிவு நிறையவே உண்டு, ஆனால், நல்லது, கெட்டது பற்றிய அறிவு கிடையாது. மலக்குகளிடமில்லாத இவ்வறிவினால் தான் நபி ஆதம் அலைஹிஸ்ஸலாம் மலக்குகளை விட உயர்வானார்கள். மலக்குகளுக்கு ஆசிரியராகவும் ஆனார்கள், தீய அறிவு என்பது, அடிப்படையில் தீயதாகவே இருக்குமாயின், நபி ஆதம் அலைஹிஸ்ஸலாம் மலக்குகளை விடச் சிறப்புப் பெற்று அவர்களுக்கு ஆசானாக ஆகியிருக்கவும் முடியாது.

உலகத்திலுள்ள பாவங்களில் படுமோசமானது குஃப்றும் ஷிர்க்குமாகும். ஆயினும், பொறாமை, சினம், புறம் உள்ளிட்ட தீய பண்புகளையும், குஃப்று, ஷிர்க்கைத் தோற்றுவிக்கும் அறிவுகளையும் கற்பது வாஜிபு கடமை என்று சட்ட அறிஞர்களான ஃபுகஹாக்கள் கூறுகின்றனர்.

இவற்றைத் தவிர்க்க வேண்டுமாயின் இதனைக் கற்றுத் தான் ஆக வேண்டும். சூனியத்தின் தீங்கிலிருந்து மீள வேண்டுமாயின், சூனியத்தைக் கற்றுத் தான் ஆக வேண்டும், முகஸ்துதி, பொறாமை தற்பெருமை, குஃப்று, ஹறாம் தொடர்பான வார்த்தைகளையும் கற்பது அல்லாஹ்வின் மீது ஆணையாக ஃபர்ளு கடமை ஆகும்.

*ஆதாரம்: (ஜாமி).*

தீய அறிவு என்பது அறிவின் தரப்பிலிருந்து கூறப்படும் வார்த்தையல்ல. அறிவில் எதுவும் தீயதல்ல. மனிதனோடுள்ள மூன்று காரணங்களினால் தான் தீய அறிவு எனப்படுகின்றது. என ஹுஜ்ஜத்துல் இஸ்லாம் இமாம் ஙஸ்ஸாலி றஹ்மதுள்ளாஹி அலைஹி கூறுகின்றார்கள்.

*(இஹ்யா உலூமுத்தீன்)*

மேற்கண்ட எடுத்துக்காட்டுக்கள் மூலம் "அறிவு தன்னில் குறையில்லை" என்பது தெளிவாகி விட்டது,

திருட்டு, விபச்சாரம், சூனியம், கவிதை உள்ளிட்ட அறிவுத் துறைகள் குறையுள்ளவை ஆகையால் இவ்வகையான அறிவுகள் றஸூலுல்லாஹி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்களுக்குத் தெரியாது என்ற சிலரின் வாதங்கள் பிழை என்பதும் தெரிய வந்துள்ளது.

றஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களை விட அதிக அறிவு இருப்பதாகக் கூறுவதும், தீயவற்றை அல்லாஹுத் தஆலா படைப்பதில்லை என்று மஜூஸிகள் கூறுவதை ஒத்துள்ளது, தீயதைப் படைப்பதும் தீய காரியம் என்பது இவர்களின் வாதம் நஊதுபில்லாஹ்!

சூனியம் பற்றிய அறிவு அடிப்படையில் தீயது என்றிருந்தால், அவற்றைக் கற்றுக் கொடுப்பதற்காக "ஹாறூத், மாறுத்" என்ற இரு மலக்குகளையும் அல்லாஹூத் தஆலா பூமிக்கு எதற்காக அனுப்பினான்.

நபி மூஸா அலைஹிஸ்ஸலாம் அவர்களோடு போட்டிக்கு வந்த சூனியக்காரர்கள் அவர்களிடமிருந்த சூனியம் பற்றிய ஞானத்தால்தான் நபி மூஸா அலைஹிஸ்ஸலாம் அவர்களின் உண்மையைக் கண்டு ஈமான் கொள்வதற்குக் காரணமானது என்பதை சிந்தனை செய்து பாருங்கள்!

நபிமார்கள் உள்ளிட்ட அனைத்துப் படைப்புக்களும் பெற்றுள்ள அனைத்து அறிவுகளும் நபிகள் கோமான் முஹம்மது முஸ்தபா ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களிடமிருந்து நன்கொடையாகப் பெற்றவையாகும்,

இதனை தேவ்பந்தின் குரு பீடமான காஸிம் நானூத்தவியும் தனது "தஹ்தீறுன் நாஸ்" என்ற நூலில் குறிப்பிட்டுள்ளார்.

அதாவது, "யாராவது ஒருவர் ஏதேனும் ஓர் அறிவைப் பெற்றிருந்தால் அந்த அறிவும் றஸூலுல்லாஹி ஸல்லல்லாஸு அலைஹி வஸல்லம் அவர்களுக்குத் தெரியும்" அனைத்து அறிவுகளும் றஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களால் பங்கிடப்பட்டவை தான், ஆசிரியரிடமிருக்கின்ற அறிவைத்தான் மாணவன் அடைவான் என்பது வெளிப்படையானது.

நபி ஆதம் அலைஹிஸ்ஸலாம், நபி இப்றாஹீம் அலைஹிஸ்ஸலாம் உள்ளிட்டோரின் அனைத்து அறிவுகளும் கோமான் நபியுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் அறிவில் ஒரு "துளி" தான் என்பதை அடுத்து வரும் தொடர்களில் நிரூபிப்போம். இன்ஷாஅல்லாஹ் !

நடந்தவை, நடப்பவை, நடக்க இருப்பவை உள்ளிட்ட அனைத்து வகையான தகவல்களும் திருக்குர்ஆனிலும், லவ்ஹுல் மஹ்ஃபூழ் ஏட்டிலும் உள்ளன. இவற்றில் மிகச் சில, மலக்குகள், நபிமார்களின் பார்வையிலும் உள்ளன,

## பிரிவு-1

## மறை ஞானம் பற்றிய கோட்பாடும், தராதரங்களும்.

(1) மறை ஞானத்தின் வடிவங்கள் மூன்று! இவற்றிற்கான விதிகளும் தனியானவை.

### வடிவம்: 01

அ: அல்லாஹுத் தஆலா சுயமாக யாவற்றையும் அறிந்தவன். அவன் அறிவித்துக் கொடுக்காமல் ஓர் அட்சரத்தையும் எவராலும் அறிய முடியாது.

ஆ: றஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கும், ஏனைய நபிமார்களுக்கும் மறைஞானத்தில் சிலவற்றைக் கற்றுக் கொடுத்துள்ளான்.

இ: றஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் ஞானம் படைப்பினங்கள் அனைத்தையும் விட அதிகமானது. நபி ஆதம், நபி இப்றாஹிம், மலக்குல் மௌத் அலைஹி முஸ்ஸலாம் மற்றும் இப்லீஸ் உள்ளிட்ட அனைவரும் படைப்பில் அடங்குவர் என்பதும் கவனத்திற்குரியதாகும்.

இம் மூன்று வடிவங்களையும் அவசியம் அறிதல் வேண்டும். இவற்றை மறுப்பது குஃப்றிய்யத்தை ஏற்படுத்தும்.

### வடிவம்: 02

அ: நபிமார்கள் மூலமாகத் தான் வலிமார்களும் ஞானத்தைப் பெறு கின்றனர்.

ஆ: முக்கியமான "ஐந்து" மறைவானவற்றில் அதிகமான பகுதிகளை அல்லாஹுத் தஆலா றஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கு கற்றுக் கொடுத்துள்ளான். வடிவம் இரண்டை மறுப்பவன் மதுஹபுகளையும், ஹதீதுகளையும் மறுக்கின்ற வழி கேடனாவான்.

**வடிவம்: 03**

அ: மறுமை எப்பொழுது நிகழும் என்ற அறிவும் றஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கு வழங்கப்பட்டுள்ளது.

ஆ: லவ்ஹுல் மஹ்ஃபூழ் ஏட்டிலிருக்கின்ற ஞானத்தில் நடந்தவை, நடப்பவை, நடக்கப் போகின்றவை உள்ளிட்டவையும், இதை விட அதிகமான அறிவுகளும் றஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கு வழங்கப்பட்டுள்ளன.

இ: றூஹ் பற்றிய ஞானமும், திருக்குர்ஆனில் நேர் பொருள் பொருந்தாத "முதஷாபிஹத்" தான திருவசனங்களின் ஞானங்களும் வழங்கப்பட்டுள்ளன.

**மறுப்பாளர்களின் கவனத்திற்கு.**

மறை ஞானத்தை (علم الغيب) மறுப்பவர் பின் வரும் நான்கு விடயங் களையும் கவனத்திற்கொண்டு தனது வாதத்தை நிறுவ வேண்டியது கடமை ஆகும்.

1: மாற்றுக் கருத்துக்கு வாய்ப்பில்லாத தெளிவான திருக்குர்ஆன் வசனங்கள், மற்றும் சந்தேகத்திற்கிடமில்லாமல் பலரால் அறிவிப்புச் செய்யப்பட்ட "முதவாத்" திறான ஹதீஸ்கள்;

2: அல்லாஹ்வால் நன்கொடையாக வழங்கப்பட்ட அறிவுக்கு "அதாயி" எனப்படும். இந்த வகையான "அறிவு" தனக்கு வழங்கப்பட வில்லை, என்று றஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறியதாக ஏதும் ஹதீதுகள் அல்லது திருக்குர்ஆன் வசனங்கள்.

3: நபியவர்கள் கூறாதவை, அல்லது வெளிப்படுத்தாதவை ஆதாரமாகாது. அது பற்றிய அறிவு நபியவர்களுக்கு இருந்தும், ஏதும் ஒரு நன்மை கருதி அதை வெளிப்படுத்தாமலிருக்கலாம். அல்லது அல்லாஹ் தான் நன்கு அறிவான், அல்லாஹ் அன்றி வேறு எவரும் அறியார் அல்லது எனக்கு

எப்படித் தெரியும்? உள்ளிட்ட கருத்துக்கள் தனக்குச் சுயமான அறிவு இல்லை என்பதையோ அல்லது, சபையில் முன்னாலிருப்பவருக்குத் தெரியப்படுத்தாமல் பேச்சை நிறுத்துவதற்காகவோ கூறப்பட்டவையாகவோ இருக்கும்.

4: மறை ஞானம் யாருக்கும் கிடையாது என்ற கூற்று மறுமை நாள் வரையிலான நிகழ்வுகள், அல்லாஹ்வின் அனைத்துப் பண்புகள், மறுமைக்குப் பின்னுள்ள அனைத்து வகையான நிகழ்வுகள் உள்ளிட்டவையாக இருப்பின் அது பற்றி நாமும் வாதாட மாட்டோம். மேற் கண்ட நான்கு பிரிவுகளையும் கவனத்தில் ஆழமாகப் பதித்துக் கொண்டு "மறை ஞானம்" பற்றிய விளக்கத்திற்குள் நுழைவோம் இன்ஷா அல்லாஹ்.

## மறைஞானத்தை நிரூபிக்கும் ஆதாரங்கள்.

**இத்தொடரில் ஆறு உட்பிரிவுகள் உள்ளன.**

**பிரிவு - 1. திருக்குர்ஆன் வசனங்கள்.**
**பிரிவு - 2. ஹதீதுகளின் ஆதாரங்கள்.**
**பிரிவு - 3. ஹதீஸ் விரிவுரையாளர்களின் ஆதாரங்கள்.**
**பிரிவு - 4. அறிஞர்கள் / ஃபுகஹாக்களின் கூற்றுக்கள்.**
**பிரிவு - 5. மறுப்பாளர்களின் நூற்களிலிருந்து மேற்கோள்கள்.**
**பிரிவு - 6. பகுத்தறிவு ஆதாரங்களும், வலிமார்களின் மறைஞானம் பற்றிய விளக்கமும்,**

## பிரிவு - 1

## திருக்குர்ஆன் ஆதாரங்கள்.

وَعَلَّمَ آدَمَ الْأَسْمَاءَ كُلَّهَا ثُمَّ عَرَضَهُمْ عَلَى الْمَلَائِكَةِ

*“மேலும் (பொருட்களின்) பெயர்கள் அனைத்தையும் ஆதமுக்கு அவன் கற்றுக்கொடுத்தான்., பிறகு அவற்றை வானவர்களுக்கு எடுத்துக் காட்டினான்.”*

*அல் குர்ஆன்: (2:31),*

ومعني تعليمه اسماء المسميات انه تعالي اراه الاجناس التي خلقها وعلمه ان هذا اسمه فرس وهذا اسمه كذاوعن ابن عباس علمه اسم كل شيء حتي القصع- والمعرق :تفسير المدارك

நபி ஆதம் அலைஹிஸ்ஸலாம் அவர்களுக்கு அனைத்துத் திருநாமங்களையும் கற்றுக் கொடுத்தான். என்பதன் பொருள் அனைத்து வகையான படைப்புக்களையும் காட்டி இதன் பெயர் இன்னது என்று ஒவ்வொன்றின் பெயரையும் கற்றுக் கொடுத்தான்.

ஹளறத் இப்னு அப்பாஸ் றழியல்லாஹு அன்ஹு அறிவிக்கின்றார்கள். "கோப்பை, பாத்திரங்கள், அகப்பை, கரண்டி உள்ளிட்ட அனைத்து வகைகளின் பெயர்களையும் கற்றுக் கொடுத்தான்."

وقيل علم ادم اسماء الملاءك وقيل اسماء ذريته وقيل علمها للغات كلها :تفسير خازن

ஒரு கூற்றின் படி அனைத்து மலக்குகளின் பெயர்களையும் அல்லாஹுத் தஆலா கற்றுக் கொடுத்தான். அவர்களின் சந்ததிகளின் பெயர்களைக் கற்றுக் கொடுத்தான் என்றும், அனைத்து வகையான மொழிகளையும் கற்றுக் கொடுத்தான் என்றும் பல கூற்றுகள் காணப்படுகின்றன.

*(தஃப்ஸீர் காஸின்)*

اي علمه صفات الاشياء ونعوتها وهوالمشهور ان المراد اسماء كل شيء من خلق من اجناس المحدثات من جميع اللغات المختلف التي يتكلم بها ولد ادم اليوم من العربي والفارسي والرومي وغيرها :تفسير كبير

ஆதம் அலைஹிஸ்ஸலாம் அவர்களுக்கு அனைத்துப் பொருட்களின் பண்புகளையும், அவற்றின் நிலைகளையும் கற்றுக் கொடுத்தான். இக்கருத்துதான் பிரபலமான கருத்தாகும். படைப்பில் புதிதாகத் தோன்றுகின்ற இனங்களின் பெயர்களையும் ஆதம் அலைஹிஸ்ஸலாம் அவர்களில் இன்று வரை பேசுகின்ற பல்வேறு மொழிகளில் அறபு, பாரசீகம், றூமி மற்றும் இவை அல்லாத மொழிகளையும் கற்றுக் கொடுத்தான்.

*(தப்ஸீர் கபீர்).*

وعليهااحوالها وما يتعلق بهامن المنافع الديني والدنيوي علن اسماء الملاءك واسماء ذريته واسم الحيوانات والجمادات وصنع كل شيء واسماء المدن والقري واسماء الطير والشجر وما يكون واسماء كل شيء يخلقون الي يوم القيم واسماء المطعومات والمشربات وكل نعيم في الجن واسماء كل شيء وفي الخبر علمه سبع ماء الف لغات :تفسير روح البيان

நபி ஆதம் அலைஹிஸ்ஸலாம் அவர்களுக்கு அனைத்து வகையான பொருட்களின் நிலைகளையும் கற்றுக் கொடுத்தான். அவற்றிலுள்ள சமய ரீதியான உலகியல் தொடர்பான பயன்பாடுகளையும், கற்றுக் கொடுத்தான்.

மலக்குகளின் பெயர்களையும், அன்னாரின் சந்ததிகளின் பெயர்களையும், விலங்குகள், கனி வளங்கள் உள்ளிட்ட அனைத்தின் பெயர்களையும் கற்றுக்கொடுத்தான். இன்னும் ஒவ்வொன்றின் தொடர்புகளையும், நகரங்கள், கிராமங்கள், பறவைகள், மரங்கள் உள்ளிட்டவற்றின் பெயர்களையும் மறுமை நாள் வரையுள்ள படைப்புக்களின் ஒவ்வொன்றின் பெயர்களையும் உணவு வகைகள் பானங்களின் வகைகள். சொர்க்கத்தில் உள்ள ஒவ்வொரு அருட்கொடைகளின் பெயர்கள் உள்ளிட்ட அனைத்தையும் கற்றுக் கொடுத்தான்.

ஹளறத் ஆதம் அலைஹிஸ்ஸலாம் அவர்களுக்கு ஏழு இலட்சம் மொழிகளை கற்றுக் கொடுக்கப்பட்டிருந்ததாக ஒரு ஹதீதில் கூறப்பட்டுள்ளது.

*(தஃப்ஸீர் றூஹுல் பயான்).*

மேற்கண்ட அனைத்துத் தஃப்ஸீர்களிலிருந்தும் தெரிய வரும் உண்மை யாதெனில் நபி ஆதம் அலைஹி வஸல்லம் அவர்களுக்கு நடந்தவை, நடக்க இருப்பவை உள்ளிட்ட அனைத்து வகையான அறிவுகளையும் அல்லாஹுத் தஆலா கற்றுக் கொடுத்துள்ளான்.

அனைத்து வகையான மொழிகளையும், பொருட்களையும், பயன்பாடுகளையும், கருவிகளை இயக்குவதற்குரிய முறைகளையும் காட்டிக் கொடுத்துள்ளான்.

அப்படியாயின் நபி ஆதம் அலைஹிஸ்ஸலாம் அவர்களை விட அனைத்து விடயங்களிலும் சிறப்புப் பெற்ற கோமான் முஹம்மது முஸ்தஃபா ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் அறிவு ஞானத்தின் ஆழமும், விசாலமும் எப்படியிருக்குமென்று கற்பனை செய்து பாருங்கள்.!

உண்மையில் நபி ஆதம் அலைஹிஸ்ஸலாம் அவர்களின் அறிவும் கூட நபிகளாரின் அறிவுக் கடலில் ஒரு துளி தான். பெருவெளியில் உள்ள ஒரு தூசி தான் என்பதைப் புரிந்து கொள்ளுங்கள்.

ஷைய்குல் அக்பர் முஹ்யித்தீன் இப்னு அறபி றழியல்லாஹு அன்ஹு கூறுகின்றார்கள்.

اول ناءب كان له صلي الله عليه وسلم وخليفته ادم عليه السلام

நபி ஆதம் அலைஹிஸ்ஸலாம் றஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் முதற் கலீஃபாவும் முதற் பிரதி நிதியுமாகும்.

*(ஃபுதுஹாத்துல் மக்கியா).*

பிரதிநிதி என்பவர் அரசர் இல்லாத இடத்தில் அவரின் வேலையைச் செய்பவராகும். றஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் பிறப்பதற்கு முன் வந்த அனைத்து நபிமார்களும் றஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் கலீஃபாக்களாவார்கள் என்பது கவனிக்கத்தக்கது.

இதே கருத்தை தேவ்பந்தின் நிறுவனர் மௌலவி காசிம் நானோத்தவியும் “தஹ்தீறுன் நாஸ்” என்ற நூலில் குறிப்பிட்டுள்ளார். கலீஃபாக்களின் நிலை இதுவானால் அரசரின் நிலை எப்படியிருக்கும்.

انه عليه السلام عرضت عليه الخلايق من لدن ادم الي قيام الساع فعرفهم كلهم كما علم الاسماء كلها : نسيم الرياض

றஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கு ஆதம் அலைஹிஸ்ஸலாம் அவர்களின் காலம் முதல் கியாமத் நாள் வரையிலான அனைத்துப் படைப்புக்களையும் எடுத்துக் காட்டப்பட்டுள்ளன. இக்காலப்பகுதியில் உள்ள அனைவரையும் றஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கு ஆதம் நபி அலைஹிஸ் ஸலாம் அவர்களுக்கு எல்லாத் திருநாமங்களும் கற்றுக் கொடுக்கப்பட்டது போன்று அறிந்து கொண்டார்கள்.

*(நஸீ முர் றியாழ்)*

وَيَكُونَ الرَّسُولُ عَلَيْكُمْ شَهِيدًا

*"இன்னும் றஸூல் உங்கள் மீது சாட்சி பகர்பவராக இருக்கின்றார்."*

*அல் குர்ஆன்: (2: 143).*

றஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் தங்களின் நுபுவ்வத்தின் வெளிச்சத்தில். மார்க்க ஈடுபாடுள்ள ஒவ்வொருவரும் மார்க்கத்தில் இருக்கும் நிலையையும், அவர் சென்றடையும் தரத்தையும், ஈமானின் எதார்த்தத்தையும், இவரின் ஆன்மீகப் பயணத்தின் முன்னேற்றத்தின் தடைக்கான திரையையும் நன்கு அறிவார்கள்,

மேலும், நீங்கள் செய்த குற்றங் குறைகளையும், உங்களின் ஈமானின் படித்தரங்களையும், நீங்கள் செய்த நன்மை, தீமைகளையும், உங்களின் செயல்களிலுள்ள இக்லாசையும், நயவஞ்சகத்தையும் இவை அல்லாத வற்றையும் நன்கு அறிவார்கள், அன்னாரின் சாட்சியம் உலகில் அவர்களின் உம்மத்தில் ஷரீத்தின் சட்டப்படி அங்கீகரிக்கப்பட்டுள்ளது. இதன்படி செயலாற்றுவது வாஜிபாகும்.

*(தஃப்ஸீர் அஸீஸி)*

هذامبني علي تضمين ا لشهيد معني الترقيب والمطلع والوجه في اعتبا ر تضمين الشهيد ا لاشا رة إلى يكون عن خبر وراقب بحال الشاهد ومعني شهاد- الرسول عليهم اطلاعه رتب كل متدين بدينه فهو يعرف ذنوبهم وحقيق ايمانهم واعمالهم وحسناهم وسيئاتهم واخلاصهم ونفاقهم وغيرذالك بنور الحق وامته يعرفون ذلك من سائر الامم بنوره عليه السلام( تفسير روح البيان)

"ஷஹீத்" என்ற வார்த்தையில் கண்காணிப்பாளர், பாதுகாவலர் என்ற பொருள் உள்ளடங்கியுள்ளது. இக்கருத்தையும் உள்ளடக்கிக் கவனிக்கும் விதத்தில் இப்படியும் ஒரு மறைமுகமான சிலேடையான கருத்துண்டு.

அதாவது, ஒருவரைப் பற்றி அவர் நீதமானவர் என்றோ, அல்லது அவர் மாசற்றவர் என்றோ கட்டியம் கூறுவதாயின், சாட்சி சொல்லப்படுபவரின் நிலைகளை நன்கு அறிந்தால் மட்டும் தான் சாத்தியமாகும்.

றஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் முஃமின்களைப் பற்றிச் சாட்சி பகர்கின்றார்கள் என்பதன் பொருள்,"ஒவ்வொரு முஃமினுடைய ஈமானின் தகுதிகளையும், அவர்களின் ஈமானின்

எதார்த்தங்களையும், அவர்களின் கிரியைகளையும், அவற்றின் நல்லது, கெட்டதுகளையும், அவர்களின் செயல்களில் உள்ள இக்லாசையும், நயவஞ்சகத்தனத்தையும், இன்னும் இதுவல்லாதவைவையயும் சத்தியத்தின் வெளிச்சத்தைக் கொண்டு பார்க்கின்றார்கள்."

றஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் உம்மத்தினர் மறுமையில் ஏனைய உம்மத்தினரின் நிலைகளை றஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் ஒளியினால் பார்ப்பார்கள்.

*(தஃப்ஸீர் றூஹுல் பயான்).*

ثم يوءتي بمحمد عليه السلام فيسأله عن حال امته فيزكيهم ويشهد بصدقهم : تفسير خازن

மறுமையில் றஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் வரவழைக்கப்பட்டு அவர்களின் உம்மத்தினரைப் பற்றி அவர்களிடம் கேட்கப்படும். அப்போது அவர்களைப் பரிசுத்தப்படுத்தி சாட்சி பகர்வார்கள். அவர்களின் உண்மை நிலை பற்றியும் சாட்சி பகர்வார்கள்.

*(தஃப்ஸீர் காஸின்).*

فيئتي بمحمد فيسأله عن حال امته فيزكيهم فيشهد بعدالتهم : تفسير مدارك

மறுமையில் றஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களை அழைத்து வரப்படும். அன்னாரின் உம்மத்துக்களைப் பற்றி அன்னாரிடம் விசாரிக்கப்படும். இவர்கள் குற்ற மற்ற பரிசுத்தமானவர்கள் என்று நபியவர்கள் சாட்சியம் பகர்வார்கள். மேலும், இவர்கள் நீதியாகத் தான் நடந்தார்கள் என்றும் கட்டியம் கூறுவார்கள்.

*(தஃப்ஸீர் மதாரிக்)*

மேற்கண்ட திருவசனத்திலும் அதற்கான விரிவுரைகளிலும் பின்வருமாறு பதியப்பட்டுள்ளது. முன்னைய நபிமார்களின் உம்மத்துக்கள்

மறுமையில், "எங்களிடத்தில் நபிமார்கள் வரவில்லை. ஏகத்துவம் பற்றி எவரும் எங்களுக்குச் சொல்லித் தரவில்லை என்று அல்லாஹ்விடத்தில் முறையிடுவார்கள்.

நபிமார்கள் இவர்களின் கூற்றுக்களை மறுப்பார்கள். "நாங்கள் இவர்களிடம் சென்று உனது மார்க்கச் சட்டங்களை எடுத்துக் கூறினோம். எங்களையும், நாங்கள் எடுத்துக் கூறிய சட்டங்களையும் அவர்கள் நிராகரித்து விட்டார்கள்". என்று நபிமார்கள் கூறுவார்கள்.

நீங்கள் கூறுவதற்கான ஆதாரத்தை முன் வைய்யுங்கள் என்று நபிமார்களைப் பார்த்து அல்லாஹுத்தஆலா கேட்பான். அப்போது, உம்மத்தே முஹம்மதிய்யாவை முன்னைய நபிமார்கள் முன் நிறுத்துவார்கள். முஸ்லிம்கள் நபிமார்களின் கூற்றை உண்மைப்படுத்தி சாட்சி பகர்வார்கள்.

"யா அல்லாஹ்! உனது நபிமார்கள் கூறுவது தான் உண்மை! அவர்கள் உனது மார்க்கத்தையும், அதன் சட்டதிட்டங்களையும் அவர்களின் உம்மத்தினரிடம் சேர்த்து வைத்தார்கள். ஆனால் அவர்கள் ஏற்க மறுத்து விட்டார்கள்.

இப்போது இரு விடயங்கள் நமது ஆய்வுக்குரியதாகும்.

1) முஸ்லிம்கள் சாட்சி சொல்லத் தகுதியானவர்களா ? இல்லையா?

2) முந்தைய நபிமார்களை முஸ்லிம்கள் பார்க்கவில்லை.

அவர்களின் காலத்திலும் இவர்கள் இருக்கவில்லை அப்படியிருக்க எப்படி சாட்சி பகர முடியும் ?

இதற்கான பதில்,

"யா அல்லாஹ்!" உனது நபிமார்கள் அவர்களின் உம்மத்தினரிடம் உனது மார்க்கத்தைச் சேர்த்துவைத்தார்கள். அவர்கள் அதனை நிராகரித்து விட்டார்கள். என்ற செய்தியை உனது திருத்தூதர் முஸ்தஃபா ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் கூற நாங்கள் கேட்டுள்ளோம். என்று முஸ்லிம்கள் சாட்சி பகர்வார்கள்.

இச்சந்தர்ப்பத்தில் றஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் அழைக்கப்படுவார்கள், அப்போது நபியவர்கள் இரு விடயங்கள் பற்றி சாட்சி பகர்வார்கள்.

1) முஸ்லிம்கள் உன்னைப்பயந்து வணங்கிய பயபக்தியாளர்கள். அவர்கள் பாவிகளோ, குழப்பவாதிகளோ அல்லர். அதனால் அவர்களின் சாட்சியத்தை ஏற்கலாம். என்று முஸ்லிம்களை நபியவர்கள் நியாயப்படுத்தி சாட்சி கூறுவார்கள்.

2) நபிமார்கள் உனது மார்க்கத்தை அவர்களின் உம்மதத்தினரிடம் சேர்த்து வைத்தார்கள், அதனை அவர்கள் நிராகரித்து விட்டார்கள். நபிமார்களுக்கு தீங்கு செய்து அவர்களைத் துன்புறுத்தினார்கள்.

இதிலிருந்து இரு விடயங்களைத் தெரிந்து கொள்கின்றோம்,

1) மறுமை நாள் வரையிலான முஸ்லிம்களின் தொழுகை, நோன்பு உள்ளிட்ட அமல்களையும் அவர்களின் மனதிலிலுள்ள நல்லெண்ணம், பக்தி, இறையச்சம் உள்ளிட்ட மனப் பண்புகளையும் றஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் தெளிவாக அறிந்துள்ளார்கள்.

இல்லையாயின்,

முஸ்லிம்களை பரிசுத்தப்படுத்தி சாட்சி பகர்வது எப்படி சாத்தியமாகும்.? தனக்குத் தெரியாத வரைப்பற்றி சாட்சி பகர முடியாது.. என்பது எல்லோரும் அறிந்தது தான்.

ஹளறத் நூஹ் அலைஹிஸ்ஸலாம் அவர்களின் வருங்காலத்து சமுதாயத்தின் நிலையை அறிந்து கூறினார்கள்.

وَلَا يَلِدُوٓاْ إِلَّا فَاجِرًا كَفَّارًا

*"இன்னும் (உன்னை) நிராகரிக்கின்ற பாவியைத் தவிர (வேறு நல்ல வரை) அவர்கள் பெற்றெடுக்க மாட்டார்கள்.*

*அல் குர்ஆன்: (72:27).*

அதனால், அவர்கள் நீரில் மூழ்கடித்து அழித்து விடு! என்று பிரார்த்தித்தார்கள்.

நபி ஹிழ்று அலைஹிஸ்ஸலாம் ஒரு சிறுவனின் எதிர் காலத்தை அறிந்து இவன் உயிர் வாழ்ந்தால் பாதகனாக மாறுவான் என்று கூறி அவனைக் கொன்றார்கள். அப்படியாயின்,

நபிகள் கோமான் முஹம்மது முஸ்தஃபா ஸல்லல்லாஹு அலைஹி வசல்லமவர்களுக்கு அவர்களின் உம்மத்துக்களின் செயல்கள் மட்டும் எப்படி மறையும் ?

2) கடந்த காலத்தில் வாழ்ந்த நபிமார்களைப் பற்றியும் அவர்களின் உம்மத்தினர்களின் செயற்பாடுகளைப் பற்றியும் றஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் ஒளியின் மூலமாக அறிந்து அவர்களைப் பற்றி சாட்சி பகர்ந்தார்கள்.

3) நபிமார்கள் உண்மையாளர்கள் என்பதை றப்புத் தஆலா நன்கு அறிந்தும் கூட அடுத்தவரின் சாட்சியம் பெற்றே தீர்ப்புச் செய்கின் கின்றான். இவ்வாறே றஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் வழக்குகள் முறைப்பாடுகள் உள்ளிட்டவையில் சாட்சியமும், வேறு தடயங்களையும் பெற்றே தீர்ப்புச் செய்ததால் அது பற்றி நபியவர்களுக்குத் தெரியாது என்று பொருளாகாது.

வழக்குகளைத் தீர விசாரித்து ஊர்ஜிதம் செய்த பின்பு தான் தீர்ப்பு வழங்க வேண்டும், என்பது நியாயமன்றின் நியதியாகும். சாட்சியம் பற்றிய விடயம் மேலும் பல திருமறை வசனங்களின் வெளிச்சத்தில் படர்கின்றது.

وَجِئْنَا بِكَ عَلَىٰ هَٰؤُلَاءِ شَهِيدًا

*"உம்மை இவர்களுக்கு சாட்சியாக நாம் கொண்டு வரும் பொழுது (உம்மை நிராகரிப்பவர்களாகிய இவர்களின் நிலை) எவ்வாறாயிருக்கும்"*

*அல் குர்ஆன்: (4: 41).*

لان روحه عليه السلام شاهد على جميع الأرواح والقلوب والنفوس بقوله عليه السلام أول ما خلق نوري :ثفسير نيسا فوري

றஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் முபாறக்கான புனித றூஹ் அனைத்து றூஹுகளையும், கல்புகளையும், நப்ஸுகளையும் பார்க்கின்றது. ஏனெனில், "முதன் முதலில் அல்லாஹ் எனது ஒளியைத்தான் படைத்தான்" என்று றஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறியுள்ளார்கள்.

*(தஃப்ஸீர் நைஸாபூரி)*

واعلم انه يعرض علي ا لنبي صلي الله عليه وسلم اعمال امته غدوة وعشية فيعرفهم بسيماهم اعمالهم فلذالك يشهد عليهم :تفسير روه البيان

றஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கு, அவர்களின் உம்மத்துக்களுடைய அமல்கள் காலையிலும், மாலையிலும் எடுத்துக் காட்டப்படுகின்றன. அவர்களின் அடையாளங்களை வைத்து அவர்களையும், அவர்களின் அமல்களையும் இனம் காண்கின்றார்கள். அதனால் தான் அவர்களைப் பற்றி சாட்சி பகர்கின்றார்கள்.

*(தஃப்ஸீர் றூஹுல் பயான்).*

اي شاهدا على من آمن بالايمان وعلى من كفر بالكفر وعلى من نافق بالنفاق : تفسير مدارك

முஃமின்களை அவர்களின் ஈமான் மூலமும், காஃபிர்களை அவர்களின் குஃப்றின் மூலமும், முனாஃபிக்குகளை அவர்களின் நிஃபாக் மூலமும் நபியவர்கள் அறிந்து சாட்சி பகர்கின்றார்கள்.

*(தஃப்ஸீர் மதாரிக்)*

அல்லாஹுத் தஆலா கூறுகின்றான்.

مَن ذَا الَّذِي يَشْفَعُ عِندَهُ إِلَّا بِإِذْنِهِ

***"அவனுடைய அனுமதியின்றி அவனிடத்தில் பரிந்து பேசுபவர் யார்? (படைப்பினங்களான) அவர்களுக்கு முன்னால் உள்ளவற்றையும் அவன் அறிவான். அவர்களுக்குப் பின்னால் உள்ளவற்றையும் அவன் அறிவான். அவனுடைய ஞானத்திலிருந்து அவன் நாடியதை தவிர."***

*அல் குர்ஆன்: (4:41).*

اي يعلم محمد صلى الله عليه وسلم ما بين ايديهم من اوليات الامر قبل الخلاق وما خلفهم من احوال القيامة :تفسير نيسافوري

படைப்புக்கு முன்னுள்ள ஆரம்ப விவகாரங்களையும் படைப்புக் களுக்குப் பின்னர் மறுமையின் நிலைகளையும் கூட றஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் அறிவார்கள்.

*(தஃப்ஸீர் நைசாபூரி).*

يعلم محمد صلى الله عليه وسلم ما بين ايديهم من الامورالاوليات قبل الخلاق وما خلفهم
من احوال القيامة وفزع الخلق وغضب الرب

இத்திருவசனத்தில்,"அவனுடைய அனுமதியின்றி என்பதிலிருந்து அவன் நாடியதைத் தவிர" என்பது வரையில், றஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் மூன்று பண்புகள் விளக்கப்பட்டுள்ளன. இது தவிர்ந்த பண்புகளில் ஆரம்பமும், முடிவிலிருப்பதும் அல்லாஹ்வின் பண்புகளாகும் .

இத்திருவசனத்தில், "அவனுடைய அனுமதியின்றி அவனிடத்தில் பரிந்து பேசுபவர் யார்.? என்பதில், ஷபாஅத் செய்வதற்க்காக அனுமதிக்கப்பட்டவர், றஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களையே குறிக்கும். அதனால், ஷஃபாஅத்திற்குப் பொருத்தமானவர்கள் தப்பாமலும். தகுதிற்றவர்களுக்கு ஷஃபாஅத் செய்யப்படாமலும் இருக்க வேண்டுமாயின், பரிந்து பேசுபவர் பாவிகளையும், பாவிகளின் நிலைகளையும் அறிந்திருத்தல் அவசியமாகும்.

மருத்துவம் யாருக்குப் பலன் தரும், யாருக்குப் பலன் தராது என்பதை ஒரு மருத்துவர் அறிந்திருத்தல் அவசியமாகும்.

இதனால்தான் “அவருக்கு முன்னாலிருப்பதையும் அறிவார்” என்று கூறப்பட்டுள்ளது. அதாவது, ஷஃபாஅத் செய்வதற்கு நியமிக்கப் பட்டுள்ளவர்களுக்கு எல்லா வகையான அறிவுகளும் கொடுக்கப்பட்டுள்ளன.

அனால், ஷஃபாஅத்துல் குப்றாவுக்கு மறைவான ஞானம் இருக்க வேண்டியது அவசியமாகும்.

இதன்படி, மறுமையில் றஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் முனாஃபிக்குகளை அறியமாட்டார்கள் என்றும், தன்னைப் பற்றியோ, தனக்கு என்ன நடக்கும் என்பதையோ அறியமாட்டார்கள் என்றும் இஸ்மாயீல் திஹ்லவி கூறுவது அபத்தமான வாதம் என்பதைப் புரிந்து கொள்ள வேண்டும்.

"அவன் நாடியதிலிருந்து அவன் நாடியதைத் தவிர" என்ற திருவசனம் மேற்கண்ட நமது வாதத்தை உறுதி செய்கின்றது.

يحتمل ان تكون الهاء كناية عليه السلام يعني هو شاهد على احوالهم يعلم ما بين ايديهم من سيرهم ومعاملاتهم وقصصهم وما خلفهم من امور الاخرة واحوال الجنة والنار وهم لايعلمون شياً من معلوماته علم الاولياء من علم الانبياء بمنزلة قطرة من سبعة ابحر وعلم الانبياء من علم نبينا عليه السلام بهذه المنزلة وعلم نبينا من علم الحق سبحانه بهذا المنزلة فكل رسول ونبي وولي اخذون بقدر القابلية والاستعداد مما لديه وليس لاحد ان يعدوه او يتقدم عليه : تفسير روح البيان

"அவருடைய அறிவிலிருந்து," என்ற திருவசனத்தில் "அவர்" என்பது றஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களையும் குறிக்கும் என்பதற்கான சாத்தியமுண்டு.

இதன்படி,

றஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் மனிதர்களின் நிலைகளைக் காண்கின்றார்கள். அவர்களுக்கு முன்னால் உள்ள நிலைகளையும் அறிகிறார்கள். அவர்களின் குணங்கள், அன்றாட செயற்பாடுகள்., கொடுக்கல் வாங்கல்கள், அவர்களின் சரித்தரங்கள் உள்ளிட்டவையையும், அவர் பின்னாலுள்ள மறுமையின் நிலைகள், சொர்க்கவாதிகள், நரகவாதிகளின் நிலைகள் உள்ளிட்டவையையும் அறிவார்கள்.

அவர்களின் குணங்கள், அன்றாட செயற்பாடுகள், கொடுக்கல், வாங்கல்கள், அவர்களின் சரித்திரங்கள் உள்ளிட்டவையையும், அவர் பின்னாலுள்ள மறுமையின் நிலைகள், சொர்க்கவாதிகள், நரகவாதிகளின் நிலைகள் உள்ளிட்டவையையும் அறிவார்கள்.

றஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் அறிவிலிருந்து அன்னார் நாடிய அளவைத்தான் மற்றவர்கள் பெற்றுக்கொள்வார்கள். நபிமார்களின் அறிவோடு வலிமார்களின் அறிவை ஒப்பிட்டுப்பார்த்தால், ஏழு கடல்களில் ஒரு துளிதான்.

இவ்வாறே, நபிமார்களின் அறிவை றஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் அறிவோடு ஒப்பிட்டாலும் இதே அளவுதான் வரும்.

றஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் அறிவை அல்லாஹ்வின் அறிவோடு ஒப்பிட்டாலும் இதே அளவுதான் வரும். ஒவ்வொரு நபியும், றசூலும் வலியுள்ளாஹ்வும் தங்களின் தகுதிக்குத் தக்கவிதத்தில் றஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் றஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களிடமிருந்து அறிவைப் பெறுகின்றனர். றஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களை முந்திச் செல்ல எவராலும் முடியாது.

*ஆதாரம் : தஃப்ஸீர் றூஹுல் பயான்.*

يعني ان يطلعهم عليه وهم الانبياء والرسل وليكون ما يطلعهم عليه من علم غيبه دليلا على نبوتهم كما قال الله تعالى فلا يظهر على غيبه احدا الا من ارتضى من رسول :تفسير خازن

அல்லாஹுத் தஆலா தனது மறை ஞானத்தை தனது நபிமார்கள், றஸூல்மார்களுக்கு வெளிப்படுத்துவான் அல்லாஹுத் தஆலா தனது மறைவான ஞானத்தை தனது நபிமார்களுக்கு வழங்குவது அவர்களின் நுபுவத்திற்கான தெளிவான சான்றாகும். "அல்லாஹுத் தஆலா பொருந்திக் கொண்ட றஸூல்மார்களைத் தவிர வேறு எவருக்கும் அவனது மறைவான ஞானத்தை வெளிப்படுத்த மாட்டான்.

*ஆதாரம்: தஃப்ஸீர் காஸின்*

لا يحيطون بشيء من علم الغيب الا بما شاء مما اخبر به الرسل : تفسيرمعالم النزيل

றஸூல்மார்கள் அறிவித்ததில் அல்லாஹுத் தஆலா நாடியதைத் தவிர, மறை ஞானத்தில் எதையும் நபிமார்கள் சூழ்ந்தறிய மாட்டார்கள்.

*ஆதாரம்: தஃப்ஸீர் மஆலிமுத் தன்ஸீல்.*

மேற்படி திருவசனத்திற்கு நாம் முன்வைத்த தஃப்ஸீர்களின் எடுத்துக் காட்டுகளின் படி பின்வரும் விளக்கதிற்கு நம்மால் வர முடியும். மேற்படித் திருவசனத்தில் கூறப்படும் அறிவு அல்லாஹ்வுக்குரியதாயின், அதனை எவராலும் அறிய முடியாது. அப்படியானவர்கள் மறைவான அறிவைப் பெறுவார்கள்.

அல்லது இத்திருவசனத்தில் கூறப்படும் அறிவு, றஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்குரியது என்று வைத்துக் கொண்டால், அன்னாரின் அறிவை எவராலும் பெற முடியாது.

ஆனால் யாருக்கு கொடுக்க நாடுகின்றார்களோ அவர்களுக்கு அல்லாஹுத் தஆலா கொடுப்பான்.

இந்த வகையில், நபி ஆதம் அலைஹிஸ்ஸலாம் முதல் மறுமை நாள் வரையிலானவர்கள் எந்தளவு அறிவைப் பெற்றார்களோ அவையனைத்தும் பெருமானார் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் அறிவுக் கடலிலிருந்து ஒரு துளிதான். இதில் நபி ஆதம் அலைஹிஸ்ஸலாம் மற்றும் நபிமார்களின் அறிவும் அடங்கும் என்பது கவனிக்கத்தக்கது.

“எல்லாத் திருநாமங்களையும் கற்றுக் கொடுத்தான்“ என்ற திருவசனத்தின் விளக்கத்தில் நபி ஆதம் அலைஹிஸ்ஸலாம் அவர்களின் அறிவின் விசாலத்தை விளக்கிக் கூறியுள்ளோம். (தேவைப்படுவோர் மீட்டிப் பார்க்கவும்!)

وَمَا كَانَ اللَّهُ لِيُطْلِعَكُمْ عَلَى الْغَيْبِ وَلَٰكِنَّ اللَّهَ يَجْتَبِي مِن رُّسُلِهِ مَن يَشَاءُ

***“அல்லாஹ் (சாதாரணமானவர்களாகிய) உங்களுக்கு மறைவானவற்றை அறிகின்றவனுமல்லன். எனினும் அல்லாஹ் தன் றஸூல்மார்களிலிருந்து தான் நாடியவரைத் தேர்ந்தெடுக்கின்றான்.”***

*அல் குர்ஆன்: (3: 179).*

ما كان الله ليؤتى احدكم علم الغيب فيطلع على ما فى القلوب من كفر وايمان ولكن الله يجتبي لرسالته من يشاء فيوحى الله ويخبره ببعض المغيبات او ينصب له ما يدل عليه :تفسير بيضاوى

மனிதர்களிடமிருக்கக் கூடிய குஃப்று, நிஃபாக், நயவஞ்சகத் தனத்தை அறியக்கூடிய மறைவான ஞானத்தை அல்லாஹுத்தஆலா உங்களுக்கு வழங்குதில்லை. ஆயினும் அல்லாஹுத்தஆலா அவனது திருத்தூதர்களில் அவன் நாடியவர்களைத் தேர்ந்தெடுத்து அவர்களுக்கு வஹி மூலம் சில மறை ஞானத்தைதை அவர்களுக்கு அறிவித்துக் கொடுத்து மறைவானவற்றை நிலை நாட்டக்கூடிய ஆதாரங்களை அவர்களுக்கு வழங்குகின்றான்.

*(ஃதப்ஸீர் பைழாவி).*

لكن الله يصطفى ويختار من رسله من يشاء فيطلعه علي بعض علم الغيب : تفسير خازن

அல்லாஹுத் தஆலா அவனது திருத்தூதர்களில் அவன் தேர்ந்தெடுத்தவர்களுக்குச் சில மறைவான ஞானத்தை அறிவித்துக் கொடுக்கின்றான்.

*(தஃப்ஸீர் காஸின்).*

فاما معرفة ذلك على سبيل الاعلام من الغيب فهو من خواص الانبياء :تفسير كبير

இச்செய்திகளை மறை ஞானத்தின் மூலம் அறிந்து கொள்வது நபிமார்களின் சிறப்பம்சத்தில் உள்ளதாகும்.

*(தஃப்ஸீர் கபீர்).*

المعنى لكن الله يجتبي ان يصطفي من رسله من يشاء فيطلعه علي الغيب:تفسير جمل

அல்லாஹுத் தஆலா அவன் நாடியவர்களைத் தேர்ந்தெடுத்து அவர்களுக்கு மறை ஞானத்தை வழங்கினான்.

*(தஃப்ஸீர் ஷமல்).*

(وما كان الله ليطلعكم على الغيب ) فتعرفون المنافق من غيره قبل التميز (ولكن الله يجتبي) ويختار(من رسله من يشاء) فيطلع على غيبه كما اطلع النبي عليه السلام علي حال المنافق : تفسير جلالين

(அல்லாஹுத் தஆலா தங்களுக்கு மறைவானவற்றை அறிவித்துக் கொடுக்கமாட்டான்). அப்போது முனாஃபிக்குகளை மற்றவர்களிலிருந்து பிரித்துக் காட்ட முன்னாடியே அவர்களை நீங்கள் அறிந்து கொள்வீர்கள். ஆயினும், அல்லாஹ் நாடியவர்களைத் தேர்ந்தெடுத்து அவர்களுக்கு மறைவான ஞானத்தை வழங்குவான். றஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கு முனாஃபிக்குகளை வெளிப்படுத்திக் காட்டியது போன்று.

*( தஃப்ஸீர் ஷலாலைன்).*

فان غيب الحقاق والاحوال لا ينكشف بلا واسطة الرسول :تفسير روح البيان

எதார்த்தமானவைகளினதும், பல நிலைகளினதும் மறைவான விடயங்களும் றஸூல்மார்களின் மூலமாக அன்றி ஒரு போதும் வெளியாக மாட்டாது.

*(தஃப்ஸீர் றூஹுல் பயான்).*

அல்லாஹ்வின் குறிப்பான மறை ஞானமும் கூட நபிமார்களுக்கு வெளி யாகின்றன என்பதை மேற்கண்ட திருவசனமும், அதற்கான தஃப்ஸீர் களிலிருந்தும் தெரிய வருகின்றன. சில முஃபஸ்ஸிரீன்களின் கருத்துப்படி, "சில மறைவானவை என்பதன் கருத்து அல்லாஹ்வின் அறிவை ஒப்பிடும் போதுதான் என்பதைக் கவனத்தில் கொள்ள வேண்டும். நடந்தவை, நடப்பவை நடக்கப் போகின்றவை யாவும் அல்லாஹ்வின் அறிவில் சிலது தான்.

وَعَلَّمَكَ مَا لَمْ تَكُنْ تَعْلَمُ وَكَانَ فَضْلُ اللّٰهِ عَلَيْكَ عَظِيمًا

***"நீர் அறிந்திராதவற்றையும் உமக்குக் கற்றுக் கொடுத்தான். அல்லாஹ்வின் கருணை உம்மீது மகத்தானதாக ஆகிவிட்டது."***

*அல்குர்ஆன்: (4: 113).*

اي من الاحكام والغيب : تفسير جلالين

சட்டங்கள், மறைவானவை ஆகியவற்றில் (நீர் அறிந்திராதவற்றை எல்லாம்) வஹி மூலம் உமக்குக் கற்றுத் தந்தான்.

*(தஃப்ஸீர் ஜலாலைன்).*

انزل الله عليك الكتاب والحكمة واطلعك علي اسرارهما ووافقك علي حقاقهما :تفسير كبير

அல்லாஹுத் தஆலா உங்கள் மீது வேதத்தையும், (சட்டங்களின்) ஞானத்தையும் இறக்கி வைத்தான். இவை இரண்டின் இரகசியங்களையும் உங்களுக்கு வெளிப்படுத்தி, அவை இரண்டின் எதார்த்தங்களின் மீது உங்களை நிலை நிறுத்தினான்.

*(தஃப்ஸீர் கபீர்).*

يعني من احكام الشرع وامور الدبن وقيل علمك من علم الغيب مالم تكن تعلم.
وقيل معناه علمك من خفيات الامور واطلعك علي ضمار القلوب وعلمك من احوال المنافقين وكيدهم: تفسير خازن

ஷரீஅத்தின் சட்டங்களையும், மார்க்க விடயங்களையும் கற்றுக் கொடுத்தான். ஒரு கூற்றின் படி ஞானத்தில், நீங்கள் அறியாதிருந்ததையும் உங்களுக்குக் கற்றுக் கொடுத்தான்.

மற்றுமொரு கூற்றின் படி இதன் பொருள்,

உங்களுக்கு மறைவாக இருந்தவற்றை உங்களுக்குக் கற்றுக் கொடுத்தான்.மனதின் இரகசியங்களையும் உங்களுக்கு வெளிப்படுத்தினான் முனாஃபிக்குகளின் சூழ்ச்சி, மற்றும் சதிகளையும் உங்களுக்குக் கற்றுக் கொடுத்தான்.

*(தஃப்ஸீர் மதாரிக்).*

நடந்தவை, நடக்க இருப்பவை பற்றிய ஞானத்தை அல்லாஹுத்தஆலா நபியவர்களுக்குக் கற்றுக்கொடுத்தான்.

*(தஃப்ஸீர்: ஹுஸைனி பஹ்றுல் ஹகாயிக்).*

قبل نزول ذلك من خفيات الامور : جامع البيان

திருக்குர்ஆன் இறங்குவதற்கு முன் நீங்கள் அறியாதிருந்த அனைத்தையும் உங்களுக்குக் கற்றுத் தந்தான்.

*(தஃப்ஸீர் ஷாமிஉல் பயான்).*

இத்திருவசனத்திலிருந்தும் மேற்கண்ட தஃப்ஸீர்களிலிருந்தும் தெரிய வருவது யாதெனில், கடந்த கால, எதிர்கால விடயங்கள் யாவும் றஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கு அல்லாஹுத் தஆலா கற்றுக் கொடுத்துள்ளான்.

"மா" என்ற எழுத்து பொதுமையைக் குறிக்கும் சொல் இதன் படி மேற்படி திருவசனத்தின் பொருள் இவ்வாறு வரும்; ஷரீஅத்தின் சட்டங்கள், உலகத்தின் அனைத்து வகையான நிகழ்வுகள், மனிதர்களின் ஈமான் பற்றிய நிலைகள் உள்ளிட்டவையில் நபியவர்கள் எதையெதை அறியாதிருந்தார்களோ அவையனைத்தும் கற்றுக் கொடுக்கப்பட்டுள்ளன.

இதில், சிலர் மார்க்கச் சட்டங்கள் தான் நபியவர்களுக்குத் தெரியும் என்று கூறுவது அவர்களின் தனிப்பட்ட கருத்தே தவிர திருக்குர்ஆனின் பொருள் அல்ல! இவ்வாறு நபியவர்களின் ஞானத்தை எல்லைப்படுத்துவது திருக்குர்ஆன், ஹதீஸ், மற்றும் முஸ்லிம் உம்மத்தின் அகீதா உள்ளிட்ட அனைத்திற்கும் எதிரான கருத்தாகும். மேலதிக விளக்கம் பின்னர் வரும் இன்ஷா அல்லாஹ்!

مَا فَرَّطْنَا فِي الْكِتَابِ مِنْ شَيْءٍ

***"(இவற்றில்) எப்பொருளையும் நாம் ஏட்டில் (குறிப்பிடாமல்) விட்டு விடவில்லை."***

*அல் குர்ஆன்: (6: 38).*

மேற் கண்ட திருவசனத்திற்கு தஃப்ஸீர்களில் பின் வருமாறு விளக்கங்கள் வரையப்பட்டுள்ளன.

ان القرآن مشتمل على جميع الاحوال – تفسير خازن

திருக்குர்ஆன் அனைத்து வகையான நிலைகளையும் பொதிந்ததாக இருக்கின்றது.

*(ஆதாரம்: தஃப்ஸீர் காஸின்).*

يعنى اللوح المحفوظ فانه مشتمل على ما يجرى فى العالم من جليل ودقيق لم يهمل فيه امر حيوان ولا جماد : تفسير انوار التنزيل

ஏட்டில் என்பதன் பொருள் லவ்ஹுல் மஹ்ஃபூள் ஆகும். ஏனெனில், உலகில் நடப்பவையில் வெளிப்படையானதும், நுட்பமானதுமான அனைத்தும் லவ்ஹுல் மஹ்ஃபுளில் இருக்கின்றன. உயிருள்ள, உயிரற்றவையில் எதுவும் அதில் விடுபடவில்லை.

*(ஆதாரம். தஃப்ஸீர் அன்வாறுத் தன்ஸீல்).*

اي ما فرطنا فى الكتب ذكر احد من الخلق لكن لا يبصر ذكره فى الكتب الا المؤيدون بانوار المعرفة :تفسير عراش البيان

இப்பதிவேட்டில் படைப்புகளில் எதுவும் குறிப்பிடாமல் விடுபட வில்லை. மஃரிஃபத்தின் ஒளிகளை கொண்டு உறுதி பெற்றவர்கள் தவிர வேறு எவரும் பார்க்க மாட்டார்கள்.

*(ஆதாரம்: தஃப்ஸீர் அறாயிசுல் பயான்).*

ولو فتح الله عن قلوبكم اقفال السداد لاطلعتم على ما فى القرآن من العلوم واستغنيتم عن النظر فى سواه فان فيه جميع ما رقم فى صفحات اللوجود قال الله تعالى ما فرطنا فى الكتب من ش شئ :طبقات الكبرى, للامام الشعرانى رحمه الله

உங்களுடைய மனதில் போடப்பட்டிருக்கும் பூட்டை அல்லாஹுத்தஆலா திறந்தால் திருக்குர்ஆனில் பொதிந்து கிடக்கும் அறிவு ஞானங்களை உங்களால் காண முடியும். இதன் பின் திருக்குர்ஆனைத் தவிர வேறு எதிலும் உங்களுக்கு தேவை இருக்காது. காரணம் திருக்குர்ஆனில் எல்லாமே இருக்கின்றன.

திருக்குர்ஆனில் ஒரு விஷயத்தையும் குறிப்பிடாமல் நாம் விடவில்லை என்று அல்லாஹ் கூறியுள்ளான்.

*(ஆதாரம்: தபகாத்துல் குப்றா,*
*இமாம் ஜஃறானி றஹ்மதுல்லாஹி அலைஹி).*

இத்திருவசனத்திலும், இதற்குரிய விரிவுரைகளிலிருந்தும் தெரிய வருவது யாதெனில், திருக்குர்ஆனில் இம்மை, மறுமை உள்ளிட்ட அனைத்தும் பதிவாகி இருக்கின்றன. இத்திருவசனத்தில் குறிப்பிடப் பட்டிருக்கும் "ஏடு" என்பது லவ்ஹுல் மஹ்ஃபூள் அல்லது திருக்குர்ஆன் ஆகும்.

திருக்குர்ஆனிலும் லவ்ஹுல் மஹ்ஃபுள் ஏட்டிலும் இருப்பவையாவும் ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் அறிவின் நின்றும் உள்ளவை தான்!

இதன் விபரம் பின்னர் வரும். இன்ஷா அல்லாஹ்!

இந்த வகையில் இம்மை, மறுமையில் உள்ள அனைத்து நிகழ்வுகளும் ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் அறிவில் உள்ளது தான். காரணம்,

அனைத்து வகையான இம்மை, மறுமையின் அறிவுகள் அனைத்தும் திருக்குர்ஆனிலும் லவ்ஹுல் மஹ்ஃபூள் ஏட்டிலும் பதிவாகி இருக்கின்றன. இவை இரண்டின் அறிவுகளும் ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் அறிவில் இருக்கின்றன.

وَلَا رَطْبٍ وَلَا يَابِسٍ إِلَّا فِي كِتَابٍ مُّبِينٍ

***"எந்தப் பசுமையானதும், எந்தக் காய்ந்ததும் (அவனுடைய) தெளிவான பதிவேட்டில் இல்லாமலில்லை."***

*அல் குர்ஆன்: (6:59).*

இத்திருவசனத்திற்குரிய விளக்கத்தைப் பின் வரும் தஃப்ஸீர்கள் விளக்கிக் கூறுவதை அவதானியுங்கள்.

هو اللوح المحفوظ ذ فقد ضبط الله فيه جميع المقدورات الكونية لفوايد ترجع الى العباد يعرغها العلما بالله :تفسير روح البيان

பதிவேடு என்பது லவ்ஹுல் மஹ்ஃபூளைக் குறிக்கும். அதில் உலகத்தில் விதிக்கப்பட்ட யாவற்றையும் அல்லாஹுத் தஆலா

பதிந்துள்ளான். அதில் உள்ள பயன்கள் அடியார்களை வந்தடைகின்றன. இதனை அல்லாஹ்வை அறிந்த உலமாஉர் றப்பானிகள் நன்கு அறிவார்கள்.

*ஆதாரம்: தஃப்ஸீர் ரூஹுல் பயான்.*

وفايدة هذاالكتاب امور احدها انه تعالى كتب هذه الاحوال فى اللوح المحفوظ لتقف الملیكة على نفاذ علم الله فى المعلومات فيكون ذلك عبرة تامة كاملة للمليكة الموكلين بااللوح المحفوظ لانهم يقابلون به ما يحدث فى صحيفة هذا العالم فيحدثونه موافقا له
تفسير كبير:

லவ்ஹுல் மஹ்ஃபூள் ஏட்டில் பதிவதில் பல நோக்கங்கள் உள்ளன. அதில் ஒன்று; மலக்குகள் அதனை அறிய வேண்டும். லவ்ஹுல் மஹ்ஃபூள் ஏட்டிற்கு சாட்டடப்பட்ட மலக்குகள் உலகில் நடப்பவை யாவும் இதில் உள்ளபடியே நடக்கின்றன என்பதை அவர்கள் ஒத்து உணர்ந்து அறிந்து பூரணமான பாடத்தை கற்றுக் கொள்வார்கள்.

*(ஆதாரம் தஃப்ஸீர் கபீர்).*

والثانى ان المراد بالكتاب المبين هو اللوح المحفوظ لان الله كتب فيه علم ماا يكون وما قد كان قبل ان يخلق السموات والارض وفايدة احصاء الاشياء كلها فى هذا الكتابة لتقف الملايكة على انفاذ علمه

இரண்டாவது காரணம், பகிரங்கமான பதிவு ஏடு என்பதன் பொருள் லவ்ஹுல் மஹ்ஃபூள் ஆகும். அதில் அல்லாஹுத் தஆலா நடந்த வற்றையும், நடக்க இருப்பவற்றையும் பதிவு செய்துள்ளான். வானங்கள் பூமியை படைப்பதற்கு முன்னுள்ள யாவும் அதில் உள்ளன. இது, இதனை நடைமுறைப்படுத்தும் மலக்குகள் இவை அனைத்தையும் அறிந்து நடைமுறைப்படுத்துவதற்காகும்.

*(ஆதாரம் : தஃப்ஸீர் காஸின்)*

وهو علم الله او اللوح : تفسير مدارك

பதிவேடு என்பது அல்லாஹ்வின் ஞானத்தை அல்லது லவ்ஹுல் மஹ்ஃபூளைக் குறிக்கும்.

*(ஆதாரம்: தஃப்ஸீர் மதாரிக்).*

كل ذلك فى اللوح المحفوظ مبين مقدارها ووقتها : تفسيرابن عباس

அனைத்துப் பொருட்களும் லவ்ஹுல் மஹ்ஃபூளில் உண்டு. அதன் அளவு (விதி)களும், அதன் நேரங்களும் அதில் பதிவாகியுள்ளன.

*(ஆதாரம்: தஃப்ஸீர் இப்னு அப்பாஸ்).*

وَنَزَّلْنَا عَلَيْكَ الْكِتَابَ تِبْيَانًا لِكُلِّ شَيْءٍ وَهُدًى وَرَحْمَةً وَبُشْرَى لِلْمُسْلِمِينَ

*"இன்னும் ஒவ்வொரு பொருளுக்கும் விளக்கமாகவும் நேர் வழியாகவும் ரஹ்மத்தாகவும் முஸ்லிம்களுக்கு செய்தியாகவும் இந்த வேதத்தை உன் மீது நாம் இறக்கி வைத்தோம்.*"

*அல் குர்ஆன்: (16:89).*

பின்வரும் தஃப்ஸீர்கள் இத்திருவசனத்திற்கு கீழ்க்கண்டவாறு விளக்கம் கூறுகின்றன. இத்திருவசனத்தில் உலகம், மார்க்கம் தொடர்பான அனைத்து வஸ்துக்களையும் சுருக்கமாகவும், தெளிவாகவும் விளக்கியுள்ளோம்.

*(ஆதாரம்: தஃப்ஸீர் ஹுஸைனி).*

يتعلق بامور الدين ومن ذلك احوال الامم وانبيايهم : تفسير روح البيان

திருக்குர்ஆனின் விளக்கங்கள் மார்க்க விடயங்கள் தொடர்பானதாகையால் நபிமார்கள் மற்றும் அவர்களின் சமுதாயத்தினரின் நிலைகளும் அதில் பொதிந்துள்ள.

*(ஆதாரம்: தஃப்ஸீர் றூஹுல் பயான்).*

ஒரு தினம் ஹழரத் முஜாஹித் ரலியல்லாஹு தஆலா அன்ஹு அவர்களிடம் ஒருவர் 'உலகத்தில் உள்ள அனைத்தும் திருக்குர்ஆனில் கூறப்பட்டுள்ளன. அப்படியாயின், பொருட்கள் பற்றி திருக்குர்ஆனில் எங்கே கூறப்பட்டுள்ளது? என்று கேள்வி எழுப்பினார்.

உடனே ஹழரத் முஜாஹித் ரலியல்லாஹு தஆலா அன்ஹு அவர்கள் "யாரும் வசிக்காத (ஆனால்) அவற்றில் சாமான் இருக்கின்ற வீடுகளில் நுழைவது உங்கள் மீது குற்றமில்லை" என்ற திருவசனத்தை ஓதிக் காட்டினார்கள்.

இந்த திருவசனத்தில் இருந்தும் அதற்கான தஃப்ஸீர்களிலிருந்தும் தெரியவருவது யாதெனில், திருக்குர்ஆனில் சிறியது, பெரியது அனைத்துமே கூறப்பட்டுள்ளன.

இவ்வாறு அல்லாஹுத் தஆலா நபிகள் கோமான் முஹம்மது முஸ்தஃபா ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கு திருக்குர்ஆனைக் கற்றுக் கொடுத்துள்ளான். அதனால், அனைத்து பொருட்களின் அறிவு ஞானம் நபிகள் நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கு இருக்கிறது என்பது தெளிவாகிவிட்டது.

وَتَفْصِيلَ الْكِتَابِ لَا رَيْبَ فِيهِ

***"அகிலம் அனைத்தின் இரட்சகனின்று முள்ள இதில் எவ்வித சந்தேகமும் இல்லை."***

*அல் குர்ஆன்: (10:37).*

இவ்வாறு அல்லாஹுத் தஆலா நபிகள் கோமான் முஹம்மது முஸ்தஃபா ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கு திருக் குர்ஆனைக் கற்றுக் கொடுத்துள்ளான். அதனால், அனைத்து பொருட்களின் அறிவு ஞானம் நபிகள் நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கு இருக்கிறது என்பது தெளிவாகிவிட்டது.

وَتَفْصِيلَ الْكِتَابِ لَا رَيْبَ فِيهِ

***"அகிலம் அனைத்தின் இரட்சகனின்று முள்ள இதில் எவ்வித சந்தேகமும் இல்லை."***

*அல் குர்ஆன்: (10:37).*

تفصيل ما حقق واثبت من الحقايق والشرايع :تفسير جلالين

இதில் தெளிவான, விரிவான வேதமும், சட்டங்களும், இது தவிர்த்து அவன் எழுதி வைத்த அனைத்து விஷயங்களும் விளக்கப்பட்டுள்ளன.

*(ஆதாரம்: தஃப்ஸீர் ஷலாலைன்)*

وفي التأويلات النجمية اي تفصيل الجملة التي هي المقدر المكتوب فى الكتب الذي لا يتطرق اليه المحو والاثبات لانه ازلي وابدي :تفسير روح البيان

ஷரிஅத் மற்றும் பொருட்கள் தொடர்பானவற்றில் திட்டவட்டமாக நிருபிக்கப்பட்ட எதார்த்தம் திருக்குர்ஆன் ஆகும் என்று தஃவீலாத்துன் நஜ்மியாவில் குறிப்பிடப்பட்டுள்ளது.

*(ஆதாரம்: தஃப்ஸீர் ரூஹுல் பயான்).*

இத்திருவசனமும், மற்றும் இதற்கான தப்ஸீர் விளக்கங்களின் படி, திருக்குர்ஆனில் ஷரீஅத் சட்டங்கள் உள்ளிட்ட அனைத்து வகையான ஞானங்களும் இருக்கின்றன. இதன்படி, திருக்குர் ஆன் லவ்ஹுல் மஹ்ஃபூள் ஏட்டில் விளக்கமாக அமைந்திருக்கிறது என்பதை புரிந்து கொள்கிறோம். லவ்ஹுல் மஹ்ஃபூளில் உலர்ந்தது, பசுமையானது உள்ளிட்ட அனைத்துமே இருக்கின்றன என்று கூறும் அல்குர்ஆனே ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கு கற்றுக் கொடுத்ததாகவும் கூறுகிறது.

இதன்படி, லவ்ஹுல் மஹ்ஃபூள் இருப்பதும், அதன் விளக்கமான திருக்குர்ஆனின் அறிவும் ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கு கொடுக்கப்பட்டிருப்பதால் நபிகள் நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அறிவில் அனைத்தும் பொதிந்து விட்டன என்பதை இதன் மூலம் அறிந்து கொள்கிறோம்.

مَا كَانَ حَدِيثًا يُفْتَرَى وَلَكِنْ تَصْدِيقَ الَّذِي بَيْنَ يَدَيْهِ وَتَفْصِيلَ كُلِّ شَيْءٍ

*"இ(வ்வேதத்தில் உள்ள)து இட்டுக்கட்டிய செய்தி அல்ல (மாறாக இது) வேதத்தை உண்மைப் படுத்துகிறது. ஒவ்வொரு பொருளையும் விவரிக்கிறதாகவும் ரஹ்மத்தாகவும் இருக்கிறது."*

*அல் குர்ஆன்: (12:11).*

முஹம்மதே! (ஸல்லல்லாஹு அலைஹி வசல்லம்) உங்கள் மீது இறக்கப் பட்ட இவ்வேதமானது உங்களுக்குத் தேவையான ஹலால், ஹராம் தண்டனைச் சட்டங்கள், சரிதைகள், உபதேசங்கள், உதாரணங்கள் மற்றும் அடியார்களுக்கு தேவையான அவர்களின் மார்க்க விடயங்கள் உள்ளிட்ட எல்லாவற்றையும் உள்ளடக்கிய தெளிவான வேதமாக இருக்கிறது.

*(ஆதாரம் தஃப்ஸீர் காஸின்).*

மார்க்கத்திற்கும் உலகில் தேவைகளுக்கும் அவசியமானதும், மக்களின் அன்றாடத் தேவைகளுக்குரியதும் இதிலுள்ளன.

*(ஆதாரம் தஃப்ஸீர் ஹுசைனி)*

ما من شي فى العالم الا هو فى كتابة الله كتاب الاعجاز لابن سرافة

உலகில் உள்ள எப்பொருளும் திருக்குர்ஆனில் குறிப்பிடப்படாமல் இல்லை.

*ஆதாரம்: கிதாபுல் இஃஷாஸ், (இப்னு குதாமா).*

الرَّحْمَنُ ,عَلَّمَ الْقُرْآنَ , خَلَقَ الْاِنْسَانَ , عَلَّمَهُ الْبَيَانَ

*றஹ்மான் ஆகிய அல்லாஹ் தனது நேசர் ஆகிய முஹம்மத் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கு இந்த குர்ஆனை கற்றுக் கொடுத்தான். மனிதர்களில் பூரண மாணவரான முஹம்மத் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களை படைத்தான். அவருக்கு நடந்தவையும், நடப்பவையும், நடக்கப் இருப்பதையும் கற்றுக் கொடுத்தான்.*

*அல் குர்ஆன்: (55:1 -4).*

خلق الانسان اي محمد صلى الله عليه وسلم علمه البيان يعني بيان ما كان وما بكون :تفسير معالم التنزيل

அல்லாஹுத ஆலா மனிதராகிய முஹம்மத் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களை படைத்தான். அவருக்கு கடந்த கால, நிகழ்கால, எதிர்கால உலகங்கள் யாவற்றையும் கற்றுக் கொடுத்தான்.

قيل اراد بالانسان محمد صلى الله عليه وسلم علمه البيان يعني بيان ما كان وما يكون لانه عليه السلام نبيئ عن خبر الاولين والاخرين وعن يوم الدين :تفسير خازن

மனிதர் என்பது ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களைக் குறிக்கும். அவர்களுக்கு கடந்தகால, எதிர்கால விடயங்கள் யாவற்றையும் கற்றுக் கொடுத்தான். ஏனெனில், ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கு முன் உள்ளவர்கள், பின் உள்ளவர்கள், மறுமை நாளின் செய்திகள் யாவும் அறிவிக்கப்பட்டுள்ளன.

*(ஆதாரம்: தஃப்ஸீர் காசின்)*

وعلم نبينا صلى الله عليه وسلم القرآن واسرار الالوهية كما قال وعلمك ما لم تعلم : تفسير روح البيان

எங்களின் கண்மணியான நபிகள் நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கு திருக்குர்ஆனையும், தெய்வீகத்தின் இரகசியங்களையும் கற்றுக் கொடுக்கப்பட்டுள்ளன. "உங்களுக்குத் தெரியாததை உங்களுக்குக் கற்றுத் தந்தான்" என்று அல்லாஹுத் தஆலா திருக்குர்ஆனில் குறிப்பிட்டுள்ளான்.

*(ஆதாரம்: தஃப்ஸீர் ரூஹுல் பயான்)*

الانسان اي الجنس او آدم او محمد صلى الله عليه وسلم: تفسي مدارك

மனிதன் என்பதன் பொருள் மனித இனம் அல்லது, நபி ஆதம் அலைஹிஸ்ஸலாம் அல்லது, முஹம்மத் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களைக் குறிக்கும்.

*(ஆதாரம்: தப்ஸீர் மதாரிக்)*

இத்திருவசனத்தின் பொருள், முஹம்மத் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களைப் படைத்து அவர்களுக்கு நடந்த, நடக்கும், நடக்க போகும் அறிவு ஞானங்களைக் கற்றுக்கொடுத்தான்.

*(ஆதாரம்: தப்ஸீர் ஹுஸைனி)*

இத்திருவசனமும் அதற்குரிய தப்ஸீர்களிலிருந்தும் தெரியவருவது யாதெனில், அனைத்து வகையான அறிவு ஞானங்களும் திருக்குர்ஆனில் இருக்கின்றன. அதில் இருக்கும் எல்லா வகையான அறிவு ஞானங்களும் ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கு கற்றுக் கொடுக்கப்பட்டுள்ளன.

இவை பற்றிய சகல ஞானங்களும் ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கு இருக்கின்றன என்பதை நிரூபித்து கூறுகின்றன.

مَا أَنتَ بِنِعْمَةِ رَبِّكَ بِمَجْنُونٍ

***உமது இரட்சகனின் பாக்கியத் தால் நீர் பைத்தியக்காரர் அல்லர்.***

*அல் குர்ஆன்: (68: 2).*

اي بمستور عما كان فى الازل وما سيكون الى الابد لان الجن هو الستر بل لنت عالم بما
كان وخبير بما سيكون :تفسير روح البيان

ஆதியில் உள்ளவையும், நித்திய காலம் வரை நடக்க இருப்பவையும் அவர்களுக்கு மறைந்தது அல்ல! "ஜுன்னத்" என்ற சொல்லுக்கு மறைந்தது என்று பொருள். ஆனால் நடக்கப்போகும் யாவையையும் நீங்கள்

அறிவீர்கள். அப்படி இருக்க உங்களுக்கு எப்படி எப்பொருளும் மறையப் போகின்றன?

*(ஆதாரம்: தஃப்ஸீர் ரூஹுல் பயான்).*

(மஜ்னூன் என்றால் மறைக்கப்பட்டவர். அதாவது சித்தம் மறைக்கப்பட்டவர் என்று பொருள். குறைஷிக் குஃப்பார்கள் பெருமானார் ஸல்லல்லாஹு அலைஹி வசல்லம் அவர்களை (மஜ்னூன்) பைத்தியக்காறர் என்று கூறினர். இவ்வாறு கூறுவது எப்படி பெருமானாருக்குப் பொருந்தும்? நபிகள் கோமான் அவர்களுக்கு வானம் பூமியில் உள்ளவையும், கடந்த கால, நிகழ் கால எதிர் கால விடயங்கள் யாவும் மறையாமலிருக்க அனைத்து ஞானங்களும் அன்னாருக்கு வெளிச்சமாயிருக்க அன்னாரை மஜ்னூன் சித்தமில்லாதவர் என்று எப்படிக் கூற முடியும்? அறிவின் நகரமே அவர்கள்தானே!)

இத்திருவசனத்தில் இருந்தும் இதற்கான தஃப்ஸீர்களிலிருந்தும் மறைவான சகலதுமே பெருமானார் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கு தெரியும் என்பது புலனாகிறது.

وَلَئِن سَأَلْتَهُمْ لَيَقُولُنَّ إِنَّمَا كُنَّا نَخُوضُ وَنَلْعَبُ

***"இதைப் பற்றி அவரிடத்தில் கேட்டால் நாங்கள் உன் பேச்சில் மூழ்கியும், விளையாடிக் கொண்டும் இருந்தோம் என்று அவர்கள் திண்ணமாக கூறுவார்கள்."***

*அல் குர்ஆன்: (9: 65).*

இந்த வசனம் இறங்கிய சூழலைப் பற்றி இப்னு அப்பாஸ் ரலியல்லாஹு தஆலா அன்ஹு பின் வருமாறு குறிப்பிடுகின்றார்கள்.

وعن ابن عباس انه قال فى قوله تعالى ولين سألتهم قال رجل من المنافقين يحدثنا محمد ان ناقة فلان بواد وما يدريه بالغيب ، تفسير در المنثور

முஹம்மத் ஸல்லல்லாஹு அலைஹி வசல்லம் காணாமல் போன

ஒட்டகம் இன்னின்ன காட்டில் நிற்கிறது என்று கூறுகிறார்.

இந்த மறைவான செய்தி அவருக்கு எப்படி தெரியும்? என்று முனாஃபிக்குகள் கூறிய போது மேற்கண்ட வசனம் இறங்கியது.

*(ஆதாரம்: தஃப்ஸீர் துர்ருல்மன்தூர், தஃப்ஸீர் தபரி)*

இந்த திருவசனத்திலிருந்தும் இதற்கான தஃப்ஸீர்களிலிருந்தும் தெரியவருவது யாதெனில், ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் மறைவான ஞானத்தை மறுப்பது முனாஃபிகுகள் உடைய வேலையாகும். இவ்வாறு கூறுவது குஃப்ரை ஏற்படுத்தும் என்பதை திட்டவட்டமாக திருக்குர்ஆன் கூறுகிறது.

فَلا يُظْهِرُ عَلَى غَيْبِهِ أَحَدًا , إِلا مَنِ ارْتَضَى مِنْ رَسُولٍ

***"அல்லாஹுதஆலா மறைவானவற்றை அறிந்தவன். அவன் பொருந்திக் கொண்ட தூதரைத் தவிர வேறு எவருக்கும் அவனது மறைவானவற்றை வெளிப்படுத்த மாட்டான்."***

*அல் குர்ஆன்: (72: 26,27).*

اي وقت وقوع القيمة من الغيب الذي لا يظهره الله لاحد فان قيل فاذا حملتم ذلك على القيمة فكيف قال الا من ارتضى من رسول مع انه لا يظهر هذا الغيب لاحد قلنا قد يظره عندد قرب القيمة – تفيير كبير

அல்லாஹுத் தஆலா எவருக்கும் வெளிப்படுத்தாத மறைவான விஷயம் என்பது மறுமை நாள் பற்றியது என்று கருதப்பட்டால் அதற்கு அடுத்த தொடரில் அவன் பொருந்திக் கொண்ட ரஸூல்மார்களை தவிர என்று எப்படி கூற முடியும்? என்று ஒரு கேள்வி கேட்டால்,

நாம் கூறும் பதில், கியாமத் நாள் நெருங்கும் போது அல்லாஹுத் தஆலா அதனை வெளிப்படுத்துவான் என்று கூறுவோம். அனைத்து படைப்புகளுக்கும் மறைவாக இருப்பதை பொதுவாக மறைவானது என்றே கூறப்படும்.

உதாரணமாக.,

கியாமத் நாள் நெருங்கும் நேரம், ஒவ்வொரு ஷரீஅத்தின் அடிப்படை தோற்றம், ஷரீஅத் சட்டங்கள், அல்லாஹ்வின் தாத், ஸிஃபாத் (பண்புக) ளின் விரிவான விளக்கங்கள் உள்ளிட்ட யாவும் விசேடமான மறைவான ஞானங்களாக கருதப்படுகின்றன. அதனால் இப்படியான மறைவான ஞானங்களை எவருக்கும் அல்லாஹ் வெளிப்படுத்த மாட்டான். அல்லாஹ் அல்லாதவர்களில் அவன் பொருந்திக் கொண்டவர்களான மலக்குகள், மனிதர்கள், மற்றும் நபிகள் நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் உள்ளிட்டவர்களுக்கு சில மறைவானவற்றை வெளிப்படுத்துவான்.

*(ஆதாரம்: தஃப்ஸீர் அஸீஸி).*

الا من يصطفيه لرسالته ونبوته فيظهر على من يشاء من الغيب حتى يستدل على نبوته بما يخبر به من المغيبات فيكون ذلك معجزة له : تفسير خازن

அல்லாஹுத் தஆலா அவனது றிஸாலத்திற்கும், அவனது நுபுவத்திற்கும் அவன் தேர்ந்தவர்களுக்கு அவனது மறைவானவற்றை அவன் நாடியதை வெளிப்படுத்துவான். அவர்கள் வெளிப்படுத்துவது அவர்களின் நுபுவ்வத்திற்கு ஆதாரமாக அமையும். அப்போது அது அவர்களின் அற்புதமா (முஃஜிஸாவா)க அமையும்.

*(ஆதாரம்: தஃப்ஸீர் காஸின்).*

قال ابن الشيخ انه تعالى لا يصطلع على الغيب الذي يختص به تعالى الا للمرتضى الذي يكون رسولا وما لا يختص به ليطلع عليه غير الرسول: تفسير روح البيان

இப்னு ஷைக் கூறுகிறார். அல்லாஹ்வுக்குச் சொந்தமான மறைவான அறிவை அவனுக்கு விருப்பமான தூதர்களைத் தவிர வேறு எவருக்கும் வெளிப்படுத்த மாட்டான். அவனுக்கு மட்டும் சொந்தமில்லாத பொதுவான மறைவான ஞானத்தை ரஸூல்மார்கள் அல்லாதவர்களுக்கும் வெளிப்படுத்துவான்.

*(ஆதாரம்: தஃப்ஸீர் ரூஹுல் பயான்).*

இந்த வசனத்திலிருந்தும், இதற்கான விரிவுரைகளிலிருந்தும் தெரியவருவது யாதெனில், கியாமத் நாள் பற்றிய ஞானமும், அல்லாஹ்வுக்குச் சொந்தமான சில ஞானங்களும் ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கு தெரியும். அப்படியாயின், நபியவர்களின் அறிவுக் கருவூலத்தில் எதுதான் இல்லாமல் இருக்கப் போகிறது?

فَأَوْحَى إِلَى عَبْدِهِ مَا أَوْحَى

*"பிறகு றப்பாகிய அவன் தான் அறிவிக்க வேண்டியவற்றை தன் அடியாருக்கு அறிவித்தான்."*

*அல் குர்ஆன்: (53: 10).*

மிஃறராஜுடைய இரவன்று நபிகள் நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கு அனைத்து ஞானங்களையும் மற்றும் மஃரிபத்துகள், செய்திகள், சிலேடையான, மறைமுக இரகசிய ஞானங்கள், (ஹகாயிக்) எதார்த்த நிகழ்வுகள், வரலாறுகள, அற்புதங்கள், கமாலியத்துக்கள் உள்ளிட்ட அனைத்தையும் கற்றுக் கொடுத்தான்.

அறிவிக்க வேண்டியவற்றை என்ற வார்த்தையில் இவையாவும் அடங்கும். அதிகம் மகத்துவம் காரணமாகத்தான் அவற்றைப் பொதுமையாகக் கூறியுள்ளான். விசேடமான ஞானத்தை அல்லாஹ்வையும், அவனது திருத்தூதரையும் தவிர்த்து வேறு எவராலும் அறிய முடியாது. ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் அறிவித்துக் கொடுத்தவற்றை மட்டுமே மற்றவர்களால் அறிய முடியும்.

*(ஆதாரம்: மதாரிஷுன் நுபுவ்வத், பாகம்: 1)*

இந்த வசனத்திலிருந்தும் இதற்கான தப்ஸீர்களிலிருந்தும் மேற்படி நூலின் குறிப்பிலிருந்தும் தெரிய வருவது யாதெனில் மிஃராஜுடைய இரவில் கற்பனைக்கு கூட வர முடியாத மறைவான ஞானங்களை ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கு அல்லாஹ் அறிவித்துக் கொடுத்தான். நடந்தவை, நடப்பவை, நடக்க இருப்பவை யாவற்றையும் விவரித்து கூறியுள்ளான். விரிவாக கூற முடியாத பல ஞானங்களையும் நபிகள் நாயகம் அவர்களுக்கு அல்லாஹ் வழங்கியுள்ளான்.

وَمَا هُوَ عَلَى الْغَيْبِ بِضَنِينٍ

***“அவர் மறைவானவற்றை உங்களுக்கு அறிவிப்பதை கொண்டு உலோபித்தனம் செய்பவர் அல்லர்.”***

*அல் குர்ஆன்: (82: 24).*

ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கு மறைவான அறிவு இருந்து அதை மக்களுக்குத் தெரியப்படுத்தாமல் இருந்தால் ‘தான் கஞ்சத்தனம் செய்பவர் அல்லர்’ என்பது பொருத்தமாக அமையும்.

على الغيب وخبر السماء وما اطلع عليه من الاخبار والقصص بضنين اي ببخيل يقول انه يأتيه علم الغيب فلا يبخل عليكم بل يعلمكم ويخبركم ولا يكتموه كما يكتم الكاهن : تفسير معالم التنزيل

ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் மறைவானவற்றின் விண்ணகத்து செய்திகளிலும் மற்றும் செய்திகள் வரலாறுகளிலும் கஞ்சத்தனம் புரிந்தது இல்லை என்பதன் பொருள்.

ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கு மறைவான ஞானம் வழங்கப்படுகிறது. அதில் சோதிடர்கள் மறைப்பது போன்று இல்லாமல் அதில் கஞ்சத்தனம் செய்யாமல் உங்களுக்குக் கற்றுத் தருகிறார்கள்.

*(ஆதாரம்: மஆலிமுத் தன்ஸீல்).*

يقول انه عليه السلام يأتيه علم الغيب فلا يبخل به عليكم بل يعلمكم : تفسير خازن

ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கு மறைவான ஞானம் வழங்கப்படுகின்றன. அவர்கள் உங்களுக்கு கஞ்சத்தனம் செய்யாமல் கற்றுத் தருகிறார்கள்.

*(ஆதாரம்: தஃப்ஸீர் காசின்)*

இந்த வசனத்திலிருந்தும், இதற்கான விரிவுரைகளிலிருந்தும் தெரிய வருவது, ரஸூலுல்லாஹ் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கு மறைவான ஞானம் கிடைத்திருக்கின்றன. அதை மக்களுக்கு கற்றுக் கொடுத்திருக்கிறார்கள். மறைவான ஞானத்தை பெற்றவர் தான் மற்றவர்களுக்குக் கற்றுக் கொடுப்பார் என்பது வெள்ளிடைமலை!

وَعَلَّمْنَاهُ مِن لَّدُنَّا عِلْمًا

***"இன்னும் அவருக்கு நம்மிடத்திலிருந்து ஒரு பிரத்தியேகமான அறிவையும் நாம் கற்றுக் கொடுத்தோம்."***

*(அல் குர்ஆன்: 18:65).*

اي مما يختص نباءه لا يعلم الا بتوفيقنا وهو علم الغيب : تفسير بيضاوي

ஹளறத் ஹிழ்று அலைஹிஸ்ஸலாம் அவர்களுக்கு நாம் அறிவித்துக் கொடுக்காமல் எவராலும் அறிய முடியாத நமக்குச் சொந்தமான ஞானத்தை கற்றுக் கொடுத்தோம். இந்த ஞானம் தான் மறைவான ஞானம் (இல்முல் ஙைப்) ஆகும்.

*(ஆதாரம்: தஃப்ஸீர் பைரவி).*

عن ابن عباس قال انك لن تستطيع معي صبرا كان رجلا يعلم علم الغيب قد علم ذلك : تفسير ابن جرير

என்னோடு வருவதற்கு நீ பொறுமை செய்யமாட்டீர் என்று நபி மூஸா அலைஹிஸ்ஸலாம் அவர்களுக்கு கூறியவர் நபி ஹிழ்று அலைஹிஸ்ஸலாம் ஆவார்கள். அவர் மறைவான அறிவை அறிந்ததனால் தான் இதனை அறிந்து கொண்டார் என்று ஹளறத் இப்னு அப்பாஸ் ரலியல்லாஹு அன்ஹுமா கூறுகின்றார்கள்.

*(ஆதாரம்: தஃப்ஸீர் இப்னு ஷரீர்).*

هو يعلم الغيوب والاخبار عنها باذنه تعالى فكما ذهب اليه ابن عباس: تفسير روح البيان

நபி ஹிழ்ரு அலைஹிஸ்ஸலாம் அவர்களுக்கு கற்றுக் கொடுக்கப்பட்ட அறிவு மறைவான ஞானம் (இல்முல் ஙைப்) ஆகும் என்று இப்னு அப்பாஸ் ரலியல்லாஹு தஆலா அன்ஹுமா குறிப்பிடுவது போன்று அல்லாஹ்வின் அனுமதியோடு மறைவான விடயங்களை அறிவிக் கின்றார்கள் என்றும் குறிப்பிடுகின்றார்கள்.

*(ஆதாரம்: தஃப்ஸீர் ரூஹுல் பயான்).*

ஹஜ்ரத் ஹிழுறு அலைஹிஸ்ஸலாம் அவர்களுக்கு மறைவான ஞானம் வழங்கப்பட்டுள்ளது. இறையருள் ஞானம் (இல்முத் லதுன்னி) என்பது நல்லடியார்களுக்கு இல்காம் மூலம் கிடைப்பது என்று கூறப்படுகிறது.

*(ஆதாரம்: தஃப்ஸீர் மதாரிக்)*

اي علم الباطن الهاما : تفسير خازن

நபி ஹிழுறு அலைஹிஸ்ஸலாம் அவர்களுக்கு இல்ஹாம் மூலமாக அந்தரங்க ஞானம் வழங்கப்பட்டுள்ளது.

*(ஆதாரம்: தஃப்ஸீர் காசின்).*

இந்த வசனத்திலிருந்தும், இதற்கான தஃப்ஸீரிலிருந்தும் தெரிய வருவருவது யாதெனில், நபியவர்களுக்கு மறைவான ஞானம் வழங்கப் பட்டுள்ளது. ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கு மறைவான ஞானம் வழங்கப்பட்டிருப்பது நிரூபணமாகிறது. அனைத்து வழிகளிலும் உயர்ந்த சிறப்பு வாய்ந்த ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கு மறைவான ஞானம் வழங்கப்பட்டு இருக்க வேண்டியது அவசியமாகும்.

ஏனெனில், அவர்கள் தான் அனைத்து படைப்புகளிலும் மேலானவர்கள், அதிகம் அறிந்தவர்களுமாகும்.

وَكَذَٰلِكَ نُرِي إِبْرَاهِيمَ مَلَكُوتَ السَّمَاوَاتِ وَالْأَرْضِ

*"இவ்வாறு இப்றாஹீமுக்கு வானங்களுடைய இன்னும் பூமியுடைய (அதிசயமான) ஆட்சியைக் காட்டினோம்."*

*அல் குர்ஆன்: (6:76).*

اقيم علي صخرة وكشف له عن السموات حتي رأي العرس والكراسي وما في السموات وكشف له عن الارض حتي ننظر الي أسفل الارضين ورأي ما فيها من العجائب : تفسير خازن

இப்றாஹீம் அலைஹிஸ்ஸலாம் அவர்களை ஒரு பாறையின் மேல் நிற்பாட்டப்பட்டது. அவருக்காக வானங்கள் திறக்கப்பட்டன. அப்போது அர்ஷு, குர்சி மற்றும் வானங்களில் இருப்பவற்றைப் பார்த்தார்கள். மேலும் பூமியின் திரை நீக்கப்பட்டது. பூமியின் பாதாளம் வரைப் பார்த்தார்கள். பாதாளத்திலுள்ள அதிசயங்களையும் பார்த்தார்கள்.

*(ஆதாரம்: தஃப்ஸீர் காசின்).*

وهذا يفيد أن الرؤية ببصرية لا علمية :تفسير صاوي

இது கண்காட்சியாகும். தவிர அறிவின் புரிதலல்ல!

*(ஆதாரம்: தஃப்ஸீர் ஸாவி).*

قال مجاهد فرجت له السموات السبع فنظر الي ما فيهن حتي انتهي نظر الي العرس وفرجت له الارضون السبع حتي نظره الي ما فيهن : تفسير مدارك

ஹளறத் முஜாஹித் றழியல்லாஹு அன்ஹு கூறுகின்றார்கள். ஹளறத் இப்றாஹீம் அலைஹிஸ்ஸலாம் அவர்களுக்கு ஏழு வானங்களும் திறக்கப்பட்டன. அவர்களின் பார்வை அர்ஷைத் தொட்டது. அர்ஷுக்குக்

கீழ் உள்ள சகலதையும் பார்த்தார்கள். ஏழு பூமிகளும் திறக்கப்பட்டன. அவற்றில் உள்ள சகலதையும் பார்த்தார்கள்.

*(ஆதாரம்: தஃப்ஸீர் மதாரிக்).*

ஹளறத் இப்றாஹீம் அலைஹிஸ்ஸலாம் அவர்களுக்கு விண்ணகத்து, மண்ணகத்து அனைத்து அதிசயங்களும் காட்டப்பட்டன. அர்ஷிலிருந்து "தஹ்தத் தறா" என்ற அதள பாதாளம் வரை அனைத்தையுமே திறந்து காட்டப்பட்டன.

إنه جلاله الامر سره وعلانيته فلم يخف عليه شيئ من أعمال الخلائق :تفسير ابن جرير

ஹளறத் இப்றாஹீம் அலைஹிஸ்ஸலாம் அவர்களுக்கு வெளியானதும், மறைந்ததுமான அனைத்துமே திறக்கப்பட்டன. படைப்புக்களின் செயல்களில் எதுவுமே அவர்களுக்கு மறையவில்லை.

*(ஆதாரம்: தஃப்ஸீர் இப்னு ஷரீர்)*

ان الله شق له السموات حتي رأى العرش والكرسي والي حيث ينتهى اليه فوقية العالم الجسمانى ورأى ما في السموات من العجائب والبدائع وراي ما في بطن الارض من العجائب والغرائب : تفسير كبير

அல்லாஹுத் தஆலா நபி இப்ராஹீம் அலைஹிஸ்ஸலாம் அவர்களுக்கு வானங்களை பிளந்து காட்டினான். அப்போது சட உலகின் அந்திமமான அர்ஷு குர்சி உள்ளிட்டவற்றைப் பார்த்தார்கள். அங்கு உள்ள வியக்கத் தக்க அபூர்வ காட்சியை கண்டார்கள். அவ்வாறு பூமியின் அதல பாதாளத்திலிருக்கும் அபூர்வமான வகைகளையும் கண்டார்கள்.

*(ஆதாரம்: தஃப்ஸீர் கபீர்).*

இத்திருவசனத்திலும், இத்திருவசனத்திற்கான தஃப்ஸீர்களிலிருந்தும் தெரியவருவது யாதெனில், அர்ஷும், பூமியின் அதலபாதாளத்தில் உள்ளவை யாவும் நபி இப்ராஹீம் அலைஹிஸ்ஸலாம் அவர்களுக்கு காட்டப்பட்டன. அவ்வாறே படைப்புகளின் செயல்களும் அவர்களுக்கு எடுத்துக் காட்டப்பட்டன.

ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் அறிவு நபி இப்ராஹீம் அலைஹிஸ்ஸலாம் அவர்களின் அறிவை விட அதிகம் என்று ஏற்றுக்கொண்டால் ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கும் இதே அறிவு இருந்தாக வேண்டும்.

அர்ஷில் இருக்கும் ஞானங்கள் லவ்ஹுல் மஹ்ஃபூழ் ஏட்டிலும் இருக்கும் என்பதை கவனத்தில் கொள்ள வேண்டும். லவ்ஹுல் மஹ்ஃபூழ் ஏட்டிலிருப்பதைப் பற்றி ஏற்கனவே எழுதியுள்ளோம். அதனால் நடந்தவை நடக்கப் போவது உள்ளிட்ட சகலதுமே ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களுக்கு தெரிந்து இருக்கின்றன.

لا يَأْتِيكُمَا طَعَامٌ تُرْزَقَانِهِ إِلا نَبَّأْتُكُمَا بِتَأْوِيلِهِ

***"(அப்போது யூஸுஃப் அலைஹிஸ்ஸலாம்) இதனை நீங்கள் இருவரும் உணவாக அளிக்கப்படுகிறீர்களோ அந்த உணவு உங்கள் இருவரிடமும் வருவதற்கு முன் அதனுடைய விளக்கத்தை உங்கள் இருவருக்கும் நான் அறிவித்தே தவிர உங்கள் இருவரிடத்திலும் வராது."***

*அல்குர்ஆன்: (12:37).*

இதன் பொருள் உங்களுடைய கடந்த கால, எதிர்கால அனைத்து நிலை களையும் கூறுவேன். உணவு கூட எங்கிருந்து வந்து பின்னர் எங்கே செல்லும் என்ற அனைத்தையும் நான் கூறுவேன்.

*(தஃப்ஸீர் ரூஹுல் பயான், தஃப்ஸீர் காஸின்).*

ஹலரத் ஈஸா அலைஹிஸ்ஸலாம் அவர்கள் கூறினார்கள்.

وَأُنَبِّئُكُم بِمَا تَأْكُلُونَ وَمَا تَدَّخِرُونَ فِي بُيُوتِكُمْ

***"இன்னும் நீங்கள் உண்பவற்றையும், உங்கள் வீடுகளில் சேகரித்து வைத்திருப்பதையும் பற்றி உங்களுக்கு அறிவிப்பேன்."***

*அல்குர்ஆன்: (3:49).*

நபி ஈஸா அலைஹிஸ்ஸலாம் அவர்கள் இல்லாத இடத்தில் சாப்பிட வேண்டியவை அனைத்தையும் அறிவார்கள். இதற்குப் பெயர்தான் "இல்முல் ஙைபு" மறை ஞானமாகும். நாம் முன்வைத்த மறுக்க முடியாத தக்க ஆதாரங்களுக்குப் பதில் கூறுவதற்கு மறுப்பாளர்களிடம் ஒரு சிறு ஆதாரமும் கிடையாது.!

திருக்குர்ஆனில் வருகின்ற சில வசனங்களை தங்களுக்கு ஆதாரமாக எடுத்துக் கொள்கின்றனர். உதாரணத்திற்கு,

"குல்ல ஷையியின்" كل شئ அனைத்து வஸ்த்துக்களும் என்ற வசனம். அல்லது, "நீங்கள் அறியாத வையை உங்களுக்குக் கற்றுத்தந்தான்." என்ற வசனத்தில் வருகின்ற "நீங்கள் அறியாதவை" என்ற திருவசனத்தின் பொருள் ஷரீஅத் சட்டங்களைத்தான் குறிக்குமே தவிர சகல வஸ்த்துக்களையுமல்ல என்று வாதாடுகின்றனர். தங்கள் வாதத்திற்கு வலுவூட்டும் பின்வரும் ஆதாரங்களையும் முன்வைக்கின்றனர்.

1) எல்லா வஸ்த்துக்களும் என்பதில் எல்லாம் என்ற சொல் எல்லையற்றயதையே குறிக்கும். எல்லையில்லாத அறிவு, ஞானம் அல்லாஹ்வைத் தவிர வேறு எவருக்கும் கிடையாது! அவ்வாறு இருப்பதாக வாதாடுவது தர்க்கவியல் விதிக்கு முரணானதாகும்.

2) எல்லா வஸ்துக்களும் என்பதை மார்க்க சட்டங்கள் என்று தான் முஃபஸ்ஸிரீன்கள் வரையறை செய்துள்ளனர். பார்க்க: தஃப்ஸீர் ஜலாலைன் உள்ளிட்ட ஏனைய தஃப்ஸீர்கள்.

3) திருக்குர்ஆனில் பல்வேறு இடங்களில் "குல்லு ஷையியின்" எல்லா பொருட்களும் என்று குறிப்பிடப்பட்டிருந்தது சில பொருள்கள் என்றே பொருள் கொள்ளப்படுகின்றன.

உதாரணமாக,

وَاُوْتِيَتْ مِنْ كُلِّ شَىْءٍ

***"அவள் (அரசுக்குத் தேவையான) எல்லா பொருட்களும் கொடுக்கப் பட்டிருக்கின்றாள்."***

*அல்குர்ஆன்: (27:23).*

என்று கூறப்பட்டிருந்தாலும் அரசி சிலவற்றை பெற்றிருந்தார். இங்கு "எல்லாம்" என்ற சொல் "சில" என்ற பொருளில் தான் வந்துள்ளது கவனிக் கத்தக்கது.

இதற்கான பதில்:

மேற்கண்ட ஆதாரங்கள் நமது வாதத்திற்கு பொருத்தமான பதில்களாக இல்லை. இவர்கள் முன்வைக்கும் விளக்கம் மக்களை குழப்பி வழி தவறச் செய்யும் தந்திரமும், சதியுமாகவே இருக்கின்றது! சரியான பதிலை அடியிற் தருகின்றேன். படியுங்கள்! தெளிவு பெறுவீர்கள்!!

அரபு மொழியில் "குல்" "மா" (كل، ما) என்ற இரு சொற்களும் பொதுமையை குறிப்பதாகும். இரு சொற்களும் பொதுமையை குறிப் பதாகும். திருக்குர்ஆனில வரும் வார்த்தைகள் அனைத்துமே திட்டவட்டமான சந்தேகத்திற்கு இடமில்லாத கருத்துக்களை தெரிவிப்பவையாகும்.

இதில் சுயமான (கியாஸை) "ஒப்பாய்வை" முன்வைத்து எல்லைபடுத்துவது ஒவ்வாத செயல். இவ்வாறு செய்வதால் இவர்கள் கூறுவது போன்று அக்கருத்து எல்லை படவும் மாட்டாது.

திருக்குர்ஆனின் கருத்துக்களுக்கு சிலர் அறிவிக்கும் ஆகாத் (احاد) வகையைச் சேர்ந்த ஹதீதுகளால் கூட கருத்துக்களை குறிப்பாக கூற முடியாது என்றிருக்கும் போது சுய சிந்தனைகள் முகிழ்த்த கியாசுக்கு என்னதான் பெறுமானம் இருக்கப்போகிறது? விளக்கத்திற்கு வருவோம்.!

1) குல்லு ஷைய்யின் كل شئ எல்லா வஸ்துக்களும் என்ற சொல் தேவ்பந்தி வஹாபிகள் கூறுவது போன்று எல்லையற்றதல்ல! எல்லைக்கு உட்பட்டதாகும். அல்லாஹுத் தஆலா கூறுகின்றான்.

وَأَحْصَىٰ كُلَّ شَيْءٍ عَدَدًا

***“இன்னும் எல்லாப் பொருட்களையும் எண்ணிக்கையால் கணக்கிட்டு வைத்துள்ளான்.“***

*அல்குர்ஆன்: (72:28).*

இத்திருவசனத்திற்கு தஃப்ஸீர் கபீர் பின்வரும் விளக்கத்தை தருகின்றது.

قلنا لا شك ان احصاء العدد انما يكون في المتناهي فاما لفظة كل شئ فانها لا تدل علي كونه غير متناهية لان الشئ عندنا هو الموجود والموجودات متناهية في العدد: تفسير كبير

எல்லைக்குட்பட்டதைத்தான் எண்ணிக்கையால் கணக்கிட முடியும் என்பதில் சந்தேகம் இல்லை. எல்லா வஸ்துக்களும் என்பது எல்லை யற்றதைக் குறிக்காது! ஏனெனில் இருப்புள்ளதான உண்டாயிருக்கும் பொருளைத்தான் வஸ்த்து என்று நாம் கூறுகின்றோம். இரு பண்புள்ள படைப்புகள் எல்லைக்குட்பட்டதாகவே கணிக்கப்படும்.

*(ஆதாரம்: தஃப்ஸீர் கபீர்).*

தஃப்ஸீர் ரூஹுல் பயான் பின் வரும் விளக்கத்தைத் தருகிறது,

وهذه الآية مما يستدل له علي ان المعدوم ليس بشئ لانه لو كان شيئا لكانت الاشياء غير متناهية وكونه احصي عددها يقتضي كونها متناهية لان احصاء العدد انما يكون في المتناهي : تفسير روح البيان

இல்லாதவை ஒரு பொருள் அல்ல என்பதற்கு இத்திருவசனத்தில் பலமான ஆதாரம் உண்டு. ஏனெனில், இல்லாதவற்றையும் ஒரு பொருளாக கணித்தால் அவை எல்லையற்றதாகிவிடும். கணிக்கப்படும் பொருள்கள் எல்லைக்குட்பட்டதாகவே இருக்க வேண்டும். காரணம், எல்லைக்குட்பட்டதைத்தான் கணிக்க முடியும்.

*(தஃப்ஸீர் ரூஹுல் பயான்).*

முஸ்லிம்களில் அதிகமானவர்கள் எல்லா வஸ்துக்களும் என்பதை ஷரீஅத்தின் எல்லா சட்டங்களும் என்று கூறி இதுவல்லாததை மறுத்துள்ளனர். இதுபோன்று அதிகமான முஃபஸ்ஸிரீன்கள் "எல்லா வஸ்துக்களும்" என்பதில் எல்லா மறை ஞானங்களும் என்றும் பொருள் கொடுத்துள்ளனர். முஃபஸ்ஸிரீன்களில் சிலர் மறுப்பாகவும், மற்றும் சிலர் உடன் பாடவும் கருத்து தெரிவித்துள்ளனர்.

மறை ஞானமும் என்ற கருத்தைக் கொண்டவர்கள் அவர்களின் கருத்தை ஆதரிக்கும் முஃபஸ்ஸிரீன்களின் கருத்துக்கு முன்னுரிமை வழங்குகின்றனர். இக்கருத்தைக் கூறும் சுதந்திரம் இவர்களுக்கும் உண்டு.!

والمثبت اولي من النافي – نور الانوار

சட்ட முறை இயல் (உஸூல் ஃபிக்ஹு) நூலான நூறுல் அன்வாறில் மறுப்பை விட உடன்பாடு மேலானது என்று குறிப்பிடப்பட்டுள்ளது.

இது வரை நாம் முன் வைத்த தஃப்ஸீர்கள் யாவும் علم الغيب மறை ஞானத்தை உறுதிப்படுத்துவதாக இருப்பதால் இக்கருத்து ஏற்கத்தக்கது என்பது வெள்ளிடைமலை!

அடுத்து, "குல்லு ஷைய்யின்" எல்லா வஸ்துக்களும் என்பதன் எதார்த்தமான பொருளை தஃப்ஸீர்கள், ஹதீஸ்கள், முஸ்லிம் உம்மத்தின் அறிஞர்களின் விளக்கத்துடன் முன்வைப்போம். இன்ஷா அல்லாஹ்!

பிரபஞ்சத்திலுள்ள எந்த ஒரு அணுவும், ஒரு துளியும் நபிகள் கோமான் முஹம்மது முஸ்ஃதபா ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் அறிவுக்குள் வராமலில்லை என்ற கருத்தின் விளக்கத்தை நமது முன்னுரையில் தெளிவாக்கியுள்ளோம். திருக்குர்ஆனுக்கு ஹதீஸ் கூறும் விளக்கம் ஏனைய விளக்கங்களை விட முன்னுரிமை பெற்றதாகும்.

திருக்குர்ஆனுக்கு ஹதீஸ் கூறும் விளக்கம் ஏனைய விளக்கங்களை விட முன்னுரிமை பெற்றதாகும்.

அதனால் ஹதீஸ் கூறும் தப்ஸீரை ஏற்க வேண்டியது கடமையாகும். "குல்லு ஷைய்யின்" எல்லா வஸ்துக்களும் என்பதை ஷரீஅத்தின் சட்டங்கள் என்று கூறிய முஃபஸ்ஸிரீன்கள் மாற்றுக் கருத்துக்களை மறுக்கவில்லை என்றிருக்கும் போது மறைஞானத்தை மறுப்பவர் எங்கிருந்து தனக்குரிய ஆதாரத்தை எடுத்தார்? கூறப்படாதவை இல்லை என்றோ, ஆகாதவை என்றோ பொருளாக மாட்டாது.

وَجَعَلَ لَكُمْ سَرَابِيلَ تَقِيكُمُ الْحَرَّ

*"வெப்பத்திலிருந்து உங்களைப் பாதுகாக்கும் சட்டைகளை உங்களுக்கு ஆக்கினான்."*

*அல்குர்ஆன்: (16: 81).*

என்ற இத்திருவசனத்தின்படி சட்டை சூட்டை மட்டும் தான் பாதுகாக்குமா? குளிரிலிருந்து பாதுகாக்காதா? இதில் சட்டையின் ஒரு பயன்பாடு கூறப்பட்டுள்ளதால் மற்றது இல்லை என்றாகிவிடாது.

மார்க்கம் என்பதில் உலகில் உள்ள அனைத்துமே அதில் உள்ளடங்கும். ஹலால் ஹராமோடு தொடர்பு படாத எப்பொருளும் உலகில் இருக்க முடியாது.

اَ لْيَوْمَ اَكْمَلْتُ لَكُمْ دِيْنَكُمْ وَاَ تْمَمْتُ عَلَيْكُمْ

*மார்க்கத்தை இன்றைய தினத்தில் பூரணமாக்கி விட்டோம்.*

*அல்குர்ஆன்: (5:3).*

என்ற அல்லாஹ்வின் கூற்று அனைத்தையும் உள்ளடக்கியுள்ளது.

பல்கீஸ் அரசி போன்றவர்களின் வரலாற்றில் வருகின்ற "குல்லு ஷைய்யின்" எல்லா வஸ்துக்களும் என்பதற்கான ஆதாரம் தெளிவாகவே உள்ளது. ஒரு அரசாங்கத்திற்குத் தேவையான அனைத்தும் நிறப்பமாக அங்கே இருக்கின்றன. அதனால் தான் மஜாஸி, (இரவல்) மூலம், பொருள் கொள்ளப்படுகின்றது.

"குல்லு ஷைய்யின்" எல்லா வஸ்துக்களும் என்பதற்கு எதார்த்தமான (ஹகீகி) பொருள் கொள்ளாமல் (மஜாஸி) இரவல் பொருள் எடுப்பதற்கான ஆதாரம் என்ன? என்று கேட்கலாம். ஹுத் ஹுத் என்ற பறவை நபி ஸுலைமான் அலைஹிஸ் ஸலாம் அவர்களைப் பார்த்துக் கூறியது.

إِنِّي وَجَدتُّ امْرَأَةً تَمْلِكُهُمْ وَأُوتِيَتْ مِن كُلِّ شَيْءٍ وَلَهَا عَرْشٌ عَظِيمٌ

*"அங்கு (யமனில்) அவர்களை ஆட்சி செய்கின்ற ஒரு பெண்ணை நிச்சயமாக நான் கண்டேன். அவள் அரசுக்குத் தேவையான எல்லா பொருட்களும் கொடுக்கப்பட்டிருக்கிறாள். ஒரு மகத்தான சிம்மாசனமும் அவளுக்கு இருக்கிறது."*

*அல் குர்ஆன்: (27: 23).*

இத்திருவசனத்தில் பல்கீஸின் அரசாங்கத்திற்குத் தேவையான எல்லாம் அவருக்குக் கொடுக்கப்பட்டிருக்கின்றன என்று ஹூத் ஹூத் கூறியது. இது ஹூத் ஹூதின் கூற்று, அல்லாஹ்வின் கூற்றல்ல! ஹூத் ஹூத் கூறியதை அல்லாஹுத் தஆலா நக்லு (பிரதி) செய்திருக்கின்றான்.

உலகத்தில் உள்ள அனைத்துமே பல்கீஸுக்கு கிடைத்துள்ளன என்று ஹூத் ஹூத் நினைத்திருக்கலாம்.

ஆனால், அல்லாஹுத் தஆலா கூறினான்.

وَنَزَّلْنَا عَلَيْكَ الْكِتَاب تِبْيَانًا لِكُلِّ شَيْء

*"ஒவ்வொரு பொருளையும் விளக்கமாகக் கூறக் கூடிய வேதத்தை உம்மீது நாம் இறக்கினோம்."*

*அலகுர்ஆன்: (16:89).*

என்று அல்லாஹுத் தஆலாவே கூறினான்.

ஹூத் ஹூதின் கூற்றில் தவறு வரலாம். அல்லாஹ்வின் கூற்றில் தவறு வர முடியாது. ஹூத் ஹூத் பறவை, பல்கீஸின் அரியாசனத்தை மகத்தானது என்றும் கூறியது. பல்கீஸின் அரியாசனம் அப்படி பிரமாண்டமானதா?

திருக்குர்ஆனும், ஏனைய திருவசனங்களும் "குல்லு ஷைய்யின்" எல்லாப் பொருட்களும் என்பதற்கு உலகிலுள்ள அனைத்துமே என்று தான் பொருள் கொண்டுள்ளன.

திருக்குர்ஆன் கூறுகிறது.

وَلا رَطْبٍ وَلا يابِسٍ إِلَّا فِي كِتابٍ مُبِينٍ

*"எந்தப் பசுமையானதும், எந்தக் காய்ந்ததும் (அவனுடைய)தெளிவான பதிவேட்டில் இல்லாமலில்லை."*

*அல் குர்ஆன்:(6:59).*

பின் வரும் ஹதீஸ்களும், அறிஞர்கள், முஹத்திதீன்களின் கூற்றுக்களும் இக்கருத்தை ஊர்ஜிதம் செய்கின்றன. உலகத்திலுள்ள ஒவ்வொரு வஸ்துவைப் பற்றியதும அறிவு றஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கு வழங்கப்பட்டுள்ளன என்ற விளக்கத்தை விரிவாக அடுத்து வரும் ஹாழிர், நாழிர் பாடத்தில் கூறுவோம். இன்ஷாஅல்லாஹ்!

## பிரிவு: -02

## மறை ஞானம் பற்றிய ஹதீஸ் ஆதாரங்கள்

இப்பிரிவில் நாம் கூறும் ஹதீதுகளுக்குரிய விளக்கத்தை இங்கு கூறுகின்ற ஹதீதுகளின் ஒழுங்கு வரிசைப்படி மூன்றாம் அத்தியாயத்தில் கூறுவோம். வாசகர்கள் கவனமாகப் படித்து விளக்கத்தைப் பெறுக.!

١ – قام فينا رسول الله صلى الله عليه وسلم ، مقاما فاخبرنا عن بدء الخلق حتى دخل اهل الجنة منازلهم واهل النار منازلهم حفظ من حفظه ونسبه من نسيه – بخاري شريف كتاب بدء الخلق – عن عمرابن الخطاب رضى الله عنه ١)

ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் எங்கள் மத்தியில் எழுந்து நின்று படைப்பின் ஆரம்பம் பற்றி விளக்கி கூறினார்கள். சொர்க்கவாசிகள் சொர்க்கத்தில் அவர்களின் இருப்பிடமும் நரகவாதிகள் நரகத்தில் அவர்களின் இருப்பிடமும் போய்ச் சேரும் வரையிலும் நீண்டு இருந்தது. மனதில் பதித்தவர்கள் மனதில் பதித்து விட்டார்கள். மறந்தவர்கள் மறந்து போய் விட்டனர்.

*அறிவிப்பவர்: ஹளரத் உமர் ஃபாரூக் ரலியல்லாஹு அன்ஹு*

*(ஆதாரம்: புகாரி ஜரீஃப்).*

ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் இவ்வுரையில் இரு விடையங்களை முன்வைத்துள்ளார்கள்.

1: ஒரு படைப்பின் ஆரம்பம் எப்போது உண்டானது?

2: உலக முடிவு நாள் எப்போது வரும்? எப்படி வரும்?

அதாவது, பிரபஞ்சத்தின் ஆரம்பம் தொட்டு இறுதி நாள் வரையிலான ஒவ்வொன்றையும் துளி கூட விடாமல் விளக்கியுள்ளார்கள்.

முஸ்லிம் ஷரீஃபில் இத்தொடரில் மேலதிகமாக பின்வரும் அறிவிப்பு பதிவாகியுள்ளது.

٢ - فاخبرنا بما هو كاين الى يوم القيمة فا علمنا احفظنا ، مسلم ، مشكوة ، باب المعجزات

2) மறுமை நாள் வரை நடக்கக்கூடிய அனைத்தையும் ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் எங்களுக்கு விளக்கினார்கள். இதனை மனனம் செய்தவர்தான் எங்களில் அதிகம் அறிவுள்ளவராக கருதப்பட்டார்.

*அறிவிப்பவர்: அம்ரு இப்னு அக்தப்.*

*நூல்: முஸ்லிம் மிஷ்காத்*

٣ - ما ترك شيًا يكون فى مقامه الى يوم القيمة الا حدث به حفظه ونسيه من نسيه ، متفق عليه ،مشكوة .باب الفتن)

3) அதே இடத்தில் ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கியாமத்து நாள் வரையிலான நிகழ்வில் ஒன்றையும் விடாமல் விளக்கிக் கூறினார்கள். அதனை மனனமிட்டவர்கள் மனமாக்கினார்கள். மறந்தவர்கள் மறந்து போய்விட்டனர்.

*அறிவிப்பவர்: ஹுதைஃபா றழி யல்லாஹு அன்ஹு. நூல்: புகாரி, முஸ்லிம், மிஷ்காத் பாடம்: குழப்பங்கள்.*

٤ - ان الله زوى لى الارض فرأيت مشارق الارض ومغاربها ،مشكوة باب فضايل سيد المرسلين)

4)அல்லாஹுத் தஆலா பூமியை எனக்காக சுருட்டினான். கிழக்கையும் மேற்கையும் கண்டுகொண்டேன்.

*ஆதாரம்: மிஷ்காத்.*

٥ – رأيت ربى عز وجل فى احسن صورة فوضع كفه بين كتفي فوجدت بردها بين ثديي
فعلمت ما فى السموات والارض

5) அல்லாஹ்வை நான் அழகிய கோலத்தில் கண்டேன். அல்லாஹுத் தஆலா அவனது கரத்தை எனது இரு புயத்திற்கு மத்தியிலும் வைத்தான். அதன் குளிர்ச்சியை எனது இரு மார்பிலும் அனுபவித்தேன். பின்னர் வானத்திலும், பூமியிலும் உள்ள அனைத்தையும் அறிந்து கொண்டேன்.

*அறிவிப்பவர்: அப்துர் ரஹ்மான்*
*இப்னு ஆயிஷ் றழியல்லாஹு அன்ஹு.*
*நூல்: மிஷ்காத்*

٦ - ان الله رفع لى الدنيا فانا انظر اليها والى ما هو كائن فيها الى يوم القيمة كانما الى كفى هذا
زرقانى شرح مواهب الدنية

6) அல்லாஹுத் தஆலா அகிலம் அனைத்தையும் எனக்கு முன்னால் எடுத்துக் காட்டினான். அப்போது உலகத்தையும் கியாமத் நாள் வரை உள்ளத்தையும் உள்ளங்கையில் இருப்பது போன்று அறிந்து கொண்டேன்.

*அறிவிப்பவர்: அப்துல்லாஹ் இப்னு உமர் றழியல்லாஹு அன்ஹு.*

٧ - تجلى لى كل شئ وعرفت ترمذي ، مشكوة ، باب المساجد

7) எல்லாப் பொருட்களும் எமக்காக வெளியாயின. அவற்றை நாம் அறிந்து கொண்டோம்.

*ஆதாரம்: திருமதி ஜரீஃப்,*

*மிஷ்காத்: பாடம் மஸாஷித் -*

*பள்ளிவாசல்கள்.*

٨ - لقد تركنا رسول الله صلى الله عليه وسلم وما يحرك طاير جناحيه الا ذكر لنا منه علما ، عن ابى ذر الغفارى رضي الله عنه، مسند احمد ،

8) ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் எம்மை விட்டுப் பிரிய முன், ஒவ்வொரு பறவையைப் பற்றிய அறிவை நமக்குகற்றுத் தந்து விட்டுத்தான் சென்றார்கள்.

*அறிவிப்பவர்: அபூதர் அல்கிஃபாரி றழியல்லாஹு அன்ஹு.*

*நூல்: முஸ்னத் அஹ்மத்*

٩) ما ترك رسول الله صلى الله عليه وسلم من قايد فتنة الى تنقضي الدنيا يبلغ من ثلث مائة فصاعدا قد سماه لنا باسمه واسم ابيه واسم قبيلته ، روا ابو داود

9) உலகம் முடியும் வரை தோன்றுகின்ற குழப்பவாதிகள் 300க்கும் அதிகமான தலைவர்களின் பெயர்களையும், அவர்களின் தந்தையின் பெயர்களையும் அவர்களின் கோத்திரத்தின் பெயர்களையும் ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள்.

*அறிவிப்பவர்: குதைஃபா ரலியல்லாஹு தஆலா அன்ஹு.*

*நூல்: அபூதாவூத்.*

١٠ – خفف على داود القرآن فكان يأمر دوابه فتسرج فقرأه القرآن قبل ان تسرج بخارى شريف ، مشكوة ، باب ذكر الانبياء

10) ஹஜ்ரத் தாவூத் அலைஹிஸ்ஸலாம் அவர்களுக்கு குர்ஆன் (சபூர்) இலகுவாக்கி கொடுக்கப்பட்டது. தனது குதிரைக்கு சேணத்தை மாற்றி சரி செய்வதற்குள் குர்ஆனை (சபூர்) முழுவதையும் ஓதி முடித்து விடுவார்கள்.

*நூல்: புகாரி மிஷ்காத். பாடம் நபிமார்கள்.*

இந்த ஹதீதை இந்த இடத்தில் நாம் கூறுவதன் பிரதான நோக்கம், ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் உலகத்தின் ஆரம்பம் முதல் முடிவு வரையிலான அனைத்து நிகழ்வுகளையும் ஒரே இடத்தில் நின்று கொண்டே கூறியிருக்கிறார்கள். இவ்வாறு கூறியதை ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் ஒரு அற்புதமாக கருதப்படுகிறது.

தாவூது அலைஹிஸ்ஸலாம் அவர்கள் மிகக் குறுகிய நேரத்தில் ஸபூர் வேதம் முழுவதையும் ஓதி முடித்து இருக்கிறார்கள். இதுவும் ஹளரத் தாவூத் அலைஹிஸ்ஸலாம் அவர்களுடைய அற்புதமாக (முஃஜிஸாவாக)க் கருதப்படுகிறது. இவ்விரு ஆதாரங்களின் வெளிச்சத்தில் குதர்க்கவாதிகள் குறுகிய நேரத்துக்குள் எப்படி உலக சரித்திரத்தை சொல்ல முடியும்? என்று கூறும் ஆட்சேபனை தவிடு பொடியாகிறது.

١١ – تلد فاطمة ان شاء الله غلاما يكون فى حجرك ، مشكوة باب مناقب اخل البيت

11) பாத்திமுத்து ஜஹ்றாவுக்கு இன்ஷா அல்லாஹ் ஆண் குழந்தை பிறக்கும். அது உமது பராமரிப்பில் இருக்கும் என்று ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் ஃபாத்திமா ரலியல்லாஹு தஆலா அன்ஹா அவர்களைப் பார்த்துச் சொன்னார்கள்.

*ஆதாரம்: மிஷ்காத்.*

٢١ – مر رسول الله صلى الله عليه وسلم بقبرين يعذبان فقال انهما يعذبان وما يعذبان فى كبير اما احدهما فكان لا يستتر من البول واما الاخر فكان يمشى با لنميمتى ثم اخذ جريدة رطبة فشقها بنصفين ثم غرز فى كل قبر واحدة قال لعله ان يخفف عنهما مالم ييبسا ، بخارى ، باب اتيان عذاب القبر

12) ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் வேதனை செய்யப்பட்டுக் கொண்டிருக்கின்ற இரு கப்ருகளுக்கு பக்கத்தில் நடந்து சென்றார்கள். "இவ்விரு கப்றாளிகளும் வேதனை செய்யப்படுகிறார்கள். பெரிய குற்றத்திற்காக அல்ல, அவர்களில் ஒருவர் சிறுநீரை சரியாகச் சுத்தம் செய்வதில்லை! மற்றவர் கோள் சொல்லித் திரிந்தார்" என்று கூறிய பின், ஒரு பேரீத்தம் மட்டையை இரண்டாக கிழித்து ஒவ்வொன்றையும் ஒவ்வொரு கப்ரிலும் நட்டினார்கள். இவை இரண்டிலும் உள்ள பச்சை காயும் வரை அவர்களின் வேதனை இலகுவாகவும் என்று விளக்கம் கூறினார்கள்.

*அறிவிப்பவர்: இப்னு அப்பாஸ் ரலியல்லாஹு அன்ஹு.*

*புகாரி ஜரீஃப்.*

٣١ - تحت اية ، لا تسئلوا عن اشياء ان تبد لكم قام على المنبر فذكر الساعة وذكر ان بين يديها امورا عظاما ثم قال ما من رجل احب ان يسأل عن شيء فليسأل عنه فوالله لا تسء لونى عن شيء الا اخبرتكم ما دمت فى مقامى هذا فقام رجل اين مدخلى قال النار فقام عبدالله ابن حذيفة فقال من ابي قال ابوك حذيفة ثم كثر ان يقول سلونى سلونى : بخارى شريف, كتاب الاعتص

13) ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் மேடையில் நின்று கொண்டு கியாமத் நாளின் நிலையை விளக்கி கூறினார்கள். அதற்கு முன் நடக்கப் போகின்ற பெரிய பெரிய நிகழ்வு களையும் கூறிய பின், ஸஹாபாக்களைப் பார்த்து கூறினார்கள். 'யாராவது ஏதாவது கேட்க விரும்பினால் இப்போது என்னிடம் கேளுங்கள். அல்லாஹ்வின் மீது ஆணையாக! நீங்கள் கேட்பவற்றை இந்த மிம்பரிலிருந்து கொண்டே பதில் கூறாமல் விடமாட்டேன்' என்று கூறியபின்,

ஒருவர் எழுந்து ‘மறுமையில் நான் தங்கும் இடம் எது?’ என்று கேட்டார். ‘நரகம்’ என்று பதில் கூறினார்கள். பின், அடுத்து அப்துல்லாஹ் இப்னு குதைஃபா எழுந்து ‘எனது தந்தை யார்?’ என்று கேட்டார். ‘உமது தந்தை குதைஃபா’ என்று பதில் சொன்னார்கள். பின்னர் கேளுங்கள்! கேளுங்கள்! என்று கூறிக் கொண்டேயிருந்தார்கள்.

*நூல்: புகாரி ஜரீஃப்,*

*பாடம்: குர்ஆன் ஸுன்னாவை பின்பற்றல்.*

சொர்க்கம் நரகம் என்பதும், சீதேவி, மூதேவி என்பதும் மறைவான முக்கியமான ஐந்து விடயங்களைச் சேர்ந்தவையாகும். இவ்வாறு தான் ஒருவரின் தந்தை யார்? என்பதும் மிகவும் இரகசியமான விடயமாகும். இதனை தாயைத் தவிர வேறு எவரும் அறிய முடியாது. ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் பார்வையின் விசாலம் இருட்டிலும், தூரத்திலும், அண்மையிலும், இம்மையிலும், மறுமையிலும் மற்றும் அனைத்து இடங்களிலும் பரந்து இருக்கிறது. என்பதை மேற்கண்ட விளக்கங்கள் கூறுகின்றன என்பதை கவனத்தில் கொள்க!

٤١ – قال يوم خيبر لأعطين هذه الراية غدا رجلا يفتح الله على يديه يحب الله ورسوله
:مشكوة ، باب مناقب على

14) ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள். நாளை யுத்தத்தின் கொடியை ஒருவரிடம் கொடுப்பேன். அவர் அல்லாஹ்வையும் அவனுடைய தூதரையும் நேசிக்கின்றார். அவர் மூலமே வெற்றி கிடைக்கும்.

*நூல்: மிஷ்காத்.*

٥١ - عرضت علي اعمال امتى حسنها وسيّها فوجدت فى محاسن اعمالها الاذى يماط عن الطريق :
مشكوة , باب المساجد

15) எனது உம்மத்தின் அமல்களில் நல்லதும், தீயதும் எனக்கு

எடுத்துக் காட்டப்படுகின்றன. மற்றவர்களுக்கு தீங்கு செய்யக் கூடியதை அகற்றிப் போடுவதை அவர்களின் நல்ல செயல்களாகக் காண்கின்றேன்.

*ஆதாரம்: மிஷ்காத், பாடம்: பள்ளிவாசல்.*

٦١ - قال رسول الله صلى الله عليه وسلم هذا مصرعى فلان يضع يده على الارض ههنا ههنا قال فما مات احدهم عن موضع يد رسول الله صلى الله عليه وسلم :مسلم

16) பத்று யுத்தக் களத்தில் ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் சில இடங்களை அடையாளப்படுத்தி இன்னின்ன இடங்களில்தான் (இன்னின்ன நபர்கள்) கொல்லப்படுவார்கள் என்று கூறினார்கள். யுத்தம் முடிந்த பின் ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் அடையாளமிட்ட அதே இடத்தில் ஒரு நூல் கூட பிசகாமல் குறைஷித் தலைவர்கள் கொலை செய்யப்பட்டுக் கிடந்தனர்.

*நூல் : முஸ்லிம், பாடம்: பத்று யுத்தம்.*

٧١ - فقال رجل تاالله ان رأيت كاليوم ذئب يتكلم فقال الذءب اعجب من هذا رجل فى النحلات بين الحرتين يخبركم بما مضى وما هو كاىٔن بعدكم :مشكوة ، باب المعجزات

17) இன்று ஓநாய் பேசியது போன்று ஒரு நாளும் நான் கண்டதில்லை என்று ஒரு வேட்டைக்காரர் கூறினார் இதைக் கேட்ட ஓநாய் இதை விட ஆச்சரியமான ஒன்று இருக்கிறது. ஈச்சம் தோப்பின் இரு வெளிகளுக்கு மத்தியில் கடந்த கால, எதிர்கால விடயங்களை எல்லாம் ஒருவர் கூறுகிறார்! என்று வேட்டைக்காரனை பார்த்து ஓநாய் கூறியது.

٨١ - ورد فى الحديث فى التفسير الخازن تحت اية "ما كان ليذر المؤمنين على ما انتم عليه قال رسول الله صلى الله عليه وسلم عرضت علي فى صورها فى الطين كما عرضت على آدم اعلمت من

يؤمن بي ومن يكفر بي فبلغ ذلك المنافقين قالوا استهزاء زعم محمد انه يعلم من يؤمن به ومن يكفر ممن لم يخلق بعد ونحن معه وما يعرفنا فبلغ ذلك لرسول الله صلى الله عليه وسلم فقام على المنبر فحمد الله واثنى عليه ثم قال ما بال اقوام عطنوا فى علمي لا سألوني عن شئ فيما بينكم وبين الساعة الا انبأتكم به

18) (முனாஃபிக்குகளான) "தீயவர்களை பிரித்தறிவிக்கும் வரை நீங்கள் எதன் மீது இருக்கிறீர்களோ அதன் மீது முஃமின்களை விட்டு வைக்கின்றவனல்லன்." என்ற திருவசனத்தின் விளக்கத்தில், தஃப்ஸீர் காஸினில் பின் வரும் ஹதீஸ் இடம் பெறுகின்றது.

ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் கூறினார்கள். களிமண்ணால் செய்த சிலைகள் போன்று நபி ஆதம் அலைஹிஸ்ஸலாம் அவர்களுக்கு எடுத்துக் காட்டப்பட்டது போன்று எனக்கும் எடுத்துக் காட்டப்பட்டன.

இச்செய்தி முனாஃபிக்குகளின் காதில் விழுந்ததும் பின் வருமாறு தங்களுக்குள் பேசிக் கொண்டனர். மக்கள் பிறப்பதற்கு முன்பே யார்? யார்? காஃபிர் என்பது முஹம்மது அவர்களுக்கு தெரியுமாமே! ஆனால், நாமும் அவருடன் அவர் மத்தியில் தான் இருக்கிறோம். நம்மை அவரால் தெரிந்து கொள்ள முடியவில்லையே! என்று கிண்டலாக பேசிக் கொண்டனர்.

இச்செய்தி ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கு தெரியவந்தபோது, மிம்பர் மேடையில் ஏறி நின்று அல்லாஹ்வை புகழ்ந்து துதித்த பின், பின் வருமாறு கூறினார்கள். 'எனது (மறைவான) அறிவில் குறை காணுகின்ற சில கூட்டத்தினருக்கு என்ன நேர்ந்திருக்கிறது? கியாமத் நாள் வரையிலும் உள்ளவற்றில் நீங்கள் எதைக் கேட்டாலும் அதற்குரிய விளக்கத்தை இதே இடத்தில் இருந்து உங்களுக்கு கூறுவேன். '

மேற் கண்ட ஹதீதிலிருந்து இரண்டு விடயங்கள் தெரியவருகின்றன.

1) ரஸூலுல்லாஹ் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் அறிவில் குறை காண்பது முனாஃபிக்குகளின் குணமாகும்.

2) கியாமத்து நாள் வரை அனைத்து விடயங்களும் ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் அறிவில் உள்ளன.

தஜ்ஜாலோடு போர் புரிபவர்களின் பெயர்களையும், அவர்களின் தந்தை மூதாதையர்களின் பெயர்களையும், அவர்களின் குதிரைகளையும் நான் அறிவேன். பூமியில் உள்ள சவாரிகளில் மிகச் சிறந்தது அல்லது பூமியில் உள்ள குதிரைகளில் மிகச் சிறந்த குதிரைகள் அவையாகும்.

*நூல்: முஸ்லிம், மிஷ்காத், பாடம் குழப்பங்கள்.*

அன்னை ஆயிஷா ஸித்தீக்கா ரலியல்லாஹு தஆலா அன்ஹா. ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களைப் பார்த்து. யாரஸூலல்லாஹ்.! நட்சத்திரங்களைப் போன்று நன்மை செய்யக் கூடிய மனிதர் யாராவது இருக்கிறார்களா? என்று கேட்டதற்கு, ஆம்! இருக்கிறார். அவர் உமர், என்றார்கள்.

*ஆதாரம்: மிஷ்காத், பாடம் அபூபக்கர் உமர் மனாகிப்.*

மறுமை நாள் வரையிலுமான அனைத்து மனிதர்களின் வெளிப் படையான அனைத்து செயல்களும் ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கு தெரியும். வானத்தில் மின்னும் தாரகைகளில் வெளியானது, மறைந்தது ஆன அனைத்தையும் பற்றிய அறிவும் நபிகள் நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வசல்ல மவர்களுக்கு உண்டு என்பதும் இதன் மூலம் தெரிய வருகின்றது.

விஞ்ஞானம் உச்சத்தை தொட்டு இருக்கும் இக்காலத்தில் கூட நட்சத்திரங்கள் அனைத்தையும் கண்டறியும் கருவிகள் இதுவரை கண்டுபிடிக்கவில்லை.

விஞ்ஞானிகளுக்கு இது பற்றிய அறிவும் இல்லை. ஆனால், ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் உமர் ரலியல்லாஹு அன்ஹு அவர்களின் நன்மையை விண்ணகத்து விண் மீன்களுக்கு ஒப்பிட்டு கூறுவதாயின், இரண்டையும் நன்கு அறிந்தவரால் தான் இப்படிக் கூறுவது சாத்தியமாகும்.

இதுவரை நாம் முன்வைத்த ஹதீஸ்களைத் தவிர்த்து ஏராளமான இன்னும் பல ஹதீதுகள் இருக்கின்றன. விரிவஞ்சி இத்தோடு சுருக்கிக் கொள்கின்றோம்.

இதுவரை முன்வைக்கப் பட்ட ஹதீதுகளின் மூலம், பிரபஞ்சம் பெருமானாரின் உள்ளங்கையில் இருப்பது போன்று இருக்கிறது.!

அல்லாஹ் அல்லாத அனைத்துமே உலகம் தான். இவற்றுள் ஆன்ம உலகம், சட உலகம், அர்ஷு, பர்ஷு (பாதாள உலகம்.) உள்ளிட்ட யாவும் உலகம் என்பதற்குள் அடங்கும். இவை எல்லாவற்றிலும் ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் பார்வையும் அறிவும் ஆதிக்கம் செலுத்துகின்றன.

மேலும், உலகம் என்பதற்குள் "லவ்ஹுல் மஹ்ஃபூள்" என்ற பதிவேடும் உள்ளடங்கும். இதில் அனைத்து விடயங்களும் பதிவாகி இருக்கின்றன. அதுவும் ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் அறிவில் அடங்குகிறது.

ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் அனைத்து விடயங்களையும் அறிகிறார்கள்.

அதனால்தான், அப்துல்லாவின் தந்தை குதாபா என்று அடையாளப் படுத்தினார்கள். ஒருவர் எங்கே மரணிப்பார்? எந்த நிலையில் மரணிப்பார்.? என்பதும், பெண்ணின் கருவறையில் இருப்பது ஆணா? பெண்ணா? என்பதும் ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வசல்லம் அவர்களின் அறிவில் இருக்கிறது.

ஆக, ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் பார்வையில் ஒவ்வொரு அணுவின் அசைவும் மறையவில்லை என்பதை இதன் மூலம் தெரிந்து கொள்கின்றோம்.

## பிரிவு 3

## ஹதீஸ்களுக்கான ஹதீத் கலை மேதைகளின் விளக்கம்.

فيه دلالة على انه اخبر فى المجلس الواحد بجميع احوال المخلوقات من ابتداءها الى انتهاءها :فتح الباري , عيني , مرقاة

ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் ஒரே இடத்தில் இருந்து கொண்டு படைப்புகள் அனைத்தின் நிலைகளையும் ஆரம்பம் தொட்டு முடிவுரை கூறியுள்ளார்கள் என்பதை இந்த ஹதீஸ் சுட்டிக் காட்டுகிறது.

*புகாரி ஜரீஃபின் விரைவுரைகளான ஐனி,*

*இர்ஜாதுஸ்ஸாரி.*

وحاصله انه طوى له الارض وجعلها مجموعة كهيءة كف فيه مرءة ينظر الى جمعها وطواها بتقريب بعيدها الى قريبها حتى اطلعت على ما فيها مرقات شرح الشفا لملا على قارى زرقانى شرح مواهب الدنية , نسيم الرياضشرح الشفا

இந்த ஹதீஸின் சாரம் யாதெனில், ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கு பூமி சுருக்கி கொடுக்கப்பட்டுள்ளது. கையில் இருக்கும் கண்ணாடியில் பார்ப்பது போன்று அனைத்தையும் தொகுத்து கொடுக்கப்பட்டுள்ளது. பூமியில் இருப்பதை பார்ப்பதற்காக பூமியை அருகில் இருப்பது போன்று சுருக்கி கொடுக்கப்பட்டுள்ளது.

*மிஷ்காத், ஜரஹுஷ்ஷிபா முல்லா அலீ காரி,*
*சர்க்கானி ஜரஹு மவாஹிபுல்துன்யா.*

فعلمت بسبب وصول ذلك الفيض ما فى السموات والارض يعنى ما اعلمه الله مما فيهما من الملاءكة والاستجار وغيرها وهو عبارة عن سعة علمه الذى فتح الله وقال ابن حجر اي جميع الكائنات التى فى السموات بل وما فوقها كما يستفاد قصة المعراج والارض هى بمعنى الجنس وجميع ما فى الارضين السبع بل وما تحتها كما اده اخباره عليه السلام عن الثور والحوت الذي عليهما الارضين مرقات

இமாம் ஹாபிள் இப்னு ஹஜர் ரஹ்மத்துல்லாஹி அவர்கள் கூறுகின்றார்கள்.

மிஃராஜின் ஹதீதில் இருந்து விளங்குவது போல வானங்களிலும் அதற்கு மேல் உள்ள சகல படைப்புகளையும், பூமியிலுள்ள சகல படைப்புகளையும் இன்னும் ஏழு பூமிகளுக்கு கீழே இருப்பவையும்

அறிவார்கள். பூமி காளை மாட்டிற்கும், மீனுக்கும் மேல் இருப்பதாக றஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வசல்லம் அவர்கள் கூறியுள்ளார்கள்.

*மிஷ்காத்.*

எல்லா வகையான அறிவுகளும் எமக்கு வெளியாகின. அனைத்தையும் நாம் அறிவோம்.

*ஆதாரம்: அஜிஃஅத்துல் லம்ஆத்,*

*இமாம் அப்துல் ஹக், முஹத்திதுத் திஹ்லவி.*

اي اظهر وكشف لى الدنيا بحيث احطت بجميع ما فيها فانظر اليها واى ما هو كاين فيها الى يوم القيمة كانما انظر الى كفى هذه اشارة الى انه نظر حقيقة دفع به انه اريد بالنظر

எனக்கு முன்னால் உலகம் வெளிப்பட்டது. மேலும் திறக்கப்பட்டது. அனைத்தையும் சூழ்ந்து அறிந்து கொண்டேன். இந்த உலகத்தையும் கியாமத் நாள் வரை நடக்கப் போவதையும் உள்ளங்கையில் இருப்பது போன்றும் பார்க்கிறேன். இவற்றை எதார்த்தமாகவே றஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் பார்க்கின்றார்கள் என்பதைத்தான் (இந்த ஹதீஸ்) சுட்டிக்காட்டுகிறது. அறிவாலும், சிந்தனையாலும் பார்க்கின்றார்கள் என்ற வாதம் இதன் மூலம் நிராகரிக்கப்படுகிறது.

*ஆதாரம்: ஜர்க்கானி:*

*ஜறஹ் மவாஹிபுல்லதுன்னியா*

ولا شك ان الله قد اطلعه على ازيد من ذلك والقى عليه علم الاولين والاخرين ، مواهب اللدنية

ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வசல்லம் அவர்களுக்கு இதை விடவும் அதிகமாக அல்லாஹுத் தஆலா வழங்கியுள்ளான்

என்பதில் சிறிதும் சந்தேகம் இல்லை. அன்னாருக்கு முன்னோர், பின்னோர் அறிவையும் கொடுத்துள்ளான்.

*ஆதாரம் : மவாஹிபுல்லதுன்யா.*

اخبركم بما مضى اي سبق من خبر الاولين من قبلكم وما هو كائن بعدكم امن نبأالاخرين فى الدنيا ومن احوال الاجمعين فى العقبى ، مرقات

ரஸூல் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கு முன்னோரின் கடந்த கால செய்திகளையும், உங்களுக்குப் பின்னால் உள்ள அவர்களின் எதிர்கால செய்திகளையும் கூறினார்கள். மற்றும் உலகத்தின் நிலைகளையும் மறுமையின் நிலைகளையும் விளக்கினார்கள்.

*ஆதாரம்: மிஷ்காத்.*

فيه مع كونه من المعجزات دلالة على ان علمه السلام محيط بالكليات والجزئيات من الكائنات وغيرها

இந்த ஹதீஸ் ஒரு அற்புதமாக இருப்பதுடன் ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் அறிவு, உலகத்திலும், உலகம் அல்லாதவற்றிலும் இருக்கின்றவைகளின் தொகுதிகள், பகுதிகள் யாவற்றையும் சூழ்ந்துள்ளது என்பதையும் அறிவிக்கின்றது.

*ஆதாரம் : மிஷ்காத்*

மேற்கண்ட ஹதீஸ் கலை மேதைகளான முஹத்தீன்களின் விளக்கத் திலிருந்து தெரியவருவது யாதெனில், உலகத்தின் ஆதி முதல் அந்தம் வரையிலான அனைத்தையும் கையில் கண்ணாடியை வைத்துப் பார்ப்பது போன்று ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் பார்க்கிறார்கள்.

யாவற்றையும் பொதிந்துள்ள லௌஹுல் மஹ்பூழ் பலகையும் இவ்வுலகை சேர்ந்தது தான் என்பது இங்கு கவனிக்கத்தக்கது. முன்னோர், பின்னோர்களான நபிமார்கள், மலக்குகள் வலியுள்ளாக்கள். உலமாக்கள்

போன்றோரின் அறிவுகளும் அன்னாருக்கு வழங்கப்பட்டுள்ளன.

மலக்குகள் என்னும் போது அர்ஷைச் சுமப்பவர்கள், லௌஹுல் மஹ்பூழின் பாதுகாவலர்கள், விதி எழுதுவோர் உள்ளிட்ட அனைவரும் உட்படுவர். இப்படியான மலக்குகளின் அறிவு, நடந்தவை, நடக்கப் போகின்றவை உள்ளிட்ட எல்லாவற்றையும் சூழ்ந்துள்ளன.

அப்படியாயின், ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் அறிவைப் பற்றி என்னதான் கேட்க வேண்டி இருக்கிறது? பெருமானாரின் விசாலமான அறிவுக்குள், மறைவான ஐந்து விடயங்களும் உள்ளடங்கி இருக்கின்றன என்பது கவனிக்கத்தக்கது.

## பிரிவு - 4

## மறை ஞானம் பற்றிய அறிஞர்களின் சான்றுகள்.

அல்லாஹுத் தஆலா கூறுகின்றான்.

وَمَا يَنْطِقُ عَنِ الْهَوٰىٓ

***"அவன் முந்தியவன், பிந்தியவன், வெளிப்படையானவன், அந்தரங்கமானவன் ஆவான். அவன் அனைத்து பொருட்களையும் முற்றிலும் அறிந்தவன்."***

*(அல் குர்ஆன் : 57: 3).*

றஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் அனைத்து வஸ்துக்களையும் அறிவார்கள். அல்லாஹ்வின் தாத்தின் (அஹதிய்யத்தின் நிலையிலுள்ள) ஷுஊனாத் (என்ற அறிவின் பதிவு) களையும், அல்லாஹ்வின் பண்புகளின் தீர்மானங்களையும், அல்லாஹ்வின் தீர்மானங்களின் (வெளிப்பாடான) செயல்களையும், இன்னும் வெளிப்படையானதும், அந்தரங்கமானதும், முன், பின்னுள்ள

அனைத்து அறிவுகளையும் பெருமானார் முஹம்மது முஸ்தஃபா ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் சூழ்ந்தறிவார்கள்.

*ஆதாரம்: மதாரிஷுன் நுபுவ்வத்,*

*பாகம் : 1 - (முன்னுரை).*

இதே நூலில் மேலும் கூறுகையில், நபி ஆதம் அலைஹிஸ்ஸலாம் அவர்களின் (உடல் உருவாக்கத்திலிருந்து) றூஹ் ஊதப்படும் வரையிலான அனைத்தும் றஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்குத் தெரியும். அனைத்தும் நபியவர்களுக்கு வெளிபடுத்திக் காட்டப்பட்டுள்ளன. ஆரம்பம் முதல் இறுதி வரையிலான சகலவற்றையும் அவர்கள் அறிந்திருக்க வேண்டி இப்படிக் காட்டப்பட்டது. இவற்றில் சிலதை ஸஹாபாக்களுக்கும் கூறியுள்ளார்கள்.

*ஆதாரம்: மதாரிஷுன் நுபுவ்வத்.*

*பாகம் -1, பக்கம்- 144.*

அல்லாமா ஸர்க்கானி றஹ்மத்துள்ளாஹி அலைஹி அவர்கள் கூறுகிறார்கள்.

وقد تواتر الاخبار واتفقت معانيها علي اطلاعه عليه السلام علي الغيب ولا ينافي الآية الدالة علي انه لا يعلم الغيب الا الله لان المنفي علمه عليه السلام من غير واسطة اما اطلاعه عليه باعلام الله فمحقق بقوله تعالي الا من ارتضي من رسول زرقاني علي المواهب

றஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கு "இல்முல் ஙைப்" உண்டு என்று (சந்தேகத்திற்கு இடமின்றி அதிகமானவர்களால் அறிவிப்புச் செய்யப்பட்ட) முதவாதிறான ஹதீதுகள் வந்துள்ளன. இவ்வாறு கூறுவதால்,

عٰلِمُ الْغَيْبِ فَلَا يُظْهِرُ عَلٰى غَيْبِهٖ اَحَدًا

*"அல்லாஹ்வைத் தவிர்த்து மறைவானவற்றை வேறு எவரும் அறிய மாட்டார்கள்"*

*(அல் குர்ஆன்: 72: 26).*

என்ற திருமறை வசனத்திற்கு எதிராக மாட்டாது. அல்லாஹுத் தஆலா அறிவித்துக் கொடுக்காமல் சுயமாக அறிவைத் தான் இத்திருமறை வசனம் மறுக்கின்றது என்பதைக் கவனத்தில் கொள்ளல் வேண்டும். மேற்படி திருவாசகத்தில் இறுதியில் "அல்லாஹ் பொருந்திக் கொண்ட திருத்தூதர்களைத் தவிர" என்பதிலிருந்து றஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கு மறைவான ஞானங்கள் அல்லாஹ்வால் அறிவித்துக் கொடுக்கப்பட்டுள்ளன என்பதைப் புரியலாம்.

*ஆதாரம்: ஸர்க்கானி அலல் மவாஹிப்:*

இமாம் காழி றஹ்மதுல்லாஹி அலைஹி கூறுகின்றார்கள்.

خص الله تعالي به عليه السلام بالاطلاع علي جميع مصالح الدنيا والدين ومصالح امته وما كان من الامم وما سيكون في امتهمن المثير والقطمير وعلي جميع فتون المعارف كاحوال القلب والفرائض والعبادة والحساب -الشفا

உலகியல், மார்க்கம், உம்மத் தொடர்பானவைகளில் பொருத்தமான அனைத்தையும், கடந்த கால சமுகத்தின் நிலைகளையும், தனது உம்மத்தின் அற்பத்திலும் அற்பமான விடயங்களையும், மன எழுச்சிகளையும், வர்க்கங்களின் கடமைகள், கணித சாஸ்த்திரங்கள் உள்ளிட்ட அனைத்தையும் அல்லாஹுத்த ஆலா றஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்குக் கற்று கொடுத்துள்ளான்.

*ஆதாரம்: அஷ்ஜிஃபா.*

فان من جودك الدنيا وضر تها , ومن علومك علم الوح والقلم

இம்மையும், மறுமையும் தங்களின் கொடையில் உள்ளவையே! லௌஹுலிலும், கலமிலும் உள்ளவை உங்கள் அறிவின் மிச்சமே! புர்தா ஷரீஃபுக்கு விளக்கம் எழுதிய இமாம் பாஜூரி றஹ்மத்துள்ளாஹி அலைஹி இப்பாசுரத்திற்குப் பின்வருமாறு விளக்கம் கூறுகின்றார்கள்.

فان قيل إذا كان علم اللوح والقلم بعض علومه علي السلام فما بعض الآخر اجيب بأن بعض الآخر و ما اخبره الله تعالي من احوال الآخرة اجيب بأن بعض الآخر و ما اخبره الله تعالي من احوال الآخرة لان العلم انما القلم انما كتب في اللوح ما هو كائن الي يوم القيمة شرح قصيدة البردة ابراهيم باجوري

லௌஹுல் மஹ்பூழிலும், கலமிலும் உள்ளவை றஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் அறிவின் ஒரு பகுதி என்றால், மறு பகுதி எது? என்று ஒரு கேள்வி எழுப்பப்பட்டால், மறு பகுதி மறு உலகத்தின் நிலைகள் பற்றியது என்று பதில் கூறப்படும். லௌஹிலும், கலமிலும் உள்ளவை இறுதி நாள் வரையிலுமுள்ளவை தான் இருக்கின்றன.

*ஆதாரம்: பாஷூரி. அல்லாமா முல்லா அலி காரி றஹ்மத்துள்ளாஹி அலைஹி கூறுகின்றார்கள்.*

قال ملا علي قارب رحمه الله وكون علومهما من علومه عليه السلام ان علومه تتنوع الي الكليات والجزئيات وحقائق ومعارف وعوارف تتعلق بالذات والصفات وعلومهما من علومه يكون ما يكون نهرا من بحور علمه وحرفا من سطور من سطور علمه حد العقود : شرح قصيدة البردة

கலம், மற்றும் லௌஹுல் மஹ்பூழ் ஏட்டின் அறிவு ஞானம் றஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் அறிவின் ஒரு பகுதி என்பதற்கான காரணம், றஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் அறிவு வகைகள்

மொத்தமான தொகுப்புக்கள், பகுதிகள், எதார்த்தம் (ஹகாயிக்கள்), மஃரிபத்துகள் ஒன்று போல் வகைகளாக உள்ளன.

மஃரிபத்தின் ஞானம் என்பது, அல்லாஹ்வின் "தாத்" உள்ளமை, "ஸிபாஃத்"பண்புகள் தொடர்பானவையாகும். லௌஹுல் மஹ்பூழ், மற்றும் கலமிலிருக்கும் அறிவுகள் றஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் அறிவுக் கடலிலிருந்து ஓடும் ஒரு கிளை ஆறு போன்றதாகும். அன்னாரின் அறிவின் மொத்த வரிகளில் ஒரு வரியைப் போன்றதாகும்.

"எந்தப் பசுமையானதும், எந்தக் காய்ந்ததும் பகிரங்கமான பதிவேட்டில் குறிப்பிடாமலில்லை." என்ற திருமறை வசனத்தில் குறிப்பிடப்படும் அறிவுகள் அனைத்தும் றஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி அவர்களின் அறிவுக் கடலில் ஒரு துளிதான்.

நடந்தவைகளையும், நடக்கப் போகின்றவைகளையும் தொகுத்துப் பார்த்தால் றஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் மொத்த அறிவில் ஒரு துளிதான் என்பது ஐத்திற்கு இடமில்லாமல் நிரூபணமாகி விட்டது.

இமாம் பூஸரி றஹ்மதுல்லாஹி அலைஹி பாடுகின்றார்கள்.

وسع العالمين علما وحكما , فهو بحر لم تعيها الاعباء

அகிலத்தாரை அறிவாலும், பண்பாடும் சூழ்ந்தார்கள். அன்னார் நீந்து பவர்கள் கரை காணாத கடலாவார்கள்.

ஷைகு ஸுலைமான் ஜமல் றஹ்மதுல்லாஹி அலைஹி அவர்கள் தங்களது "புதுஹாத்துல் அஹ்மதி" என்று மேற்கண்ட பாடலுக்கு பின் வருமாறு விளக்கம் கூறுகின்றார்கள்.

اي وسع علمه علوم العلمين الانس والجن والملائكة لان تعالي اطلعه علي العالم كله فعلم علم الاومليت والاخرين وما كانة وما يكون وحسبك عليه علم القرأن وقد قال الله تعالي ما فرطنا في الكتب من شئ فتوحات الاحمدي

மனிதர்கள், ஜின்கள், மலக்குகள் என்று அகிலத்தார் அனைவரிலும்

அன்னாரின் அறிவு விரிந்துள்ளது. ஏனெனில், அகிலம் அனைத்தையும் அன்னாருக்கு அறிவித்துக் கொடுத்துள்ளான். அதனால், முன்னோர், பின்னோர் உள்ளிட்ட அனைவரிலும் நடந்தவை நடக்கப்போவது அனைத்தையும் கற்றுக் கொடுத்துள்ளான். "இந்த வேதத்தில் நாம் எனதயும் கூறாமலில்லை" என்ற திருமறை வசனமும் அன்னாரின் விசாலமான அறிவுக்குத் தக்க சான்றாகும்.

*ஆதாரம்: புதுஹாத்துல் அஹ்மதி.*

இமாம் இப்னு ஹஜர் மக்கி றஹ்மதுள்ளாஹி அலைஹி கூறுகின்றார்கள்.

لأن الله تعالي اطلعه علي العالم فعلم الاومليت والاخرين وما كان وما يكون

முன்னோர் பின்னோர் அனைவரினதும் அறிவுகள் அனைத்தையும் அல்லாஹுத்தஆலா றஸூலுல்லாஹி ஸல்லலாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்குக் கற்றுக்கொடுத்துள்ளான். அதனால், நடந்தவை, நடக்கப் போவது உள்ளிட்ட அனைத்தையும் றஸூலுல்லாஹி ஸல்லலாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் அறிவார்கள்.

*ஆதாரம், அஃப்ழலுல் குறா.*

மேற்கண்ட சொற்றொடர்கள் மூலம் றஸூலுல்லாஹி ஸல்லலாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கு ஹளரத் நபி ஆதம் அலைஹிஸ்ஸலாம், மலக்குகள், மலக்குல் மௌத், இப்லீஸ் உள்ளிட்ட அகிலம் வாழ் அனைவரினதும் அறிவுகள் வழங்கப்பட்டுள்ளன. என்பது தெரிய வந்துள்ளது. மலக்குல் மௌத்திற்கும் இப்லீஸுக்கும் மறைவான ஞானம் உண்டு என்று தேவ்பந்திகளும் ஒப்புக் கொள்கின்றனர்.

இமாம் பூஸரி றஹ்மதுள்ளாஹி அலைஹி கூறுகின்றார்கள்.

وكلهم من رسول الله ملتمس , غرفا من البحر او رشفا من الديم

அல்லாஹ்வின் திருத் தூதரிடமிருந்தே அனைவரும் (அறிவைப்)

பெறுகின்றனர். (அவ்வறிவு) கடலில் ஒரு துளி அல்லது ஒரு மழைத்துளி போன்றதாகும்.

அல்லாமா கர்பூதி றஹ்மதுள்ளாஹி அலைஹி இப்பாடலுக்கு பின்வரும் விளக்கத்தைக் கூறுகின்றார்கள்.

ان جميع الانبياء كل واحد منهم طلبوا واخذوا العلم من علمه عليه السلام الذي كالبحر في الساعة والكرم من كرمه عليه السلام الذي هو كالدسم لأنه عليه السلام مفيض وهم مستفاضون لأنه تعالي خلق ابتدأ روحه عليه السلام ووضع فيه علوم الانبياء وعلم ما كان وما يكون ثم خلقهم فاخذوا علومهم منه عليه السلام

றஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் என்ற அறிவுக் கடலிலிருந்துதான் சகல நபிமார்களும் அறிவைப் பெறுகின்றனர்.

மழை போன்ற அன்னாரின் கொடையிலிருந்து தான் அவர் (நபிமார்)கள் அனைவருமே கொடையைப் பெற்றுள்ளனர். காரணம் றஸூலுல்லாஹி ஸல்லலாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் அருளைப் பொழிபவர் களாகும். நபிமார்கள் அருளைப் பெறுபவர்களாகும். அல்லாஹுத் தஆலா முதன் முதலில் றஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்ளின் றூஹைத் தான் படைத்தான்.

பின்னர் நபிமார்களின் அறிவுகளையும், நடந்தவை, நடப்பவை பற்றிய அறிவுகளையும் அன்னாரின் றூஹிலே வைத்தான். அதனால் நபிமார்கள் அனைவரும் அன்னாரிடமிருந்தே அறிவுகளைப் பெற்றுக் கொள்கின்றர்.

ஹாபிழ் அஹ்மத் இப்னு முபாரக் றஹ்மதுள்ளாஹி அலைஹி கூறு கின்றார்கள்.

وعندنا يعلم عليه الصلاة والسلام من العرس ويطلع علي ما فيهما ما فوقه احد وهذه العلوم كلها بالنسبة إليه عليه السلام كالف من ستين حزبا هي القرأن العزيز

றஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் அர்ஷி"லிருந்து "பர்ஷு" வரையிலுமான அனைத்தையும் அறிவார்கள்.

அவர்களுக்கு மேலால் வேறு எதுவும் கிடையாது. றஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் அனைத்து அறிவு ஞானங்களும் ஆயிரத்தில் திருக்குர்ஆனிலுள்ள அறுபது பாகங்கள் போன்றுள்ளது என்பதுதான் எங்களிடத்திலிருக்கின்ற தகவலாகும்.

*ஆதாரம்: அல்இப்ரீஸ். பக்கம்: 200,*

இமாம் கஸ்தலானி றஹ்மதுள்ளாஹி அலைஹி கூறுகின்றார்கள்.

النبوة مأخوذة من النبأ بمعني الخبر اي اطلعه الله علي الغيب فيما اخبر به عليه السلام من الغيوب

"நுபுவ்வத்" என்பது "நபஉன்" என்ற வேர்ச் சொல்லிலிருந்து வந்ததாகும். இதன் பொருள் தகவல். அதாவது அல்லாஹுத் தஆலா அன்னாருக்கு மறைவான செய்தி (தகவல்)களைக் கூறியுள்ளான்.

*ஆதாரம்: மவாஹிபுல் லதுன்னியா,*

*பாகம், 2, பக்கம்,192.*

மேலும் அதே பக்கத்தில் எழுதுகின்றார்கள்.

لا شك أن الله تعالي قد اطلع علي ازيد من ذلك والقي عليه علم الاومليت والاخرين

அல்லாஹுத் தஆலா இதை விடவும் அதிகமான (ஞானத்)தை வழங்கியுள்ளான். இன்னும் முன்னோர், பின்னோக்கிச் அறிவையும் வழங்கியுள்ளான் என்பதில் எதுவித சந்தேகமும் கிடையாது. ஹளறத் முகத்தில் அல்பதானி றஹ்மதுள்ளாஹி அலைஹி தனது "மக்தூபாத்" என்ற நூலில் பின் வருமாறு எழுதுகின்றார்கள். அல்லாஹ்வுக்கு சொந்தமான ஞானங்களை அவனுக்குச் சொந்தமான றஸூல்மார்களுக்கு எடுத்துக் காட்டியுள்ளான்.

*மக்தூபாத்: பாகம்-: 1, பக்கம்: 310.*

ஷாஹ் அப்துல் ஹக் முஹத்திதுத் திஹ்லவி றஹ்மதுள்ளாஹி அலைஹி கூறுகின்றார்கள்.

றஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கு அல்லாஹ்வின் அனைத்து ஞானங்களும் அறிவித்துக் கொடுக்கப் பட்டுள்ளன என்று சில உலமாக்களின் பேச்சில் கேட்க முடிகின்றது சில ஆரிஃபீன்களும் ஏதோ சில நூற்களிலும் எழுதி வைத்துள்ளனர். இக்கூற்று வெளிப்படையான அநேகமான ஆதாரங்களுக்கு எதிராக உள்ளது. இவ்வாறு கூறியவர்கள் இதற்கு என்ன விளக்கத்தைக் கொண்டிருந்தனர் என்பது நமக்குத் தெரியாது.

*ஆதாரம்: மதாரிஷுன் நுபுவ்வத்.*

இக்கூற்றை இங்கு குறிப்பிட்டதன் நோக்கம் யாதெனில், றஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் அறிவை அல்லாஹ்வின் அறிவுக்குச் சமப்படுத்தி சிலர் கூறியுள்ளனர்.

இவ்வாறு கூறியவர்கள் அல்லாஹ்வின் அறிவை சுயமானது என்றும், றஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் அறிவு அல்லாஹ்வால் வழங்கப்பட்டது என்று வேறுபடுத்தி சமத்துவத்தை நீக்கி விடுகின்றனர்.

இவ்வாறு கூறியவர்களை ஷைகு அப்துல் ஹக் முஹத்திதுத் திஹ்லவி றஹ்மதுள்ளாஹி அலைஹி அவர்கள் "முஷ்ரிக்" என்று குறிப்பிடவில்லை.

மாறாக "ஆரிப்பு" என்று அடை மொழியிட்டிருப்பதிலிருந்து றஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கு மறைவான ஞானம் இருக்கிறது என்று நம்புவது "ஷிர்க்" இல்லை என்பது தெளிவாகின்றது.

மீர் ஷாஹித் அவர்கள் தங்களது "றிஸாலா" என்ற நூலின் முன்னுரையில் கூறுகிறார்கள்.

كان صوادف التصديقات بطبأ ئعها متوجهة الي حضرته الاقدس وحقائق التصورات بانفسها مائلة الي جنابه المقدس فروحه المعلي مركز المعقولات تصوراتها وتصديقاته ونفسه العليا منبع العقليات نظرياتها وفطرياتها

மேற்கண்ட நூலின் விரிவுரை நூலான "லிவாஉல் ஹுதா" என்ற நூலில் ஆசிரியர் குலாம் யஹ்யா என்பவர் மேற்படி சொற்றொடருக்குக் கீழ் பின் வருமாறு எழுதுகின்றார்கள்.

فذاته عليه السلام جامع بين جميع أنحاء العلوم

றஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் அனைத்து வகையான ஞானங்களின் மொத்தமாக இருக்கின்றார்கள்.

ஸுப்ஹானல்லாஹ்! தர்க்கவாதிகளான அறிஞர்களும் நபிகள் கோமான் முஹம்மது முஸ்தஃபா ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் மறை ஞானத்தை அங்கீகரித்திருக்கும் புதுமையைப் பாரீர்!

மௌலானா பஹ்றுல் உலூம் அப்துல் அலி லக்னவி றஹ்மதுள்ளாஹி அலைஹி அவர்கள் "மீர் ஸாஹித்" என்ற றிஸாலாவின் ஓரக் குறிப்பின் முன்னுரையில் இவ்வாறு கூறுகின்றார்கள்.

علمه علوما بعضها ما احتوي عليه القلم التعليم وما استطاع علي احاطتها اللوح الاوفي لم بلد الظهر مثله من الاول ولا بلد الي الأبد فليس له ممن في السموات والأرض كفوا احد

றஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கு விதி எழுதும் எழுதுகோலில் இல்லாத ஞானத்தைக் கற்றுக் கொடுத்தான். அவையனைத்தையும் சூழ்ந்து கொள்ளும் ஆற்றல் லௌஹுல் மஹ்பூழுக்கு கிடையாது.

அன்னாரை ஒத்த ஒருவர் அவர்களின் சமகாலத்தில் பிறக்க வில்லை. ஆதி தொடக்கம் அந்தம் வரை பிறக்கவுமில்லை. பிறக்கப் போவதுமில்லை. விண்ணிலும், மண்ணிலும் அன்னாருக்கு நிகரானவர் எவருமில்லை.

அல்லாமா ஷன்வாயி அவர்கள் " ஜம்உன் நிஹாயா" என்ற நூலில் கூறுகின்றார்கள்.

قد ورد أن الله تعالي لم يخرج النبي عليه السلام حتي اطلعه علي كل شيئ

நபிகள் திலகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கு அனைத்து வஸ்த்துக்களின் சாதனங்களையும் அறிவித்துக் கொடுத்தே தவிர அவர்களை உலகத்தில் வெளியாக்கவில்லை.

"அகாயிதுன் நஸபி " என்ற நூலில் பின் வருமாறு எழுதப்பட்டுள்ளது.

بالجملة العلم بالغيب أمر تفرد به الله تعالي لا سبيل إليه للعباد الا باعلام منه او الهام بطريقة المعجزات او الكرامة

சுருக்கமாகக் கூறுவதாயின், மறைவான விடயங்களை அறிதல் என்பது அல்லாஹ்வுக்கு மட்டும் சொந்தமானதுதான். அடியார்கள் அதை எவ்வழியிலும் அடைய முடியாது. ஆனால் முஃஜிஸாத், கறாமத், இல்ஹாம் என்ற வழிகள் மூலம் அதைப் பெற முடியும்.

*(ஜறஹு அகாயிதுன் நஸபி. பக்கம், 175).*

துர்ருல் முக்தார் என்ற நூலில் ஹஜ்ஜுடைய பாடத்தின் ஆரம்பத்தில் பின் வருமாறு வருகின்றது.

فرض الحج سنة تسع ونما اخره عليه السلام لعشر لعدذى مع علمه ببقاء حياته ليكمل التبليغ

ஹஜ் ஹிஜ்ரி ஒன்பதில் (சரியான கூற்றின்படி ஹிஜ்ரி 6ல்) கடமையானது. றஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் ஹிஜ்ரி பத்து வரை ஹஜ் செய்வதைப் பிற்படுத்தியதற்கான காரணம் அன்னாரின் பிரச்சாரப் பணி நிறைவடைய வேண்டும் என்பதுடன், அன்னாரின் ஆயுள் காலம் இன்னும் இருக்கிறது என்பதை அறிந்திருந்ததால் ஆகும்.

*துர்ருல் முக்தார்.*

மரணம் எப்போது வரும் என்பது அல்லாஹ்வுக்கு மட்டும் சொந்தமான மறைவான ஐந்து விடயங்களில் ஒன்றாகும்.

ஹிஜ்ரி 10க்கு முன் தனக்கு வஃபாத் நிகழாது என்பதை நன்கு அறிந்திருந்ததால் தான் ஹஜ் செய்வதைத் தவிர்த்தார்கள். இல்லையேல் ஹஜ் கடமையானதுமே ஹஜ் செய்வது கடமையாகும். காரணம் எப்போது மரணம் வரும் என்பது யாருக்கும் தெரியாது.

قال الأمام خربوتي رحمه الله في شرح قصيدة البردة تحت قصيدة " وواقفون لدي عند حدهم " وفي حديث يروي عن معاويةانه كان يكتب بين يديه عليه السلام فقغل له الق الدولة وحرف القلم واقم الباء وفرق السين ولا تعور الميم مع انه عليه السلام لم يكتب ولم يقرأمن كتاب الاولين

ஹளறத் முஆவியா றழியல்லாஹு அன்ஹு அறிவிக்கின்றார்கள். (இவர்கள் றஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கு முன்னால் வஹியை எழுதிக் கொண்டிருந்தவர்களாவார்கள்.) றஸூலுல்லாஹி ஸல்லலாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள்.

மைக்கூட்டை இப்படி வையுங்கள். "பே" என்ற எழுத்தை நீட்டுங்கள். "மீனில்" வேறுபாட்டைக் காட்டுங்கள். "மீமை" நீண்ட வேண்டாம். இத்தனைக்கும் றஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கு எழுதப்படிக்கத் தெரியாது, முன் வேதங்களை அவர்கள் படித்ததுமில்லை.

*இமாம் கர்பூதி, புர்தா ஜரீஃபின் விரிவுரை,*

ورد في روح البيان تحت اية ولا تخطه بيمينك "كان عليه السلام يعلم الخطوط ويخبر عنها : تفسير روح البيان

(நபியே!) இதற்கு முன் எந்த வேதத்தையும் நீர் ஓதிக் கொண்டிருந்தவருமல்லர். உம்முடைய வலது கரத்தால் அதனை நீர் எழுதியவருமல்லர்.

(அல் குர்ஆன்: 29: 48) என்ற திருவசனத்திற்கு அடியில் எழுதுகின்றார்கள். றஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள்

எழுத்துக்க(ளின் வரி வடிவங்க)ளை அறிந்திருந்தார்கள். அது பற்றிய விளக்கத்தையும் கூறியிருக்கின்றார்கள்.

*தஃப்ஸீர்: றூஹுல் பயான்.*

றஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் எழுத்துக் கலையை நன்கு அறிந்திருந்தார்கள் என்பது இதிலிருந்து தெரிகிறது. இதன் முழுமையான விளக்கம் நமது "ஷஃனே ஹபீபுர் றஹ்மான்" என்ற நூலில் பார்க்கலாம்.

(மிகச்சரியான கூற்றின் படி றஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கு எழுதத் தெரியாது).

*(தஃப்ஸீர் நஸபி)*

பத்று யுத்தத்தில் பிடிபட்ட கைதிகளைப் பற்றி கூறுகையில் அல்ஆரிஃபு பில்லாஹ் மௌலானா ஜலாலுத்தீன் றூமி றஹ்மதுல்லாஹி அலைஹி கூறுகின்றார்கள்.

றஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள்.

ஆதமும், ஹவ்வாவும் பிறக்க முன்பிருந்தே உலகத்தை நாம் பார்த்து வருகின்றோம். காஃபிரான கைதிகளே! ஆன்ம உலகில் வாக்குறுதி எடுக்கும் வேளையில் உங்களை முஃமினாகவும், தொழுகிறவர்களாகவுமே கண்டோம். அதனால்தான் உங்களைக் கைது செய்தோம். அதனால் நீங்கள் ஈமான் கொள்ளுங்கள்.

தூண்கள் இன்றி வானத்தைப் படைக்க முன்பே அந்த அண்ட வெளியை நாம் பார்த்துள்ளோம். நாம் பார்த்ததை விடமேலதிக அதிகரிப்பு எதுவும் இல்லை. நபிமார்கள், மலக்குகள் உள்ளிட்டவர்களின் அறிவை விட அதிகமான அறிவை றஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கு அல்லாஹுத் தஆலா வழங்கியுள்ளான் என்பதையும், விதி எழுதும் கலம், லௌஹுல் மஹ்பூழ் உள்ளிட்டவை யிலிருக்கும் அறிவுகள் அனைத்தும் றஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் அறிவுக் கடலிலிருந்து ஒரு துளிதான் என்பதையும் மேற்கண்ட அறிஞர்களின் சொற்றொடர்களின் மூலம் நன்கு புரிய முடிகின்றது. அடுத்து மறுப்பாளர்களின் ஆதாரங்கள்.

# பிரிவு - 5

## மறுப்பாளர்களின் ஆதாரங்கள்.

றஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கு "இல்முல் ஙைப்" என்ற மறை ஞானம் உண்டு என்பதற்கு இதுவரை மறை ஞானத்தை ஆதரிக்கின்றவர்களின் ஆதாரங்களை முன்வைத்தோம். இப்போது றஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கு "இல்முல் ஙைப்" இல்லை என்று கூறுகின்ற மறுப்பாளர்கள் முன் வைக்கின்ற ஆதாரங்களை இப்போது நோக்குவோம்.

தேவ்பந்திகளின் உயர் குருபீடம் ஹாஜி இம்தாதுல்லாஹ் கூறுகின்றார்.

"நபிமார்கள், வலிமார்களுக்கு "இல்முல் ஙைப்" என்ற மறை ஞானம் கிடையாது என்று சிலர் வாதிக்கின்றனர். நான் கூறுகின்றேன்.

சத்தியவான்களான ஞானவான்கள் அவர்களின் பார்வைகள் படும் திசையிலிருந்து மறைவான அறிவுகள் அவர்களுக்குக் கிடைக்கின்றன. எதார்த்தத்தில் இப்படியான அறிவு இருப்பது உண்மையே!,

ஹுதைபியாவில் குறைஷிகளுடன் செய்து கொண்ட உடன் படிக்கை யிலும், அன்னை ஆயிஷா றழியல்லாஹு அன்ஹா அவர்களுக்கு எதிராக வீசப்பட்ட அபாண்டத்திலும் றஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கு மறைவான அறிவு இல்லையென்று வாதிப்பது பிழையான விளக்கத்தினால் வந்த தவறான வாதமாகும்.

நபியவர்களுக்கு மறைவான அறிவு உண்டு என்ற உண்மையின் பக்கம் இவர்கள் தங்களது கவனத்தை திருப்பிக் கொள்ள வேண்டும்.

*ஆதாரம்: ஜமாயில் இம்தாதிய்யா,*

*பக்கம்: 110.*

தேவ்பந்திகளின் இமாமுல் அஃழம் றஷீத் அஹ்மத் கங்கோஹி கூறுகின்றார்.

நபிமார்களுக்கு முஷாஹதாவிலும் சரி, விழிப்பிலும் சரி மறைவான ஞானம் இருக்கின்றது.

றஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறுகிறினார்கள்.

لو تعلمون ما اعلم لضحكتم قليلا ولبكيتم كثيرا

நான் அறிந்திருப்பதை நீங்களும் அறிவீர்களாயின் குறைவாகப் சிரிப்பீர்கள். அதிகமாக அழுவீர்கள்.

மேலும் கூறினார்கள்.

آني أريد ما لا ترون

நீங்கள் பார்க்காததை நான் பார்க்கின்றேன்.

*ஆதாரம்: அன்வாறே நைபிய்யா,*
*பக்கம்: 32.*

தேவ்பந்திகளின் ஹகீமுல் உம்மத் மௌலவி அஷ்ரப் அலி தானவி கூறுகின்றார்.

றஸூல்மார்கள், வலிமார்கள் உள்ளிட்டோருக்கு எதிர்காலம் தொடர்பான மறைவான ஞானம் வழங்கப்பட்டுள்ளன என (தெளிவான ஆதாரத்துடன்) ஷரீஅத்தில் வந்துள்ளது.

ஏனெனில், அல்லாஹுத்தஆலா மறைவானதையும், எதிர்காலத்தில் நடக்கக் கூடியதையும் நன்கு அறிகின்றான். இதனால், அவனுடைய அறிவித்திருக்கும் ஒவ்வொரு படைப்பிலும் அவனது நாட்டமும், செயலும் தொடர்புபடுவதால் தான் படைப்புக்கள் வெளிவருகின்றன.

பின்னர், யார்தான் அதைத் தடுக்க முடியும்? அல்லாஹுத்தஆலா அவன் நாடியவர்களுக்கு மறைவான எதிர்காலம் தொடர்பான செய்திகளைக் கொடுக்கின்றான்.

மறைவானவற்றைப் பற்றிய அறிவு மனிதனில் இயல்பில் கிடையாது என்று தான் நாமும் கூறுகின்றோம். யாருக்காவது மறைவான அறிவை அல்லாஹுத் தஆலா வழங்கினால் அதனைத் தடுக்க யாரால் தான் முடியும்? இப்படியான அறிவை அல்லாஹுத் தஆலா இவர்களுக்கு

கொடுத்திருப்பதால்தான் இவர்கள் அதை விளங்கி அடுத்தவர்களுக்குக் கூறுகின்றார்கள்.

தங்களுக்கு மறைவான அறிவு சுயமாக இருக்கிறது என்று இவர்களுள் எவரும் வாதாடவில்லை மறைவானவற்றை சுயமாக அறிய முடியும் என்று வாதிப்பது ஷரீஅத்து முஹம்மதியாவில் தடுக்கப்பட்டவற்றில் முதன்மையான கடமையாகும். இப்படியாக வாதிப்பவர் காஃபிர் என்று தான் ஷரீஅத்தீர்ப்பளிக்கின்றது.

*ஆதாரம்: தக்மீலுல் யகீன்.*

தேவ்பந்து மத்ரஸாவின் நிறுவனர் மௌலவி காஸிம் நானோத்தவி கூறுகின்றார்.

முன்னோர்களின் அறிவும், பினனோர்களின் அறிவும் தனியானவை. இவையிரண்டும் றஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களிடம் மொத்தமாக சேர்ந்திருந்தன.

இதனால் றஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் எதார்த்தமான ஆவியாக விளங்கினார்கள். ஏனைய நபிமார்களும், வலிமார்களும் றஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களைச் சார்ந்திருந்திருந்த அறிவாளிகளாகும்.

*ஆதாரம்: தஹ்தீருன் நாஸ், பக்கம : 04,*

றஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கு முன்னோர், பின்னோரின் சகல அறிவுகளும் இருக்கின்றது. றஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கு முன்னோர், பின்னோரின் சகல அறிவுகளும் இருக்கின்றது.

முன்னோர் என்பதில் நபி ஆதம், நபி இப்றாஹீம், நபி ஹிழ்று, மலக்குல் மௌத், அர்ஷைச் சுமக்கின்ற மலக்குக லௌஹுல் மஹ்பூழின் பாதுகாவலர்கள் அலைஹி முஸ்ஸலாம் உள்ளிட்ட அனைவரும் உள்ளடங்குவார்கள்.

இதனால் இவர்கள் அனைவரது அறிவை விட அதிக அறிவு நபியவர்களுக்கு இருக்க வேண்டியது அவசியமாகும். ஹளறத் நபி ஆதம் அலைஹிஸ்ஸலாம் அவர்களின் அறிவின் விசாலத்தைப் பற்றி ஏற்கனவே நாம் குறிப்பிட்டுள்ளோம்.

## பிரிவு : 6,

## பாடம் : 1

## மறை ஞானம் பற்றிய பகுத்தறிவு விளக்கமும், வலிமார்களின் மறைஞானமும்.

றஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்ளுக்கு நடந்தவைகள், நடக்கப் போகின்றவை பற்றிய ஞானம் உண்டு என்பதை பகுத்தறிவு கூட ஏற்றுக் கொள்கின்றது. இதற்கான நியாயங்கள் வருமாறு,

1) ஹளறத் நபி ஆதம் அலைஹிஸ்ஸலாம் பூமியில் அல்லாஹ்வின் பிரதிநிதியாக இருக்கின்றார்கள் எனின், இவர்களை விட மேலான றஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் அல்லாஹ்வின் பிரதம கலீஃபா என்பது நிச்சயம். மட்டுமல்ல றஹ்மதுன் லில் ஆலமீனுமாவார்கள். ஆட்சியாளரின் பிரதிநிதியாக வருபவரிடத்தில் பின் வரும் இரண்டு சிறப்புத் தகுதிகள் இருக்க வேண்டும்.

1) அறிவு,

2) சுதந்திரம்.

பூமியில் அதியுயர் அதிகாரமிக்கவராக இருப்பது எப்படி சிறப்பான தகுதியோ அவ்வாறே அறிவும், விளக்கமும், சுதந்திரமும் முழுமையாக இருக்க வேண்டியதும் அவசியமாகும். மாவட்ட அதிகாரி (கலெக்டரு)க்கு அம்மாவட்டத்தைப் பற்றிய விளக்கமும், அறிவும் இருப்பதோடு சட்டத்தை செயற்படுத்துவதற்குரிய அதிகாரமும், சுதந்திரமும் இருத்தல் வேண்டும்.

மேற்கண்ட இரண்டு பண்புகளுமின்றி நிர்வாகத்தை அவரால் நடைமுறைப்படுத்த முடியாது. அரசர் நேரடியாக தனது அதிகாரத்தை மக்களிடம் நடைமுறைப் படுத்துவதில்லை என்பது அறிந்ததே! இவ்வாறு நபிமார்களிடம் அவர்களின் தகுதிக்கேற்ற அறிவும், அதிகாரமும், சுதந்திரமும் காணப்படும். நபி ஆதம் அலைஹிஸ்ஸலாம் அவர்களின் கிலாஃபத்தை அல்லாஹுத் தஆலா அவர்களின் அறிவின் மூலமாக நிரூபித்துள்ளான். காரணம், அவர்களின் விசாலமான அறிவுதான்

அன்னாரின் கிலபத்திற்கான அளவுகோலாக இருக்கிறது.

மலக்குகள் நபி ஆதம் அலைஹிஸ்ஸலாம் அவர்களுக்கு ஸுஜூது செய்தமை அவர்களின் சுதந்திரத்திற்கான சான்றாகும். அதாவது மலக்குகள் கூட அவர்களுக்கு தங்களின் விசுவாசத்தை வெளிப் படுத்தியுள்ளார்கள்.

அவ்வாறாயின், நபிகள் கோமான் முஹம்மது முஸ்தஃபா ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் உலக முழுவதற்கும் நபியாக விளங்கு கின்றார்கள். அர்ஷிலிருந்து பர்ஷ் வரையுள்ள பகுதிகளுக்குள் வாழுகின்ற சகலரும் அன்னாரின் உம்மத்துக்களேயாவார்கள்.

ஆதலால் இவர்கள் சகலரையும் விட அதிக விசாலமான அறிவும், அதிகூடிய செயல் திறனும், சுதந்திரமும் இருக்க வேண்டியது அவசிய மாகும். இதன் காரணமாகத் தான் நபியவர்களுக்கு அதிகமான முஃஜிஸாத் துக்களை வெளிப்படுத்திக் காட்டினான். சுட்டு விரலின் அசைவால் சந்திரனைச் பிளந்து காட்டினார்கள்.

அதே சுட்டு விரலால் மறைந்த சூரியனை மீண்டும் உதிக்க வைத்தார்கள். மேகங்கள் அன்னாருக்கு குடை பிடித்தன. அன்னாரின் கட்டளைக்கு பணிந்து செயல்பட்டன. நபியவர்களின் கட்டளைப் படி மழை பொழிந்தது. அதே கட்டளைப்படி மழை நின்றது. இவையாவும் ரப்புல் ஆலமீன் றஹ்மதுன் லில்ஆலமீனுக்கு வழங்கிய சுதந்திரமாகும்.

2) மௌலவி காஸிம் நானோத்தவி தனது தஹ்தீறுன் நாஸ் என்ற நூலில் பின் வருமாறு கூறுகின்றார்.

நபிமார்கள் அறிவால் தான் உம்மத்திலிருந்து வேறுபட்டுள்ளார்கள். நபியை விட உம்மத்துக்கள் அமலில் அதிகம் காணப்பட்டாலும் அறிவில் உம்மத்தை விட மேம்பட்டிருப்பது அவசியமாகும்.

காஸிம் நானோத்தவியின் கூற்றுப் படி, நபிமார்கள் அறிவால் உம்மத்தை விட உயர்ந்தவர்கள் என்பது தெளிவாகிறது.

நபிகள் நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் உம்மத்திற்குள் மலக்குகளும் உள்ளடங்குவார்கள் என்பதை பின் வரும் திருமறை வசனம் உறுதிப் படுத்துகின்றது.

تَبَارَكَ الَّذِي نَزَّلَ الْفُرْقَانَ عَلَىٰ عَبْدِهِ لِيَكُونَ لِلْعَالَمِينَ نَذِيرًا

*“தன் அடியார் மீது அனைத்து உலகத்தினருக்கும் அச்சமூட்டி எச்சரிக்கை செய்பவராக அவர் ஆவதற்கான (சத்தியத்தையும், அசத்தியத்தையும்) பிரித்தறிவிக்கின்ற (றப்பான)வன் பறக்கத் நிரம்பியவனாவான்.”*

*(அல் குர்ஆன் : 25: 1).*

இதன் படி மலக்குகளை விட றஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கு அதிக அறிவு இருக்க வேண்டியது அவசியமாகும். இதை யாராவது மறுப்பார்களாயின், நபிகள் கோமான் முஹம்மது முஸ்தஃபா ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் உலகத்தில் உள்ள அனைவரையும் விட எது விடயத்தில் உயர்ந்தவர்கள் என்பதை அவர்கள் குறிப்பிட வேண்டும்.

3) பல்லாண்டுகள் அறிஞரின் உறவிலிருப்பவரும் அறிஞராகின்றார். றஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் பல கோடி ஆண்டுகளுக்கு முன்பிருந்தே அல்லாஹுத்தஆலாவின் திருச்சமுகத்திலிருந்து வருகின்றார்கள். அப்படியாயின் நபியவர்களால் ஏன் பூரணமான ஆலிமாக முடியாது?

அல்லாஹுத் தஆலா கூறுகின்றான்.

لَقَدْ جَاءَكُمْ رَسُولٌ مِّنْ أَنفُسِكُمْ

*(மனிதர்களே!) உங்களிலிருந்தே ஒரு றஸூல் உங்களிடம் திட்ட வட்டமாக வந்து விட்டார்.”*

*(அல்குர்ஆன் : 9: 128).*

என்ற திருமறை வசனத்திற்குரிய விளக்கத்தில் தஃப்ஸீர் றூஹுல் பயான் ஆசிரியர் பின் வருமாறு எழுதுகின்றார்கள்.

ஹளறத் ஜிப்ரியீல் அலைஹிஸ்ஸலாம் றஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களைப் பார்த்துக் கூறினார்கள் என்றதும், அந்த தாரகை வேறுயாருமல்ல நானே தான்! என்று ஏந்தல் நபி அலைஹிஸ்ஸலாம் கூறினார்கள்

4) ஒரு மாணவரின் அறிவில் குறை இருக்க வேண்டுமாயின் அதில் நான்கு காரணங்கள் இருக்க வேண்டும்.

1. மாணவன் திறமையற்றவராக இருக்க வேண்டும். அதனால் தான் ஆசிரியரிடமிருந்து அவனால் பூரணமான அறிவைப் பெற முடியாமல் ஆகலாம்.

2. ஆசிரியர் திறமையற்றவராக இருக்க வேண்டும். அதனால் தான் மாணவனுக்கு அவரால் திறமையாகச் கற்பிக்க முடியாமல் போயிருக்கும்.

3. ஆசிரியர் மாணவனுக்கு முழுமையாகக் கற்றுக் கொடுக்காத கஞ்சனாக இருக்க வேண்டும். அல்லது இவரை விட ஆசிரியருக்கு வேறு ஒரு விருப்பமான மாணவன் இருக்க வேண்டும். அவருக்கு அதிகமாகக் கற்றுக் கொடுத்திருக்க வேண்டும்.

4. ஆசிரியர் கற்பிக்கின்ற நூல் குறைபாடுள்ளதாக இருக்க வேண்டும்.

மேற் கண்ட காரணங்கள் அல்லாத வேறு காரணங்கள் இருக்க முடியாது.

இங்கே கற்றுக் கொடுப்பவன் உலகத்தைக் படைத்துப் போஷிப்பவன். கற்கின்றவர் அல்லாஹ்வின் நேசர். கற்பிக்கப்படுகின்ற நூல் திருக் குர்ஆனும், அல்லாஹ்வின் விஷேஷமான அறிவும்! இப்போது (மனசாட்சியில் கையையை வைத்துச்) சொல்லுங்கள்.

அல்லாஹுத் தஆலா பூரணமான அறிஞன் இல்லையா ?

றஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் தகுதியான மாணவரில்லையா? றஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களை விட வேறு யாராவது அல்லாஹ்வுக்குப் பிரியமானவர்கள் இருக்கின்றார்களா ?

திருக்குர்ஆன் முழுமையானதாக இல்லையா? இவற்றில் எக்குறையும் இல்லை தான்.

உமது நெஞ்சை நாம் விசாலமாக்க வில்லையா? என்று கேட்கின்ற வல்ல நாயன் நபியவர்களுக்கு சகலத்தையும் முழுமையாகவே வழங்கியிருக்கின்றான். சகலமும் சம்பூரணமாக இருக்கையில் அறிவு மட்டும் குறைந்து போவது எப்படி ?

5. அல்லாஹுத் தஆலா லௌஹுல் மஹ்பூழ் ஏட்டில் சகலதையும் பதிந்து பாதுகாத்து வைத்திருப்பது எதற்காக? எழுதியதை மறக்காமல் நினைவில் வைத்துக் கொள்வதற்காகவா? அல்லது, அடுத்தவர் களுக்குத் தெரியப்படுத்து வதற்காகவா?

அல்லாஹுத்தஆலா மறதியை விட்டும் தூயவன். அப்படியாயின் அடுத்தவர்கள் அறிய வேண்டும் என்பதற்காகத்தான் பதித்தான் என்பதை ஏற்க வேண்டும்.

அல்லாஹ் அல்லாதவர்களில் றஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களைத் தவிர அதிக விருப்பமானவர் வேறு எவருமில்லை. ஆகவே றஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்காகவே தான் எழுதப்பட்டுள்ளன.

6. அதிக மறைவானது அல்லாஹ்வின் தாத்தாகும். ஹளறத் மூஸா அலைஹிஸ்ஸலாம் அல்லாஹ்வைப் பார்க்க விரும்பினார்கள். என்னை நீர் பார்க்க மாட்டீர் என்று அல்லாஹுத் தஆலா பதில் கூறிவிட்டான். ஆனால், றஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களை மிஃராஜ் இரவில் அவனே அழைத்து தன்னைக் காட்டினான். நபியவர்கள் புறக்கண்ணாலேயே அல்லாஹ்வைப் பார்த்தார்கள்.

இப்படியிருக்கையில் உலகமும் அதிலுள்ளவையும் நபிகள் நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கு எப்படி மறைவாக இருக்க முடியும்?

மிஃராஜ் இரவில் றஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் அல்லாஹ்வைப் பார்த்தது பற்றிய முழுமையான விளக்கம் நமது "ஷஃனே ஹபீபுர் றஹ்மான் " (மாமறை போற்றும் மாநபி அச்சில்) என்ற நமது நூலில் கூறப்பட்டுள்ளது. விரும்பியவர்கள் பார்த்துக் கொள்ளலாம்.

றஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் ஒளியாக இருந்த காரணத்தினால்தான் மிஃறாஜில் அல்லாஹ்வைப் பார்த்தார்கள்.

*ஆதாரம் : மிர்க்காத்,*

*பாடம், விதியை நம்புதல்.*

7. ஷைத்தான் உலகைச் சுற்றி வலம் வருபவன். றஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் உலகததிற்கு வழி காட்ட வந்தவர்கள். ஷைத்தான் அல்லாஹ்வின் சோதனைக்குட்பட்ட நோயாளி றஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் எக்குறையுமில்லாதவர்கள். மக்களை வழி கெடுப்பதற்காக விசாலமான அறிவை ஷைத்தானுக்கு அல்லாஹுத்தஆலா வழங்கினான்.

அதனால் உலகத்தில் உள்ள சகலரும் அவன் பார்வையிலிருந்து தப்ப முடியாது. அவன் வலையில் சிக்கி வழிகெடுவோர் யார்? வழி கெடாமல்

நல் வழியிலிருப்பவர்கள் யார்? என்பதெல்லாம் அவனுக்கு விலாவாரியாகத் தெரியும்.

இவ்வாறே மார்க்கத்தின் சகல சட்ட நுணுக்கங்களும் அவனுக்குத் தெரியும். ஒருவரை வழிகெடுப்பதற்கான சகல வழிகளையும் அத்துப் படியாக அவன் அறிந்து வைத்துள்ளான். நன்மை பயக்கும் அனைத்து வழிகளையும் அவன் அறிந்து வைத்துள்ளான். நன்மை செய்யாமல் தீமையைச் செய்ய எப்படி ஒருவரை திசை திருப்பலாம் என்ற யுக்தியும் அவனுக்குத் தெரியும்.

இப்லீஸ் அல்லாஹ்விடம் கேட்டான்.

قَالَ رَبِّ بِمَا أَغْوَيْتَنِي لَأُزَيِّنَنَّ لَهُمْ فِي الْأَرْضِ وَلَأُغْوِيَنَّهُمْ أَجْمَعِينَ إِلَّا عِبَادك مِنْهُمْ الْمُخْلَصِينَ

***"அவர்கள் அனைவரையும் நான் திண்ணமாக வழி கெடுப்பேன். என்று அவன் (இப்லீஸ்) கூறினான். அவர்களிலிருந்து மனத் தூய்மையாளர்களான உன்னுடைய அடியார்களைத் தவிர, (என்று கூறினான்)."***

*(அல்குர்ஆன் : 15: 39).*

அல்லாஹ்வின் சாபத்தைப் பெற்று மக்களை வழி கெடுக்கத் துணிந்த இப்லீஸுக்கு விசாலமான பரந்த அறிவு இருக்குமாயின், அல்லாஹுத் தஆலாவின் முழு அன்பிற்குரியவரும், உலகத்திற்கே வழிகாட்ட அல்லாஹ்வால் அனுப்பப்பட்ட றஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கு இப்லீசை விட அதிக விசாலமான அறிவு இருக்க வேண்டியது அவசியமில்லையா?

வழிகேடும் ஒருவிதமான நோய்தான். இந்த நோயால் தாக்குண்டவருக்கு பரிகாரம் செய்ய வேண்டுமாயின், நோய் பற்றிய அறிவும், அதன் அளவும் அதற்கான பரிகாரத்தின் முறையும் அதன் அளவும் முழுமையாகத் தெரிந்திருக்க வேண்டும்.

அப்போது தான் முழுமையாக வழிகாட்ட முடியும். இத்தகுதி இல்லாதவர் ஒருபோதும் வழிகாட்ட முடியாது.

வழி கெடுப்பவன் பலமாகவும், வழிகாட்டி பலவீனமாகவுமிருந்தால்

வழிகெடுப்பவனை பலமாக்கி வழிகாட்டியைப் பலவீனப்படுத்திய குற்றம் அல்லாஹ்வின் மீது வரும். இது ஒருபோதும் சாத்தியமாகாது.

8. றஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களை நபியே! (யா அய்யுஹன் நபிய்யு) என்று தான் அல்லாஹுத்தஆலா கண்ணியமாக விளித்துக் கூறியிருக்கின்றான்.

"நபி" என்ற சொல்லுக்கு தகவல் கூறுபவர் என்பது தான் பொருளாகும். இத்தகவல் மார்க்கம் தொடர்பானது என்று கருத்துக் கொண்டால் சகல மௌலவிமார்களும் "நபி" என்ற சொல்லுக்குத் தகுதியானவர்களாகி விடுவார்கள்.

அல்லது உலக வரலாறு என்று பொருள் கொண்டால் அனைத்து சரித்திர ஆசிரியர்களும், உலக நடப்புக்களை ஒலிபரப்புகின்ற வானொலி, தொலைக்காட்சி, பத்திரிக்கைகள் யாவுமே நபி என்ற சொல்லுக்குத் தகுதியாகிவிடும்.

அதனால், "நபி" என்ற சொல்லுக்கு மறைவானவற்றைக் கூறுபவர் என்பதே பொருத்தமான பொருளாகும். தகவல் தொடர்பு சாதனங்கள் செயல்படாத, தகவல் தொழில் நுட்பம் கண்டு பிடிக்காத இடங்களின் தகவல்களைக் கூறுபவர்கள் நபிமார்கள் ஆவார்கள்.

அதனால், "இல்முல் கைப்" பற்றிய வாதம் எங்கெல்லாம் வருகின்றதோ அங்கெல்லாம் றஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் பொருட்டினால் வலிமார்களுக்கும் "இல்முல் கைப்" இருக்கின்றது என்பதைப் புரிந்து கொள்ள வேண்டும்.

இவர்களுக்கான இவ்வறிவு றஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களினால் தான் கிடைக்கின்றது என்பதையும் புரிந்து கொள்ளல் வேண்டும். இவர்களுடைய அறிவும் றஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் அறிவில் ஒரு துளிதான்.

இவ்வாறு முல்லா அலி காரி றஹ்மத்துள்ளாஹி அலைஹி மிஷ்க்காத்தின் விரிவுரையான மிர்க்காத்திலும், அப்துல்லாஹ் ஸீறாஸி றஹ்மத்துள்ளாஹி அலைஹி அவர்கள் தமது கிதாபுல் அகாயித் என்ற நூலில் பின் வரும் ஒருகூற்றையும் நக்லு செய்திருக்கின்றார்கள்.

يطلع العبد علي حقائق الاشياء وتجلي له الغيب وغيب الغيب

சம்பூரணமான ஓர் அடியார் ஒவ்வொரு பொருட்களின் எதார்த்தமானதைப் பார்க்கின்றார். அவருக்கு மறைவானதற்குள் மறைவானதும் வெளியாகின்றன.

*ஆதாரம்: மிர்க்காத்.*

இதே நூலில் மற்றுமொரு நக்லையும் இவ்வாறு தருகின்றார்கள்.

العبد ينقل في الاحوال حتي يصير الي نعت الروحانية فيعلم الغيب

ஓர் அடியார் பல நிலைகளைக் கடந்து வந்து றூஹானிய்யத்தின் பண்பைப் பெறுகின்றார். அப்போது மறைவான விடயங்களை அறிகின்றார்.

*மிர்க்காத்.*

மேலும் கூறுகையில், றஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் மீது ஸலவாத் கூறுவதன் சிறப்பு என்ற பாடத்தில் பின் வருமாறு எழுதுகின்றார்கள்.

النفوس الزكية القدسية إذا تجردت عن العلائق البدنية خرجت واتصلت بالملأ الاعلي ولم يبقى له حجاب فتري الكل كالمشاهدة بنفسها او باخبار الملك لها

பரிசுத்தமான, தெளிவான மனம் உடலின் சடத்துவத் தொடர்புகளை விட்டும் நீங்கிய பின், உடலை விட்டும் வெளியேறி மேல் உலகத்தில் (உள்ள ஆன்மாக்களான மலக்குகளோடு) சேர்ந்து கொள்கின்றது. (இந்த நிலையில் தடையை ஏற்படுத்தும்) எந்த ஒரு திரையும் இருக்காது. அப்போது முன்னாலிருப்பதை கண் பார்ப்பது போன்று தன்னைக் கொண்டு அல்லது மலக்குகளின் இல்ஹாம் மூலம் பார்க்கின்றது.

*ஆதாரம் : மிர்க்காத்.*

அஷ்ஷாஹ் அப்துல் அஸீஸ் முஹத்திதுத் திஹ்லவி கத்தஸல்லாஹு ஸிர்ரஹுல் அஸீஸ் அவர்கள் தங்களது தப்ஸீர் அஸீஸியில் "ஸூறா ஜின்" என்ற பாடத்தில் இவ்வாறு எழுதுகின்றார்கள்.

லெளஹுல் மஹ்ஃபூழ் பற்றிய செய்தியைத் தெரிவதும், அதிலிருக்கும் எழுத்துக்களைப் பார்ப்பதும் சில வலியுள்ளாக்கள் மூலமாக முதவாதிறாக பரவலாக செய்திகள் வந்துள்ளன.

*தஃப்ஸீர்: அஸீஸி.*

இமாம் இப்னு ஹஜர் மக்கி றஹ்மதுல்லாஹி அலைஹி "கிதாபுல் இஃலாமிலும்", அல்லாமா ஷாமி றஹ்மத்துல்லாஹி அலைஹி அவர்கள் தனது " ஸல்லுல் ஹுஸாமி"லும் கூறுகின்றனர்.

الخواص يجوز ان يعلم الغيب في قضية او قضاء كما وقع لكثير منهم واشتهر كتاب الإعلام وسلم الحسام

சிறப்புக்குரியவர் சில தீர்ப்புக்களிலும், வழக்கு விவகாரங்களிலும் மறைவானவற்றை அறிவது சாத்தியமாகும். இவ்வாறு வலிமார்களில் அநேகருக்கு நடந்திருப்பதாக பிரபல்யமாகியுள்ளது.

*ஆதாரம்: கிதாபுல் அஃலாம், ஸல்லுல் ஹுஸாம்.*

அஷ்ஷாஹ் வலியுல்லாஹ் கத்தஸல்லாஹு ஸிர்ரஹுல் அஸீஸ் கூறுகின்றார்கள்.

ஓர்ஆரிஃபான வலியுள்ளாஹ்வின் நஃப்ஸு முழுமையாக உடல் போன்றாகி அவரது தாத் இருக்கும் இடத்தில் றூஹ் செயல்படுகின்றது. இந்நிலையில் அனைத்து உலகத்தையும் அறிவால் பார்க்கின்றது.

*ஆதாரம்: அல்கிதாபுல் குத்ஸிய்யா.*

மவாஹிபுல் லதுன்னியாவின் ஷறஹு ஸர்க்கானியில் பின் வருமாறு எழுதப்பட்டுள்ளது.

قال في لطائف المنن اطلاع العيد علي غيب من غيوب الله بدليل خبر " اتقوا فراشة المؤمن " فانه ينظر بنورالله لا يستعربه وهو مغني كنت بصره الذي يبصر به فمن الحق

بصره فالاطلاعه علي الغيب لا يستعربه , زرقاني شرح مواهب ،ج، ٧ ص،٨٢٢

ஒரு முஃமின் அல்லாஹ்வின் மறைவானவையில் சில மறைவான வற்றை அறிவது ஆச்சரியமானதல்ல! "ஒரு முஃமினின் குறிப்பறிதலை பற்றி பயந்து கொள்ளுங்கள்!. அவர் அல்லாஹ்வின் ஒளியால் பார்க்கின்றார்."என்று ஹதீஸில் வந்துள்ளது.

இதன் பொருள், அல்லாஹுத் தஆலா கூறுகின்றான். "நான் அவர் பார்க்கின்ற பார்வையாகி விட்டேன்

"இதன்படி, இந்த நல்லடியாரின் பார்வை அல்லாஹ்வின் பக்கம் சேர்க்கப்பட்டுள்ளது. அதனால், அவர் மறைவானவற்றை அறிவது ஆச்சரியமானதல்ல!

இமாம் அப்துல் வஹாப் ஷஃறானி றஹ்மதுல்லாஹி அலைஹி" யவாகீது வல் ஜவாஹிர்" என்ற நூலில் எழுதுகிறார்கள்.

للمجتهدين القدم في علوم الغيب

முஜ்தஹிதான இமாம்கள் மறைவான ஞானத்தில் பலமாகக் கால் பதித்துள்ளார்கள்.

கௌதுல் அஃழம் முஹ்யித்தீன் அப்துல் காதிர் ஜீலானி கத்தஸல்லாஹு ஸிர்ரஹுல் அஸீஸ் கூறுகின்றார்கள்.

نظرت إلي بلاد الله جميعا , كخردلة علي حكم اتصال

அல்லாஹ்வின் நகரங்கள் சகலதையும் கடுகுகள் குவிந்து கிடப்பது போன்று பார்த்துள்ளேன்.

ஷைகு அப்துல் ஹக் முஹத்திதுத் திஹ்லவி றஹ்மத்துள்ளாஹி அலைஹி, ஸுப்தத்துல் ஆதார்" என்ற நூலில் கௌதுல் அஃழம் றழியல்லாஹு அன்ஹு அவர்கள் கூறியதாக பின் வருமாறு எழுது கின்றார்கள்.

قال رضي الله يا ابطال يا أطفال هلموا وخذوا عن هذالبحر الذي لا ساحل له وعزة ربي ان السعداء والاشقياء يعرضون علي وان بوبوءة عيني في اللوح المحفوظ وأنا غائض في بحار علم الله

வீரர்களே! குழந்தைகளே!, வாருங்கள் கரைகாண முடியாத இந்த (அறிவுச்) சமுத்திரத்திலிருந்து எடுத்துக் கொள்ளுங்கள். எனது இரட்சகனின் மீது ஆணையாக! சீதேவிகளையும், மூதேவிகளையும் எமக்கு எடுத்துக் காட்டப்படுகின்றன. எனது பார்வை லௌஹுல் மஹ்ஃபூழ் ஏட்டில் பதிந்திருக்கின்றது. நான் அல்லாஹ்வின் சமுத்திரத்தில் மூழ்கி முத்தெடுப்பவனாக இருக்கின்றேன்.

அல்ஆரிஃபு பில்லாஹ் மௌலானா ஜாமி றஹ்மதுல்லாஹி அலைஹி "நபஹாத்துல் உன்ஸு" என்ற நூலில் ஹளறத் காஜா பஹாவுத்தீன் நக்ஷபந்தி கத்தஸல்லாஹு ஸிர்ரஹுல் அஸீஸ் அவர்களின் பின் வரும் ஒரு சொற்றொடரை நக்லு செய்கின்றார்கள்.

வலிமார்களின் பார்வையில் உலகம் ஓர் உணவுத் தட்டளவு போன்றுள்ளது. இல்லையில்லை, அதைவிடச் சிறிய ஒரு நகத்தைப் போன்றுள்ளது என்று நாம் கூறுகின்றோம். வலிமார்களுக்கு எப்பொருளும் மறைவதில்லை.

இமாம் அப்துல் வஹாப் ஷஃறானி றஹ்மதுல்லாஹி அலைஹி "அல்கிப்ரீதுல் அஹ்மர்" என்ற நூலில் கூறுகின்றார்கள்.

وأنا شيخنا السيد علي الخواص رضي الله تعالي عنه فسمعته يقول لا يكمل الرجل عندنا حتي يعلم حركات مريده في اتقاله في الاصلاب وهو من يوم السبت الي غستقراره في الجنة او في النار .الكبريت الاحمر

ஒரு முரீதின் முதுகுத் தண்டின் அசைவையும், ஆன்ம உலகில் வாக்குறுதி எடுத்த நாள் தொடக்கம் சொர்க்கம் அல்லது நரகம் செல்லும் வரையிலான அனைத்து விடயங்களையும் அறியாத வரை ஒருவரை பூரணமான மனிதர் என்று கூறமாட்டோம் என்று அவர்கள் கூறுவதை காதால் கேட்டுள்ளேன்.

அஷ்ஷைஷகு அஷ்ஷாஹ் வலியுல்லாஹ் கத்தஸல்லாஹுர ஸிர்ரஹுல் அஸீஸ் "ஃபுயூளுல் ஹறமைன்" என்ற நூலில் கூறுகின்றார்கள்

ثم انه ينجذب الي خير الخلق فيصير عبد الله فيتجلي له كل شيئ : فيوض الحرمين

பின்னர், ஆரிஃபான மெய்ஞானி அல்லாஹ்வின் பக்கம் ஈர்க்கப்படுவார். பின்னர் அல்லாஹ்வின் தூய அடியாராகி விடுவார். அப்போது அவருக்கு சகலதும் வெளியாகும்.

அல்லாஹுத்த ஆலா கூறுகின்றான்.

فاذا احببته فكنت سمعه الذي يسمع به وبصره الذي يبصر به ويده التي يبطش بها ورجله التي يمشي بها , مشكوة ,ج ,كتاب الدعوات-١

நான் அவனை (நல்லடியானை) நேசித்தால் அவன் கேட்கும் கேள்வியாகவும், அவன் பார்க்கும் பார்வையாகவும், அவன் விரிக்கும் கையாகவும், அவன் நடக்கும் காலாகவும் நானே ஆகிவிடுவேன்

*அறிவிப்பவர்: ஹளறத் அபூஹுறைறா றழியல்லாஹு அன்ஹு.*

*நூல்: மிஷ்காத்.*

*பாடம்: அல்லாஹ்வை திக்ரு செய்து நெருங்குதல்.*

நீங்கள் முக்கியமாகக் கவனத்தில் கொள்ள வேண்டிய விடயம் இதுவாகும்.

ஹளறத் இல்யாஸ் அலைஹிஸ்ஸலாம், ஹளறத் ஹிழ்று அலைஹிஸ் ஸலாம் ஆகிய இருவரும் இது வரை உயிருடன் இருந்து வருகின்றார்கள்.

இவ்விருவரும் இப்போதும் முஹம்மது முஸ்தஃபா ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் உம்மத்தாகவும் இருந்து வருகின்றார்கள்

ஹளறத் ஈஸா நபி அலைஹிஸ்ஸலாம் அவர்கள் மீண்டும் பூமிக்கு இறங்கிய பின்னர் அவர்களும் இந்த உம்மத்தின் ஒரு வலியுல்லாஹ்வின் அந்தஸ்த்திலேயே இருப்பார்கள். இவர்களின் அறிவின் ஆழம், உயர்

தகுதி உள்ளிட்டவற்றை ஏற்கனவே எழுதியுள்ளோம்.

இவர்களின் அறிவும் கூட இந்த உம்மத்தில் உள்ள ஒரு வலியுல்லாஹ்வின் அறிவுதான் என்பதையும் கவனத்தில் கொள்க!

## இல்முல் "ஙைப்" பற்றிய மறுப்புரைகள்.

*இப்பகுதியில் நான்கு பிரிவுகள் உள்ளன.*

**1) மறுப்பாளர்களின் திருமறை வசனங்கள்.**

**2) ஹதீஸ்கள் பற்றிய விளக்கங்கள்.**

**3) அறிஞர்கள், ஃபுகஹாக்களின் கூற்றுக்கள்**

**4) பகுத்தறிவு ரீதியான மறுப்புக்களைப் பற்றிய விளக்கங்கள்.**

இப்பிரிவைத் தொடங்கமுன் முக்கியமான சில விடயங்களை முன்னுரையாகக் கூறுகின்றேன். அவற்றைச் சிந்தனையில் கொள்ளுதல் பயன் மிக்கதாக அமையும்.

1) மறை ஞானத்தை மறுப்பது போல் தெரிகின்ற திருமறை வசனங்கள், ஹதீதுகள், மற்றும் அறிஞர்கள், ஃபுகஹாக்கள் உள்ளிட்டவர்களின் கூற்றுக்கள் யாவும் அல்லாஹ்வுக்கு இருப்பது போன்று சமனாக அல்லது, சுயமான அறிவு இருப்பதையே மறுக்கின்றது. இல்முல் ஙைபை ஒட்டுமொத்தமாக அவை மறுக்கவில்லை. அப்படி மறுப்பதாயின் சிலருக்கு மறைவான ஞானத்தை அல்லாஹுத் தஆலா வழங்கியதாக வந்துள்ள திருவசனம் உள்ளிட்ட சகல ஆதாரங்களும் பயனற்றதாகிவிடும்.

இல்முல் ஙைபை ஒட்டுமொத்தமாக அவை மறுக்கவில்லை. அப்படி மறுப்பதாயின் சிலருக்கு மறைவான ஞானத்தை அல்லாஹுத் தஆலா வழங்கியதாக வந்துள்ள திருவசனம் உள்ளிட்ட சகல ஆதாரங்களும் பயனற்றதாகி விடும்.

இமாம் இப்னு ஹஜர் மக்கி றஹ்மத்துல்லாஹி அலைஹி கூறுகின்றார்கள்.

معناها لا يعلم ذلك استقلالا وعلم احاطة الا الله تعالي اما المعجزات ،والكرامات فباعلام الله تعالي – فتاوي حديثية

'மறைவான விடயங்களை அல்லாஹ் அன்றி வேறு எவரும் அறியமாட்டார்கள்' என்ற திருமறை வசனத்தின் பொருள் யாதெனில், சுயமாக எவரும் அறிய மாட்டார்கள். சகலத்தையும் சூழ்ந்து அறிவது அல்லாஹ்வையன்றி வேறு எவராலும் முடியாது. முஃஜிஸாத், கறாமாத் என்பவை அல்லாஹுத் தஆலா அறிவித்துக் கொடுப்பதானாலேயே நிகழ்கின்றன.

*ஆதாரம்: பதாவா ஹதீதிய்யா.*

சிலருக்கு மறைவான ஞானம் இருக்கின்றது என்று வருகின்ற சகல ஆதாரங்களும் மார்க்கம், உலகியல் நடைமுறைகளை மட்டுமே குறிக்கும் என்று மறுப்பாளர்கள் வாதிக்கின்றனர். இவர்களின் தவறான இவ்வாதம் திருக்குர்ஆன், ஹதீது, உலமாக்கள், ஃபகீஹுகள் உள்ளிட்டோரின் கூற்றுக்களுக்கு எதிரானவை என்பதை ஏற்கனவே விளக்கியுள்ளோம்.

ஹளறத் நபி ஆதம் அலைஹிஸ்ஸலாம் அவர்களுக்கு வழங்கப்பட்ட அறிவிலும், லௌஹுல் மஹ்ஃபூழில் பதியப்பட்டதிலும் சகலதும் உள்ளடங்கியுள்ளன. உலகத்தில் உள்ள யாவற்றையும் எனது உள்ளங்கையில் இருப்பது போன்று பார்க்கின்றேன்" றஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறியிருக்கின்றார்கள். ஆதலால் இவர்களின் இந்த வாதம் அர்த்தமற்றதாகி விடுகின்றது.

## 2) மறுப்பாளர்களின் ஆதாரங்கள்.

1. மறைவானவற்றை அல்லாஹ்வைத் தவிர வேறு எவரும் அறிய மாட்டார்கள். அல்குர்ஆன்.

2. நான் மறைவானவற்றை அறியேன். ஹதீது.

3. அல்லாஹ் அல்லாதவர்களுக்கு மறைவான ஞானம் இருப்பதாக யாராவது கூறினால் அவர் காஃபிராகி விடுவார். அறிஞர்கள்.

சிலருக்கு மறைவான ஞானம் உண்டு என்பதை மறுப்பாளர்களான தேவ்பந்திகளும் கூறுகின்றனர். இதனால் இவர்களின் குஃப்று ஃபத்வா அவர்களுக்கும் வரும் என்பதை இவர்கள் அறிய மாட்டார்கள். இதனால் இவர்களின் குஃப்று ஃபத்வா அவர்களுக்கும் வரும் என்பதை இவர்கள் அறிய மாட்டார்கள்.

அல்லாஹ் அல்லாதவர்கள் மறைவான அறிவை எந்தளவு அறிவார்கள் என்பதில் தேவ்பந்திகளுக்கும் நமக்குமிடையில் கருத்து வேறுபாடு உண்டு. நடந்தவை, நடப்பவை, நடக்க இருப்பவை யாவும் (நபிமார்கள், வலிமார்களான) இவர்களுக்குக் தெரியும் என்கின்றோம்.

தேவ்பந்திகள் இதை மறுக்கின்றார்கள்.

இவர்கள் முன் வைக்கின்ற மேற்கண்ட ஆதாரங்களினால் “சில மறைவான” வையும் கூட மறுக்கப்படுகின்றன. “சில மறைவான அறிவு இவர்களுக்கு உண்டு“ என்று நம்புவதையும் இவர்களின் ஆதாரங்கள் இடித்துரைக்கின்றன. "முழுமையான மறுப்பின் எதிர் சிலதை உறுதி செய்வதாகும்" என்பது தர்க்கவியல் விதியாகும்.

3. அனைத்து மறைவான அறிவுகளும் ஒருவருக்குத் தெரியும் என்பதைத்தான் மறுப்பாளர்களின் மேற்கண்ட ஆதாரங்கள் மறுக்கின்றன. சிலமறைவானவைகள் பற்றிய அறிவு சிலருக்குத் தெரியும் என்பதை மறுக்கவில்லை. இவர்களின் இந்த விளக்கத்தினால் இந்தப் பிரச்சினையே தீர்ந்து விடுகின்றது.

ஏனெனில், றஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் நடந்தவை, நடப்பவை பற்றிய ஞானம் அல்லாஹ்வின் அறிவில் ஒரு துளிதான். மறுப்பாளர்கள் கூறுவதைக் தான் நாங்களும் கூறுகின்றோம். அப்படியாயின் முரண்பாடு ஏன் ?

4. "இல்முல் ஙைபு" என்பது அல்லாஹ்வின் ஒரு பண்பு. அல்லாஹ்வின் ஒரு பண்பு அடுத்தவருக்கும் இருப்பதாக நம்புவது குஃப்று என்பது தேவ்பந்திகளின் வாதமாகும். தேவ்பந்திகளின் இந்த வாதத்தினால் இவர்கள் கூறுகின்ற குஃப்றிலிருந்து அவர்களும் தப்ப முடியாது. படைத்தல் என்பது அல்லாஹ்வின் பண்பு. யாராவது ஒருவர் ஒரு பொருளைப் படைத்தால், உற்பத்தி செய்தால் இவர்களின் வாதத்தின் படி காஃபிராகி விடுவார்.

இது பிழையான வாதமாகும். அல்லாஹ்வின் பண்புகள் சுயமானவை! படைப்புக்களின் பண்புகள் அல்லாஹ்வால் வழங்கப்பட்டவை அதனால் இவை இரண்டும் சமனாக மாட்டாது. அதனால் ஷிர்க், எப்படி வரும்?

**திருக்குர்ஆன் வசனங்களுக்கான விளக்கங்கள்.**

قُل لَّا أَقُولُ لَكُمْ عِندِي خَزَائِنُ اللَّهِ وَلَا أَعْلَمُ الْغَيْبَ

***"என்னிடம் அல்லாஹ்வுடைய பொக்கிஷங்கள் இருக்கின்றன என்று உங்களுக்கு நான் சொல்லவில்லை. இன்னும் மறைவானவற்றை நான் அறியவும் மாட்டேன்."***

*(அல்குர்ஆன் : 6:50).*

இந்த திருவசனத்திற்கு முஃபஸ்ஸிரீன்கள் நான்கு விதமான விளக்கங்களை முன் வைக்கின்றனர்.

1. மறைவான ஞானம் சுயமாக ஒருவருக்கு இருக்கின்றது என்பதை மறுக்கின்றது.

2. ஒருவருக்கு மறைவான சகல அறிவுகளும் இருப்பதாக வாதிப்பதை மறுக்கின்றது.

3. பணிவைக் கருத்தில் கொண்டு கூறப்பட்டது.

4. நான் மறைவானவைகளை அறிந்தவன் என்று வாதிக்கவில்லை.

இங்கு வாதத்தின் கருப் பொருள் இல்முல் ஙைபுக்கான முழுமையான மறுப்பே தவிர, இல்முல் ஙைபு உண்டா ? இல்லையா? என்பது பற்றியதல்ல! என்பதைக் கவனத்தில் கொள்ளல் வேண்டும்.

மேற்படி திருவசனத்திற்கு தஃப்ஸீர்கள் கூறும் விளக்கத்தைக் கவனியுங்கள்.

١- يحتمل ان يكون ولا اعلم الغيب عطفا علي لا أقول لكم أي ، قل لا اعلم الغيب فيكون فيه دلالة علي أن الغيب بالاستقلال لا يعلمه الا الله ، تفسير نيسا پوري

இத்திருவசத்தில் "நான் அறிய மாட்டேன்" என்ற சொல் "நான் சொல்லவில்லை" என்ற சொற்றொடருடன் இணைந்துள்ளது. இதன்படி,

நபியே! கூறுவீராக! நான் மறைவானவற்றை அறிய மாட்டேன். மறைவானவற்றை சுயமாக அல்லாஹ்வையன்றி வேறு எவராலும் அறிய முடியாது என்பதற்கு இத்திருவசனத்தில் ஆதாரமுண்டு.

*ஆதாரம்: தஃப்ஸீர் நைஸாப்பூரி.*

٢- لا اعلم الغيب ما لم يوح ا لي اولم ينتصب عليه دليل: تفسير بيضاوي

வஹீ மூலமாக அன்றி அல்லது அது பற்றி அறிவிக்கின்ற ஆதாரம் இருந்தால் அன்றி மறைவானவற்றை நான் அறிய மாட்டேன்.

*தஃப்ஸீர்: பைழாவி.*

٣- قوله لا اعلم الغيب يدل علي اعترافه بانه غير عالم بكل المعلومات ، تفسير كبير

"நான் மறைவானவற்றை அறிய மாட்டேன்" என்பதில், நான் சகல விதமான அறிவுகளையும் அறிய மாட்டேன் என்பதை றஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் உறுதிப்படுத்துவதாக உள்ளது.

*ஆதாரம்: தஃப்ஸீர் கபீர்.*

٤- وانما نفي عن نفسه الشريفة هذه الأشياء تواضعا لله تعالي واعترافا للعبودية فلست أقول شيئا من ذلك ولا ادعيه :تفسير خازن

"தனக்குத் தெரியாது" என்று றஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறியதன் விளக்கம், அல்லாஹுவுக்கு முன்னால் தனது பணியை வெளிப்படுத்துவதற்கும், அடிமைத்தனத்தை உறுதிப் படுத்துவதற்குமாகும். அதாவது, நான் (சுயமாக) எதையும் கூற மாட்டேன். நான் எந்தப் பொருளுக்கும் உரிமை கொண்டாடமாட்டேன்.

*தஃப்ஸீர்: காஸின்.*

٥– وتواضع حين اقام نفسه مقام الانسانية بعد أن كان اشرف خلق الله من العرس الي الثري واظهر من الكروبيين وروحانيين حضوعا لجبروته وخشوعا ملكوته تفسير عرائش البيان

றஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் அர்ஷிலிருந்து, பர்ஷு வரையிலான அனைத்துப் படைப்பிலிருந்தும் சிறப்பானவர்களாக இருந்தும், தன்னை மனித நிலையிலும் தமது பணிவை வெளிப்படுத்தியுள்ளார்கள். மலக்குகள், ஆன்மாக்கள் யாவற்றையும் விட (நபியவர்கள்) பரிசுத்தமானவர்கள். அல்லாஹ்வின் ஜப்பாரியத்தின் தகுதிக்கு முன்பும், அவனது சூட்சும ஆட்சிக்கு முன்பும் தனது இயலாமையையும், பணிவையும் வெளிப்படுத்தும் நோக்கில் கூறியுள்ளார்கள்.

*ஆதாரம்: தஃப்ஸீர் அறாயிஜுல் பயான்.*

٦- اي لا ادعي القدرة علي كل المقدورات والعلم بكل المعلومات تفسير نيساپورى

எனக்கு எல்லாவற்றிலும் ஆற்றல் இருக்கின்றது என்றோ, சகல வற்றையும் பற்றிய அறிவு எனக்குண்டு என்றோ நான் வாதிக்கவில்லை.

*ஆதாரம்: தஃப்ஸீர் நைஸாப்பூரி*

٧- ولا ادعي كوني موصوفا يعلم الله وبمجموع هذين الكلامين حصل انه لايدعي الالهية :تفسير كبير

நான் அல்லாஹ்வின் அறிவு என்ற பண்பைக் கொண்டுள்ளேன் என்று நான் வாதாடவில்லை. இவை இரண்டு கருத்துக்களையும் ஒன்று சேர்த்துக் கூறுவதாயின், நான் (என்னை) தெய்வீகத் தன்மையுள்ளவர் என்று வாதிடவில்லை.

*ஆதாரம்: தஃப்ஸீர் கபீர்.*

٨– عطف علي عندي خزائن الله ولا مذكرة للنفي اي ولا ادعي اني اعلم الغيب من افعاله تعالي علي انها عندي فمن قال ان نبي الله لا يعلم الغيب فقد اخطأفيما اصاب : تفسير روح البيان ولكن لا اقول لكم

அல்லாஹுத் தஆலாவின் செயலில் மறைந்திருப்பவற்றை நான் அறிவேன் என்று கூறவில்லை. அல்லாஹ்வின் மறைவான பொக்கிஷங்கள் என்னிடமிருக்கின்றன (அப்படியிருந்தும்) அவை என்னிடமிருப்பதாகவும் கூறமாட்டேன்.

இத்திருவசனத்தை ஆதாரமாகக்கொண்டு றஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கு மறைவான ஞானம் இருக்கத்தக்க நிலையில் அன்னாருக்கு மறைவான ஞானம் இல்லை என்று யாராவது வாதித்தால் அவர் தனது வாதத்தில் தவறிழைத்தவராவார்,

*ஆதாரம்: தஃப்ஸீர் றூஹுல் பயான்*

٩– اي قل اعلم الغيب فيكون فيه دلالة علي ان الغيب بالاستقلال لا يعلمه الا الله:
تفسير نيساپورى

'நபியே! கூறுவீராக! நான் மறைவானவற்றை அறிய மாட்டேன்' என்ற சொற்றொடரில் "நான் சுயமாக அறிய மாட்டேன்" என்பதற்கு ஆதாரம் உண்டு.

*ஆதாரம்: தஃப்ஸீர் நைஸாபூரி*

மேற்படி திருவசனத்தில் இரு இடங்களில் "நான் கூற மாட்டேன்" என்று வந்துள்ளது. முதலாவது "நான் கூற மாட்டேன்" என்பதற்குப் பின், இரு விடயங்கள் கூறப்பட்டுள்ளன.

1) அல்லாஹ்வின் பொக்கிஷங்கள் என்னிடமிருக்கிறன என்று நான் கூற வில்லை.

2) மறைவானவற்றை நான் அறிவேன் என்றும் கூறவில்லை.

அடுத்து, "நான் கூற மாட்டேன்" என்ற சொற்றொடருக்குப் பின், (என்னை) நான் மலக்கு என்று கூறவில்லை. என்றுள்ளது.

இரண்டாவது கருத்தின் வாதம், வாதத்தின் கருப் பொருள் ஆகிய இரண்டிற்கும் மறுப்புள்ளது.

அதாவது, என்னிடம் அல்லாஹ்வின் பொக்கிஷங்களும் உண்டு, மறைவானவற்றை நான் அறியவும் செய்வேன். ஆயினும் அது பற்றி வாதிக்க மாட்டேன்.

றஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறுகிறார்கள்.

اوتيت مفاتيح خزائن الارض (مشكوة باب فضائل سيد المرسلين)

பூமியின் புதையல்களின் திறவுகோல்கள் கொடுக்கப்பட்டுள்ளேன்.

*ஆதாரம் : மிஷ்காத்.*

இல்முல் ஙைபு தொடர்பான பல ஹதீதுகளை ஏற்கனவே குறிப்பிட்டுள்ளோம்.

எதார்த்தத்தில் நான் மலக்கல்ல! அவ்வாறு வாதிப்பவனுமல்ல! இந்த நுட்பத்தை வெளிக்காட்டத்தான் "நான் கூற மாட்டேன்" என்பதை இரு முறை திருவசனத்தில் கூறப்பட்டுள்ளது. இல்லையேல் ஒரு விடுத்தும் கூறினால் போதுமானதாக இருந்திருக்கும். இக்கருத்தை மறுப்பாளர்கள் நிராகரிப்பார்களாயின், இத்திருவசனம் அவர்களுக்கும் எதிராகவே அமையும். ஏனெனில், சில மறைவானவற்றை அல்லாஹ் அல்லாதவர்களும் அறிவார்கள் என்று அவர்களும் தான் நம்புகின்றனர்.

இத்திருவசனத்தில் வரும் "உங்களுக்கு" என்ற முன்னிலை காஃபிர்களைத்தான் குறிக்கும். இதன்படி, இத்திருவசனத்தின் பொருள், காஃபிர்களே! அல்லாஹ்வின் பொக்கிஷங்களின் திறவுகோல்கள் என்னிடம் இருக்கின்றன என்ற உண்மையை உங்களிடம் நான் கூறமாட்டேன்.

ஏனெனில், நீங்கள் திருடர்கள். திருடர்களுக்கு அல்லாஹ்வின் கருவூலங்களைக் காட்டிக் கொடுப்பது தவறு! ஷைத்தானைப் போன்று நீங்களும் இரகசியங்களைத் திருட அனுமதிக்க முடியாது. வானத்திற்குச் செல்லாமல் ஷைத்தான்கள் தடுக்கப்பட்டதற்கு அவர்கள் திருடர்கள் என்பது தான் பிரதானமான காரணமாகும். இச்செய்தியை காஃபிர்களிடம் கூறாமல் உண்மையாளர்களிடம் கூறியிருந்தால் "அல்லாஹ்வின் பொக்கிஷங்களில் திறவுகோல்கள் என்னிடம் தான் இருக்கின்றன." என்று கூறியிருப்பார்கள்.

பொக்கிஷத்தின் திறவுகோல்கள் பொருளாளரிடம் தான் இருக்கும். அதன் உரிமை அரசரிடமிருக்கும். நான் கருவூலங்களின் பாதுகாவலர். இதன் உரிமையாளர் அல்ல!

றஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் ஆணைப்படி மேகம் மழை பொழிந்தது. அன்னாரின் மணி விரல்களி லிருந்து நீர் ஒலித்தோடியது. உள்ளிட்ட பல நிகழ்வுகளை ஆதாரமாகக் கொள்ள முடியும்.

**மறுப்பாளர்களின் இரண்டாவது மறுப்பாதாரம்.**

وَلَوْ كُنْتُ اَعْلَمُ الْغَيْبَ لَاسْتَكْثَرْتُ مِنَ الْخَيْرِ

***"மறைவானவற்ற நான் அறிந்தவனாக இருந்தால், நன்மையிலிருந்து (எனக்கு) அதிகமாகத் தேடிக் கொண்டிருப்பேன்."***

*(அல்குர்ஆன்: 7:188).*

இத்திருவசனத்திற்கு முஃபஸ்ஸிரீன்கள் பின்வரும் மூன்று விதமான கருத்துக்களைக் கூறியுள்ளனர்.

1) பணியின் நிமித்தமே றஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள்.

2) தெய்வீக ஞானம் அனைத்தையும் என்னால் அறிய முடியும் என்பதற்கு மறுப்பு இதன் நோக்கமாக உள்ளது.

3) சுயமான அறிவு உண்டு என்பதற்கு மறுப்பு.

நஸீமுர் றியாழ் ஆசிரியர் இத்திருவசனத்திற்கு இவ்வாறு விளக்கம் கூறுகின்றார்கள்.

قوله ولو كنت اعلم الغيب فان المنفي عليه من غير واسطة واما اطلاعه عليه السلام باعلام الله تعالي فامر مستحق لقوله تعالي فلا يظهر علي غيبه احدا الا من ارتضي من رسول : نسيم الرياض في شرح الشفا

இல்முல் ஙைபை ஏற்றுக் கொள்வதற்கு இத்திருவசனத்தில் மறுப்பில்லை. மறைவான அறிவு கொடுக்கப்படாமல் சுயமாக அறிவதற்குத்தான் மறுப்புள்ளது. "அவனுடைய மறைவானவற்றை எவருக்கும் அவன் வெளிப்படுத்த மாட்டான். அவன் பொருந்திக் கொண்ட திருத்தூதர்களைத் தவிர" என்ற திருவசனத்தின் மூலம் றஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கு மறைவானவற்றை அல்லாஹுத்தஆலா அறிவித்துக் கொடுத்துள்ளான். என்பது தெரிய வருகிறது.

இதன்படி, றஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கு தெய்வீக இரகசியங்கள் யாவும் தெரியும் என்பதற்குத் தான் மறுப்புள்ளது.

ஷறஹு மவாஹிப் என்ற நூலில் பின் வருமாறு எழுதப்பட்டுள்ளது.

الاطلاع علي جميع المغيبات لا يجب للنبي واذا قال عليه السلام لو كنت اعلم الغيب الآية وجميع مغيبات غير متناهية

மறைவானவைகள் அனைத்தையும் அறிதல் என்பது நபிக்கு அவசியமானதல்ல! முழுமையான மறைவான அறிவுகள் என்பது எல்லையற்றதாகும் என்ற காரணத்தினால் தான் "நான் மறைவானவற்றை அறிபவனாக இருந்தால் நன்மையிலிருந்து (எனக்கு) அதிகமாகத் தேடிக் கொண்டிருப்பேன்". என்று றஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள்.

*ஆதாரம், ஜறஹுல் மவாகிப்.*

மேற்படி திருவசனத்தில் கூறப்பட்டிருப்பதை றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வசல்ல மவர்கள் பணிவின் நிமித்தம் கூறியதாக தப்ஸீர் ஸாவி பின் வருமாறு கூறுகின்றது.

أن قلت ان هذا يشكل مع ما تقدم من الله اطلع علي جميع مغيبات الدنيا والاخرة فالجواب انه قال ذلك تواضعا :تفسير صاوي

றஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கு இம்மை, மறுமை தொடர்பான மறைவான அறிவுகள் அனைத்தும் வழங்கப்பட்டுள்ளன என்று ஏற்கனவே கூறப்பட்டுள்ள திருவசனத்திற்கு இக்கருத்து எதிராக உள்ளதே! என்று ஒரு குற்றச்சாட்டு முன் வைக்கப்பட்டால், அதற்கு நாம் கூறும் பதில், பணிவை வெளிப்படுத்தவே இவ்வாறு கூறினார்கள் என்பதாகும்.

*ஆதாரம்: தஃப்ஸீர் ஸாவி,*

தஃப்ஸீர் ஜமலிலிருந்து மேற்கோள் காட்டி தஃப்ஸீர் காஸினில் பின் வருமாறு பதியப்பட்டுள்ளது.

فان قلت قد اخبر النبي صلي الله عليه وسلم عن المغيبات قد جاءت احاديث في الصحيح بذلك وهو من اعظم معجزاته فكيف الجمع بينه وبين قوله لو كنت اعلم الغيب قلت يحتمل ان يكون قاله تواضعا وادبا والمعني لا اعلم الغيب الا ان يطلعني الله عليه ويقدرره لي ويحتمل ان يكون قال ذلك قيل ان يطلعه الله علي الغيب فلما اطلعه الله اخبر به: تفسير خازن

அப்படியிருக்க இதற்கும் "நான் மறைவானவற்றை அறிந்தவனாக இருந்தால்.." என்ற திருவசனத்திற்குமிடையில் கருத்தொற்றுமை காண்பது எப்படி? என்று நீ கேட்டால், பணிவின் அடிப்படையில் நபியவர்கள் கூறினார்கள் என்றே நான் கூறுவேன். இவ்வாறு கருத்துக் கூறுவதன் மூலம் முரண்பாடு நீங்கி விடும்.

அல்லது, அல்லாஹுத் தஆலா அறிவித்துக் கொடுக்காமல் மறை வானவற்றை அறிய மாட்டேன். என்று கருத்துக் கூறலாம். அல்லது, மறைவான அறிவுகள் அன்னாருக்கு அறிவித்துக் கொடுக்க முன்பு கூறிய தாகவும் இருக்கலாம். றஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கு மறைவான அறிவுகளை எப்போது அறிவித்துக் கொடுத்தானோ அப்போதே (சகல) மறைவானவைகளையும் அறிந்து கொண்டார்கள்.

*ஆதாரம்: தஃப்ஸீர் காஸின்.*

தஃப்ஸீர் ஜமலில் பின் வருமாறு எழுதப்பட்டுள்ளது.

اي قل لا اعلم الغيب فيكون فيه دلالة علي أن الغيب بالاستقلال لا يعلم الا الله
:تفسير جمل

நபியே! கூறுவீராக! நான் மறைவானவற்றை அறிய மாட்டேன். என்பதன் பொருள் "நான் சுயமாக அறிய மாட்டேன்." என்பதாகும். மறைவானவற்றை சுயமாக அல்லாஹுத் தஆலாவையன்றி வேறு எவராலும் அறிய முடியாது என்பதற்கு இத்திருவசனத்தில் ஆதாரம் உண்டு.

*ஆதாரம்: தஃப்ஸீர் ஷமல்.*

தஃப்ஸீர் ஸாவி பின் வருமாறு கூறுகின்றது.

او ان علمه بالمغيبات كلاعلم من حيث انه لا قدرة له علي تغيير ما قدر الله فيكون المغني حينئذ لو كان لي علم حقيقي بان اقدرعلي ما أريد وقوعه لاستكثرت من الخير
:تفسير صاوي

றஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கு மறைவானவற்றை அறிவதும், அறியாதிருப்பது போன்றது தான். ஏனெனில், அன்னாருக்கு களா கத்றில் மாற்றத்தை ஏற்படுத்த முடியாது. அதனால், மேற்படி திருவசனத்தின் பொருள் பின் வருமாறு அமையும்.

எனது நோக்கத்திற்கு ஏற்றவாறு செயல்படுவதற்குரிய தத்துவத்தை பெறும் வகையில் எதார்த்தமான அறிவு எனக்கு இருக்குமாயின், அதிகமான நன்மைகளை ஒன்று திரட்டுவேன். (மேற்படி திருவசனத்திற்கு கூறப்பட்ட) ஏனைய கருத்துரைகளில் இதுவே அதிக தரமிக்கதாக உள்ளது.

நான் மறைவானவற்றை அறிந்திருந்தால் அதிகமான நன்மைகளை அதிகரித்திருப்பேன். எனக்கு சிரமம் வந்திருக்காது. நன்மைகளை ஒன்று சேர்ப்பதற்கும், சோதனைகளிலிருந்து தவிர்த்து கொள்வதற்குமான ஆற்றல் இல்லாதிருக்கும் போது இவற்றை அறிந்திருப்பதிலும் நன்மைகளை ஒன்று சேர்ப்பதற்கும் போதுமானதாகாது.

முதுமை வரும் என்பதும், அதனால் பல சிரமங்களைத் தாங்க வேண்டிவரும் என்பதும் நன்றாகத் தெரியும்!. அதைத் தட்ட ஆற்றல் இல்லையாயின், அந்த அறிவில் பயன் இல்லை.

கடையில் உள்ள சாமான்கள் தீர்ந்து விட்டன. மேலதிகமானதை வாங்க வேண்டும். வாங்குவதற்கு பணம் இல்லை.! கடைக்கு அதிகமான சாமான் தேவைப்படுகின்றது என்ற அறிவு உண்டு. ஆனால், அதை நிறைவேற்று வதற்குப் பணம் இல்லையே. இந்த விளக்கத்தின் மூலம் பிரச்சினை தெளிவாகி விட்டது.!

இவ்வாறு, அதிகமான நன்மைகளை ஒன்று திரட்டுவதற்கும், முஸீபத்துக்களிலிருந்து தப்புவதற்கும் அறிவும், ஆற்றலும் ஆகிய இரண்டும் வேண்டும். இத்திருவசனத்தில் ஆற்றலைப் பற்றிக் குறிப்பிடப்படவில்லை.

"இல்முல் ஙைபு" என்பதன் கருத்து ஆற்றலுடன் சேர்ந்த "இல்முல் ஙைபாகும்" அதாவது, சுயமான அறிவு தெய்வீகத்துடன் தொடர்பான தாகும். தெய்வீகத்தனம் (உலூஹிய்யத்) இருக்கும் இடத்தில் தான் சுயமான அறிவும் இருக்கும். அதனால் சுயமும், தெய்வீகமும் பிரிக்க முடியாத தாகும். இவ்வாறு கருத்து கூறாவிட்டால், மேற்படி திருவசனத்தின் பொருள் பிழையாகி ஆகிவிடும்.

ஏனெனில், பேரெடுப்பு (كبرى) சிற்றெடுப்பு ( صغرى )ஆகிய இரண்டுக்கு மிடையில் இன்றியமையாத் தொடர்பு நீங்கிவிடும். முதற் கூற்றுக்கும் அடுத்து வரும் கூற்றுக்கும் உள்ள தொடர்பு நிச்சயமற்றதாயின் ஒப்பாய்வு (கியாஸ்) செய்வது பிழையாகிவிடும்.

தேவ்பந்திகள் இத்திருவசனத்திற்கு விசித்திரமான ஒரு விளக்கத்தைக் பின் வருமாறு கூறுகின்றனர்.

"நான் மறைவானவற்றை அறிந்திருப்பேனாயின், அதிகமான நன்மைகளை ஒன்று சேர்த்திருப்பேன். எந்தவிதமான சோதனைகளும் என்னை அணுகியிருக்காது. ஆனால் "சோதனையில் இருந்து தப்பித்துக் கொள்"! என்ற தகவலும் எனக்கு கிடைக்கவில்லை அதனால், மறைவானவற்றை நான் அறியமாட்டேன்!.

மேற்படி திருவசனத்திற்கு தேவுபந்திகள் கூறுவது போன்று எங்களாலும் பின் வருமாறு விளக்கம் கூற முடியும்.

அதாவது, எனக்கு மறைவான அறிவு இருக்குமாயின் சோதனை யிலிருந்து தப்புவேன், அதனால் புரிந்து கொள்ளுங்கள்! எனக்கு இல்முல்

னைப் உண்டு! என்னிடத்தில் அதிகமான நன்மைகளும் இருக்கின்றன.

அல்லாஹுத் தஆலா கூறுகின்றான்.

وَمَن يُؤْتَ الْحِكْمَةَ فَقَدْ أُوتِيَ خَيْرًا كَثِيرًا

*“ஞானம் எவர் கொடுக்கப்படுகின்றாரோ, அவர் மிகப் பெரும் நன்மைகளை திட்டமாக கொடுக்கப்பட்டவர் ஆவார்.”*

*(அல்குர்ஆன்: 2: 269).*

إِنَّا أَعْطَيْنَاكَ الْكَوْثَرَ

*“நிச்சயமாக நாம் (நபியே!) உமக்கு ஏராளமான நற்பேறுகளை (கௌதரை)க் கொடுத்துள்ளோம்.“*

*(அல்குர்ஆன்: 108: 01).*

وَيُعَلِّمُهُمُ الْكِتَابَ وَالْحِكْمَةَ

*“அவர்களுக்கு வேதத்தையும் ஞானத்தையும் கற்றுக் கொடுக்கின்றார்.”*

*(அல் குர்ஆன்: 2: 129).*

وَاللَّهُ يَعْصِمُكَ مِنَ النَّاسِ

*அல்லாஹ் மனிதர்க(ளின் தீங்குக)ளை விட்டும் உம்மை காப்பாற்றுவான்*

*(அல் குர்ஆன்: 5: 67).*

மேற்கண்ட திருவசனங்களின் அடிப்படையில் நபிகள் நாதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கு மறைவான ஞானம் உண்டு, அதனால் மேற்படி திருவசனங்கள் மறை ஞானங்களை உறுதிப்படுத்துகின்றதே தவிர, நிராகரிக்கவில்லை.

தஃப்ஸீர் றூஹுல் பயான் பின் வருமாறு கூறுகின்றது.

وقد ذهب بعض المشائخ الي ان النبي صلي الله عليه وسلم كان يعرف وقت الساعة باعلام الله وهو لا ينافي الحصر في الآية كما لا يخفي : تفسير روح البيان

அல்லாஹுத்தஆலா அறிவித்துக் கொடுத்த படி மறுமை நாள் வரும் நேரத்தையும் ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் அறிவார்கள். இக்கருத்து திருக்குர்ஆன் வசனத்தின் மட்டுப் படுத்தலுக்கு எதிரானது அல்ல என்று சில ஷைகுமார்கள் கூறுகின்றனர்.

*தஃப்ஸீர் றூஹுல் பயான்.*

وَعِنْدَهُ مَفَاتِحُ الْغَيْبِ لا يَعْلَمُهَا أَلا هُوَ

***"மறைவானவற்றின் திறவுகோல்கள் அவனிடமே இருக்கின்றன."***

*(அல் குர்ஆன்: 6: 59).*

மறைவானவற்றின் திறவுகோல்கள் என்பதன் கருத்து "மறைவான வற்றின் கருவூலங்கள்" ஆகும் என்று முஃபஸ்ஸிரீன்கள் விளக்கம் பகர்கின்றனர். அதாவது, தெய்வீக அறிவுகள் அனைத்தையும் அறிவது, அல்லது, மறைவான பொருட்களை வெளிக்கொணர்வதற்கு (படைப்பதற்கு) ஆற்றல் பெறுதல்.

ஏனெனில், பூட்டை திறந்து உள்ளே மறைத்து வைத்திருப்பதை வெளியில் எடுப்பதும், வெளியில் இருப்பதை உள்ளே வைப்பதும் தான் திறப்பின் வேலை!

இவ்வாறு, இருப்பதை இல்லாமல் மறைப்பதும், மறைந்திருப்பதை வெளியாக்குவதும் அதாவது படைப்பதும் மரணிக்கச் செய்யும் ஆற்றலும் அல்லாஹ்வுக்கு மட்டுமே உண்டு.!

தஃப்ஸீர் கபீரில் பின் வருமாறு எழுதப்பட்டுள்ளது.

وكذلك ههنا لما كان عالما بجميع المعلومات عبر هذا المعني بالعبارة المذكورة وعلي التقدير الثاني المراد منه القدرة علي كل الممكنات : تفسير كبير

அல்லாஹுத்தஆலா எல்லாவற்றையும் அறிந்தவன் என்ற இக்கருத்தை மேற்கண்ட வசனத்தில் விளக்கிக் கூறினான். இரண்டாவது கருத்தின் படி இதன் பொருள், படைப்புகள் யாவற்றிலும் அவன் ஆற்றல் பெற்றவன் என்பதாகும்.

தஃப்ஸீர் றூஹுல் பயானில் மேற்படி திருவசனத்திற்கு பின் வருமாறு விளக்கம் எழுதப்பட்டுள்ளது.

وقام تصويرها الذي هو مفتاح يفتح به باب علم تكويتها علي صوتها وكونهاهو الملكوت فبقلم ملكوت كل شيئ يكون كل شيئ وقلم الملكوت بيد الله لان الغيب هو علم التكوين

பொருட்களை வடிவமைக்கின்ற எழுதுகோல் தான் திறப்பாகும். இத்திறப்பினால் படைப்பின் உற்பத்தியின் அறிவு வாசல் திறக்கப் படுகின்றது.

அதற்கு நேர்பாடான கோலம் தான் மலக்கூத்தாகும், ஒவ்வொரு பொருளின் மலக்கூத்தின் எழுது கோலால் ஒவ்வொரு பொருளின் வடிவமும்படைக்கப்படுகின்றன. மலக்கூத்திற்கான எழுதுகோல் அல்லாஹ்வின் கையில் இருக்கிறது, அதனால் கைபு.(மறைவானது) என்பதன் கருத்து படைத்தலின் இரகசியத்தை அறிவதாகும்.

*தஃப்ஸீர் : றூஹுல் பயான்.*

தஃப்ஸீர் காஸினில் பின் வருமாறு விளக்கம் பதியப்பட்டுள்ளது.

لان الله تعالى لما كان عالما بجميع المعلومات عبر هذا المعني بهذه العبارة وعلي التفسير الثاني يكون المعني وعنده خزائن الغيب والمواد منه القدرة الكاملة علي كل الممكنات : تفسير خازن

அல்லாஹுத் தஆலா அனைத்தையும் அறிந்தவன் என்பதை இப்படியான வாக்கியத்தின் மூலம் விளக்கி கூறுகின்றான். மற்றுமொரு விளக்கமும் உண்டு. இதன்படி, அல்லாஹ்விடத்தில் மறைவானவற்றின் பொக்கிஷங்கள் இருக்கின்றன, படைப்புக்கள் அனைத்திலும் அவனது முழுமையான ஆற்றல் உண்டு என்பதாகும். அல்லது இதன் கருத்து அல்லாஹுத்தஆலா அறிவித்துக் கொடுக்காமல் மறைவானவற்றின் திறப்புக்களை எவராலும் அறிய முடியாது.

தஃப்ஸீர் அறாயிஷுல் பயான் கூறுகின்றது.

قال الحريري لا يعلمها الا هو ومن يطلعه عليها من خليل وحبيب اي لا يعلمها الاولون والاخرون قبل اظهاره تعالى ذلك لهم : تفسيرعرائش البيان

மறைவானவற்றை அல்லாஹ்வும், அவனது நேசர்களும் தவிர்ந்து வேறு எவராலும் அறிய முடியாது. அதாவது மறைவானவற்றை அல்லாஹ்தஆலா வெளியாக்க முன்னர் அதை முன்னோர்களும், பின்னோர்களும் அறியமாட்டார்கள்.

*தஃப்ஸீர்: அறாயிஜுல் பயான்.*

தஃப்ஸீர் இனாயத்துல் காழியில் பின் வருமாறு எழுதப்பட்டுள்ளது.

وجه احتصاصها به تعالي كما هي ابتداء الا هو :تفسير عناية القاضي

மறைவானவற்றின் திறப்புக்கள் அல்லாஹ்விடம் உண்டு என்று குறிப்பிட்டதன் காரணம், அதன் ஆரம்பம் எப்படி இருந்தது? என்பதை

அவனைத் தவிர்த்து வேறு எவராலும் அறிய முடியாது.

*தஃப்ஸீர்: இனாயத்துல் காழி*

மறுப்பாளர்களான தேவ்பந்திகளும் சில மறைவானவற்றை அல்லாஹ் அல்லாதவர்களும் அறிவார்கள் என்று நம்புகின்றனர். அதனால் நமது கருத்தையே அவர்களும் ஏற்றாக வேண்டும். இதற்கு மாறான விளக்கத்தை அவர்கள் கொண்டிருந்தால் இத்திருவசனம் அவர்களுக்கு எதிராகவே அமையும்.!

வெளிப்படையில் இல்முல் ஙைபை முழுமையாகவே இத்திருவசனம் மறுக்கின்றது. சிலதையல்ல என்பதை கவனத்தில் கொள்க.!

## ஒரு நுட்பம்

அஃலா ஹளரத் முஜத்தித் அஹ்மத் றிழாகான் ரஹ்மத்துல்லாஹி அலைஹி இந்த இடத்தில் ஒரு நுட்பமான கருத்தைக் கூறி இருப்பதாக எனது நண்பர் என்னிடம் கூறினார்.

அவர் கூறிய கருத்து பின்வருமாறு,

عِنْدَهُ مَفاتِحُ الْغَيْبِ

***1. மறைவானவற்றின் திறப்பு அவனிடமே இருக்கின்றது.***

*(அல் குர்ஆன்: 6: 59).*

لَهُ مَقَالِيدُ السَّمَاوَاتِ وَالأَرْضِ

***2. வானங்கள் பூமியின் திறவுகோல்கள் அவனிடமே உள்ளன.***

*(அல் குர்ஆன்: 39: 63).*

முதல் திருவசனத்தில் "மபாதீஹ்" مفاتيح என்றும் பிந்திய திருவசனத்தில் "மகாலீத்" مقاليد என்றும் கூறப்பட்டுள்ளன. இரு வார்த்தைகளின் கருத்து "திறவுகோல்" என்பதாகும்.

"மபாதீஹ்" مفاتيح என்பதில் உள்ள முதல் எழுத்து "மீம்", கடைசி எழுத்து "ஹ்". மகாலீதில் உள்ள முதல் எழுத்தும் "மீம்", கடைசி எழுத்து "தால்". இவற்றை ஒன்று சேர்த்தால் 'முஹம்மத்' என்று வரும்!.

இதன் மூலம் புரிகின்றது உலகம் தோன்றக் காரணமாக இருந்தவர்கள் கண்மணி முஹம்மத் முஸ்தஃபா ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் தான். அவர்கள் தான் உலகத்தின் "திறப்பு" ஆகும்.

பிரபஞ்சம் வெளிவருவதற்கு அன்னாரின் "நூறு" தான் திறப்பு! இந்த நூறிலிருந்து தான் எல்லா படைப்புகளும் வெளிவந்தன.

لَا يَعْلَمُهَا إِلَّا هُوَ

என்ற திருவசனம் றஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் எதார்த்தத்தில் எப்படியிருப்பார்களோ அப்படியாரும் அன்னாரை அறிய மாட்டார்கள் என்பதில் சைக்கினையாக உள்ளது. ஹகீகத்தே முஹம்மதியாவை றப்பைத் தவிர்த்து வேறு எவராலும் அறிய முடியாது.

திறப்புக்கள் என்பது பன்மைச் சொல்! இதன் நோக்கம் அல்லாஹ்வின் ஒவ்வொரு றஹ்மத்திற்கும் நபியவர்கள் தான் திறப்பாகும். மறுமையில் அன்னாரின் ஸஜதா தான் "ஷஃபாஅத்" தின் திறப்பாகும்.! சொர்க்கத்தின் அனைத்து அருட் பாக்கியத்திற்குமான திறப்பு அன்னாரின் முதல் நுழைவு தான் சொர்க்கத்தின் திறப்பாகும்.

இதன் விபரம் எமது ஷஃனே ஹபீபுர் ரஹ்மான் என்ற நூலில் உள்ளது. பார்க்கவும்.

**நுட்பமான கருத்து**

மறைவானவற்றின் திறப்பு அல்லாஹ்விடம் தான் இருக்கின்றது என்பதை மேற்கண்ட திருவசனத்தின் மூலம் தெரிந்து கொள்கின்றோம்.

அப்படியாயின் ஒரு கேள்வி! மறைவானவற்றின் வாசல் இதுவரை எவருக்கும் திறக்கப்படவில்லையா? அத்திறப்புகள் யாருக்குமே வழங்கப் படவில்லையா?

இதற்கான பதிலை திருக்குர்ஆனிடமும் ஹதீஸ்களிடமும் கேட்போம்.

திருக்குர்ஆன் கூறுகின்றது

إِنَّا فَتَحْنَا لَكَ فَتْحًا مُبِينًا

*" (நபியே) நிச்சயமாக நாம் (வெளிப்படையாக) திறக்க வேண்டியதை (எல்லாம்) திறந்து உள்ளோம்."*

*(அல் குர்ஆன்: 48: 1).*

இத்திரு வசனத்திற்கான சிறப்பான விளக்கம் எமது "ஷஃனே ஹபீபுர் ரஹ்மான்"! என்ற நூலில் உண்டு!

பூட்டிலும், திறப்பிலும் இருப்பது யாதெனில் திறந்தால் உள்ளே இருக்கும் பொருள் வெளியில் வந்துவிடும். (தெரிய வந்து விடும்) திறந்த பின்பும் அப்பொருள் வெளியாகா விட்டால் அதை மண்ணில் போட்டு புதைக்க வேண்டியது தான்!.

அதனால் மறைக்கப்பட்டிருக்கும் பொருள் வெளிக் கொண்டு வரப்பட வேண்டும் என்பதற்காகத்தான் அதில் திறப்பு வைக்கப்பட்டிருக் கின்றது.

ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் கூறினார்கள்.

أُوتِيتُ مَفَاتِيح خَزَائِنِ الأَرْضِ

எனக்கு பூமியின் கருவூலங்களில் திறவுகோல்கள் வழங்கப்பட்டுள்ளன. இதன்படி, சகல திறப்புக்களும் வழங்கப்பட்டுள்ளன, திறந்தும் காட்டப் பட்டுள்ளன.

அல்லாஹுத் தஆலா கூறுகின்றான்.

قُل لَّا يَعْلَمُ مَن فِي السَّمَاوَاتِ وَالْأَرْضِ الْغَيْبَ إِلَّا اللَّهُ

*“அல்லாஹ்வைத் தவிர வானங்களிலும் பூமியிலும் உள்ளவர்கள் எவரும் மறைந்திருப்பதை அறியமாட்டார்கள். அவர்கள் எப்பொழுது உயிர் கொடுக்கப்பட்டு எழுப்பப்படுவார்கள் என்பதையும் அறிய மாட்டார்கள் என்று (நபியே!) கூறுவீராக!”*

*(அல் குர்ஆன்: 27: 65).*

இத்திருவசனத்திற்கு முஃபஸ்ஸிரீன்கள் இரு விதமான விளக்கங்களை கூறியுள்ளார்கள்.

1) சுயமாக எவராலும் அறிய முடியாது!.

2) மறைவானவற்றை முழுமையாக எவராலும் அறிய முடியாது!.

உன்மூதுஜ் ஜலீல் என்ற தஃப்ஸீரில் பின் வரும் விளக்கம் பதியப்பட்டுள்ளது.

معناه لا يعلم الغيب بلا دليل الا الله او بلا تعليم او جميع الغيب

ஆதாரமின்றியும், கற்றுக் கொடுக்காமலும் அல்லது மறைவான அனைத்தையும் அல்லாஹ்வைத் தவிர வேறு எவராலும் அறிய முடியாது.!

தஃப்ஸீர் மதாரிக் இவ்வாறு விளக்கம் கூறுகின்றது.

والغيب ما لم يقم عليه دليل ولا اطلع عليه مخلوق :تفسير مدارك

மறைவானது என்பது ஆதாரம் இல்லாததும், எந்த படைப்புக்கும் வெளியாக்கப்படாததுமாகும்.

*தஃப்ஸீர்: மதாரிக்.*

தஃஃப்ஸீர் மதாரிக் ஆசிரியரின் வரைவிலக்கணத்தின் படி, அல்லாஹ்வால் வழங்கப்பட்ட அறிவை மறைவானது என்று கூற முடியாது. தாத்தியான (சுயமான) அறிவுக்கும் மட்டும் தான் மறைவானது என்று கூற முடியும்.

இக்கருத்தின் படி, திருக்குர்ஆனில் மறுக்கின்ற அனைத்து வசனங்களும் தாத்தியான சுயமான அறிவு மற்றவருக்கு இருப்பதையே மறுக்கின்றன என்பது தெளிவாகி விட்டது.! இந்த வகையில், பிரச்சனைக்கான விடையும் கிடைத்து விட்டது!

மேற்கண்ட திருவசனத்திற்கு சற்று மேலே பின் வரும் வசனமும் வருகிறது.

وَمَا مِنْ غَائِبَةٍ فِي السَّمَاءِ وَالْأَرْضِ اِلَّا فِي كِتَابٍ مُّبِينٍ

***"வானத்திலும் பூமியிலும் மறைவாக இருக்கின்ற எதுவும் (லவ்ஹுல் மஹ்பூழ்) என்னும் தெளிவான ஏட்டில் இல்லாமல் இல்லை."***

*(அல் குர்ஆன்: 27: 75).*

இத்திருவசனத்தின்படி மறைவான அனைத்தும் லௌஹுல் மஹ்ஃஃபூழில், அல்லது திருக்குர்ஆனில் இருக்கின்றது என்பது தெரிய வருகின்றது.!

ஃஃபதாவா நவவியில் பின் வரும் குறிப்பு வருகிறது.

ما معني قول الله لا يعلم من في السموات واشباه ذلك مع انه قد علم ما في غد ؟ والجواب . معناه لا يعلم ذلك استقلالا واما المعجزات والكرامات فحصلت باعلام الله لا استقلالا فتاوي نووي

கேள்வி:

ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் எதிர்காலத்தில் நடக்கக்கூடியதைப் பற்றி கூறியிருக்கின்றார்கள். அப்படியாயின்,“வானங்களிலும் பூமியிலும் மறைந்திருப்பதை யாரும் அறிய மாட்டார்கள்.” என்பன போன்ற வசனங்களுக்கு என்ன பொருள்?

பதில்:

சுயமாக மறைவானவற்றை எவராலும் அறிய முடியாது! முஃஜிஸாத், கறாமாத் மூலம் (மறைவானவற்றை அறிதல் என்பது) அல்லாஹுத்தஆலா அறிவித்துக் கொடுத்ததனால் ஏற்படுவதாகுமே தவிர, சுயமாக அறிந்து கூறுவதல்ல.

*ஃபதாவா நவவி*

இமாம் இப்னு ஹஜர் மக்கி ரஹ்மத்துல்லாஹி அலைஹி அவர்கள். ஃபதாவா ஹதீதியாவில் கூறுகின்றார்கள்.

ما ذكرناه في الايت صرح به النووي في فتاواه فقال لا يعلم ذلك استقلالا وعلم احاطة بكل المعلومات .فتاوي حديثية

இத்திருவசனம் தொடர்பாக நாம் கூறியதைப் பற்றி இமாம் நவவி ரஹ்மத்துல்லாஹி அலைஹி தங்களுடைய ஃபத்வாவில் தெளிவாகக் கூறியிருக்கிறார்கள். மறைவானவற்றை சுயமாகவும், தெய்வீக அறிவுகளைச் சூழ்ந்தும் எவராலும் அறிய முடியாது.

*ஃபதாவா ஹதீதிய்யா.*

நஸீமுர் றியாழில் பின் வருமாறு எழுதப்பட்டுள்ளது.

هذا لا ينافي الايت الدالة علي انه لا يعلم الغيب الا الله فان المنفي علمه من غير واسطة اما اطلاعه عليه باعلام الله فامر متحقق . نسيم الرياض

நமது இந்த பேச்சு மறைவானவற்றை அல்லாஹ்வைத் தவிர வேறு எவரும் அறியமாட்டார்கள் என்ற திருவசனத்திற்கு எதிரானது அல்ல! ஏதும் தொடர்புகளால் அன்றி சுயமாக அறிவதைத்தான் இத்திருவசனம் மறுக்கின்றது. அல்லாஹுத்தஆலா கற்றுக் கொடுப்பதன் மூலமாக மறைவானவற்றை அறியலாம் என்பது திட்டவட்டமாக நிரூபிக்கப் பட்டதாகும்.

*நஸீமுர் றியாழ்.*

மறுப்பாளர்களான தேவ்பந்திகளும் நமது இந்த விளக்கத்தை ஏற்றுத்தான் ஆக வேண்டும்.! காரணம்,

சில மறைவானவற்றை அறியலாம் என்று இவர்களும் தான் கூறுகின்றனர். இதை ஏற்க மறுத்தால், மேற்கண்ட வசனம் இவர்களுக்கும் எதிராகவே அமையும். இத்திருவசனத்தில் சிலதை ஏற்கலாம் என்றில்லை. முழு மறுப்பே உள்ளது.! ஷைத்தான் இப்லீஸ், மலக்குல் மௌத் உள்ளிட்டவர் களுக்கு இல்முல் ஙைபு உண்டு என்று இவர்களும் கூறுகின்றனர்.

*(பார்க்க: பறாஹீனா காதிஆ பக்கம் 50).*

அப்படியாயின் இப்படியான திருவசனங்களுக்கு எப்படி பொருள் கொடுக்கப் போகின்றனர்?

அல்லாஹுத் தஆலா கூறுகின்றான்.

أَنِ الْحُكْمُ أَلَّا لِلَّهِ

***"அதிகாரம் அல்லாஹ்வுக்கே அன்றி (வேறு எவருக்கும்) இல்லை."***

*(அல்குர்ஆன்: 4: 57).*

لَهُ مَا فِي السَّمَاوَاتِ وَمَا فِي الأَرْضِ

***"வானங்களில் உள்ளவையும் பூமியில் உள்ளவையும் அவனுக்கே உரியன."***

*(அல்குர்ஆன்: 2: 225).*

وَكَفَى بِاللَّهِ شَهِيدًا

*“எங்களுக்கும் உங்களுக்குமிடையே அல்லாஹ்வே சாட்சியாளனாக இருக்கப் போதுமானவன்.”*

*(அல் குர்ஆன்: 4: 29).*

وَكَفَىٰ بِاللَّهِ وَكِيلًا

*“உமக்குப் பொறுப்பேற்பவனாக இருக்க அல்லாஹ் போதுமானவன்.”*

*(அல் குர்ஆன்: 4: 81).*

وَكَفَى بِاللَّهِ حَسِيبًا

*கணக்கெடுப்பதில் அல்லாஹ் போதுமானவன்.*

*(அல் குர்ஆன்: 4: 6).*

மேற்கண்ட வசனங்களிலிருந்து தெரியவருவது யாதெனில், அரசாங்கம், ஆட்சி, அதிகாரம், சாட்சி கூறுதல், பொறுப்பு சாட்டுதல், கணக்கெடுத்தல் உள்ளிட்ட யாவும் அல்லாஹ்வுக்கே சொந்தமாகும்.!

இதன்படி, அரசர், இஸ்லாமிய ஆட்சியாளர், சொத்துகளுக்கு உரிமை பாராட்டுதல், முஷ்ரிக்குகளைத் தரகராக்குதல், வழக்குகளில் பொதுமக்களை சாட்சிகளாக்குதல் உள்ளிட்ட இவையெல்லாம் எப்படி கூடும்?

இப்படியாக திருவசனத்தில் வருகின்ற அரசாங்கம், ஆட்சி அதிகாரம், உரிமை உள்ளிட்ட யாவும் அல்லாஹ்வுக்கு சுயமானது! ஏனையவர்களுக்கு இப்படியான பண்புகள் அல்லாஹுத் தஆலா கொடுத்ததினால் தான் கிடைக்கின்றன இவ்வாறு தான் மறைவானவைகள் தொடர்பான திருவசனங்களிலும் கருத்தெடுப்பது அவசியமாகும்.எதார்த்தம் என்பதில் மற்றவர்களுக்கு மறுப்பும் அல்லாஹ் வழங்கியதை என்னும் போது முழுமையான உடன்பாடு உண்டு. அப்படியிருக்க வேறுபாடு ஏன்?

وَمَا عَلَّمْنَاهُ الشِّعْرَ وَمَا يَنبَغِي لَهُ أَنْ هُوَ أَلَّا ذِكْرٌ وَقُرْآنٌ مُّبِينٌ

***" (நபியாகிய) அவருக்கு கவிதையை (இயற்ற) நாம் கற்றுக் கொடுக் கவில்லை; இன்னும் அவருக்கு அது தேவையும் இல்லை, அ(வருக்கு அருளப்படுவ)து நல்லுபதேசமும் தெளிவான குர்ஆனுமே தவிர (வேறு) இல்லை."***

*(அல்குர்ஆன்: 36: 69).*

முஃபஸ்ஸிரீன்கள் இவ்வசனத்திற்கு மூன்று கருத்துக்களைக் கூறியுள்ளனர்.

அறிவுக்கு பல பொருட்கள் உள்ளன.

1) அறிதல்,

2) திறமை (பயிற்சி, அனுபவம்)

இத்திருவசனத்தில் இரண்டாவது கருத்தையே நாட்டப்பட்டுள்ளது. அதாவது, ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கு கவிதை இயற்றும் திறனை நாம் வழங்கவில்லை.! கவிதையில் நல்லது, கெட்டது செய்யும் திறனையும் நாம் வழங்கவில்லை.

கவிதை இருவகைப்படும்.

1) செய்யுள், இதில் ஒலி நயம், எதுகை, யாப்பிலக்கணம் பேணப்படும்.

2) குறுகிய வார்த்தைகள். இதில் புராணம், கற்பனைக் காவியம் அடங்கும்.

இவை கவிதையாகவும் இருக்கலாம், வசனமாகவும் இருக்கலாம். மேற்படி திருவசனத்தில் இரண்டாம் கருத்துத்தான் நோக்கமாகும். அதாவது, அவருக்கு குறுகிய கற்பனையான கவிதைகளை நாம் கற்றுக் கொடுக்கவில்லை. அவர் கூறுவதெல்லாம் உண்மைதான்!

3) கருத்து விபரம் இல்லாத பேச்சு! அதாவது, நாம் அவருக்கு எல்லாவற்றினதும் தெளிவான விளக்கத்தை கற்றுக் கொடுத்து உள்ளோம். மூடலான, அறிவுக்கு ஒவ்வாதவற்றை நாம் கற்றுக் கொடுக்கவில்லை.

அல்லாஹுத் தஆலா கூறுகிறான்

وَتَفْصِيلًا لِّكُلِّ شَيْءٍ

*"ஒவ்வொரு பொருளின் விளக்கமாகவும் (திருக்குர்ஆன் இருக்கிறது.)"*

*(அல்குர்ஆன்: 6: 155)*

وَعَلَّمْنَاهُ صَنْعَةَ لَبُوسٍ .

*"போர்க் கவசங்கள் செய்வதை உங்களுக்காக அவருக்குக் கற்றுக் கொடுத்தோம்."*

*(அல்குர்ஆன்: 21: 80).*

இத்திருவசனத்தில் குறிப்பிடப்படும் அறிவு "திறன்" ஆகும்.

ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள்.

علموا بنيكم الرمي عن جابر رضي الله عنه ديلمي

உங்கள் குழந்தைகளுக்கு அம்பெறிதலைக் கற்றுக்கொடுங்கள்.

*அறிவிப்பவர்: ஷாபிர் ரலியல்லாஹு தஆலா அன்ஹு.*

*நூல்: தைலமி.*

தஃப்ஸீர் ரூஹுல் பயானில் மேற் கண்ட திருவசனத்திற்கான விளக் கத்தில் பின் வருமாறு கூறப்பட்டுள்ளது.

والاصح انه لا يحسنه ولكن كان يميز جيد الشعر ورديه

மிகச் சரியான கூற்றின் படி, நபிகளார் ஸல்லல்லாஹு அலைஹி வசல்லமவர்களுக்கு சிறப்பான வகையில் கவிதை இயற்ற முடியாது. ஆயினும், கவிதையில் நல்லது, கெட்டதைப் பிரித்தறிய முடியும்.

தஃப்ஸீர் ரூஹுல் பயானில் மேலும் இதே இடத்தில் எழுதுகின்றார்கள்.

ان المحرم عليه انما هو إنشاء الشعر

ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கு கவிதை இயற்றுவதற்குத் தான் தடை விதிக்கப்பட்டுள்ளது.

அதே தஃப்ஸீரில் மேலும் கூறப்பட்டுள்ளதாவது.

கவிதை என்பது, கருத்துச் செறிவுள்ள குறுகிய வார்த்தைகளாகும். திருக் குர்ஆன் கருத்துச் செறிவுள்ள குறிகிய வார்த்தைகளாகவுமிருப்பதால் திருக்குர்ஆனை கவிதைகள் என்று மக்கத்துக் குறைஷிகள் கூறினார்கள்.

அதனால் தான் ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களையும் بل هو شاعر கவிஞர் என்றனர். அவர்களின் எண்ணத்தில் கவிதையென்று அவர்கள் கூறுவது, பொய்யான பேச்சுக்களையாகும்.

குறைஷிகளின் இப்படியான உளறல்களுக்கு முத்தாய்ப்பு வைப்பதற்காகவே பின் வரும் திருவசனம் இறங்கியது.

أَنْ هُوَ أَلَّا ذِكْرٌ وَقُرْآنٌ مُّبِينٌ

*"இது நல்லுபதேசமும் தெளிவான குர்ஆனுமே தவிர (வேறு) இல்லை."*

*(அல்குர்ஆன்: 36: 69).*

கவிதையின் பொருள் உரை வசனம் ஆயின், இந்த கூற்றுக்கும் இத் திருவசனத்திற்கும் என்ன தொடர்பு இருக்கிறது?

தஃப்ஸீர் மதாரிக்கில் இத்திருவசனத்தின் விளக்கத்தில் இவ்வாறு எழுதுகின்றார்கள்.

اي ما علمنا النبي صلي الله عليه وسلم قول الشعر او ما علمناه بتعليم القرآن الشعر علي معنى ان القرآن ليس بشعر : تفسير مدارك

ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கு கவிதை இயற்றுவதை நாம் கற்றுக் கொடுக்கவில்லை. அவருக்குக்

திருக்குர்ஆனைக் கற்றுக் கொடுப்பதன் மூலம் கவிதையை கற்றுக் கொடுக்கவுமில்லை. இதன் நோக்கம் யாதெனில் திருக்குர்ஆன் கவிதை இல்லை.

*தஃப்ஸீர் மதாரிக்.*

தஃப்ஸீர் காஸினில் பின் வருமாறு எழுதப்பட்டுள்ளது.

திருக்குர்ஆனை கவிதையின் இனத்தில் சேர்த்து கூறப்பட்டதற்கு மறுப்பாக அல்லாஹுத்தஆலா கூறினான். ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கவிஞர் புலவர் என்றும், அவர்களுக்கு இறக்கப்பட்ட வேதமாகிய திருக்குர்ஆனும் கவிதைதான் என்றும் குறைஷிக் காஃபிர்கள் கூறியதும், அவர்களை பொய்யாக்கும் விதத்தில் அல்லாஹுத்தஆலா இந்த திருவசனத்தை இறக்கி வைத்தான்.

*தஃப்ஸீர் காஸின்.*

மறுப்பாளர்கள் ஒரு வினா எழுப்புகின்றனர்.

ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் மொழி நடை கவிதைக்கு நேர்பட்டிருக்கவில்லை என்று சில அறிவிப்புக்களில் காணக் கிடைக்கின்றது. அதாவது, ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் ஏதும் கவிதைபாடி இருந்தால், அது ஏதும் ஓர் இராகத்திற்கு உட்பட்டதாக இருந்து இருக்கும்.

தஃப்சீர் காஸினில் வரும் கூற்றை கவனியுங்கள்.

اي ما يسهل له ذلك وما يصلح منه بحيث لو غراد نظم شعر لم يتات لذلك

ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கு கவிதை பாடுவது இலகுவானதாக இருக்க வில்லை. அவர்களிடமிருந்து கவிதை சரியாக வரவும் இல்லை. யாருக்காவது கவிதையாக கூற நாடினாலும் அது அவர்களுக்கு இயலாது போய்விடுகின்றது.

தஃப்ஸீர் காஸின். ஸூப்ஸீர் மதாரிகில்

اي جعلناه بحيث لو اراد قرض شعر لم يستهل

அதாவது, ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் கவிதை பாட முனைந்தாலும் அதை அவருக்கு இயலாத ஒன்றாகவே நாம் ஆக்கினோம்.

தஃப்ஸீர் கபீரில்

وما يستهل حتي انه تمثل له بيت شعر سمع منه مزاحفا

ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வசல்லம் அவர்களுக்குக் கவிதை இயற்றுவது கடினமானதாகவே இருந்தது. அன்னார் ஏதும் ஒரு கவிதையை பாட நினைத்தால் கூட முழுமையாக இல்லாமல் துண்டு ஆகவே கூறுவார்கள். இதற்கான பதில் பின் வருமாறு,

கவிதை பற்றிய அறிவு வேறு! கவிதை பாடுவது வேறு! பெரும் பெரும் கவிஞர்களால் கூட கவிதைகளை பாட முடியாமல் இருக்கின்றனர். மிகச்சிறந்த பாடகர்கள், கவ்வாலி (கவி) பாடுபவர்கள் பலருக்கு கவிதை இயற்றும் திறன் அற்றவர்களாகவும் உள்ளனர். ஆனால், இவர்களால் சிறப்பாக பாட முடியும்.

ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கு ரொட்டி சுடத் தெரியாது, ஆனால் ரொட்டியில் நல்லது கெட்டதைப் பாகுபடுத்தி கூறத் நன்றாகவே தெரியும். ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்ளுக்கு கவிதை இயற்றும் திறனோ, பாடுவதற்கான பயிற்சியோ இல்லை.

கவிதையில் நல்லது கெட்டதைப் புரிந்து பாகுபடுத்திக் கூற இயலும் என்பதை (தேவ்பந்திகளாகிய) உங்கள் கூற்றின் மூலம் தெரிய வருகின்றது.!

நாமும் இதே கருத்தைத்தான் கூறுகின்றோம்.

ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்ளுக்கு சில கவிதைகள் பிடிக்கும் சில கவிதைகள் பிடிக்காது.

தஃஃப்ஸீர் றூஹுல் பயானில் இத்திருவசனத்தின் விளக்கத்தில் வருகின்றது.

كان احب الحديث إليه عليه السلام الشعر وايضا كان ابغض الحديث إليه عليه السلام الشعر

ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கு நன்கு பிடித்தமான கவிதைகளும் இருந்தன. அதிக வெறுப்பான கவிதைகளும் இருந்தன. ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் சில கவிதைகளைப் பாடி இருக்கின்றார்கள். சில கவிதைகளை பாடக் கேட்டு பாராட்டி இருக்கின்றார்கள் என்று ஹதீஸ்களில் காண முடிகிறது. அரபுகளின் கூற்றில் மிக உண்மையானது.

الا كل شيئ ما خلا الله باطل

அறிக! அல்லாஹ் அல்லாத யாவும் பாழ்! என்பதாகும்.

கவிதையில் நல்லது கெட்டதைப் பிரித்துப் பார்க்கும் திறன் இல்லை யாயின் இதை எப்படி பாராட்டிக் கூற முடியும்?.

இங்கு கவிதை என்பதன் நோக்கம் விவரம் இல்லாத வார்த்தை அல்லது கருத்து என்பதாகும்.

தப்ஸீர் றூஹுல் பயானில் வருகின்றது.

قال الشيخ الاكبر رضي الله عنه ، اعلم ان الشعر محل الجمال واللغز والتوربة اي ما رمزنا محمدا صلي الله عليه وسلم شيئا ولاا لغزنا ولا خطبناه بشيئ ونحن نريد شيئا ولا جعلناه له الخطاب حيث لم يفهم : تفسير روح البيان

ஷைய்குல் அக்பர் முஹ்யித்தீன் இப்னு அரபி ரலியல்லாஹு அன்ஹு கூறுகின்றார்கள். சொற் செறிவும், புதிரும், சிலேடையும் சேர்ந்தவை தான் கவிதையாகும்.

அதாவது, நாம் ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கு சிலேடையான கருத்துக்களைக் கூற வில்லை, நாம் நாடியதற்கு மாறான வேறு கருத்துக்களையும் கூறவில்லை. புரிய முடியாத செறிவான கரடு முரடான வார்த்தைகளையும் கூறவில்லை. என்பது தான் மேற் கண்ட வசனத்தின் பொருளாகும்.

مِنْهُم مَّن قَصَصْنَا عَلَيْكَ وَمِنْهُم مَّن لَّمْ نَقْصُصْ عَلَيْكَ

***“(நபியே) உமக்கு முன்னர் ரஸூல்கள் பலரை திட்டமாக நாம் அனுப்பியுள்ளோம். அவர்களிலிருந்து சிலர் வரலாற்றை உமக்கு நாம் கூறியுள்ளோம். அவர்களிலிருந்து (மீதமுள்ளவர்கள்) வரலாற்றை உமக்கு நாம் கூறவில்லை.”***

*(அல் குர்ஆன்: 40: 78).*

இத்திருவசனத்தின் விளக்கத்தில் முஃபஸ்ஸிரீன்கள் சில விளக்கங்களை முன் வைக்கின்றனர். அவை வருமாறு,

1) இத்திருவசனத்தில் நபிமார்கள் அனைவரதும் வரலாறுகள் பற்றிய அறிவு பெருமானார் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கு வழங்கப்படவில்லை என்பதற்கு இதில் ஆதாரம் இல்லை. இத் திருவசனத்தின் படி சில நபிமார்களின் வரலாறுகள் தெளிவாகக் கூறப்படவில்லை என்பதையே விளங்க முடிகின்றது.

2) விரிவான விளக்கம் வழங்கப்பட்டதற்கு மறுப்பு உண்டு. சில நபிமார்களின் வரலாறுகள் விரிவாகக் கூறப்பட்டுள்ளது.

3) வெளிப்படையான வஹி மூலம் அனைத்து நபிமார்களை பற்றியும் கூறப்படவில்லை. மறைமுகமான வஹி மூலம் எல்லோரைப் பற்றியும் தெளிவாகக் கூறப்பட்டுள்ளன.

தஃப்ஸீர் ஸாவியில் வருகின்றது.

ان النبي عليه السلام لم يخرج من الدنيا حتي علم جميع الانبياء تفصيلا كيف لا وهم مخلوقون منه وخلفهم ليلة الاسراء في بيت المقدس ولكنه العلم المكنون وانما ترك بيان قصصهم لامته رحمة لهم فلم يكلفهم الا بما كانوا مطيقون

ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் இவ்வுலகை விட்டும் பிரிய முன்னர் அனைத்து நபிமார்கள் பற்றியும் விரிவாக அறிந்துள்ளார்கள். நபிமார்கள் அனைவரும் அன்னாரின் ஒளியிலிருந்து படைக்கப்பட்டிருக்கும் போது அவர்களால் எப்படி அறியாதிருக்க முடியும்?

இஸ்ராவுடைய இரவன்று பைத்துல் முகத்தஸில் அனைத்து நபி மார்களும் நபியவர்களுக்கு பின்னால் நின்று தொழுதுள்ளனர் எனினும், இது மறைக்கப்பட்ட அறிவை ( علم المكنون ) சேர்ந்த பகுதியாகும்.

இவர்கள் அனைவரதும் வரலாற்றை கூறாது தவிர்த்தது உம்மத்திற்கு றஹ்மத்தாகும். மக்களின் தகுதிக்கு மேல் அல்லாஹுத் தஆலா நிர்பந்திப்பதில்லை.

தஃப்ஸீர் ஸாவி மிஷ்க்காத்தின் விரிவுரை மிர்காத் பாகம் 1 பக்கம் 50ல் பின் வருமாறு பதியப்பட்டுள்ளது.

هذا لا ينافيقوله تعالي منهم لم نقصص عليك لان النفس هو التفصيل والثابت هو الاجمال او النفي مفيد بالوحي الحلي لا الثبوت متحقق بالوحي الخفي مرقات .ج ١ صف ٥٠

இவ்வாறு கூறுவது "இன்னும் அவர்களிலிருந்தும் (மீதமுள்ளவர்களின்) வரலாற்றை உமக்குக் கூறவில்லை. (அல் குர்ஆன்: 40: 78 என்ற இத் திருவசனத்திற்கு எதிராக இல்லை.! வரலாற்றை விரிவாக கூறவில்லை என்பதற்குத் தான் மறுப்பு உள்ளது. இவர்களின் வரலாறு சுருக்கமாக கூறப்பட்டிருப்பது உறுதியாகியும் உள்ளது.!

வெளிப்படையான வஹியான திருக்குர்ஆனில் விரிவாக கூறப் பட்டிருப்பதற்குத்தான் மறுப்புள்ளது. மறைமுகமான வஹியான ஹதீஸ் மூலம் கூறப்பட்டிருப்பதற்கு ஹதீதில் ஆதாரம் உள்ளது.!

*மிர்க்காத்.*

திருக்குர்ஆன் கூறுகின்றது

وَكُلًّا نَّقُصُّ عَلَيْكَ مِنْ أَنبَاءِ الرُّسُلِ مَا نُثَبِّتُ بِهِ فُؤَادَكَ

*"(நாம்) ரசூல்மார்களுடைய செய்திகளிலிருந்து ஒவ்வொன்றையும் உம்முடைய இதயத்தை அதன் மூலம் நாம் உறுதிப்படுத்துவதற்காக உமக்கு நாம் சொல்லிக் காட்டுகின்றோம்."*

*(அல் குர்ஆன்: 12: 120).*

**மறைஞானத்தை மறுக்கின்றவர்களின் ஆதாரங்களுக்குப் பதில்.!**

அல்லாஹுத் தஆலா கூறுகின்றான்.

يَوْمَ يَجْمَعُ اللَّهُ الرُّسُلَ فَيَقُولُ مَاذَا أُجِبْتُمْ قَالُوا لَا عِلْمَ لَنَا إِنَّكَ أَنتَ عَلَّامُ الْغُيُوبِ

*"அல்லாஹ் தன் ரஸூல்களை (ஒன்று சேர்க்கும் நாளில் மக்களுக்கு எக்கட்டளைகளை எத்தி வைத்தபோது) நீங்கள் எதைக் கொண்டு பதிலளிக்க பட்டீர்கள்? என்று கேட்பான். (அதற்கு) எங்களுக்கு (அதைப் பற்றிய) அறிவு இல்லை நிச்சயமாக நீயே மறைவானவற்றை மிக்க அறிந்தவன் என்று அவர்கள் கூறுவார்கள்."*

*(அல் குர்ஆன்: 12: 120).*

இத்திருவசனத்திற்கு முஃபஸ்ஸிரீன்கள் மூன்று விதமான கருத்துக் களைக் கூறியுள்ளனர்.

1) யா அல்லாஹ்! உனது அறிவுக்கு முன் எமக்கு அறிவு இல்லை.

2)அல்லாஹ்வுடனான ஒழுக்கத்தின் அடிப்படையில் இவ்வாறு கூறினார்கள்.

3) மறுமை நாளில் அதன் அகோரத்தினால் நபிமார்கள் யாவரும் "யாநப்ஸி!". "யாநப்ஸி! என்று கூறிக் கொண்டிருப்பார்கள். இந்த இக்கட்டான கட்டத்தில் தான் நபிமார்கள் இப்படி கூறுவார்கள் இதன்பின் நபிமார்களின் கூற்று இவ்வாறு அமையும்.!

யா அல்லாஹ்! எங்கள் சமுதாயத்தினருக்கு தவ்ஹீதை எடுத்துக் கூறினோம். அதை அவர்கள் ஏற்க மறுத்துவிட்டனர். காஃபிர்கள் இதை ஆட்சேபித்து; " உமது கட்டளைகள் பற்றிய விளக்கம் எங்களுக்கு வந்து சேரவில்லை"! என்று கூறுவார்கள்.

இச்சந்தர்ப்பத்தில், முஹம்மது முஸ்தஃபா ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் உம்மத்தினர் முன் வந்து முந்திய நபிமார்கள் சார்பாக சாட்சியம் கூறுவார்கள்.

தஃப்ஸீர் காஸினில் இத்திருவசனத்திற்கான விளக்கம் பின் வருமாறு உள்ளது.

فعلي هذا القول انما نفوا العلم من انفسهم وان كانوا علماء لان علمهم صار كلا علم عند علم الله : تفسير خازن

இத்திருவசனத்தில் கூறப்பட்டுள்ள படி, இதுபற்றி எங்களுக்கு அறிவு இல்லை என்று நபிமார்கள் கூறுவது போன்று உள்ளது. ஆனாலும்; நபிமார்களுக்கு இது பற்றிய அறிவு உண்டு. இவ்வாறு கூறியதற்கான காரணம், அல்லாஹ்வின் அறிவுக்கு முன்னால் இவர்கள் அறிவற்றவர்கள் போன்று ஆகிவிட்டார்கள்.

*தஃப்ஸீர் காஸீன்.*

தஃப்ஸீர் மதாரிக் பின் வரும் விளக்கத்தை கூறுகிறது.

قالوا ذلك تأدبا اي علمنا مع علمك فكانه لا علم لنا :تفسير مدارك

நபிமார்கள் ஒழுக்கத்தின் அடிப்படையில் இப்படி கூறினார்கள். அதாவது, எங்களுடைய அறிவு உன்னுடைய அறிவுக்கு முன்னால் இல்லாதது போன்றது தான்.!

*தப்ஸீர்: மதாரிக்.*

தஃப்ஸீர் கபீர் இவ்வாறு விளக்கம் தருகிறது.

ان الرسل عليهم السلام كما علموا ان الله عالم لا يجهل حليم لا يسفه عادل لا يظلم علموا ان قولهم لا يفيد خيرا ولا يدفع شرا والادب في السكوت وتفويض الامر الي الله وعدله فقالوا لا علم لنا

அல்லாஹுத்தஆலா அறிவுள்ளவன், அறிவிலி அல்ல! சகிப்புத் தன்மை உள்ளவன், பேதையல்ல.! நீதியானவன், அநியாயக்காரனல்ல!

(இந்நிலையில்) தங்களின் கூற்று பயனளிக்கவோ, சோதனையிலிருந்து தடுக்கவோ சக்தியற்றது என்பதை நபிமார்கள் அறிந்ததனால் ஒழுக்கத்துடன் மௌனத்தைக் கடைபிடித்தனர். விவகாரத்தை அல்லாஹுத்தஆலாவின் நீதியின் பக்கம் பாரப்படுத்தினர். அதனால் தான் இது பற்றிய அறிவு எமக்கில்லை என்று கூறினர்.

*தஃப்ஸீர் கபீர்.*

தஃப்ஸீர் பைழாவி விளக்கம் தருகிறது.

وقيل المعني لا علم لنا الي جنب علمك :تفسير بيضاوي

இதன் பொருள் உனது அறிவுக்கு முன்னால் எமக்கு அறிவில்லை என்றும் கூறப்படுகின்றது.

*தஃப்ஸீர் பைழாவி.*

தஃப்ஸீர் ரூஹுல் பயான் கூறுகிறது.

ان هذا الجواب يكون في بعض مواطن القيمة وترجع عقولهم اليهم فيشهدون علي قومهم انهم بلغوا الرسالة وان قومهم كيف ردوا عليهم

இப்படியான பதில் மறுமையில் சில கட்டங்களில் நடப்பதாகும். பின்னர் நிம்மதி பெற்ற பின் தங்களது சமூகத்தினர் பற்றி சாட்சியம் பகிர்வார்கள். நாங்கள் தவ்ஹீதை ஏற்றி வைத்தோம் அதற்கு அவர்கள் எப்படிப் பதில் கூறினார்கள் என்பதையும் கூறுவார்கள்.

*தஃப்ஸீர்: றூஹுல் பயான்.*

அல்லாஹுத் தஆலா கூறுகின்றான்.

وَمَا أَدْرِي مَا يُفْعَلُ بِي وَلَا بِكُمْ

***“(மேலும்,) என்னைக் கொண்டும், உங்களைக் கொண்டும் என்ன செய்யப்படும் என்பதை நான் அறிய மாட்டேன்.“***

*(அல் குர்ஆன்: 46: 9).*

மறுப்பாளர்களான தேவ்பந்திகள் ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கு மறைவான ஞானம் இல்லை என்பதற்கு இத்திருவசனத்தையும் ஆதாரமாகக் காட்டுகின்றனர். அதாவது, "தனக்கும், மற்றவர்களுக்கும் என்ன நடக்கும் என்பது ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்குத் தெரியாதுள்ளது." மறுமை நாளில் எம்முடன் என்ன நடக்கும் என்பது கூட அவர்களுக்கு தெரியாது!. அப்படியிருக்க, அவர்களுக்கு மறைவான ஞானம் எப்படி இருக்கும்? இது அவர்களின் வாதம்!

இத்திருவசனத்திற்கு முஃபஸ்ஸிரீன்கள் இரு விளக்கங்களை முன் வைக்கின்றனர்.

1) அனுமானித்துக் கூறுவதற்குத்தான் இத்திருவசனத்தில் மறுப்புள்ளது. அறிவுபூர்வமாக கூறுவதற்கு அல்ல! " உறுதியில்லாமல் உபதேசமாக கூறுவது தான் அனுமானம்" ஆகும்! அதனால் இவை யாவற்றையும் அனுமானத்தின் மூலமாகவன்றி அறிவுபூர்வமாகவே அறிவேன்.

2) மறுமை பற்றிய தெளிவான விளக்கம் வழங்கப்படுவதற்கு முன் கூறப்பட்டது. அதனால், இத் திருவசனம் மாற்றப்பட்டுள்ளது. தஃப்ஸீர் ஸாவி கூறுகின்றது.

ما خرج عليه السلام من الدنيا حتي علمه الله في القرآن ما يعمل به وبالموءمنين في الدنيا والاخرة اجمالا وتفصيلا : تفسير صاوي

ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் இவ்வுலகை விட்டுப் பிரியும் முன்பே அவர்களைப் பற்றியும், முஃமின்கள், காஃபிர்கள் பற்றியும் இவ்வுலகிலும், மறுமையிலும் என்ன நடக்கும் என்பது பற்றியும் சுருக்கமாகவும், விரிவாகவும் திருக்குர்ஆனில் குறிப்பிட்டுள்ளான்.

*தஃப்ஸீர் ஸாவி*

وَمَاادْرِىْ مَا يُفْعَلُ بِىْ وَلَا بِكُمْ

***"என்னோடும், உங்களோடும் என்ன நடக்கும் என்பதை நான் அறியேன்."***

*(அல் குர்ஆன்: 46: 9).*

اِنَّا فَتَحْنَا لَكَ فَتْحًا مُّبِيْنًا

என்ற திருவசனம் ***"நாம் உமக்கு திறப்பது கொண்டு திறந்து தந்தோம்".***

*(அல் குர்ஆன்: 48:01).*

என்ற திருவசனத்தின் மூலம் மாற்றப்பட்டுள்ளது.

தஃப்ஸீர் காஸின் தரும் விளக்கம். இதோ,

لما نزلت هذه الآية فرح المشركون فقالوا واللات والعزي ما امرنا وامر محمد الا واحدا ، وما له علينا من مزية وفضل لولا انه ما ابتدع ما يقوله لاخبره الذي بعثه ما يفعل به فانزل الله عز و جل ليغفر لك الله ما تقدم من ذنبك الآية .. فقالت الصحابة هنيئا لك يا نبي الله قد علمت ما يفعل بك فماذا يفعل بنا فانزل الله ليدخل الموءمنين والموءمنات جنت الاية ، وانزل وبشر الموءمنين بان لهم الله فضلا كبيرا وهذا قول انس، وقتادة ، وعكرمة قالوا انما هذا قبل ان يخبر وانما اخبر بغفران بغفران ذنبه عام الحديبية فنسخ ذلك ، : تفسير خازن

இத்திருவசனம் இறங்கியதும் முஷ்ரிக்குகள் புளகாங்கிதம் அடைந்தனர். எங்களின் (விக்ரகங்களான) லாத், உஸ்ஸா மீது ஆணையாக! எங்களுடையதும், முஹம்மத் (ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்) துடையதும் நிலை ஒரே நிலை தான். எங்களுக்கும், அவருக்குமிடையில் வித்தியாசம் இல்லை. திருக்குர்ஆனை அவராக பனைந்து கூறவில்லை.

திருக்குர்ஆனை அனுப்புகின்றவன் தான் அவருக்கும் என்ன நடக்கும் என்பதை அறிவிக்கின்றான். (என்று கூறி முடிக்க முன்) பின்வரும் திரு வசனத்தை அல்லாஹுத் தஆலா இறக்கினான்.

اِنَّا فَتَحْنَا لَكَ فَتْحًا مُّبِيْنًا, لِيَغْفِرَ لَكَ اللّٰهُ مَا تَقَدَّمَ مِنْ ذَنْبِكَ وَمَا تَأَخَّرَ وَيُتِمَّ نِعْمَتَهُ عَلَيْكَ وَيَهْدِيَكَ
صِرَاطًا مُسْتَقِيمًا, وَيَنصُرَكَ اللّٰهُ نَصْرًا عَزِيزًا, هُوَ الَّذِىْ اَنْزَلَ السَّكِيْنَةَ فِىْ قُلُوْبِ الْمُؤْمِنِيْنَ لِيَزْدَادُوْا اِيْمَانًا
مَّعَ اِيْمَانِهِمْ وَلِلّٰهِ جُنُوْدُ السَّمٰوٰتِ وَالْاَرْضِ ۗ وَكَانَ اللّٰهُ عَلِيْمًا, لِّيُدْخِلَ الْمُؤْمِنِيْنَ وَالْمُؤْمِنٰتِ جَنّٰتٍ تَجْرِىْ
مِنْ تَحْتِهَا الْاَنْهٰرُ خٰلِدِيْنَ فِيْهَا وَيُكَفِّرَ عَنْهُمْ سَيِّاٰتِهِمْ ۗ وَكَانَ ذٰلِكَ عِنْدَ اللّٰهِ فَوْزًا عَظِيْمًا وَّيُعَذِّبَ الْمُنٰفِقِيْنَ
وَالْمُنٰفِقٰتِ وَالْمُشْرِكِيْنَ وَ الْمُشْرِكٰتِ الظَّآنِّيْنَ بِاللّٰهِ ظَنَّ السَّوْءِ ۗ عَلَيْهِمْ دَآئِرَةُ السَّوْءِ وَ غَضِبَ اللّٰهُ عَلَيْهِمْ
وَلَعَنَهُمْ وَاَعَدَّ لَهُمْ جَهَنَّمَ ۗ وَسَآءَتْ مَصِيْرًا

*"(நபியே!) நிச்சயமாக நாம் உமக்கு தெளிவான வெற்றியாக வெற்றியை வழங்கினோம். உம்முடைய பாவத்தில் முந்தியதையும், பிந்தியதையும் அல்லாஹ் உமக்கு மன்னிப்பதற்காகவும், நேரான வழியில் உம்மை நடத்துவதற்காகவும். இன்னும் வலிமை மிக்க ஓர் உதவியாக அல்லாஹ் உமக்கு உதவி அளிப்பதற்காகவும் (இவ்வாறு) வெற்றி அளித்தான்.*

*அவன் எத்தகையவனென்றால் முஃமின்களின் உள்ளங்களில் அவர்களுடைய ஈமானுடன் மேலும் ஈமானை அவர்கள் அதிகமாக்கிக் கொள்வதற்காக சாந்தியை இறக்கி வைத்தான். மேலும், வானங்களுடைய, பூமியுடைய படைகள் அல்லாஹ்வுக்கே உரியவை. அல்லாஹ் அனைத்தையும் முற்றிலும் அறிந்தவனாகவும், ஞான மிக்கவனாகவும் இருக்கிறான்.*

*முஃமினான ஆண்களையும், முஃமினான பெண்களையும் சொர்க்கங்களில் அவன் புக வைப்பதற்காக (இவ்வாறு செய்தான்.) அவற்றின் ஆறுகள் ஓடிக்கொண்டிருக்கும். அவற்றில் அவர்கள் நிரந்தரமாக இருப்பார்கள். இன்னும் அவர்களை விட்டும் அவர்களுடைய தீமைகளை அகற்றுவதற்காகவும் (இவ்வாறு செய்தான்.) இது அல்லாஹ்விடத்தில் மகத்தான வெற்றியாக இருக்கின்றது.*

*மேலும், அல்லாஹ்வை பற்றி கெட்ட எண்ணம் கொண்டவர்களான முனாஃபிக்கான ஆண்களையும், முனாஃபிக்கான பெண்களையும் இணை வைக்கின்ற ஆண்களையும், இணை வைக்கின்ற பெண்களையும் அவன் வேதனை செய்வதற்காகவும், (இவ்வாறு செய்தான்).*

*கேட்டின் சுழற்சி அவர்களின் மீது இருக்கும். அல்லாஹ் அவர்களின் மீது கோபம் கொண்டு அவர்களைச் சபித்து அவர்களுக்காக நரகையும் சித்தப்படுத்தியுள்ளான். சேருமிடத்தால் அது மிகக் கெட்டதாகிவிட்டது."*

*(அல் குர்ஆன்: 48: 1-6).*

இத்திருவசனங்கள் இறங்கியதும் ஸஹாபாக்கள் மகிழ்ச்சி மீக்குற்றனர். ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களிடம் நேரில் வந்து வாழ்த்து கூறினர். உங்களின் நிலையையும் எங்கள் நிலையையும் நீங்கள் நன்கு அறிந்து உள்ளீர்கள்.

முஃமினான ஆண்களும், முஃமினான பெண்களும் சுவர்க்கம் புகுவர் என்று திருமறை வசனம் இறங்கிவிட்டது.

முஃமின்களுக்கு இச்செய்தியை கூறுமாறும் இது அல்லாஹ்வின் மகத்தான நற்பாக்கியம் என்றும் அல்லாஹுத் தஆலா வசனத்தை இறக்கினான். மேற் கண்ட விளக்கம் ஹளறத் அனஸ், ஹளறத் கதாதா, ஹளறத் இக்றிமா றழியல்லாஹு அன்ஹும் உள்ளிட்டோரின் கூற்றுக்களாகும்.

وَمَا اَدْرِىْ مَا يُفْعَلُ بِىْ وَلَا بِكُمْ

*"மேலும், என்னை கொண்டும் உங்களை கொண்டும் என்ன செய்யப்படும் என்பதை நான் அறிய மாட்டேன்."*

*(அல் குர்ஆன்: 46: 9).*

என்ற திருவசனம் (அல் குர்ஆன்: 48: 1-6). திருவசனத்தின் மூலம் மாற்றப்பட்டுள்ளது. மாற்றப்பட்ட திருவசனத்தை ஆதாரமாகக் கொண்டு வருவது மக்களை குழப்பும் செயலாகும். "நான் அறிய மாட்டேன்" (அல் குர்ஆன்: 46: 9). என்ற திருவசனம் ஒரு தகவலாகும். வரலாறு மாற்றப்படுவதில்லை என்று யாராவது கூறினால் அதற்கான நமது பதில் இதோ!

1) அதிகமான அறிஞர்கள் தகவல் (خير) மாற்றப்படுவது கூடும் என்று கூறியுள்ளனர். உதாரணமாக,

وَاِنْ تُبْدُوْا مَا فِىْٓ اَنْفُسِكُمْ اَوْ تُخْفُوْهُ يُحَاسِبْكُمْ بِهِ اللّٰهُ

***"உங்களின் மனங்களில் உள்ளதை நீங்கள் வெளிப்படுத்தினாலும் அல்லது அதை நீங்கள் மறைத்தாலும் அல்லாஹ் அதைப் பற்றி உங்களிடன் கணக்குக் கேட்பான்."***

*(அல் குர்ஆன்: 2: 284).*

என்ற திருவசனம்,

لَا يُكَلِّفُ اللّٰهُ نَفْسًا اِلَّا وُسْعَهَا

***"அல்லாஹ் எந்த ஆத்மாவிற்கும் அதனுடைய சக்திக்கு உட்பட்டு அதைத்தவிர சிரமம் கொடுப்பதில்லை."***

*(அல் குர்ஆன்: 2: 286).*

என்ற திரு வசனத்தினால் மாற்றப்பட்டுள்ளது.

அவ்வாறு (46: 9) என்ற திரு வசனம் (48: 1-6) என்ற திரு வசனத்தின் மூலம் மாற்றப்பட்டுள்ளது.

இக்கருத்தை ஹளறத் இப்னு அப்பாஸ், ஹளறத் அனஸ் இப்னு மாலிக் றழியல்லாஹு அன்ஹுமா உள்ளிட்டோர் கூறுகின்றனர்.

*ஆதாரம்: தஃப்ஸீர் கபீர்,*

*துர்ருல் மன்தூர்,*

*அபூ ஸுஊது.*

2) "என்னைக் கொண்டும், உங்களைக் கொண்டும் என்ன செய்யப்படும் என்பதை நான் அறிய மாட்டேன்"

என்ற திருவசனத்தின் முன் "கூறுவீராக"! என்ற ஒரு வாக்கியம் மறைந் திருக்கின்றது. இதன்படி, நபியே! கூறுவீராக! என்னை கொண்டும், உங்களை கொண்டும் என்ன செய்யப்படும் என்பதை நான் அறிய மாட்டேன் என்று கூறுவீராக! என்றுள்ளது. இது கட்டளை வாக்கியமாகும். மாற்றம் இதனோடு தான் தொடர்புபட்டுள்ளது.

3) வெளித் தோற்றத்தில் சில திருவசனங்கள் “தகவல்" போன்று இருக்கும். கருத்தில் கட்டளையாகும்.

எடுத்துக் காட்டாக, “நோன்பு உங்களுக்கு கடமையாக்கப்பட்டுள்ளது!”, "அல்லாஹ்வுக்காக கஃபத்துல்லாவை ஹஜ் செய்வது மனிதர்களுக்கு கடமையாகும்" இவை போன்ற திருவசனங்களில் மாற்றம் வருவது சாத்தியமாகும்.

4) எமது கருத்தில் முரண்பாடு கிடையாது. தஃப்ஸீர்கள் ஹதீஸ்கள் கூறுவதை தான் நாமும் கூறுகின்றோம்.

“தகவல்" மாற்றப்படலாம் என்று நாமாக சுயமாகக் கூறவில்லை.

ஆகையால், எனது கருத்தில் முரண்படுபவர்கள் எதார்த்தத்தில் ஹதீஸ்களோடும், தஃப்ஸீர்களோடுமே முரண்படுகின்றனர்.

நமது மேற்கண்ட விளக்கத்தை ஏற்க மறுத்தால் பல நூறு ஹதீஸ்களை மறுக்க வேண்டி வரும்.!

மறுமையில் நடப்பவற்றை விலாவாரியாக ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறியிருக்கின்றார்கள். தனிநபர்களின் முடிவுகள் பற்றியும் நிறையவே கூறியிருக்கின்றார்கள்.

எடுத்துக்காட்டாக, ஹளறத் அபூபக்கர் ஸித்தீக் ரழியல்லாஹு தஆலா அன்ஹு சொர்க்கவாதியாவார், ஹளறத் ஹஸன், ஹளறத் ஹுஸைன் றழியல்லாஹு அன்ஹுமா ஆகிய இருவரும் சொர்க்கத்தில் இளவல்களின் தலைவர்கள், பாத்திமத்துஸ் ஸஹ்றா றழியல்லாஹு அன்ஹா மாதர் குலத்தரசி.

மறுமையில் "லிவாஉல் ஹம்து" என்ற கொடி என் கரத்தில்தான் இருக்கும். ஹளறத் நபி ஆதம் அலைஹிஸ்ஸலாம் உட்பட அனைத்து மக்களும் எனது கொடியின் கீழே தான் இருப்பார்கள். ஷஃபாஅத்துல் குபுறா (شفاعة الكبري)வை நாம் தான் செய்வோம். எனது ஹவ்ழுல் கௌதர் தடாகம் இப்படி இருக்கும். இன்னும் பல...

சிலரை சொர்க்கவாசிகள் என்றார்கள். மற்றும் சிலரை நரகவாசிகள் என்றார்கள். ஒருவர் யுத்தத்தில் அபாரமாக போராடி படுகாயமடைந்தார். அவரின் வீர தீரத்தை ஸஹாபாக்கள் ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களிடம் பாராட்டி கூறியதைக் கேட்ட ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வசல்லம், "அவர் நரகவாதி" என்றார்கள். பின்னர், அவர் தற்கொலை செய்து கொண்டார். ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹி அலைஹி வஸல்லம் அவர்களுக்கே அவர்களின் முடிவு தெரியாதிருந்தால் (மஆதல்லாஹ்!) அடுத்தவர்களின் முடிவுகளையும், மறுமையில் அவர்களின் நிலைகளையும் எப்படிக் கூற முடியும்?

ஈமானைக் கொண்டு முத்திரை குத்தப்பட்டவர்கள் தான் உண்மையான முஃமின்கள் ஆகும். இது தொடர்பான ஏராளமான ஆதாரங்களை முன் வைக்க முடியும். விரிவஞ்சி இத்துடன் சுருக்கிக் கொள்கின்றோம்.

விளக்கத்தை உள்ளது உள்ள படி விளங்குவதற்கு அல்லாஹுத் தஆலா தௌஃபீக் செய்வானாக! ஆமீன்.

அல்லாஹுத் தஆலா கூறுகின்றான்.

مَرَدُوا عَلَى النِّفَاقِ لَا تَعْلَمُهُمْ نَحْنُ نَعْلَمُهُمْ

***"உங்களைச் சுற்றியுள்ள நாட்டுப்புற அரேபியர்களில் முனாஃபிக்குகளும் இருக்கின்றனர். மதீனா வாசிகளில் (முனாஃபிக்குகளில்) நயவஞ் சகத்தின் மீது நிலைத்து விட்டனர். அவர்களை நீர் அறிய மாட்டீர்.! நாம் அவர்களை அறிவோம்.***

*" (அல் குர்ஆன்: 9:101).*

ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கு மறைவான ஞானம் இல்லை என்பதற்கு மறுப்பாளர்களான தேவபந்திகள் இவ்வசனத்தை ஆதாரமாகக் காட்டுகின்றனர்.

ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் திருச்சபைக்கு வருகை தரும் நயவஞ்சகர்களை அறியாதிருக்கும் போது, நபியவர்களுக்கு மறைவான ஞானம் இருப்பதாக எப்படிக் கூற முடியும்? என்று கேள்வி எழுப்புகின்றனர். முஃபஸ்ஸிரீன்கள் இத்திரு வசனத்திற்கு பின் வருமாறு விளக்கம் பகர்கின்றனர்.

மேற் கண்ட 9:101 என்ற திருவசனம் இறங்கிய பின்னர், பின் வரும் திருவசனம் இறங்கியது. இத்திருவசனம் மேற்கண்ட திருவசனத்தை மாற்றியது.

மாற்றிய திருவசனம் இது தான்

وَلَوْ نَشَآءُ لَاَرَيْنٰكَهُمْ فَلَعَرَفْتَہُمْ بِسِيْمٰهُمْ‌ؕ وَلَتَعْرِفَنَّهُمْ فِىْ لَحْنِ الْقَوْلِ‌ؕ وَاللّٰهُ يَعْلَمُ اَعْمَالَكُمْ .

***"நாம் நாடினால் அவர்களை உமக்கு நாம் காண்பிப்போம். அப்போது அவர்களுடைய (முக) அடையாளத்தைக் கொண்டு அவர்களை நீர் அறிந்து கொள்வீர்.! இன்னும் (உண்மையை மறைத்துப் பேசும் அவர்களுடைய) பேச்சின் தொனியிலும் திண்ணமாக அவர்களை நீர் அறிந்து கொள்வீர்., அல்லாஹ் உங்களுடைய செயல்களை அறிவான்."***

*(அல் குர்ஆன்: 47: 30).*

அல்லது, நாம் அறிவித்துத் தராமல் நீர் அவர்களை அறிய மாட்டீர் என்பதும் இதன் கருத்தாகும்.

தஃப்ஸீர் ஜமல் பின் வரும் விளக்கத்தைத் தருகிறது.

فان قلت كيف نفي عنه علم بحال المنافقين واثبته في قوله تعالي ولتعرفنهم في لحن القول؟

فالجواب : ان اية النفي نزلت قبل اية الاثبات :تفسير جمل

பேச்சின் தொனியிலும் திண்ணமாக அவர்களை நீர் அறிந்து கொள்வீர்! (அல் குர்ஆன்: 47: 30). என்ற திருமறை வசனத்தில் முனாஃபிக்குகளை நபியுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் நன்கு அறிவார்கள் என்றிருக்கும் போது, முனாஃபிக்குகளின் நிலைகள் பற்றிய அறிவு பெருமானாருக்கு இல்லை என்று எப்படிக் கூற முடியும்? என்று நீர் கேட்டால், அதற்கான பதில் இதோ!

முனாஃபிக்குகளின் நிலைகளை பெருமானார் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் அறிவார்கள் என்று ஊர்ஜிதம் செய்த 47:30, வசனம் இறங்குவதற்கு முன்பு தான் மேற்படி 9:101, திரு வசனம் இறங்கியது.

*தஃப்ஸீர் ஷமல்.*

மேலும்,

فكان بعد ذلك لا يتكلم منافق عند النبي صلي الله عليه وسلم الا عرفه ويستدل علي فساد باطنه ونفاقه . تفسير جمل (٧٤: ٠٣)

(47: 30) திருவசனம் இறங்கிய பின், ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் அவையில் முனாஃபிக்குகள் உரையாடுவார்களாயின், அவர்களை இனம் கண்டு கொள்வார்கள்.

அவர்களின் அந்தரங்கம் (மனம்) கெட்டிருப்பதை நயவஞ்சகத்தின் ஆதாரமாக எடுத்துக் கொள்வார்கள்.

*தஃப்ஸீர் ஷமல்.*

خفي عليك حالهم مع كمال فطنطك وثدق فراستك :تفسير بيضاوي

பூரணமான உங்களின் விவேகமும், உண்மையான குறிப்பறிவும் இருந்தும் கூட அவர்களின் நிலை உங்களுக்கு மறைந்துவிட்டது!:

*தஃப்ஸீர் பைழாவி*

அச்சொட்டாக இல்லாமல் அனுமானமாக குறிப்பறிந்து கூறுவதற்குத் தான் இங்கு மறுப்பு உள்ளது.!

இத்திருவாசகத்திற்கு இப்படியான விளக்கம் பகரப் படாவிட்டால், ரஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் முனாஃபிக்குகளை நன்கு அறிந்திருந்தும், திரைமறைவில் அவர்களுடன் நடந்து கொண்டதற் கான பல ஹதீதுகள் ஆதாரங்களாக உள்ளன. அவையனைத்துடனும் முரண்பட வேண்டி வரும்.!

خطب رسول الله صلي الله عليه وسلم يوم الجمعة فقال اخرجيا فلان فانك منافق فاخرج منهم ناسا ففضحهم عيني شرح البخاري ج، ٤ ص,١٢٢

வெள்ளிக்கிழமை ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் குத்பாப் பிரசங்கம் நிகழ்த்திக் கொண்டிருக்கும் போது ஒரு நபரை சுட்டிக்காட்டி 'நீ முனாஃபிக்! நயவஞ்சகன், இங்கிருந்து வெளியேறு!' என்றார்கள். அப்போது அவமானத்தோடு பலர் வெளியேற்றப்பட்டனர்.

*ஆதாரம்: ஐனி, புகாரிஷ்ஜரீஃப் விரிவுரை.*

*பாகம்: 04 பக்கம்: 221.*

عن ابن عباس رضي الله عنهما كان المنفقون من الرجال ثلث مائة ومن النساء مائة وسبعين شرح الشفا لملا علي القاري رحمه الله

ஆண்களில் முன்னூறு முனாஃபிக்குகளும், பெண்களில் 70 பேரும் இருந்தனர்.

*அறிவிப்பவர்: இப்னு அப்பாஸ் ரழியல்லாஹு அன்ஹுமா.*
*ஆதாரம்: ஜறஹுஷ் ஜிஃபா. (அல்லாமா, முல்லா அலி காரி, றஹ்மதுல்லாஹி அலைஹி.)*

இல்முல் ஙைபை ஊர்ஜிதம் செய்யும் ஆதாரங்கள் என்ற பகுதியில் ஒரு ஹதீதை முன் வைத்திருந்தோம். அதை மீண்டும் இங்கே தருகின்றோம். படியுங்கள்.!

ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் கூறினார்கள். எனது உம்மத்தினரை எனக்கு எடுத்துக் காட்டப்பட்டது. அவர்களுள் முஃமின், முனாஃபிக், காஃபிர்கள் யார் யார் என்பதை நான் அடையாளம் கண்டு கொண்டேன். இதனை முனாஃபிக்குகள் ஆட்சேபித்தனர்.

இவர்களுக்குப் பதில் கூறும் விதத்தில் மேற் கண்ட வசனம் இறங்கியது. மேற்கண்ட அனைத்து ஆதாரங்களுக்குமிடையில் ஓர் உடன்பாடு காணப்பட வேண்டுமாயின், நான் முன் வைத்த விளக்கத்தை ஏற்க வேண்டியது அவசியமாகும். '

அவர்களை நீ அறிய மாட்டீர், நாம் அறிவோம்!' என்ற கூற்று கோபத்தின் வெளிப்பாடாக வந்ததாகும். பிள்ளையை தந்தை தண்டிக்கும் போது யாராவது பிள்ளையைப் பாதுகாக்க முன்வந்தால், இந்த தறுதலையைப் பற்றி உங்களுக்கு தெரியாது. எனக்கு நன்றாக தெரியும்.! என்று கூறுவது போன்றுள்ளது.

இதனால் அவரைப் பற்றிய அறிவு இல்லை என்பது கருத்தாகாது.!

وَلَا تُصَلِّ عَلٰٓى اَحَدٍ مِّنۡهُمۡ مَّاتَ اَبَدًا وَّلَا تَقُمۡ عَلٰى قَبۡرِهٖ ؕ اِنَّهُمۡ كَفَرُوۡا بِاللّٰهِ وَرَسُوۡلِهٖ وَمَاتُوۡا وَهُمۡ فٰسِقُوۡنَ

***"அன்றியும், அவர்களிலிருந்து இறந்து விட்ட எவரின் மீதும் ஒருபோதும் நீர் (ஜனாசாத் தொழுகை) தொழ வேண்டாம். அவருடைய கப்ரின் அருகில் மன்னிப்புக் கோரி நீர் நிற்கவும் வேண்டாம். ஏனெனில், நிச்சயமாக அவர்கள் அல்லாஹ்வையும் அவனது தூதரையும் நிராகரித்தார்கள். இன்னும்; அவர்கள் பாவிகளாகவே மரணித் தார்கள் என்பதினாலாகும்."***

*(அல் குர்ஆன்:9:84).*

ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் அப்துல்லாஹ் இப்னு அஸ்லூல் மரணித்த பின், அவனின் ஜனாஸாவைத் தொழுவித்தார்கள். அல்லது, தொழுவிப்பதற்காக நின்றார்கள். ஹளரத் உமர் ஃபாரூக் ரலியல்லாஹு தஆலா அன்ஹு ஆரம்பத்திலேயே இதனைக் கடுமையாக எதிர்த்தார்கள்.

இவ்வெதிர்ப்பைப் பொருட்படுத்தாமல் தொழுவிக்கச் சென்றார்கள் அப்போதுதான் மேற்கண்ட வசனம் இறங்கியது.இதிலிருந்து முனாஃபிக்குகளுக்குத் தொழுகை வைப்பது தடை செய்யப்பட்டது. முனாஃபிக்குகள் பற்றிய அறிவு ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி அவர்களுக்கு இருக்குமாயின் ஏன் தொழுகைக்குச் செல்ல வேண்டும்? என்று சிலர் கேட்கின்றனர். அதற்குரிய பதில் வருமாறு,

ஹளறத் அப்பாஸ் ரலியல்லாஹு தஆலா அன்ஹு பத்று யுத்தத்தில் கைதியாகப் பிடிக்கப்பட்டார்கள். அப்போது அவர்களுக்கு சரியான ஆடை இருக்கவில்லை. அவர்கள் சற்று உயரமானவர்கள். மற்றவர்களின் ஆடையும் அவர்களுக்குப் பொருந்தவில்லை.

இதற்குக் கைமாறு செய்ய நபிகள் நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் விரும்பினார்கள். தவிர,

அப்துல்லாஹ் இப்னு உபை அஸ்லூலின் மகன் மூமினாக இருந்தார்கள். அப்துல்லாஹ் பின் உபை மரணிக்க முன் தனது ஜனாஸாவை ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் தான் தொழுவிக்க வேண்டும் என்று வஸியத் செய்திருந்தார். முனாஃபிக்குகளைத் தொழுவிக்கக் கூடாது என்ற தடை அதுவரை இருக்கவில்லை. அதனால், மார்க்கத்தின் நலன் கருதி தொழுவிக்கச் சென்றார்கள்.

அவரின் வஸியத் தௌபாவுக்கான அடையாளமாக இருந்தது. வெளிப்படையை வைத்தே ஷரீஅத்தின் தீர்ப்பு அமையும்.! அதனால் வெளிப்படையான சட்டத்தை பேணி நபிகள் நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் செயல்பட்டார்கள். தனது ஹபீபின் விரோதி வெளிப்படையில் கண்ணியம் பெறுவதை அல்லாஹுத் தஆலா விரும்பவில்லை. அதனால், ஹளறத் உமர் ஃபாரூக் ரலியல்லாஹு தஆலா அன்ஹு அவர்களின் தீர்மானத்தை திருக்குர்ஆன் ஊர்ஜிதம் செய்தது.

*தஃப்ஸீர் கபீர்,*

*தஃப்ஸீர் றூஹுல் பயான்.*

இதற்கும் இல்முல் கைபுக்கும் எந்தவிதத் தொடர்பும் கிடையாது. இப்னு உபை முனாஃபிக்காக இருந்தது இரகசியமானது அல்ல, பகிரங்க மானது. அவனைத் தொழுவிக்கச் சென்றதில் பல்வேறு பிரயோசனங்கள் இருந்தன. (இதனைப் பார்த்த பல நூறு பேர் இஸ்லாமானார்கள்.)

அல்லாஹுத் தஆலா கூறுகின்றான்.

وَيَسْأَلُونَكَ عَنِ الرُّوحِ قُلِ الرُّوحُ مِنْ أَمْرِ رَبِّي وَمَا أُوتِيتُم مِّنَ الْعِلْمِ إِلَّا قَلِيلًا

***"(நபியே!) றூஹைப் பற்றி உம்மிடத்தில் அவர்கள் கேட்கின்றனர். 'றூஹ்' என்பது எனது றப்பின் கட்டளையில் உள்ளதாகும். அதைப்பற்றிய அறிவு சிறிதளவே தவிர நீங்கள் கொடுக்கப்படவில்லை என்று கூறுவீராக!"***

*(அல் குர்ஆன்: 17: 85).*

ரூஹ் பற்றியும், அது எப்படிப்பட்டது? என்பது பற்றியும் ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கு தெரியாது! ஆதலால், அவர்களுக்கு "மறைவான ஞானம்" பற்றிய அறிவு இல்லை என்று மறுப்பாளர்கள் இந்த திருவசனத்தை ஆதாரமாகக் கொண்டு கூறுகின்றனர்.

இத்திருவசனத்தில் மூன்று விடயங்கள் சிந்தனைக்குரியதாகும்.

1: ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கு றூஹைப் பற்றிய அறிவு வழங்கப்படவில்லையென்று இத்திருவசனத்தில் எந்த இடத்திலும் கூறப்படவில்லை.! இத்திருவசனத்தை றூஹ் பற்றிய அறிவுக்கு மறுப்பாக எடுப்பது கடைந்தெடுத்த மடத்தனமாகும்.

றூஹ் பற்றிய அறிவு எனக்கு வழங்கப்படவில்லை என்று எந்த இடத்திலும் ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறவில்லை. "றூஹை"ப் பற்றிக் கேட்டவர்கள் காஃபிர்கள் றூஹைப் பற்றிய அறிவு உங்களுக்கு மிக குறைவாகத்தான் வழங்கப்பட்டுள்ளது றூஹின் எதார்த்தம் பற்றிய அறிவு உங்களுக்கு இல்லையென்று காஃபிர்களைப் பார்த்துத்தான் கூறப்பட்டது.

2: நபியே கூறுவீராக, "றூஹ்" எனது றப்பின் கட்டளையில் உள்ளது. என்ற திருவசனத்திற்கு, ஹளறத் கிப்லா ஆலிம் ஷெய்கு மஹர் அலி ஷாஹ் சாஹிப் பாஸில் கோலழவி றஹ்மத்துல்லாஹி அலைஹி "ஸைபுஸ் ஷிஷ்தியா" என்ற நூலில் கூறுகின்றார்கள்.

ஹளறத் ஷைகுல் அக்பர் முஹியத்தீன் இபுனு அரபி றலியல்லாஹு அன்ஹு ஃபுதுஹாத்துல் மக்கியாவில் எழுதுகின்றார்கள்.

பல உலகங்கள் இருக்கின்றன பஞ்சபூத உலகம், ஆன்ம உலகம், கட்டளை உலகம், சாத்திய உலகம், (ஆலமுல் இம்கான்) இது தவிர இன்னும் பல உலகங்களும் இருக்கின்றன.

"றூஹ்" என்பது ஆலமுல் அம்றைச் சேர்ந்தது. ஆலமுல் அனாசிர் என்ற பஞ்சபூத உலகத்தில் இருந்து கொண்டு ஆலமுல் அம்றின் எதார்த்தத்தை அறிய முடியாது! காஃபிர்களாகிய உங்களுக்கு இது பற்றிய அறிவு கிடையாது. இது பற்றி மிகக் குறைவான அறிவுதான் உங்களுக்கு இருக்கின்றது.

لَّا تُدْرِكُهُ الْأَبْصَٰرُ وَهُوَ يُدْرِكُ الْأَبْصَٰرَ

*“பார்வைகள் அவனை அடையாது! ஆனால் அவனோ எல்லா பார்வையையும் அடைவான்.”*

*(அல் குர்ஆன்: 6: 104).*

இந்தத் திருவசனத்தின் விளக்கத்தில் தஃப்ஸீர் ரூஹுல் பயானில் பின் வருமாறு எழுதுகின்றார்கள்.

لانه تجاوز في تلك الليلة عن عالم العناصر ثم عالم الطبيعية ثم عن عالم الارواح حتي وصل الي عالم الامر وعين الناس من عالم الاجسام فانسلخ عن الكل وراي ربه بالكل

ரூஹ் பற்றியும், அது எப்படிப்பட்டது? என்பது பற்றியும் ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கு தெரியாது! ஆதலால், அவர்களுக்கு "மறைவான ஞானம்" பற்றிய அறிவு இல்லை என்று மறுப்பாளர்கள் இந்த திருவசனத்தை ஆதாரமாகக் கொண்டு கூறுகின்றனர்.

இத்திருவசனத்தில் மூன்று விடயங்கள் சிந்தனைக்குரியதாகும்.

1: ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கு றூஹைப் பற்றிய அறிவு வழங்கப்படவில்லையென்று இத்திருவசனத்தில் எந்த இடத்திலும் கூறப்படவில்லை.!

இத்திருவசனத்தை றூஹ் பற்றிய அறிவுக்கு மறுப்பாக எடுப்பது கடைந்தெடுத்த மடத்தனமாகும்.

றூஹ் பற்றிய அறிவு எனக்கு வழங்கப்படவில்லை யென்று எந்த இடத்திலும் ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறவில்லை. "றூஹை"ப் பற்றிக் கேட்டவர்கள் காபிர்கள். றூஹைப் பற்றிய அறிவு உங்களுக்கு மிக குறைவாகத்தான் வழங்கப் பட்டுள்ளது றூஹின் எதார்த்தம் பற்றிய அறிவு உங்களுக்கு இல்லை யென்று காபிர்களைப் பார்த்துத்தான் கூறப்பட்டது.

2: நபியே கூறுவீராக, "றூஹ்" எனது றப்பின் கட்டளையில் உள்ளது. என்ற திருவசனத்திற்கு, ஹளறத் கிப்லா ஆலிம் ஷெய்கு மஹர் அலி ஷாஹ் சாஹிப் பாஸில் கோலழவி ரஹ்மத்துல்லாஹி அலைஹி "ஸைபுஸ் ஷிஷ்தியா" என்ற நூலில் கூறுகின்றார்கள்.

ஹளறத் ஷைகுல் அக்பர் முஹியத்தீன் இபுனு அரபி ரலியல்லாஹூ அன்ஹூ புதுஹாத்துல் மக்கியாவில் எழுதுகின்றார்கள்.

பல உலகங்கள் இருக்கின்றன பஞ்சபூத உலகம், ஆன்ம உலகம், கட்டளை உலகம், சாத்திய உலகம், (ஆலமுல் இம்கான்) இது தவிர இன்னும் பல உலகங்களும் இருக்கின்றன.

"றூஹ்" என்பது ஆலமும் அம்றைச் சேர்ந்தது. ஆலமுல் அனாசிர் என்ற பஞ்சபூத உலகத்தில் இருந்து கொண்டு ஆலமுல் அம்றின் எதார்த்தத்தை அறிய முடியாது! காபிர்களாகிய உங்களுக்கு இது பற்றிய அறிவு கிடையாது. இது பற்றி மிகக் குறைவான அறிவுதான் உங்களுக்கு இருக்கின்றது.

لَّا تُدْرِكُهُ الْأَبْصَرُ وَهُوَ يُدْرِكُ الْأَبْصَرَ

***பார்வைகள் அவனை அடையாது! ஆனால் அவனோ எல்லா பார்வையையும் அடைவான்.***

*(அல் குர்ஆன்: 6: 104).*

இந்தத் திருவசனத்தின் விளக்கத்தில் தப்ஸீர் ரூஹுல் பயானில் பின் வருமாறு எழுதுகின்றார்கள்.

لانه تجاوز في تلك الليلة عن عالم العناصر ثم عالم الطبيعية ثم عن عالم الارواح حتي وصل الي عالم الامر وعين الناس من عالم الاجسام فانسلخ عن الكل وراي ربه بالكل

ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்கள் மிஃராஜ் இரவன்று சட உலகத்தை தாண்டினார்கள். பின்னர் பௌதிக உலகத்தை தாண்டினார்கள். பின்னர் ஆத்ம உலகத்தை தாண்டினார்கள். பின்னர் ஆலமுல் அம்றைப் போய்ச் சேர்ந்தார்கள்.

புறக் கண் சட உலகத்தை மட்டுமே பார்க்கும் வல்லமை கொண்டது. ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் இவை அனைத்தையும் விட்டு முழுமையாக நீங்கிய பின்பு தான் அல்லாஹ்வின் தாத்தைக் கண்டார்கள்.

*தஃப்ஸீர்: றூஹுல் பயான்.*

இதிலிருந்து விளங்குவது யாதெனில், ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் ஆலமுல் அம்றைக் கடக்கவில்லை! அவர்கள் அதிலேயே உள்ளவர்களாகி விட்டார்கள். தனது றப்பையும் பார்த்தார்கள். இதே ஆலமுல் அம்றுக்கும் றூஹாக நபியவர்கள் இருக்கும் போது, றூஹ் அவர்களுக்கு எப்படி மறைவாகும்?

நாம் சடத்தை அறிந்து தெரிந்து வைத்திருப்பது போன்று ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் றூஹைப் பற்றி அறிந்து தெரிந்து வைத்துள்ளார்கள். காரணம், அவர்களும் ஆலமுல் அம்றைச் சேர்ந்தவர் களாகும். நபி ஈஸா அலைஹிஸ்ஸலாம் அவர்கள் உலகில் வாழும் போது பாதி சடமாகவும், பாதி றூஹாகவும் இருந்தார்கள்.

ஏனெனில், சித்தி மரியம் ரலியல்லாஹு தஆலா அன்ஹா மனிதர்! ஹளறத் ஜிப்ரியீல் அலைஹிஸ்ஸலாம் றூஹ்! ஹளறத் ஈஸா அலைஹிஸ்ஸலாம் அவர்களின் பிறப்பு ஹளறத் ஜிப்ரீல் அலைஹிஸ்ஸலாம் அவர்கள் ஊதியதால் ஏற்பட்டது. அதனால் இரண்டு தன்மைகளும் அன்னாரில் காணப்பட்டன.

புதுஹாத்துல் மக்கியாவில் 575 வது பாடத்தில் ஷைகுல் அக்பர் முஹ்யித்தீன் இப்னு அறபி ரலியல்லாஹு அன்ஹு கூறுகின்றார்கள்.

"ஹளறத் ஈஸா நபி அலைஹிஸ்ஸலாம் பாதி மனிதராகவும், பாதி றூஹாகவும் இருந்தார்கள். ஹளறத் ஜிப்ரீல் அலைஹிஸ்ஸலாம் அவர்கள் சித்தி மரியம் ரலியல்லாஹு தஆலா அன்ஹா அவர்களுக்கு நபி ஈஸா அலைஹிஸ்ஸலாம் அவர்களை நன்கொடையாக வழங்கினார்கள்.

ஹளரத் ஜிப்ரயீல் அலைஹிஸ்ஸலாம் அவர்களின் றூஹும், பெருமானார் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் ஒளியிலிருந்து தான் படைக்கப்பட்டது. அதனால், ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் றூஹாகவே இருக்கின்றார்கள்.

தஃப்ஸீர் ரூஹுல் பயானில் 6:104 என்ற வசனத்தின் விளக்கத்தில் பின் வருமாறு கூறுகின்றார்கள்.

الحقيقة المحمدية حقيقة الحقائق وهو الموجود العام الشامل : تفسير روح البيان

ஹகீகத்துல் முஹம்மதிய்யா என்பது, எல்லா வகையான எதார்த் தங்களுக்கும் எதார்த்தமாகும். இது தான் எல்லாவற்றிற்குமான பொதுவான மூல வுஜூதாகும்.

*தஃப்ஸீர்: றூஹுல் பயான்.*

"றூஹ்" என்பது "குன்" என்ற கட்டளையிலிருந்து வேறு எந்தத் துணையுமின்றி நேரடியாக வெளிவந்தது. ஹகீகத்தே முஹம்மதிய்யாவும் ஒரு துணையின்றி பிறந்துள்ளது.

அனைத்து பிறப்பிற்கான (அருள்) அன்னாரின் ஒளியிலிருந்தே வந்துள்ளது. இதன் படி அண்டத்தின் ரூஹின் எதார்த்தமே நானேதான். (றஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் தான்!)

இத்திருவசனத்தில் குறிப்பிடப்படும் "றூஹ்" என்பது திருக்குர்ஆன், அல்லது ஜிப்ரயீல் ஆகும். இதன்படி, மேற்கண்ட வசனத்தின் பொருள் இப்படி வரும், "றூஹ்" என்பது "குன்" என்ற கட்டளையிலிருந்து வேறு ஏதும் துணை இன்றி நேரடியாக வெளிவந்தது. ஹகீகத்தே முஹம்மதிய்யாவும் ஒரு துணையின்றி பிறந்துள்ளது.

காஃபிர்கள் ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களை பார்த்து, திருக்குர்ஆன் கவிதையா? அல்லது சோதிடமா? அல்லது ஜிப்ரீல் என்பவர் யார்? அவர் எப்படி வருகின்றார்? என்று கேட்டனர்.

திருக்குர்ஆன் அல்லாஹ்வின் கட்டளை! அது கவிதையும் அல்ல! ஜோசியமும் அல்ல! ஜிப்ரயீல் அல்லாஹ்வின் கட்டளைப் படி வருகின்றார் என்று கூறினார்கள்.

அல்லாஹுத் தஆலா கூறுகின்றான்.

وَمَا نَتَنَزَّلُ اَلَّا بِأَمْرِ رَبِّكَ

***"உம்முடைய ரப்பின் கட்டளையை கொண்டே தவிர (நாம்) பூமியில் இறங்குவதில்லை."***

*(அல் குர்ஆன்: 19: 64).*

فاذا كان معرفة الله ممكنة بل حاصلة فاي مانع يمنع من معرفة الروح : تفسير كبير

ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கு அல்லாஹ்வை அறிவது சாத்தியமானது தான். அறிந்தும் இருக்கிறார்கள். அப்படியிருக்க றூஹை அறிவதற்கு என்ன தடை இருக்கின்றது.?

*தஃப்ஸீர். கபீர்*

முஃபஸ்ஸிரீன்களும், முஹத்திதீன்களும் ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் றூஹைப் பற்றி தெளிவாக அறிவார்கள் என்று எழுதியுள்ளனர்.

١- قيل ان النبي صلي الله عليه وسلم علم معني الروح لكن لم يخبر به لان ترك الاخبار كان علما لنبوته والقول الاصح ان الله استأثر بعلم الروح :تفسير. خازن

1. ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கு றூஹைப் பற்றிய அறிவு உண்டு. அது பற்றிக் கூறவில்லை. அது பற்றி அவர்கள் கூறாதிருப்பது அவர்களின் நபித்துவத்தின் அடையாளமாகும். மிகச் சரியான கூற்றின் படி றூஹ் பற்றிய அறிவு அல்லாஹ்வுக்கு மட்டுமே சொந்தமாகும்.

இக் கூற்றின் படி, றூஹ் பற்றிய அறிவு உண்டு என்று நம்பு பவர்களை முஷ்ரிக் என்று ஒருபோதும் கூற முடியாது.! இவர்களின் கூற்றுக்களை தப்பு என்றும் கூற முடியாது என்று விளங்க முடிகிறது.

٢- جل منصب حبيب الله ان يكون جاهلا بالروح مع انه علم بالله وقد من الله عليه بقوله وعلمك ما لم تعلم :تفسير روح البيان

2. ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கு றூஹ் பற்றிய ஞானம் இல்லை என்று கூறுவதிலிருந்து அவர்களின் தகுதி உயர்ந்துள்ளது. ஆயினும் ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அல்லாஹ்வைப் பற்றி அறிந்து உள்ளார்கள்.

*தஃப்ஸீர்: றூஹுல் பயான்.*

وَعَلَّمَكَ مَا لَمْ تَكُنْ تَعْلَمُ

***"நீர் அறிந்திராத வற்றையும் உமக்கு அவன் கற்றுக்கொடுத்தான்"***

*(அல் குர்ஆன்: 4: 118).*

என்று அருள்பாலித்தும் கூறியுள்ளான்.

وقيل كان السوءال من خلق الروح يعني اهو مخلوق ام لا ؟

கேள்வி. றூஹின் படைப்பு பற்றியதாகும். ரூஹு படைக்கப் பட்டதா? இல்லையா?

ரூஹு எனது ரப்பின் கட்டளையில் உள்ளது என்ற அல்லாஹ்வின் கூற்று, றூஹ் ஒரு படைப்பு! என்பதற்கு ஆதாரமாகும். அதனால் இக்கூற்று அவர்களுக்குப் பதிலாகிவிட்டது.

*(தஃப்ஸீர் மதாரிக்,)*

மேற்கண்ட வாக்கியத்தின் படி கேள்வி, றூஹ் பற்றிய அறிவு இருக்கிறதா? இல்லையா? என்பதல்ல! றூஹ் படைக்கப்பட்டதா? இல்லையா? என்பது பற்றியதாகும் என்பது தெளிவாகிவிட்டது.

ஹளறத் ஷைய்கு அப்துல் ஹக் முஹத்திது திஹ்லவி ரஹ்மதுல்லாஹி அலைஹி "மதாரிஜுன் நுபுவ்வத்" என்ற நூலில் கூறுகின்றார்கள்.

ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கு றூஹ் பற்றிய ஞானம் இல்லையென்று கூறுவதற்கு ஒரு ஆரிஃபான முஃமினுக்கு என்ன துணிச்சல் இருக்கிறது.? அல்லாஹுத்தஆலா அவனுடைய "தாத்" "ஸிஃபாத்"கள் பற்றிய அறிவையல்லவா வழங்கியிருக்கிறான். முன்னோர்கள், பின்னோர்களின் அறிவுகளைத் திறந்தும் கொடுத்திருக்கின்றான்.

அல்லாஹ்வின் தாத், ஸிஃபாத்துக்கள் பற்றிய அறிவுக்கு முன்னால் ரூஹ் பற்றிய அறிவு எம்மாத்திரம்? இது சமுத்திரத்தில் ஒரு துளிதான். பாலைவனத்தில் ஒரு தூசிதான்.

*மதாரிஷுன் நுபுவ்வத்.*

ولا تظن ان ذلك لم يكن مكشوفا لرسول الله صلي الله عليه وسلم فان من لم يعرف نفسه فكيف يعرف الله سبحانه وتعالي ولا يبعد ان يكون ذلك مكشوفا لبعض الاولياء ، والعلماء ، احياء علوم الدين

இமாம் கஸ்ஸாலி ரஹ்மத்துல்லாஹி அலைஹி கூறுகின்றார்கள்.

ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கு றூஹ் பற்றிய அறிவு இல்லையென்று நீ தப்பு கணக்கு போடாதே! தன்னை அறியாதவர் தனது றப்பை எப்படி அறியப் போகின்றார்? சில வலிமார்களுக்கும், உலமாக்களுக்கும் றூஹு பற்றிய ஞானம் உண்டு என்று கூறுவது கூட ஆச்சரியமான செய்தி அல்ல.!

மேற்கண்ட கூற்றிலிருந்து ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கு றூஹ் பற்றிய அறிவு உண்டு என்பது தெரிய வருகின்றது.

ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் அருளினால் தான் சில அறிஞர்களுக்கும், வலிமார்களுக்கும் இந்த அறிவு கிடைத்துள்ளது. சிலர் இதை நிராகரிக்கின்றனர். இப்படி நிராகரிப்பதற்கு எந்தவிதமான அடிப்படை ஆதாரமும் கிடையாது.

ஒன்றைப் பற்றி மெய்ப்பித்தும், நிராகரித்தும் வருமாயின், மெய்ப் பித்தலுக்கே முன்னுரிமை வழங்க வேண்டும். இதற்கான அடிப்படை விதிகளைப் பற்றி ஆரம்பத்திலேயே குறிப்பிட்டுள்ளோம்.

المعني لا يفيد علمه غيره تعالي فلا ينافي ان رسول الله صلي الله عليه وسلم لم يخرج من الدنيا حتي اطلع ما كان وما يكون وماهو كائن ومن جملته علم الساعة اَلَيْهِ يُرَدُّ عِلْمُ السَّاعَةِ

*"மறுமையின் ஞானம் அவனிடமே விடப்பட்டுள்ளது!"*

*(அல் குர்ஆன்: 41: 47).*

இதன் பொருள், மறுமை பற்றிய ஞானம் அல்லாஹ்வுக்குரியது. அவன் அல்லாத எவருக்கும் வழங்கப்படமாட்டாது.!

றஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் இவ்வுலகை விட்டுப் பிரிய முன் நடந்தவை, நடக்கப் போகின்றவை உள்ளிட்ட அனைத்து நிகழ்வுகளையும் அல்லாஹுத்தஆலா கற்று கொடுத்துள்ளான். இதில் கியாமத் நாள் பற்றிய அறிவும் அடங்கும். ஆதலால், மேற்கண்ட திருவசனம் இதற்கு ஒருபோதும் எதிர் ஆகாது!

ஹளரத் ஜிப்ரீல் அலைஹிஸ்ஸலாம் றஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களிடம் கியாமத் நாள் எப்போது வரும்? என்று கேட்டதற்கு, "இது விடயத்தில் கேட்பவரை விட கேட்கப்பட்டவர் அதிகம் அறிந்தவர் அல்ல!" என்று நபியவர்கள் பதில் கூறினார்கள்.

இந்த ஹதீஸை ஆதாரமாகக் கொண்டு பெருமானார் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கு மறுமை பற்றிய அறிவு இல்லையென்று மறுப்பாளர்கள் வாதிக்கின்றனர்.

இது இவர்களின் கற்பனை ஊகமாகும். இரண்டு காரணங்களினால் இவர்களின் வாதம் அடிப்படையற்றவை என்று நிரூபணமாகும்.

மேற் கண்ட ஹதீஸில் மறுமை பற்றிய அறிவு எனக்கில்லை என்று ரஸூலுல்லாஹ் ஸல்லல்லாஹு அலைஹி வசல்லம் கூறவில்லை.! அதிகமான அறிவு பற்றித்தான் கூறினார்கள்.இது பற்றித் தெரியாது என்றிருந்தால் தெரியாது! என்று கூறியிருப்பார்கள்.

இவ்வாறு கூறியதற்கு சில நியாயங்கள் இருக்கலாம்.

மறுமை பற்றிய விடயத்தில் இருவரினதும் அறிவு சமம் தான். எனக்கு தெரிந்தவை உங்களுக்கு தெரியும். இது அல்லாஹ்வின் இரகசியம். இதை இப்படியான சபையில் வெளியிடக்கூடாது, அதற்கு இச்சபை பொருத்தம் இல்லை.

பெருமானார் ஸல்லல்லாஹு அலைஹி வசல்லம் அவர்களின் பதிலை கேட்ட ஜிப்ரீல் அலைஹிஸ்ஸலாம் கியாமத் நாளின் அடையாளத்தை கேட்டார்கள். சில அடையாளங்களை ரஸூல்ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் கூறினார்கள்.

பிள்ளைகள் பெற்றோர் சொற்படி நடக்க மாட்டார்கள்

தாழ்ந்த குலத்தில் பிறந்தவர்கள் சமூகத்தில் அதி உயர் கண்ணியம் பெறுவார்கள்.

இது போன்ற வேறு சில அடையாளங்களையும் கூறினார்கள்.

கியாமத் பற்றிய அறிவில்லாதவரிடம் அதன் அடையாளங்களைக் கேட்பது புத்திசாலித்தனமாகாது. அதுபற்றி அத்துப்படியாக அறிந்தவர் தான் அதற்கு நெருக்கமான காலத்தில் நடப்பவையை கூறமுடியும்.

சுட்டு விரலையையும், நடுவிரலையும் இணைத்துக் காட்டி,"எனக்கும் கியாமத்திற்கிடையில் இவ்வளவு இடைவெளி தான் உண்டு!" என்றும்,

கியாமத் நாள் "வெள்ளிக்கிழமை" நிகழும் என்றும் கூறியுள்ளார்கள்.

*(ஆதாரம் மிஷ்காத்).*

அதாவது, தனது மறைவுக்குப்பின் தொடர்வது கியாமத் நாளை எதிர் நோக்கிய காலங்கள் தான் என்று கூறி, கியாமத் நாளின் அடையாளங்களில் ஒன்றையும் விடாமல் விலாவாரியாக கூறியுள்ளார்கள்.

கியாமத் நாள் இன்று வராது! நாளையும் வராது! நாளை மறு நாளும் வராது! என்று சத்தியம் செய்து கூற என்னால் நிச்சயமாக முடியும்.

ஏனெனில், கியாமத்தின் முக்கியமான பத்து அடையாளங்களில் மஹ்தி அலைஹிஸ்ஸலாம், தஜ்ஜால் வருகை தருவது, நபி ஈஸா அலைஹிஸ்ஸலாம் பூமியில் இறங்குவது, சூரியன் மேற்கில் உதிப்பது உள்ளிட்டவை இன்னும் வரவில்லை! இவை நிகழாமல் கியாமத் நாள் ஒருபோதும் வரமாட்டாது.!

கியாமத்திற்கு மிக நெருக்கமான அடையாளங்களையும் ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் கூறியிருக்கின்றார்கள். ஆனால், கியாமத் நாள், எந்த வருடத்தில் எந்த மாதத்தில், எந்த நாளில் நடக்கும் என்று அறிதியிட்டு றஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் கூறவில்லை என்று வேண்டுமானால் கூறலாம். தெரியாது என்று கூற முடியாது.!

ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் காலத்தில் ஒரு குறிப்பிட்ட வருடக் கணிப்பு இருக்கவில்லை. ஹிஜ்ரி ஆண்டை முதன் முதலில் ஆரம்பித்தது அமீருல் முஃமினீன் உமர் ஃபாரூக் ரலியல்லாஹு அன்ஹு அவர்களாகும்.

ஹிஜிரி ஆண்டின் முதல் மாதம் முஹர்ரம் ஆக இருந்த போதிலும் ஹிஜ்ரத் ரபியுல் அவ்வலில் தான் நிகழ்ந்தது.!

ஆரம்ப காலம் தொட்டு வருடத்தின் முதல் மாதம் முஹர்ரமாகவே இருந்து வந்தது. இந்த ஒழுங்கை மாற்றக் கூடாது என்பதற்காகவே இரண்டு மாதங்களை முற்படுத்தி ஹிஜ்ரி ஆண்டை ஆரம்பித்தார்கள்.

உண்மையில் ஹிஜ்ரி ஆண்டின் தொடக்கம் ரபியுல் அவ்வல் ஆகும் என்பதை வாசகர்கள் கவனத்தில் கொள்ள வேண்டும். இஸ்லாத்திற்கு முற்பட்ட காலத்தில் குறிப்பிட்ட வருட கணிப்பு இருக்கவில்லை. முக்கிய நிகழ்வுகளை அடிப்படையாக வைத்து வருட கணிப்பு ஆரம்பமாகும். இதன்படி, இஸ்லாமிய வருட கணிப்பை ஆரம்பிப்பதில் ஸஹாபாக்கள் மத்தியில் பல கருத்துக்கள் முன்வைக்கப்பட்டன.

சிலர் நபித்துவத்தின் ஆண்டையும், வேறு சிலர் ஹுதைபிய்யா உடன்படிக்கை செய்த ஆண்டையும், மற்றும் சிலர் மக்கா வெற்றியையும், இன்னும் சிலர் ஹிஜ்ரத்தையும் ஆலோசனையாக முன்வைத்தனர். முடிவில் ஹிஜ்ரத் ஆண்டைத் தெரிவு செய்து வருட கணிப்பு உருவானது.

கியாமத்தின் அனைத்து சிறிய, பெரிய அடையாளங்களைக் கூறியவருக்கு கியாமத்தின் அறிவு இல்லையென்று கூறுவது எப்படி? இது ஓர் அறிவுபூர்வமான கருத்தாக எப்படி இருக்க முடியும்.? "இல்முல் ஙைப்" பற்றிய ஆதாரங்களை உறுதி செய்த பகுதியில் ஒரு ஹதீஸை முன்வைத்திருந்தோம்.

அதாவது, ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் மிம்பர் படியில் நின்று கொண்டு, கியாமத் நாள் வரையிலான அனைத்து விடயங்களையும் ஒன்று கூட விடாமல் கூறினார்கள். இப்படி கூறியவர்களுக்கு கியாமத் பற்றிய அறிவு இல்லை என்று எப்படிக் கூற முடியும்? ஏனெனில், உலகம் முடிந்தால் அடுத்து வருவது கியாமத் நாள் தான். உலகம் எப்போது முடியும்? என்பதை ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் கூறியிருக்கின்றார்கள்.

முடிவு நாளுக்கு முன் இதற்குப் பின் எது? எதற்குப் பின் எது நடக்கும்? என்பதும் அவர்களுக்குத் தெரியும். இப்படி உலகத்தின் இறுதி நிகழ்வையும் கூறினார்கள் என்றால் அந்த இறுதி நிகழ்வு தான் கியாமத் ஆகும்.

மறுமையின் ஆரம்பம் இரண்டு விடயங்களோடு தொடர்பு கொண்டுள்ளது.

1: உலகத்தின் முடிவு பற்றிய அறிவு.

2: கியாமத்தின் ஆரம்பம் பற்றிய அறிவு.

இந்த இரண்டும் நபி அவர்களுக்கு இருந்தன. இதைப் பற்றி வாசகர்கள் நன்கு ஆழமாக சிந்திக்க வேண்டும்.!

இந்த நுட்பமான கருத்தை எனது ஆசிரியரும் ஷைகுமான மௌலானா செய்யித் நயீமுத்தீன் முராதாபாதி ரஹ்மத்துல்லாஹி அலைஹி ஓர் உரையின் மத்தியில் கூறினார்கள்.

அல்லாஹுத்த ஆலா கூறுகின்றான்.

اِنَّ اللّٰهَ عِنْدَهٗ عِلْمُ السَّاعَةِ,وَيُنَزِّلُ الْغَيْثَ, وَيَعْلَمُ مَا فِى الْاَرْحَامِ‌ؕ وَمَا تَدْرِىْ نَفْسٌ مَّاذَا تَكْسِبُ غَدًا‌ؕ وَّمَا تَدْرِىْ نَفْسٌ,بِاَىِّ اَرْضٍ تَمُوْتُ‌ؕ اِنَّ اللّٰهَ عَلِيْمٌ خَبِيْرٌ

*"நிச்சயமாக அல்லாஹ் அவனிடம்தான் கியாமத் நாளின் ஞானம் இருக்கின்றது. அவன்(தான்) மழையை இறக்கி வைக்கிறான். கர்ப்பங்களில் உள்ளவற்றையும் அவன் அறிகிறான். எந்த ஆத்மாவும் நாளைக்கு அது என்ன சம்பாதிக்கும் என்பதை அறிய முடியாது. எந்த ஆத்மாவும் எந்த பூமியில் அது மரணமடையும் என்பதையும் அறிய முடியாது. நிச்சயமாக அல்லாஹ் முற்றும் அறிந்தவன், (செய்திகள் அனைத்தையும்) நன்கு அறிகின்றவன்."*

*(அல் குர்ஆன்: 31: 34).*

இந்த திருவசனத்தை ஆதாரமாகக் கொண்டு மேற்படி திருவசனத்தில் குறிப்பிடப்பட்டுள்ள ஐந்தும் அல்லாஹ் அன்றி வேறு எவருக்கும் தெரியாது. இது அல்லாஹ்வின் தனித்துவமான பண்பாகும். இவை அல்லாஹ் அல்லாதவருக்கும் உண்டு என்று யாராவது கூறினால், "முஷ்ரிக்"காக ஆகிவிடுவார் என்று மறுப்பாளர்கள் கூறுகின்றனர்.

இதனை "ஐந்து அறிவுகள்" எனப்படும்.

அவையாவன.

1: கியாமத் நாள் எப்போது நிகழும்.?

2: மழை எப்போது பொழியும்?

3: பெண்ணின் கருவறையில் இருப்பது ஆணா? பெண்ணா?

4: நாளை நடப்பது எது ?

5: யார் எங்கே மரணிப்பார்?

இந்தத் திருவசனத்தை ஊர்ஜிதம் செய்யும் ஓர் அறிவிப்பு மிஷ்க்காத்தின் ஆரம்பத்தில் வருகின்றது.

ஹளறத் ஜிப்ரயீல் அலைஹிஸ்ஸலாம் கியாமத்தின் அடையாளத்தைப் பற்றி கூறுமாறு றஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வசல்லம் அவர்களிடம் கேட்ட போது, ஐந்து விடயங்களை அல்லாஹ்வை யன்றி வேறு எவரும் அறியமாட்டார்கள் என்று ரஸூல் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் கூறிய பின் மேற்கண்ட திருவசனத்தை ஓதிக் காட்டினார்கள். மேற்படி திருவசனத்தில் குறிப்பிடப்படுகின்ற ஐந்து விடயங்கள் பற்றி நடுநிலையில் நின்று ஆய்வு செய்து நடுநிலைப் பார்வையுடன் படியுங்கள். நமது விளக்கத்தை ஏற்றுக் கொள்வீர்கள் என்று அல்லாஹ்விடம் ஆதரவு வைக்கின்றேன்.

முதலில் இத்திருவசனத்திற்கு முஃபஸ்ஸிர்கள் கொடுக்கும் விளக்கத்தையும், அடுத்து முஹத்திது (ஹதீதுக்கலை மேதை)களின் விளக்கத்தையும் முடிவில் நமது திறனாய்வையும் முன் வைக்கின்றேன்.

**தஃப்ஸீர்களின் விளக்கங்கள்.**

ولك ان تقول ان علم هذه الخمسة لا يعلموها احد الا الله لكن يجوز ان يعلمها من يشاء من محبيه واوليائه بقرينة قوله تعالي ان الله عليم خبير ,تفسير احمدي -١

இந்த ஐந்து விடயங்களையும் அல்லாஹ்வை அன்றி வேறு எவரும் அறியமாட்டார்கள் என்று நீ கூறக் கூடும். ஆயினும், அல்லாஹுத்தஆலா அவனது நேசர்கள் மற்றும் அவனது வலிமார்களில் அவன் நாடியவர்களுக்கு அதனை கற்றுக் கொடுப்பது சாத்தியமாகும்.

ஏனெனில் (இத்திருவசனத்தின் இறுதியில் வருகின்ற) அல்லாஹ் அறிந்தவன், அறிவிக்கின்றவன் என்ற வாக்கியத்தை ஆதாரமாகக் கொண்டு இக்கருத்து எடுக்கப்பட்டது. (خبير) "கபீர்" என்ற வினைப் பெயர்ச் சொல் مخبر "முக்பிர்" என்ற சொல்லின் கருத்தையும் கொடுக்கும். முக்பிர் مخبر என்றால் அறிவித்துக் கொடுப்பவர் என்பது பொருளாகும்.

*தஃப்ஸீர் அஹ்மதி*

اي من حيث ذاتها واما باعلام الله للعبد فلا مانع منه كالانبياء وبعض الاولياء قال تعالي ولا يحيطون بشئ من علمه الا بما شاء قال تعالي فلا يظهر علي غيبه احدا الا من ارتضي من رسول فلا مانع

من كون منه يطلع بعض عباده الصالحين علي بعض المغيبات فتكون معجزة للنبي وكرامة للولي ولذلك قال العلماء الحق انه لم يخرج نبينا من الدنيا حتي اطلعه علي تلك الخمس ، تفسير صاوي -٢

ஓர் அடியான் இவ்வாறான விடயங்களை சுயமாக அறிய முடியாது. நபிமார்கள், வலிமார்கள் உள்ளிட்டவர்களில் அல்லாஹுத்தஆலா யாருக்காவது அறிவித்துக் கொடுத்தால் அதில் எந்தவிதத் தடையும் கிடையாது.

அல்லாஹுத்தஆலா கூறுகின்றான்.

وَلَا يُحِيْطُوْنَ بِشَىْءٍ مِّنْ عِلْمِه اِلَّا بِمَا شَآءَ

*"அவனுடைய அறிவிலிருந்து அவன் நாடியவற்றைத் தவிர்த்து (வேறு) எதனையும் அவர்கள் சூழ்ந்து அறிந்து கொள்ள முடியாது.""*

*(அல் குர்ஆன்: 2: 255).*

அல்லாஹுத்தஆலா கூறுகின்றான்.

فَلَا يُظْهِرُ عَلٰى غَيْبِه اَحَدًا اِلَّا مَنِ ارْتَضٰى مِنْ رَّسُوْلٍ

*"மறைவானவற்றை அவன் அறிகிறவன். அவன் மறைவாக வைத்திருப்பவற்றை எவருக்கும் அவன் வெளிப்படுத்த மாட்டான். றசூலில் அவன் பொருந்திக் கொண்டவர்களைத் தவிர."*

*(அல் குர்ஆன்: 72: 27).*

தனது நல்லடியார்களுக்கு சில மறைவானவற்றைத் தெரியப்படுத்துவதற்கு எந்தவித தடையும் கிடையாது. இது நபியின் முஃஜிஸாவாகவும், வலியுல்லாஹ்வின் கறாமத்தாகவும் கருதப்படும். இதனால் தான் அறிஞர்கள் பின் வருமாறு கூறுகின்றனர். எதார்த்தமான உண்மை யாதெனில், ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் உலகத்தில் இருந்து பிரிந்து செல்ல முன் மறைவான ஐந்தையும் அல்லாஹுத்தஆலா அறிவித்து கொடுத்துள்ளான்.

تحت اية يعلم في الارحام سمعت ايضا من بعض الاولياء انه اخبر ما في الرحم من ذكر وانثي ورأيت بعيني ما اخبر. تفسير عرائش البيان,

சில வலிமார்கள் வயிற்றில் இருக்கும் குழந்தை ஆண் அல்லது பெண் என்று கூறியதை கேள்விப்பட்டுள்ளேன். அவர்கள் கூறிய படி நடந்துள்ளதை எனது இரு கண்ணாலும் பார்த்துள்ளேன்.

*தப்ஸீர்: அறாயிஜுல் பயான்.*

ما روي عن الانبياء والاولياء من الاخبار عن العيوب فبتعليم الله تعالي اما بطريقة الوحيد او بطريقة الالهاموالكشف وكذا اخبر بعض الاولياء عن نزول المطر واخبر عما في الرحم من ذكر اوانثي فوقع كما اخبر ،تفسير روح البيان

மறைவான செய்திகள் நபிமார்கள், வலிமார்கள் மூலமாக வந்துள்ளன. வஹியின் மூலமாக அல்லது இல்ஹாம் இன்னும் கஷ்ஃபின் மூலமாக அல்லாஹுத்தஆலா கற்றுக் கொடுத்ததால் தான் இது சாத்தியமாகியது. இவ்வாறு, சில வலியுல்லாக்கள் மழை பொழிவது பற்றியும், கர்ப்பத்தில் இருப்பது ஆண் அல்லது பெண் என்பது பற்றியும் கூறியிருக்கின்றனர். இவர்கள் கூறிய படியே நடந்திருக்கின்றன.

*தஃப்ஸீர்: ரூஹுல் பயான்.*

மறைவான ஐந்தில் மறுமை எப்போது வரும் என்ற விரிவான விளக்கத்தை ஏற்கனவே கூறப்பட்டுள்ளது.

மறைவான ஐந்து விடயங்களையும் அல்லாஹுத் தஆலா தனது ஹபீப் முஹம்மது முஸ்தஃபா ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கு கற்றுக் கொடுத்துள்ளான் என்பதை மேற்கண்ட தஃப்ஸீர்கள் மூலமாக அறிய முடிகிறது.

மேற்கண்ட திருவசனத்தின் இறுதியில் வரும் "செய்திகள் அனைத்தையும் நன்கு அறிகின்றவன்”

*(அல்குர்ஆன்: 31:34).* என்பதில் உள்ள கபீர் خبير என்ற சொல் முக்பிர் என்ற சொல்லின் கருத்தையும் கொடுக்கும். முக்பிா مخبر என்றால் அறிவித்துக் கொடுப்பவன் என்பது பொருளாகும்.

இது தொடர்பான விரிவான விளக்கங்கள் பல தஃஃப்ஸீர்களில் விரிவாக காணக் கிடைக்கின்றன. அவை அனைத்தையும் இங்கு எழுதினால் விரிந்து விடும். அதனால், இத்தோடு சுருக்கிக் கொண்டுள்ளோம்.

முன்னர் குறிப்பிட்ட ஐந்து விஷயங்களை அல்லாஹ்வைத் தவிர வேறெவரும் அறியமாட்டார்கள் என்ற ஹதீதுக்கு ஹதீதுக்கலை மேதைகளான முஹத்திதுகள் கூறும் விளக்கத்தை படியுங்கள்.

இமாம் குர்துபி, இமாம் ஐனி, இமாம் கஸ்தலானி ரஹ்மத்துல்லாஹி அலைஹிம் ஆகியோரின் புகாரி ஷரீஃஃபின் விரிவுரையிலும் அல்லாமா முல்லா அலிகாரி ரஹ்மத்துல்லாஹி அலைஹி அவர்களின் மிஷ்க்காத்தின் விரிவுரையான மிர்காத்திலும் பின்வருமாறு எழுதுகின்றார்கள்.

من ادعي علم شيئ منها غير مسند الي رسول الله صلي الله عليه وسلم كان كاذبا في دعواه

مرقات.

யாராவது ஒருவர் இந்த ஐந்து விடயங்களின் அறிவு ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுடன் தொடர்பு படுத்தாமல் கூறுவார்களாயின், அவர் அவருடைய கருத்தில் பொய் கூறி விட்டார்.

ஷைகு அப்துல் ஹக் முஹத்திது திஹ்லவி ரஹ்மதுல்லாஹி அலைஹி மிஷ்க்காத்தின் விரிவுரை நூலான "லம்ஆத்"தில் கூறுகின்றார்கள்.

المراد لا يعلم بدون التعليم الله تعالي . لمعات

அல்லாஹ் விட்டுக்கொடுக்காமல் (அறிய மாட்டார்கள்) என்பது இதன் பொருளாகும்.

மேலும், இதே ஹதீதுக்கான விளக்கத்தில் ஷைகு அப்துல் ஹக் முஹத்திதுத் திஹ்லவி ரஹ்மத்துல்லாஹ் அலைஹி கூறுகின்றார்கள். மறைவான இவ்விடயங்களை அல்லாஹுத்தஆலா அறிவித்துக் கொடுக்காமல் புத்தியால் மட்டும் எவராலும் அறிய முடியாது. வஹி அல்லது இல்ஹாம் மூலமாக அறிவித்துக் கொடுத்தால் தவிர வேறு யாராலும் அறிய முடியாது.

*அஜிஃஅத்துல் லம்ஆத்.*

لا يعلم متي تقوم الساعة الا الله والا من ارتضي من رسول فانه يطلعه علي غيبه والولي التابعة له يأخذ عنه قسطلاني شرح صحيح البخاري شريف

கியாமத்து நாள் எப்பொழுது வரும் என்பதை அல்லாஹ்வைத் தவிர வேறு எவரும் அறியமாட்டார்கள். ஆனாலும், அல்லாஹ்வுக்கு விருப்பமான ரசூல்மார்களும் அறிவார்கள். ஏனெனில், இவர்களுக்கும் அல்லாஹுத் தஆலா மறைவானவற்றை அறிவித்துள்ளான். ரஸூல்மார்களைப் பின்பற்றி இருந்தவர்களும் மறைவானவற்றை அவர்களிடமிருந்து பெற்றுக் கொள்கின்றனர். கஸ்தலானி,

*(புகாரி ஜரீஃபின் விரிவுரை).*

ஸுனன் இப்னு மாஜாவின் ஓரக் குறிப்பான "இன்ஜாஹுல் ஹாஜா" என்ற நூலில் பின்வருமாறு எழுதப்பட்டுள்ளது.

تحت حديث خمس لا يعلمون الا الله من باب اشراط الساعة، اخبر صديق الاكبر زوجته بنت خارجة انها حاملة بنت فولدت بعد وفاته أم كلثوم بنت ابي بكر فهذا من الفراسة والظن ويصدق الله فراسة الموءمن .انجاه الحاجة

ஸித்தீக்குல் அக்பர் ரலியல்லாஹுத்தஆலா அன்ஹு தனது மனைவி பின்து ஹாரிதா என்பவர் தனது வயிற்றில் பெண் குழந்தையை சுமந்து உள்ளார் என்று கூறினார்கள். ஸித்தீக்குல் அக்பர் ரலியல்லாஹு தஆலா அன்ஹு வஃபாத்தான பின்பு அவர்கள் கூறியபடி "உம்மு குல்தூம்" பிறந்தார்கள். இது அவர்களின் குறிப்பறிதலும், எண்ணமும் ஆகும்.

அல்லாஹூத் தஆலா முஃமினின் குறிப்பறிதலை உண்மைப்படுத்தி வைத்திருக்கின்றான்.

*இன்ஷாஅல்லாஹ் ஹாஷா.*

ஸெய்யிதுஷ் ஷரீஃப் அப்துல் அஸீஸ் மஸ்ஊத் தப்பாஃ ரஹ்மத்துல்லாஹி அலைஹி அவர்கள் "கிதாபுல் இப்ரீஸ்" என்ற நூலில் பின் வருமாறு எழுதுகிறார்கள்.

هو عليه السلام لا يخفي عليه شيئ من الخمس المذكورة في الآية وكيف يخفي ذلك ، وللاقطاب السبعة من امته الشريفة يعلمونها وهم دون الغوث ، فكيف الغوث ، فكيف سيد الاولين والاخرين الذي سبب كل شيئ ومنه كل شيئ .الابريز

ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கு மறைவான விடயங்களில் எதுவும் மறையவில்லை. ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கு எப்படி மறையும்? அவர்களுக்குக் கீழ் படித்தரத்திலிருக்கின்ற ஏழு குத்புகளும் இதை அறிந் திருக்கின்றார்கள்.

அப்படியாயின், கௌதைப் பற்றி நீ என்ன நினைக்கின்றாய்? பின்னர் நபிமார்களுக்கெல்லாம் நாயகரான ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களைப் பற்றி என்ன கூறப் போகின்றீர்கள்? எல்லாப் பொருள்களுக்கும் மூலமானவர்கள் அவர்கள் தான். அவரி(ன் ஒளியி)லிருந்து தான் அனைத்துமே வெளிவந்திருக்கின்றன.

*அல் இப்ரீஸ்.*

ஹாஃபிழ் ஜலாலுதீன் ஸுயூத்தி ரஹ்மத்துல்லாஹி அலைஹி கூறுகின்றார்கள்.

قوله عليه السلام " الا هو" معناه بانه لا يعلمها احد بذاته الا هو لكن قد يعلم به باعلام الله فان ثم من يعلمها وقد وجدنا ذلك بغير واحد كما رأينا جماعة علموا متي يموت وعلموا ما في الارحام

மேற்கண்ட ஹதீஸில் "அவனைத் தவிர வேறு எவரும் அறிய மாட்டார்கள்" என்பதன் கருத்து, சுயமாக அல்லாஹ்வைத் தவிர வேறு எவரும் அறியமாட்டார்கள். அல்லாஹுத் தஆலா அறிவித்துக் கொடுத்து அறிய முடியும். எப்போது மரணிப்பார்? என்பதையும், கருவறையில் இருப்பதையும் அறிந்த ஒருவரை அல்ல ஒரு கூட்டத்தையே நாம் கண்டுள்ளோம்.

*றவ்ழத்துல் நழீர்.*

*ஜறஹு ஷாமிஉஸ் ஸகீர்.*

மேலும் கூறுகின்றார்கள்.

عرض عليه ما هو كائن في امته حتي تقوم الساعة

ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கு கியாமத்து நாள் வரை நடக்கக்கூடிய அனைத்தையும் எடுத்துக் காட்டப் பட்டுள்ளன.

அல்லாமா இப்ராஹீம் பாஜூரி ரஹ்மத்துல்லாஹி அலைஹி புர்தா ஷரீஃபின் விரிவுரையில் எழுதுகிறார்கள்.

لم يخرج النبي عليه السلام من الدنيا الا بعد ان اعلمه الله بهذه الامور الخمسة

ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் இவ்வுலகை விட்டும் பிரிந்து செல்ல முன் மறைவான ஐந்து விடயங்களையும் அல்லாஹுத்தஆலா அவர்களுக்கு அறிவித்து கொடுத்துள்ளான்.

*பாஷூரி, புர்தா ஜரீஃப் விரிவுரை.*

அல்லாமா ஷர்வாணி ரஹ்மத்துல்லாஹி அலைஹி கூறுகின்றார்கள்.

قد ورد ان الله تعالي لم يخرج النبي صلي الله عليه وسلم حتي اطلعه الله علي كل شيئ, جمع النهاية

ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் இவ்வுலகை விட்டும் பிரிந்து செல்ல முன் அனைத்து விடயங்களுக்குமான அறிவும் அவர்களுக்கு வழங்கப்பட்டுள்ளது.

*ஷம்உன் நிஹாயா,*

மேலும் கூறுகிறார்கள்.

قال بعض المفسربن لا يعلم هذه الخمس علما لدنيا ذاتيا بلا واسطة الا الله فالعلم بهذه الصفة مما اختص الله به واما بواسطة فلا يختص به

மறைவான இந்த ஐந்து விடயங்களையும் அல்லாஹுத் தஆலா அறிவித்துக் கொடுக்காமல் சுயமாக அல்லாஹ்வைத் தவிர வேறு எவராலும் அறிய முடியாது. சுயமாக அறிவது அல்லாஹ்வுக்கு மட்டும் சொந்தமான பண்பாகும். அல்லாஹுத்தஆலா அறிவித்துக் கொடுத்த அறிவு அல்லாஹுக்குச் சொந்தமானது அல்ல என்று சில முஃபஸ்ஸிரீன்கள் கூறுகிறார்கள்.

*ஷம்உன் நிஹாயா*

ஃபாழில் இப்னு அதிய்யா ரஹ்மத்துல்லாஹி அலைஹி கூறுகின்றார்கள்.

الحق كما قال جمع ان الله لم يقبض نبينا عليه السلام حتي اطلعه علي كل ما ابهم عنه الا انه امر بكتم بعض والاعلام بعض فتوحات وهبيةشرح اربعين نووي

ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் இவ்வுலகை விட்டும் பிரிய முன்னர் மறைவானவை அனைத்தும் அவர்களுக்கு அறிவித்துக் கொடுக்கப்பட்டுள்ளன.

சிலவற்றை மறைக்குமாறும், சிலவற்றை வெளிப்படுத்திக் கூறுமாறும் அவர்களுக்கு கட்டளையிடப்பட்டுள்ளது என்று ஒரு கூட்டத்தினர் கூறுவது தான் உண்மையாகும்.

*ஃபுதூஹாத்து வஹ்பிய்யா,*
*ஜறஹு அர்ப ஈன நவவி.*

ஷாஹ் அப்துல் அஸீஸ் முஹத்திதுத் திஹ்லவி ரஹ்மத்துல்லாஹி அலைஹி கூறுகின்றார்கள்.

ஹாஃபிழ் இப்னு ஹஜர் அஸ்கலானி ரஹ்மத்துல்லாஹி அலைஹி அவர்களின் தந்தைக்கு குழந்தைகள் உயிருடன் வாழ்வதில்லை. (சிறு வயதிலேயே மரணித்து விடுகின்றன.) தனது ஷைகைச் சந்தித்து கவலையுடன் தனது குறையை முறையிட்டார்கள்.

இதைக் கேட்ட ஷைகவர்கள். "உங்கள் முதுகந் தண்டில் ஒரு குழந்தை இருக்கிறது. அது உலகம் முழுவதும் அறிவைப் பரப்பும்." என்று சுபச்செய்தி கூறினார்கள்.

*புஸ்தானுல் முஹத்திதீன்_114.*

இது வரை மறைவான ஐந்து விடயங்கள் பற்றிய முஃபஸ்ஸிரீன்கள், முஹத்திதீன்கள் உள்ளிட்டவர்களின் ஆதாரங்களை முன்வைத்தோம். அடுத்து, பகுத்தறிவு ரீதியான ஓர் ஆதாரத்தையும் முன் வைக்கின்றேன். மறுப்பாளர்களும் இதை மறுக்க மாட்டார்கள் என்பது எனது நம்பிக்கை!

ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கு அனைத்து படைப்புகளை விடவும் அறிவு அதிகம் என்பதற்கான ஆதாரத்தை தேவ்பந்திகளின் ஞானபீடம் காஸிம் நானோத்தவியின் "தஹ்தீறுன் நாஸ்" என்ற நூலிலிருந்து ஏற்கனவே எடுத்துக் காட்டியுள்ளோம்.

மறைவான ஐந்து விடயங்களும் அல்லாஹ் அல்லாதவர்களில் யாருக்காவது வழங்கப்பட்டுள்ளதா? இல்லையா? என்பதை கவனித்து பார்ப்போம்.

மிஷ்க்காத்தில் "விதியை நம்புதல்" என்ற பாடத்தில் பின் வரும் ஹதீஸ் பதிவாகியுள்ளது. தாயின் வயிற்றில் கரு 40 நாள் இந்திரியமாக இருக்கும். 40 நாள் இரத்தக் கட்டியாக இருக்கும்.

ثم يبعث الله ملكا باربع كلمات فيكتب عمله، واجله ؛ورزقه؛ وشقي؛ او سعيد ثم ينفخ فيه الروح.. الخ، متفق عليه

பின்னர், அல்லாஹுத்தஆலா ஒரு மலக்குக்கு நான்கு விடயங்களை தெரிவித்து அனுப்பி வைக்கின்றான்.

1-அவன் செயல், (கர்மம்),

2- அவனது ஆயுள் (மரணம்),

3- இரணம்.

4- மூதேவியா? அல்லது சீதேவியா? பின்னர் றூஹ் ஊதப்படும்.

இவை ஐந்தும் மறைவான அறிவுகளாகும். இப்போது வாழுகின்ற, மரணித்துப் போன மனிதர்களின் இந்த மறைவான ஐந்து விடயங்களையும் விதியை எழுதிய மலக்கு அறிவார்.

மிஷ்க்காத்தில் இதே பாடத்தில் மேலும் ஒரு ஹதீது பதிவாகியுள்ளது.

كتب الله مقادير الخلائق قبل ان يخلق السموات والارض بخمسين الف سنة

வானங்கள் பூமியை படைப்பதற்கு 50,000 ஆண்டுகளுக்கு முன்பு படைப்புகளின் விதிகளை அல்லாஹுத் தஆலா எழுதி வைத்து விட்டான்.

இவ்வாறு எழுதப்பட்ட விதிகள் லவ்ஹுல் மஹ்ஃபூழ் ஏட்டில் பதியப்பட்டிருக்கும். லவ்ஹுல் மஹ்ஃபூழ் ஏட்டைச் சுற்றியிருக்கும் மலக்குகளின் பார்வை லவ்ஹுல் மஹ்ஃபூழில் பதிந்திருக்கும். நபிமார்கள், வலிமார்கள் உள்ளிட்ட அனைவருக்கும் நிச்சயமாக இந்த ஐந்து விஷயங்களும் தெரிந்திருக்கும்.

மிஷ்க்காதில் "விதி" பற்றிய பாடத்தில் பின்வரும் ஹதீஸ் பதிவாகியுள்ளது.

அல்லாஹுத் தஆலா வாக்குறுதி வாங்கிய ஆன்மா உலகில் நபி ஆதம் அலைஹிஸ்ஸலாம் அவர்களுக்கு அவர்களின் பிள்ளைகளை எடுத்துக் காட்டப்பட்டன. அவர்களில் சிலர் வெண்மையாகவும், மற்றும் சிலர் கறுப்பாகவும் காணப்பட்டனர். வெண்மையானவர்கள் முஃமின்கள். கறுத்தவர்கள் காஃபிர்கள் ஆவார்கள்.

மிஃராஜ் இரவில் நபி இப்ராஹீம் அலைஹிஸ்ஸலாம் அவர்களை ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கண்டார்கள். அவர்களுக்கு வலது பக்கத்தில் வெள்ளை நிறத்திலும், இடது பக்கத்தில் கருப்பு நிறத்திலும் றூஹுகள் இருந்தன.

அதாவது சொர்க்கவாசிகளும், நரகவாசிகளும் இருந்தனர். சொர்க்க வாசிகளான முஃமின்களைப் பார்த்து மகிழ்ச்சியடைகின்றார்கள். காஃபிர்களான நரகவாசிகளைப் பார்த்து கவலைப்படுகிறார்கள்.

மிஷ்க்காத்தில் இதே பாடத்தில் பின் வரும் ஹதீஸும் பதிவாகி உள்ளது.

ஒரு தினம் ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் இரு கையிலும் ஏடுகளைச் சுமந்தவர்களாக ஸஹாபாக்கள் முன்வந்தார்கள்.

வலது கரத்தில் இருக்கும் ஏட்டில் சொர்க்க வாசிகளின் பெயர்களும், அவர்களின் கோத்திரத்தாரின் பெயர்களும் இருக்கின்றன. மறு கரத்திலிருக்கும் ஏட்டில் நரகவாசிகளின் பெயர்களும், அவர்களின் கோத்திரத்தாரின் பெயர்களும் இருந்தன. இறுதியில் மொத்தம் எத்தனை நபர்கள் என்ற முழு தொகையையும் தெரிவித்து விட்டார்கள்.

இந்த ஹதீதுக்கு அல்லாமா முல்லா அலிகாரி ரஹ்மத்துல்லாஹி அலைஹி மிர்க்காத்தில் பின் வரும் விளக்கத்தை எழுதுகின்றார்கள்.

الظاهر من الإشارة انهما حسيان ، وقيل تمثيل , مرقاة

மேற்கண்ட ஹதீஸில் சுட்டிக் காட்டியதிலிருந்து வெளிப்படையாக தெரிகிறது. அவை இரண்டும் கண்ணுக்குத் தெரியக் கூடிய ஏடுகள் தான். படி(மாதிரி)கள் என்றும் ஒரு கூற்று உண்டு.

*மிர்க்காத்,*

மிஷ்க்காத்தில் "கப்ரின் வேதனை" என்ற பாடத்தில் பின் வரும் ஹதீஸ் பதிவாகியுள்ளது.

ஒருவரை விசாரிக்க முன்பே அவர் சீதேவியா? அல்லது மூதேவியா? என்பதை மலக்குகள் அறிந்து வைத்துள்ளனர். விசாரணை என்பது சட்டத்தை பேணுவதற்காக மட்டும் தான். அல்லது சட்டத்தைப் பற்றி ஆட்சேபனை செய்பவனின் வாயை மூட வைப்பதற்கு தான் என்பதையும் இதன் மூலம் தெரிந்து கொள்கின்றோம்.

ஒரு நல்ல மனிதனின் மனைவி கணவருடன் சண்டை பிடித்தால், உன்னுடன் சில நாட்களுக்கான விருந்தாளி தான் உன் கணவர். பின்னர் அவர்கள் எங்களிடம் வந்து விடுவார். அதனால், அவருடன் சண்டை பிடிக்காதே! என்று ஹூறுல் ஈன்கள் கூறுவார்கள்.

*மிஷ்க்காத். பாடம் : திருமணம்.*

ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் பத்று யுத்தம் நிகழ்வதற்கு முதல் நாள் யுத்தக் களத்தில் சில இடங்களில் இந்த இடத்தில்தான் இன்ன காஃபிர் கொல்லப்படுவான் என்று அடையாளமிட்டு சிலரின் பெயரை கூறினார்கள்.

மறு நாள் யுத்தக் களத்தில் நபியவர்கள் அடையாளமிட்ட இடத்தை விட்டும் ஒரு நூல் கூட மாறாமல் குறித்த இடத்தில் குறிப்பிடப்பட்டவர்கள் கொல்லப்பட்டனர். அப்படியாயின் அவர்கள் எந்த இடத்தில் எப்படி மரணிப்பார்கள் என்ற அறிவு ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கு ஏற்கனவே தெரிந்திருக்கின்றது.

மேற்கண்ட ஹதீஸ்களின் மூலம் மறைவான ஐந்து விடயங்களையும் அல்லாஹுத்தஆலா தனது சொந்த சில நல்லடியார்களுக்கு அறிவித்து

கொடுத்துள்ளான். பின்னர் இவர்கள் அனைவரின் அறிவையும் ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வசல்லமவர்ளின் அறிவு சூழ்ந்து இருக்கின்றது.

இப்படி இருக்க என்ன விதத்தில் பெருமானார் ஸல்லல்லாஹு அலைஹி அவர்களுக்கு மறைவான ஐந்து விடயங்கள் பற்றிய அறிவு இல்லை என்று கூறுவது?

அல்லாஹ்வால் வழங்கப்பட்ட இந்த ஐந்து அறிவுகளும் புதியவை யாகும். அதனால், இவை அல்லாஹ்வின் பண்பல்ல! அப்படியில்லாமல் இவை அல்லாஹ்வின் பண்பாகத் தானிருக்குமாயின் இவை பற்றிய எந்த அறிவும் அல்லாஹ் அல்லாதவர்களுக்கு வழங்கப்படமாட்டாது.

அல்லாஹ்வால் வழங்கப்பட்ட புதிய அறிவில் ஒருபோதும் ஷிர்க்கு வர முடியாது. அப்படியாயின் அப்படியான அறிவு இருப்பது சாத்தியமாகும். அதில் சிலதல்ல, எல்லாமே சாத்தியம்தான்!

நமது மேற் கண்ட பதிலுக்கு மறுப்பு இன்ஷா அல்லாஹ் மறுப்பாளர்களால் நிச்சயம் வழங்க முடியாது.

وَمَا يَعْلَمُ تَأْوِيلَهُ اِلَّا اللَّهُ

*"அதனுடைய விளக்கத்தை அல்லாஹ்வைத் தவிர (வேறு எவரும்) அறியமாட்டார்கள்."*

*(அல் குர்ஆன்: 3: 7).*

***"நேர் பொருள் பொருந்தாத திருவசனங்களின் வலிந்துரைகளை அல்லாஹ்வைத் தவிர வேறெவரும் அறியமாட்டார்கள்."***

*(அல் குர்ஆன்: 3: 7).*

இதன் மூலம் ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கு நேர் பொருள் பொருந்தாத (முதஷாபிஹத்)தின் திரு வசனங்களின் அறிவு இல்லை என்பது தெரிய வருகின்றது.

**பதில்:-**

மேற்படி திருவசனத்தில் நேர் பொருள் பொருந்தாத முதஷாபிஹாத் வசனங்களின் அறிவு பெருமானார் ஸல்லல்லாஹு அலைஹி செல்லும் அவர்களுக்கு வழங்கப்படவில்லை என்று எங்கே குறிப்பிடப்பட்டுள்ளது?

اَلرَّحْمٰنُ عَلَّمَ الْقُرْاٰنَؕ

*"அளவற்ற அருளாளனான ரஹ்மான் அவர் (நபியவர்)களுக்கு திருக் குர்ஆனை கற்றுக் கொடுத்துள்ளான்."*

*(அல் குர்ஆன்: 55: 1,2).*

என்று அல்லாஹுத்தஆலா திருக்குர்ஆனில் குறிப்பிட்டுள்ளான் திருக்குர்ஆனை முழுமையாக கற்றுக் கொடுத்த நாயன் முதஷாபிஹாத் பற்றிய திரு வசனங்களையும் கற்றுக் கொடுத்துள்ளான்.

இதனால் தான் ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் முதஷாபிஹத்தான வசனங்களையும் நன்கு அறிவார்கள் என்று ஹனஃபிகள் தெளிவாகக் கூறுகின்றனர். ஷாஃபி மத்ஹபின் கருத்து தீர்க்கமான அறிஞர்களும் அறிவார்கள் என்கின்றனர். இல்முல் ஙைபை மறுக்கின்றவர்கள் தங்களின் வாதத்திற்கு ஆதாரமாக பல ஹதீதுகளை முன் வைக்கின்றனர். இவை அனைத்துக்கும் பின்வருமாறு சுருக்கமாகப் பதில் கூறுகின்றோம்.

இவர்கள் முன் வைக்கின்ற எந்த ஒரு ஹதீதிலும் இந்த விடயம் தொடர்பான அறிவை அல்லாஹ் எனக்குத் தரவில்லை என்று கூறப்பட்டதாக இல்லை. சில ஹதீதுகளில் "அல்லாஹு அஃலம் - அல்லாஹ் மிக அறிந்தவன்" என்றும்,

மேற்கண்ட தகவல்கள் அனைத்தும் நபிகள் நாதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கு மறைவான அறிவு இல்லை என்பதைக் குறிக்காது. கேளுங்கள்! என்பதும், அல்லாஹ் மிக அறிந்தவன் என்பதும் நன்மைகளின் அடிப்படையில் கூறப்பட்டவையாகும்.

அடியார்களுக்கு கணக்கற்ற விடயங்களை அல்லாஹுத்தஆலா கூறியுள்ளான். அதிகமான விடயங்களைப் பற்றி மலக்குகளிடம் அல்லாஹுத் தஆலா விசாரித்துள்ளான். இதனால் அல்லாஹ்வுக்கு மறைவான அறிவு இல்லை என்று கூற முடியுமா?

ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கு மறைவான அறிவு இல்லை என்பதற்கு வலுவான ஒரு ஹதீதேனும் இவர்களால் காட்ட முடியுமா? என்றால் இன்ஷா அல்லாஹ் ஒரு போதும் அவர்களால் காட்ட முடியாது. நமது இந்த சவால் அவர்களுக்கு போதுமாக இருந்தாலும் அவர்கள் காட்டுகின்ற ஹதீதுகளையும், அதற்கான நமது பதில்களையும் அடியில் தருகின்றோம். இதற்கான தௌபீக்கை அல்லாஹ்விடமே கேட்கின்றோம்.

## மறுப்பு: 1

ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் ஒரு திருமண வீட்டுக்குச் சென்றார்கள். அங்கு அன்சாரிகளை சேர்ந்த சில சிறுமிகள் "பத்று" யுத்தத்தில் ஷஹீதான ஷுஹதாக்களின் மர்தியா (இரங்கப் பா)க்களை பாடிக் கொண்டிருந்தனர். பெருமானார் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் அங்கு வருகை தந்திருந்ததைக் கண்ட ஒரு சிறுமி,

وفينا نبي يعلم ما في غد

நம் மத்தியிலிருக்கும் நன்நபியவர்கள் நாளை நடப்பதையும் நன்கறிவார்கள் என்று பாடினார். இதைக் கேட்ட நபிகள் நாதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் அச்சிறுமியை பார்த்து இதை விடும், முதலில் பாடியதையே பாடும் என்று கூறினார்கள்.

*மிஷ்க்காத்,*

இதை மறுப்பாளர்கள் ஆதாரமாகக் கொண்டு நபியவர்களுக்கு மறைவான அறிவு இல்லையென்று வாதிக்கின்றனர். "நாளை நடப்பதை நபியவர்கள் நன்கறிவார்கள்" என்பது உண்மையாயின் ஏன் தடுத்தார்கள்? உண்மையை தடுக்க வேண்டிய அவசியம் என்ன? என்பது மறுப்பாளர்களின் கேள்வி!.

## பதில்:

1- இப்பாசுரம் சிறுமிகள் இயற்றியதல்ல. சிறுமிகளால் கவிதை இயற்ற முடியாது.

2- இப்பாசுரம் காஃபிர்களால் கோர்வை செய்யப்பட்டதுமல்ல, ஏனெனில், இவர்கள் நபிகளாரை ஏற்கவில்லை.

3- ஒரு ஸஹாபிதான் இக்கவிதையை இயற்றியிருக்க வேண்டும். அப்படியாயின், இக்கவிதையை இயற்றிய ஸஹாபி (ம ஆதல்லா) காஃபிரா?

4- இக்கவிதையையோ, இக்கவிதையை இயற்றியவரையோ நபிகள் நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் தடுக்கவில்லை. குறை கூறவுமில்லை. அப்படியாயின் நபியவர்கள் ஏன் தடுத்தார்கள்?

இதற்கு நான்கு காரணங்கள் உள்ளன.

1- சபையில் தன்னைப் பற்றி யாராவது புகழ்ந்து பாடினால் தன்னடக் கத்தைக் கருதி பேசவிடாது தடுப்பது நடைமுறை. அதையொட்டி நபியவர்களும் கூறியிருக்கலாம்.

2- கூத்தும், கும்மாளமும் இருக்குமிடத்தில் நபியின் புகழ் பாடுவதை ஒழுக்கத்தை நாடித் தடுத்திருக்கலாம்.

3- மறைவான விடயத்தை தன்பக்கம் சேர்த்ததனால் தடுத்திருக்கலாம்.

4- இரங்கற் பாடலும், புகழ் பாடலும் ஒரே இடத்தில் பாடப்படுவதை விரும்பாதிருக்கலாம். திருமண வீட்டிலுள்ளவர்களிலும் பத்று யுத்தத்தில் ஷஹிதானவர்களிருந்தனர். அவர்கள் இப்பாடலால் மன ஆறுதல் பெற்றனர். அதை ஒட்டியும் கூறியிருக்கலாம். பத்று ஷுஹதாக்களின் மர்தியாக்களைக் கேட்க நபியவர்கள் விரும்பியிருக்கலாம்.

மேற்படி ஹதீஸுக்கு மிர்க்காத்தில் பின்வரும் விளக்கம் எழுதப் பட்டுள்ளது

لكراهة نسبة علم الغيب اليه لانه لا يعلم الغيب الاالله ، وانما يعلم الرسول من الغيب ما اعلمه. او الكراهة ان يذكر في اثناءضرب الدف، واثناء مرثية القتلي لعلو منصبه من ذلك . مرقاة

இல்முல் ஙைப (சுயமாக) அறிந்தவன் அல்லாஹ் மட்டும் தான். அதனால் மறை ஞானத்தை தன்பக்கம் சேர்த்ததை நபியவர்கள் விரும்பாதிருக்கலாம். அல்லாஹுத் தஆலா அறிவித்து கொடுத்த மறைவானவற்றைத்தான் ரஸூலுல்லாஹ் அறிவார்கள். அல்லது, கொட்டடித்து அன்னாரின் திருப் பெயர் கூறப்படுவதை வெறுத்திருக்கலாம்.காரணம், பெருமானாரின் தகுதி உன்னதமானது. அதனால், யுத்தத்தில் கொல்லப்பட்டவர்களின் மர்தியாக்களுக்கு மத்தியில் அன்னாரின் புகழ் பாடுவது தகுதியற்றது என்றும் கருதி இருக்கலாம்.

*மிர்க்காத்.*

இல்முல் ஙைபை ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுடன் இணைத்து கூறப்பட்டதை நபியவர்கள் விரும்பாத காரணத் தினால்தான் அவ்வாறு பாடுவதை தடுத்ததாக ஹதீஸ் விரிவுரையாளர்கள்

கூறுகின்றார்கள். மற்றும் சிலரின் கூற்றுப்படி, கூத்தும், கும்மாளமும் நிறைந்த இடத்தில் அன்னாரின் திருப்புகழ் பாடுவதை வெறுத்தார்கள். அதனால் தடுத்தார்கள்.

*ஆதாரம்: அஜிஃஅத்துல் லம்ஆத்.*

ஹுஜ்ஜத்துல் இஸ்லாம் இமாம் ஙஸ்ஸாலி ரஹ்மத்துல்லாஹி அலைஹி கூறுகின்றார்கள்.

وهذه شهادة بنبوة فزجرها عنها وردها الي الغناء الذي هو لهو احياء علوم الدين ، كتاب السماع

நபியவர்களின் புகழ், நபித்துவத்தைப் பற்றி சாட்சி பகரும் பகுதியாகும். அதனால் வேடிக்கையும், இசையும் உள்ள இடத்தில் நபி புகழ் பாடுவதை கண்டித்தார்கள்.

*இஹ்யா உலூமுத்தீன்.*

**மறுப்பு: 2**

மதீனத்துல் முனவ்வராவிலுள்ள அன்ஸாரிகள் மத்தியில் பேரீத்தம் தோப்பில் ஈத்தம் மரங்களில் அதிக விளைச்சலை எதிர்பார்த்து பாளை கட்டும் வழக்கம் இருந்து வந்தது. இவ்வாறு கட்டுவதை ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் தடுத்தார்கள். அதனால் அன்ஸாரிகளும் பாளை கட்டுவதை நிறுத்தி விட்டனர். அல்லாஹ்வின் வேலை! விளைச்சல் குறைந்துவிட்டது.

இது பற்றி ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களிடம் முறையிட்டனர். அப்போது ரஸூலுல்லாஹ் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள்.

انتم اعلم بامور دنياكم

உங்களுடைய உலக விவகாரங்களில் நீங்கள் தான் அதிகம் அறிந் தவர்கள்.

ஈத்தம் மரத்திற்கு பாளை கட்டினால் அதிகம் கனிகள் வரும் என்ற செய்தி ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கு தெரியாது. நபியவர்களை விட இது விடயத்தில் அன்ஸாரிகளுக்கு அதிக அறிவு உள்ளது என்பது இதிலிருந்து விளங்க முடிகிறது.

நபியவர்களுக்கு மறைவான அறிவு இல்லையென்பதற்கு மறுப் பாளர்கள் காட்டும் இரண்டாவது ஆதாரம் இதுவாகும்.

**பதில்:-**

நீங்கள் பொறுமையாக நடந்து கொள்ளாவிட்டால் உங்கள் தொழிலை நீங்கள் தான் பார்த்துக் கொள்ள வேண்டும் என்று றஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வசல்லமவர்கள் கோபமாகக் கூறினார்கள்.

உதாரணமாக, ஒருவர் ஒன்றைப் பற்றி அதிக அக்கறை காட்டி சிந்தித்தால், பாய், நீ மெத்தப் படித்தவனப்பா! என்று கூறினால், அது பற்றி இவருக்கு தெரியாது என்பது நோக்கம் ஆகாது.

அல்லாமா முல்லா அலீ காரி ரஹ்மத்துல்லாஹி அலைஹி கூறுகின்றார்கள்.

وخصه الله من الاطلاع علي جميع مصالح الدنيا والدين ، واستشكل انه عليه السلام وجد الانصار يلقحون النحل فقال لو تركتموه فتركوه فلم يخرج شيئا او خرج شيصا فقال انتم اعلم بامور دنياكم . قال الشيخ السنوسي اراد أن يحملهم علي خرق العوائد في ذلك الي باب التوكل وأما هناك فلم يمتثلوا فقال انتم أعرف بدنياكم ولو امتثلوا وتحملوا في سنة او سنتين لكفو امر هذه المحنة ، شرح الشفا

ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கு உலகம், மார்க்கம் தொடர்பான அனைத்து வகையான பயன்களையும் அல்லாஹுத்தஆலா விசேடமாக அறிவித்து கொடுத்துள்ளான். அன்சாரிகள் பேரீத்தம் மரங்களுக்கு பாளை கட்டுவதை ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் கண்டார்கள். அதை தவிர்த்தால் நன்றாக இருக்கும் என்ற போது, அன்சாரிகளும் பாளை கட்டுவதை தவிர்த்தார்கள். அந்த வருடம் பழம் வரவில்லை. அல்லது குறைவான பழங்களே வந்தன.

இது பற்றி ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவரிடம் முறையிட்ட போது, "உங்கள் விவகாரங்களில் நீங்கள் அதிகம் அறிந்தவர்கள்"! என்று கூறினார்கள்.

ஷைகு ஸனுசீ ரஹ்மத்துல்லாஹி அலைஹி கூறுகின்றார்கள்.

வழக்கத்திற்கு மாற்றமாகச் செய்து அவர்களை "தவக்குலின்" பக்கம் திருப்புவதற்கு நபியவர்கள் விரும்பினார்கள். அதற்கு அவர்கள் வழிபடவில்லை. அப்போது அவர்களைப் பார்த்து, "உங்களின் உலக விவகாரங்களைப் பற்றி நீங்கள் தான் அதிகம் அறிந்தவர்கள்.!" என்று ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி அவர்கள் கூறினார்கள். இவர்கள் ஒரு வருடம், அல்லது இரண்டு வருடங்கள் பொறுமை செய்திருந்தால் இந்த வேலையில் இவர்களுக்கு சிரமம் இல்லாது போயிருக்கும்.

*ஜறஹுஷ் ஜிஃபா.*

அல்லாமா முல்லா அலி காரி ரஹ்மத்துல்லாஹி அலைஹி மேலும் கூறுகின்றார்கள்.

ولو ثبتوا علي كلامه لفاقوا في الفن ولارتفع عنهم كلفة المعالجة. شرح الشفا

அவர்கள் மதித்திருந்தால், இத்துறையில் அதிக முன்னேற்றத்தை அடைந்திருப்பார்கள். பாளை கட்டும் சிரமமும் இல்லாது ஒழிந்து போயிருக்கும்.

*ஜறஹுஷ் ஜிஃபா.*

ولا يعزب عن علمه عليه السلام مثقال ذرة في الارض ولا في السماء من حيث مرتبته وان كان يقول انتم اعلم بامور دنياكم فصل الخطاب

அல்லாமா செய்ரின் ரஹ்மத்துல்லாஹி அலைஹி அவர்களின் கூற்றை மேற்கோள் காட்ட فصل الخطاب ஃபஸ்லுல் கிதாப் ஆசிரியர் பின் வருமாறு எழுதுகின்றார்.

ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் அறிவில் வானங்கள், பூமியில் ஒரு அணு கூட மறையவில்லை. உங்களின் உலக விவகாரத்தில் நீங்கள் அதிகம் அறிந்தவர்கள் என்று கூறி இருந்தாலும் சரிதான்.!

யூஸுஃப் நபி அலைஹிஸ்ஸலாம் விவசாயி அல்ல. விவசாயிகளுடன் அவர்களுக்கு உறவு இருந்ததில்லை. பஞ்சம் வருவதற்கு முன்பே பட்டறைகளை சிறந்த முறையில் பேணிக் கொள்ளுமாறு பணித்தார்கள்.

யூஸுஃப் நபி அலைஹிஸ்ஸலாம் கூறினார்கள்.

فما حصتم فذروها في سنبله

'நீங்கள் அறுவடை செய்தால் கதிரோடு சேமித்துக் கொள்ளுங்கள்'

என்று கூறி கோதுமை கெட்டுப் போகாமல் பாதுகாக்கும் முறையை கற்றுக் கொடுத்தார்கள். இன்றும் கூட பட்டறையை வைக்கோலால் மேய்ந்து கோதுமை (நெல் உள்ளிட்ட) தானியங்களை பாதுகாக்கின்றனர். விவசாயத்தின் இந்த நுணுக்கத்தை இவர்களுக்கு கற்றுக் கொடுத்தது யார்?

நபி யூஸுஃப் அலைஹிஸ்ஸலாம் மேலும் கூறினார்கள்.

اجْعَلْنِي عَلَى خَزَائِنِ الأَرْضِ أَنِّي حَفِيظٌ عَلِيمٌ

***"என்னை பூமியின் கருவூலங்களுக்கு பொறுப்பாக நியமியுங்கள். அதனைப் பாதுகாக்கின்றவனாகவும், அனைத்து விடயங்களையும் அறிந்தவனாகவும் இருக்கின்றேன் என்றார்கள்."***

*(அல் குர்ஆன்: 12:55).*

நபி யூஸுஃப் அலைஹிஸ்ஸலாம் அவர்கள் நிர்வாக முறைகளையும், பொருளாதார நிபுணத்துவத்தையும் யாரிடம் கற்றார்கள்? ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் அறிவும், திறனும் நபி யூஸுஃப் அலைஹிஸ்ஸலாம் அவர்களை விட குறைவானதா? அல்லாஹ் பாதுகாக்க வேண்டும்.

**மறுப்பு 3:**

ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அல்லாஹ்வை பார்த்தார்கள் என்றோ, ஏதாவது ஒரு விடயத்தை மறைத்தார்கள் என்றோ,

நாளை நடப்பதை அறிவார்கள் என்றோ யாராவது கூறினால், அவர் அல்லாஹ்வின் மீது பொய் கூறியவராவார்.

*அறிவிப்பவர்: ஆயிஜா ஸித்தீக்கா ரலியல்லாஹுதஆலா அன்ஹா.*

*நூல்: திர்மிதி*

**பதில்.**

ஆயிஷா ஸித்தீக்கா ரலியல்லாஹு தஆலா அன்ஹா அவர்களின் மேற்படி மூன்று கூற்றுக்களும் வெளிப்படையான கருத்தில் கூறிய தில்லை. இது அவர்களின் அபிப்பிராயத்தில் கூறப்பட்டதாகும். இதற்கு ஆதாரமாக "மர்ஃபூஆன"எந்த ஒரு ஹதீதையும் அவர்கள் முன்வைக்கவில்லை.

ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் அல்லாஹ்வை பார்த்தார்கள் என்று அப்துல்லாஹ் இப்னு அப்பாஸ் ரலியல்லாஹு தஆலா அன்ஹுமா கூறுகின்றார்கள். இக்கருத்தையே பெரும்பான்மையான அறிஞர்கள் ஏற்றுள்ளனர்.

இது தொடர்பான விரிவான விளக்கத்தை மதாரிஜுன் நுபுவ்வத், நஸீமுர் றியாழ், ஷறஹு முஸ்லிம் உள்ளிட்ட நூல்களிலும் காணலாம். நமது நூலான "ஷஃனே ஹபீபுர் றஹ்மான்" என்ற நூலில் "ஸூரத்துன் நஜ்மு" அத்தியாயத்தின் விளக்கத்தில் விரிவாக கூறியுள்ளோம். விரும்பியவர்கள் அதை பார்த்துக் கொள்ளலாம்.

நபியவர்கள் எதையும் மறைக்கவில்லை என்ற அன்னை ஸித்தீக்கா ரலியல்லாஹு தஆலா அன்ஹா அவர்களின் கூற்று "ஷரஅத் சட்டங்களை எத்தி வைத்தல்" பற்றியதாகும். இல்லையென்றால் அதிகமான இறை இரகசியங்களை மக்களுக்கு கூறாமல் நபியவர்கள் மறைத்திருக்கின்றார்கள்.

ஹளரத் அபூ ஹுரைரா ரலியல்லாஹு தஆலா அன்ஹு கூறுகின்றார்கள்.

நான் ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களிடமிருந்து இருவிதமான அறிவுகளை பெற்றுக் கொண்டேன். அவற்றில் ஒன்றை மக்களுக்கு எத்தி வைத்தேன். அடுத்ததை கூறினால், என் குரல்வளை அறுபட்டு போய்விடும் என்று பயந்து மறைத்துக் கொண்டேன்.

*நூல்: மிஷ்க்காத்.*

தெய்வீக இரகசியங்கள் தகுதியற்றவர்களுக்கு கூறாமல் மறைக்கப் பட்டுள்ளன என்பதை இதன் மூலம் தெரிந்து கொள்ள முடியும்.

நாளை நடப்பதை நபியவர்கள் அறிய மாட்டார்கள் என்பதன் பொருள் "சுயமாக அறியமாட்டார்கள்" என்பதாகும். இவ்வாறு கருத்து வைக்கா விட்டால் நூற்றுக்கணக்கான ஹதீஸ்களை மறுக்க வேண்டி வரும்.

மறுமை நாள், தஜ்ஜால், இமாம் மஹ்தி, ஹவ்ழுல் கௌதர், ஷஃபாஅத், இமாம் ஹுஸைன் றழியல்லாஹு அன்ஹு அவர்களின் ஷஹாதத், பத்று யுத்தக் களத்தில் கொல்லப்படும் காஃபிர்களின் தொகை, இவர்கள் கொல்லப்படும் இடம், (இறுதி நாளின் அடையாளங்கள்) உள்ளிட்ட ஏராளமான மறைவான செய்திகளையெல்லாம் நாம் நம்பி இருக்கின்றோம்.

இவையெல்லாம் மறைவானவை தான். இந்த ஹதீஸின் படி இவற்றையெல்லாம் நாம் மறுக்க வேண்டி வரும். நாளை நடக்கும் பல விடயங்களை சாதாரணமான பலராலும் கூற முடிகின்றது. நாளை காலை எத்தனை மணிக்கு சூரியன் உதிக்கும் என்பதும், சூரியன் இன்ன நேரத்தில் மறையும் என்பதும் திட்டவட்டமாக கூறக் கூடியவைதான். அதனால், அன்னையவர்களின் இக்கூற்று தவக்குலுடன் தொடர்புபட்ட தாகும் என்பதைப் புரிந்து கொள்ள வேண்டும்.

அன்னையவர்களின் திருமணத்திற்கு முன்புதான் “மிஃறாஜ்” நிகழ்ந்தது. நபிகள் நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் உடலுடன் மிஃறாஜ் செல்லவில்லை என்றும் அன்னையவர்கள் கூறுகின்றார்கள். இது பற்றிய அறிவு இவர்களுக்கு இல்லையென்றும் கூறப்படுகின்றது. காரணம் மிஃறாஜ் நடக்கும் போது இவர்கள் நபியவர்களுடன் இருக்கவில்லை.

## மறுப்பு : 4

பனீமுஸ்தலக் யுத்தகளத்தில் அன்னை ஆயிஷா ஸித்திகா ரலியல்லாஹு தஆலா அன்ஹா அவர்களின் ஒரு "கழுத்தணி" காணாமல் போயிருந்தது. பல இடங்களில் தேடியும் கிடைக்கவில்லை. இறுதியில் அவர்கள் பயணம் செய்த ஒட்டகத்திற்கு கீழே கிடந்து கண்டெடுக்கப்பட்டது.

ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கு மறைவான ஞானம் இருந்திருந்தால் அதனை கூறியிருக்கலாம் அல்லவா! இதற்காக மக்களை நெடுநேரமாக தாமதித்து வைத்திருக்க வேண்டியதில்லையே! இதிலிருந்து நபியவர்களுக்கு மறைவான அறிவு இல்லை என்பது தெரிகின்றது.

**பதில்:**

இந்த ஹதீஸில் தகவல் தெரிவிக்கவில்லை என்று தான் தெரிகிறதே தவிர, நபியவர்களுக்கு மறைவான அறிவில்லை என்பது அல்ல! தவறிப் போனதைப் பற்றிக் கூறாததால் பல நன்மைகள் உள்ளன. சந்திரன் பிளக்கப்பட்டதென்ற திருமறை வசனத்தின் பொருள் என்ன?

என்று பலரும் கேட்டும் அல்லாஹுதஆலா விளக்கம் கொடுக்க வில்லை. விளக்கம் வரவில்லை என்பதனால் அல்லாவுக்கு அறிவு இல்லையென்று கூற முடியுமா?

கழுத்தணி காணாமல் போனதிலும், அது உடன் கண்டெடுக்காமல் போனதிலும் பல ஹிக்மத்துக்கள் இருந்துள்ளன.

அல்லாஹ்வின் விருப்பம் பின்வரும் நோக்கங்களை கொண்டதாக இருந்துள்ளது. கழுத்தணி காணாமல் போக வேண்டும். மக்கள் அதனை தேடித் தேடி லுஹருடைய நேரம் வரவேண்டும், வுழுச் செய்வதற்கு தண்ணீர் தட்டுப்பாடு வரவேண்டும், அதற்கு மாற்று வழியை சிந்திக்க வேண்டும். மாற்று வழியாக "தயம்மம்" பற்றிய திருவசனம் இறங்க வேண்டும். ஆயிஷா சித்தீகா ரலியல்லாஹு தஆலா அன்ஹா அவர்களின் மகத்துவம் இதன் மூலம் மக்களுக்குத் தெரிய வேண்டும். அதனைக் கியாமத்து நாள் வரை மக்கள் நினைவு கூரவேண்டும்.

ஆயிஷா சித்தீகா ரலியல்லாஹு தஆலா அன்ஹா அவர்களின் பறக்கத்தினால் தான் "தயம்மும்" பற்றிய சட்டம் வந்தது, அந்தச் சலுகை நமக்கு கிடைத்தது என்று மக்கள் பேசிக் கொண்டே இருக்க வேண்டும்.

கழுத்தணி கிடந்த இடத்தை உடனே கூறியிருந்தால் தயம்மும் பற்றிய சட்டம் வந்திருக்காது. மேற்கண்ட பயன்களும் நடந்திருக்காது. அதனால் றப்பு தஆலவின் காரியங்கள் காரணத்தோடு தான் நடக்கும்.

கியாமத்து நாள் வரை நீண்டிருக்கும் பெருமானாரின் பார்வைக்கு ஒட்டகத்திற்கு கீழே கிடந்தது தெரியாமல் போனது எப்படி?

அல்லாஹ்வின் ஹபீபின் தகுதியை தெரிந்து கொள்வதற்கு அல்லாஹ்வின் தவ்ஃபீக் முக்கியமாகும்.

**மறுப்பு : 5**

ليردن علي اقوام اعرفهم ويعرفونني ثم يحال بيني وبينهم فاقول انهم مني فيقال انك لا تدري ما احدثوا بعدك فاقول سحقا سحقا لمن غير بعدي ، مشكوة ،باب الحوض والشفاعة

ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் கூறினார்கள்.

(மறுமையில்) சிலர் ஹௌழுல் கௌதர் தடாகத்தின் பக்கமாக என்னிடம் வருவார்கள். நமக்கு அவர்களைப் பற்றி நன்கு தெரியும். எம்மைப் பற்றியும் அவர்கள் நன்கு அறிவார்கள்.

பின்னர் எமக்கும் அவர்களுக்குமிடையில் திரை போடப்படும். அப்போது அவர்கள் என்னை சார்ந்தவர்கள் என்று கூறுவேன். அது சமயம் உங்களுக்குப் பின் அவர்கள் என்ன செய்தார்கள்? (எப்படி நடந்துகொண்டார்கள்) என்பதெல்லாம் உங்களுக்கு தெரியாது என்று சொல்லப்படும்!

அப்போது எனக்குப் பின் மார்க்கத்தை மாற்றியமைத்தவர்கள் தூர போங்கள்! போங்கள்! என்று கூறுவேன்.

மறுமையில் முஃமின்களையும், காஃபிர்களையும் நபியவர்களால் பிரித்தறிய முடியவில்லை. மதம் மாறிய முர்தத்துகளை எனது தோழர்கள் என்று நபியவர்கள் கூறுகின்றார்கள். இவர்களைப் பற்றி உங்களுக்கு அறிவு இல்லை என்று மலக்குகளும் கூறுகின்றனர்.

எனவே, இதிலிருந்து நபியவர்களுக்கு மறைவான அறிவு இல்லை என்பது தெரிகின்றது என்று கூறுகின்றனர்.

**பதில்:**

அவர்கள் எம்மை சார்ந்த ஸஹாபாக்கள் என்று ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் இவர்களை பார்த்து கூறியது குத்தலான வார்த்தையாகும். அவர்களை என்னிடம் வரவிடுங்கள். இவர்கள் எமது மிகவும் பரிசுத்தமான தோழர்கள் என்று நபியவர்கள் கூறியதைக் கேட்டு, மலக்குகள் இவர்களைப் பற்றிக் கூறுவதைக் கேட்டு இவர்கள் கவலையடைவதற்காக கூறப்பட்டதாகும். இல்லையானால் இவ்விடம் வரும் வரை அவர்களை மலக்குகள் எப்படி அனுமதித்தார்கள்?

மறுமையில் நரகில் வேதனை படும் அபூஜஹ்லைப் பார்த்து கூறப் படுவதை திருக்குர்ஆன் பின் வருமாறு வர்ணிக்கின்றது.

ذُقْ اَنَّكَ أَنْتَ الْعَزِيزُ الْكَرِيمُ

***தண்டனையை அனுபவி, நீ கண்ணியமானவன், சங்கையானவன்.***

*அல் குர்ஆன்: (44: 49).*

(அபூஜஹ்லை கண்ணியமானவன், சங்கையானவன் என்பது குத்தலான வாத்தையேயன்றி எதார்த்தமானதல்ல!) இப்ராஹீம் அலைஹிஸ்ஸலாம் சூரியன், சந்திரனைப் பார்த்து இது எனது "றப்பு" என்றார்கள்.

சிந்திக்க வேண்டியது என்னவென்றால், நபிகள் கோமான் முஹம்மது முஸ்தஃபா ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் உலகத்தில் இருந்துக் கொண்டே மறுமையில் நடக்கப் போகின்ற விடயங்களை கூறி யிருக்கின்றார்கள். அங்குள்ள அனைத்து விடயங்களையும் அறிவிக் கின்றார்கள்.

இவர்களைப் பற்றி நான் நன்கு அறிவேன் என்று அவர்களைப் பற்றி கூறிய ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கு மறுமையில் மறந்துவிட்டதா? முஃமின்களையும், காஃபிர்களையும் அடையாளம் காணும் விதத்தில் அவர்களிடம் சில அடையாளங்கள் காணப்படும்.

1. அல்லாஹுத்தஆலா கூறுகின்றான்.

يَوْمَ تَبْيَضُّ وُجُوهٌ وَتَسْوَدُّ وُجُوهٌ

***அந்நாளில் சில முகங்கள் வெண்மையாகவும், சில முகங்கள் கறுப்பாகவும் காணப்படும்.***

*அல் குர்ஆன்: (3: 106).*

2: முஃமின்களுக்கு வலக்கரத்தில் பட்டோலை இருக்கும். காஃபிர களுக்கு இடது கரத்தில் இருக்கும்.

3: முஃமின்களுக்கு ஸஜதா செய்த அடையாளம் நெற்றியில் இருக்கும்.

4: வுழுச் செய்த காரணத்தால் முகத்திலும், காலிலும் வெண்மை பிரகாசமாக இருக்கும்.

மேற் கண்ட ஹதீஸில் பெருமானாரிடம் சென்றவர்கள் முர்தத்துகள் என்ற காரணத்தினால் தான் மலக்குகள் இவர்களை தடுத்தார்கள். முர்தத்துகள் என்றால் காஃபிர்களாகும். காஃபிர்களுக்குரிய அனைத்து அடையாளங்களும் இவர்களிடமும் காணப்படும்.

அப்படியிருக்க, ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் இவர்களை அடையாளம் காணாமல் போனது எப்படி.?

இவ்வுலகிலேயே சிலரை சொர்க்கவாசிகள், சிலரை நரகவாசிகள் என்று குறிப்பிட்டுக் கூறியுள்ளார்கள். பத்து பேர்களுக்கு சொர்க்கத்தைப் பற்றி நற்செய்தி கூறியுள்ளார்கள். சொர்க்கவாதிகள், நரகவாசிகளின் பெயர் பட்டியலை ஸஹாபாக்களுக்குக் காட்டியுள்ளார்கள். அப்படியிருக்க, இவர்களை அடையாளம் காணாமல் போனது எப்படி?

அல்லாஹுத் தஆலா கூறுகின்றான்

يُعْرَفُ الْمُجْرِمُونَ بِسِيمَاهُمْ .

***பாவிகளை அவர்களின் அடையாளத்தை வைத்து அறியப்படும்.***

*அல் குர்ஆன்: (55: 41).*

மேலும் கூறுகின்றான்.

سِيمَاهُمْ فِي وُجُوهِهِمْ مِنْ أَثَرِ السُّجُودِ

***ஸுஜூது செய்த காரணத்தினால் அவர்களின் முகத்தில் அவர்களின் அடையாளம் இருக்கும்.***

*அல் குர்ஆன்: (48: 29).*

நல்லவர்கள், காஃபிர்கள் உள்ளிட்டோரின் அடையாளங்கள் அவர்களின் முகத்திலேயே இருக்கும் என்பது இதிலிருந்து தெரிகின்றது.

மிஷ்க்காத்தில் தடாகம், (ஹவ்ழ்) ஷஃபாஅத் பற்றிய பாடத்தில் பின் வரும் ஹதீஸ் இடம் பெறுகின்றது.

சொர்க்கவாசிகளான முஸ்லிம்கள் நரகவாசிகளான முஸ்லிம்களை நரகத்திலிருந்து வெளியேற்றுவதற்காக நரகத்திற்குச் செல்வார்கள். நரக நெருப்பு அவர்களை சுட்டு வேதனை செய்த பின் அவர்களின் ஸுஜூது செய்த தழும்புகளைப் பார்த்து வெளியேற்றுவார்கள். அப்போது இவர்களை பார்த்து பின் வருமாறு கூறப்படும்.

فَمَنْ وَجَدْتُمْ فِي قَلْبِهِ مِثْقَالَ ذَرَّةٍ مِنْ خَيْرٍ فَأَخْرِجُوهُ

எவர்களுடைய உள்ளத்தில் கடுகளவு ஈமான் இருந்தாலும் அவர்களையும் வெளியேற்றுங்கள்.

சொர்க்கவாசிகளான முஃமின்கள் நரகவாசிகளின் மனதிலிருக்கும் ஈமானின் அளவையும் அறிகின்றார்கள். நாணயத்தின் அளவு, கடுகின் அளவு என்று அளவின் பகுதிகளையும் அறிகின்றார்கள்.

ஆனால் எல்லா படைப்புகளிலும் மேலான, அறிவில் கூடிய அல்லாஹ்வின் ஹபீப் அவர்களுக்கு சாதாரணமானவனின் பகுத்தறியும் அறிவு கூட இல்லாமலா போய்விட்டது?.

அல்லாஹ்வின் திருத்தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களைப் புரிந்து கொள்வதற்கு அல்லாஹ்வின் தனிப்பெரும் கருணையும், தௌபீக்கும் தேவை.!

**மறுப்பு : 6**

والله ما أدري وأنا رسول الله ما يفعل بي

நான் அல்லாஹ்வின் தூதராக இருந்தும் எனக்கு என்ன நடக்கும் என்பதை அல்லாஹ்வின் மீது ஆணையாக நான் அறியமாட்டேன்.

*புகாரி ஜரீப்,*

*பாடம் : ஷனாஸா*

ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கு மறுமையில் என்ன நடக்கும்? அவர்களின் நிலை எப்படி இருக்கும்? என்று அவர்களுக்குத் தெரியாது என்பதை மேற்கண்ட ஹதீஸிலிருந்து தெரிந்து கொள்கின்றோம்.

**பதில்** :

இங்கு விளங்கிக் கொண்டதற்கான மறுப்பு அன்றி அறிவுக்கான மறுப்பு கிடையாது. இதன் பொருள் எனக்கு என்ன நடக்கும் என்பதை அனுபவத்தால் அறிய மாட்டேன். வஹியின் மூலமே அறிவேன்.

ஹளறத் உம்முல் அலாஃ ரலியல்லாஹு தஆலா அன்ஹு அவர்கள் ஹளறத் உதுமான் இப்னு மழ்னூன் ரலியல்லாஹு தஆலா அன்ஹு வஃபாத்தான போது அவரைச் சொர்க்கவாசி என்று அனுமானமாகக் கூறினார். இவ்வாறு கூறுவதற்கு இஸ்லாத்தில் அனுமதி கிடையாது. மறைவான செய்திகளை நபிமார்கள் கியாஸ் மூலம் கூறுவதில்லை.

ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள்.

நான் ஆதமின் மக்களின் தலைவராகும். அன்றைய தினம் "ஹம்து" என்ற கொடி எனது கரத்தில் தான் இருக்கும். ஆதம் நபி அலைஹிஸ்ஸலாம் உட்பட அனைவரும் எனது கொடியின் கீழ் தான் இருப்பார்கள். மிஷ்க்காத். மறுமையில் ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கு என்ன நடக்கும் என்று அவர்களுக்கே தெரியாது என்றிருந்தால் இந்த ஹதீதுக்கு என்ன பொருள்.?

**மறுப்பு 7:**

அன்னை ஆயிஷா சித்தீகா ரலியல்லஹு தஆலா அன்ஹா அவர்கள் மீது அபாண்டம் கூறப்பட்ட போது இது உண்மையா? பொய்யா? என்பதை அறிந்து கொள்ள முடியாமல் ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் கலவரம் அடைந்திருந்தார்கள்.

இது தொடர்பாக "வஹி" வரும் வரை ஒன்றும் பேசாமல் மௌனமாகவே இருந்தார்கள்.

மறைவான அறிவு ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கு இருந்திருந்தால் ஏன் அவர்கள் கலவரம் அடைய வேண்டும்? இத்தனை நாட்களாக ஏன் மௌனமாக இருக்க வேண்டும்? அதனால் மறைவான அறிவு நபியவர்களுக்கு கிடையாது என்பது இதிலிருந்து புரிகின்றது.

**பதில்:**

அபாண்டம் பற்றிய ஹதீஸில் தகவல் கூறவில்லை என்றோ, இது தொடர்பான அறிவு இல்லை என்றோ ஊர்ஜிதம் ஆகவில்லை.

இது பற்றிய உண்மை விளக்கத்தை தெரியப்படுத்தவில்லை என்பதால், அது பற்றிய அறிவு இல்லை என்று பொருளாகாது!

இது தொடர்பான வஹியை ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் எதிர் பார்த்திருந்தார்கள். நீண்ட நாட்களுக்கு பின்பு தான் வஹி வந்தது. அப்படி யென்றால் இது பற்றிய அறிவு அல்லாஹ்வுக்கும் இல்லை என்று கூற முடியுமா?

அபாண்டம் பற்றிய ஹதீஸ் புகாரி ஷரீஃபில் பின்வருமாறு வந்துள்ளது

ما علمت علي اهلي الا خيرا

எனது மனைவியின் பத்தினித் தனத்தைப் பற்றி நான் நன்கு அறிவேன்.

அதனால், இது பற்றிய அறிவு ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்குத் தெரியும். உரிய நேரம் வரும் வரை எதிர்பார்த்திருந்தார்கள்.

ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கு அன்னை ஆயிஷா சித்தீகா ரலியல்லாஹு தஆலா மீது ஒருபோதும் சந்தேகம் வந்ததே இல்லை. காரணம்,

அல்லாஹுத் தஆலா கூறுகின்றான்.

لَوْلَا اِذْ سَمِعْتُمُوْهُ ظَنَّ الْمُؤْمِنُوْنَ وَالْمُؤْمِنٰتُ بِاَنْفُسِهِمْ خَيْرًا وَّقَالُوْا هٰذَا اِفْكٌ مُّبِيْنٌ

***இதனை நீங்கள் கேள்விப்பட்ட பொழுது, முஃமினான ஆண்களும் முஃமினான பெண்களும் தங்களுடைய மனங்களில் நல்லதையே எண்ணி இது பகிரங்கமான அவதூறு என்று சொல்லி இருக்க வேண்டாமா?***

*அல் குர்ஆன்: (24: 12).*

என்று முஸ்லிம்களை அல்லாஹ் கண்டித்துக் கூறுகிறான்.

திருக்குர்ஆன் இறங்குவதற்கு முன்பே அன்னை அவர்கள் மீது நல்லெண்ணம் வைப்பது முஸ்லிம்களுக்கு "வாஜிப்" என்று இதிலிருந்து புரிகிறது. ஒரு முஃமீன்மீது கெட்ட எண்ணம் வைப்பது ஹராமாகும்.

ஹராமான பெரும் பாவங்களை விட்டும் ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் பாதுகாக்கப் பட்டவர்கள் ஆகும். இதனால் நபியவர்கள் ஒருகாலும் கெட்ட எண்ணம் வைத்திருக்க மாட்டார்கள்.

படுதூறு பற்றிய கதை வந்ததுமே இது படுதூறு என்று கூறுவது நபியவர்கள் மீது வாஜிபல்ல!

ஏனெனில், இது அண்ணாரின் வீட்டுப் பிரச்சினையாகும். அதனால் தீர்ப்பை அல்லாஹ்விடம் விட்டு விட்டார்கள். அப்படியாயின், ஏன் கலவரப்பட வேண்டும்? இத்தனை நாட்களாக ஏன் மௌனமாக இருக்க வேண்டும்.? கவலைப்படுவதும், மௌனமும் இது பற்றிய அறிவு இல்லை என்பதை குறிக்காது.

ஒரு கண்ணியமான பத்தினிப் பெண் மீது தவறான அபாண்டம் கூறும் போது அது அப்பட்டமான பொய் என்று தெரிந்தாலும் கூட இப்படியொரு அபாண்டம் கற்பிக்கப்பட்டு விட்டதே என்ற கவலை சாதாரணமாக எழத் தான் செய்யும். இச்செய்தி மக்கள் வாயால் பரவியது தான் பெருமானாரின் கவலைக்குக் காரணமாகும்.

இது விடயத்தில் திருக்குர்ஆன் இறங்கும் என்ற எதிர்பார்ப்பு இல்லாதிருந்தால் ஆரம்பத்திலேயே அவர்களின் புனிதத்தை வெளிப் படுத்தியிருப்பார்கள்.

ஆரம்பத்திலேயே இவ்வாறு கூறியிருந்தால் அதுவே முனாஃபிக்கு களின் வாய்க்கு அவலாக ஆகியிருக்கும். தங்களுடைய வீட்டு விவகாரத்தை மறைத்து விட்டார்கள் என்று முனாஃபிக்குகள் கூறித் திரிந்ருப்பார்கள்.

ஒரு முஸ்லிம் மீது அபாண்டம் கற்பித்தால் அதற்கான மார்க்க சட்டம் என்ன? என்பதை அறிந்திருக்க மாட்டார்கள். ஒரு வழக்கை எப்படி விசாரணை செய்ய வேண்டும்? என்ற முறையையும் அறிந்திருக்க மாட்டார்கள்.

அன்னை ஆயிஷா சித்தீகா ரலியல்லாஹு தஆலா அன்ஹா அவர்களின் பொறுமைக்கான கூலியும் அவர்களுக்கு கிடைத்திருக்காது. தீர்ப்பு பிந்தியதில் எத்தனையோ ஹிக்மத்துக்கள் பொதிந்துள்ளன.

இது அகீதா தொடர்பான பிரச்சனை! ஒரு நபியின் மனைவி தீயவராக இருக்க வாய்ப்பே கிடையாது.

அல்லாஹுத்தஆலா கூறுகின்றான்.

الْخَبِيثَاتُ لِلْخَبِيثِينَ وَالْخَبِيثُونَ لِلْخَبِيثَاتِ

***கெட்ட பெண்கள் கெட்ட ஆண்களுக்கும், கெட்ட ஆண்கள் கெட்ட பெண்களுக்கும்.***

*அல் குர்ஆன்: (24:26).*

இத்திருவசனத்தில் குறிப்பிடப்படும் "கெட்டது" என்பது, விபச்சாரமாகும். அதாவது, ஒரு நபியின் மனைவி விபச்சாரியாக இருக்கவே முடியாது. காஃபிராக இருக்கலாம். குஃப்றும் விபச்சாரத்தைப் போன்று கடுமையான குற்றம்தான். ஆனால், அருவருக்கத் தக்க குற்றமல்ல! சகலரும் அதை

வெறுப்பதில்லை. விபச்சாரத்தை மனித சுபாவமே அருவருப்பானதாக வெறுக்கின்றது. இதனால் தான் நபிமார்களின் மனைவிகளுக்கு கனவிலும் ஸ்கலிதமாகுவதில்லை.

ஹளறத் உம்முல் முஃமினீன் உம்மு ஸல்மா ரலியல்லாஹு தஆலா அன்ஹா பெண்களுக்கு ஸ்கலிதமாகுமா? என்று வியப்பாக நபியவர்களிடம் கேட்டார்கள்.

*மிஷ்க்காத்: பாடம், குளிப்பு*

அகீதாவின் அடிப்படை பிரச்சனையான இந்த விடயம் ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கு தெரியாமலா போய்விட்டது.?

ஹளறத் ஆயிஷா சித்தீகா ரலியல்லாஹு தஆலா அன்ஹா ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் அன்பிற்குரிய புனிதமான மனைவியாகும். இவர்களுக்கு இப்படி ஒரு குறை வரவே முடியாது.

தனது ஹபீபின் பிரியத்துக்குரிய மனைவியின் பத்தினித் தனத்தைப் பற்றிய சாட்சியம் தன் தரப்பிலிருந்து நிரூபிக்கப்பட வேண்டும். அன்னை ஆயிஷா சித்திகா ரலியல்லாஹு தஆலா அன்ஹா மீது திருக்குர்ஆன் வசனம் இறங்கி, கியாமத்து நாள் வரை மக்கள் அவர்களின் பத்தினித்தனத்தைப் பற்றி தொழுகையிலும், தொழுகைக்கு வெளியிலும் எங்கும் ஓத வேண்டும். ஆயிஷா நாயகியாரின் புகழ் எங்கும் மணக்க வேண்டும் என்பது அல்லாஹ்வின் நாட்டம்.

நபிகள் நாதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் இதற்கான தீர்ப்பை கூறியிருந்தால் இந்த சிறப்பு கிடைத்திருக்காது. முடிவாக அன்னை அவர்களின் பத்தினிதனத்தை நபியவர்கள் அறிந்திருந்தார்கள். ஆனால், வெளிப்படுத்தவில்லை.

நபி யூஸுஃப் அலைஹிஸ்ஸலாம் மீது ஸுலைஹா நாயகி அபாண்டம் கூறினார். சித்தி மரியம் நாயகி மீதும் படுதூறு கூறப்பட்டது. இவை இரண்டிற்கும் பச்சிளம் பாலகர்களை அல்லாஹுத் தஆலா சாட்சி களாக்கினான். இவர்கள் மூலமாகவே பதில் கூறினான். நேரடியாக அல்லாஹுத் தஆலா பதில் கூறவில்லை.

ஆனால் தனது இனிய நேசரின் பாசத்திற்குரிய மனைவி மீது அபாண்டம் கற்பிக்கப்பட்ட போது பச்சிளம் பாலகரையோ, மலக்குகளைக் கொண்டோ அவர்களின் பத்தினித் தனத்தைப் பற்றி கட்டியம் கூறாமல்

அல்லாஹ்வே அன்னாரின் பரிசுத்தத்தை பற்றி சாட்சியம் பகர்ந்தான்.

இச்சம்பவத்தை திருக்குர்ஆனின் ஒரு பகுதியாகவும் ஆக்கினான். அல்லாஹ்வின் சாட்சியம் ஈமானின் ஒரு பகுதியாகவும் ஆகிவிட்டது.

ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் பிரியத்துக்குரிய மனைவியவர்களின் தகுதியும் மக்களுக்கு தெரிந்து விட்டது.

அறியாமை, மறதி, பாராமுகம் என்று மூன்று விடயங்கள் இருக்கின்றன.

ஒன்றைத் தெரியாதிருப்பது அறியாமை.

அறிந்திருந்ததும் நினைவிலிருந்து நீங்கியிருப்பது மறதி.

நினைவிலிருப்பதின் பக்கம் கவனம் செலுத்தாமலிருப்பது பராமுகம்.

உதாரணமாக,

முதலாவது நபர் திருக்குர்ஆன் ஓதவில்லை.

இரண்டாவது நபர் திருக்குர்ஆனை மனனம் செய்த பின்னர் மறந்து விட்டார்.

மூன்றாவது நபர் பூரணமான ஹாபீழ்! ஒரு வசனத்தை பற்றிக் கேட்டால் உடன் கூற முடியாதவர்.

முதல் நபர் திருக்குர்ஆனைப் பற்றி அறியாதவர்.

இரண்டாவது நபர் மறதியாளர்.

மூன்றாவது நபர் கவனமற்றவர்.

சில நேரங்களில் முக்கியமான விடயங்களை மறப்பது நபிமார்களுக்கு சாத்தியம். ஆனால் அது நீடித்து இருக்காது.

நபி ஆதம் அலைஹிஸ்ஸலாம் அவர்களைப் பற்றி திருக்குர்ஆன்

فَنَسِيَ وَلَمْ نَجِدْ لَهُ عَزْمًا

***அவர் மறந்து விட்டார். நாம் அவரை அதில் உறுதியான நாட்டம் வைத்தவராகக் காணவில்லை.***

*அல் குர்ஆன்: (20:115).*

என்று கூறுகிறது.

ஹளறத் ஆதம் அலைஹிஸ்ஸலாம் அவர்களுக்கு லவ்ஹுல் மஹ்ஃபூழில் இருப்பது தெரியும். இவையனைத்தும் அவர்களின் பார்வைக்குட்பட்டது தான். ஆனாலும் அல்லாஹ்வின் நாட்டம்! அவர்களுக்கு கொஞ்ச காலம் வரை மறதியைக் கொடுத்துள்ளான்.

மறுமையில் முஃபஸ்ஸிரீன்கள், முஹத்திதீன்கள் உள்ளிட்ட அனைத்து மக்களும் தங்களுக்காக ஷஃபாஅத்துச் செய்யும் தகுதியுடையவரைத் தேடி நபிமார்களிடம் செல்வார்கள். தங்களுக்காக ஷஃபாஅத்துச் செய்யுமாறு அவர்களிடம் கூறுவார்கள். அவர்கள் ஷஃபாஅத்துச் செய்ய மாட்டார்கள்.

ஷஃபீஉல் முத்னிபீன் முஹம்மது முஸ்தஃபா ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் சரியான முகவரியை நபிமார்கள் கூற மாட்டார்கள்.

நபி நூஹ் அலைஹிஸ்ஸலாமிடம் செல்லுங்கள் என்று நபி ஆதம் அலைஹிஸ்ஸலாம் கூறுவார்கள்.

நபி நூஹ் அலைஹிஸ்ஸலாம் இன்னாரிடம் இன்னாரிடம் என்று ஒவ்வொருவரும் வேறொருவரை காட்டுவார்கள்.

கியாமத்தில் ஷஃபாஅத்துச் செய்யும் தகுதி ஷஃபீஉல் முத்னிபீனான முஹம்மது முஸ்தஃபா ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவளுக்குத் தான் உண்டு என்பதை உலகத்தில் உள்ள அனைத்து முஸ்லிம்களுக்கும் தெரியும். இங்கு அவர்களின் அறிவின் பக்கம் கவனம் செலுத்தாமல் இருக்கின்றார்கள். இதற்குத்தான் பெயர் "பராமுகம்" அல்லது "கவனமின்மை".

ஏதாவது ஒரு சந்தர்ப்பத்தில் ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் ஏதாவது ஒன்றில் கவனம் செலுத்தாமலிருந்தால் அதனை "அறியாமை"! என்று கூறுவதில்லை "கவனமின்மை!" என்று கூறலாம்.

அல்லாஹுத்தஆலா கூறுகின்றான்.

وَأَنْ كُنْتَ مِنْ قَبْلِهِ لَمِنَ الْغَافِلِينَ

*இதற்கு முன் (யூ ஃஸுப் அலைஹிஸ்ஸலாம் ஆகிய) அவரைப் பற்றி கவனமற்றிருந்தீர்கள்.*

*அல் குர்ஆன்: (12: 3).*

மேற்படி திருவசனத்தில் கவனமற்று இருந்தீர்கள் என்று கூறினானே தவிர, அறியாதிருந்தீர்கள் என்று கூறவில்லை. அது பற்றிய அறிவு உண்டு. அதில் கவனம் செலுத்தவில்லை. இதற்கு கவனமற்றவர் என்று கூறப்படும்.

அறிஞர் ஸஅதி குலிஸ்தானில் கூறுகிறார். '

நபி யூஸுஃப் அலைஹிஸ்ஸலாம் அவர்களின் அங்கியின் மணத்தை தூரத்தில் உள்ள மிஸ்றிலிருந்து நீங்கள் நுகர்ந்தீர்கள். ஆனால், சொந்த ஊரான "கன்ஆனி"ன் பாழ் கிணற்றில் நபி யூஃஸுப் அலைஹிஸ்ஸலாம் இருந்ததை உங்களால் அறிந்து கொள்ள முடியவில்லையே!' என்று ஒருவர் நபி யஃகூப் அலைஹிஸ்ஸலாம் அவர்களிடம் கேட்டார்.

இதற்கு நபி யஃகூப் அலைஹிஸ்ஸலாம் இப்படி பதில் கூறினார்கள்.

"எமது நிலை மின்னலின் வேட்கை போன்றுள்ளது. சிலவேளை மேகத்தை கிழித்து வெளியே பாய்கிறது சில நேரம் மேகத்துக்குள் மறைந்திருக்கிறது." தனது மகன் மிஸ்றில் வாழ்கின்றார் என்ற அறிவு நபி யஃகூப் அலைஹிஸ்ஸலாம் அவர்களுக்கு உண்டு என்பதை

திருக்குர்ஆனின் பின் வரும் வசனத்தின் மூலம் அறிகின்றோம்.

وَأَعْلَمُ مِنَ اللَّهِ مَا لَا تَعْلَمُونَ

*எனக்கு அல்லாஹ்வின் தரப்பிலிருந்து நீங்கள் அறியாத விடயங்களை நான் அறிகிறேன்.*

*அல் குர்ஆன்: (12:96).*

தஃப்ஸீர் ரூஹுல் பயானில்,

وَلَقَدْ أَرْسَلْنَا نُوحًا إِلَىٰ قَوْمِهِ

***நிச்சயமாக நூஹை அவர்களின் சமூகத்திற்கு தூதராக நாம் அனுப்பினோம்.***

*அல் குர்ஆன்: (7:59).*

என்ற திருவசனத்தின் விளக்கத்தில் பின்வருமாறு எழுதுகின்றார்கள்.

தனது பிரியத்துக்குரிய நேசர்களின் புலம்பல்களை அல்லாஹுத் தஆலா விரும்புகின்றான். நபி நூஹ் அலைஹிஸ்ஸலாம் அதிகமதிகம் அழுத காரணத்தினால் தான் அவர்களுக்கு "நூஹ்" என்ற பெயரே வந்தது.

ஹளறத் யஃகூப் அலைஹிஸ்ஸலாம் அவர்களின் உயர் படித்தரத்திற்கும் இதுவே காரணமாகிவிட்டது. அதனால், நபி யூஃஸுப் அலைஹிஸ் ஸலாம் அவர்களைப் பற்றி அறியாதது அழுகைக்கு காரணமல்ல.!

மௌலானா ரூமி ரஹ்மத்துல்லாஹி அலைஹி மஸ்னவி ஷரீபில் எழுதுகின்றார்கள்.

தந்திரத்தின் அடிப்படையில் புன்னியாமீனை நபி யூஃஸுப் அலைஹிஸ்ஸலாம் தடுத்துக் கொண்டார்கள். புன்னியாமீன் மிஸ்று நாட்டின் அரசால் கைதியாக்கப்பட்டுள்ளார் என்று நபி யஃகூப் அலைஹிஸ்ஸலாம் அவர்களிடம் சகோதரர்கள் சத்தியம் செய்தனர். தங்களோடு வந்த பயண கூட்டத்தினரின் சாட்சியத்தையும் முன் வைத்தனர்.

இதைக் கேட்ட யஃகூப் அலைஹிஸ்ஸலாம்,

بَلْ سَوَّلَتْ لَكُمْ أَنفُسُكُمْ أَمْرًا

***உங்களுடைய மனம் ஒரு (தவறான) விஷயத்தை செய்யும் படி உங்களைத் தூண்டி விட்டது.***

*அல் குர்ஆன்: (12:83).*

என்று கூறினார்கள்.

அதாவது, யூஃஸுபையும் எனது பிள்ளைகள் தான் என்னிடமிருந்து பிரித்தார்கள். புன்னியாமீனையும் கூட எனது பிள்ளைதான் தந்திரமாக தடுத்து கொண்டார். அசல் விடயம் நபி யஃகூப் அலைஹிஸ்ஸலாம் அவர்களுக்கு தெரியும் என்பது இதிலிருந்து புரிய முடிகின்றது.

வெளிப்படையில் மிஸ்றில் தங்கியவர்கள்

1, புன்யாமீன்

2, யஹூதா ஆகிய இருவருமாகும். ஆயினும்,

عَسَى اللَّهُ أَن يَأْتِيَنِي بِهِمْ جَمِيعًا

***அல்லாஹ் அவர்கள் மூவரையும் என்னிடம் கொண்டு வந்து சேர்த்து விடுவான்.***

*அல் குர்ஆன்: (12:83).*

என்றார்கள். மூன்றாவது நபர் யூஃஸுப் அலைஹிஸ்ஸலாம் ஆகும்.

ஸுலைஹா தனது வீட்டின் ஏழு கதவுகளையும் தாழிட்ட பின்பு தான் தனது தீய எண்ணத்தை யூஃஸுப் நபி அலைஹிஸ்ஸலாமிடம் வெளியிட்டார். பூட்டப்பட்டிருந்த வீட்டுக்குள் நபி யஃகூப் அலைஹிஸ் ஸலாம் நுழைந்து விரலை பல்லால் கடித்து, இதில் ஈடுபடக்கூடாது என்று ஜாடை காட்டினார்கள்.

'மகனே! இது உமக்குரிய செயலல்ல. நீ நபியின் பிள்ளை!' என்று கூறினார்கள்.

திருக்குர்ஆன் கூறுகிறது.

وَلَقَدْ هَمَّتْ بِهِ وَهَمَّ بِهَا لَوْلَا أَنْ رَأَى بُرْهَانَ رَبِّهِ

*இன்னும் திட்டமாக ஸுலைஹா அவரை நாடினாள். அவருடைய இரட்சகனின் அத்தாட்சியை அவர் காணாதிருந்தால் அவரும் அவளை நாடி இருப்பார்.*

*அல் குர்ஆன்: (12:24).*

நன்கு சிந்தியுங்கள்!.

ஹளரத் யூஃஸுப் அலைஹிஸ்ஸலாம் அவர்களை ஓநாய் கொன்றுவிட்டதாக சகோதரர்கள் நபி யஃகூப் அலைஹிஸ்ஸலாமிடம் கூறினார்கள். நபிமார்களின் உடலைத் தின்பது எங்களுக்கு ஹராமாகும் என்று ஓநாய்கள் நபி யஃகூப் அலைஹிஸ்ஸலாம் அவர்களிடம் கூறின. அதனால், இரத்தம் தோய்ந்த ஆடையும், ஓநாயின் கதையும் அப்பட்டமான பொய் என்பது நபியவர்களுக்கு தெளிவாகி விட்டது.

*தஃப்ஸீர்: காஸீன், றூஹுல் பயான்.*

ஹளறத் யூஃஸுப் அலைஹிஸ்ஸலாம் அவர்களை ஓநாய்கள் தின்னவில்லை என்பதை ஓநாய்களின் மூலமே அறிந்து கொண்ட நபி யஃகூப் அலைஹிஸ்ஸலாம் தன் மகனைத் தேடி ஏன் காட்டுக்குள் செல்லவில்லை?

மகனை மிஸ்றில் சந்திக்கும் வாய்ப்பு கிடைக்கும் என்பதை அவர்கள் அறிந்திருந்தார்கள். ஆனாலும் இது மறைக்கப்பட வேண்டியது என்பதால் கூறவில்லை என்பதை இதன் மூலம் அறிகின்றோம். இவ்வாறே ஹளரத் யூஃஸுப் அலைஹிஸ்ஸலாம் அவர்களுக்கும் அநேக விஷயங்கள் தெரிந்திருந்தன.

ஆனால், ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கு அவர்களின் ஆருயிர் நண்பரின் திருமகள் ஹழ்ரத் ஆயிஷா சித்தீகா ரலியல்லாஹு தஆலா அன்ஹா அவர்களின் நிலையை மட்டும் அறியாதிருந்தார்கள்? என்ன விசித்திரம்!

ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் ஒன்றைப் பார்த்தால் அதை உடனே மனதில் பதிய வைத்துக் கொள்ளும் ஆற்றலை அல்லாஹ் அன்னாருக்கு வழங்கியிருந்தான். ஆனாலும் அல்லாஹ்வின் விருப்பமின்றி ரகசியத்தை வெளிப் படுத்தமாட்டார்கள். அல்லாஹுத்தஆலா அவனுடைய தூதுவத்தை எங்கே வைக்க வேண்டும் என்பதை அவன் நன்கு அறிந்து வைத்துள்ளான்.

**மறுப்பு 8:**

ஸைனப் பின்து ஜஹ்ஷ் ரலியல்லாஹு தஆலா அன்ஹா அவர்களின் இல்லத்தில் தேன் அருந்திவிட்டு ஆயிஷா சித்தீகா ரலியல்லாஹு தஆலா அன்ஹா அவர்களின் வீட்டுக்கு நபியவர்கள் வந்தார்கள்.

அன்னை ஆயிஷா சித்திகா அன்னை ஹப்ஸா ரலியல்லாஹு அன்ஹுமா ஆகிய இருவரும் நண்பிகள். இருவரும் சேர்ந்து பெருமானாரை பார்த்து, 'யா ஹபீபல்லாஹ்! தங்களின் திருவாயிலிருந்து கருவேலம் பிசினின் வாடை வீசுகின்றது' என்றனர். 'நான் தேன் தான் அருந்தினேன்' என்று நபிகளார் கூறிவிட்டு, இதன் பின் தேன் அருந்துவதை தனக்கு ஹராமாக்கி கொண்டார்கள்.

அல்லாஹ் பின் வரும் திருவசனத்தை இறக்கினான்.

لِمَ تُحَرِّمُ مَا أَحَلَّ اللَّهُ لَكَ

***உங்களுக்கு அல்லாஹுத்தஆலா ஹலாக்கியதை நீங்கள் எதற்காக ஹறாமாகிக் கொண்டீர்கள்.***

*அல் குர்ஆன்: (66: 1).*

நபியவர்களுக்கு மறைவான அறிவு இருந்திருந்தால் இதை அறிந்து இருப்பார்கள் அல்லவா? அதனால், நபியவர்களுக்கு மறைவான அறிவு இல்லை என்பது உறுதி.!

**பதில்:**

இதற்குரிய பதில் மேற்கண்ட திருவசனத்தில் மறுவரியிலேயே இருக்கின்றது.

ஹபீபே! நீங்கள் தேனை ஹராம் என்று கூறுவது தங்களின் வாயிலிருந்து வீசுகின்ற வாடயை அறியாததால் அல்ல! இதை ஆட்சேபிக் கின்ற உங்களின் மனைவிமார்களின் திருப்திக்காக வேண்டியாகும்.

மேலும் பெருமானார் ரஸூலே கரீம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் வாயிலிருந்து வருகின்ற வாடை வெறுக்கத் தக்கதல்ல, நுகரக் கூடியதுதான்! தெளிவான புத்தியுள்ள ஒவ்வொரு மூளையும் இதை புரிந்து கொள்ளத்தான் செய்யும்.

ஆனால் தேவ்பந்திகளோ நபிகள் கோமான் முஹம்மது முஸ்தஃபா ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் புலன்களிலும் குறை காணத் தொடங்கி விட்டனர்.

**மறுப்பு: 9**

ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கு மறைவான அறிவு இருந்திருந்தால் கைபர் யுத்தக் களத்தில் நஞ்சூட்டப் பட்ட மாமிசத்தை ஏன் சாப்பிட்டார்கள்? தெரிந்து கொண்டே சாப்பிட்டிருந்தால் அது தற்கொலைக்கு சமமாகும். இதை விட்டும் நபிமார்கள் பாதுகாக்கப்பட்டவர்களாகும்.

**பதில் :**

மாமிசத்தில் நஞ்சு உண்டு என்பதை ஸல்லல்லாஹு அலைஹி வசல்லம் அவர்கள் நன்கு அறிவார்கள். அல்லாஹ்வின் உத்தரவுப்படி நஞ்சு எந்தத் தீமையும் செய்யாது என்பதும் நபியவர்களுக்குத் தெரியும்.

அதைப் புசிக்க வேண்டும் என்பது அல்லாஹ்வின் நாட்டம் என்பதும் நன்கு தெரியும். தனது வஃபாத்தின் வேளையில் அதே விஷம் தான் தனது ஷஹாதத்திற்குக் காரணமாக அமையும் என்பதும் நபிகளார் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கு நன்கு தெரியும்.

**மறுப்பு: 10**

நபியவர்களுக்கு மறைவான அறிவு இருந்திருந்தால், "பீர் மஊனா" என்ற இடத்தில் உள்ள முனாஃபிக்குகள் 70 ஸஹாபிகளைத் தந்திரமாக அழைத்துச் சென்று கொலை செய்து விட்டனர். இதற்கு எப்படி அனுமதி அளித்தார்கள்.? இந்த ஆபத்தில் ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களும் கூடவே மாட்டிக் கொண்டார்களே!

**பதில்:**

பீர் மஊனாவிலுள்ளவர்கள் முனாஃபிக்குகள் என்பது ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கு நன்கு தெரியும் என்பதுதான் உண்மை! இவர்கள் அழைத்துச் செல்கின்ற எழுபது

ஸஹாபாக்களையும் கொல்வார்கள் என்பதும் நபி அவர்களுக்கு நன்கு தெரியும். இது தான் அல்லாஹ்வின் நாட்டம் என்பதும் தெரியும். இவர்களுக்குரிய ஷஹாதத்துக்குரிய நேரம் வந்து விட்டது என்பதும் தெரியும்.

நபி இப்ராஹீம் அலைஹிஸ்ஸலாம் அல்லாஹ்வின் திருப்தியை நாடி தனது செல்ல மகனை அறுத்துப் பலியிட கூடவே அழைத்துச் சென்றார்கள். ஒரு குற்றமும் செய்யாதவர் மீது அவர்கள் செய்தது அநியாயமா? இல்லை, இதனை எஜமானின் திருப்பதியில் காணுகின்ற ஒரு திருப்தியாகும்.

மாமிசத்தில் நஞ்சு உண்டு என்பது அல்லாஹ்வுக்குத் தெரியும் தானே!, பீர் மஊனாவில் உள்ளவர்கள் முனாஃபிக்குகள் என்பதும், தந்திரமாக எழுபது ஸஹாபாக்களையும் அழைத்துச் சென்று கொலை செய்யப் போகிறார்கள் என்பதும் அல்லாஹ்வுக்கும் தெரியும் தானே.!

தனது ஹபீபுக்கு வஹி அறிவித்து ஏன் அவர்களை அல்லாஹுத் தஆலா பாதுகாக்கவில்லை.? அல்லாஹுத் தஆலாவை விளங்குகின்ற பாக்கியத்தை இவர்களுக்கு அல்லாஹுத் தஆலா நல்குவானாக!

**மறுப்பு: 11**

١- رجل تزوج بغير شهود فقال والمرأة خدا ورسول گوا ه كرديم قالوا يكون كفرا لانه أعتقد أن رسول الله صلي الله عليه وسلم يعلم الغيب وهو ما كان يعلم الغيب حين كان في الحياة فكيف بعد الموت ،. فتاوي قاضي خان (١)

1) ஒருவர் சாட்சி இல்லாமல், அல்லாஹ்வும் அவனது திருத்தூதரும் தான் எங்களுக்கு சாட்சி என்று கூறி திருமணத்தை முடிக்கிறார். இப்படி கூறுவது "குஃப்று" என்று மக்கள் கூறுகின்றனர். ஏனெனில் இவர்கள் மறைவானவற்றை ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் அறிந்துள்ளார்கள் என்று நம்புகின்றனர்.

நபிகள் நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் உயிருடன் இருக்கும் போதே மறைவானவற்றை அறியாதிருக்கும் போது மறைந்த பின் அறிவார்களா?

*ஃபதாவா காழி கான்.*

٢-ذكر الحنفية تصريحا بالتكفير باعتقاد أن النبي صلي الله عليه وسلم يعلم الغيب لمعارضة قوله تعالي قل لا يعلم من في السموات والارض الغيب الا الله شرح فقه الأكبر

2) நபிகள் திலகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் மறைவான விடயங்களை அறிவார்கள் என்று நம்புவது "குஃப்று" என்று ஹனபிகள் தெளிவாகக் கூறியுள்ளனர். நபியே கூறுவீராக! வானம் பூமியில் உள்ளவற்றை அல்லாஹ்வையன்றி வேறு எவரும் அறியமாட்டார்கள் என்ற திருமறை வசனத்திற்கு எதிராக இக்கூற்று அமைந்திருக்கின்றது.

**பதில் :**

மறுப்பாளர்களான தேவ்பந்திகளும் நபிகள் நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கு மறைவான அறிவு இருக்கிறது என்று நம்பியுள்ளனர். அதனால், இவர்கள் முன்வைக்கின்ற மேற்படி கூற்றுக் களின் படி இவர்களும் காஃபிராகி விட்டனர்.

மேற்படி நூல்களின் கூற்றுக்களில் சிலது, முழுமை என்று பிரித்துக் கூறப்படவில்லை. ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கு சில மறைவான அறிவு இருப்பதாக நம்பினாலும் சரி, ஓராயிரம் இருப்பதாக நம்பினாலும் சரி மேற்படி கூற்றின் படி காஃபிராகி விடுவார்.

தேவ்பந்தின் குரு பீடங்களான காசிம் நானோத்தவி, அஷ்ரஃப் அலி தானவி, கலீல் அஹ்மது அம்பேட்டவி போன்றவர்கள் கூறுவதைக் கேளுங்கள்!

மௌலவி அஷ்ரப் அலி தானவி தனது "ஹிஃப்ழுல் ஈமான்" என்ற நூலில் குழந்தைகள், பைத்தியக்காரர்கள், மிருகங்கள் உள்ளிட்டவர் களுக்கும் "சில மறைவான அறிவு" இருப்பதாக எழுதி இருக்கின்றார்.

மௌலவி கலீல் அஹமது அம்பேட்டவி தனது "பறாஹீனே காதிஆ" என்ற நூலில் ஷைத்தானுக்கும், மலக்குல் மௌத்திற்கும் பரந்த அறிவு இருப்பதாக ஏற்றுக் கொள்கின்றார்.

மேற்கண்ட நூல்களின் அடிப்படையில் உங்களின் மேற்கண்ட ஞான குரு பீடங்களுக்கு நீங்கள் வழங்குகின்ற தீர்ப்பு தான் என்ன?

ஃபுகஹாக்களின் கலைச் சொற்களைப் பற்றிய அறியாமை தான் மேற்கண்ட இமாம்களின் கூற்றுக்களை பிழையாக விளங்கவைத்து விட்டது.

அல்லாமா காழி கான் அவர்களின் மேற்படி கூற்றில், قالوا "அவர்கள் கூறினார்கள்" என்று ஒரு வார்த்தை உண்டு.

ஃபுகஹாக்கள் ஏற்றுக் கொள்ளாத கருத்துக்களைக் கூறுபவர்களை "கூறுகின்றார்கள்" என்ற வார்த்தையின் மூலம் அடையாளப்படுத்துவார்கள்.

உதாரணமாக,

அல்லாமா ஷாமி ரஹ்மத்துல்லாஹி அலைஹி அவர்கள் கூறுகின்றார்கள்.

لفظة قالوا تذكر فيما فيه خلاف . شامي ، ج،٥. صف،. ٥٤٤

அவர்கள் கூறுகின்றார்கள் قالوا என்ற வார்த்தையை கருத்து வேறுபாடுள்ள இடத்தில் தான் ஃபுகஹாக்கள் கூறுவார்கள்.

*ஜாமி, பாகம்: 5 பக்கம்: 445*

كلام قاضي خان يشير الي عدم اختياره له حيث قال " قالوا " لا يصلي عليه في القعدة الا خبرة ففي قوله " قالوا" اشارة الي علوم استحسانه له والي انه غير مرئي عن الائمة كما قلناه فان ذلك متعارف في عباراتهم لمن استقرئها غنية المستملي شرح منية المصلي ،تحت بحث قنوت

ஃபுகஹாக்களின் (இக்)கூற்று அவருக்கு விருப்பம் இல்லாததின் பக்கம் சைக்கினை செய்வதாகும். ஏனெனில், அவர் கூற்றில் قالوا "அவர்கள் கூறுகின்றார்கள்" என்ற வார்த்தையைப் பாவித்துள்ளார்கள்.

அவர்கள் கூறுகின்றார்கள் قالوا என்ற வார்த்தை அவர்கள் விரும்பாததும், இமாம்களிடமிருந்து அறிவிக்கப்படாததுமாகும் என்பதையே குறிக்கும்.

இவ்வாறான கலைச்சொல் ஃபுகஹாக்களின் கூற்றில் அதிகமாக காணப்படும். ஆராய்ந்து பார்ப்பவர்களுக்கு இது நன்கு தெரியும்.

*நுன்யத்துல் முஸ்தமிலி ஜறஹுு மனிய்யத்துல் முஸல்லி,*

*பாடம்: குனூத்.*

تزوج رجل بشهادة الله ورسوله لم يجز بل قيل يكفر در المختار ، كتاب النكاح

ஒருவர் அல்லாஹ்வும், அவனது ரஸூலும் சாட்சி என்று கூறி திருமணம் முடித்தால் அது செல்லுபடியாகாது ஒரு கூற்றின் படி, ஃகாபிராகி விடுவான்.

*துர்ருல் முக்தார்.*

وفي الحجة ذكر في الملتقط لا يكفر لان الأشياء تعرض علي روح النبي صلي الله عليه وسلم وان الرسل يعرفون بعض الغيب قال الله تعالي " فلا يظهر علي غيبه احدا الا من ارتضي من رسول قلت بل ذكروا في كتب العقائد أن من جملة كرامات الاولياء الاطلاع علي بعض المغيبات ، رد المختار ، (شامي)

துர்ருல் முக்தாரின் மேற்படி கூற்றுக்கான விளக்கத்தை அல்லாமா ஷாமி றஹ்மதுல்லாஹி அலைஹி இவ்வாறு எழுதுகின்றார்கள்.

எல்லா விடயங்களும் ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் றூஹுக்கு எடுத்துக் காட்டப்படுகின்றன. மேலும், ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கு சில மறைவான அறிவு இருக்கின்றன என்று பின் வரும் வசனம் கூறுகின்றது.

"ரஸூலில் அவன் பொருந்திக் கொண்ட வரைத் தவிர வேறு எவருக்கும் அவனுடைய மறைவானவற்றை வெளிப்படுத்த மாட்டான்."

வலிமார்களின் கராமத்தில் மறைவான விடயங்களும் அடங்கும் என்று அகீதா நூல்களிலும் கூறப்பட்டுள்ளது. ஆகையால் அல்லாஹ்வையும், ரஸூலையும் சாட்சியாக்கி திருமணம் முடித்தவர் காஃபிராக மாட்டார். இவ்வாறு "முல்தகித்" என்ற நூலில் கூறப்பட்டுள்ளது.

*ரத்துல் முக்தார்(ஜாமி).*

حاصلة أن دعوى الغيب معارضة لنص القرأن يكفر بها الا إذا اسند ذلك صريحا إذ دلالة الي سبب كوحي او الهام رد المختار (شامي)باب المرتد

இல்முல் ஙைபைப் பற்றி வாதம் செய்வது திருக்குர்ஆனின் வெளிப் படையான கூற்றுக்கு எதிராகும். வஹி, அல்லது இல்ஹாம் உள்ளிட்ட தெளிவாக அறிவிக்கின்ற ஆதாரங்களை அதனோடு தொடர்பு படுத்தினாலன்றி அவன் ஃகாபிராகி விடுவான்.

*ரத்துல் முக்தார்.*

وفي المضمرات والصحيح انه لا يكفر لان الانبياء وبعلمون الغيب ويعرض عليهم الأشياء فلا يكون كفرا معدن الحقائق شرح كنز الدقائق

சரியான (ஸஹீஹான) கருத்தின் படி ஃகாபிராக மாட்டான். ஏனெனில், நபிமார்கள் மறைவானவற்றை அறிகின்றார்கள். பொருள்கள் அனைத்தும் அவர்களுக்கு எடுத்துக் காட்டப்படுகின்றன. அதனால் இது குஃப்றாகாது என்று "முழ்மிறாத்" எந்த நூலில் குறிப்பிடப்பட்டுள்ளது.

*மஃதினுல் ஹகாயிக்*

இல்முல் ஙைப் நபிமார்கள் வலிமார்களுக்கு இருக்கின்றன என்று கூறுபவர்கள் மீது ஒரு போதும் "குஃப்று" வர மாட்டாது என்பதை மேற்கண்ட எடுத்துக்காட்டுகள் மூலமாக அறிகின்றோம். இதுதான் சட்ட அறிஞர்களான ஃபுகஹாக்களின் அகீதாவாகும்.

அல்லாமா முல்லா அலி காரி ரஹ்மத்துல்லாஹி அலைஹி அவர்களின் கூற்றின் முழுமையான வாசகம் முன் வைக்கப்படவில்லை. அவர்களின் முழுமையான வாசகம் பின் வருமாறு,

ثم اعلم أن الانبياء لم يعلموا المغيبات من الاشياء الا ما اعلمه الله تذكر الحنفية تصريحا بالتكفير ،
شرح فقه الأكبر

அறிந்துக் கொள்! அல்லாஹுத் தஆலா கற்றுக் கொடுத்தால் தவிர, நபிமார்கள் மறைவான விடயங்களை அறிய மாட்டார்கள். அல்லாஹுத் தஆலா அறிவித்துக் கொடுக்காமல் ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் மறைவானவற்றை அறிவார்கள் என்று நம்புவதை ஹனஃபிகள் தெளிவாகவே "குஃப்று" என்று கூறியிருக்கின்றார்கள்.

*ஜறஹு ஃபிக்ஹுல் அக்பர்.*

ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கு மறைவான அறிவு இருக்கிறது என்றும் அல்லாமா முல்லா அலி காரி ரஹ்மத்துல்லாஹி அவர்கள் கூறிய கருத்தை ஏற்கனவே கூறியுள்ளோம்.

அதனால், நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கு மறைவான அறிவு உண்டு என்பது தான் அல்லாமா முல்லா அலி காரி ரஹ்மத்துல்லாஹி அலைஹி அவர்களின் அகீதாவாகும் என்பது தெளிவாகிவிட்டது.

# பாடம் : 2
# மறை ஞானம் பற்றிய குற்றச்சாட்டுக்களும், பதில்களும்.

**குற்றச்சாட்டு: 1**

இல்முல் கைப் என்பது அல்லாஹ்வின் பண்பு. இதில் மற்றவரைக் கூட்டாக்குவது பண்பில் "ஷிர்கு" வைப்பதாகும். மறைவான அறிவு இருப்பதாக வாதிப்பது ஷிர்க்காகும்.

**பதில்:**

மறைவானவற்றை அறிவது அல்லாஹ்வுடைய பண்பு என்றால், முன்னாலிருப்பதை அறிவதும் அல்லாஹ்வுடைய பண்புதான்.

அல்லாஹுத்தஆலா கூறுகின்றான் .

عَالِمُ الْغَيْبِ وَالشَّهَادَةِ

***அல்லாஹுத் தஆலா மறைவானதையும் முன்னால் இருப்பதையும் அறிகிறவன்.***

*அல் குர்ஆன்: (13: 9).*

இவை மட்டும் அல்லாஹ்வுடைய பண்பல்ல! பார்த்தல், கேட்டல், உயிர் வாழ்தல், பேசுதல் உள்ளிட்டவையும் அல்லாஹ்வின் பண்பு தான். இவர்களின் வாதப்படி, முன்னால் காட்சியாக இருப்பதை அறிதல், பார்த்தல், கேட்டல், உயிர் வாழ்தல், பேசுதல் உள்ளிட்ட பண்புகள் யாராவது ஒருவருக்கு இருப்பதாக நம்புவதும் ஷிர்க்குத்தான்.

அல்லாஹ்வின் பண்புகள் சுயமானவை. அதனால், பூர்வீகமானவை. நமது பண்புகள் அல்லாஹ் வழங்கியவை. அதனால், புதியவை. இது தான் அல்லாஹ்வின் பண்பையும், நமது பண்பையும் பிரிக்கும் எல்லைக்கோடு! இப்படி இருக்கையில் ஷிர்க் எப்படி வரும்?

இவ்வாறுதான் நபிகள் நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் மறைவான அறிவும் எல்லைக்குட்பட்டது. அதனால் அன்னாரின் அறிவு புதியதாகும்.

அறிவுகள் அனைத்தும் எல்லையற்றவை என்பது உங்களின் வாதமாயின், இந்த ஷிர்க்கு உங்களையும் தாவிப் பிடிக்கும். ஏனெனில், நீங்களும் ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கு மறைவான அறிவு இருப்பதாக நம்புகிறீர்கள். அல்லாஹ்வின் பண்புகளில் "சில" "பல" என்பது கிடையாது. எல்லாம் ஷிர்க்குத்தான்.

தேவ்பந்தின் குருபீடமான றஷீத் அஹமத் கங்கோஹியின் சிறப்பு மாணவர் மௌலவி ஹுசைன் அலி சாஹிப் தனது"புல்கத்துல் கைறான்" என்ற நூலில்,

وَيَعْلَمُ مُسْتَقَرَّهَا وَمُسْتَوْدَعَهَا كُلٌّ فِي كِتَابٍ مُّبِينٍ

அல் குர்ஆன்: (11: 6) என்ற திருமறை வசனத்திற்கான விளக்கத்தில் பின் வருமாறு எழுதுகின்றார்.

படைப்புகளின் அனைத்து செயல்கள் பற்றிய அறிவு அல்லாஹ்வுக்கு எல்லா நேரங்களிலும் இல்லை. அடியான் எப்பொழுது அமல் செய்கின்றானோ அப்போது தான் அறிகின்றான்.

இப்போது சொல்லுங்கள்! தேவ்பந்திகளின் கொள்கையின் படி, அல்லாஹ்வுக்கே இல்முல் கைபு (மறைவான அறிவு) கிடையாது. அப்படியிருக்க, மற்றவர்களுக்கு மறைவான அறிவு இருப்பதாக நம்புவது எப்படி ஷிர்க்காகும்.?

**குற்றச்சாட்டு: 2**

ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கு மறைவான அறிவு எப்போது ஏற்பட்டது? என்பதில் உங்களிடத்தில் எந்த விளக்கமும் கிடையாது. பல கருத்துக்களைக் கூறுகின்றீர்கள். உங்களின் விளக்கத்தின் படி,

1: மிஃறாஜில் விழுந்த துளியால் மறைவான அறிவு கிடைத்தது.

2: ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் கனவில் அல்லாஹ்வைக் கண்டார்கள். அவனது கரத்தை ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் புயத்தில் வைத்தான். அதிலிருந்து அறிவுகள் அனைத்தும் கிடைத்தன.

3: திருக்குர்ஆன் எல்லா பொருளுக்குமான விளக்கமாகும். திருக் குர்ஆன் இறங்குவது முடிவடைந்ததோடு மறைவான அறிவும் கிடைத்தது.

இவற்றில் எந்த கருத்து சரியானது? திருக்குர்ஆன் இறங்குவதற்கு முன்பே மறைஞானம் மாநபிக்கு கிடைத்திருந்தால், திருக்குர்ஆன் மூலம் அவர்களுக்கு கிடைத்தவை எவை? கிடைத்தவை மீண்டும் கிடைப்பது சாத்தியமில்லை.

**பதில்:**

ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் கூறினார்கள்.

كنت نبيا وادم بين الماء والطين

ஆதம் (அலைஹிஸ்ஸலாம் அவர்களின் உடல்) மண்ணுக்கும், தண்ணீருக்கும் இடையில் இருக்கையில் நான் நபியாக இருக்கின்றேன்.

*திர்மிதி*

மறைவான விடயங்களைக் கூறுபவருக்குத்தான் "நபி" என்று கூறப்படும். நடந்தவை நடக்க போகின்றவை உள்ளிட்ட அறிவுகள் மிஃறாஜில் கிடைத்தன. இவ்வகையான அறிவுகள் அனைத்தும் புலக்காட்சியானது தவிர, கருத்தியல் ரீதியானதல்ல.!

பிரபஞ்சத்திலிருக்கும் அனைத்து பொருட்களையும் கண்ணால் பார்த்தே அறிந்தார்கள்.

திருக்குர்ஆன் கூறுகிறது.

تِبْيَاناً لِّكُلِّ شَيْءٍ

***அனைத்துப் பொருட்களுக்கும் விளக்கமாக திருக்குர்ஆனில் உள்ளது.***

*அல் குர்ஆன் (16: 89).*

திரு நபி அவர்கள் கூறினார்கள்.

تجلي لي كل شئ فعرفت

எல்லா பொருட்களும் எனக்கு வெளியாகின (அவற்றை) அறிந்து கொண்டேன்.

இது மிஃறாஜில் நடந்ததாகும். பார்ப்பது வேறு! விளங்குவது வேறு! நபி ஆதம் அலைஹிஸ்ஸலாம் அவர்களைப் படைத்த பின், அனைத்து பொருட்களும் அவர்களுக்கு எடுத்துக் காட்டப்பட்டன. அதற்குப் பிறகு தான் ஒவ்வொரு பொருளைப் பற்றியும் விளக்கம் கூறப்பட்டது.

*முந்தியது முஷாஹதா_*
*புலக்காட்சி. பிந்தியது விளக்கம் _ பயான்.*

ثُمَّ عَرَضَهُمْ عَلَى الْمَلَائِكَةِ

***பின்னர் மலக்குகளுக்கு எடுத்துக் காட்டப்பட்டன.***

*அல்குர்ஆன்: (2:31).*

என்பதற்கான பொருள் என்ன? அதனால் இரண்டும் சரி தான். மிஃறாஜிலும் அறிவு கிடைத்தது. திருக்குர்ஆன் மூலமாகவும் அறிவு கிடைத்தது. அப்படியாயின் திருக்குர்ஆன் இறங்கியதில் என்ன பிரயோசனம் இருக்கின்றது.?

**குற்றச்சாட்டு: 3**

திருக்குர்ஆன் இறங்க முன்பே சகலதுமே நபியவர்களுக்குத் தெரிந்து விட்டன. தெரியாததை தானே புதிதாக தெரியப்படுத்த வேண்டும்.?

**பதில்:**

திருக்குர்ஆன் இறங்குவது ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கு மட்டும் அன்று! அதன் மூலம் ஆயிரமாயம் பயன்கள் இருக்கின்றன.

உதாரணமாக, திருக்குர்ஆன் இறங்க முன் அது தொடர்பான சட்டம் நடை முறையில் இருக்காது. அதைப் பாராயணம் செய்யப்படவுமாட்டாது.

திருக்குர்ஆன் ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்குத் தான் இறங்கியது என்றிருந்தால், சில ஸூராக்கள் ஏன் இருமுறை இறங்க வேண்டும்.?

ஸூரத்துல் ஃபாத்திஹா ஒரு சொல்லின் படி, மக்கி! மக்காவில் இறங்கியது. மற்றுமொரு சொல்லின் படி மதனி மதீனாவில் இறங்கியது. மிகச்சரியான சொல்லின்படி மக்கியும் தான், மதனியும் தான். முதலில் மக்காவில் இறங்கியது. பின்னர் மதீனாவிலும் இறங்கியது.

*தப்ஸீர் மதாரிக்.*

மிஷ்க்காதில் மிஃறாஜுடைய ஹதீஸின் தொடரில் வருகிறது.

மிஃறாஜில் ஐவேளை தொழுகை கடமையாக்கப்பட்டதோடு ஸூரத்துல் பகராவின் இறுதி இரு திருவசனங்களும் இறங்கின.

இங்கு முல்லா அலீ காரி ரஹ்மத்துல்லாஹி அலைஹி ஓர் ஆட்சேபனையை கிளப்புகிறார்கள்.

மிஃறாஜ் மக்காவின் நிகழ்ந்தது. ஸூரத்துல் பகரா மதீனாவில் இறங்கியது. இந்நிலையில் ஸூரத்துல் பகராவின் இறுதித் திருவசனங்கள் மக்காவில் மிஃறாஜில் எப்படி இறங்க முடியும்?

இதற்கான பதிலையும் அவர்களே கூறுகிறார்கள்.

வஹி வருவதில் பல வழிகள் இருக்கின்றன. பெருமானார் முஹம்மது முஸ்தஃபா ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களை கண்ணியப்படுத்தும் நோக்கிலும், அவர்களின் தகுதியை உயர்த்திக் காட்டும் நோக்கிலும் ஜிப்ரீலின் துணையின்றி இத்திருவசனங்களை மிஃறாஜில் அல்லாஹுத்தஆலா வழங்கினான்.

*மிர்க்காத்.*

ஷைகு அப்துல் ஹக் முஹத்திதுத் திஹ்லவி ரஹ்மத்துல்லாஹி அலைஹி கூறுகின்றார்கள்.

மிஃராஜ் இரவில் ஹளறத் ஜிப்ரியீல் அலைஹிஸ்ஸலாம் அவர்களின் துணையின்றி முதலில் இறங்கியது. பின்னர் ஜிப்ரீல் அலைஹிஸ்ஸலாம் அவர்களின் துணையுடன் திருவசனங்கள் இறங்கின. அது திருக் குர்ஆனிலும் சேர்க்கப்பட்டன.

*லம்ஆத்.*

*ஜறஹு மிஷ்க்காத்.*

முதற்தடவை திருவசனங்கள் இறங்கியதுமே அதன் உள்ளடக்கம் உள்ளிட்ட அதிலுள்ள அனைத்தும் நபியவர்களுக்குக் கிடைத்துவிட்டன.

ரமளானில் ஹளறத் ஜிப்ரீல் அலைஹிஸ்ஸலாம் ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கு முழு குர்ஆனையும் இரு முறை ஓதிக் காட்டுவார்கள்.

இப்போது கூறுங்கள்! இருமுறை யாருக்காக இறக்கப்பட்டது.?

நூறுல் அன்வார் என்ற நூலின் முன்னுரையில் அதன் ஆசிரியர் எழுதுகின்றார்கள்.

لأنه كان ينزل عليه السلام دفعة واحدة في كل شهر رمضان جملة ، نور الانوار

ஹளரத் ஜிப்ரயீல் அலைஹிஸ்ஸலாம் ரமளானில் ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களிடத்தில் ஒரே தடவை வருகை தருவார்கள். இந்த வருகை எதற்காக?

ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கு வானத்து சகல வேதங்களின் அறிவும் இருக்கிறது என்பதை திருக்குர்ஆன் மூலமாக தெரிகின்றது.

அல்லாஹுத் தஆலா கூறுகின்றான்.

يَا أَهْلَ الْكِتَابِ قَدْ جَاءَكُمْ رَسُولُنَا يُبَيِّنُ لَكُمْ كَثِيرًا مِّمَّا كُنتُمْ تُخْفُونَ مِنَ الْكِتَابِ وَيَعْفُو عَن كَثِيرٍ

***வேதக்காரர்களே! நம்முடைய ரஸூல் உங்களிடம் திட்டமாக வந்துள்ளார். வேதத்திலிருந்து நீங்கள் மறைத்துக் கொண்டிருந்தவற்றில் பெரும்பாலானவற்றை உங்களுக்கு அவர் விளக்கிக் காட்டுகிறார். இன்னும் பெரும்பாலானவற்றை மன்னித்து வெளியிடாமல் விட்டுவிடுகிறார்.***

*அல்குர்ஆன் (5: 15).*

ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் அறிவில் விண்ணகத்து வேதங்கள் அனைத்திலுமுள்ள அறிவு இல்லையென்றால் அவற்றை வெளிப்படுத்துவதும், வெளிப்படுத்தாமல் இருப்பதின் பொருள் தான் என்ன?

ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் ஆரம்பத்திலிருந்தே திருக்குர்ஆனின் அறிவு உள்ளவர்களாகவே இருந்துள்ளார்கள். திருக்குர்ஆனின் சட்டங்கள் இறங்குவதற்கு முன் அச்சட்டத்தை நடைமுறைப்படுத்துவது பற்றிக் கூறவில்லை.

ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் ஹிறாக் குகையில் இருக்கும் போது ஹளறத் ஜிப்ரீல் அலைஹிஸ்ஸலாம் வந்து பெருமானாரைப் பார்த்து ஓதுவீராக! என்று கேட்டார்கள். இன்ன திருவசனத்தை ஓதுங்கள் என்று கூறவில்லை.

ஏற்கனவே தெரிந்திருந்தால் தான் ஓதுவீராக! என்று கூற முடியும். 'நான் ஓதுபவர் அல்ல' என்று ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் கூறினார்கள். அதாவது, முதலில் ஓதி முடிந்து போய் விட்டது இரண்டாம் தடவை ஓதுபவராக நானில்லை.

திருக்குர்ஆன் லௌஹுல் மஹ்ஃபூழ் ஏட்டிலிருக்கிறது. ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கு ஏற்கனவே அது பற்றிய அறிவும் இருக்கிறது.

ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் பிறப்பதற்கு முன்பே நபியாகவும், திருக்குர்ஆனுக்குச் சொந்தக்காரராகவும் இருக் கின்றார்கள். வஹி வெளிப்படையில் வராமல் நபி ஆகுவது எப்படி?

அதனால் நபியவர்கள் பிறப்பதற்கு முன்பே நபியாக திருக் குர்ஆனை நன்கு விளங்கிய ஆரிஃபா(ஞானியா)க இருக்கின்றார்கள் என்பதை ஏற்றுத் தான் ஆக வேண்டும்.

திருக்குர்ஆனை முழுமையாக மனனம் செய்த ஹாஃபிழ்களாக இப்போதும் கூட சில பிள்ளைகள் பிறக்கின்றன. நபி ஈஸா அலைஹிஸ் ஸலாம் பிறந்ததுமே எனது றப்பு எனக்கு வேதத்தைக் கற்றுத் தந்தான் என்று கூறினார்கள். பிறப்பிலேயே வேதத்தை கற்றவர்களாக இருந்திருக் கின்றார்கள் என்பதை இதன் மூலம் தெரிய வருகின்றது.

சில நபிமார்கள் சிறுவர்களாக இருக்கும் போதே அறிவையும், ஞானத்தையும் வழங்கியதாக அல்லாஹுத் தஆலா கூறுகின்றான்.

ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் பிறந்ததுமே உம்மத்திற்காக ஸஜதா செய்தார்கள். ஸஜதாவும், ஷஃபாஅத்தும் திருக்குர்ஆனின் சட்டமாகும்.

நூறுல் அன்வார் நூலில் "படைப்புக்கள்" பற்றிய பாடத்தில், எழுதுகின்றார்கள்.

ان العمل بالقران كان جبلة له من غير تكلف ، نور الانوار

திருக்குர்ஆன்படி அமல் செய்வது நபிகள் நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கு நிர்பந்தமின்றி இயல்பாகவே

இருந்தது. இதன்படி, திருக்குர்ஆன்படி அமல் செய்வது ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கு பிறப்பிலேயே பழக்கப்பட்டதாகவே ஆகிவிட்டது.

ஹலீமா நாயகியின் இடது மார்பில் தொடர்ச்சியாக அமுதுண்டார்கள். வலது பக்கத்தை பால்குடி சகோதரருக்கு விட்டு விட்டார்கள். இந்த நீதியும், நியாயமும் திருக்குர்ஆனின் சட்டமாகும். ஆரம்பத்திலிருந்தே திருக்குர்ஆனைப் பற்றி அறிந்திருக்காவிட்டால், இந்த செயற்பாடுகளை எப்படிச் செய்தார்கள்.?

**குற்றச்சாட்டு. 4**

நீங்கள் முன்வைக்கின்ற ஆதாரங்கள் யாவும் அல்லாஹ்வின் அறிவுக்கு பொதுப்படையாக சமப்படுத்துவது போன்று இருப்பதாக வலியுறுத்துகிறதே!

وَعَلَّمَكَ مَا لَمْ تَكُن تَعْلَمُ

***நீங்கள் அறியாதவற்றை உமது ரப்பு உங்களுக்குக் கற்றுத் தந்தான்.***

*அல் குர்ஆன் (4: 113)*

என்ற திருவசனத்தை கியாமத்து நாள் வரை என்றோ, நடந்தவை, நடக்கப் போகின்றவை என்றோ நிபந்தனை போடவில்லை. ஆனால் நீங்கள் நிபந்தனை போடுகிறீர்களே!

ஒரு விடுத்தம் நீங்கள் குறிப்பிடுவது எதிர்காலத்திலும் குறிப் பாக்குவதற்கான வாசல் திறக்கப்படுகிறது. மேற்படி திரு வசனத்தில் குறிப் பிடப்படுகின்ற "நீங்கள் அறியாததை உங்களுக்குக் கற்றுத் தந்தான்"

என்பது மார்க்க சட்டங்கள் என்று வரையறை செய்யப்பட்டதாகத் தான் உஸூல் கிதாபுகளில் காண முடியும். இது தேவ்பந்துகளில் முக்கியமான குற்றச்சாட்டாகும்.

**பதில்:**

இத்திருவசனத்தில் குறிப்பாக்கி வைப்பதற்கு எதுவும் இல்லை. பகுத்தறிவில்தான் விதி விலக்குண்டு. ஏனெனில், அல்லாஹ்வின் அறிவு

எல்லையற்றது. படைப்பின் மூளை எல்லை தாண்டியதை ஏற்காது. காட்டுகின்ற ஆதாரங்கள் முறியடிக்கப்பட்டு ஆதாரங்கள் சங்கிலித் தொடர் போன்று பின்னிப் பிணைந்து மாறி மாறி வந்தால் தான் எல்லை யற்றதாக இருக்கும்.

விதி விலக்கான சட்டம் வேறு! வரையறைக்கான சட்டம் வேறு!

'தொழுகையை நிலை நாட்டுங்கள்' என்பதில் குழந்தை, பைத்தியம், தீட்டுக்காரி விதிவிலக்காகும். இவர்களைக் குறிப்பாக்குவதில்லை.

மறைவான அறிவு தொடர்பான சுருக்கமான விளக்கத்தைத் தான் அடியேன் இங்கு முன்வைத்துள்ளேன். விரிவான விளக்கத்தைப் படிக்க விரும்பினால் "அல்கலிமத்துல் உல்யா"(الكلمة العلية) என்ற நூலை வாசிக்கவும்.

நான் கூறியவை சமுத்திரத்தில் ஒரு சிறு துளி தான்! இந்த நூலில் தேவ்பத்திகள், வஹாபிகள் உள்ளிட்டோரின் இன்னும் பல பிரச்சினைகள் ஆராயப்பட வேண்டியிருக்கிறது. அதனால், இத்துடன் நிறுத்திக் கொள்கின்றேன்.

முற்றும்

وصلي الله وسلم علي سيدنا محمد واله واصحابه اجمعين برحمتك يا ارحم الراحمين

أمين يارب العالمين

# ஆய்வு-4
# ஹாழிர், நாழிர் பற்றிய ஆய்வு!

## அத்தியாயம்: 3

“ஹாழிர்” என்பதற்கான அகராதிப் பொருள், மறைவாக அன்றி முன்னிலையில் இருக்கும் பொருள் எனப்படும்.

1- பார்ப்பவர்,

2- விழித்திரை,

3- பார்வை,

4- மூக்கின் நரம்பு,

5- கண்ணீர்

**பாடம்: 1**

**ஹாளிர், நாளிறுக்கான சான்றுகள்.**

"காமூஸூல் லுஙாத்" என்ற நூலில்,

والناظر السواد في العين او البصر بنفسه وعرق في الانف وفيه ماء البصر

கருவிழி, பார்வை, மூக்கின் நரம்பு, விழி நீர் என்றும், "அல்மிஸ்பாஹூல் முனீர்" என்ற நூலில்,

والناظر السواد الاصغر من العين الذي يبصربه  الانسان شخصه

மனிதனின் பார்வைக்குக் காரணமாக இருக்கின்ற கருவிழி என்றும், "முக்தாறுஸ்ஸிஹாஹ்" என்ற நூலில் இப்னு அபீபக்கர் றாஸி கூறுகின்றார்

الناظر في المقلة السواد الاصغر الذي فيه انسان العين

மனிதனின் கண்ணில் இருக்கும் கருப்பு பாவை. அதன் மூலமே மனிதன் முன்னால் இருப்பதை பார்க்கின்றான் என்று எழுதப்பட்டுள்ளது.

எதுவரை கண் பார்வை செல்கின்றதோ அதுவரை அதைப் பார்க் கின்றான். திறமையும், அதிகாரமும் எங்கெல்லாம் நடைமுறையில் இருக்குமோ அங்கெல்லாம் அவன் ஹாழிறாக (பிரசன்னமாக) இருக் கின்றான்.

பார்வை வானத்தை தொடுமாயின் அதுவரை பார்க்கின்றார். ஆயினும் அங்கு அவரின் அதிகாரம் இல்லாத காரணத்தால், அவர் அங்கு ஹாழிறாக இல்லை. வீட்டில் அல்லது அறையில் இருந்தால், நாம் அங்கு பிரசன்னமாகி இருக்கின்றோம். அந்த இடத்தை அடைந்துள்ளோம். அதனால், அங்கு நாம் ஹாழிராக உள்ளோம்! உலகத்தில் “ஹாழிர்” “நாழிர்” என்பதன் ஷரீஅத் ரீதியான பொருள் இதுதான்.

புனித ஆற்றல் பெற்றவர், ஒரே இடத்தில் இருந்துக் கொண்டு அனைத்து உலகத்தையும் உள்ளங்கையில் இருப்பது போன்று பார்ப்பாராயின், அல்லது தூர, கிட்ட சப்தத்தைக் கேட்பாராயின், அல்லது ஒரு வினாடியில் உலகம் முழுவதையும் சுற்றி வர முடியுமாயின், நூற்றுக்கணக்கானோரின் துயரை அவரால் துடைக்க முடியுமாயின், அவர்களின் தேவைகளை நிறைவேற்ற முடியுமாயின், இந்த வேகம் றூஹினால் ஆனாலும் சரி, உடலுடன் ஆனாலும்சரி, அவ்வுடல் கப்ரில் இருந்தாலும்சரி, அல்லது வேறு ஏதாவது ஓர் இடத்தில் இருந்தாலும் சரி அவர் அங்கு ஹாழிறாகவே இருக்கின்றார்.

மேற் கண்டவை அல்லாஹ்வின் நல்லடியாருக்கு உண்டு என்பதற்கான ஆதாரம் திருக்குர்ஆன், ஹதீஸ், மற்றும் அறிஞர்களின் கூற்றுக்களில் காணக் கிடைக்கின்றன.

## பிரிவு: 1

## திருக்குர்ஆனின் ஆதாரங்கள்

١- يَا أَيُّهَا النَّبِيُّ إِنَّا أَرْسَلْنَاكَ شَاهِدًا وَمُبَشِّرًا وَنَذِيرًا . وَدَاعِيًا إِلَى اللَّهِ بِإِذْنِهِ وَسِرَاجًا مُنِيرًا

***நபியே! நிச்சயமாக நாம் உம்மைச் சாட்சியாளராகவும், நற்செய்தி கூறுபவராகவும், அச்சமூட்டி எச்சரிக்கை செய்பவராகவும் அனுப்பி வைத்துள்ளோம். மேலும், அவனுடைய ஏவலைக் கொண்டு அழைப்பவராகவும், பிரகாசிக்கும் விளக்காகவும் (உம்மை அனுப்பி வைத்தோம்.).***

*அல் குர்ஆன்(33:45)*

"ஷாஹித்" என்ற சொல்லுக்கு சாட்சி பகர்பவர் என்ற பொருளும் உண்டு. "ஹாழிர்" "நாழிர்" என்ற பொருளும் உண்டு! சாட்சி கூறுபவர் உரிய இடத்தில் இருப்பதனால்தான் அவரை "ஷாஹித்" என்று கூறப்படுகிறது.

ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் உலகத்தில் மறைவான உலகத்தைப் பார்த்து சாட்சி பகர்வதால் தான் அன்னாரை "ஷாஹித்" என்று கூறப்படுகிறது. மறுமையில் கண்ணால் கண்டது பற்றியே ஏனைய நபிமார்கள் காட்சி பகருவார்கள். இவர்களின் சாட்சியம் கண்ணால் காணாமல் சாத்தியமாகாது.

இவ்வாறுதான் நபியவர்கள் நற்செய்தி கூறுபவராகவும், அச்சமூட்டி எச்சரிப்பவராகவும், அல்லாஹ்வின்பால் அழைப்பவராகவும் இருக் கின்றார்கள். அனைத்து நபிமார்களும் இதே வேலையைத்தான் செய்தனர். ஆனால் அத்தகவல்களை அடுத்தவர் (ஜிப்ரியீல்) மூலம் கேட்டுச் சொல்லப்பட்டவையாகும்.

றஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் இரண்டாம் தரப்புத் தகவல்களைக் கொண்டில்லாமல் நேரில் பார்த்து சாட்சியம் பகர்ந்தார்கள். இதனால்தான் விண்ணுலக மிஃராஜ் ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கு மட்டும் நடந்தது.

"பிரகாசிக்கும் விளக்கு"! (ஸிறாஜுன் முனீரா) என்பது சூரியனைக் குறிக்கும். அதுவும் உலகம் முழுக்க இருக்கிறது! எல்லா வீடுகளிலும் இருக்கிறது, இத்திருவசனத்தின் ஒவ்வொரு வாக்கியமும் ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள்"ஹாழிர்" "நாழிர்" என்பதை வலியுறுத்துகிறது.

٢- وَكَذٰلِكَ جَعَلْنٰكُمْ اُمَّةً وَّسَطًا لِّتَكُوْنُوْا شُهَدَآءَ عَلَى النَّاسِ وَيَكُوْنَ الرَّسُوْلُ عَلَيْكُمْ شَهِيْدًا

***இவ்வாறே உங்களை நடுநிலையான உம்மத் (சமுதாயம்) ஆக நாம் ஆக்கினோம்; (ஏனெனில்) நீங்கள் (மற்ற) மனிதர்களுக்கு சாட்சி யாளர்கள் ஆவதற்காகவும், றஸூல் உங்களுக்குச் சாட்சியாளர் ஆவதற்காகவும்தான்.***

*(அல் குர்ஆன்: 02 : 143).*

٣- فَكَيْفَ اِذَا جِئْنَا مِنْ كُلِّ اُمَّةٍ بِشَهِيْدٍ وَّجِئْنَا بِكَ عَلٰى هٰٓؤُلَاءِ شَهِيْدًا

***எனவே (நபியே!) ஒவ்வொரு உம்மத்திலிருந்தும் ஒரு சாட்சியை நாம் கொண்டு வந்து, உம்மை இவர்களுக்கு சாட்சியாக நாம் கொண்டு வரும்பொழுது (உம்மை நிராகரிப்பவர்கள் ஆகிய இவர்களின் நிலை) எவ்வாறு இருக்கும்?***

*அல்குர்ஆன்: (04:41).*

மேற்கண்ட திருவசனங்கள் பின் வரும் நிகழ்வைச் சுட்டுகின்றன.

யா அல்லாஹ்! உனது றஸூல்மார்கள் உனது சட்டங்களை எங்களிடம் சேர்த்து வைக்கவில்லை என்று முந்திய நபிமார்களின் உம்மத்தினர்கள் அல்லாஹ்விடம் ஒரு முறையீட்டை முன்வைப்பார்கள். நபிமார்கள் அவர்களின் குற்றச்சாட்டை மறுத்து, உனது சட்டங்களை அவர்களுக்கு எத்தி வைத்தோம்; இதற்கு முஹம்மது நபியின் (ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்) சமுதாயத்தினர் சாட்சி என்பார்கள்.

இவர்கள் எங்கள் காலத்தில் வாழவில்லை, எங்களைப் பார்க்கவில்லை, அப்படி இருக்க, எப்படி இவர்கள் எங்களைப் பற்றி சாட்சி பகர முடியும்? என்று கூறி ஆட்சேபிக்கப்படும். அப்போது, எங்களுக்கு எங்களின் தலைவர் றஸூலுல்லாஹ்வாகிய முஹம்மது நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் இவ்வாறு கூறினார்கள் என்று பதில் கூறப்பட்டதும் ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களை சாட்சி பகர அழைக்கப்படுவார்கள். அப்போது,

ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் இரண்டு சாட்சியங்கள் கூறுவார்கள்

1-நபிமார்கள் மக்களுக்கு அல்லாஹ்வின் சட்டங்களை எத்தி வைத்தார்கள்.

2-எனது உம்மத்தினர் சாட்சி பகர்வதற்குத் தகுதியானவர்கள்.

பெருமானாரின் சாட்சியத்தோடு வாதம் முற்றுப் பெறும். நபிமார்கள் சத்தியத்தில் நிலைத்து நிற்பார்கள்; இவர்களின் வாதம் ஜெயிக்கும்.

ரஸூல் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கடந்த கால நபிமார்களின் நிலைகளையும், எதிர்காலத்தில் உள்ள உம்மத்தின் நிலைகளையும் கண்களால் பார்க்கவில்லை; அப்படியிருக்க, அன்னாரின் சாட்சியத்தில் குற்றம் காணாதது ஏன்? நபியவர்களின் உம்மத்தின் சாட்சியத்தில் முன் வைக்கப்பட்ட குற்றச்சாட்டு நபியவர்களுக்கு வராதது ஏன்?

நபியவர்களின் சாட்சியம் கண்ணால் கண்டது! உம்மத்தின் சாட்சியம் நபியவர்கள் மூலமாகக் கேட்ட செவி வழிச் செய்தி என்பதனால், ஆதாரம் கேட்கப்பட்டது, நபியவர்களிடம் கேட்கப்படவில்லை என்று தெரியவருகிறது.

இத்திருவசனத்தின் விரிவான விளக்கம் "இல்முல் ஙைப்" என்ற பகுதியில் கூறப்பட்டுள்ளது

٤ - لَقَدْ جَآءَكُمْ رَسُوْلٌ مِّنْ اَنْفُسِكُمْ عَزِيْزٌ عَلَيْهِ مَا عَنِتُّمْ

***(மனிதர்களே!) உங்களிலிருந்தே ஒரு ரஸூல் உங்களிடம் திட்டமாக வந்து விட்டார். நீங்கள் வருத்தப்படுவது அவருக்கு கஷ்டமாக இருக்கும்.***

*(அல் குர்ஆன்: 09 : 128).*

இத்திருவசனத்தில் ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் "ஹாழிர்"! "நாழிறா"க இருப்பது மூன்று விதத்தில் ஊர்ஜித்த மாகின்றது.

1-உங்களிடம் வந்துள்ளார் என்பதில், மறுமை நாள் வரை உள்ள முஸ்லிம்களும் உட்படுவார்கள். அதாவது, உங்கள் அனைவரிடத்திலும் ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் வந்துள்ளார்கள்.

இதன் மூலம், ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்கள் ஒவ்வொரு முஸ்லிமுக்கும் முன்னால் இருக்கின்றார்கள். உங்கள் ஒவ்வொருவரிடத்திலும் அவர்கள் வருகை தருவார்கள் என்பது தெளிவாகின்றது. முஸ்லிம்கள் உலகத்தில் எல்லா இடத்திலும் பரந்து வாழ்கின்றனர். அப்படியாயின், நபியவர்கள் உலகத்தின் மூலை முடுக்கெங்கும் தரிசனம் வழங்குகின்றார்கள் என்பதை தெரிய முடியும்.

2-உங்களிலிருந்தே என்பதில், உங்கள் உடலில் உயிர் இருப்பது போன்றே உங்களில் நபியவர்கள் இருக்கின்றார்கள். உயிர் உடலின் ஒவ்வொரு இழையிலும் ஒவ்வொரு நாடி, நாளத்திலும் ஊடுருவி இருப்பது போன்று ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் ஒவ்வொரு முஸ்லிம்களின் அனைத்து அசைவுகளையும் அறிகின்றார்கள்.

**உருதுக் கவிதை:**

விழியில் பார்வை போன்றும், உடலில் உயிர் போன்றும், இதயத்தில் நிதம் வாழ்கின்றார்கள். என்னில் ஒளிந்து கொண்டே என்னையாள்வது வெள்ளிதுவே!

உங்களில் ஒரு மனிதர் என்பது மேற்படி வசனத்தின் பொருளாக இருக்குமாயின், உங்களிலிருந்து என்ற சொல் போதுமானதாகும். மின் அன்புஸிக்கும் من انفسكم என்பது அவசியமில்லை. எதற்காக இச்சொல்ல அல்லாஹுத்த ஆலா கூறினான் என்பது ஆழ்ந்து சிந்திக்க வேண்டிய ஒன்றாகும்.

"நீங்கள் வருத்தப்படுவது அவர்களுக்கு கஷ்டமாக இருக்கும்" நம்மைப் பற்றி அன்னாருக்கு தெரியாவிட்டால், நமது கஷ்டத்தினால், அவர்களுக்கு கவலை, மன வருத்தம் வருவது எப்படி சாத்தியமாகும்.?

எனவே, இவ்வாக்கியம் எதார்த்தத்தில் "மின் அன்புஸிக்கும்" என்பதின் விளக்கமாகும்.

உடலின் ஏதாவது ஓர் உறுப்பில் பங்கம் வந்தால், உயிர் வேதனைப் படுகிறது; அதுபோன்றே நீங்கள் படும் துயரம் வேந்தர் நபி அவர்களையும் தொடுகின்றது. அன்னாரின் தயாளத்திற்கு எமது உயிர் அற்பண மாகட்டும்.!

صلي الله عليه وسلم وبارك عليه

وَمَا اَرْسَلْنَا مِنْ رَّسُوْلٍ اِلَّا لِيُطَاعَ بِاِذْنِ اللّٰهِ ؕ وَلَوْ اَنَّهُمْ اِذْ ظَّلَمُو اَنْفُسَهُمْ جَآءُوْكَ فَاسْتَغْفَرُوا اللّٰهَ
وَاسْتَغْفَرَ لَهُمُ الرَّسُوْلُ لَوَجَدُوا اللّٰهَ تَوَّابًا رَّحِيْمًا- ٥

***நிச்சயமாக அவர்கள் தமக்குத் தாமே அநியாயம் செய்த பொழுது (நபியே!) உம்மிடம் அவர்கள் வந்து அல்லாஹ்விடம் பாவமன்னிப்புத் தேடி அல்லாஹ்வின் றஸூலும் அவர்களுக்கு பாவமன்னிப்பு தேடினால், அப்பொழுது அல்லாஹ் தவ்பாவை ஏற்றுக் கொள்பவனாகவும், மிகக் கிருபையுடையவனாகவும் அவர்கள் காண்பார்கள்.***

*அல் குர்ஆன். (04:64).*

பாவமன்னிப்பு பெறுவதற்கான வழி, முதலில் வேந்தர் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் அவைக்கு சமூகமளிக்க வேண்டும்; பின்னர், அல்லாஹ்விடம் மன்னிப்பு கேட்கவேண்டும்; பின்னர், நபியவர்கள் மனம் இரங்கி எமக்காக ஷஃபாஅத் செய்ய வேண்டும்.

மதீனாவுக்குச் சென்று தான் இதனைச் செய்ய வேண்டும் என்பது நோக்கமன்று! அப்படி இருந்தால், எங்களை போன்ற பாவிகளான ஏழைகளின் கதி என்னவாகும்? சீமான்களும் கூட வாழ்நாளில் ஓரிரு தடவைகள் தான் செல்ல முடியும்.! ஆனால், குற்றமோ இரவு பகல் முழுவதும் அரங்கேறுகின்றது. அதனால், சக்திக்கு அப்பாற்பட்ட வருத்தம் வந்து விடும்.

அதனால் தான் "நபியவர்கள் உங்கள் மத்தியில் இருக்கின்றார்கள்". நீ மறைந்து இருந்தாலும் நபியவர்கள் பக்கம் முகம் திரும்பினால் நீ அங்கே ஹாழிராகி விடுவாய்! மீண்டும் அல்லாஹ் கூறுகின்றான்:

٦- وَمَاأَرْسَلْنٰكَ اِلَّا رَحْمَةً لِّلْعٰلَمِيْنَ

*உம்மை அகிலத்திற்கு அருளாகவேயன்றி நாம் அனுப்பவில்லை.*

*(அல் குர்ஆன்: 21: 107).*

وَرَحْمَتِىْ وَسِعَتْ كُلَّ شَىْءٍ

*என்னுடைய ரஹ்மத் ஆகிறது (உலகில் நல்லது, பொல்லாதது ஆகிய) எல்லாவற்றையும் சூழ்ந்து விசாலமாக உள்ளது.*

*அல் குர்ஆன்.(07: 156).*

ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அகிலத்தின் அருளாக இருக்கின்றார்கள் என்பதும், அன்னாரின் பேரருள், அகிலத்தைச் சூழ்ந்துள்ளது என்பதும் இதன் மூலம் தெரிய வருகின்றது. ஆகவே, ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் அகிலத்தை சூழ்ந்து கொண்டுள்ளார்கள் என்பது தெளிவாகிவிட்டது.

அல்லாஹுத்தஆலாவின் மகத்துவம் றப்புல் ஆலமீனாகும், றஸூலின் கண்ணியம் றஹ்மத்துன்லில் ஆலமீனாகும் என்பதையும் கவனத்திற் கொள்ளுங்கள். அதனால், எதற்கெல்லாம் அல்லாஹுத்தஆலா "றப்பா"க இருக்கின்றானோ அதற்கெல்லாம் ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் "றஹ்மத்"தாக இருக்கின்றார்கள்.

٧- وَمَا كَانَ اللّٰهُ لِيُعَذِّبَهُمْ وَاَنْتَ فِيْهِمْ

*நபியே! நீங்கள் அவர்களிடையே இருக்கும் நிலையில் அல்லாஹ் அவர்களை வேதனை செய்பவனாக இல்லை.*

*அல் குர்ஆன்: (08:33).*

அதாவது, அல்லாஹ்வின் தண்டனை அவர்கள் மத்தியில் வராமல் இருப்பதற்கான காரணம், நபியே! நீங்கள் அவர்கள் மத்தியில் இருப்பது தான்! இதன்படி மொத்தமான தண்டனை கியாமத் நாள் வரை எந்த இடத்திலும் வராது.

ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கியாமத் நாள் வரை எல்லா இடங்களிலும் இருக்கின்றார்கள் என்பது இதன் மூலம் தெரிய வருகிறது. ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் ஒவ்வொரு நல்லவர், தீயவர் மத்தியிலும் இருப்பதாக தஃப்ஸீர் ரூஹுல் பயானில் கூறப்பட்டுள்ளது.

இது பற்றிய விளக்கம் மூன்றாம் பிரிவில் வரும். இன்ஷாஅல்லாஹ்!

அல்லாஹுத்தஆலா கூறுகின்றான்.

وَاعْلَمُوا اَنَّ فِيْكُمْ رَسُوْلَ اللّٰهِؕ

***அறிந்து கொள்ளுங்கள்.! உங்களிலேயே அல்லாஹ்வின் திருத்தூதர் இருக்கின்றார்கள்.***

*அல் குர்ஆன்: (49: 07).*

٨- وَكَذٰلِكَ نُرِىْ اِبْرٰهِيْمَ مَلَكُوْتَ السَّمٰوٰتِ وَالْاَرْضِ

***இவ்வாறு இப்ராஹிமுக்கு வானங்களுடைய, இன்னும் பூமி யுடைய (நுட்பமான சூட்சம) ஆட்சியை நாம் காட்டினோம்.***

*அல் குர்ஆன். (6:75).*

நபி இப்ராஹீம் அலைஹிஸ்ஸலாம் உலகம் முழுவதையும் கண்ணால் பார்த்துள்ளார்கள் என்பது இதன் மூலம் தெரிய வருகிறது. றஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் படித்தரம், அந்தஸ்து ஹளறத் நபி இப்றாஹீம் அலைஹிஸ்ஸலாம் அவர்களை விட உயர்வாக இருப்பதால், நபியவர்கள் பிரபஞ்சத்தைப் பார்த்திருக்க வேண்டியது அவசியமாகும்.

இத்திருவசனத்தின் தெளிவான விளக்கம் இல்முல் ஙைபு பற்றிய பகுதியில் கூறப்பட்டுள்ளது.

٩ -اَلَمْ تَرَ كَيْفَ فَعَلَ رَبُّكَ بِاَصْحٰبِ الْفِيْلِؕ

*யானைப் படையினரை உமது றப்பு என்ன செய்தான் என்பதை நீர் பார்க்கவில்லையா?.*

*அல் குர்ஆன்: (105 : 1).*

١٠- اَلَمْ تَرَ كَيْفَ فَعَلَ رَبُّكَ بِعَادٍ

*(நபியே)) உம்முடைய ரப்பு ஆது கூட்டத்தினரை எப்படி செய்தான் என்பதை நீர் பார்க்கவில்லையா?.*

*அல் குர்ஆன்: (89:6).*

ஆது சமூகமும், யானைப் படை நிகழ்வும் ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் பிறப்பதற்கு முன் நடந்ததாகும். ஆனால், திருமறையில் நீர் பார்க்கவில்லையா? என்று கூறப்பட்டுள்ளது. அதாவது, பார்த்தார்கள் .

அல்லாஹுத்தஆலா கூறுகின்றான்.

اَلَمْ يَرَوْا كَمْ اَهْلَكْنَا مِنْ قَبْلِهِمْ مِّنْ قَرْنٍ

*இவர்களுக்கு முன்னர் எத்தனையோ தலைமுறையினரை நாம் அழித்துள்ளோம் என்பதை அவர்கள் பார்க்கவில்லையா?*

*அல் குர்ஆன்: (06:06).*

இதில் அவர்கள் பார்க்கவில்லையா என்று கூறப்பட்டுள்ளது. இதன்கருத்து யாதெனில், காஃபிர்களின் அழிந்த சிதைவுகளையும், அரசாட்சியையும், அவை நடந்த இடங்களையும் பார்ப்பதாகும். ஏனெனில், மக்கத்துக் காஃபிர்கள் தனது பயணங்களில் இப்படி அழிந்த இடங்களைக் கடந்தே செல்கின்றனர். அதனால், இவற்றைப் பார்த்து படிப்பினை பெற வேண்டாமா? என்று அல்லாஹுத்த ஆலா கேட்கின்றான்.

றஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் வெளிப்படையில் உலகைச் சுற்றிப் பார்க்கவில்லை. அப்படிச் சுற்றிப் பார்த்தால்தான் ஆது, தமூது உள்ளிட்டவர்களின் இடிந்து போன அழிவுகளைக் காணக்கூடியதாக இருந்திருக்கும்.

இதனால், றஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் நுபுவ்வத்தின் ஒளியால் பார்ப்பதைத் தான் இங்கு கூறப் படுகின்றது என்பது தெளிவு.

திருக்குர்ஆன் பல்வேறு இடங்களில் பின் வருமாறு கூறுகின்றது.

وَأُذْ قَالَ رَبُّكَ لِلْمَلَائِكَة-١١

*உம்முடைய றப்பு மலக்குகளிடம் கூறியதை ஞாபகப்படுத்திக் பாருங்கள்*

٢١ - وَأُذْ قَالَ موسى لِقَوْمِهِ

***மூஸா (அலைஹிஸ்ஸலாம்) அவர்கள் அவர்களுடைய சமுகத்தாருக்குக் கூறியதை நினைத்துப் பாருங்கள்!.***

முதலில் பார்த்தவற்றைத் தான் நினைத்துப் பார்க்க முடியும். அதில் கவனம் செலுத்தாமலிருந்தால், அப்பக்கம் கவனத்தைத் திருப்பி நினைத்துப் பாருங்கள்! என்று கூறலாம்.

இதன் படி, இவ்வனைத்து நிகழ்வுகளையும் நபிகள் கோமான் முஹம்மது முஸ்தஃபா ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் பார்த்துள்ளார்கள் என்பது தெளிவுகிறது.

ஹளறத் ஆதம் அலைஹிஸ்ஸலாம் அவர்களின் அனைத்து வகையான நிகழ்வுகளையும் றஸூலுல்லாஹி ஸல்லல்லாஹுஅலைஹி வஸல்லம் அவர்கள் பார்த்துள்ளார்கள் என்று தஃப்ஸீர் றூஹுல் பயானில் எழுதப்பட்டுள்ளது.

இது பற்றிய விளக்கம் இன்ஷா அல்லாஹ் பின்னர் வரும்.

٣١ - وَأُذْ نَجَّيْنَاكُم مِّنْ آلِ فِرْعَوْنَ

***ஃபிர்அவ்னின் கூட்டத்தாரிடமிருந்து உங்களுக்கு வெற்றியைத் தந்ததை நினைத்துப் பாருங்கள்! என்று பனுஇஸ்ரவேலர்களைப் பார்த்து கூறப்பட்டது.***

றஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் காலத்தில் வாழ்ந்த யூதர்கள் அந்தக் காலத்தில் இருக்கவில்லையே! என்று யாராவது கூறினால், அதற்கு நாம் கூறுகின்ற பதில்,

இங்கும் "நினைத்துப் பாருங்கள்" என்ற ஒரு வாக்கியம் விடுபட்டுள்ளது என்று முஃபஸ்ஸிரீன்கள் கூறி அதை நினைத்துப்பாருங்கள் اذكروا என்று வெளிப்படுத்தியுள்ளனர்.

பனூஇஸ்ரவேலர்களின் வரலாற்றில் இவை யாவும் எழுதப்பட்டுள்ளன. இவர்கள் வரலாற்றைப் படித்து இதை அறிந்து வைத்திருந்தனர். அதனால் அதன் பக்கம் கவனத்தை திருப்பிப் பாருங்கள் என்று கூறப்பட்டது.

றஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் எவரிடமும் கற்கவில்லை, வரலாற்று நூற்களை மீட்டியதில்லை; எந்த ஒரு வரலாற்று ஆசிரியரின் உறவில் இருந்ததுமில்லை, கற்ற பண்டிதர்களின் பராமரிப்பில் வளர்க்கப்படவுமில்லை; இப்படியான அறிவு ஞானங்கள் சகலதும் நுபுவ்வத்தின் அறிவுக் கடலிலிருந்து அன்னாருக்குப் புகட்டப்பட்டுள்ளன.

٤١ - النَّبِيُّ أَوْلَى بِالْمُؤْمِنِينَ مِنْ أَنْفُسِهِمْ

***நபி அவர்கள் முஸ்லிம்களிடத்தில் அவர்களின் உயிரை விட நெருக்கமானவர்கள்.***

தேவ்பந்து மத்ரஸாவின் நிறுவனர் மௌலவி காஸீம் நானோத்தவி "தஹ்தீறுன் நாஸ்" என்ற நூல் பக்கம் 10ல் பின் வருமாறு எழுதுகின்றார்.

அவ்லா (اولي ) என்பது நெருக்கம் ( قريب ) என்று பொருள்படும். றஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் முஸ்லிம்களுக்கு அவர்களின் உயிரை விட அதிக நெருக்கமானவர்கள்.

நமக்கு மிக நெருக்கமானது நமது உயிர்தான்; அதைவிடவும் நெருக்க மானவர்கள் றஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர் களாகும். அதிக நெருக்கமான பொருள் மறைந்து தானிருக்கும்.

**எச்சரிக்கை!**

**இந்த இடத்தில் சிலர் இவ்வாறு கூறுகின்றனர்.**

நீங்கள் முகல்லிதுகள், முகல்லிதுக்கு திருக்குர்ஆனிலிருந்தும், ஹதீதுகளிலிருந்தும் நேரிடையாக ஆதாரம் எடுப்பது ஆகாது! இமாம் களின் கூற்றுக்களை முன்வைக்கவும் என்றால், ஹளறத் இமாமுல் அஃழம் அபூ ஹனீஃபா றஹ்மத்துள்ளாஹி அலைஹி அவர்களின் கூற்றை மட்டும் உங்களால் முன்வைக்க முடியுமா?.

இதற்கு பல விதங்களில் பதில் கூற முடியும்

1- தேவ்பந்திகளாகிய நீங்களும் இமாமுல் அஃழமைத்தானே பின்பற்றுகின்றீர்கள்! நீங்கள் ஹாழிர் நாழிர் இல்லை என்ற கொள்கையைத் தானே கொண்டிருக்கின்றீர்கள்!. அதனால், இது தொடர்பாக இமாமுல் அஃழம் அவர்களின் கருத்தை முன் வையுங்கள் பார்க்கலாம்!.

2-அகீதாவின் பிரச்சினையில் எவரையும் தக்லீது பின் பற்ற முடியாது என்று தக்லீது பற்றி பகுதியில் தெளிவாகக் குறிப்பிடப்பட்டுள்ளது. ஃபிக்ஹுடைய பிரச்சினையில் இஜ்திஹாதில் தக்லீது கூடும். ஹாழிர் நாழிர், என்பது அகீதா பிரச்சினை!.

3-தெளிவான திருவசனங்கள், ஹதீஸ்கள் உள்ளிட்டவையிலிருந்து ஒருமுகல்லிதும் கூட ஆதாரமாக எடுக்க முடியும்; ஆனால், இவற்றிலிருந்து சட்டங்களையும், தீர்வுகளையும் எடுக்க முடியாது!

وما فهم الأحكام من نحو الظاهر والنص والمفسر فليس مختصا به ( اى بالمجتهد ) . بل يقدر عليه العلماء الاعم . طحاوى

வெளிப்படையான நஸ்ஸிலிருந்தும், முஃபஸ்ஸிரிலிருந்தும் சட்டங் களை கிரகித்துக் கொள்வது முஜ்தஹுதுகளுக்கு மட்டும் சொந்தமானது அல்ல! அது பொதுவான அறிஞர்களுக்கும் அதற்கான ஆற்றல் உண்டு.

*ஆதாரம்: தஹாவி*

وأيضا شاع وذاع احتجاجهم سلفا وخلفا بالعمومات من غير نكير . مسلم الثبوت

பொதுவான திருவசனங்களிலிருந்து ஆதாரம் எடுப்பது முன்னோர், பின்னோர்களிடமிருந்து எதுவித மறுப்பும் இல்லாமல் தெளிவாக பரவலாக உள்ளது.

*முஸல்லமுத்துபூத்.*

திருக்குர்ஆன் கூறுகின்றது:

فَاسْأَلُوا أَهْلَ الذِّكْرِ إِن كُنتُمْ لَا تَعْلَمُونَ

***உங்களுக்குத் தெரியாமல் இருந்தால், திக்ரு உடையவர்கள் இடத்தில் கேளுங்கள்!.***

*அல் குர்ஆன்:(16:43).*

ஆய்வு செய்து பெற வேண்டிய சட்டங்கள் நமக்குத் தெரியாது! இதில், இமாம்களைப் பின்பற்றுகின்றோம். தெளிவான வசனத்தின் பொருள் தெரியுமாயின், அதில் தக்லீத் அவசியமில்லை.

4) ஹாழிர் நாழிர் பற்றிய ஃபுகஹாக்கள் முஹத்தீன்கள், முஃபஸ்ஸிரீன் களின் கூற்றுக்கள் பின்னால் வருகின்ற பகுதிகளில் வருகின்றன. அதனை பாருங்கள்! சிந்தியுங்கள்! ஹாழிர் நாழிர் பற்றிய அகீதா அனைத்து முஃபஸ்ஸிரீன்கள் அகீதாவாகும்.

## பிரிவு - 2

## ஹாழிர் நாழிர் பற்றி ஹதீஸ்களின் விளக்கம்.

இத்தொடரில் சொல்லப்பட வேண்டிய அனைத்து ஹதீஸ்களும் "இல்முல் ஙைப்" என்ற பகுதிகளில் கூறப்பட்டுள்ளன. குறிப்பாக ஹதீஸ் இலக்கம் 6, 7, 8, 19 உள்ளிட்ட ஹதீஸ்களின் பொருள்: அனைத்து உலகமும் உள்ளங்கையில் இருப்பது போன்று பார்க்கின்றார்கள் என்ற கருத்தை தெளிவுபடுத்துகின்றன.

எமது உம்மத்தின் உருவங்கள் எமக்கு எடுத்துக் காட்டப்பட்டன. நாம் அவர்களின் பெயர்களையும், அவர்களின் தந்தை, பாட்டன்மார்களின் பெயர்களையும், அவர்கள் பயணிக்கும் குதிரைகளின் நிறங்களையும் இன்னும் இவை அல்லாத ஏனையவைகளையும் நாம் அறிவோம் என்ற ஹதீஸ்களும் இவற்றுக்கு விளக்கம் எழுதிய ஹதீஸ் கலை மேதைகளான முஹத்திதுகளின் கூற்றுக்களும் ஏற்கனவே குறிப்பிடப்பட்டுள்ளன.

அவற்றையும் குறிப்பாக மிர்காத், ஸர்க்கானி உள்ளிட்ட நூற்களின் குறிப்புகளையும் இவை தவிர்ந்த அடியிற்வரும் ஹதீஸ்களை முன்வைப் போம்.

١- فيقولان ما كنت تقول فى هذا الرجل لمحمد. مشكوة : باب, اثبات عذاب القبر

முன்கர், நகீர் என்ற இரண்டு மலக்குகளும் கப்ரில் மையத்திடம் இந்த மனிதராகிய முஹம்மது ரஸூலுல்லாஹ் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களைப் பற்றி என்ன கூறுகிறீர் ? என்று கேட்பார்கள்.

*மிஷ்காத்*

இந்த ஹதீஸுக்கு, "அஷிஃஃ அத்துல் லம்ஆத்" என்ற நூலில் பின்வருமாறு விளக்கம் எழுதப்பட்டுள்ளது.

இந்த மனிதர் என்பது, முஹம்மது முஸ்தஃபா ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் சிறப்பான பண்புகளைக் கொண்ட (தாத்)கோலம் ஆகும்;

அல்லது, ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களை நேரில் கொண்டு வரப்படும்; இவ்விதமாக கப்ரில் றஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் புனித பிரதி பிம்பத்தை கொண்டு வரப்படும்.

இந்த கட்டத்தில் இந்த திருமணத்தில் நம்பிக்கை வைத்து உயிரைப் பணயம் வைத்து ஏக்கத்திலிருந்த காதலர்களுக்கு மிகப் பெரிய மகிழ்ச்சியான செய்தியாக இருக்கும். கப்றுக்குள் உயிரோடு சென்றவா களுக்குத் தான் இந்த வாய்ப்பு உண்டு!

மிஷ்க்காத்தின் ஹாஷியாவில் எழுதப்பட்டுள்ளதாவது,

قبل يكشف الميت حتى ير النبي صلى الله عليه السلام وهى بشرى عظيمة

மய்யித்தின் திரை நீக்கப்படும்; அதனால், ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களைப் பார்ப்பார்!. இது மிகப்பெரிய சுப செய்தியாகும்

فقيل يكشف الميت حتى بر النبى صلى الله عليه السلام وهو بشرى عظيمة للمؤمنين ان صح ،

قسطلانى شرح بخارى۲. جلد - ۳۰.

மய்யித், நபியவர்களைப் பார்க்கும்வரை திரை நீக்கம் செய்யப்படும். இதுசரியாக இருந்தால் முஃமின்களுக்கு இது மகத்தான பாக்கியமும், சுப செய்தியுமாகும்.

*கஸ்தலானி.*

*புகாரி ஜரீப் விரிவுரை*

*பாகம் _2, பக்கம்_39.*

"இந்த மனிதர்!" என்று கப்ரில் கேட்கப்படுவது, அவருடைய சிந்தனையில் இருக்கும் மனிதரை குறித்துள்ள ஒரு சாடை என்று சிலர் கூறுவது சரியான கூற்று அல்ல.

மய்யித்தை பார்த்து உமது சிந்தனையில் இருக்கும் இந்த பண்புள்ள மனிதரைப் பற்றி உமது கருத்து என்ன? என்று கேட்பது சரியான கூற்று அல்ல! ஏனெனில், இவர்கள் கூறுகின்றபடி வைத்துக் கொண்டால், காஃபிரான மய்யித்திடம் இந்தக் கேள்வி கேட்கப்பட மாட்டாது!

ஏனெனில்,

அவருடைய சிந்தனையில் ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களைப் பற்றி எவ்விதமான படிவமும் கிடையாது. மேலும், "இவரைப்பற்றி எனக்கு எதுவும் தெரியாது!" என்று கூறவும் மாட்டாரே!

"இவரைப் பற்றி எனக்கு எதுவும் தெரியாது!" என்று காஃபிரான மய்யித் கூறுவதிலிருந்து, மய்யித் ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களை நேரில் பார்க்கின்றது; ஆனால், அவர்களை அடையாளம் காண முடியவில்லை.!

மேற்கண்ட கூற்றிலிருந்து தெரியவருவது யாதெனில், கப்ரில் ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களைக் காட்டியே விசாரணை நடக்கும். இதனால்தான் ஸூஃபியாக்களும், ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் நேசர்களும் மரணத்தை விரும்புகின்றனர். கப்றின் முதலிரவு புது மாப்பிள்ளை பார்க்கின்ற இரவு என்று கூறப்படுகின்றது. இதனால் தான் பெரியோர்களான மகான்களின் மறைவு தினத்தை உரூஸ் தினம் எனக் கூறப்படுகின்றது.

உரூஸ் என்றால், "திருமணம்" என்பது பொருள், மணமகனாராகிய ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களை காண்கின்ற தினம் என்பது இதன் பொருள்.

ஒரே நேரத்தில் பல்லாயிரம் பேர் மரணிக்கிறார்கள், அடக்கம் செய்யப்படுகிறார்கள். ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் ஹாழிர், நாழிர் இல்லையெனில், ஒரே நேரத்தில் பல்லாயிரம் இடங்களுக்குச் செல்வது எப்படி சாத்தியமாகும்?

அதனால். "திரை" என்பது, நமது விழிக்குத்தான்! நமது பார்வையில் படிந்திருக்கும் திரையை மலக்குகள் அகற்றுகின்றனர். சூரியனை மேகம் மறைக்கின்றது. மேகம் விலகி சூரியனை வெளிப்படுத்திக் காட்டுகின்றது.

٢- أستيقظ رسول الله صلى الله عليه وسلم ليلة فزعا يقول سبحن الله ماذا انزل الليلة من الخزائن وماذا انزل من الفتن مشكوة باب التحريض على قيام الليل

ஒரு தினம் ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் தூக்கத்திலிருந்து திடுக்கிட்டு எழுந்து, பின் வருமாறு கூறினார்கள். சுபஹானல்லாஹ்! இந்த இரவு எந்த அளவு பொக்கிஷங்களும் (ஃபித்னா) குழப்பங்களும் இறங்கியுள்ளன.

*(மிஷ்காத்).*

எதிர்காலத்தில் இறங்க இருக்கும் குழப்பங்களை முன்கூட்டியே அறிந்துள்ளார்கள் என்பது இதிலிருந்து தெரிய வருகின்றது.

٣- نعي النبى صلى الله عليه وسلم زيدا وجعفرو ابن رواحة للناس قبل أن يأتيهم خيرهم فقال اخذ الراية زيد فاصيب الى حتى اخذ سيف من سيوف الله يغنى خالدبن الوليد حتى فتح الله عليهم. (مشكوة باب المجزات)

ஹளறத் ஸைத், ஹளரத் ஜஃபர், ஹளரத் இப்னு றவாஹா ஆகியோர் யுத்தத்தில் ஷஹீதான செய்தி கிடைப்பதற்கு முன்பே ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் வஃபாத் செய்தியை ஸஹாபாக் களுக்குக் கூறினார்கள்.

ஹளரத் ஸைத் கொடியை தூக்கினார், அவர் ஸஹீதாக்கப்பட்டார்; அல்லாஹ்வின் வாள்களில் ஒரு போர்வாள் ஆன ஹளரத் காலித் இப்னு வலீத் கொடியைத் தூக்கும் வரை ஒருவர் பின் ஒருவராக ஷஹீதானார்கள்; பின்னர், அல்லாஹுத் தஆலா வெற்றியைக் கொடுத்தான். ஹளறத் ஸைத், ஹளரத் ஜஃபர், ஹளரத் இப்னு றவாஹா ஆகியோர் யுத்தத்தில் ஷஹீதான செய்தி கிடைப்பதற்கு முன்பே ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் வபாத் செய்தியை சஹாபாக்களுக்கு கூறினார்கள்.

ஹளரத் ஸைத் கொடியை தூக்கினார், அவர் ஸஹீதாக்கப்பட்டார்; அல்லாஹ்வின் வாள்களில் ஒரு போர்வாள் ஆன ஹளரத் காலித் இப்னு வலீத் கொடியைத் தூக்கும் வரை ஒருவர் பின் ஒருவராக ஷஹீதானார்கள்; பின்னர், அல்லாஹுத்தஆலா வெற்றியைக் கொடுத்தான்.

*-மிஷ்காத்*

யுத்தம் நடந்த இடம் "பீர்மஊனா" ஆகும்.

இது மதீனத்துல் முனவ்வறாவில் இருந்து வெகு தொலைவில் உள்ளது. அங்கு நடப்பதை மதீனாவில் இருந்து கொண்டு மதீனத்து மாமன்னர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லவர்கள் அறிகிறார்கள் என்பதை இதன் மூலம் புரிகின்றோம்.

٤- وان موعدكم الحوض وآني لانظر اليه وأنا في مقامي  مشكوة : باب وفات النبي صلي الله عليه وسلم

உங்களுடைய சந்திப்புக்கான இடம் ஹவ்ழுல் கவ்தர் ஆகும். அதை இந்த இடத்திலிருந்து பார்க்கின்றேன்.

*(மிஷ்க்காத்).*

اقيموا صفوفكم فاني اراكم من ورائي مشكوة : باب تسوية الصف

உங்களுடைய ஸஃப்புகளை செவ்வையாக்குங்கள். என் பின்புறத்தி லிருந்தும் உங்களை நான் பார்க்கின்றேன்.

*(மிஷ்க்காத்).*

كنا مع النبي صلي الله عليه وسلم فشخص ببصره الي السماءثم قال هذا اوان يختلس العلم من الناس حتي لا يقدرا منه علي شيئ  ترمذي : ج,٢ باب العلم ما جاء في ذهاب العلم

நாங்கள் றஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களோடு இருந்தோம். நபியவர்கள் வானத்தின் பக்கமாக பார்வை உயர்த்தினார்கள்; இது மனிதர்களிடமிருந்து அறிவு பிடுங்கப்படுகின்ற நேரம், (இதன்பின்) அவர்களின் கட்டுப்பாட்டுக்குள் வரமாட்டாது என்று கூறினார்கள்.

இந்த ஹதீதுக்குரிய விளக்கத்தை அல்லாமா முல்லா அலி காரி றஹ்மத்துள்ளாஹி அலைஹி அவர்கள் மிர்க்காத்தில் பின் வருமாறு எழுதுகின்றார்கள்

فكانه عليه السلام لما نظر الي السماء كوشف باقتراب أجله فاخبر بذلك

றஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் வானத்தின் பக்கம் பார்த்தபோது அன்னாருக்கு தங்களுடைய வஃபாத்

நேரம் நெருங்கியது வெளிப்பட்டது, அதனையே அறிவித்தார்கள்.

7- மிஷ்க்காத்தில் குழப்பங்கள் பற்றிய பாடத்தின் ஆரம்பத்தில் முதலாம் பிரிவில் பின் வரும் ஹதீது வருகிறது.

றஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் மதீனா தைய்யிபாவில் உள்ள ஓரிடத்தில் நின்று கொண்டு எனக்குத் தெரிந்தது உங்களுக்கும் தெரிகிறதா? என்று ஸஹாபாக்களிடம் கேட்டார்கள். இல்லை என்று ஸஹாபாக்கள் கூறினார்கள்.

فاني اري الفتن تقع خلل بيوتكم كوقع المطر

உங்கள் வீடுகளிலிருந்து மழையைப் போன்று ஃபித்னா கொட்டுவதைப் பார்க்கின்றேன் என்றார்கள்.

பின்னால் நடக்க இருந்த யஸீது, ஹஜ்ஜாஜ் (வஹாபி) போன்றவர்களின் ஃபித்னாக்களை முன்கூட்டியே பார்க்கின்றார்கள் என்பதை இதன் மூலம் அறிகின்றோம்.

மேற்கண்ட ஹதீதுகளின் மூலம் றஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் சத்திய விழியால் எதிர்கால நிகழ்வு களையும், தூர, கிட்டத்திலுள்ளவையையும், ஹவ்ழுல் கவ்தறையும், சொர்க்கம், நரகத்தையும் பார்க்கின்றார்கள் என்பதை அறிகின்றோம்.

றஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் பறக்கத்தினால் அவர்களின் தொண்டர்களுக்கும் அல்லாஹுத்தஆலா இந்த ஆற்றலையும், ஞானத்தையும் கொடுத்துள்ளான்.

8-மிஷ்க்காத் வால்யூம் 2-கறாமாத் பற்றிய பாடத்தில் பின் வரும் நிகழ்வு பதிவாகியுள்ளது.

ஹளறத் உமர் ஃபாறூக் றழியல்லாஹு அன்ஹு அவர்கள் ஒரு படைக்கு ஹளறத் ஸாரிய றழியல்லாஹு அன்ஹு அவர்களை தளபதியாக்கி "நஹாவந்து" என்ற இடத்திற்கு அனுப்பி வைத்தார்கள்.

فبينما عمر يخطب فجعل يصيح يا سارية الجبل

ஹளறத் உமர் ஃபாறூக் றழியல்லாஹு அன்ஹு அவர்கள் மதீனா முனவ்வறாவில் குத்பா பிரசங்கம் நிகழ்திக் கொண்டிருக்கும் போது ஸாரியாவே! மலையை எடுத்துக் கொள்ளுங்கள்! என்று கூச்சலிட்டுக் கூறினார்கள்.

சில காலம் கழித்து படை மதீனா முனவ்வறா வந்த பின், அவர்களே இவ்வாறு கூறினார்கள்.

எதிரிகள் எங்களைத் தாக்கினார்கள், ஸாரியாவே மலையைப் பார்! என்று யாரோ ஒருவர் கூறும் ஒரு சப்தத்தைக் கேட்டோம். நாங்கள் உடனே மலையை எங்களின் முதுகுப் பக்கமாக ஆக்கிக் கொண்டோம். அல்லாஹுத் தஆலா அவர்களுக்கு இழப்பைக் கொடுத்தான்.

9: இமாமுல் அஃழம் அபூ ஹனீஃபா றஹ்மத்துள்ளாஹி அலைஹி அவர்கள் ஃபிக்ஹுல் அக்பரிலும், அல்லாமா ஜலாலுத்தீன் ஸுயூத்தி றஹ்மத்துல்லாஹி அலைஹி அவர்கள் ஜாமிஉல் கபீரிலும் ஹளறத் ஹாரிது இப்னு நுஃமான், ஹளறத் ஹாரிதா பின் நுஃமான் றழியல்லாஹு அன்ஹுமா மூலம் அறிவிக்கின்றார்கள்.

ஒரு தினம் றஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் திருச்சமூகம் சென்றேன். ஹாரிதே! இன்றைய தினத்தை நீர் எப்படிப் பெற்றுக் கொண்டீர் என்று கேட்டார்கள்?. உண்மை முஃமினாக கண்டு கொண்டேன் என்றேன்.

உமது ஈமானின் ஹகீக்கத் என்ன? என்று றஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கேட்டார்கள்.

كاني انظر الي عرش ربي بارزا وكاني انظر الي اهل الجنة يتزاورون فيها وكاني انظر الي اهل النار يتضاعون فيها

நான் அல்லாஹ்வினுடைய அர்ஷை வெளியானதாகப் பார்க்கின்றேன்; சொர்க்கவாதிகள் சொர்க்கத்தில் ஒருவரையொருவர் சந்திப்பதையும் பார்க்கின்றேன், நரகவாதிகள் நரகத்தில் அலறுவதையும் கேட்கின்றேன் என்றார்கள்.

இச்சம்பவத்தை மௌலானா ஜலாலுத்தீன் ரூமி ரஹ்மதுல்லாஹி அலைஹி மஸ்னவி ஷரீபில் அழகாக பண்ணிசைக்கின்றார்கள்.

ஹிந்துக்களுக்கு முன்னால் சிலைகள் இருப்பது போன்று எனக்கு சொர்க்கமும், நரகமும் வெளியாயிற்று!

திரிகையில் அகப்பட்ட கோதுமை போன்று சொர்க்கவாதி யார்? நரகவாதி யார் என்று ஒவ்வொருவரையும் இனம் கண்டுகொண்டேன். எனக்கு முன்னால் மீன்களையும் எறும்புகளையும் போல் இருக்கின்றனர்.

பேசாதே! அல்லது வேறு ஏதாவது பேசு! என்று நபிகளார் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் அவரின் வாயை அடைத்தார்கள்.

இந்த சூரியனின் அணுக்களின் பார்வையின் நிலை இதுவானால், சொர்க்கம், நரகம் அர்ஷு, பர்ஷு, சொர்க்கவாதி நரகவாதி உள்ளிட்டோரை தனது கண்ணால் பார்க்கின்றனர் என்றால், ஈருலக சூரியனின் பார்வையைப் பற்றி என்ன தான் கேட்க வேண்டியுள்ளது.?

## பிரிவு - 3

## ஹாழிர் நாழிர் பற்றி சட்ட அறிஞர்கள், சான்றோர்களின் சான்றுகள்.

ياحاضر يا ناظر ليس يكفر درالمختار. جلد ٣

யா ஹாழிர், யா நாழிர் என்று கூறுவது குஃப்ரு அல்ல!

*துர்ருல் முக்தார்_ பாகம் : 3 ,*
*பாடம்: கராமத்துல் அவ்லியா.*

فان الحضور بمعنى العلم شائع ما يكون من نجوى ثلثة الا هو رابعهم والنظر بمعنى الرؤية الم يعلم بأن الله يرى فالمعنى ياعالم من يرى ( بزازية شامى)

ஹுழூர்-பிரசன்னம் என்பது அறிவினால் தான் என்பது பிரபலமான தாகும்.

அல்லாஹுத்தஆலா கூறுகின்றான்.

مَا يَكُونُ مِن نَّجْوَىٰ ثَلَاثَةٍ اِلَّا هُوَ رَابِعُهُمْ

***மூவருடைய இரகசியத்தில் அவன் அவர்களில் நான்காவதாக இல்லாமலில்லை.***

*(அல் குர்ஆன்: 58: 07).*

"நழ்று" என்றால் பார்த்தல் என்பது பொருளாகும்.

அல்லாஹுத்தஆலா கூறுகின்றான்.

اَلَمْ يَعْلَمْ بِاَنَّ اللّٰهَ يَرٰىؕ

***நிச்சயமாக அல்லாஹ் அவன் (செய்வது அனைத்தையும்) பார்க்கிறான் என்பதை அவன் அறியவில்லையா?.***

*(அல் குர்ஆன்: 96:14).*

இதன்படி, இதன் பொருள், எல்லாம் அறிந்தவனே! எல்லாவற்றையும் பார்க்கின்றவனே! என்றாகும்.

.ويقصد بالفظ التشهد الانشاء . كانه يحي على الله ويسلم على نبيه نفسه در المختار جلد-ا- باب كيفية الصلوة

அத்தஹியாத்தின் வார்த்தைகளை மொழியும் போது, தொழுகின்றவர் அல்லாஹ்வுக்கு காணிக்கை வைப்பதாகவும், தானே நேரில் றஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கு ஸலாம் கூறுவது போன்றும் நிய்யத் வைத்துக் கொள்ள வேண்டும்.

*துர்ருல் முக்தார். பாகம் - 1.*

*பாடம்: தொழும் முறை.*

இதன் கீழ் ஷாமி என்ற நூலில் பின்வருமாறு விளக்கம் எழுதுகின்றார்கள்.

اي لا يقصد الأخبار والحكاية عما وقع في المعراج منه عليه السلام ومن ربه ومن الملائكة - شامي

இந்த நிகழ்வு மிஃறாஜில் அல்லாஹ்வுக்கும், நபியவர்களுக்கும், மலக்குகளுக்குமிடையில் நடந்த உரையாடல் என்று நினைக்கக்கூடாது.

*ஜாமி: றத்துல்முக்தார்.*

மேற்கண்ட ஃபுகஹாக்களின் மேற்கோள்களிலிருந்து தெரிவது யாதெனில், அல்லாஹ் அல்லாதவர்களை ஹாழிர், நாழிர் என்று கூறுவது குஃப்ரு அல்ல!.

அத்தஹியாத்தில் றஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களைத் தெரிந்துகொண்டே ஸலாம் கூற வேண்டும்.

அத்தஹிய்யாத் தொடர்பாக ஷைய்கு அப்துல் ஹக் முஹத்தித் திஹ்லவி றஹ்மதுல்லாஹி அலைஹி கூறுகின்றார்கள்.

ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் உம்மத்துக்களின் நிலைகளையும், அவர்களின் அமல்களையும் அறிகிறார்கள். அன்னாரின் அவைக்குச் செல்வோருக்கு அருள் பாலிக்கின்றார்கள்; மேலும், ஹாழிர் நாழிர் ஆகவும் இருக்கின்றார்கள்.

*மஜ்மஉல் பறக்காத்.*

மேலும் கூறுகின்றார்கள்.

ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் வலிந்துரை, இரவல் சேர்மானம் எதுவும் இல்லாமல் எதார்த்தமாகவே உயிருடன் இருக்கின்றார்கள்; எப்போதும் இருப்பார்கள்; உம்மத்துக்களின் அமல்களில் ஹாழிர், நாழிராக இருக்கின்றார்கள்; எதார்த்தத்தைத் தேடுவோருக்கு அவர்களின் திருச்சமூகத்தில் அருள்பாலித்து அவர்களை இரட்சிக்கின்றார்கள்.

*ஸுலூக் அக்றபுஸ் ஸுப்லிபித்தவஜ்ஜுஹி இலா செய்யிதிர் றுஸுல்.*

மேலும் கூறுகின்றார்கள்.

நபிமார்கள் உலகில் வாழ்ந்ததை விட பூரணமான வாழ்க்கையுடன் நிரந்தரமாக இருக்கின்றார்கள்; ஆட்சி, அதிகாரமும் செய்து கொண்டிருக் கின்றார்கள். இதில் மாற்றுக் கருத்து எதுவும் கிடையாது.

*ஜறஹூ புதுஹூல் ஙைப் -*

*பக்கம் 333.*

ولاتباعد عن الاولياء حيث طويت لهم الارض وحصل لهم ابدان مكتسبة متعدرة وجدوها فى اماكن مختلفة فى أن واحد - مرقاة - باب مايقال عند من حضره الموت

அல்லாஹ்வின் வலிமார்களுக்கு ஒரே நேரத்தில் பல இடங்களில் தரிசனம் கொடுக்க முடியும்; அவர்களுக்கு ஒரே நேரத்தில் பல உடல்கள் எடுக்கவும் முடியும்.

*மிர்காத்.*

أن لم يكن فى البيت أحد فقل السلام عليك إيها النبى ورحمة الله وبركا ته

வீட்டுக்குள் நுழையும் போது அங்கு யாரும் இல்லை என்றால், அஸ்ஸலாமு அலைக்க அய்யுயின் நபிய்யு வரஹ்மத்துலாஹி வபரக்காத்துஹூ என்று கூறவேண்டும். இதற்கு அடியில் அல்லாமா முல்லா அலிகாரி ரஹ்மத்துல்லாஹி இதன் விரிவுரையில் எழுதுகின்றார்கள்.

لان روح النبى عليه السلام حاضر في بيوت اهل الأسلام

ஏனெனில், ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்களின் றூஹூ முஸ்லிம்களின் வீடுகளில் ஹாழிறாக இருக்கின்றது.

*ஜறஹூஷ்ஜிஃபா.*

ஷெய்கு அப்துல் ஹக் முஹத்திதுத் திஹ்லவி றஹ்மதுல்லாஹி அலைஹி எழுதுகின்றார்கள்.

"ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களைப் பற்றி கூறும் போதும், அவர்கள் பேரில் ஸலவாத் கூறும் போதும், அன்னார் உயிருடன் இருக்கும் போதும் அவர்களுக்கு முன்னால் இருப்பதாக நினைக்க வேண்டும்; உமது பேச்சை அவர்கள் கேட்கின்றார்கள்;

ஏனெனில் ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் அல்லாஹ்வின் பண்பைப் பெற்றிருக்கின்றார்கள். (அல்லாஹ் அவனது பண்பை அவர்களுக்கு வழங்கியுள்ளான்) அல்லாஹ்வை யாராவது நினைவு கூர்ந்தால் அல்லாஹ் அவர்களுடன் இருப்பது அல்லாஹ்வின் பண்பாகும்."

*மதாரிஷுன் நுபுவ்வத்*

இமாம் இப்னுல் ஹாஜ் மத்கலிலும், இமாம் கஸ்தலானி மவாஹிபுல்ல துன்னியா பாகம் 2 பக்கம் 387லும் பின் வருமாறு எழுதுகின்றார்கள்.

وقد قال علمائنا لافرق بين موته وحيوته عليه السلام فى مشاهد ته لامته ومعر فته باحوالهم ونيا تهم وعزائبهم وخواطرهم وذلك جلي عنده لا خفاء به

ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் வாழ்விலும், வஃபாதிலும் எவ்வித மாற்றமும் கிடையாது. அவர்களின் உம்மத்துக்களை பார்க்கின்றார்கள், அவர்களின் நிலைகள், எண்ணங்கள், நாட்டங்கள், உள்ளத்தில் உள்ளவை போன்றவற்றை அறிகிறார்கள்; அவர்களுக்கு எல்லாம் வெளிப்படையாகவே இருக்கின்றன. எவையும் மறையவில்லை என்பதில் எமது அறிஞர்களுக்கு மத்தியில் எவ்வித கருத்து வேறுபாடும் கிடையாது.

وقال الغزالى سلم عليه إذا دخلت فى المسجد فأنه عليه السلام يحضر فى المسجد مرقاة

இமாம் ஙஸ்ஸாலி ரஹ்மத்துல்லாஹி அலைஹி கூறுகின்றார்கள் "நீங்கள் பள்ளிவாசலுக்குள் நுழைந்தால், ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு

அலைஹி வஸல்லம் அவர்கள் பெயரில் ஸலாம் கூற வேண்டும். ஏனெனில், பள்ளிவாசலில் அன்னார் இருக்கின்றார்கள்".

*(மிர்காத்).*

الانبياءعليهم السلام من جهة الاجسام والظواهر مع البشر وبواطنهم وقواهم الروحانية ملكية
ولذا تري مشارق الأرض ومغاربها. تسمع اطيط السماء وتشم رائحة جبريل إذا اراد النزول عليهم

நபிமார்கள் சடத்துவத்தாலும், வெளிப்படையிலும் மனிதராக இருப் பார்கள்; அந்தரத்தில் ஆத்மீக ஆற்றலில் மலக்காக இருப்பார்கள்.

இதனால் தான் அவர்கள் பூமியில் கிழக்கையும், மேற்கையும் பார்க்கின்றார்கள். வானத்தின் இரைச்சலையும் கேட்கின்றார்கள். ஜிப்ரீல் அன்னாரிடத்தில் இறங்குவதற்கு முன்பே அவர்களின் வாடையை நுகர்கின்றார்கள்.

*நஸீமுர்றியாழ் ஜறஹுஷ்ஜிபா*

وقيل لرسول الله ارأيت صلوة المصلين عليك ممن عاب عنك ومن يأتي بعدك ما لها عندك فقال
أسمع صلوة اهل محبتي واعرفهم وتعرض علي صلوة غيرهم عرضا . دلا ئل الخيرات

உங்களை விட்டும் தூரத்தில் இருப்பவர்களின், உங்களுக்குப் பின் வருபவர்களின் ஸலவாத்துக்களைப் பற்றிய உங்களின் நிலை என்ன? என்று நபியவர்களிடம் கேட்கப்பட்டது. என் மீது மஹப்பத் வைத்திருப் போரின் ஸலவாத்துக்களை நேரில் கேட்கின்றேன், அவர்களை அடையாளம் காணவும் செய்கின்றேன். மஹப்பத் அல்லாதவர்களின் ஸலவாத்துக்கள் எனக்கு எத்தி வைக்கப்படுகின்றன. என்று பதில் கூறினார்கள்.

*தலாயிலுல் கைறாத் -*

*முன்னுரை.*

عن علقمة قال إذا دخلت المسجد أقول السلام عليك ايها النبي ورحمة الله وبركاته . شفا لقاضي عياض

ஹளரத் அல்கமா ரலியல்லாஹு அன்ஹு கூறுகின்றார்கள் ”நான் பள்ளிவாசலுக்குள் நுழைந்தால் நபியே! இன்னும் அவனது ரஹ்மத்தும், பரக்கத்தும் உங்கள் மீது உண்டாகட்டும்! என்று கூறுவேன்”.

இதை ஊர்ஜிதம் செய்யும் ஆதாரம் அபூதாவூத், இப்னுமாஜாவில் பள்ளிவாசலில் நுழையும் போது ஓதும் துஆ என்ற பாடத்தில் வருகின்றது.

ஷைய்கு அப்துல் ஹக் முஹத்திதுத் திஹ்லவி றஹ்மதுல்லாஹி அலைஹி கூறுகின்றார்கள்.

அல்லாஹுத்தஆலா ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கு அவர்கள் விரும்பிய இடத்திற்கு அவர்களின் திருவுடலுடனோ, அல்லது, அதன் பிம்பத்துடனோ வானத்திலோ, கப்ரிலோ செல்வதற்கான ஆற்றலை வழங்கியுள்ளான்; எல்லா நிலையிலும் அன்னாரின் தொடர்பை வைத்துக் கொள்கின்றார்கள்.

*மதாரிஷுன் நுபுவ்வத்*

*பாகம் 2 பக்கம் 450*

இமாம் ஷிஹாபுத்தீன் ஸுஹ்றவர்தி ரஹ்மத்துல்லாஹி அலைஹி கூறுகின்றார்கள்.

அல்லாஹுத்தஆலா எல்லா நிலையிலும் அக, புற நிலைகளை அறிந்திருக்கிறார்கள்; நமக்கு முன்னால் தரிசனம் தருகின்றார்கள், என்று நினைக்க வேண்டும். அன்னாரின் புனித தோற்றத்தை மனக் கண் முன் நிறுத்துவது, அன்னாரை எப்போதும் கண்ணியப்படுத்துவது, அன்னாருக்கு முன்னால் ஒழுக்கத்தை கடைபிடிப்பதற்கு ஆதாரமாகவும் அமையும்.

அன்னாருக்கு அகப்புற ரீதியாக மாற்றம் செய்வதற்கு வெட்கப்பட வேண்டும்; ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் புனித உறவின் ஒழுக்கத்தை ஒரு நொடியிலும் விட்டுவிடக் கூடாது.

*(அவாரிஃபுல் மஆரிஃப்).*

ஃபுகஹாக்கள், அறிஞர்களின் மேற்கண்ட கூற்றுகளிலிருந்து ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் ஹாழிர், நாழிர் என்பது மிகத் தெளிவாகி விட்டது.

இப்போது நாம் உங்களுக்கு காட்ட விளைவது ஒரு தொழுகையாளி தொழுகையில் ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களைப் பற்றி எவ்வாறு நினைக்க வேண்டும்? இதுதொடர்பாக, துர்ருல் முக்தார் முதற் பிரிவில் எடுத்துக் கூறப்பட்டுள்ளது.

மேலும், சில மகான்களின் கூற்றுக்களையும் படித்து ஈமானைப் புதுப்பித்துக் கொள்ளுங்கள்.

அஷிஃஅத்துல் லம்ஆத் என்ற நூலில் தொழுகை பற்றிய அத்தியாயத்தில், அத்தஹிய்யாத் பற்றிய பாடத்திலும், மதாரிஜுன் நுபுவ்வத் பாகம் -1 பக்கம் 125லும், ஷைய்கு அப்துல் ஹக் முஹத்திதுத் திஹ்லவி றஹ்மதுல்லாஹி அலைஹி எழுதுகின்றார்கள்.

சில ஆரிஃபீன்கள் கூறுகின்றனர்,

அத்தஹியாத்தில் நபிகள் நாதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களை முன்னிலைப்படுத்துவதன் நோக்கம் ஹகீகத்தே முஹம்மதிய்யா, படைப்பின் ஒவ்வொரு அணுவிலும், படைப்பில் ஒவ்வொருவரிலும் இரண்டறக் கலந்துள்ளது.

ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் தொழுகின்றவரிலும் இருக்கின்றார்கள்; அதனால், தொழுகையாளி இதை கவனத்தில் கொள்ள வேண்டும். நெருக்கத்தின் ஒளியாலும், மஃரிபத்தின் சுடராலும் பயன்பெற்று முழுமை பெறுவதற்காக இந்த ஷுஹுதிலிருந்து இந்த நிலையைப் பெறுவதற்கு மறக்கக்கூடாது!

ஹுஜ்ஜதுல் இஸ்லாம் இமாம் ஙஸ்ஸாலி ரஹ்மத்துல்லாஹி அலைஹி கூறுகின்றார்கள்.

واحضر في قلبك النبي عليه السلام وشخصه الكريم وقل السلام عليك ايها النبي ورحمة الله وبركاته

மனதில் ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் புனித தோற்றத்தை முன்னிலைப்படுத்தி அஸ்ஸலாமு அலைக்க அய்யுஹன் நபிய்யு வ ரஹ்மத்துல்லாஹி வ பரக்காத்துஹு என்று கூறுங்கள்.

*(இஹ்யா உலூமுத்தீன்).*

இதே கருத்து மிஷ்காத்தின் விரிவுரையான மிர்காத்திலும் அத்தஹிய் யாத்தின் பாடத்தில் இடம் பெற்றுள்ளது. நவாப் ஸித்தீக் ஹஸன் போபாலி வஹாபி, அஷிஃ அத்துல்லம் ஆத்தில் ஏற்கனவே கூறப்பட்ட அதே கருத்தை தனது மிஸ்கூல் கிதாம் என்ற நூலில் கூறுகின்றார்.

அதாவது, தொழுகின்றவர் ரஸூல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களை ஹாழிர், நாழிர் என்று கருதி அத்தஹியாத்தில் ஸலாம் கூற வேண்டும் என்று கூறிவிட்டு பின், வரும் பாரசீக கவிதையும் எழுதுகின்றார். காதல், அன்பு வழியில். தூரம், அருகாமை என்ற இடம் இல்லை!. நான் உங்களை பார்க்கின்றேன்.! இன்னும் துஆவும் கேட்கின்றேன்.

அல்லாமா ஷைய்கு முஜத்தித் ரஹ்மத்துல்லாஹி அலைஹி கூறுகின்றார்கள்.

وخوطب عليه السلام كانه اشارة الي انه تعالي يكشفله عن المصلين من امته حتي يكون كالخاطر
يشهد لهم بالعقل اعمالهم وليكون تذكر حضوره سببا بمزيد الخشوع والخضوع

தொழுகையில் ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் முன்னிலைப் படுத்த பட்டுள்ளார்கள். ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கு முன்னால் இருக்கின்றார்கள். அவர்களின் அமல்களை விளங்குகின்றார்கள் என்பதை அவர்களுக்கு வெளிப்படுத்துவது போன்று உள்ளது.

இது அதிக அச்சத்தையும், அடக்கத்தையும் ஏற்படுத்துவதற்கு காரணமாகவும் அமைகிறது.

ஹாழிர் நாழிர் பிரச்சினையில் சில சட்ட பிரச்சினைகளும் இருக்கின்றன.

கணவன் கீழ்த் திசை நாட்டிலும், மனைவி மேல் திசை நாட்டிலும் இருக்கையில் மனைவி குழந்தையை பிறசவிகின்றாள். இந்நிலையில் பிள்ளை எனக்கு உரியது என்று கணவன் வாதித்தால் பிள்ளை அவனுடையது என்றே தீர்மானமாகும். சிலவேளை அவர் அல்லாஹ்வின் வலியாக இருக்கக்கூடும் அவர் தன் மனைவியிடம் சென்று இருக்கவும் முடியும்.

*பார்க்க ஜாமி பாகம் 2*
*பாடம்: வமிசத்தை உறுதி செய்தல்.*

மேலும், இதே நூலில் பாகம் 3 முர்தத் என்ற பாடத்தில் கராமத்துல் அவ்லியா என்ற பகுதியில் எழுதப்பட்டுள்ளது.

وطي المسافة منه بقوله عليه السلام زويت لي الأرض ويدل عليه ما قالوا فيمن كان في المشرق وتزوج امرأة بالمغرب فاتت بولد يلحقه وفي التتارخانية انهذه المسئلة تريد الجواز ،

தூரம் சுருக்கப் படுவதும், கராமத்திலுள்ளதுதான்!. "எனக்கு பூமி சுருக்கி கொடுக்கப்பட்டுள்ளது" என்று ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் கூறியுள்ளார்கள்.

இந்த அடிப்படையில், ஃபுகஹாக்கள் கூறும் சட்ட பிரச்சினை ஆகும் என்பதற்கு இது ஆதாரமாக இருக்கின்றது,

அதாவது, கிழக்கு திசையிலிருக்கும் ஒருவர், மேற்கு நாட்டில் வசிக்கும் பெண்ணைத் திருமணம் செய்கிறார். பின்னர் அப்பெண் கறப்பந்தரித்து குழந்தையை பெற்றெடுத்தால்,

காமத்தால் இது சாத்தியம் என்பது ஊர்ஜிதமானதால், அப்பிள்ளையை அவனுடன் சேர்க்கப்படும். இவ்வாறு "கானியா" என்ற நூலில் குறிப்பிடப் பட்டுள்ளது.

இதே இடத்தில் ஷாமியில் கூறப்பட்டுள்ளது.

والانصاف ما ذكره الأمام النسفي حين سئل عما يحكي أن الكعبة كانت تزور واحدا من الاولياء هل يجوز القول به فقال نقض العادة علي سبيل الكرامة لاهل الولاية جائز عند اهل السنة

இது விஷயத்தில் நியாயமான கருத்து இமாம் நஸபி றஹ்மத்துள்ளாஹி அலைஹி அவர்கள் கூறியதாகும்.

கஃபத்துல்லாஹ் வலிமார்களில் ஒருவரை ஸியாரத் செய்வதாகக் கூறப்படுகிறது; இவ்வாறு கூறப்படும் கூற்று சரியானதா என்று அவர்களிடம் கேட்கப்பட்டது.? வலிமார்களுக்கு வழக்கத்திற்கு மாற்றமான செயல் நடப்பது சாத்தியம் என்று அஹ்லுஸ் ஸுன்னத் வல் ஜமாஅத்தினர் கூறுகின்றனர் என்று பதில் கூறினார்கள்.

வலிமார்களை ஸியாரத் செய்வதற்காக கஃபத்துல்லாஹ் உலகைச் சுற்றுகிறது என்பது இதன் மூலம் தெரிய வருகின்றது.

தஃப்ஸீர் ரூஹுல் பயானில் ஸூரா முல்க் இறுதிப் பகுதியில் பின்வரும் குறிப்பு இடம் பெறுகின்றது.

قال الأمام الغزالي رحمه الله والرسول عليه السلام له الخيار في طواف العالم مع ارواح الصحابة لقد رأه كثير من الاولياء

இமாம் ஙஸ்ஸாலி ரஹ்மத்துல்லாஹி அலைஹி கூறுகின்றார்கள். ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் ஸஹாபாக்களோடு உலகம் முழுவதும் சுற்றுகின்றார்கள். இதற்கான சுதந்திரம் அவர்களுக்கு உண்டு! .அதிகமான வலிமார்கள் இதைக் கண்ணுற்றுள்ளார்கள்.

النظر في أعمال امته والاستغفار لهم من السيئات والدعاء يكشف البلاء عنهم والتردد في اقطار الأرض والبركة فيها وحضور جنازة من صالحي امته فان هذه الامور من اشغاله كما وردت بذلك الحديث والاثار

ஹாஃபிழ் அல்லாமா ஜலாலுத்தீன் ஸுயூத்தி றஹ்மத்துல்லாஹி அலைஹி கூறுகின்றார்கள்.

உம்மத்தின் அமல்களைப் பார்ப்பதும், பாவங்களுக்காக அவர்களுக்கு இஸ்திஃபார் செய்வதும், அவர்களை விட்டும் நோய்கள், வேதனைகளை நீக்கி வைப்பதும், பூமியில் பல்வேறு இடங்களுக்கும் சென்று வருவதும், அதிலே பறக்கத்தை ஏற்படுத்துவதும், அவர்களின் உம்மத்தில் ஸாலிஹான மனிதர்களின் ஜனாஸாவில் கலந்து கொள்வதும் இவை அனைத்தும் ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் வேலைகளாகும்.

இது பற்றி ஹதீஸ்களும், ஸஹாபாக்களின் கூற்றுக்களும் நிறையவே வந்துள்ளன.

*இன்தி பாஹுல் அத்கியா. பக்கம்-:7*

ஹுஜ்ஜதுல் இஸ்லாம் இமாம் ஙஸ்ஸாலி ரஹ்மதுல்லாஹி அலைஹி அல்முன்கிதும் மினல் ழலால் என்ற நூலில் கூறுகின்றார்கள்.

ومن غول الطريقة تبدئ المكاشفات والمشاهدات حتي أنهم في يقظتهم يشاهدون الملائكة وارواح الانبياء ويسمعون منهم أصواتهم ويقتبسون منهم فوائد.صفحة : ٣٢

ஆத்மீக பாதையின் ஆரம்பத்திலேயே திரை நீக்கப்படும் காட்சி (முஷாஹதாக்)களும் ஏற்படும். அப்போது அவர்கள் விழிப்பிலேயே மலக்குகளையும், நபிமார்களின் றூஹூகளையும் பார்பார்கள், அவர்களின் பேச்சுக்களைக் கேட்பார்கள். அவர்களிடமிருந்த பல பயன்களையும் அடைவார்கள்.

*அல்முன்கிதும்மினல்ழலால். பக்கம் 23.*

இமாம் ஹாஃபிழ் ஜலாலுத்தீன் ஸுயூத்தி றஹ்மத்துல்லாஹி அலைஹி கூறுகின்றார்கள்.

ان أعتقد الناس أن روحه ومثاله في وقت قراءة المولد وختم رمضان وقراءة القصائد يحضر جاز

றஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் றூஹும், அன்னாரின் பிரதிபிம்பமும் மௌலிது ஷரீஃப் ஓதும் இடங்களிலும், ரமலானில் திருக்குர்ஆன் தமாம் செய்யும் போதும், அன்னாரை பற்றிப் புகழ்ந்து பாடுகின்ற அவையிலும் சமூகம் கொடுக்கும் என்று நம்புவது ஆகுமானது (சாத்தியமானது)தான்.

*(ஜறஹுஸ்ஸுதூர்).*

அல்லாமா மௌலவி அப்துல் ஹை லக்னவி றஹ்மத்துள்ளாஹி அலைஹி அவர்கள் எழுதுகிறார்கள்.

ரஸூலுல்லாஹ்வை புகழ்ந்து பாடுகின்ற ஒருவர் ஹுக்கா குடிக்கும் பழக்கம் உடையவராக இருந்தார்; அவர் கனவில் ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களை கண்டார். நீர் மௌலிது மஜ்லிஸில் பாடும்போது அச்சபை ஜொலித்து ரம்மியமாக இருக்கிறது. குடாக் மஜ்லிஸுக்குள் வந்ததும் நாம் சபையை விட்டும் வெளியேறி விடுகின்றோம் என்று ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் கூறினார்கள்.

*(தறாவீஹுல்ஷினான் பிதஷ்ரீஹி ஹுக்மி ஜுர்பித் துகான்).*

இதிலிருந்து தெரிவது யாதெனில்,

ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் புனிதமான பார்வை எல்லா நேரத்திலும் உலகத்தின் ஒவ்வொரு அணுவிலும் பதிந்துள்ளது; தொழுகை, திருக்குர்ஆன் பாராயணம், மௌலிது ஷரீஃப் மஜ்லிஸ் நபிகளாரின் புகழ், கவி அரங்கம் உள்ளிட்ட அனைத்த இடங்களிலும், குறிப்பாக ஸாலிஹான மனிதர்களின் ஜனாஸாவிலும் றஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் சமூகம் கொடுக்கின்றார்கள் என்பதைத் தெளிவாக விளங்க முடிகின்றது.

தஃப்ஸீர் ரூஹுல் பயான் ஸூறா ஃபத்ஹில் என்ற திருவசனத்தின் விளக்கத்தில் எழுதுகின்றார்கள்.

.فإنه لما كان أول مخلوق خلقه الله كان شاهدا بما اخرج من العدم الي الوجود من الارواح والنفوس والاجرام والاركان والمعادن والنبات والحيوان والملك والجن والشيطان والانسان وغير ذلك لئلا يشذ عنه ما يمكن للمخلوق واسرار افعاله وعجائبه

றஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் முதற் படைப்பாக இருப்பதனால் தான் அல்லாஹ்வின் ஏகத்துவத்தை பற்றி சாட்சி பகர்கின்றார்கள். மேலும், இல்லாமையிலிருந்து வெளியில் வந்த ஆத்மாக்கள், நஃப்ஸிகள், சடப் பொருட்கள், உலோகங்கள், தாவரங்கள், உயிரினங்கள், மலக்குகள், மனிதன் இவை அல்லாதவையையும் பார்க்கின்றார்கள்; ஏனெனில், அல்லாஹ்வின் செயல்களின் இரகசியங்களும், விந்தைகளும் படைப்பில் தெரிந்தவை அன்னாருக்கு மறையாமல் இருப்பதற்காக வேண்டி பார்க்கின்றார்கள்.

மேலும் இதே நூலில்

فشاهد خلقه وما جري عليه من الاكرام والاخراج من الجنة بسبب المخالفة وما تاب الله عليه الي اخر ما جري الله عليه وشاهد خلق ابليس وما جري عليه.تفسير روح البيان

ஆதம் அலைஹிஸ்ஸலாம் படைக்கப்பட்டதையும், அவர்கள் கண்ணியப்படுத்த பட்டதையும், அவர்கள் தவறு செய்து சொர்க்கத்தில் இருந்து வெளியேற்றப்பட்டதையும், பின்னர், அவர்களின் தவ்பா கபூலானதையும், அவர்களின் இறுதி வரையிலான அனைத்து விஷயங்களையும் பார்த்துள்ளார்கள். மேலும், இப்லீஸ் படைக்கப்பட்டதும், அவனுக்கு நேர்ந்த கதியையும் நன்கு அறிவார்கள், அதைப் பார்த்துள்ளார்கள்.

*தப்ஸீர் றூஹுல் பயான்,*

றஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் பிறப்பதற்கு முன்பே ஒவ்வொரு நிலைகளையும் முஷாஹதாச் செய்துள் ளார்கள் என்பதை இதன் மூலம் தெரிந்து கொள்கின்றோம்.

இதே தஃப்ஸீர் றூஹுல் பயானில் சற்று மேலே சென் இதே இடத்தில் எழுதுகின்றார்கள்.

قال بعض الكبار أن مع كل سعيد رفيقه من روح النبي صلي الله عليه وسلم هي الرقيب العقيد عليه ولما قبض الروح المحمدي عن ادم الذي كان به دائما لا يضل ولا ينسي جري عليه ما جري من النسيان وما يتبعه

ஒவ்வொரு நல்ல அடியானின் றூஹுடனும் றஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் றூஹ் சேர்ந்து இருக்கின்றது. ரகீப், அதீத் என்பதன் கருத்தும் இது தான்.! றஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் றூஹ் ஆதம் அலைஹிஸ்ஸலாமுடன் இருந்தது; இது அவர்களிடமிருந்து விலகிய போது தான் அவர்களுக்கு மறதி ஏற்பட்டது; அதனால் தான் பின்னால் நடந்ததெல்லாம் ஏற்பட்டன என்று பெரிய மஹான்களான சில பெரியார்கள் கூறுகின்றனர்.

இவ்விடத்தில் ஈமான் என்பதன் பொருள் றஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் பார்வை அவனை விட்டும் விலகுவதாகும் என்று தஃப்ஸூர் றூஹுல் பயானில் கூறப் பட்டுள்ளது.

ஒரு முஃமின் நல்ல காரியத்தை றஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் பறக்கத்தினால் செய்கின்றான். அன்னாரின் அருட்பார்வை நீக்கப்பட்ட நேரத்தில்தான் குற்றம் செய் கின்றான். இதிலிருந்து றஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் "ஹாழிர்" "நாழிர்" என்பது துலாம் பரமாகி விட்டது.

இமாமுல் அஃழம் அபூஹனீஃபா ரஹ்மத்துல்லாஹி அலைஹி கஸீதத்துன் நுஃமானியாவில் பாடுகின்றார்கள்.

واذا سمعت فعنك قولا طيبا     واذا نظرت فلا اري الاكا

எதையாவது நான் கேட்டால் உங்கள் புகழையே கேட்கிறேன், நான் பார்த்தால் உங்களையன்றி எதையும் பார்ப்பதில்லை.

## பிரிவு - 4

## மறுப்பாளர்களின் நூற்களில் ஹாழிர் நாழிருக்கான ஆதாரங்கள்:

தேவ்பந்து மத்ரஸாவின் நிறுவனர் காஸிம் நானோத்தவி தஹ்தீறுன் நாஸ் பக்கம் 10ல் கூறுகின்றார்.

இந்த நபி முஃமின்களுக்கு அவர்களின் நஃப்ஸுகளை விட நெருக்கமானவர்கள் என்ற திருக்குர்ஆனின் வசனத்தின் மூலம் றஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் தனது உம்மத்திற்கு மத்தியில் அவர்களின் உயிரை விட அதிக நெருக்கமானவர்கள் ஆகும். ஏனெனில், ''அவ்லா'' என்ற சொல் அதிக நெருக்கம் என்ற பொருளைக் கொடுக்கும்.

*(தஹ்தீறுன் நாஸ், பக்கம் 10)*

மௌலவி இஸ்மாயில் திஹ்லவி ஸிறாத்துல் முஸ்தகீம் என்ற நூல் பக்கம் 13ல் நான்காவது இஷ்கின் வழிகாட்டல் என்ற பாடத்தில் எழுதுகின்றார்.

காதல் (இஷ்க்)என்பதற்கு தீச்சுவாலையை உதாரணமாகக் கூற விரும்புகின்றேன். இவ்வாறு இறை வழி நடக்கும் ஒருவரின் பூரணமான நஃப்ஸு ரஹ்மானின் ஈர்ப்பினால் அஹதிய்யத் என்னும் கடலின் அலைகளால் ஈர்க்கப்பட்டு கடலுக்குள் இழுத்துச் செல்கின்றது.

இந்த சந்தர்ப்பத்தில்தான் "அனல் ஹக்!", "மாபீ ஜுப்பத்தி ஸிவல்லாஹ்!. நானே ஹக்! எனது ஜுப்பாவில் அல்லாஹ்வை அன்றி யாரும் இல்லை! என்று கூறுகின்றனர்.

ஹதீஸ் குத்ஸியில், "எதைக் கொண்டு கேட்பானோ அந்தக் கேள்வியாகவும், எதைக்கொண்டு பார்ப்பானோ அந்தப் பார்வையாகவும், எதைக்கொண்டு விரிப்பானோ அந்தக் கரமாகவும் நான் ஆகி விடுவேன்" என்று வருவதை ஒத்துள்ளது. மற்றுமொரு அறிவிப்பில், அவன் பேசுகின்ற அவனின் நாவாக நான் ஆகுவேன் என்றும் வந்துள்ளது. மேற்கண்ட கூற்றுக்கள் இதன் வெளிப்பாடாகும்; இந்த நிலையில் வெளிப்படுவதாகும்.

*(சிறாதே முஸ்தகீம்).*

ஒரு மனிதன் அல்லாஹ்வில் தன்னுணர்வை அழித்து ஃபனா"பில்லாஹ் ஆக ஆனால், அல்லாஹ்வின் ஆற்றலினால் கேட்கின்றான், பார்க்கின்றான்,

நடக்கின்றான், பேசுகின்றான். அதாவது, உலகத்தின் ஒவ்வொரு பொருளையும் பார்க்கிறான். தூரத்திலும், அண்மையிலும் உள்ளவற்றை கைப்பற்றுகின்றான் என்பது மேற்கண்ட கூற்றிலிருந்து மிகத் தெளிவாக உறுதி செய்யப்பட்டுள்ளது. இதுதான் "ஹாழிர்" "நாழிர்" ஆகும்.

ஒரு சாதாரணமான மனிதன் அல்லாஹ்வில் தன்னை அழித்து இவ்வுயர் நிலையை அடைய முடியுமாயின், மனு ஜின்களின் தலைவரான ஸெய்யுதுல் முர்ஸலீன் றஹ்மதுன் லில் ஆலமீனான முஹம்மது முஸ்தஃபா ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் அந்தஸ்தில் உயர்ந்தவர்கள் யாராவது இருக்க முடியுமா?

இவர்களுக்கு இது முடியுமாயின், நிச்சயமாக இதை விடப் பரிபூரணமான நபிகள் கோமான் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கு நிச்சயம் முடியும்.

மௌலவி றஷீத் அஹ்மத் கொங்கோஹி கூறுகின்றார்.

ஒரு ஷெய்கின் றூஹ் ஓர் இடத்தில் கட்டுப்பட்டு இருப்பதில்லை என்பதை முரீது உறுதி கொள்ள வேண்டும். முரீது தூரத்தில் இருந்தாலும் சரி, சமீபத்தில் இருந்தாலும் சரி, உடல் தூரத்தில் இருந்தாலும், ஷைய்கிற்குத் தூரம் என்பது கிடையாது;

இந்த விடயம் உறுதியாகா விட்டால், எந்த நேரமும் ஷைய்கின் நினைவில் இருக்க வேண்டும். அப்போது அவருடனான உள்ளத்தின் தொடர்பு வெளியாகும்; எந்த நேரமும் அவர்களிலிருந்து பிரயோசனத்தை பெற்றுக் கொண்டே இருப்பார்.

இந்த விஷயம் உறுதியாகா விட்டால், எந்த நேரமும் ஷைய்கின் நினைவில் இருக்க வேண்டும். அப்போது அவருடனான உள்ளத்தின் தொடர்பு வெளியாகும்; எந்த நேரமும் அவர்களிலிருந்து பிரயோசனத்தை பெற்றுக் கொண்டே இருப்பார்.

முரீது எதார்த்தமான நிலைகளில் ஷைய்குடன் தேவை உள்ளவராகவே இருக்கின்றார். ஷைய்கை தனது மனதில் உருவகப்படுத்தி தனது நிலை என்ற நாவால் அவரிடம் கேட்டால், ஷைய்கின் றூஹ் அல்லாஹ்வின் கட்டளையின் மூலம் நிச்சயமாக கல்பில் போடும்; இதற்கு முழுமையான தொடர்பு நிபந்தனையாகும்.

ஷைய்கின் இந்தத் தொடர்பின் காரணமாக மனம் நாவு போல் ஆகிவிடும்; அல்லாஹுத்தஆலாவின் தரப்பிலான வழியும் திறந்து விடும். அல்லாஹுதஆலா அவரை இல்ஹாமுக்குரியவராக ஆக்கிவிடுவான்.

*இம்தாதுஸ்ஸுலூக், பக்கம்:. 10.*

இந்த வாக்கியத்தில் இருந்து பின்வரும் பயன்களை பட்டியல் படுத்த முடியும்.

1- ஷைய்கு முரீதுக்கு முன் ஹாழிர், நாழிர் ஆகுகின்றார்கள்.

2- முரீது ஷைய்கின் கோலத்தை எந்த நேரமும் கண்முன் நினைத்துக் கொண்டிருக்க வேண்டும்.

3- ஷைய்கு தேவைகளை நிறைவேற்றுகிறார்.

4- முரீது அல்லாஹ்வை விட்டு விட்டு ஷைய்கிடம் தேவைகளை பெறுகிறார்.

5- ஷைய்கு முரீதின் மனதில் உதவியைப் போடுகிறார்.

6- முரீதின் மனதில் இருப்பதை ஷைய்கு அறிந்து கொள்கிறார்.

ஷைய்கிடம் மேற்கண்ட ஆற்றல்கள் காணப்படுமாயின், மலக்குகள், மனிதர்களிலுள்ள ஷைய்குமார்களுக்கெல்லாம் ஷெய்கான செய்யிதுல் முர்ஸலீன் முஹம்மது முஸ்தஃபா ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களிடம் இப்பண்புகள் இருப்பதாக நம்புவது எப்படி ஷிர்க்காகும்?

இந்த வாக்கியம் மறுப்பாளர்கள் அனைவரின் தலையிலும் தண்ணீரை ஊற்றி வார்த்து விட்டது. அல்ஹம்துலில்லாஹ்! தக்வியத்துல் ஈமான் உள்ளிட்ட அவர்களின் நூல்களில் உள்ள சகலதுமே தவிடு பொடியாகி விட்டது.

மௌலவி அஷ்ரப் அலி தானவி தனது ஹிஃப்ழுல் ஈமான் என்ற நூலில் எழுதுகின்றார்.

பூமி சுருங்குவது பற்றி அபூயஸீதுல் பிஸ்தாமி றஹ்மத்துல்லாஹி அலைஹி அவர்களிடம் கேட்கப்பட்டதற்கு, இது அப்படி ஒரு பெரிய பூரணமான விஷயமல்ல! பாருங்கள்! இப்லீஸ் ஒரு வினாடியில் கிழக் கிலிருந்து மேற்கிற்கு சஞ்சாரம் செய்கின்றான்.

இக்கூற்றின் மூலம் கிழக்கிலிருந்து மேற்கிற்கு வினாடியில் கடப்பது வலிமார்களுக்கு என்ன? ஷைத்தான், காஃபிர்களுக்கும் முடியுமானதுதான்.

*ஹிப்ழுல் ஈமான். பக்கம்:8*

இது தான் ஹாழிர் நாழிரின் பொருள்! தக்வியத்துல் ஈமானின் நூலின் படி இவையெல்லாம் ஷிர்க்காகும்.

நவாப் சித்தீக் ஹசன் போபாலி வஹாபியின் "மிஸ்குல் கிதாம்" என்ற நூலில் கூறியதை ஏற்கனவே குறிப்பிட்டுள்ளோம். அதில் அவர் கூறுகின்றார்.

அத்தஹிய்யாத்தில் நபியே! உங்கள் மீது ஸலாம் உண்டாவதாகுக! என்பதன் பொருள், ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் படைப்பின் ஒவ்வொரு அணுவிலும் இருக்கின்றார்கள் என்பதாகும். இவரின் கூற்று றஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் ஹாழிர் நாழிர் என்பதை மிகத் தெளிவாகவே உறுதி செய்கின்றது.

## பிரிவு - 5

## ஹாழிர், நாழிர் பற்றிய பகுத்தறிவு விளக்கம்.

றஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் அனைத்து பரிபூரணங்களையும் தன்னகத்தே கொண்டவர்கள் என்பதில் யாருக்கும் இரண்டாம் கருத்துக் கிடையாது.

அதாவது, ஏனைய நபிமார்களிடத்திலும், எதிர்காலத்தில் வர இருக்கின்ற வலிமார்களிடத்திலும், பிற படைப்புக்களிடத்திலும் காணப்பட்ட பூரணமான பண்புகளை விட, அதிகமான பண்புகளை றஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்ல மவர்களுக்கு அல்லாஹ்வால் வழங்கப் பட்டுள்ளன.

பூரணமான பண்புகள் சிறப்புக்கள் யாவும் ஏனையவர்களுக்கு றஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் மூலமாகவே கிடைத்தன.

அல்லாஹுத்தஆலா கூறுகின்றான்.

فَبِهُدٰهُمُ اقْتَدِهْ

*நபியே! நீரும் (நபிமார்)களின் வழியை பின்பற்றுவீராக!:*

*(அல் குர்ஆன்: 6:91)*

தஃப்ஸீர் ரூஹுல் பயானில் பின் வருமாறு விளக்கம் எழுதப்பட்டுள்ளது.

فجمع الله كل خصلة في حبيبه صلي الله عليه وسلم

ஒவ்வொரு நபிமார்களிடமும் காணப்பட்ட நற்பண்புகள் அனைத்தையும் றஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கு மொத்தமாக அல்லாஹுத் தஆலா வழங்கியுள்ளான். மௌலானா ஜாமி ரஹ்மதுல்லாஹி அலைஹி பாரசீகக் கவிதையில் கூறுகின்றார்கள்.

ஹளறத் யூஸுஃபின் பேரழகும், ஹளறத் ஈஸாவின் அற்புதமும், ஹளறத் மூஸாவின் ஒளிரும் கரமுடைய அற்புதமும் மற்றும் சகல சிறப்புக்களும் சேர்ந்து நபிகளாரில் தனியாகத் திரண்டிருந்தன. அலைஹி முஸ்ஸலாத்து வஸ்ஸலாம்.

மௌலவி காஸிம் நானோத்தவி கூறுகின்றார்.

ஏனைய நபிமார்கள் றஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களிடமிருந்து சகலதையும் பெற்றுத்தான் அவர்களின் உம்மத்துக்களிடம் சேர்த்து வைக்கின்றார்கள்;

அதனால், நபிமார்கள் அனைவரும் பெருமானார் றஸூலே அக்ரம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களைச் சார்ந்து நிற்பவர்களாகும். நபிமார்களிடம் காணப்படுவதெல்லாம் றஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் நிழல் பிரதிம்பம் தான்!.

*தஹ்தீறுன் நாஸ் பக்கம் 49.*

சகல நபிமார்களும் றஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்ல மவர்களிடமிருந்துதான் சகலதையும் பெறுகின்றார்கள் என்ற கோட்பாட்டுக்கு ஏராளமான ஆதாரங்களை திருக்குர்ஆனிலிருந்தும், ஹதீதுகளிலிருந்தும், அறிஞர்களின் கூற்றுக்களிலிருந்தும் முன்வைக்க முடியும்.!

ஆனால், இவை யாவற்றையும் மறுப்பாளர்களான தேவ்பந்திகளும் ஏற்றுக் கொள்கின்றனர்.அதனால், இதற்கு அதிகளவு முக்கியத்துவம் கொடுக்க தேவையில்லை. ஆயினும் சில கோட்பாடுகளை அடியிற்

தருகின்றோம்.

**கோட்பாடு: -01**

படைப்புகளிடமிருக்கும் நற்பண்புகள் அனைத்தையும் விட அதிகமான, பூரணமான நற்பண்புகள் றஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களிடம் காணப்படுகின்றன என்று எல்லோரும் ஏற்றுக் கொண்டது உண்மையாகும்.

எல்லா இடங்களிலும் ஹாழிர் நாழிர் ஆவது படைப்பில் பலருக்கு வழங்கப்பட்டுள்ளன. அதனால், இப்பண்பு றஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கும் வழங்கப்பட்டுள்ளது என்பதை ஏற்றே ஆகவேண்டும். படைப்பில் யார் யாருக்கு ஹாழிர் நாழிர் பண்பு வழங்கப் பட்டுள்ளதென்பதை இதன் முன்னுரையில் கோடிட்டுக் காட்டி உள்ளோம்.

ஹாழிர் நாழிர் என்பதில் மூன்று பொருள்கள் உள்ளன.

1- ஒரிடத்திலிருந்து கொண்டே அனைத்து உலகத்தையும் உள்ளங் கையில் பார்ப்பது போன்று பார்ப்பது.

2- ஒரே நேரத்தில் உலகத்தைச் சுற்றி வருவது, அபயம் தேடுவோருக்கு உதவி செய்வது.

3- ஒருடலுடன் அல்லது மாதிரி உடலுடன் பலவிடங்களில் தரிசனம் வழங்குதல்,

இப்பண்பு அதிகமானவர்களுக்கு வழங்கப்பட்டுள்ளன.

حَتّٰٓى اِذَا جَآءَ اَحَدَكُمُ الْمَوْتُ تَوَفَّتْهُ رُسُلُنَا وَهُمْ لَا يُفَرِّطُوْنَ

***இறுதியில் உங்களில் ஒருவருக்கு மரணம் வந்துவிட்டால், நம்முடைய***

*(மலக்குகளான)தூதர்கள் அவரை மரிக்கச் செய்கின்றனர். அவர்கள் (தங்களின் கடமையில்) எக்குறையும் செய்ய மாட்டார்கள்.*

*(அல் குர்ஆன்: 6:61)*

மேற் கண்ட திருவசனத்தின் விளக்கத்தில் பின்வருமாறு தஃப்ஸீர்களில் பதியப்பட்டுள்ளன.

جعلت الارض لملك الموت مثل الطشت يتناول من حيث شاء. تفسير روح البيان ،خازن

மலக்குல் மௌத் அவர்களுக்கு உலகமனைத்தும் ஒரு பாத்திரம் போல் அல்லாஹுத்தஆலா ஆக்கி கொடுத்துள்ளான்; அவர்கள் விரும்பியபடி அதில் எடுத்துக் கொள்வார்கள்.

*தஃப்ஸீர் றூஹுல் பயான், காஸின், கபீர*

ليس علي ملك الموت صعوبة في قبض الارواح وان كثرت وكانت في امكنة متعدة .تفسير روح البيان

றூஹுகளைக் கைப்பற்றுவதில் மலக்குல் மௌத்திற்கு எவ்வித கஷ்டமும் கிடையாது! அதிகமான றூஹுகளாக இருந்தாலும் சரி! பலதரப்பட்ட இடங்களாக இருந்தாலும் சரி!

*தஃப்ஸீர்: றூஹுல் பயான்.*

ما من اهل بيت شعر ولا مدر الا ملك الموت يطيف بهم يوما مرتين

கூடாரத்திலும், வீடுகளிலும் வாழ்கின்ற மக்களுக்குப் மத்தியில் மலக்குல் மௌத் தினமும் இருமுறை வராமல் இருப்பதில்லை,

*தஃப்ஸீர் காஸின்.*

பாங்கு சொல்லும் போது ஷைத்தான் மூன்று மைல் தூரம் ஓடி விடுகின்றான்;

பாங்கு முடிந்ததும் பின்னர் அதே இடத்திற்கு வருகின்றான்.

*(மிஷ்காத்).*

நெருப்பால் படைக்கப்பட்டவனின் வேகம் இது!

நாம் தூங்கும் போது நமது றூஹ் உடம்பிலிருந்து புறப்பட்டு உலகத்தில் சஞ்சரிக்கின்றது. றூஹ் உலகில் சுற்றித் திரிவதற்கான ஆதாரம் திருக்குர்ஆனிலிருக்கின்றது.

அல்லாஹுத்தஆலா கூறுகின்றான்.

اَللّٰهُ يَتَوَفَّى الْاَنْفُسَ حِيْنَ مَوْتِهَا وَالَّتِيْ لَمْ تَمُتْ فِيْ مَنَامِهَا فَيُمْسِكُ الَّتِيْ قَضٰى عَلَيْهَا الْمَوْتَ وَ يُرْسِلُ الْاُخْرٰٓى اِلٰٓى اَجَلٍ مُّسَمًّى ؕ اِنَّ فِيْ ذٰلِكَ لَاٰيٰتٍ لِّقَوْمٍ يَّتَفَكَّرُوْنَ

***உயிர்களை அவை மரணிக்கின்ற நேரத்திலும், இன்னும் மரணிக்காமல் இருப்பவற்றை அவற்றின் தூக்கத்திலும் அல்லாஹ் (தான்) கைப்பற்றுகிறான்; (அவ்வாறு தூக்கத்தில் கைப்பற்றிய உயிர்களில்) எவற்றின் மீது மரணத்தை அவன் விதியாக்கினானோ, அவற்றை தன்னிடமே தடுத்து நிறுத்திக் கொள்கிறான். மற்றவரை குறிப்பிட்ட தவணை வரை உலகில் வாழ்வதற்கு அவன் அனுப்பி விடுகின்றான். நிச்சயமாக இதில் சிந்திக்கின்ற கூட்டத்தினருக்கு உறுதியான பல அத்தாட்சிகள் இருக்கின்றன.***

*(அல் குர்ஆன்: 39:42).*

உலகத்தில் எக்கோடியிலாவது, ஒருவர் தூங்கி விழித்தால், அவரின் றூஹ் மக்காவிலிருந்தாலும் சரி, அதே விநாடியில் விரைந்து வந்து உடலுக்குள் புகுந்து விடும். அதன் பின்புதான் மனிதன் விழித்துக் கொள்வான்.

அல்லாஹுத்த ஆலா கூறுகின்றான்.

وَهُوَ الَّذِىْ يَتَوَفّٰٮكُمْ بِالَّيْلِ

***இன்னும் அவன் எத்தகையோன் என்றால், இரவில் உங்களை (நித்திரையில்) மவ்தானவர்களைப் போலாக்கிறான்.***

*அல்குர்ஆன்: (6:60 )*

فاذا انتبه من النوم عادت الروح الي جسد باسرع من لحظة .تفسير روح البيان

மனிதன் தூக்கத்திலிருந்து விழித்தெழுந்ததும் றூஹ் ஒரு விநாடியில் விரைவாக வந்து உடலுடன் சேர்ந்து விடுகின்றது.

எமது பார்வை ஒரு விநாடியில் விண்ணைப் பார்த்து விட்டு பூமிக்குத் திரும்புகின்றது; எமது கற்பனை ஒரு விநாடியில் உலகைச் சுற்றி வருகின்றது; மின்சாரம், தொலைபேசி, வானொலி உள்ளிட்ட கருவிகளுக்கு அரை விநாடியில் உலகைச் சுற்றி வரக்கூடிய ஆற்றல் இருக்கிறது.

ஹளரத் யூஃஸுப் அலைஹிஸ்ஸலாம் அவர்களை அவர்களின் சகோதரர்கள் கிணற்றில் வீசிய போது, யூஃஸுப் அலைஹிஸ்ஸலாம் கிணற்றின் அரைவாசிக்குள் செல்வதற்குள் ஸித்றத்துல் முன்தஹாவிலிருந்த ஜிப்ரீல் அலைஹிஸ்ஸலாம் உடன் விரைந்து வந்து அவர்களை பாதுகாத்தார்கள்; அதாவது, யூசஃஸுப் நபியவர்கள் கிணற்றின் அடிக்கு செல்ல முன், ஜிப்ரீல் அலைஹிஸ்ஸலாம் விரைந்து வந்துள்ளார்கள்.

அல்லாஹுத்தஆலா கூறுகிறான்.

وَاَجْمَعُوْٓا اَنْ يَّجْعَلُوْهُ فِىْ غَيٰبَتِ الْجُبِّ

***(இவ்வாறு) அவரை அழைத்துச் சென்று இருண்ட பாழுங் கிணத்தில் அவரை தள்ளி விட ஒன்று சேர்ந்து முடிவு செய்தபோது.***

*(அல் குர்ஆன்: 12:15).*

என்ற திருமறை வசனத்தின் விளக்கத்தில் தஃப்ஸீர் ரூஹுல் பயானில் இவ்வாறு வரையப்பட்டுள்ளது.

கலீலுல்லாஹ் நபி இப்ராஹீம் அலைஹிஸ்ஸலாம் அவர்கள் இஸ்மாயீல் அலைஹிஸ்ஸலாம் அவர்களை அறுப்பதற்கு கழுத்தில் கத்தியை வைத்து அறுத்தார்கள்; கத்தி அறுக்கவில்லை, உடனே, ஹளறத் ஜிப்ரீல் அலைஹிஸ் ஸலாம் ஸித்ரத்துல் முன்தஹாவிலிருந்து ஒரு செம்மறி ஆட்டை கொண்டு வந்து, கலீலுல்லாஹ்வுக்கு முன்னால் நிறுத்தினார்கள்.

*தஃப்ஸீர் : றூஹுல் பயான்.*

நபி ஸுலைமான் அலைஹிஸ்ஸலாம் அவர்களின் அமைச்சராக இருந்த ஆசிஃப் இப்னு பர்கியா என்பவர் ஒரு நொடியில் எமனிலிருந்த பல்கீஸின் சிம்மாசனத்தை ஷாமிலிருந்த ஸுலைமான் அலைஹிஸ்ஸலாம் அவர்கள் முன் கொண்டு வந்து வைத்தார்கள்.

இது பற்றி திருக்குர்ஆன் பின்வருமாறு கூறுகின்றது.

قَالَ الَّذِىْ عِنْدَهٗ عِلْمٌ مِّنَ الْكِتٰبِ اَنَا اٰتِيْكَ بِهٖ قَبْلَ اَنْ يَّرْتَدَّ اِلَيْكَ طَرْفُكَ ؕ فَلَمَّا رَاٰهُ مُسْتَقِرًّا عِنْدَهٗ قَالَ هٰذَا مِنْ فَضْلِ رَبِّىْ

***வேதத்தின் ஞானத்தை தன்னிடம் கொண்டிருந்த ஒருவர் "உங்களுடைய பார்வை உங்கள் பக்கம் திரும்புவதற்கு முன் (கண்மூடித் திறப்பதற்கு முன்) (அச்சிம்மாசனத்தை) நான் உங்களிடம் கொண்டு வருகிறேன் என்று கூறினார்- எனவே தம்மிடம் அது முன்னால் இருப்பதை அவர்கள் கண்ட போதும் "இது என தரப்பின் கருணையிலுள்ளதாகும் (என்றார்).***

*(அல் குர்ஆன்: 27:40).*

ஆஸிஃப் இப்னு பர்கிய்யாவுக்கு எமனில் பல்கீஸின் சிம்மாசனம் எங்கிருக்கிறது என்பது நன்கு தெரியும், யாருக்கும் தெரியாமல் அவர் இரகசியமாக அங்கு சென்றார். பிரமாண்டமான அதிகாரமிக்க சிம்மாசனத்தை தாங்கி நொடியில் எப்படி வந்தார் என்பதைப் பற்றி நன்கு சிந்திக்க வேண்டும்?

நபி ஸுலைமான் அலைஹிஸ்ஸலாம் அவர்களுக்கு இதைக் கொண்டு வரும் ஆற்றல் இருந்ததா? என்ற விளக்கத்தை வேறு ஓரிடத்தில் இன்ஷா அல்லாஹ் எழுதுவோம்.

மிஃராஜ் இரவில் அனைத்து நபிமார்களும் பைத்துல் முகத்தஸில் ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கு

பின்னால் தொழுதார்கள்; பின்னர் மின்னல் வேகம் கொண்ட புறாக்கில் ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் விண்ணுலகம் சென்றார்கள்; ஆனால், இதற்கு முன்பே நபிமார்கள் விண்ணகம் சென்று விட்டனர்.

நபிமார்களை இன்னின்ன வானங்களில் சந்தித்தேன் என்று ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்கள் கூறியுள்ளார்கள் இதிலிருந்து தெரிவது என்ன?

புராக்கின் வேகம் குறைவு! மணமகன் குதிரையில் சவாரி செய்தாலும் குதிரையின் வேகம் குறைவு தான்.! ஆனால், நபிமார்கள் பைத்துல் முகத்தஸிலிருந்து பிரிந்த மறுவினாடி விண்ணகம் சென்று தங்கிவிட்டார்கள்.

அப்துல் ஹக் முஹத்திதுத் திஹ்லவி ரஹ்மத்துல்லாஹி அலைஹி எழுதுகின்றார்கள்:

ஒவ்வொரு வியாழனிலும் (வெள்ளி இரவில்) மரணித்தவர்களின் றூஹுகள் தனது நண்பர்கள், உறவினர்களின் வீடுகளுக்குச் சென்று தனக்கு நன்மைகளைச் சேர்த்து வைக்குமாறு மேலெண்ணத்தோடு எதிர்பார்க்கின்றன;

மய்யித்தின் உறவினர்களும், நண்பர்களும் வேறு நாடுகளில் இருந்தாலும் அங்கு செல்கின்றன.

*அஜிஃஅத்துல் லம்ஆத்: மிஷ்க்காத் விரிவுரை,*

*பாடம் : ஸியாறத்துல் குபூர்.*

உலகம் அனைத்திலும் பார்வையைச் செலுத்துவதும், அனைத்து இடங்களுக்கும் சென்று வருவதும், சுற்றுவதும், ஒரே நேரத்தில் பல இடங்களில் காண்பதும் அடியார்களுக்கு அல்லாஹ் வழங்கிய சிறப்புப் பண்புகளாகும் என்பதை நமது மேற்கண்ட விளக்கத்திலிருந்து விளங்க முடிகிறது.

இதில் இரண்டு விஷயங்கள் உறுதியாகின்றன.

1) ஏதாவது ஓர் அடியான் எல்லா இடங்களிலும் ஹாழிர், நாழிறாக இருக்கிறார் என்று நம்புவது ஷிர்க் அல்ல! ஷிர்க் என்பது, அல்லாஹ்வின் தாத்திலும், அவனது பண்புகளிலும் மற்றொருவரை சமனாகுக்குவதைக்

குறிக்கும், இங்கு அது நடக்கவில்லையே!

2)அல்லாஹ்வின் ஊழியர்களுக்கு எல்லா இடங்களிலும் இருப்பதற்கான ஆற்றல் உண்டு.! ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கு சகலரை விடவும் சிறப்பாகவும், அதிகமாகவும் இந்த ஆற்றல் இருக்கின்றது.

## கோட்பாடு: 02

உலகத்தில் தண்ணீரும், தானியமும் எல்லா இடங்களிலும் கிடையாது! குறிப்பான இடங்களில் மட்டுமே உண்டு! தண்ணீர் கிணற்றில், குளத்தில், நதியில், ஏரியில் இதுவல்லாத இடங்களிலும் இருக்கின்றன;

தானியங்கள் வயல்களில், வீடுகளில் இருக்கின்றன, காற்றும், வெளிச்சமும் உலகத்தின் அனைத்து மூலை முடுக்குகளிலும் இருக்கின்றன.

விஞ்ஞானத்தில்எதுவுமில்லாத வெளி என்பது கிடையாது! எல்லா இடங்களிலும் காற்றுண்டு! இதனால் தான் காற்றுக்கும், வெளிச்சத்திற்கும் எல்லா நேரங்களிலும் எல்லா பொருளிலும் தேவை அவசியப்படுகிறது!

அல்லாஹ்வின் நேசரான ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் தேவை அல்லாஹ்வின் படைப்பில் அனைவருக்கும் அவசியமாக இருக்கிறது; இது தொடர்பான விளக்கத்தை தஃப்ஸீர் ரூஹுல் பயான் மேற்கோளுடன் ஏற்கனவே முன்வைத்துள்ளோம்.

அதனால், றஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் எல்லா இடங்களிலும் இருக்கிறார்கள்.

## கோட்பாடு-: 03

றஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் பிரபஞ் சத்திற்கு அடிப்படை மூலமானவர்களாக விளங்குகிறார்கள்; "அனைத்தும் எனது ஒளியில் இருந்து வந்தது" என்று றஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களே கூறியிருக்கிறார்கள். அடிப்படையில் அதாவது, வேரின் மூலமாகிறது கிளைகளில் வியாபித்திருப்பது அவசியமாகும்.

# *பாடம்: 2*
# *குற்றச்சாட்டுகளும் பதில்களும்.*

**குற்றச்சாட்டு:** 01

எல்லாவிடத்திலும் ஹாழிர், நாழிறாக இருப்பது அல்லாஹ்வின் பண்பாகும். அல்லாஹுத் தஆலா கூறுகின்றான்.

وَاَنْتَ عَلٰى كُلِّ شَىْءٍ شَهِيْدٌ

***நீயே எல்லா பொருட்களின் மீதும் சாட்சியாளராக இருக்கின்றாய்.***

*அல் குர்ஆன்: (05:117).*

وَكَانَ اللّٰهُ بِكُلِّ شَىْءٍ مُّحِيْطًا

***அல்லாஹ் எல்லா பொருட்களையும் சூழ்ந்து அறிந்தவனாக இருக்கின்றான்.***

*அல் குர்ஆன்: (04 : 126).*

அதனால், அல்லாஹ்வுக்குரிய இந்த பண்பை மற்றவர்களுக்கு இருப்பதாக நம்புவது ஷிர்காகும்.

**பதில்:**

எல்லா இடத்திலும் அல்லாஹுத்தஆலா ஹாழிர், நாழிராக இருப்பது நிச்சயமாக அல்லாஹ்வின் பண்பல்ல! அல்லாஹுத் தஆலா இடத்தை விட்டும் பரிசுத்தமானவன் என்று தெளிவாகவே அகீதா நூற்களில் எழுதப்பட்டுள்ளது.

لا يجري عليه زمان ولا يشتمل عليه مكان

அல்லாஹ் மீது காலம் கடக்கவுமில்லை, இடம் அவனை நிறைக்கவு மில்லை,

காலம் என்பது கீழ் உலகமான பூமியில் தான் இருக்கிறது; வயதுக் கணிப்பு இங்கு வாழ்கின்றவர்களுக்குத் தான் உண்டு!

சூரியன், சந்திரன், ஹூருல் ஈன்கள், வில்தான் (சொர்க்கத்தின் இளவல்)கள், மலக்குகள், வானத்தில் இருக்கும் ஈஸா அலைஹிஸ்ஸலாம் மிஃறாஜ் நடக்கும் போது ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் உள்ளிட்டவர்களுக்கு காலம் கிடையாது. அல்லாஹுத்தஆலாவுக்கு இடம் இல்லை; இடம் அவனைச் சூழவுமில்லை; இடமில்லாமல் ஹாழிறாக இருக்கிறான், இதனால் தான்,

ثُمَّ اسْتَوٰى عَلَى الْعَرْشِ

***பின்னர், அர்ஷின் மீது அவன் நிலையானான்.***

*அல் குர்ஆன்: (07:54).*

என்ற திருவசனத்தை நேர் பொருள் பொருந்தாத முதஷாபிஹத்தான திருவசனமாக கணிக்கப்படுகிறது.

மேற்கண்ட திருவசனத்தில் அறிஞர்கள் علما وقدرة அறிவாலும், ஆற்றலாலும் சூழ்ந்துள்ளான் என்று விளக்கம் எழுதியுள்ளார்கள். அல்லாஹுத்தஆலா எல்லாவிடத்திலும் நிறைந்தவன் என்று நம்புவது மார்க்க மற்றவர்களின் வாதமாகும்.

எல்லா இடத்திலும் இருப்பது அல்லாஹ்வின் திருத்தூதரின் பண்பாகும்! இப்பண்பு அல்லாஹ்வால் அன்னாருக்கு வழங்கப்பட்டுள்ளது. படைப்பு, படைத்தவனின் கட்டுப்பாட்டில் இருக்கும்; அல்லாஹ்வின் பண்பு பூர்வீகமானது, சுயமானது, படைக்கப்படாதது, எவருடைய கட்டுப்பாட்டிலும் இல்லாதது, இவ்வளவு வித்தியாசங்கள் இருக்கையில், எப்படி ஷிர்க் வரும்?

ரஷீத் அஹ்மது கொங்கோஹி எழுதுகிறார்,

மௌலிது சபைகளில் றஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் தரிசனம் வழங்குவது கூட ஆதாரமற்றது தான் ஆனால்,

அல்லாஹுத்தஆலா அறிவித்துக் கொடுத்து அறிகிறார்கள் என்று நம்பினால், ஷிர்கு இல்லை! இதற்கு மாற்றமாக நம்பினால் தான் ஷிர்க் வரும்.

*பதாவா றஜீதிய்யா, பாகம் -1, பக்கம் : 91.*

இதே விளக்கம் கலீல் அஹமது அம்பேட்டியின் பறாஹீனே காதிஆவில் பக்கம் 23 ல் இடம் பெற்றுள்ளது.

அல்லாஹ் அல்லாதவர்களுக்கு அல்லாஹுத்தஆலா வழங்கிய சக்தியைக் கொண்டு எல்லா இடத்திலும் ஹாழிர், நாழிராக இருப்பது ஷிர்கு அல்ல! என்று ரஷீத் அஹ்மத் கங்கோஹி ரிஜிஸ்டர் செய்து அறுதியிட்டுக் கூறியுள்ளார்.

அல்லாஹ்வின் பண்புகளில் நான்கு பண்புகள் யாருக்கும் வழங்கப் படமாட்டாது! அவற்றில் "உலூஹிய்யத்" என்ற தெய்வீகத்தின் சாயல் உண்டு.!

1- வாஜிபுல் வுஜூத்

2- கிதம் قدم பூர்வீகம்

3- படைத்தல் - خلق

4- மரணிக்காமல் எப்போதுமிருத்தல்.

இது தவிர்ந்த அல்லாஹ்வின் பண்புகள் படைப்பில் தஜல்லியாகும்; உதாரணமாக, பார்த்தல், கேட்டல், உயிர் உள்ளவனாக இருத்தல் மற்றும் இவை அல்லாதவை இவற்றில் பாரிய வேறுபாடு இருக்கின்றன; அல்லாஹ்வின் படைப்பின் பண்புகள் படைக்கப்பட்டவை, அல்லாஹ்வின் பண்புகள் நித்தியமானவை, வாஜிபானவை, பூர்வீகமானவை!

**குற்றச்சாட்டு: 02**

அல்லாஹுத்தஆலா கூறுகிறான்.

وَمَا كُنْتَ لَدَيْهِمْ اِذْ يُلْقُوْنَ اَقْلَامَهُمْ اَيُّهُمْ يَكْفُلُ مَرْيَمَ

***மேலும், அவர்களில் யார் மரியமுக்கு பொறுப்பேற்றுக் கொள்வது என்று (தெரிந்துகொள்ள) அவர்கள் தம் எழுது கோல்களை எறிந்த பொழுது நீர் அவர்களிடத்தில் இருக்கவில்லை.***

*அல் குர்ஆன்: (3:44)*

وَمَا كُنْتَ لَدَيْهِمْ اِذْ اَجْمَعُوْا اَمْرَهُمْ وَهُمْ يَمْكُرُوْنَ

***(யூஃஸுப் உடைய சகோதரர்களான) அவர்கள் சூழ்ச்சி செய்பவர்களாக தம் காரியத்தில் அவர்கள் ஒன்று சேர்ந்தபோது, நீர் அவர்களிடத்தில் இருக்கவில்லை.***

*அல் குர்ஆன்: (12: 102).*

وَمَا كُنْتَ بِجَانِبِ الطُّوْرِ اِذْ نَادَيْنَا

***(மூஸாவை) நாம் அழைத்த நேரத்தில் தூர் ஸீனாய் மலையின் அருகில் நீர் இருக்கவில்லை.***

*(அல் குர்ஆன்: 28:46).*

கடந்த காலங்களில் மேற்கண்ட நிகழ்வுகள் நடக்கும் போது ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்கள் அப்போது அங்கு இருக்கவில்லை என்பது மிகத் தெளிவாகத் தெரிகிறது! அதனால், நபியவர்கள் எல்லா இடங்களிலும் ஹாழிர், நாழிர் என்பது கிடையாது!

**பதில்:**

மறுப்பாளர்களுக்கு ஹாழிர், நாழிர் என்பதற்கான பொருள் புரியாததனால்தான் இந்த குற்றச்சாட்டு எழுந்துள்ளது. ஆரம்பத்திலேயே ஹாழிர், நாழிர் என்பதற்கு மூன்று விளக்கங்களைக் கூறியுள்ளோம்.

1) ஓர் இடத்தில் இருந்து கொண்டு அகிலம் அனைத்தையும் பார்ப்பது.

2) ஒரே நேரத்தில் அகிலம் அனைத்தையும் சுற்றி வருவது,

3) ஒரே நேரத்தில் பல இடங்களில் இருப்பது.

மேற்கண்ட திருவசனங்களில் அந்த இடத்தில் வெளிப்படையான உடலுடன் ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் இருக்கவில்லை என்பதைக் கூறுகிறதே தவிர, அந்த விடயங்கள்

அவர்களுக்குத் தெரியாது என்பதை கூறவில்லை; வெளிப்படையான கோலத்தில் அங்கு இருப்பதுவேறு! அந்த நிகழ்வுகளைப் பார்ப்பது வேறு!

மேற்கண்ட திருவசனங்களின் பொருள் இதுதான்!

நீங்கள் வெளிப்படையான உடலுடன் அங்கு இருக்கவில்லை; அப்படி இருந்தும், இந்த நிகழ்வுகளைப் பற்றிய அறிவும், காட்சியும் உங்களுக்கு உண்டு!

இதிலிருந்து நீங்கள் உண்மையான நபி என்பது தெரியவருகின்றது. மேற்படி திருவசனங்கள் ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் ஹாழிர், நாழிர், என்பதை உறுதிப்படுத்துகின்றது.

தஃப்ஸீர் ஸாவியில் பின் வருமாறு விளக்கம் எழுதப்பட்டுள்ளது.

وهذا بالنظر الي العالم الجسماني لاقامة الحجة علي الخصم واما بالنظر الي العالم الروحاني فهو حاضر رسالة كل رسول وما وقع من لدن ادم الي ان ظهر بجسمه الشريف

மூஸா அலைஹிஸ்ஸலாம் தூர் சீனாய் மலையில் இருக்கும்போது இந்த நிகழ்வு நடக்கையில் ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் உடலுடன் அங்கு இருக்கவில்லை, ஆத்மீக நிலையில் அனைத்து நபிமார்களின் றிஸாலாத்தும், இன்னும் ஆதம் அலைஹிஸ்ஸலாம் தொடக்கம் ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் புனித உடலுடன் அவர்கள் வெளியாகும் வரையிலான அனைத்து நிகழ்வுகளும் அவர்களுக்குத் தெரியும்! அவை அனைத்திலும் அன்னார் ஹாழிராகும்.

*(தஃப்ஸீர் ஸாவி).*

ஹிஜ்ரத்தின் போது தௌர் கூறுகையில் ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமும், அன்னாரின் உற்ற தோழர் அபூபக்கர் சித்தீக் ரழியல்லாஹு தஆலாஅன்ஹுவும் கூடவே இருந்தார்கள்;

அவர்களுக்கு முன் காஃபிர்கள் வந்து விட்டதை அறிந்த அபூபக்கர் சித்தீக் ரழியல்லாஹு அன்ஹு பதட்டம் அடைந்தார்கள்; அபூபக்கர் சித்தீக் ரலியல்லாஹு அவர்களை பார்த்து لا تحزن ان الله معن கவலைப்பட வேண்டாம்.! அல்லாஹ் எம்முடன் தான் இருக்கிறான் என்று ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் கூறினார்கள்;

உஹது யுத்தத்தை முடித்து விட்டு காஃபிர்களை பார்த்து கூறினார்கள்

الله مولنا ولا مولا لكم

அல்லாஹ் எங்களது எஜமான், உங்களுக்கு எஜமானாக இல்லை!

அல்லாஹ்வின் ஆட்சி அரசாங்கம் முஸ்லிம்களோடு மட்டுமே இருக்கிறது! காஃபிர்களோடு இல்லை என்று இதன் மூலம் தெரிய வருகிறது! மேற்கண்ட இரு பேச்சுக்களுக்கும் இவ்வாறு தான் கருத்துக் கூற வேண்டும்.

முதற் கூற்றுக்கான கருத்தின்படி, அல்லாஹ் இரக்கம், கருணையின் மூலம் உங்களுடன் இருக்கிறான்; கடுகடுப்பு அடக்கி ஆளுதல் என்ற விதத்தில் காஃபிர்களுடன் இருக்கிறான்;

இரண்டாவது கூற்றுக்கான கருத்தின் நோக்கம், உதவி செய்யும் அதிகாரி என்பது எமக்கும், உங்களுக்கும் தான்.! ஆனாலும், உதவி செய்வதும், இரக்கமாக இருப்பதும் எமக்கு மட்டும் தான்! உங்களுக்கல்ல!

இதே விதத்தில் இந்த திருவசனங்களையும் கூற முடியும், சடத்துவ உடலுடன் அங்கு நீங்கள் இருக்கவில்லை! ஆத்மீக நிலையில் இருந்தீர்கள்..

**குற்றச்சாட்டு: 03**

وَمِنْ أَهْلِ الْمَدِينَةِ مَرَدُوا عَلَى النِّفَاقِ لَا تَعْلَمُهُمْ نَحْنُ نَعْلَمُهُمْ

***மதீனாவாசிகளில் முனாஃபிக்குகளில் சிலரும் நயவஞ்சகத்தின் மீது நிலைத்து விட்டனர். அவரை நீர் அறிய மாட்டீர், நாம் அவர்களை அறிவோம்.***

*அல் குர்ஆன்: (9: 101).*

மேற் கண்ட வசனத்தின் படி ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் எல்லாவிடங்களிலும் இல்லை, எல்லா இடங்களிலும் அவர்கள் தரிசனமாக இருந்தால், முனாஃபிக்குகளின் அந்தரங்க ரகசியங்களை தெரிந்து இருப்பார்கள்; உண்மையில் நபியவர்களுக்கு அவர்களின் நிலைகளைப் பற்றி எதுவும் தெரியாது!

**பதில்:**

இதற்கான தெளிவான பதிலை "இல்முல் கைபு" பற்றிய பகுதியில் ஏற்கனவே இதே திருவசனத்தின் விளக்கத்தில் விரிவாகக் கூறியுள்ளோம்.

**குற்றச்சாட்டு : 04**

ஸஹீஹுல் புகாரி ஷரீஃஃபில் தஃஃப்ஸீர் பற்றிய அத்தியாயத்தில் பின் வரும் ஹதீஸ் இடம் பெற்றுள்ளது,

அப்துல்லாஹ் இப்னு உபை (முனாபிக்குகளின் தலைவன்) முஸ்லிம் களுக்கு பணம் எதுவும் கொடுக்கக்கூடாது என்று கூறுகிறான் என்று செய்து இப்னு அர்க்கம் றழியல்லாஹு அன்ஹு றஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களிடத்தில் முறையிட்டார்கள்;

பின்னர், அப்துல்லாஹ் பின் உபை பெருமானார் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் திருச்சபைக்கு வந்து, நான் அப்படி கூற வில்லை என்று பொய் சத்தியம் செய்தான்; ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் அவனை உண்மை படுத்தி, என்னை பொய்ப்பித்தார்கள்;

உண்மையில் ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்ல மவர்கள் ஹாழிர், நாழிறாக இருந்திருந்தால், இப்னு உபை கூறிய பொய் சத்தியத்தை ஏன் உண்மை படுத்தினார்கள்? இந்த கட்டத்தில்தான் மேற்கண்ட திருவசனம் இறங்கி ஸைது இப்னு அர்க்கம் ரலியல்லாஹு தஆலாவை உண்மைப் படுத்தியது.

**பதில்:**

அப்துல்லாஹ் இப்னு உபை ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்கள் உண்மைப்படுத்தியதால், எதார்த்தமான அந்த விடயம் தெரியாது என்று ஒரு போதும் ஆகாது!

ஷரீஅத்தில் ஒரு வழக்கு முன்வைக்கப்பட்டால், அதற்கான வாதத்தை முன்வைக்க வேண்டியது விதி! ஆதாரத்தை வாதியால் முன்வைக்க முடியாத போது, பிரதிவாதியால் சத்தியத்தை முன்வைக்கப்பட்டால்,

பிரதிவாதியின் சத்தியத்தின் மூலம் வழக்கு பிரதிவாதிக்கு சாதகமாக தீர்ப்பு அளிக்கப்படும்; ஏனெனில்,

நீதிபதியின் தீர்ப்பு வாதியின் சாட்சியத்தின் அடிப்படையிலும், பிரதி வாதியின் சத்தியத்தின் அடிப்படையிலுமே அமையும்.!

நீதிபதியின் சுய அறிவை வைத்து தீர்ப்பு அளிப்பதில்லை; இவ்வழக்கில் ஸைது றழியல்லாஹு அன்ஹு வாதியாவார்கள்; இப்னு உபை பிரதி வாதியாவார்; வாதியை அவமரியாதை செய்ததாக வழக்குப் பதிவு செய்யப் பட்டது;

இதை இப்னு உபை மறுக்கிறார், இந்த நிலையில் வாதியான ஸைத் இப்னு அர்க்கம் இதற்கான சாட்சியத்தை முன்வைக்க வேண்டும். அவரிடம் இதற்கான சாட்சி இருக்கவில்லை; அதனால், வழக்கு தள்ளுபடி செய்து இப்னு உபைக்குச் சாதகமாக தீர்ப்பு வழங்கப்பட்டது.

பின்னர், திருக்குர்ஆன் ஹளறத் ஸைத் இப்னு அர்க்கம் ரலியல்லாஹு தஆலா அன்ஹு அவர்களுக்கு சாதகமாக சாட்சியம் கூறி அவர்களை உண்மை படுத்தியது.

மறுமையில் நபிமார்கள் எங்களுக்கு மார்க்கத்தை எத்தி வைக்க வில்லை என்று காஃபிர்கள் அவர்களுடைய நபிமார்களுக்கு எதிராக அல்லாஹ்விடத்தில் முறையிடுவார்கள்; அல்லாஹுத் தஆலா ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் உம்மத்தின் சாட்சியத்தை ஏற்று நபிமார்களை உண்மைப்படுத்துவான். இவ்வாறே!

முஷ்ரிக்குகள் அல்லாஹ்விடத்தில்

وَاللَّهِ رَبِّنَا مَا كُنَّا مُشْرِكِينَ

***பின்னர், எங்களுடைய றப்பாகிய அல்லாஹ்வின் மீது ஆணையாக! முஷ்ரிக்குகளாக (இணை வைப்பவர்களாக) நாங்கள் இருந்ததில்லை,***

*(அல் குர்ஆன்: 6:23)*

என்று கூறுவார்கள்.

அப்போது அல்லாஹுத்தஆலா அவர்கள் செய்தவையின் பட்டியல், மலக்குகளின் சாட்சியம், அவர்களின் அவயங்களின் சாட்சியம் உள்ளிட்டவைகளின் அடிப்படையில் அவர்களுக்கு எதிராக தீர்ப்பளிப்பான்; எல்லாம் தெரிந்த றப்புத் தஆலாவுக்கு எதார்த்தமான விஷயங்கள்

தெரியாதா?,

இங்கு நடந்தது சட்டப் பிரச்சினை! என்னைப் பொய்யாக்கினார்கள் என்பதன் பொருள்:

எனது வாதத்தை ஏற்கவில்லை என்பதாகும். என்னைப் பொய்யாக் கினார்கள் என்பதல்ல! ஏனெனில், பொய்யன் என்பவன் ஃபாஸிக்(பாவி) ஆவான்; அனைத்து ஸஹாபாக்களும் நீதமானவர்கள், ஆதாரம் இல்லாமல் எந்த ஒரு முஸ்லிமை பற்றியும் "ஃபாஸிக்" என்று கூறமுடியாது!

ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அசிங்கமான இடத்திலும், நரகத்திலும் ஹாழிராக இருக்கிறார்களா? என்று தேவ்பந்திகள் சிலவேளை கேட்பது உண்டு! இது ஒழுக்கங்கெட்ட பேச்சாகும்;

இதற்கான நமது பதில்,

சூரியனின் சுடர் எங்கும் வியாபித்து இருப்பது போன்றும், மலக்குகள் எங்கும் நிறைந்து இருப்பது போன்றுமே ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்கள் இருக்கிறார்கள்;

அசிங்கத்தில் இவை படிவதால் அவை அசிங்கமாகி விடுவதில்லை; அல்லாஹுத்தஆலா எல்லா இடத்திலும் ஹாழிறாக இருக்கிறானா? இல்லையா? இருக்கிறான் என்றால், இப்படி கூறுவது ஒழுக்கக்கேடு இல்லையா?.

சூரியன் அசுத்தமான இடத்தில் படிவதால் சூரியன் அசுத்தமாவதில்லை. ஹகீகத்தே முஹம்மதியா அல்லாஹ்வின் ஒளியாகும்; அதில் அசுத்தப் பேச்சு எப்படி சாத்தியமாகும்?

## குற்றச்சாட்டு : 05

لا يبلغني احد عن احد من اصحابي شيئا فاني احب ان اخرج اليكم وانا سليم الصدر - ترمذي عن ابن مسعود

எமது தோழர்களின்(குறைகள்) பற்றி எவரும், எதையும் என்னிடம் எத்தி வைக்க வேண்டாம்! உங்களிடமிருந்து தூய மனம் வர வேண்டும் என்றே நான் விரும்புகின்றேன்.

*திர்மிதி ஜரீப், அறிவிப்பவர்: இப்னு மஸ்ஊத் ரலியல்லாஹு அன்ஹு.*

ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் எல்லா இடங்களிலும் இருந்தால், செய்திகளை எத்தி வைக்க வேண்டிய அவசியம் என்ன இருக்கிறது? செய்திகள் அவர்களுக்கு அப்படியே கிடைத்து விடுமே!

**பதில்:**

நபிமார்களின் அறிவு எல்லா வஸ்துக்களையும் ஷுஹூது செய்து கொண்டுதான் இருக்கின்றது; அதனால், அனைத்திலும் அவர்கள் கவனம் செலுத்த வேண்டும் என்பது அவசியமில்லை; இது தொடர்பான விளக்கமாக "இல்முல் ஙைபு" பற்றிய அத்தியாயத்தில் ஹாஜி இம்தாதுல்லாஹ் ஸாஹிபின் கூற்றை முன் வைத்துள்ளோம்.

இப்போது ஹதீதின் பொருள் மிகத் தெளிவாகி விட்டது! அதாவது, மக்களின் பக்கம் நமது கவனத்தை திருப்பி யாரைப்பற்றியும் கோபத்தை ஏற்படுத்த வேண்டாம்.

ஒரு கட்டத்தில் கூறினார்கள்

ذروني ما تركتم

உங்களுக்காக நான் பேசாது விடுத்ததைப் பற்றி நீங்களும் விட்டு விடுங்கள்.

**குற்றச்சாட்டு: 06**

من صلي علي قبري سمعته ومن صلي علي غائبا ابلغته - بيهقي

யாராவது எமது கப்ருக்குப் பக்கத்தில் நின்று ஸலவாத் கூறினால், அதை நாம் நேரில் செவியேற்கின்றோம், தூரத்தில் இருந்து கொண்டு ஸலவாத் கூறினால், எத்திவைக்கப்படுகின்றேன்.

*(பைஹகீ)*

தூரத்தில் இருந்து மொழியப்படுகின்ற ஸலவாத்தின் சப்தத்தை

நபியவர்கள் கேட்க மாட்டார்கள்; அவர் அவ்வாறன இடத்தில் இருந்தால், எத்தி வைக்க வேண்டிய அவசியம் இல்லையே!

**பதில்:**

தூரத்தில் இருந்து மொழியப்படுகின்ற ஸலவாத்தை செவியேற்க மாட்டார்கள் என்று இந்த ஹதீதில் எங்கே கூறப்பட்டுள்ளது? இதன் பொருள் மிகத் தெளிவாகவே இருக்கின்றது. பக்கத்திலிருந்து கூறுபவரின் ஸலவாத்தை நேரில் கேட்கின்றேன்; தூரத்திலிருந்து ஸலவாத் கூறுகின்ற ஸலவாத்தைக் கேட்கவும் செய்கின்றேன், எத்திவைக்கவும்படுகிறது.

ஹாழிர், நாழிர் பற்றிய ஆதாரங்கள் என்ற பகுதியில் "தலாயிலுல் கைராத்" என்ற நூலின் ஆதாரத்தை ஏற்கனவே முன் வைத்துள்ளோம்; அதில், என்மீது நேசம் வைத்துள்ளவர்களின் ஸலவாத்துக்களை நாமே நேரில் கேட்கின்றோம், நேசம் அல்லாதவர்களின் ஸலவாத்துக்கள் எத்தி வைக்கப்படுகின்றன;

தூரம், அருகாமை என்பதெல்லாம் மனதில் உள்ளதே தவிர, இடத்தால் காலத்தால் அல்ல! எத்தி வைக்கப்படுகின்றன என்பதனால், அதனை அவர்கள் கேட்கவில்லை என்று ஆகாது! மலக்குகள் அடியார்களின் அமல்களை அல்லாஹ்வின் திருசமூகத்திற்கு ஏத்தி வைக்கின்றனர்;

அப்படி யென்றால், றப்புத்தஆலாவுக்கும் தெரியாது என்பதா கருத்து?

நேரில் சென்று வாழ்த்து கூறுவதில் அடியார்களுக்கு கண்ணியம் உண்டு! புனித ஸலவாத்தின் பரக்கத்தினால், அடியார்களின் பெயர் நபிகள் கோமான் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் அவையில் பதியப்பட்டுள்ளது! நபியைப் பற்றி அவமரியாதை செய்பவனின் தவ்பா அங்கீகரிக்கப்பட மாட்டாது என்று புகஹாக்கள் கூறுகின்றனர்,

*(பார்க்க: ஜாமி, பாடம், முர்தத்,)*

ஏனெனில், இந்த மரியாதையீனம் (ஹுகூகுல் இபாத்) மனித உரிமை யாகும்; அதனால், தவ்பா மூலமாக இப்படியானவர்களுக்கு ஒருபோதும் மன்னிப்புக் கிடைக்க மாட்டாது.

இப்னு தைமியாவின் மாணவர் இப்னுல் கைய்யூம் தனது "ஜலாஉல் அப்ஹாம்" என்ற நூலில் கூறுகின்றார்.

ليس من عبد يصلي علي الا بلغني صوته حيث كان قلنا بعد وفاتك قال وبعد وفاتي - جلاء الافهام ص: ٣٧

யாராவது எங்கிருந்தாவது என்மீது ஸலவாத் கூறினால், அதன் சப்தம் என்னை வந்தடைகிறது. வஃபாதிற்கு பிறகுமா? என்று நாம் கேட்டோம். வஃபாத்திற்கு பிறகும் தான் என்று கூறினார்கள்.

*(ஷலாஉல் அப்ஹாம்.பக்கம்: 73 ஹதீது எண்: 108).*

يا اصحابي اخواني صلوا علي في كل يوم الاثنين والجمعة بعد وفاتي اسمع صلوتكم بلا واسطة انيس الجليس للامام جلال الدين سيوطي رحمه الله -صفحة٢٢٢

இமாம் ஹாஃபிழ் ஜலாலுத்தீன் ஸுயூத்தி ரஹ்மத்துல்லாஹி அலைஹி கூறுகின்றார்கள்.

எனது தோழர்களே! எனது சகோதரர்களே! வபாத்தின் பின்னர் ஒவ்வொரு திங்கள், வெள்ளி தினங்களில் என்மீது ஸலவாத் ஓதுங்கள்! ஏனெனில், உங்களின் சில வார்த்தைகளை தடையின்றி நான் கேட்கின்றேன்.

*(அனீஸுல் ஷலீஸ்: பக்கம்: 222).*

**குற்றச்சாட்டு - 7**

من قال أن ارواح المشائخ حاضرة تعلم يكفر- فتاوي بزازية

மஷாயிகுமார்களின் றூஹுகள் ஹாழிறாகின்றன, அவை அறிகின்றன என்று கூறினால், காஃபிராகி விடுவான்.

*(பதாவா பஸ்ஸாஸிய்யா).*

ஷாஹ் அப்துல் அஸீஸ் முஹத்திதுத் திஹ்லவி றஹ்மதுல்லாஹி அலைஹி தஃப்ஸீர் ஃபத்ஹுல் அஸீஸ் பக்கம் 55 இல் கூறுகின்றார்கள்.

நபிக்கு, அல்லது நபிமார்களுக்கு அல்லாஹ்வுடைய தெய்வீகப் பண்புகளை உதாரணமாக மறைவான அறிவு, எல்லா இடங்களிலும், எல்லா

மனிதர்களுடைய அபயக் குரலைக் கேட்பது, இன்னும் எல்லா படைப்புகள் மீது குத்றத்தை (ஆற்றலை) ஊர்ஜிதம் செய்வதுபோன்று இல்முல் ஙைபும், எல்லா இடங்களிலும் ஹாழிர் நாழிராக இருப்பதும் அல்லாஹ்வின் பண்பு என்பது இதன் மூலம் தெரிய வருகின்றது.

யாராவது ஒருவருக்கு இப்பண்பு இருப்பதாக நம்புவது தெளிவான குஃப்றாகும். பதாவா பஸ்ஸாஸிய்யா ஹனஃபி மத்ஹபில் ஃபிக்ஹு சட்டத்தில் முக்கியமான நூலாகும், இது குஃப்று என்று கூறுகின்றது.

**பதில்!**

ஃபதாவா பஸ்ஸாஸிய்யாவின் வெளிப்படையான வாசகத்தினால் மறுப்பாளர்களான தேவ்பந்திகளும் மாட்டிக்கொள்கின்றார்கள் என்பதை முதலில் அவர்களும் புரிந்து கொள்ள வேண்டும்.

1) மௌலவி றஷீத் அஹ்மத் கொங்கோஹியின் "இம்தாதுஸ் ஸுலூக்" என்ற நூலிலுள்ள அவர் கூறும் வாசகத்தை ஏற்கனவே கூறியுள்ளோம். அதில், ஷைய்கின் றூஹ் முரீதின்களிடத்தில் ஹாழிறாகிறது என்று பட்டவர்த்தனமாகக் கூறியுள்ளார்.

ஷைய்குமார்களின் றூஹுகள் அவர்களின் கப்ரில், அல்லது இல்லியீன் என்ற இடத்தில் அல்லது பர்ஸகில் இது அல்லாத இடங்களில் எங்காவது ஹாழிறாகிறது என்று நம்பினாலும் எப்படி நம்பினாலும் குஃப்று உண்டாகிவிடும்.

2) இது தொடர்பான ஷாமியில் வரும் கூற்றை ஏற்கனவே கூறிவிட்டோம். அதாவது யா ஹாழிர் யா நாழிர் என்பது குஃப்றல்ல.

3) அஷிஃஅத்துல் லம்ஆத், இஹ்யா உலூமுத்தீன், நவாப் ஸித்தீக் ஹஸன் போபாலி வஹாபி உள்ளிட்டோரின் கூற்றுக்களை ஏற்கனவே கூறியுள்ளோம்,

மேற்கூறப்பட்ட நூற்களில் தொழுகையில் அத்தஹியாத்தில் ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் முன்னால் ஹாழிறாக இருப்பதாக நம்பி அஸ்ஸலாமு அலைக்க அய்யுஹன் நபிய்யு என்று கூறவேண்டும் என்று தெளிவாக எழுதப்பட்டுள்ளன. அப்படியாயின்,

இவர்கள் எல்லோர் மீதும் ஃபதாவா பஸாஸிய்யாவின் ஃபத்வா செல்லுபடியாகுமா? இல்லையா?

அதனால், ஃபதாவா பஸ்ஸாஸிய்யாவில் ஹாழிர் நாழிர் என்று நம்புவது குஃப்று என்று கூறுப்படுவது அல்லாஹ்வின் சுயமான வாஜிபான பண்பான ஹாழிர், நாழிர் பற்றியதென நம்ப வேண்டிய அவசியமாகும். இவ்வாறு சுயமான அல்லாஹ்வின் பண்பைக்கொண்டு வேறு ஒருவர் பார்க்கின்றார் என்று நம்புவது குஃப்று தான்.

இந்த கேள்விக்கான பதிலை ஃபதாவா ரஷீதியாவிலிருந்தும், பறாஹீனே காதிஆவிலிருந்தும் ஏற்கனவே எழுதியுள்ளோம்.

மௌலவி றஷீத் அஹ்மது கொங்கோஹி, மௌலவி கலீல் அஹமது அம்பேட்டவி ஆகிய இருவரும் இந்த விஷயத்தில் எம்மோடு இணங்கிக் கொள்கின்றார்கள். ஷைய்குமார்கள் நபிமார்களின் சக்தியை அல்லாஹ்வின் சக்திக்கு நிகராக்கி நம்புவது குஃப்றாகும்.

ஷாஹ் அப்துல் அஸீஸ் றஹ்மத்துள்ளாஹி அலைஹி அவர்கள்,

وَيَكُوْنَ الرَّسُوْلُ عَلَيْكُمْ شَهِيْدًا

*"றஸூல் உங்களுக்கு சாட்சியாளர்களாக இருக்கின்றார்கள்.*

*அல் குர்ஆன்: (2:143)*

என்ற திரு வசனத்திற்கு விளக்கம் எழுதுகையில், "றஸூலுள்ளாஹ்வை ஹாழிர் நாழிர் என்பதை ஏற்றுக் கொள்கின்றார்கள். இவர்களின் கூற்றின் வாசகத்தை "இல்முல் ஙைப்" பற்றிய அத்தியாயத்தில் குறிப்பிட்டுள்ளோம்.

## குற்றச்சாட்டு: 08

சில மறுப்பாளர்களுக்கு வழி எதுவும் கிடைக்காததால்தான் "எல்லா இடமும் செல்வதற்கான சக்தி இப்லீஸ், ஆஸிப் இப்னு பர்கிய்யா, மலக்குல் மௌத்திற்கும் இவ்வாறான சக்தி இருப்பதையும் ஏற்கின்றனர். ஆனால், ஏனைய படைப்பினங்களிடம் காணப்படுகின்ற இப்பூரணத்துவத்தை நபிமார்களுக்கும், ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்

அவர்களுக்கும் இருப்பதை நம்ப மறுக்கின்றனர்.

மௌலவி காஸிம் நானோத்தவி "தஹ்தீறுன் நாஸ்" என்ற நூலில் கூறுகின்றார். சில நேரங்களில் நபியல்லாதவர்கள் அமல்களில் நபியை விட உயர்ந்து விடுகின்றார்கள்.

மௌலவி ஹுஸைன் அஹ்மது சாஹிப், "றுஜூமுல் முத்னிபீன்" என்ற நூலில் கூறுகின்றார்.

பாருங்கள்! பல்கீஸின் சிம்மாசனத்தை கொண்டுவருவதற்கான சக்தி சுலைமான் நபி அவர்களிடம் இருக்கவில்லை, ஆஸிப் இப்னு பர்கிய்யாவுக்கு இருந்தது. அப்படி இருக்குமாயின் ஏன் கொண்டு வரவில்லை.? இதுபோன்று ஹுத்ஹுத் என்ற பறவை கூறியது.

فَقَالَ اَحَطْتُّ بِمَا لَمْ تُحِطْ بِهٖ وَ جِئْتُكَ مِنْ سَبَاٍبِنَبَاٍ يَّقِيْنٍ

***"எதைப் பற்றி நீங்கள் அறியாதிருந்தீர்களோ அது பற்றி அறிந்து (வந்து)ள்ளேன், "ஸபா"விலிருந்து உறுதியான ஒரு செய்தியை உம்மிடம் கொண்டு வந்திருக்கின்றேன். என்று அது (ஹுத் ஹுத்) கூறிற்று.***

*(அல் குர்ஆன்: 27:22).*

மேலும் ஹுத்ஹுத் பறவையில் பூமியில் உள்ள ஊற்றுக்களை அறியும் ஆற்றல் இருந்தது, அதனால் தான் அதனை சுலைமான் அலைஹிஸ்ஸலாம் வேலைக்கு தன்னிடம் வைத்துக் கொண்டார்கள்; காட்டில் பூமிக்கு கீழ் நீர் இருக்கும் இடத்தை அது காட்டிக் கொடுக்கும். அது பற்றிய தகவல் சுலைமான் நபிக்கு இல்லை. இதிலிருந்து நபிமார்களை விட நபி அல்லாதவர்களின் ஆற்றல் அதிகம் என்பது தெரிய வருகின்றது.

**பதில்:**

நபி அல்லாதவர்களிடம் நபியை விட அல்லது, ஏதாவது ஒரு நபியில் ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களை விட அதிகமான சிறப்பு இருப்பதாக நம்புவது தெளிவான திருமறை வசனத்திற்கும், ஸஹீஹான ஹதீதுக்கும், உம்மத்தின் இஜ்மாஃவுக்கும் எதிராகும். இதை மறுப்பாளர்களும் ஏற்கின்றனர். இதற்கான ஆதாரங்களை

ஏற்கனவே கூறியுள்ளோம்.

இந்த எட்டு குற்றச்சாட்டுக்களும் அவர்களின் மத்ஹபுக்கே மாற்றமாக இருக்கின்றன.

ஷிஃபா என்ற நூலில் காழி இயாழ் றஹ்மத்துல்லாஹி அலைஹி எழுதுகின்றார்கள்.

குறித்த இந் நபரின் அறிவு றஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் அறிவை விட அதிகம் என்று யாராவது கூறுவானாயின், அவன் காஃபிராகி விடுவான், ஏதாவது பூரணமான ஒரு தகுதியில் யாராவது ஒருவருக்கு றஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களை விட அதிகம் இருக்கிறது என்று நம்பினால், காஃபிராகி விடுவான்;

யாராவது ஒருவர் றஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களை விட அறிவில், அல்லது அமலில் அதிகமாக இருக்க முடியாது.

ஒருவர் 850 ஆண்டுகள் வாழ்ந்து அமல் செய்துள்ளார்; றஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் 25 ஆண்டுகள் தான் அமல் செய்துள்ளார்கள், அதனால் எனது அமல்கள் அதிகம் என்று கூறினால், அவர் மார்க்கமற்றவராகும்.

அன்னாரின் ஒரு ஸஜதாவுக்குரிய கூலி நமது பல இலட்சம் வருட அமல்களை விட மேலானது; அவரின் முயற்சி அதிகம்! ஆனால், இறை நெருக்கத்தின் அந்தஸ்திலும், நன்மையிலும் நபியோடு அவருக்கு எவ்வித தொடர்பும் கிடையாது. நபியின் தகுதி மிகப் பெரியது! உயர்வானது!.

மிஷ்காத்தில் ஸஹாபாக்களின் சிறப்புக்கள் என்ற பாடத்தில் பின்வருமாறு பதிவு செய்யப்பட்டுள்ளது.

றஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள்.

"எனது ஸஹாபாக்கள் மிகக்குறைவான நன்மையான காரியங்களை செய்வது, தங்க மலை போன்று நீங்கள் அமல் செய்வதை விட மேலாகும்.

பனு இஸ்ரவேலிலிருந்த "ஷம்ஊன்" என்பவர் ஆயிரம் மாதங்கள் அதாவது 84 வருடங்களும் நான்கு மாதங்களும் தொடர்ச்சியாக அமல் செய்தார். இதைக் கேட்டு ஸஹாபாக்களின் மனதில் இதை எம்மால் எப்படி அடைய முடியும்? என்று நினைத்து கவலை வந்தது. அல்லாஹுத்தஆலா இத்திருவசனத்தை இறக்கினான்.

لَيْلَةُ الْقَدْرِ خَيْرٌ مِّنْ أَلْفِ شَهْرٍ

*மகிமை மிக்க இரவு ஆயிரம் மாதங்களை விடச் சிறப்பானது.*

*(அல் குர்ஆன்: 97: 03).*

அதாவது, முஸ்லிம்களுக்கு மகத்துவமிக்க ஓர் இரவைத் தருகின்றோம். அது பனூ இஸ்ரவேலர்களின் ஆயிரம் மாத வணக்கங்களை விடச் சிறந்ததாயிருக்கும்.

அப்படியாயின், ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் வர்களின் ஒரு மணி நேர வணக்கம் பல இலட்சம் லைலத்துல் கதிர்களை விட மேலானதாகும்.

றஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் அமர்ந்திருந்த மஸ்ஜிதுன் நபவியில் ஒரு றக்கஅத் தொழுவது 50,000 நன்மைக்குப் சமனாகும்,

எமது அமலில் இவ்வளவு அதிகரிப்பு காணப்படுமாயின், நபிகள் கோமான் முஹம்மது முஸ்தஃபா ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் அமலின் மகத்துவத்தை யாரால் தான் கணிக்க முடியும்?.

ஆஸிஃப் இப்னு பர்க்கிய்யாவுக்கு பல்கீஸின் சிம்மாசனத்தை கொண்டு வருவதற்கான ஆற்றல் உண்டு! இவ்வாற்றல் நபி ஸுலைமான் அலைஹிஸ் ஸலாம் அவர்களுக்கு இருக்கவில்லை என்று கூறுவது வெறும் உளறல்களே தவிர வேறல்ல!

அல்லாஹுத்தஆலா கூறுகின்றான்.

قَالَ الَّذِي عِندَهُ عِلْمٌ مِّنَ الْكِتَابِ أَنَا آتِيكَ بِهِ قَبْلَ أَن يَرْتَدَّ إِلَيْكَ طَرْفُكَ

***வேதத்தின் ஞானத்தை தம்மிடம் கொண்டிருந்த ஒருவர் உங்களுடைய பார்வை உங்கள் பக்கம் திரும்புவதற்கு முன் (கண்மூடி திறப்பதற்கு முன்) அ(ச்சிம்மாசனத்)தை நான் உங்களிடம் கொண்டு வருகிறேன் என்று கூறினார்.***

*(அல் குர்ஆன்: 27: 40).*

ஹளறத் ஆஸிஃப் இப்னு பர்க்கிய்யா அவர்களுக்கு இவ்வாற்றலை வேத அறிவினால் தான் பெற்றார்கள் என்பதை இதன் மூலம் தெரிந்து கொள்ள முடிகின்றது.

சில முஃபஸ்ஸிரீன்களின் கருத்துப்படி, அவருக்கு இஸ்முல் அஃழம் வழங்கப்பட்டிருந்தது; அதனால்தான் அச்சிம்மாசனத்தை கொண்டு வந்தார்; இவருக்கு இந்த அறிவு ஹளரத் சுலைமான் நபி அலைஹிஸ்ஸலாம் அவர்களின் பறக்கத்தினால் தான் கிடைத்தது; சிஷ்யனிடம் இந்த ஆற்றல் உண்டு! ஆசிரியரிடம் இல்லை என்பது எப்படி நியாயமாகும்?

சிம்மாசனத்தை அவர்களாகக் கொண்டு வராததற்கான காரணம் வெளிப்படையாகவே இருக்கின்றது. வேலை செய்வது சேவகர்களின் கடமையே தவிர அரசருக்குரியதல்ல!. அரசர் அரசு ஊழியர்களிடமிருந்து வேலையை வாங்கவே விரும்புவார். அரசர் வேலையாட்களிடமிருந்து தண்ணீர் தருவித்துக் குடிக்கின்றார் என்றால், அவருக்கு தண்ணீர் எடுத்துக் குடிக்க சக்தி இல்லையா?

அல்லாஹுத்தஆலா உலகத்தின் அனைத்து காரியங்களையும் மலக்குகள் மூலமே செய்விக்கின்றான்; மழை பொழிதல், உயிரை வாங்குதல் உள்ளிட்ட அனைத்து வேலைகளையும் மலக்குகளிடம் ஒப்படைத்துள்ளான்; இவற்றையெல்லாம் செய்வதற்குரிய சக்தி அல்லாஹ்வுக்கு இல்லையா? மலக்குகள் அல்லாஹ்வை விட சக்தி மிக்கவர்களா?

தஃப்ஸீர் றூஹுல் பயானில்,

شَهْرَيْنِ مُتَتَابِعَيْنِ

***அல்லாஹ்விடமிருந்து பாவ மன்னிப்புப் பெறுவதற்காகத் தொடராக இரண்டு மாதங்கள் நோன்பு வைத்தலாகும்.***

*(அல் குர்ஆன்: 04: 92).*

என்ற திருவசனத்தில் விளக்கக் குறிப்பில், பின்வருமாறு எழுதப்பட்டுள்ளது.

ஹளரத் ஸூலைமான் அலைஹிஸ்ஸலாம் அவர்கள் ஆஸிஃப் இப்னு பர்க்கிய்யாவுக்கு கட்டளையிட்டதற்கான காரணம், தமது அரச பீடத் திலிருந்து இறங்காமல் இருப்பதற்காக வேண்டியாகும். வேலை செய்வது ஊழியர்களின் பொறுப்பாகும்.

இவ்வாறே "எதைப் பற்றி நீங்கள் அறியாதிருந்தீர்களோ அது பற்றி அறிந்து (வந்து)ள்ளேன்.(அல் குர்ஆன்: 27: 22). என்ற ஹுத்ஹுதின் கூற்றை திருக்குர்ஆன் எடுத்துக் கூறுகின்றது.

இச்செய்தி நபியவர்களுக்கு தெரியாது என்று ஹுத்ஹுத் விளங்கிக் கொண்டது, அதனால் தான் அதனிடமிருந்து ஆதாரங்களை கேட்க முடியவில்லை.

ஹுத்ஹுத் கூறியது நீங்கள் அறியாத செய்தியை உங்களிடம் கொண்டு வந்துள்ளேன். அதாவது, இந்த நாட்டில் உடலின் மூலம் நேரில் காணாத செய்தியைக் கொண்டு வந்துள்ளேன். இதனால், இச்செய்தி நபியவர்களுக்குத் தெரியாது என்பதல்ல!

நபி ஸுலைமான் அலைஹிஸ்ஸலாம் அவர்களுக்கு எல்லாச் செய்தியும் தெரியும்! இவ்வளவு பெரிய வேலை சின்னஞ் சிறிய பறவையின் மூலம் நடக்க வேண்டும் என்பதும், நபியவர்களின் அவையிலிருக்கும் ஓர் உயிரினம் மனிதனால் செய்ய முடியாததைச் செய்து காட்டுகின்றது என்பதை அறிந்து கொள்வதற்காக வேண்டியுமே ஹுத்ஹுதுக்குக் கட்டளையிட்டார்கள்.

ஹளரத் ஸுலைமான் அலைஹிஸ்ஸலாம் அவர்களுக்கு இது பற்றிய தகவல் எதுவும் தெரியாது என்றிருந்தால், ஆஸிஃப் இப்னு பர்க்கிய்யா பல்கீஸின் முகவரியை விசாரிக்காமல் "ஸபா" என்ற நகரம் சென்று பல்கீஸின் அரண்மனைக்குள் எப்படி புகுந்தார்கள்? ஒரு நொடியில் சிம்மாசனத்தை எப்படிக் கொண்டு வந்தார்கள்?

எனவே ஒன்று புரிகின்றது. அதாவது, முழுமையான தேசமும் ஹளறத் ஆஸிஃப் இப்னு பர்க்கிய்யாவின் முன்னால் இருக்கிறது. அப்படியாயின், நபி ஸுலைமான் அலைஹிஸ்ஸலாம் அவர்களுக்கு எப்படி மறையும்? என்பதை சிந்திக்க வேண்டும்!

நபி யூஸுஃப் அலைஹிஸ்ஸலாம் அவர்களுக்கு தந்தையைப் பற்றிய முழுத் தகவல்களும் தெரிந்திருந்தன; நேரம் வரமுன் அது பற்றி அவர்கள் கூறவில்லை; பஞ்சம் வரும், அப்போது தனது தகுதியை உலகம் அறியும்! அதன்பின், தந்தையின் சந்திப்பும் நிகழும்! என்பதை ஹளறத் யூஸுஃப் நபி அலைஹிஸ்ஸலாம் அவர்கள் நன்கு அறிந்திருந்தார்கள்.

நிலத்தடி நீரை கண்டுபிடிப்பது ஹுத்ஹுதின் பணியாகும். அரசர்கள் அவர்களின் வேலைகளை அவர்களாகச் செய்வதில்லை.

மஸ்னவி ஷரீஃபில் ஒரு சம்பவம் எழுதப்பட்டுள்ளது.

ஒரு தினம் றஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்

காலுறையைக் கழட்டி வைத்து விட்டு வுழூச் செய்தார்கள், அப்போது ஒரு பறவை விரைந்து வந்து காலுறையை உயரே எடுத்துச் சென்று, பின்னர் அதனை திரும்பி மறுபக்கமாக கவிழ்த்து நபியவர்களுக்கு முன்னால் போட்டது! அக்காலுறையிலிருந்து ஒரு பாம்பு வெளியேறியது.

இதைப் பார்த்த றஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அப்பறவையிடம், "எனது காலுறையை எதற்காக மேலே தூக்கிச் சென்றாய்" என்று கேட்க, பறவை கூறியது "நான் தங்களின் புனித தலைக்கு நேராகப் பறந்து வந்தேன்; உங்களின் புனித தலையிலிருந்து வானம் வரை ஒளியாகவே இருந்தது; அந்த வெளிச்சத்தில் வந்தேன், அப்போது ஏழு பூமியும் எனக்கு வெளிச்சமாயிற்று! அதில் உங்களின் காலுறையில் சர்ப்பம் இருப்பதை கண்டு கொண்டேன்.

ஹளறத் ஆயிஷா ஸித்தீக்கா றழியல்லாஹு அன்ஹா ஒரு தினம் றஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களிடம் கேட்டார்கள்.

"அல்லாஹ்வின் திருத்தூதரே! நீங்கள் மையவாடியில் இருக்கும் போது கடுமையான மழை பொழிந்தது; ஆனால், உங்கள் ஆடை ஈரமாகவில்லையே ஏன்?" "ஆயிஷா! நீர் எதனால் போர்த்திக் கொண்டீர்!" என்று நபியவர்கள் கேட்டார்கள்; "தங்களின் புனித போர்வையால்தான்" என்று பதில் கூறினார்கள்;

என் இனியவளே! இந்த துப்பட்டாவின் பறக்கத்தினால் உமக்கு மறைவான உலகம் திறக்கப்பட்டுள்ளது; இது ஒளியாலான அருள் தவிர, மழையல்ல! அதன் மேகமும், வானமும் அலாதியானது! ஆயிஷா! இது யாருக்கும் வெளிப்படுவதில்லை; எமது துப்பட்டாவின் பறக்கத்தினால் உமக்குத் காட்டப்பட்டுள்ளது என்று கூறினார்கள்.

ஹுத்ஹுதின் விழிக்கு இவ்வாற்றல் கிடைத்ததற்கான காரணம், நபி இப்ராஹீம் அலைஹிஸ்ஸலாம் அவர்கள் அக்கினியில் போடப்பட்டபோது ஹுத்ஹுத் அந்த நெருப்புக்கு தண்ணீர் ஊற்றியதாலும், ஹளறத் ஸுலைமான் நபி அலைஹிஸ்ஸலாம் அவர்களின் உறவினாலும் இந்த திறமை கிடைத்தது.

### குற்றச்சாட்டு :- 09

றஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் ஹாழிர் நாழிராக இருந்தால், புனித மதீனா ஷரீஃபில் இருந்ததற்கான அவசியம் ஏன்?

பதில்: -

அல்லாஹுத்தஆலா எங்கும் இருக்கின்றான். ஏன் கஃபத்துல்லாஹ்வுக்குச் செல்ல வேண்டும்? பின்னர் மிஃராஜில் அர்ஷையும் தாண்டி செல்ல வேண்டியதன் பயன் தான் என்ன?

மதீனத்துல் முனவ்வறா ஆட்சி பீடத்தின் தலை நகரம்! விஷேடமான தஜல்லியாத்துகள் வெளியாகும் தலம்! மின்சார வலுவுக்கு பவர் ஹவுஸ் இருப்பதுபோன்று வலிமார்களின் பலதரப்பட்ட சக்திகளை வெளிப் படுத்துவது தீபங்கள் தான்! அதனால், அங்கும் செல்ல வேண்டியது அவசியமாகும்.

وصلي الله تعالي علي خير خلقه سيدنا محمد واله واصحابه اجمعين برحمته وهو ارحم الراحمين

# ஆய்வு-5

# நபிகள் நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் நம்மைப் போன்ற மனிதரா?

## அத்தியாயம்: 4

இவ்வாய்வில் ஒரு முன்னுரையும், இரு அத்தியாயங்களும் இடம்பெறும். முன்னுரையில், "நபி" என்பதற்கான வரைவிலக்கணமும், அதற்கான விளக்கமும் இடம்பெறும்.

### முன்னுரை

## நபி பற்றிய அகீதா:

**அகீதா: 1**

"நபி" என்பவர் ஷரீஅத்தின் சட்டங்களை எத்தி வைப்பதற்காக அல்லாஹ்வால் அனுப்பப்பட்ட ஒரு மனிதராவார்.

*ஆதாரம்: ஜறஹுல் அகாயித்.*

இதன்படி, "நபி" என்பவர் மனிதர் அல்லாத வேறு ஓர் உயிரினமோ, பெண்ணோ அல்ல என்பது தெளிவு!

திருக்குர்ஆன் கூறுகிறது.

وَمَا اَرْسَلْنَا قَبْلَكَ اِلَّا رِجَالًا نُّوْحِىْ اِلَيْهِمْ

***(நபியே!) உமக்கு முன்னர் அவர்களில் நாம் வஹி அறிவிக்கின்ற மனிதர்களை அன்றி (வேறு எவரையும் றஸூலாக) நாம் அனுப்பவில்லை.***

*(அல் குர்ஆன்: 21: 07).*

ஜின், மலக்கு; பெண்; உள்ளிட்டவர்கள் நபியாக வர முடியாது என்பது மேற்கண்ட திருவசனத்தின் மூலம் உறுதியாகி விட்டது.

**அகீதா: 2**

"நபி" என்பவர் எப்போதும் உயர் குடியிலும், உயர் பரம்பரை யிலிருந்துமே வருவார். உயர்ந்த நற்குணம் கொடுக்கப்பட்டவராக இருப்பார். தாழ்ந்த குலம், அற்பத்தனமான செயல்களை விட்டும் பாதுகாக்கப்பட்டவராகவும் இருப்பார்,

*ஆதாரம்: பஹாரே ஜரீஅத்.*

புகாரி ஷரீஃப் முதல் வால்யூம் ஆரம்பப்பகுதியில் பின்வரும் ஹதீஸ்

இடம் பெறுகிறது.

இஸ்லாத்தைத் தழுவுங்கள். பாதுகாப்பாக இருப்பீர்கள்! என்று ரோம் நாட்டின் அதிபர் மன்னர் ஹிறக்கலுக்கு நபிகள் நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கடிதம் எழுதினார்கள். கடிதம் மன்னரிடம் சேர்ந்தபின், அங்கு சமூகமளித்திருந்த அபூ ஸுஃபியான் ரலியல்லாஹு அன்ஹு அவர்களை அழைத்து (அப்போது இவர் இஸ்லாத்தைத் தழுவவில்லை) ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களைப் பற்றி சில கேள்விகள் கேட்டார்.

அதில் முதல் கேள்வி,

“உங்கள் மத்தியில் அவரின் குலம், கோத்திரம், பரம்பரை எப்படி இருக்கிறது?“

“அவர் எங்கள் மத்தியில் உயர்குடி குலத்தை சேர்ந்தவர். அதாவது, குறைஷி, ஹாஷிம்; முத்தலிப் ஆவார்.“ நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம். என்று அபூஸுப்யான் ரலியல்லாஹு தஆலா அன்ஹு பதில் கூறினார்கள்.

இதைக் கேட்ட மன்னர் ஹிறக்கல்,"எப்போதும் நபிமார்கள் உயர் குடியிலிருந்துதான் அனுப்பப்படுவார்கள்" என்று கூறினார். நபிமார்கள் உயர் குடும்பத்தில் இருந்துதான் அனுப்பப்படுவர் என்பதை இதன்மூலம் புரிந்து கொள்கின்றோம்.

**எச்சரிக்கை!**

சகல சமூகத்திலிருந்தும் நபிமார்கள் வந்துள்ளார்கள் என்று சிலர் வாதிக்கின்றனர்.

இதன்படி, மஆதல்லாஹ்! வறுமைப்பட்ட தாழ்ந்தோர், தோட்டிகள்; இந்துக்கள்; பௌத்தர்கள்; சீனர்கள் உள்ளிட்டவர்களின் ஒவ்வொரு கோத்திரத்தாரிலும் நபி வந்துள்ளார்கள்.

இதனடிப்படையில் மஆதல்லாஹ்! லால் குரு, கிருஷ்ணன்; கௌதம் புத்தர் உள்ளிட்டோரும் நபிதான் என்றும். இவர்களைப் பற்றி எவரும் குறை கூறக் கூடாது என்றும் சிலர் கூறுகின்றனர். இதற்கு ஆதாரமாக

لِكُلِ قَوْمٍ هَادٍ

*ஒவ்வொரு சமூகத்துக்கும் நேர்வழி காட்டி ஒருவர் உண்டு.*

*(அல் குர்ஆன்: 13: 07).*

என்ற திருவசனத்தை காட்டுகின்றனர்.

மேலும், பெண்களிலிருந்தும் நபிமார்கள் வந்துள்ளார்கள். காரணம், நபி மூஸா அலைஹிஸ்ஸலாம் அவர்களின் அன்னை, மரியம் பீவி ரலியல்லாஹுதஆலா அன்ஹுமா ஆகியோருக்கும் வஹி வந்துள்ளது. வஹி வருபவர் நபியாகவே இருப்பார் என்பது பொதுவான கருத்து.

திருக்குர்ஆன் கூறுகிறது.

وَأَوْحَيْنَا أَلَىٰ أُمِّ مُوسَىٰ

*இன்னும் மூஸாவுடைய தாயக்கு வஹி அறிவித்தோம்.*

*(அல் குர்ஆன்: 28: 07).*

என்றும், இதுவல்லாத திருவசனங்களிலும் பெண்களுக்கு வஹி வந்ததாக கூறப்பட்டுள்ளது. அதனால், பெண்களிலும் நபி வரலாம் என்பது உறுதியாகின்றது.

மேற்கண்ட இரு கூற்றுக்களும் தவறானவையாகும். பின்வரும் விளக்கத்தைக் படியுங்கள்.! தெளிவு பெறுவீர்கள்.!

**1) வழிகாட்டி**

மேற்கண்ட திருவசனத்தின் முழுமையான திருவசனம் குறிப்பிடப் படவில்லை. அத்தோடு அதன் மொழிபெயர்ப்பும் சரியில்லை! முழுமையான திருவசனம் பின்வருமாறு,

اِنَّمَا اَنْتَ مُنْذِرٌ وَّ لِكُلِّ قَوْمٍ هَادٍ

***நிச்சயமாக நீர் அச்சமூட்டி எச்சரிக்கை செய்கின்றவர்தான்; ஒவ்வொரு சமூகத்தினருக்கும் நேர்வழிகாட்டி ஒருவர் உண்டு.***

*(அல் குர்ஆன்: 13: 07)*

.

அதாவது, ஒவ்வொரு சமூகத்திற்கும் வழிகாட்டியாக இருப்பது நபிகள் நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்குரிய சிறப்புப் பண்பாகும். ஏனைய நபிமார்கள் குறிப்பான சமூகத்தினருக்கு மட்டுமே நபியாக வந்தார்கள். ஆனால், எனது இனிய நேசரே! நீங்கள் சகல சமூகத்தினருக்கும் அவர்கள் உங்களை ஏற்றுக் கொண்டால், நபியாக இருக்கின்றீர்கள்.

இதுதான் இத்திர வசனத்தின் பொருளாகும். தவிர, ஒவ்வொரு சமூகத்திலும் அந்த சமூகத்திலிருந்து நபி வருவதாயின், நபி உயர்குடியில் இருந்து எப்போதும் வருவார் என்ற கூற்றின் பொருள் என்னாவது?

ஒவ்வொரு சமூகத்திற்கும் நபி உண்டு என்றால் நபியவர்கள் குறைஷிக் குலத்தைச் சேர்ந்தவர்களாகும். குறைஷிக் குலம் அல்லாத பல கோத் திரங்கள் உள்ளன. அவர்களிலிருந்தும் நபி வரவேண்டுமே! அவ்வாறு மனித இனத்தில் உள்ள அனைத்து கோத்திரத்திலிருந்தும் நபி வர வேண்டும்.

"ஹாதி" - هَادِي வழிகாட்டி என்பது பொதுச் சொல்.! நபி, நபி அல்லாத சகலரையும் இச்சொல் உள்ளடக்கும்.

இதனால், இத்திருவசனத்திற்கு இப்படியும் பொருள் கூற முடியும். "ஒவ்வொரு சமூகத்திலும் அவர்களில் சிலர் சிலருக்கு வழிகாட்டியாக இருப்பார்."

மஹாதி, கிறிஷ்ணன் உள்ளிட்ட ஏனையவர்கள் பற்றி உறுதியான எதுவித சான்றும் கிடையாது.! திருக்குர்ஆனிலும், ஹதீஸ்களிலும் இவர்களைப் பற்றி எந்தத் தகவலும் கூறப்படவில்லை.

சிலை வணங்கிகளால் மட்டுமே இவர்களைப் பற்றி அறிய முடிகின்றது. அதிலும் கூட சிலருக்கு நான்கு கைகள். சிலருக்கு ஆறு கால்கள். சிலரின் முகத்தில் யானையின் தும்பிக்கை! சிலருக்கு குரங்கின் வால் இருக்கின்றன.

சிலை வணங்கிகள் பற்றி றப்புத்தஆலா பின்வருமாறு கூறுகின்றான்.

اِنْ هِىَ اِلَّاۤ اَسْمَآءٌ سَمَّيْتُمُوْهَاۤ اَنْتُمْ وَاٰبَآؤُكُمْ

*அவற்றை நீங்களும் உங்களுடைய மூதாதையர்களும் பெயர் வைத்துக் கொண்டீர்கள். அல்லாஹ் அவற்றிற்கு எவ்வித ஆதாரத்தையும் இறக்கி வைக்கவில்லை.*

*(அல் குர்ஆன்: 53: 23).*

மேற்கண்ட பெயருடையவர்கள் இருந்ததற்கான ஆதாரம் இல்லா திருக்கும் போது அவர்களை நபி என்று எண்ணுவதோ, கூறுவதோ எப்படி புத்திக்கு புலப்படும்.?

**2) பெண் நபி.**

பெண்களில் நபி வரலாம் என்பதும் தவறான கூற்றாகும். காரணம், நபி மூஸா அலைஹிஸ்ஸலாம் அவர்களின் அன்னையவர்களின் மனதில் இக்கருத்து குறிப்பாக போடப்பட்டது. அல்லது உள்ளுணர்வு மூலம் உதிப்பாக்கப்பட்டது என்பதையே வஹீ மூலம் அறிவித்தோம் என்று திருக்குர்ஆன் கூறுகிறது.

"வஹி "என்பதற்கு, "இல்ஹாம்" உள்ளுணர்வு என்றும் பொருள் உண்டு.! என்பதை பின்வரும் திருவசனம் சுட்டிக் காட்டுகின்றது.

وَاَوْحٰى رَبُّكَ اِلَى النَّحْلِ اَنِ اتَّخِذِىْ مِنَ الْجِبَالِ

*உம்முடைய ரப்பு தேனீக்கு மலைகளிலிருந்தும், மரங்களிலிருந்தும் அவர்கள் மனிதர்கள் கட்டுகின்ற (தேன்கூடு முதலிய) வற்றிலிருந்து வீடுகளை நீ அமைத்துக் கொள் என்று உள்ளுணர்வு ஏற்படுத்தினான்.*

*(அல் குர்ஆன்: 16: 68).*

மேற்கண்ட திருவசனத்தில் வஹி என்ற சொல் உள்ளுணர்வு, மனதில் போடுதல் என்ற பொருளில் வந்துள்ளது.

சித்தி மரியம் ரலியல்லாஹு தஆலா அன்ஹா அவர்களுக்கு வழங்கப் பட்ட "வஹி" என்பது, மனிதர்களுக்கு எத்தி வைப்பதற்கானதல்ல! அவர்கள் மார்க்க சட்டங்களை எத்தி வைப்பதற்காக அனுப்பப்படவில்லை.

மேலும் மலக்குகளின் அனைத்து வஹியும் எத்தி வைப்பதற்குமானதுல்ல! சில ஸஹாபாக்கள் மலக்குகளின் பேச்சுக்களை செவிமடுத்துள்ளனர். மரண வேளையிலும், கப்றிலும், மஹ்ஷரிலும் மலக்குகளின் பேச்சுக்களை அனைவரும் செவிமடுக்கின்றனர். அதனால், அவர்கள் அனைவரும் நபியாவதில்லை.

இதன் பூரணமான விளக்கம் நமது ஷஃனே ஹபீபுர் ரஹ்மான் என்ற நூலில் குறிப்பிட்டுள்ளோம்.

**அகீதா: 03**

எந்த ஒரு மனிதனும் தனது அமலாலோ, வணக்கத்தாலோ நுபுவ்வத்தைப் பெறுவதில்லை. அல்லாஹ்வின் தனிப்பெரும் கருணையால் மட்டுமே பெறு கின்றனர்.

அல்லாஹுத்தஆலா கூறுகின்றான்.

اَللّٰهُ اَعْلَمُ حَيْثُ يَجْعَلُ رِسَالَتَهُ

***அல்லாஹ் தன்னுடைய தூதுவத்தை எங்கு வைக்க வேண்டும் என்பதை மிக அறிந்தவன்.***

*(அல் குர்ஆன்: 6: 124).*

அதனால் நபி அல்லாத கௌது, குத்பு, அப்தால் அல்லது வேறு யாரோ நபிக்கு சமமாக முடியாது.! அவர்களை மிஞ்சவும் முடியாது.! மேற்கண்ட விளக்கங்கள் யாவும் கவனத்தில் கொள்ளப்பட வேண்டிய முக்கிய விஷயங்களாகும். நபிமார்களை. நம்மைப்போன்ற மனிதன் அல்லது

சகோதரன் என்று கூறுவது ஹராமாகும்.

"நபி" என்பவர் மனித இனத்தில்தான் வருவார். மனிதனாகவேதான் இருப்பார். ஜின், மலக்கு ஆகிய இனங்களில் வருவதில்லை! இதுதான் உலகியல் சட்டமாகும்.

நபி ஆதம் அலைஹிஸ்ஸலாம் அவர்களிருந்துதான் மனித இனம் ஆரம்பமாகின்றது. அதனால் தான் அவர்கள் மனிதர்களின் தந்தை "அபுல் பஷர்" என்று அழைக்கப்படுகின்றார்கள்.

நபி ஆதம் அலைஹிஸ்ஸலாம் மண்ணுக்கும், நீருக்குமிடையில் இருக்கும்போது நபிகள் நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் நபியாக இருந்தார்கள்.

ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள்.

كُنْتُ نَبِيًا وَآدَمُ بَيْنَ الْمَاءِوَالطِيْنِ

ஆதம் மண்ணுக்கும், நீருக்குமிடையிலிருக்கும் போது நான் நபியாக இருக்கின்றேன். இந்த நேரத்தில் நபிகள் நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் நபியாக இருந்தார்கள். மனிதராக இருக்கவில்லை.

நபிமார்களை மனித இனம்(பஷர்) அல்லது (இன்ஸான்) மனிதர் என்று கூறுவதில் குற்றமில்லை. மாறாக யா முஹம்மத்! என்றோ, இப்ராஹிமின் தந்தை என்றோ, அல்லது சகோதரனே! என்றோ அல்லது, சகோதரத்துவத்தை குறிக்கும் வேறு சொற்களையோ கூறுவது ஹராமாகும். இதை ஏளனமான எண்ணத்தில் கூறினால் காஃபிராகி விடுவான்.

ஃபதாவா ஆலம்கீரி உள்ளிட்ட ஃபிக்ஹு நூற்களில் பின்வருமாறு வரையப்பட்டுள்ளது.

யாராவது ஒருவர் ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களை هذاالرجل இந்த மனிதர் என்று ஏளனமாக கூறினால் காஃபிராகி விடுவான்.

அதனால் நபியவர்களை யா ரஸூலல்லாஹ்! யா ஹபீபல்லாஹ்! யாஷஃபீஅல் முத்னிபீன் இன்னும் இதுவல்லாத கண்ணியமான வார்த்தை களால் நினைவு கூர்தல் அவசியமாகும்.

சில கவிஞர்கள் தங்கள் கவிதைகளில் யா முஹம்மத் என்று குறிப் பிடப்பட்டிருப்பது கருத்தியலானதல்ல! அகராதிப் பொருள் கொண்டதாகும். இச்சொல் அவர்கள் பார்வையில் யா முஸ்தஃபா! யாமுஜ்தபா! என்பதை

ஒத்திருக்கிறது.

واه کیا جود وکرم ہے شہ بطحا تیرا

மக்கத்து மாமனிதர் ஆகிய உமது கொடையை என்னவென்பேன்!

யாஅல்லாஹ் என் மீது நீ அருள் புரி! என்ற சொற்றொடர்களில் வருகின்ற "உமது" "நீ" என்பதின் பொருள் வேறாகும். இவ்வார்த்தைகள் சாதாரணமாக கூறுவது போன்றது அல்ல!

திருக்குர்ஆன் கூறுகிறது.

لَا تَجْعَلُوْا دُعَاءَ الرَّسُوْلِ بَيْنَكُمْ كَدُعَاءِ بَعْضِكُمْ بَعْضًا

***1) நம்முடைய ரஸூலை நீங்கள் உங்களுக்கிடையே உங்களில் சிலர் சிலரை அழைப்பது போன்று அழைக்க வேண்டாம்.***

*(அல் குர்ஆன்: 24: 63).*

وَلا تَجْهَرُوْا لَهُ بِالْقَوْلِ كَجَهْرِ بَعْضِكُمْ لِبَعْضٍ اَنْ تَحْبَطَ اَعْمَالُكُمْ وَاَنْتُمْ لاَ تَشْعُرُوْنَ

***முஃமின்களே உங்களுடைய சப்தத்தை நபியுடைய சப்தத்திற்கு மேல் உயர்த்தாதீர்கள். மேலும், உங்களில் சிலர் சிலருடன் இரைந்து பேசுவது போல் அவருடன் இரைந்து பேசாதீர்கள். (ஏனெனில்) நீங்கள் உணர்ந்து கொள்ளாத நிலையில் உங்களுடைய (நற்)செயல்கள் அழிந்துவிடும்.***

*(அல் குர்ஆன்: 49: 02).*

ஒருவரின் அமல்கள் குஃப்றின் காரணமாக அழிந்து போகும். பாவத்தின் காரணமாக அழியாது!

மதாரிஜுன் நுபுவ்வத் என்ற நூலில் பின்வருமாறு வரையப்பட்டுள்ளது.

உங்களில் சிலர் சிலரை பெயர் சொல்லி அழைப்பது போன்று நபிகள் நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் பெயர் கூறி அழைக்காதீர்கள்.! யாரஸூலல்லாஹ்! யாநபியல்லாஹ்! என்று கண்ணியமாக அழையுங்கள்.

தஃஃப்ஸீர் ரூஹுல் பயானில் மேற்கண்ட திருவசனத்திற்கு பின்வருமாறு விளக்கம் எழுதப்பட்டுள்ளது.

وَالْمَعَنِي لاَ تَجْعَلُوْا نِدَاءَكُمْ أَيَّاهُ وَتَسْمِيَتَكُمْ لَهُ كَنِدَاءِ بَعْضِكُمْ بَعْضًا لاِسْمِهِ مِثل يَامُحَمَّدُ وَيَا اِبْنَ عَبْدِ اللهِ
وَلَكِنْ بِلَقَبِهِ الْمُعَظَّمِ مِثْلُ يَا نَبِيَّ اللهِ وَيَا رَسُوْلَ اللهِ كَمَا قَالَ اللهُ تَعَالٰي يَا اَيُّهَاالنَّبِيُّ يٰااَيُّهَا الرَسُوْلُ

உங்களில் சிலர் சிலரை பெயர் கூறி அழைப்பது போன்று ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களை பெயர் கூறி அழைக்க வேண்டாம். யாஅய்யுஹன் நபிய்யு! யாஅய்யுஹர் றஸூலு! என்று அல்லாஹுத்தஆலா அழைத்திருப்பது போன்று கண்ணியமான புனைப்பெயர்களால் அழையுங்கள்.

மேற்கண்ட திருவசனங்கள் அதற்கு விரிவுரை கூறிய முஃஃபஸ்ஸிரீனகள், ஹதீதுகள் அதற்கு விரிவுரை கூறிய முஹத்திதுகள் உள்ளிட்டோரின் கூற்றின்படி, ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்குரிய மரியாதை கூப்பிடும் போதும் சரி, பேசும் போதும் சரி, எழுதும் போதும் சரி; எல்லா நிலையிலும் பேணப்படவேண்டும்.

2) உலகத்தில் உள்ள உயர் மதிப்புக்குரியவர்களை கூட பெயர் கூறி அழைப்பது வழக்கமில்லை. தாய், தந்தை, சகோதரர்கள் உள்ளிட்டோரை மரியாதையான வார்த்தைகளோடு தான் அழைப்பது வழக்கம்.

தனது தாயை தந்தையின் மனைவி என்றோ, தந்தையை தாயின் கணவர் என்றோ; அல்லது, அவர்களின் பெயர் கூறி யாராவது அழைத்தால், அல்லது சகோதரர் என்று கூப்பிட்டால், அது உண்மையான பேச்சாயினும், ஒழுக்க மில்லாத, மரியாதைக் குறைவான பேச்சாகவே கருதப்படும்.

ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் அல்லாஹுதஆலாவின் மகத்துவமிக்க கலீஃபாவாகும்.

அதனால், அன்னாரை பெயர் கூறி அழைப்பதோ, அல்லது சகோதரர் என்று சமப்படுத்தி கூறுவதோ சந்தேகமில்லாமல் ஹறாமாகும்.

வீட்டிலுள்ள மகள், தாய், மனைவி, சகோதரி உள்ளிட்ட அனைவரும் பெண்கள்தான்.! ஆயினும், அவர்களின் பெயர்கள், சட்டங்கள் தனியானவை. தாயை மனைவி என்றோ, மனைவியை தாய் என்றோ அழைப்பது ஈமான் கெட்டுப் போன செயலாகும்.

இவர்கள் அனைவரையும் ஒரே விதமான பார்வையில் பார்ப்பது சாபத்திற்குரியவனின் செயலாகும். இவ்வாறுதான் ஒரு நபியை உம்மத்திலுள்ள சாதாரணமானவராகவும், உம்மத்தில் உள்ளவர்களை நபியை போன்றும் கருதுபவனும் சாபத்திற்குரியவன்தான்.

தேவ்பந்திகள் உம்மத்தில் உள்ளவர்களின் தகுதியை "நபி" க்கு வழங்கியுள்ளனர். அதே நேரம் அவர்களின் தலைவர்களான மௌலவி இஸ்மாயில் திஹ்லவி, செய்யது அஹமது ரேபரேலவி (மௌலவி இல்யாஸ் காந்தலவி) உள்ளிட்டவர்களை நபிக்கு சமப்படுத்தி கூறியுள்ளனர். "ஸிராத்துல் முஸ்தகீம்" என்ற நூலின் முகவுரையில் கூறப்படுவதை கவனியுங்கள்.! மஆதல்லாஹ்!

3) யாராவது ஒருவருக்கு அல்லாஹுத்தஆலா விஷேஷமான ஒரு பட்டத்தை கொடுத்திருக்க அதை தவிர்த்துவிட்டு பொதுவான புனைப்பெயரால் அவரை அழைத்தால், அல்லாஹுத்தஆலா அவருக்கு வழங்கிய அதி உயர் பட்டத்தை நிராகரித்ததாகவே ஆகிவிடும். உலகியல் ஆட்சியாளர் தரப்பில் யாராவது ஒருவருக்கு நவாப் கான், பகதூர் (கலக்டர், ஆளுநர்) உள்ளிட்ட உயர் பதவி கிடைத்ததும், அவரை மனிதர் என்றோ, மனிதரின் மகன் என்றோ, சகோதரன் என்றோ, அல்லது இதுவல்லாத வேறு ஏதும் பெயராலோ அழைப்பது குற்றமாகும்.

இவ்வாறு நினைவு கூர்வதற்கு மறுப்பு தெரிவிப்பதன் கருத்து அரசாங்கம் வழங்கிய பட்டத்தைக் கூறுவதற்கு அவரிடமுள்ள வெறுப்பே காரணமாகும் என்றிருந்தால், அல்லாஹ்வின் தரப்பிலிருந்து வழங்கப்பட்ட நபி, ரஸூல் என்ற பட்டத்தை கூறி நினைவு கூறாமல் சகோதரன் உள்ளிட்டபெயர்களால் கூறுவதும் குற்றம்தான்.

4) திருக்குர்ஆனில் அல்லாஹுத்தஆலாவும் யா முஹம்மத் என்றோ, மனிதர்ளின் சகோதரர் என்றோ அழைத்ததில்லை. மாறாக, யா அய்யுஹன் நபிய்யு! யா அய்யுஹர் ரஸூலு! யா அய்யுஹல் முஸம்மில்! யா அய்யுஹல் முதத்திர் உள்ளிட்ட சிறப்புப் பெயர்களால் தான் அழைத்துள்ளான். இத்தனைக்கும் அவன் றப்பு! அப்படி இருக்க அடியானாகிய நமக்கு நபியவர்களை சாதாரண மனிதர், நம் சகோதரர் என்று கூறுவதற்கு என்ன உரிமை இருக்கிறது.?

5) நபிமார்களை நம்மைப் போன்ற மனிதர்கள் என்று கூறிய வரலாற்றை மக்களுக்கு அல்லாஹுத்தஆலா பின்வரும் திருவசனத்தின் மூலம் எடுத்துக் கூறுகின்றான்.

قَالُوْا مَا اَنْتُمْ اِلَّا بَشَرٌ مِّثْلُنَا

***நீங்கள் எங்களைப் போன்ற மனிதரே அன்றி வேறில்லை என்று அவர் (காபிர்)கள் கூறினார்கள்.***

*(அல் குர்ஆன்: 36: 15).*

وَلَئِنْ اَطَعْتُمْ بَشَرًا مِّثْلَكُمْ اِنَّكُمْ اِذًا لَّخٰسِرُوْنَ

***உங்களைப் போன்ற மனிதருக்கு நீங்கள் வழிபட்டால் நிச்சயமாக நீங்கள் அப்போது நஷ்டமடைந்தவர்களாவீர்கள்.***

*(அல் குர்ஆன்: 23: 34).*

நபிமார்களை நம்மைப் போன்ற சாதாரண மனிதர்கள் என்று கூறியவர்கள் பற்றிய திருவசனங்கள் ஏராளமாக உள்ளன. நபிமார்களை நம்மோடு சமப் படுத்திக் கூறுவதும், நபிமார்களின் அந்தஸ்தை குறைத்து கூறுவதும் இப்லீஸின் வழியாகும். அவன் தான்.

قَالَ اَنَا خَيْرٌ مِّنْهُ خَلَقْتَنِىْ مِنْ نَّارٍ وَّخَلَقْتَه مِنْ طِيْنٍ

***நான் அவரை விட சிறந்தவன். என்னை நெருப்பிலிருந்து நீ படைத்தாய்! அவரை களி மண்ணிலிருந்து படைத்தாய் என்று இப்லீஸ் கூறினான்.***

*(அல் குர்ஆன்: 7 : 12).*

எமக்கும் நபிமார்களுக்கு மிடையில் என்ன வேறுபாடு உண்டு? நாமும் மனிதர்கள்.! அவர்களும் மனிதர்ள் தாம். நாம் உயிருடன் இருக்கின்றோம் அவர்கள் மரணித்து விட்டார்கள் என்று இப்போது கூறுவதெல்லாம் இப்லீஸ்

போதித்தவையாகும்.

**பாடம்: 2**

## நபிமார்கள் நம்மைப் போன்ற மனிதர்கள் என்ற வாதத்திற்கு பதில்.

1) திருக்குர்ஆன் கூறுகிறது.

قُلْ اِنَّمَا اَنَا بَشَرٌ مِّثْلُكُمْ

*நபியே நீர் கூறும் நிச்சயமாக நானும் உங்களைப் போன்ற மனிதர் தான். (அல் குர்ஆன்: 18 : 110).*

## *வாதம்: 01*

மேற்கண்ட திருவசனத்தில் நபியவர்களும் நம்மைப் போன்ற மனிதர் தான்! இதை மறுத்தால் மஆதல்லாஹ்! இந்த ஆயத்தின் திருவசனம் பொய்யாகிவிடுமே!

## *பதில்:*

### இத்திருவசனத்தில் உள்ள சில விஷயங்களை ஆழமாக அவசியம் பார்க்க வேண்டியுள்ளது.

1) *"நபியே! கூறுவீராக!"* என்ற சொற்றொடர் நபியவர்களுக்கு மட்டும் கூறுவதற்கான அனுமதியாகும். நபியவர்கள் பணிவின் அடிப்படையில் இவ்வாறு கூறினார்கள். "அன்னார் எம்மைப் போன்ற மனிதர் என்று நீங்கள் அனைவரும் கூறுங்கள்" என்று அல்லாஹுத்தஆலா கூறவில்லை.

"நபியே கூறுவீராக"! என்பதில் உள்ள "மனிதன்" உள்ளிட்ட வார்த்தைகளை நீங்கள் கூறுங்கள். நான் கூற மாட்டேன். என்று அல்லாஹுத் தஆலா கூறுவது போன்ற சமிக்கை இருக்கிறது.

நான் கூறுவதாயின்,

يٰاَيُّهَا النَّبِيُّ اِنَّا اَرْسَلْنٰكَ شَاهِدًا وَّمُبَشِّرًا وَّنَذِيْرًا،وَّدَاعِيًا اِلَى اللّٰهِ بِاِذْنِهٖ وَسِرَاجًا مُّنِيْرًا

*நபியே நிச்சயமாக நாம் உம்மை சாட்சியாளராகவும், நற்செய்தி கூறுபவராகவும்; அச்சமூட்டி எச்சரிக்கை செய்பவராகவும் அனுப்பி வைத்துள்ளோம். மேலும், அல்லாஹ்வின் பக்கம் அவனுடைய ஏவலைக் கொண்டு அழைப்பவராகவும்; பிரகாசிக்கும் விளக்காகவும் உம்மை நாம் அனுப்பி வைத்துள்ளோம். (அல் குர்ஆன்: 33 : 45, 46).*

முஸம்மிலே! يَاأَيُّهَا الْمُزَّمِّلُ முதத்திரே! يَا أَيُّهَا الْمُدَّثِّرُ என்று தான் நாம் உம்மை அழைப்போம். நீங்களோ பணிவுக்காக "நான் உங்களைப் போன்ற மனிதர்" என்று கூறலாம்.

மேலும், இத்திருவசனம் காஃபிர்களுடன் உரையாடப்பட்டது. ஏனெனில், ஒவ்வொரு பொருளும் தனது இனம் அல்லாதவற்றை மறுக்கவே செய்கின்றன. இதனால்தான் "காஃபிரைப் போல் நீங்களும் அச்சப்பட வேண்டாம். நானும் உங்களைப் போன்ற மனித இனத்தில் உள்ளவர்தான்" வேட்டைக்காரன் மிருகங்களின் ஒலி எழுப்பி வேட்டையாடுவது போன்று நபியவர்கள் இவ்வாறு கூறி காஃபிர்களை தன் பக்கம் திருப்புவதை நோக்கமாகக் கொண்டார்கள்.

தேவ்பந்திகளும் காஃபிர்களைப் போன்று கருத்துக் கொண்டிருந்தால், அவர்களுக்கும் இவ்வாறு கூறுவது பொருத்தமாக அமையும். முஸ்லிம்களாகிய எங்களுக்கு கூறப்பட்டதெல்லாம் "என்னைப் போன்று உங்களில் யார் இருக்கின்றார்கள்?" என்பதாகும்.

கிளிக்கு முன்னால் கண்ணாடியை வைத்து விட்டு கண்ணாடிக்குப் பின்னாலிருந்து ஒலி எழுப்புகிறான். கிளி கண்ணாடியில் உள்ள தனது பிம்பத்தைப் பார்த்து நமது இனத்தின் சத்தம் தான் என்று புரிந்துக் கொள்கிறது. நபிமார்கள் றப்புத் தஆலாவுக்கு கண்ணாடியாக விளங்குகின்றார்கள். நாவும், சப்தமும் இவர்களுடையது. பேச்சு அல்லாஹுக்குரியது.

2) *"உங்களைப் போன்றவர்"* என்பதோடு திருவசனம் முற்றுப் பெறவில்லை. *"எனக்கு வஹி வருகிறது"!* என்ற ஒரு சிறப்பு விதியும் இருக்கிறது. அதாவது, *"ஸைது"* என்ற நபர் விலங்குகளைப் போன்று ஓர் உயிர் பிராணி! ஆயினும், பேசக்கூடியவர்! இதில், "பேசக்கூடியவர்" என்ற சொற்றொடரின் மூலம் ஏனைய விலங்கிலிருந்து வேறுபாடு உண்டாகிவிட்டது.

இந்த வேற்றுமையால் *"ஸைது"* படைப்பில் மேலான மனிதனாகி விட்டான்.

ஏனைய விலங்குகள் வேறு பொருளாகி விட்டன. இவ்வாறுதான் *"வஹி"* என்பது நபித்துவப் பண்பாகும். இப்பண்பு நபிக்கும், உம்மத்திற்குமிடையில் பாரிய வித்தியாசத்தை தோற்றுவிக்கிறது.

மனிதனுக்கும், விலங்கிற்குமிடையில் ஒரே ஒரு பண்பு தான் வேற்றுமையாக உள்ளது. ஆனால், மனிதனுக்கும் முஸ்தஃபா மாநபியின் தகுதிக்குமிடையில் 27 படித்தரங்களிலான வேறுபாடுகள் உள்ளன.

அவை வருமாறு,

*1 மனிதன்*

*2 முஃமின்*

*3 ஷஹீது*

*4 முத்தகி*

*5 வலி*

*6 அப்தால்*

*7 அவ்தாத்*

*8 குதுபு*

*9 கௌது*

*10 கௌதுல் அஃழம்*

*11 தாபிஈ*

*12 சஹாபி*

*13 முஹாஜிர்*

*14 சித்தீக்*

*15 நபி*

*16 றஹ்மதுன் லில் ஆலமீன்*

உள்ளிட்ட இன்னும் இதுவல்லாத மொத்தம் 27 படித்தரங்கள் காணப் படுகின்றன.

இவை சுருக்கமான படித்தரங்கங்களின் தொகையாகும். விவரமாக அறிய விரும்புவர்கள் எமது “ஷஃனே ஹபீபுர் ரஹ்மான்” என்ற நூலை வாசிக்கவும்.

இந்தச் சமத்துவம் அதியுயர் இனத்தில் உள்ளவருக்கும், அல்லது ஏதாவது பொதுவான குறிக்கோள் உள்ள மனிதர்களுக்கு மிடையிலுள்ளது போன்றல்ல.

அல்லாஹ் எம்மை போன்றே மௌஜூதாகவே இருக்கின்றான். எம்மைப் போன்றே பார்க்கின்றான். கேட்கின்றான். மௌஜூத், கேட்டல், பார்த்தல் உள்ளிட்ட வார்த்தைகளெல்லாம் பலவிடங்களிலும் பேசப்படுகின்றன. அல்லாஹுத்தஆலா மௌஜூதாக இருப்பதற்கும், நாம் மௌஜூதாக இருப்பதற்கும் எந்தவித தொடர்பும் கிடையாது!

அவ்வாறு தான் நமது மனித நிலைக்கும், ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் மனித நிலைக்குமிடையில் எவ்வித தொடர்பும் கிடையாது. ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் மனிதத்துவம் ஆயிரம் ஜிப்ரீலின் தகுதியை விடவும் உயர்வானதாகும் என்று ஒரு பாரசீகக் கவிஞர் குறிப்பிடுகிறார்.

3) திருக்குர்ஆனில்

مَثَلُ نُوْرِهِ كَمِشْكَوةٍ فِيْهَا مِصْبَاحُ

*றப்புடைய ஒளிக்கு உதாரணம் ஒரு மாடத்தை போன்று அதில் ஒரு விளக்கு உண்டு!, (அல் குர்ஆன்: 24 : 35).*

இந்தத் திருவசனத்திலும் *"போன்று"* என்ற ஒரு சொற்றொடர் வந்துள்ளது. அதனால், அல்லாஹ்வின் ஒளி, விளக்கின் ஒளியை போன்றுள்ளது என்று கூற முடியுமா?

இது போன்று திருக்குர்ஆனில்,

وَمَا مِنْ دَآبَّةٍ فِى الْاَرْضِ وَلَا طَائِرٍ يَّطِيْرُ بِجَنَاحَيْهِ اِلَّا اُمَمٌ اَمْثَالُكُمْ

*பூமியிலுள்ள எந்தப் பிராணியும் தன் இறக்கைகளால் பறக்கின்ற எந்தப் பறவையும் உங்களைப் போன்ற இனமேயன்றி வேறு இல்லை. (அல் குர்ஆன்: 6 : 38).*

இத்திருவசனத்தில் *"போன்ற"* என்ற ஒரு சொல் இடம் பெற்றுள்ளது. இதை ஆதாரமாகக் கொண்டு சகல மனிதனும் கால் நடை, பருந்து, கழுகு போன்றவை என்று வாதாட முடியுமா? நிச்சயமாக எவரும் வாதாட மாட்டார்கள்.

*"நான் உங்களைப் போன்ற மனிதர்"* என்ற திருவசனத்தில் வரும்.

اَنَّمَا என்ற சொல்லின் மட்டுப்படுத்தல் என்பது மற்றொன்றை சேர்த்துப் பார்ப்பதால் வருவதேயன்றி எதார்த்தமானதல்ல! இதன் படி, நான் இறைவன் அல்ல! இறைவனின் மகனும் அல்ல! உங்களைப் போன்ற கலப்பற்ற அடிமையன்றி வேறில்லை! என்ற கருத்தை கொடுக்கும்.

ஹாரூத், மாரூத் என்ற இரு மலக்குகளும்

اِنَّمَا نَحْنُ فِتْنَةٌ

*நிச்சயமாக நாங்கள் சோதனைக் குரியவர்கள்.(அல் குர்ஆன்: 2: 102),*

என்ற கூற்றும் இதே அடிப்படையில் பார்க்கப்பட வேண்டியதாகும்.

4) நன்கு ஆழமாக சிந்தித்துப் பார்த்தால், ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் ஈமான், இபாதத்துக்கள், தொடர்புகள் உள்ளிட்டவையில் நம்மைப் போன்றவர்கள் அல்ல! அன்னாரின் ஒவ்வொரு தனித்தனி விஷயங்களிலும் பாரிய வேறுபாட்டைப் பார்க்க முடியும்.

ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் கலிமா" *நான் அல்லாஹ்வின் திருத்தூதர்*" ஆகும் انارسول الله இவ்வாறு நாமும் கூறினால் காஃபிராகி விடுவோம்.

ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் ஈமான், றப்பு, சொர்க்கம், நரகம் உள்ளிட்டவையைப் பார்த்த ஈமான் ஆகும். நமது ஈமான் செவிவழி செய்தியாகும். நமக்கு ஈமானின் தூண்கள் ஐந்து! ஆனால், ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கு நான்கு! காரணம் நபியவர்களுக்கு ஜகாத் கடமை இல்லை. *பார்க்க: ஷாமி முன்னுரை.*

அல்லாஹுத்தஆலா கூறுகின்றான்.

وَمِنَ الَّيْلِ فَتَهَجَّدْ بِهِ نَافِلَةً لَّكَ

இரவில் உமக்கு உபரியாக ( நபிலாக குர்ஆனாகிய ) இதனைக் கொண்டு தஹஜ்ஜுத் தொழுவீராக! (அல் குர்ஆன்: 17 : 79).

நமக்கு நான்கு மனைவிகளை வைத்துக் கொள்வதற்கு மட்டுமே அனுமதி உண்டு. நபியவர்களுக்கு இந்த கட்டுப்பாடு இல்லை. விரும்பியளவு

வைத்துக் கொள்ள முடியும்.

நாம் மரணித்த பின் நமது மனைவிகள் இத்தா காலம் முடிந்த பின் ஒருவரைத் திருமணம் செய்ய முடியும்.

ஆனால், நபிகள் திலகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் மனைவிமார்கள் முஃமீன்களின் தாய்மார்கள் ஆவார்கள். அவர்களை ஒருகாலமும் எவரும் திருமணம் செய்ய முடியாது. நாம் மரணித்த பின் நமது சொத்துக்களை வாரிசுகள் பிரித்துக் கொள்வார்கள். நபியவர்களின் சொத்துக்களில் வாரிசுகள் பங்கெடுக்க முடியாது. நமது மலம், சலம் அசுத்தமானவை. நபியவர்களின் கழிவுகள் யாவும் பரிசுத்தமானவை. *(ஷிஃபா, ஷாமி, பத்ஹுல் பாரி).*

மிஷ்க்காத் ஷரீஃபின் விரிவுரை மிர்க்காத்தில் இவ்வாறு பதியப்பட்டுள்ளது.

وَمِنْ ثَمَّ اِخْتَارَ كَثِيْرٌ مِنْ اَصْحَابِنَا طَهَارَةَ فَضْلَاتِه

இதன்படி எமது தோழர்களில் அதிகமானவர்கள் நபியவர்களின் கழிவுகள் சுத்தமானவை என்ற கருத்தை தேர்வு செய்துள்ளனர்.

இதே நூலில்,

وَلِذَا حَجَمَهُ اَبُوْ طَيْبَه فَشَرِبَ دَمَهُ

ஹளறத் அபூ தைபா ரலியல்லாஹு தஆலா அன்ஹு நபியவர்களுக்கு இரத்தம் குத்தி ஹிஜாமத்துச் செய்த குருதியைக் குடித்து விட்டார் என்று எழுதியுள்ளார்கள்.

ஹாஃபிள் இப்னு ஹஜர் அஸ்கலானி ரஹ்மத்துல்லாஹி பின்வருமாறு எழுதுகின்றார்கள்.

وَقَدْ تَكَاثَرَتِ الْاَدِلَّةُ عَلَي طَهَارَةِ فضْلَاتِهِ وعدُّ الْاَئِمَّةُ ذَلِكَ فِي خَصَائِصِهِ .فتح البخاري ،ج ١- ص، ٨١٢

நிச்சயமாக நபிகள் நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் சிறப்பான கழிவுகள் யாவும் பரிசுத்தமானவை என்பதற்கு ஏராளமான ஆதாரங்கள் இருக்கின்றன. இவற்றை நபியவர்களின் தனிச்சிறப்புகளாக இமாம்கள் கணித்துள்ளனர்.

*(ஆதாரம்: பத்ஹுல் பாரி 218/1 , உம்தத்துல் காரி 778/1, றத்துல் முக்தார். 232/1, தப்ஸீர் அஸீஸி , ஸூறா வழ்ழுஹா, ஸர்க்கானி ஷறஹு ஷிஃபா 227/1, ஃபைழுல் பாரி ஷறஹு ஸஹீஹில் புகாரி 289/1, இன்னும் ஏராளமான நூற்களிலும் பார்க்க முடியும்.)*

மேற்கண்டவை ஷரியத் ரீதியான சட்டங்களில் உள்ள சில வேற்றுமையாகும். இவை தவிர பல நூறாயிரம் வேற்றுமைகளை முன்வைக்க முடியும்.

நபிகள் நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் எந்த ஒரு விஷயத்திலும் நமக்கு ஒப்பு இல்லை. ஒரு விஷயத்தை தெளிவாக மனதில் பதித்துக் கொள்ளுங்கள்.! *"நபியவர்கள் ஒப்புவமை இல்லாத படைப்பாளனின் ஒப்புவமை இல்லாத நல்லடியார் ஆவார்கள்".*

ஓர் உருது கவிஞர் பாடுகிறார்.

நபியவர்கள் நிகரற்ற ஹக்குத்தஆலாவின் வெளிபாடு! (மழ்ஹர்) ஆவார்கள்.

அப்படியிருக்க, உம்மை போன்றவர் என்பது எப்படி சாத்தியமாகும்.? உங்களைப் போன்றவர் எவரும் இல்லை! உங்களின் படித்தரத்தை எட்டியவரும் எவரும் எம்மில்லை! உங்களைப் போன்ற எவரையும் எம்மில் காணவும் முடியாது.!

இவ்வளவு பாரிய வேறுபாடுகள் இருக்கையில் எம்மைப் போன்றவர் என்பதற்கு என்ன பொருள்?

மேற்கண்ட திருவசனத்தில் بشر مثلكم உங்களைப் போன்ற பஷர் என்று குறிப்பிடப்பட்டுள்ளதே தவிர انسان مثلكم உங்களைப் போன்ற மனிதன் என்று குறிப்பிடப்படவில்லை.

தூ பஷர் ذو بشر என்றால், வெளிப்படையான முகம், மற்றும் அடையாளம் உள்ளவர் என்பது கருத்தாகும். புஷ்றா بشرى என்பது வெளித் தோற்றத்தின் நிறத்திற்குக் கூறப்படும். இதன்படி இதன் பொருள்,

வெளிக் கோலத்தில் நிறத்திலும், பார்வையிலும், தோற்றத்திலும் உங்களை ஒத்தவர். உடல் உறுப்புகளின் அளவு ஒன்றாகவே உள்ளது. ஆனால், எதார்த்தத்தில் எனக்கு வஹி வருகிறது. அதனால், நாங்கள் வஹிக்குரியவர்கள்.

இக்கருத்துக்களும் கூட வெளிப்படையானது மட்டும் தான். இல்லாவிட்டால் நமது உறுப்புக்களுக்கும் நபிகள் கோமான் முஹம்மது

முஸ்தஃபா ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் புனித உறுப்புகளுக்குமிடையில் எவ்வித சம்பந்தமும் கிடையாது.

அல்லாஹு தஆலாவின் ஆற்றலை பாருங்கள்.! நபிகள் திலகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் புனித உமிழ் நீர் உவர்ப்பு கிணற்று நீரில் பட்டதும், மதுரமான நீரானது. ஹுதைபியாவில் வறண்டு போன கிணற்றில் பட்டதும் நீர் பொங்கி வந்தது.

ஹளரத் ஜாபிர் ரலியல்லாஹு தஆலா அன்ஹு அவர்களின் கறிக் குளம்பில் பட்டதும் ஆட்டிறைச்சியும், எலும்பும், ஆணமும் (குழம்பும்) அதிகரித்தது. குழைத்த மாவில் பட்டதும் அபிவிருத்தி அடைந்தது.

ஹளரத் அபூபக்கர் ஸித்தீக் ரழியல்லாஹு அன்ஹு அவர்களின் காலில் பட்டதும் விஷம் நீங்கி விட்டது. ஹளறத் அப்துல்லாஹ் இப்னு உதைக் ரழியல்லாஹு தஆலா அன்ஹு அவர்களின் உடைந்து போன காலில் பட்டதும் எலும்புகள் இணைந்து கொண்டன.

ஹளறத் அலி கர்ரமல்லாஹு வஜ்ஜஹு அவர்களின் நோய் பட்ட கண்ணில் பட்டதும் கூரிய பார்வையைப் பெற்றது. பல்லாயிரம் ரூபாய் செலவழித்தாலும் இத்தகு பயன்களைப் பெற்றுக் கொள்ள முடியாது.!

நபிகள் நாதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் உச்சி முதல் உள்ளங்கால் வரையிலான புனித உறுப்புக்களின் தனிச் சிறப்புகளை அறிய விரும்பினால் நமது "ஷஃனே ஹபிபுர் ரஹ்மான்"! என்ற நூலைப் பார்க்கவும்.

நமது ஒவ்வொரு உறுப்பின் சாயலும் நபிகள் கோமான் முஹம்மது முஸ்தஃபா ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் எந்த உறுப்பின் சாயலைப் போன்றுமில்லை. வேந்தர் நபியவர்களின் வியர்வை கஸ்தூரி, அம்பரை விட மணம் மிக்கதாகும். ஸல்லல்லாஹு அலா முஹம்மத் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்.

6)ஷைகு அப்துல் ஹக் முஹத்திதுத் திஹ்லவி ரஹ்மதுல்லாஹி அலைஹி தங்களுடைய மதாரிஜுன் நுபுவ்வத் என்ற நூலில்"*சந்தேக நிவர்த்தி*" என்ற பாடத்தில் பின்வருமாறு கூறுகின்றார்கள்.

"அல்லாஹ்வின் கை (நபி) அவர்களின் கைகளுக்கு மேல் இருக்கிறது"!"

அல்லாஹ்வின் ஒளிக்கு உதாரணம் மாடக் குழியைப் போன்றது" என்பன போன்ற திருவசனங்கள் வெளிப்படையில் அல்லாஹ்வின் தகுதிக்கு மாற்றமாக

இருப்பதால், அத்திருவசனங்களை நேர்பொருள் பொருந்தாத முதஷாபிஹத் திருவசனங்களாக கணிக்கப்பட்டுள்ளன.

இவ்வாறு தான் *"நானும் உங்களைப் போன்ற மனிதன்"* என்ற திருவசனமும் முஸ்தஃபா நபியவர்களின் தகுதிக்கு வெளிப்படையில் மாறாகத் தெரிகின்றது. அதனால், இத்திருவசனமும் நேர் பொருள் பொருந்தாத முதஷாபிஹத்தின் வகையில் சேர்க்கப்பட வேண்டியுள்ளது.

இதன்படி, இத்திரு வசனங்களுக்கு வெளிப்படையான ஆதாரம் எடுப்பது தவறாகும்.

7) தொடர் நோன்பு நோற்றல் தொடர்பான விஷயத்தில் ايكم مثلي என்னைப் போன்று உங்களில் யார் உள்ளார்? என்று நபிகள் நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கேட்டார்கள்.

உட்கார்ந்து நபில் தொழுத போது ولكن لست كاحد منكم எனினும் நான் உங்களில் ஒருவரைப் போலும் இல்லை என்று பகர்ந்தார்கள்.

ஸஹாபாக்கள் பல்வேறு சந்தர்ப்பங்களில் நபியவர்களைப் اينا مثله போன்று எம்மில் யார் தான் இருக்கிறார்கள்? என்று கூறுவார்கள்.

ஹதீது ஷரீஃபுகளும் ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் எம்மைப் போன்று இல்லை என்று கூறுகின்றன. ஆனால், "நான் உங்களைப் போன்ற மனிதன் தான்" என்ற திருவசனத்தின் மேலோட்டமான கருத்து நபியவர்கள் நம்மைப் போன்றவர்கள் என்பதாகவே புரிகின்றது. அதனால், இந்த திருவசனத்திற்கு பொருத்தமான பொருள் கூற வேண்டியது அவசியமாகும்.

8: தஃப்ஸீர் ரூஹுல் பயானில் ஸூரத்துல் மரியம் ஆரம்பத்தில் பின் வருமாறு எழுதப்பட்டுள்ளது.

ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கு மூன்று விதமான கோலங்கள் இருக்கின்றன.

01□ மனித கோலம்.

02 □ஹக்கியத்தான கோலம்.

03 □மலக்கானியத்தான கோலம்.

"நான் உங்களைப் போன்ற மனிதர்தான்" என்ற திருவசனம் மனித

கோலத்தைப்பற்றிக் கூறுகின்றது.

"என்னைக் கண்டவர் ஹக்கைக் கண்டார்" என்ற ஹதீஸ், ஹக்கானியத்தான கோலத்தைப் பற்றிக் குறிப்பிடுகின்றது.

"சில நேரங்களில் எனக்கு அல்லாஹ்விடத்தில் ஒரு நெருக்கம் கிட்டுகின்றது. அப்போது அந்த இடத்தில் முகர்ரபான மலக்கோ, முர்ஸலான றஸூலோ நெருங்க முடியாது! என்ற ஹதீஸ், மலக்கானியத்தான கோலத்தைக் குறிப்பிடுகின்றது.

மிஃறாஜ் இரவில் ஸித்ரத்துல் முன்தஹா என்ற இடத்தை அடைந்ததும் ஹளறத் ஜிப்ரீல் அலைஹிஸ்ஸலாம் அவர்களின் சக்தி முற்றுப் பெற்றுவிட்டதிலிருந்து நபிகள் கோமான் முஹம்மது முஸ்தபா ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் பஷரிய்யத்தின் ஆற்றல் ஆரம்பிக்கின்றது.

"நானும் உங்களைப் போன்ற மனிதர் தான்" என்ற திருவசனத்தில் பெருமானார் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் ஒரு கோலம் மட்டுமே குறிப்பிடப்பட்டுள்ளது.

9) இத்திருவசனத்தில், *"உங்களைப் போன்ற மனிதர்"* என்று குறிப்பிடப் பட்டுள்ளது தவிர, எந்தப் பண்பில் உங்களைப் போன்றவர் என்று குறிப்பிடப்படவில்லை.

அதாவது, நீங்கள் அல்லாஹ்வாக இல்லாமலும், அல்லாஹ்வின் குமாரனாக இல்லாமலும்; அல்லாஹ்வின் பண்புகளைக் கொண்டுமில்லாத அவனது தனித்த அடியானாக இருப்பது போன்றே நானும் அல்லாஹ்வின் அடியார் ஆகும். நான் அல்லாஹ்வும் அல்ல! அவனது குமாரனும் அல்ல! என்பது இதன் பொருளாகும்.

நஸாறாக்கள் நபி ஈஸா அலைஹிஸ்ஸலாம் அவர்களின் சில முஃஜிஸாத்துக்களைப் பார்த்துவிட்டு அவர்களை அல்லாஹ்வின் குமாரர் என்றார்கள். நூற்றுக்கணக்கான முஃஜிஸாத்துக்களைக் கண்ட நீங்களும் இவ்வாறு கூறக் கூடாது! மாறாக அவர் அல்லாஹ்வின் நல்லடியார், அவனது திருத்தூதரும் ஆவார்.என்று தான் கூறவேண்டும்.

فَقَالَ الْمَلَأُ الَّذِيْنَ كَفَرُوْا مِنْ قَوْمِهِ مَا نَرَاكَ اِلَّا بَشَرًا مِّثْلَنَا

*அப்பொழுது அவருடைய சமுகத்தாரிலுள்ள காஃபிரான தலைவர்கள் (நூஹ் நபியை நோக்கி) உம்மை எங்களைப் போன்ற ஒரு மனிதராகவே தவிர (வேறு எந்தத் தகுதியுடையவராகவும்) நாங்கள் காணவில்லை. (அல் குர்ஆன்: 11 : 27).*

மேற்கண்ட திருவசனத்தின் விளக்கத்தில் தஃப்ஸீர் கபீரில் பின் வருமாறு எழுதப்பட்டுள்ளது.

"நபி" என்பவர் மலக்காக இல்லாமல் மனிதராக இருப்பதன் நோக்கம் மலக்காக இருந்திருந்தால், அவர்களின் முஃஜிஸாத்தை மலக்கின் ஆற்றல் என்பர். நபிமார்கள் மனிதராக இருந்து கொண்டே முஃஜிஸாத் காட்டும் போதுதான் அவர்களின் பூரணத்துவம் தெரிய வரும். அதனால் நபிமார்களின் மனிதத்துவம் அவர்களின் பூரணத்துவமாகும்.

நீங்கள் மனிதராக இருக்கையிலேயே பூரணத்துவதை நாம் காட்டுகிறோம். நீங்களும் காட்டுங்கள்! என்பது இத்திருவசனத்தின் நோக்கமாகுமாகிவிட்டது.

10) இது போன்று பல வார்த்தைகளை நபிமார்கள் பாவித்து இருப்ப தெல்லாம் அவர்களின் பூரணத்துவத்தை காட்டுவதற்காகும். இவ்வாறான வார்த்தைகளை அவர்கள் விடயத்தில் மட்டும் கூறுவது குறை கூறுவதாக அமையும்.

நபி ஆதம் அலைஹிஸ்ஸலாம் அவர்கள்,

رَبَّنَا ظَلَمْنَا أَنفُسَنَا

*"எங்கள் நஃப்ஸுக்கு நாங்களே அநியாயம் செய்து கொண்டோம்" (அல் குர்ஆன்: 7: 23).* என்றும்,

أَنِّي كُنْتُ مِنَ الظَّالِمِينَ

*"நான் அநியாயக்காரர்களில் ஒருவனாகிவிட்டேன்" (அல் குர்ஆன்: 21:87).*

என்றும்,

فَعَلْتُهَا اِذًا وَّاَنَا مِنَ الضَّآلِّيْنَ

"அப்பொழுது நான் அறியாதவர்களில் உள்ளவனாயிருந்த நிலையில் அதனை நான் செய்து விட்டேன். (அல் குர்ஆன்: 26 : 20). என்றும் கூறினார்கள்.

இவர்களின் இந்தக் கூற்றுக்களை ஆதாரமாகக் கொண்டு அநியாயக்காரர்கள்,

வழிகேடர்கள் என்று இவர்களைக் கூறத் துணிவுண்டா? அவ்வாறு கூறினால் ஈமான் இல்லாத காஃபிராகி விடுவான். இவ்வாறுதான் நபிகளாரை சாதாரண மனிதன் என்று கூறுபவனின் நிலையும் என்பதை கவனத்தில் கொள்க!

*வாதம்: 02*

## ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் தன்னைப் பற்றி

اَكْرِمُوْا اَخَاكُمْ

நீங்கள் உங்கள் சகோதரனாகிய (எனக்கு) சங்கை செய்யுங்கள்! என்று கூறினார்கள். இதன் மூலம் நபிகள் நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் நமது சகோதரர்கள் ஆவார்கள். சிறிய சகோதரர் அல்ல! பெரிய சகோதரர் ஆகும்.

*வாதம்: 03*

திருக்குர்ஆன் கூறுகிறது

وَاِلٰى عَادٍ اَخَاهُمْ هُوْدًا

*இன்னும் ஆதின் (சமுகத்தினர்) பால் அவர்களுடைய சகோதரராகிய ஹூதை (ரஸூலாக) ஆம் அனுப்பி வைத்தோம். (அல் குர்ஆன்: 7 : 65).*

وَاِلٰى ثَمُوْدَ اَخَاهُمْ صٰلِحًا

*இன்னும் தமூ(து கூட்டத்)தின் பால் அவருடைய சகோதரர் ஸாலிஹை (நாம் ரஸூலாக அனுப்பினோம்) (அல் குர்ஆன்: 7 : 73).*

وَاِلٰي مَدْيَنَ اَخَاهُمْ شُعَيْبًا

*மத்யனின் (சமூகத்தின்) பால் அவர்களுடைய சகோதரர் ஷுஐபை (நபியாக அனுப்பினோம்). (அல் குர்ஆன்: 7 : 85).*

மேற்கண்ட திருவசனங்களில் அல்லாஹுத்தஆலா" ஆத், தமூது, மத்யன் கூட்டங்களுக்கு அனுப்பப்பட்ட நபிமார்களை சகோதரர் என்று குறிப்பிட்டுள்ளான். இதனால் நபிமார்கள் அவர்களின் சமூகத்தின் சகோதரர்கள் ஆவார்கள்.

*பதில்:*

ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் தங்களின் பணிவின் காரணமாக தன்னைத் தாழ்த்தி *"நான் உங்களின் சகோதரர்"!* என்று கூறியதை வைத்து நாமும் பெருமானாரை நமது சகோதரர் என்று கூறுவதற்கான அனுமதி எப்படிக் கிடைத்தது.?

அரசர் தனது குடிமக்களை பார்த்து *"நான் உங்களின் சேவகன்"!* என்று கூறலாம். ஆனால், குடிமக்கள் அரசரை எங்களின் ஊழியன் என்று கூறுவதற்கு எவ்வித உரிமையும் கிடையாது!

ஹளறத் ஷுஐப் அலைஹிஸ்ஸலாம், ஹளறத் ஸாலிஹ் அலைஹிஸ்ஸலாம், ஹளறத் ஹூத் அலைஹிஸ்ஸலாம் உள்ளிட்டோர் முறையே மத்யன், தமூது, ஆத் கூட்டத்தைச் சேர்ந்தவர்கள்.

வேறு கூட்டத்தைச் சேர்ந்தவர்கள் அல்ல! இதை தெரிவிப்பதற்காகவே அவர்களின் சகோதரர் என்று அல்லாஹுத்தஆலா குறிப்பிட்டான். இக் கூட்டத்தார்கள் நபிமார்களை சகோதர்கள் என்று கூறுங்கள் என்று எங்கே அனுமதி வழங்கியுள்ளான்.?

முதல் அத்தியாயத்திலேயே நபிமார்களை சமத்துவமான புனைப் பெயர்களால் அழைப்பதை ஹறாம் என்பதை தெளிவுபடுத்தியுள்ளோம். சகோதரர்கள் என்ற சொல்லும் சமத்துவத்தை குறிக்கும் பதமேயாகும். தன்னை சகோதரன் என்று மகன் விளிப்பதை தந்தை ஒரு போதும் பொறுத்துக் கொள்ள மாட்டான்.

*வாதம்: 04*

திருக்குர்ஆன் கூறுகின்றது.

اِنَّمَا الْمُؤْمِنُوْنَ اِخْوَةٌ

*நிச்சயமாக முஃமின்கள் (தமக்கிடையே) சகோதரர்களே!. (அல் குர்ஆன்: 49 : 10).*

ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களும் முஃமின்தான். அதனால், அவர்களும் முஸ்லிம்களாகிய நமது சகோதரர்கள் ஆவார்கள். அதனால் ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களை நமது சகோதரர்கள் என்று ஏன் கூற முடியாது?

## *பதில்:*

உங்கள் வாதப்படி அல்லாஹுத் தஆலா வையும் நமது சகோதரர் என்று கூறுங்கள்.! காரணம், அல்லாஹுத்தஆலா திருமறையில்,

اَلْمَلِكُ الْقُدُّوْسُ السَّلٰمُ الْمُؤْمِنُ

(அல் குர்ஆன்: 59: 23). என்ற திருவசனத்தில் தன்னையும் முஃமின் என்று குறிப்பிடுகின்றான்.

இதன்படி ஒவ்வொரு முஃமினும் ஒருவருக்கொருவர் சகோதரராவார். அதனால், அல்லாஹு ஸுப்ஹானஹு தஆலாவும் (மஆதல்லாஹ்) முஃமின்களின் சகோதரனாவான்.

மேலும், சகோதரனின் மனைவி நமக்கு சகோதரியாவாள். அவளை நாம் திருமணம் முடித்துக் கொள்ள முடியும். ஆனால், நபிமார்களின் மனைவிமார்கள் திருக்குர்ஆனின் கூற்றுப்படி நமது அன்னை ஆவார்கள். அவர்களைத் திருமணம் முடிப்பது ஹராமாகும். இதனால், நபி என்பவர் நமக்கு தந்தையைப் போன்றவர். தந்தையின் மனைவிதான் தாயார். தவிர சகோதரி அல்ல!

அன்பரே! நாமும் முஃமின்தான். ஆனால் நபியவர்களின் ஈமானைப் பற்றி இமாம் பூஸரி ரஹ்மத்துல்லாஹி அலைஹி தனது புர்தா ஷரீஃபில் கூறுகின்றார்கள்.

فَالصِّدْقُ فِي الْغَارِ وَالصِّدِّيقُ لَمْ يَرِمَا

தௌர் குகையில் உண்மையும் இருந்தது. உண்மையாளரு(மான ஸித்தீக்குல் அக்பரு)ம் இருந்தார். என்று அழகாக பாடுகின்றார்கள்.

ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள்

முஃமின் என்ற பொதுவான வார்த்தையில் கூட்டானவர்கள். இவ்வாறுதான் றப்புத் தஆலாவும் முஃமின் என்ற வார்த்தையில் கூட்டானவனாவான். எதார்த்தத்தில் அப்படி அல்ல. நாம் ஒரு விதம்! அவர்கள் வேறு ஒரு விதம்!

*வாதம்: 05*

ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களும், நபி ஆதம் அலைஹிஸ்ஸலாம் அவர்களின் பிள்ளைகளைச் சேர்ந்தவர்கள்தான். எம்மைப் போன்றே உண்ணுகிறார்கள், பருகுகிறார்கள், உறங்குகிறார்கள், நோய்வாய்ப் படுகிறார்கள், மரணிக்கிறார்கள். இத்தனையிலும் கூட்டாக இருக்கும் போது அவர்களை மனிதர் என்றும், நமது சகோதரர் என்று ஏன் குறிப்பிட முடியாது?

*பதில்:*

இந்தக் கேள்விக்கான தக்க பதிலை மஸ்னவி ஷரீபில் மௌலானா ஜலாலுத்தீன் ரூமி ரஹ்மத்துல்லாஹி அலைஹி மிக அழகாக வழங்கு கின்றார்கள்.

நாமும், நபிமார்களும் மனிதன் என்று காஃபிர்கள் கூறுகின்றனர். காரணம், நாமும் அவர்களும் உண்பதிலும், உறங்குவதிலும் ஒன்று போல் உள்ளோம். இவை இரண்டிலும் எத்துணை வேறுபாடு உண்டு என்று இப்படி கூறுகின்ற அந்தகர்கள் அறிவதில்லை.

குழவியும், தேனியும் ஒரே பூவில் இருந்து மகரந்தத்தை உறிஞ்சுகின்றன. ஆனால், குழவியில் விஷமும், தேனியில் தேனும் உற்பத்தியாகின்றது.

கலைமானும், கஸ்தூரிமானும் ஒரே ஓடையில் நீர் அருந்தி, ஒரே தரையில் புல் மேய்கின்றன. ஒன்று சாணம் போடுகிறது. மற்றதில் கஸ்தூரி உற்பத்தி யாகின்றது. சாதாரணமானவனின் சாப்பாடு கழிவாக மாறுகிறது. நபிமார்கள் உண்பதால் அல்லாஹ்வின் ஒளிப் பிரகாசம் உருவாகிறது.

திருக்குர்ஆனும், எமது புத்தகமும் ஒன்று தான்! என்பது போன்று தான் மேற்கண்ட கேள்வியும் அமைந்திருக்கிறது. காரணம், ஒரே மையால் ஒரே தாளில் ஒரே எழுதுகோலால் எழுதப்படுகின்றன. இரண்டும் ஒரே விதமான எழுத்துக்கள். ஒரே அச்சகத்தில் அச்சடிக்கப்படுகின்றன. ஒரே விதமான பைண்டிங் செய்யப்படுகின்றது. ஒரே அலமாரியில் அடுக்கப் படுகின்றன. இப்படி இருக்க வித்தியாசம் எப்படி வரும்?

வெளிப்படையான இவைகளை வைத்து திருக்குர்ஆனும், சாதாரணமான

இதயமும் ஒன்றுதான்! என்று அடிமுட்டாள் கூட கூறத் துணிய மாட்டான். அப்படியிருக்க, திருக்குர்ஆனுக்குச் சொந்தக்காரரையும் எம்மையும் எவனாவது சமப்படுத்துவானா?

பெருமானார் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் திருப்பெயரை உச்சரிப்பவனுக்கு இறை சமூகம் செல்லும் மிஃறாஜ் கிட்டுகின்றது.

நபியவர்களுக்கு தொழுகையில் ஸலாம் கூறுகின்றோம். சகல நபிமார்களும் நபியவர்களின் சேவகர்கள்.! இந்த அதிசயப் பண்புகள் அதி உயர் மலக்குகளுக்கும் கூட கிடையாது.!

ஒரு கவிஞர் அழகாக பண்ணிசைக்கிறார்.

محمد بشر لا كالبشر ياقوت حجر لا كالحجر

நபியவர்கள் மனிதர்தான், சாதாரண மனிதர் அல்ல! மாணிக்கம் கல் தான். சாதாரண கல்லல்ல!

*வாதம்: 06*

றஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களை *"பஷர்"* என்று கூறுவது ஹறாம் என்றால் *"இன்ஸான்", "அப்து"* என்று கூறுவதும் ஹறாம் தான்.! இவற்றுக்கான பொருளும் ஏறத்தாழ நெருக்கமாகவே இருக் கின்றது. கலிமாவில் *"அவனுடைய அடியாரும் ரஸூலும் ஆவார்கள்"* என்று ஏன் கூறுகின்றீர்கள்.?

*பதில்:*

"பஷர்" என்ற வார்த்தையை காஃபிர்கள் அவமதிக்கும் எண்ணத்தில் கூறினர். நபியவர்களை அல்லாஹுத்தஆலா இன்ஸான், அப்து என்று கண்ணிய மாகவே கூறியுள்ளான்.

خَلَقَ الْاِنْسَانَ .عَلَّمَهُ الْبَيَانَ

*இன்ஸானைப் படைத்தான். அவருக்கு விளக்கத்தைக் கற்றுக் கொடுத்தான். (அல் குர்ஆன்: 55: 3, 4).*

سُبْحٰنَ الَّذِیْٓ اَسْرٰی بِعَبْدِہٖ

*இரவில் தனது அடியாரை வழி நடத்தியவன் தூயவன். (அல் குர்ஆன்: 17: 1).*

உள்ளிட்ட திருவசனங்களில் கண்ணியத்தோடு இன்ஸான், அடிமை என்று கூறியுள்ளான். இவ்வாறு கண்ணியத்தோடு கூறுவது ஆகுமானது.

"றாஇனா" رَاعِنَا உன்ளுர்னா اُنْظُرْنَا ஆகிய இரு வார்த்தைகளும் ஒரே கருத்தைக் கொண்ட இரு சொற்கள். ஆயினும் காஃபிர்கள் "றாஇனா" என்ற சொல்லை அவமானப்படுத்தும் எண்ணத்தில் கூறியதால், றாஇனா என்று கூறுவது ஹராமாகும். அவ்வாறு தான் பஷர் என்பதும் ஹராமாகும்.

டாக்டர் இக்பால் அழகாகக் கூறுகின்றார்.

நபியவர்களின் அடிமைத்துவத்தால் ரப்பின் தகுதி வெளிப்பட்டது. ரப்பின் மகத்துவத்தால் நமது அடிமைத்துவம் ஜொலித்தது. அமைச்சரும், சிப்பாயும் அரசரின் ஊழியர்கள்தான். அமைச்சரால் அரசரின் தகுதி வெளிப்பட்டது. அரசரின் பாதுகாவலர் என்ற ரீதியில் பாதுகாவலருக்கு கண்ணியம் கிட்டியது.!

*வாதம்: 07*

ஹளறத் ஆயிஷா சித்தீக்கா ரலியல்லாஹு தஆலா அன்ஹா அவர்களின்ஓர் அறிவிப்பு ஷமாயிலுத் திர்மிதியில் பின்வருமாறு பதியப்பட்டுள்ளது.

ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் மனிதர் களில் ஒரு மனிதர் என்றார்கள். அன்னை ஆயிஷா ஸித்திகா ரலியல்லாஹு தஆலா அன்ஹா அவர்களை திருமணம் முடிக்க பெண் கேட்ட போது அபூபக்கர் ஸித்தீக் ரலியல்லாஹு தஆலா அன்ஹு நபியவர்களை பார்த்து, நான் உங்களின் சகோதரர்! எனது மகள் உங்களுக்கு ஆகுமா? என்று கேட்டார்கள்.

பாருங்கள்! அன்னை ஆயிஷா ஸித்திகா ரலியல்லாஹு தஆலா அன்ஹா நபியவர்களை பஷர் என்றும், ஹளறத் அபூபக்கர் ஸித்தீக் ரழியல்லாஹு தஆலா அன்ஹு தனது சகோதரர் என்றும் கூறியுள்ளனரே!

ஹளறத் ஆயிஷா ஸித்தீகா அல்லது அபூபக்கர் ஸித்தீக் ரலியல்லாஹு

தஆலா அன்ஹுமா ஆகிய இருவரும் நபியவர்களை பஷர், சகோதரர் என்று கூறவில்லை. நிர்பந்த நிலையில் அந்த வார்த்தைகளை உபயோகித்துள்ளனர்.

நபியவர்களின் வாழ்க்கை மிக சாதாரணமானதாகவும், சாதாரணமான முஸ்லிம்களின் வாழ்க்கை போன்றும் கழிந்தது.

தனது வேலைகளை தனது கையாலே செய்வார்கள் என்று கூறினார்கள்.

ஹளறத் ஸித்தீக்குல் அக்பர் ரலியல்லாஹு தஆலா அன்ஹு அவர்கள் நபியவர்களிடம் மார்க்கச் சட்டத்தை கேட்டார்கள்.

நபியவர்கள் ஹளறத் அபூபக்கர் ஸித்தீக் ரலியல்லாஹு தஆலா அன்ஹு அவர்களை சகோதரரே! என்று அழைப்பார்கள். இவ்வாறு அழைப்பதால் உண்மையான சகோதரின் சட்டம் வருமா? இல்லையா? எனது மகள் உங்களுக்கு ஹலாலாவாரா? இல்லையா? என்று கேட்டார்கள்.

நாமும் அகீதாவின் பாடத்தில் நபியவர்கள் மனிதர்களாகவே இருந்தார்கள் என்றே கூறுகின்றோம்.

ஹளறத் இப்றாஹீம் கலீலுல்லாஹி அலைஹிஸ்ஸலாம் அவர்கள் நிர்பந்த நிலையில் ஹளறத் ஸாரா றழியல்லாஹு அன்ஹா அவர்களை இவர் எனது சகோதரி என்றார்கள். இவ்வாறு கூறியதால் ஸாரா நபி இப்ராஹீம் அலைஹிஸ்ஸலாம் அவர்கள் சகோதரி என்று அழைத்தார்கள் என்று ஆகாது.!

நாம் இப்போது பொது நடைமுறையை கூறுகிறோம்.

ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் உறவு முறையில் அன்னை ஸித்தீகா ரலியல்லாஹுதஆலா அன்ஹா அவர்களுக்கு கணவர்.

ஹளரத் சையிதுனா அலி ரலியல்லாஹு தஆலா அன்ஹு நபி அவர்களுக்கு சகோதரர்!

ஹளரத் அப்பாஸ் ரலியல்லாஹு தஆலா அன்ஹு நபிஅவர்களுக்கு சகோதரரின் மகன்!

இவர்களில் யாரும் ஹதீதுகளை அறிவிப்புச் செய்யும் போது அன்னை ஸித்தீக்கா ரலியல்லாஹு தஆலா அன்ஹா எனது கணவர் என்றோ, ஹளரத் அலி, ஹளறத் அப்பாஸ் ரலியல்லாஹு அன்ஹுமா ஆகிய இருவரும் எனது சகோதரர், சகோதரனின் மகன் என்றோ கூறிய தில்லை. அனைவரும் ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் கூறினார்கள் என்று தான் கூறினார்கள்.

உறவு முறையிலான சகோதரர்கள்கூட தங்களின் சகோதரர் என்று கூறாத போது, அடிமட்டத் தொண்டர்களாகிய நமக்கு எங்கிருந்து வந்தது இந்த

உரிமை?

இஸ்லாத்தின் ஆரம்ப காலத்தில் ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுடன் தனியாகப் பேசுவதற்கு முன், சிறிதளவு சதகாவை முன் வைக்க வேண்டும்.

அல்லாஹுத்தஆலா கூறுகின்றான்.

يٰٓاَيُّهَا الَّذِيْنَ اٰمَنُوْٓا اِذَا نَاجَيْتُمُ الرَّسُوْلَ فَقَدِّمُوْا بَيْنَ يَدَىْ نَجْوٰىكُمْ صَدَقَةً ذٰ لِكَ خَيْرٌ لَّكُمْ وَاَطْهَرُ فَاِنْ لَّمْ تَجِدُوْا فَاِنَّ اللّٰهَ غَفُوْرٌ رَّحِيْمٌ

*முஃமின்களே! (நம்) ரஸூலிடம் நீங்கள் இரகசியம் பேசினால் உங்களுடைய இரகசியப் பேச்சுக்கு முன்னதாக ஏதேனும் ஒரு தர்மத்தை முற்படுத்தி வையுங்கள். அது உங்களுக்குச் சிறந்ததும், பரிசுத்தமானதுமாகும். எனினும் நீங்கள் (தர்மம் செய்ய வசதி) பெற்றுக் கொள்ளவில்லையானால் நிச்சயமாக அல்லாஹ் மிக்க மன்னிக்கிறவன், மிகக் கிருபையுடையவன். (அல் குர்ஆன்: 58 : 12).*

ஸெய்யிதுனா அலி ரலியல்லாஹு தஆலா அன்ஹு இதன் படி அமல் செய்துள்ளார்கள். ஒரு தர்மம் கொடுத்து 10 மார்க்க சட்டங்களை கற்றுக் கொண்டார்கள். *ஆதாரம்: தஃப்ஸீர் காஸின்.*

பின்னர் இந்த சட்டம் மாற்றப்பட்டது. ஆயினும்; நபிகள் நாதர் ஸல்லல்லாஹு அலைஹிஸ்ஸலாம் அவர்களின் அதி உயர் தகுதி இதன் மூலம் தெரிந்துவிட்டது.

தொழுகையில் அல்லாஹுத்தஆலா வோடு வசனிப்பதாயின், வுழு செய்ய வேண்டும். நபிகள் நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுடன் வசனிப்பதாயின் தர்மம் கொடுக்க வேண்டும். இப்படியிருக்க, சகோதரரே! என்பது எப்படி சாத்தியமாகும்.?

முற்றும்

والحمد لله رب العالمين . بجاه سيد المرسلين . وما توفيقي الا بالله العلي العظيم

# ஆய்வு-6

# யாறஸூலல்லாஹ் என்று அழைப்பது பற்றிய ஆய்வு!

## அத்தியாயம்: 1

ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களை தூரத்திலிருந்து, அல்லது சமீபத்தில் இருந்து அழைப்பது ஆகுமானது! அன்னாரின் ஜீவிய காலத்திலும் சரி, அன்னாரின் பின்பும் சரி, தனிமனிதன் யாரஸூலல்லாஹ்! என்று அழைத்தாலும், கூட்டாக யாரஸூலல்லாஹ்! என்று கூறினாலும் சரி, எல்லாவிதத்திலும் ஆகுமானது தான்!

இதனை இரு பாடங்களாக அமைத்துள்ளோம்.

முதலாவது பாடத்தில் யாரஸூலல்லாஹ் என்பதற்கான ஆதாரங்களையும், இரண்டாவது பாடத்தில் குற்றச்சாட்டுகளையும், அதற்கான பதில்களையும் தந்துள்ளோம்.

## பாடம் : 1

## யா ரஸூலுல்லாஹ்! என்பதற்கான ஆதாரங்கள்!

ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களை அவர்களின் செயல், கண்ணியமிக்கவர்களின் செயல், மற்றும் உம்மத்தின் செயல் மூலம் நிரூபணமாகியுள்ளது!

திருக்குர்ஆன் பல்வேறு இடங்களில் ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களை விளித்துக் கூறியுள்ளது.

உதாரணமாக, யாஅய்யுஹன் நபிய்யு! யாஅய்யுஹர் றஸூல்! யாஅய்யுஹல் முஸம்மில், யாஅய்யுஹல் முதத்திர்! உள்ளிட்டவையைக் குறிப்பிடலாம்.

மேற்கண்ட சகல திருவசனங்களிலும் ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களை விளித்துக் கூறப்பட்டுள்ளது!

ஏனை நபிமார்களை அவர்களின் பேர் கூறியே திருக்குர்ஆன் அழைத்துள்ளது. உதாரணமாக யா மூஸா, யா ஈஸா, யா யஹ்யா, யா இப்ராஹிம்,யாஆதம் உள்ளிட்டவையைக் குறிப்பிடலாம்.

ஆயினும், ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களை மட்டும் சிறப்புப் பெயர்களால் கண்ணியமாக குறிப்பிட்டிருப்பது ஈண்டு கவனிக்கத்தக்கதாகும். பொதுவாக முஸ்லிம் மக்களையும் மூஃமின்கள் என்று தான் திருக்குர்ஆன் அழைக்கின்றது!

நபிகள் நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களை சிறப்பான புனைப்பெயர்களால் அழைக்க வேண்டும் என்று திருக்குர்ஆன் கட்டளையிடுகிறது.

திருக்குர்ஆன் குறிப்பிடுகிறது.

لَا تَجْعَلُوْا دُعَآءَ الرَّسُوْلِ بَيْنَكُمْ كَدُعَآءِ بَعْضِكُمْ بَعْضًا

*நம்முடைய ரஸூலை நீங்கள் உங்களுடைய பெயர் கூறி அழைப்பது*

*போன்று அழைக்கப்படக்கூடியவராக ஆக்க வேண்டாம்.*

*(அல் குர்ஆன்: 24 : 63).*

மேற்கண்ட திருவசனத்தில் நபிகள் நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களை அழைக்கக்கூடாது என்று தடுக்கவில்லை. மாறாக சிறப்பான பெயர்களால் அழைக்குமாறு வலியுறுத்தப்பட்டுள்ளது.

மேலும் திருக்குர்ஆன் கூறுகின்றது.

اُدْعُوْهُمْ لِاٰبَآئِهِمْ

*அவர்களை அவர்களின் தந்தையருடன் இணைத்துக் கூப்பிடுங்கள்!.*

*(அல் குர்ஆன்: 33 : 05).*

ஹளரத் ஸைது இப்னு ஹாரிதா ரலியல்லாஹு அன்ஹு அவர்களை ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் தனது மகன் போன்று வளர்த்து வந்தார்கள்;

இதனால், ஸைது றழியல்லாஹு அன்ஹு அவர்களின் பெயரோடு ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லவர்களை இணைத்து இப்னு றஸூலில்லாஹ் என்று சஹாபாக்கள் அழைத்ததை அல்லாஹுத்தஆலா விரும்பவில்லை;

அதனால், இப்னு ஹாரிதா என்று அழையுங்கள்! இப்னு ரஸூலுல்லாஹ்! என்று அழைக்க வேண்டாம் என்று இத்திருவசனத்தின் மூலம் குறிப்பிடப்பட்டுள்ளது.

திருக்குர்ஆனைப் போன்ற ஓர் அத்தியாயத்தை, அல்லது சில வசனங் களை உருவாக்குவதில் காஃபிர்கள் அவர்களின் உதவியாளர்களை அழைக்கலாம் என்று அவர்களுக்கு அனுமதி வழங்கப்பட்டுள்ளது.

அல்குர்ஆன் கூறுகிறது.

وَادْعُوْا شُهَدَآءَكُمْ مِّنْ دُوْنِ اللّٰهِ اِنْ كُنْتُمْ صٰدِقِيْنَ

***நீங்கள் உண்மையாளர்களாக இருந்தால், இதைப் போன்ற ஓர் அத்தியாயத்தையேனும் நீங்கள் கொண்டு வாருங்கள்.! இதில்***

*அல்லாஹ்வைத் தவிர உங்களுடைய உதவியாளர்களையும் துணைக்கு நீங்கள் அழைத்துக் கொள்ளுங்கள்.*

*(அல் குர்ஆன்: 2 : 23).*

மிஷ்க்காத் ஷரீஃபில் முதல் ஹதீதில்

يا محمد اخبرني عن الاسلام

முஹம்மதே! இஸ்லாத்தைப் பற்றி எனக்கு அறிவித்துத் தாருங்கள்! என்பதிலும் முஹம்மதே! என்ற அழைப்பு இருக்கிறது

மிஷ்க்காத் ஷரீஃபில் வஃபாத்துடைய பாடத்தில் மலக்குல் மௌத் அலைஹிஸ்ஸலாம் ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களிடம் வந்து

يامحمد ان الله ارسلني اليك

முஹம்மது ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களே! நிச்சயமாக அல்லாஹுத்தஆலா உங்களிடம் என்னை உங்களின் உயிரை எடுக்க அனுப்பியுள்ளான் என்று கூறியதிலும் பெருமானாரின் பெயர் கூறி அழைத்தல் உள்ளது.

இப்னு மாஜாவில் "ஸலாத்துல் ஹாஜாத்" என்ற பாடத்தில் ஹஸரத் உத்மான் இப்னு ஹுனைப் றழியல்லாஹு அன்ஹு அவர்களின் பின்வரும் ஓர் அறிவிப்பு இடம் பெற்றுள்ளது.

اللهم آني اسألك واتوجه اليك بمحمد نبي الرحمة يامحمد آني قد توجهت بك الي ربي في حاجتي هذه لتقضي اللهم فشفعه في قال ابو اسحق هذا حديث صحيح

யா அல்லாஹ்! உன்னிடத்தில் நான் கேட்கிறேன். றஹ்மத்திற்குரிய நபியாகிய முஹம்மத் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் பொருட்டினால் உன்பால் முகம் நோக்குகிறேன்; யா முஹம்மத்! ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களே! உங்கள் மூலமாகவே எனது இரட்சகன் பால் முகம்நோக்கிறேன்; இதனால், எனது தேவை பூரணமாகட்டும்! யா அல்லாஹ்! என் விஷயத்தில் ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் ஷஃபாஅத்தைக் கபூல் செய்வாயாக!

இந்த ஹதீது ஸஹீஹானது என்று ஹளறத் அபூ இஸ்ஹாக் கூறுகின்றார்.

இந்த துஆ கியாமத் நாள் வரை கேட்பதற்கு முஸ்லிம்களுக்கு கற்றுக் கொடுக்கப்பட்டிருக்கிறது. இந்த துஆவில் யா முஹம்மத்! என்ற அழைப்பும், நபிகள் நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களிடம் உதவி கோருவதும் இருக்கிறது.

ஃபதாவா ஆலம் கீரி பாகம் : 1. ஹஜ் பற்றிய பாடத்தில் றஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் புனித ரவ்ழாவைச் "ஸியாரத் செய்தல்" என்ற பாடத்தில் பின்வருமாறு எழுதப்பட்டுள்ளது.

ثم يقول السلام عليك يا نبي الله اشهد انك رسول الله .

நபியவர்களே! உங்கள் மீது ஸலாம் உண்டாவதாக! நீங்கள் அல்லாஹ்வின் திருத்தூதர் என்று நான் சாட்சி கூறுகின்றேன்.

السلام عليك يا خليفة رسول الله ، السلام عليك يا صاحب في الغار

அல்லாஹ்வின் திருத்தூதரின் உண்மையான கலிஃபா அவர்களே! உங்கள் மீது ஸலாம் உண்டாவதாக! அல்லாஹ்வின் ரஸூலின் குகைத் தோழரே! உங்கள் மீது ஸலாம் உண்டாவதாக!

அடுத்து அமீருல் முஃமினீன் உமர் இப்னு கத்தாப் றழியல்லாஹு அன்ஹு அவர்களைப் பார்த்து,

السلام عليك يا امير المؤمنين ، السلام عليك يا مظهر الاسلام ، السلام عليك يا مكسر الاصنام

முஸ்லிம்களின் அமீர் அவர்களே! உங்கள் மீது ஸலாம் உண்டாவதாக! இஸ்லாத்தை வெளிப்படுத்தியவரே! உங்கள் மீது ஸலாம் உண்டாவதாக! சிலைகளை உடைத்தவரே! உங்கள் மீது ஸலாம் உண்டாவதாக! ரலியல்லாஹு அன்ஹுமா

மேற்கண்ட கூற்றில் ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களையும் ,அவர்களுக்கு அருகில் உறங்கிக் கொண்டிருக்கும் ஹளறத் ஸித்தீகுல் அக்பர், ஹளறத் உமர் ஃபாரூக் றழியல்லாஹு தஆலா அன்ஹுமா ஆகிய இருவரையும் விளித்து கூறுவது இடம் பெற்றுள்ளது.

உம்மத்தில் உள்ள பெரியவர்கள், வலிமார்கள், ஷைகுமார்கள், நல்லோர்கள் உள்ளிட்ட யாவரும் தங்களுடைய துஆக்களிலும், வஸீஃபாக்களிலும் யா ரஸூலுல்லாஹ்! என்று அழைத்துள்ளனர்.

புகாரி ஷரீஃபில் பின் வரும் பாடல் இடம் பெறுகின்றது.

يا اكرم الخلق ما لي من الوذ به سواك عند حلول الحادث العمم

படைப்பில் சங்கையானவரே! நீங்கள் அன்றி எனக்கு யாரும் இல்லை!

சோதனைகள் சூழ்ந்த வேளையில் கைதாங்கும் நாதரே!

இமாம் ஜெய்னுல் ஆபிதீன் ரலியல்லாஹு தஆலா அன்ஹு கர்பலாக் களத்தில் தனித்து நின்று மனம் உருகி இவ்வாறு பாடுகின்றார்கள்.

يا رحمة للعالمين ادرك لزين العابدين ,محبوس ايدي الظلمين في موكب ومزدحم

றஹ்மத்துன் லில் ஆலமீனே! ஜெய்னுல் ஆபிதீனுக்கு உதவி செய்யுங்கள்! நிற்கதியான இச்சூழலில் அநியாயக்காரர்களின் கையில் சிக்கிக் கொண்டிருக்கின்றார்.

ஆரிஃபு பில்லாஹ் மௌலானா றூமி றஹ்மத்துள்ளாஹி அலைஹி அவர்கள் பின்வருமாறு பாடுகின்றார்கள்.

பிரிவிலிருந்து உலகத்தின் உயிர் வெளியேறுகின்றது; நபிகள் நாதரே! இரங்குங்கள்! இரக்கம் காட்டுங்கள்! நீங்கள் அகிலத்தின் அருள் வடிவான வராக இருக்கையில், நாம் பாவிகளின் கையிலிருந்து எப்படி விடுதலை பெறாமல் இருக்க முடியும்?

ஹளறத் இமாமுல் அஃழம் அபூ ஹனீபா றஹ்மத்துல்லாஹி அலைஹி அவர்கள் கஸீதா நுஃமானியாவில் பின்வருமாறு பாடுகின்றார்கள்.

يا سيد السادات جئتك قاصدا أرجوا رضاك واحتمي بحماكا

நாயகமானவர்களுக்கெல்லாம் நாயகமானவரே! என் மனதில் பல நோக்கங்களை தாங்கி தங்களிடம் வந்துள்ளேன்; உங்களின் பொருத்தத்தை

ஆதரவு வைக்கின்றேன்; தங்களின் பாதுகாப்புக்குள் நான் பாதுகாப்புத் தேடுகின்றேன்!

மேற்கண்ட பாடலில் நபிகள் நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களை அழைப்பதும், அவரிடம் உதவி கூறுவதும் இருக்கின்றன.

இவை இரண்டுமே நபிகள் நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்ல மவர்களின் வஃபாத்தின்பின்பே நடந்தவை என்பது கவனிக்கத்தக்கது.

السلام عليك ايها النبي ورحمة الله وبركاته

என்று ஸலாம் கூறுகின்றனர்; இவ்வாறு நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களை அழைத்து ஸலாம் கூறவேண்டியது வாஜிபாகும்.

அத்தஹிய்யாத் தொடர்பாக, ஷாமி, அஷிஃஃஅத்துல் லம்ஆத் உள்ளிட்ட நூற்களின் மேற்கோள்களை "ஹாழிர், நாழிர்," பற்றிய பாடத்தில் பதிவு செய்துள்ளோம்; இதன் விளக்கத்தை அங்கே பார்த்துக் கொள்ளலாம்.

மேற்கண்ட விளக்கங்கள் தனித்தனியாக யா ரஸூலுல்லாஹ்! என்று கூறுவதற்குரியவையாகும்.

அனைவரும் ஒன்று சேர்ந்து யாரஸூலல்லாஹ்! என்று கூறுவதும் ஆகுமானது தான்! காரணம், தனித்தனியாக கூறுவதும் ஆகுமானது, ஒன்று சேர்ந்து உரத்துக் கூறுவதும் ஆகுமானது தான்!

உதாரணமாக, பிரியாணியை கூறலாம். இதில் ஹலாலான பல கூட்டுக்கள் சேருகின்றன. அதனால் மொத்தமான பிரியாணி ஹலாலாகும்.

முஸ்லிம் ஷரீஃஃபின் இறுதி பாகத்தில் ஹிஜ்ரத்தின் பாடத்தில் ஹளறத் பர்ராஉ றழியல்லாஹு அன்ஹு அவர்களின் ஓர் அறிவிப்பு இடம் பெறுகின்றது.

ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் ஹிஜ்ரத் மேற்கொண்டு மதீனத்துல் முனவ்வறா வந்து சேர்ந்த போது,

فصعد الرجال والنساء فوق البيوت ، وتفرق الغلمان والخدام في الطرق ينادون يامحمد يارسول الله يا محمد يا رسول الله

பெண்களும், ஆண்களும் வீட்டின் மாடியில் ஏறினர். சிறுமிகளும், சிறுவர்களும் தெருக்களில் ஆங்காங்கே பிரிந்து நின்று யாமுஹம்மத்! யாரஸூலல்லாஹ்! என்று ஆரவாரம் செய்தனர்.

மேற்கண்ட ஹதீஸ் நாரே ரிஸாலத் யாரஸூலல்லாஹ்! என்று உரத்து கூட்டமாக கூறுவதற்கு தக்க ஆதாரமாகும். இந்த ஹதீது ஹிஜ்ரத்தில் ஸஹாபாக்களின் ஊர்வலத்தில் நடந்தேறியது.

றஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் வெளியூர் பயணத்தை முடித்துக் கொண்டு மதீனத்துல் முனவ்வறாவுக்குள் நுழைந்ததும், மதீனா வாசிகள் ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களை வரவேற்பார்கள், ஊர்வலமாக அழைத்துச் செல்வார்கள்.

*பார்க்க: புகாரி ஜரீஃப், மிஷ்க்காத் ஜரீஃப்.*

தொழுகை என்பது ஓரிடத்தில் அல்லாஹ்வின் திக்ரு அரங்கேறும் இடமாகும், ஹஜ் என்பது பல்வேறு இடங்களைச் சேர்ந்தவர்கள் ஆரவாரம் செய்யும் ஊர்வலமாகும்.

"ஸகீனா" என்ற பேழையை மலக்குகள் ஊர்வலமாக எடுத்து வந்ததாக திருக்குர்ஆன் கூறுகிறது.

ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் பிறந்த வேளையிலும், மிஃராஜ் அன்றும் மலக்குகள் நபிகள் கோமான் முஹம்மது முஸ்தஃபா ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்காக ஊர்வலம் வந்தார்கள்;

பெரியோர்களுக்காக ஊர்வலம் வருவது நன்மை பயக்கும் நற்செயலாகும். அதனால் இவ்வாறான ஊர்வலங்கள் இதன் வெளிப்பாடு என்பதும், நன்மை பயக்கும் செயல் என்பதும் தெளிவு!

# *பாடம்: 2*
# *குற்றச்சாட்டுகளும், பதில்களும்!*

**குற்றச்சாட்டு: 01**

திருக்குர்ஆன் கூறுகிறது

وَلَا تَدْعُ مِنْ دُوْنِ اللّٰهِ مَا لَا يَنْفَعُكَ وَ لَا يَضُرُّكَ

***அல்லாஹ்வைத் தவிர உமக்கு எந்தவித நன்மையும், தீமையும் செய்ய முடியாத ஒன்றை நீர் அழைக்க வேண்டாம்.***

*(அல் குர்ஆன்: 10 : 106).*

يَدْعُوْا مِنْ دُوْنِ اللّٰهِ مَا لَا يَضُرُّهٗ وَمَا لَا يَنْفَعُهٗ

***அல்லாஹ்வை அன்றி அவனுக்கு தீமை செய்யாததையும், அவனுக்குப் பலன் தராததையும் அவன் அழைக்கிறான் அதுவே மிக தூரமான வழிகேடாகும்.***

*(அல் குர்ஆன்: 22 : 12).*

மேற்கண்ட திருவசனத்தில் அல்லாஹ் அல்லாதவர்களை அழைப்பதற்கு தடை விதிக்கப்பட்டுள்ளது. ஜலாலைன் உள்ளிட்ட தஃப்ஸீர்களைப் பார்க்க!

இதன்படி அல்லாஹ் அல்லாத எதையும் வணங்க வேண்டாம் என்பதே இந்த வசனங்களின் பொருளாகும். இக்கருத்தை உறுதிப்படுத்தும் மற்றொரு வசனத்தையும் கவனியுங்கள்!

وَمَنْ يَّدْعُ مَعَ اللّٰهِ اِلٰهًا اٰخَرَ

***எவனொருவன் அல்லாஹ்வுடன் வேறு ஒரு நாயனை அழைத்தால் (வணங்கினால்)***

*(அல் குர்ஆன்: 23 : 117).*

இதன்படி அல்லாஹ் அல்லாதவரை இறைவனாக கருதி அழைப்பது ஷிர்க்காகும் அவ்வாறு அழைப்பது வணக்கமாகும்.

மேற்கண்ட வசனங்களுக்கு நாம் கூறும் இந்த விளக்கத்தை ஏற்காவிட்டால் ஏற்கனவே நாம் முன்வைத்த திருமறை வசனங்கள், ஹதீதுகள், கண்ணியத்துக்குரிய உலமாக்களின் சான்றுகள், கூற்றுகள் யாவற்றிலும் அல்லாஹ் அல்லாதவர்கள் அழைக்கப்பட்டுள்ளனர். அவை யாவும் ஷிர்க் ஆகிவிடும்.

பின்னர் உயிர் உள்ளவர், மரணித்தவர், தூரத்தில் உள்ளவர் யாரையும் அழைப்பது ஷிர்க்காகிவிடும். தினசரி நமது சகோதர, சகோதரிகள், நண்பர்கள், உற்றார் உறவினர்கள், அறிமுகமாணவர்கள் என்று பலரையும் அழைக்கின்றோம்; அப்படியாயின், உலகில் யாரும் முஸ்லிமாக இருக்க முடியாது! அனைவரும் ஷிர்க் செய்பவர்களாகவே இருப்பார்கள். மஆதல்லாஹ்!

ஷிர்க்கு என்பது, அல்லாஹ்வின் தாத்தில், அல்லது பண்புகளில் அல்லாஹ் அல்லாதவரை சமப்படுத்திக் கூறுவதற்குக் கூறப்படும். ஒருவரை சத்தமிட்டு அழைப்பதில் அல்லாஹ்வின் எந்த பண்பு சேர்ந்திருக்கின்றது? இல்லையெனில் ஷிர்க் எப்படி வரும்.?

**குற்றச்சாட்டு: 2**

فَاذْكُرُوا اللّٰهَ قِيَامًا وَّقُعُوْدًا وَّعَلٰى جُنُوْبِكُمْ

***நிலையிலும், இருப்பிலும், உங்களுடைய விலாப் புறங்களின் மீதும், படுக்கையிலும் அல்லாஹ்வை திக்ரு செய்யுங்கள்.***

*(அல் குர்ஆன்: 4: 103).*

இத்திருவசனத்தின்படி, நின்றுக் கொண்டு, இருந்துக் கொண்டு அல்லாஹ் அல்லாதவர்களை நினைவு கூருவது ஷிர்க்காகும். அதனால் அல்லாஹ்வை மட்டுமே நினைவு கூறவேண்டும்.

**பதில்:**

இத்திருவசனத்தை ஆதாரமாகக் கொண்டு ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களை நினைவு கூருவதை ஷிர்க்

என்று கூறுவது சிறுபிள்ளைத்தனமான வாதமாகும். மேற்கண்ட திருவசனம், நீங்கள் தொழுது முடித்தால், எல்லா நிலையிலும், சகல விதமாகவும் அல்லாஹ்வை நினைவு கூர முடியும்.

தொழுகையில் கட்டுப்பாடு உண்டு! றுகூஉ, ஸுஜூது உள்ளிட்ட வையிலும், ஏனைய இடங்களிலும் அதற்கென்று ஓத வேண்டியவை இருக்கின்றன, இவற்றைத் தவிர்த்துவிட்டு, திருக்குர்ஆன் ஓதுதல் உள்ளிட்டவையைக் கூட ஓத முடியாது.

காரணமின்றி தொழுகையில் உட்காரவோ, சாய்ந்து கொள்ளவோ முடியாது! அதனால், நீங்கள் தொழுது முடித்து விட்டால், இந்த கட்டுப் பாடுகள் நீங்கி விடுகின்றன. அப்போது உங்களுக்கு வசதிப்பட்ட விதத்தில் நின்றுக் கொண்டு, உட்கார்ந்துக் கொண்டு, படுத்துக் கொண்டு, சகல நிலை களிலும் அல்லாஹ்வை நினைவு கூர முடியும்.

மேற்கண்ட திருவசனத்தில் கவனத்திற்குரிய சில விஷயங்கள் உள்ளன.

1) அல்லாஹ்வை திக்ரு செய்யுங்கள்! என்பது கட்டளை வாக்கியம் ஆகும். இக்கட்டளை வாக்கியம் கட்டாயமான வாஜிபானதல்ல! அனுமதி மட்டும் தான்! தொழுகைக்கு வெளியே விரும்பினால், அல்லாஹ்வை திக்ரு செய்யுங்கள்! அல்லது விரும்பினால் அமைதியாக இருந்து கொள்ளுங்கள்! இரண்டுக்கும் அனுமதி உண்டு.

2) இக்கட்டளை வாக்கியம் வாஜிப் என்றிருந்தாலும் கூட, அல்லாஹ் அல்லாதவர்களை நினைவு கூருவது அல்லாஹ்வை திக்ரு செய்வதற்கு எதிராகாது.

அல்லாஹ்வை திக்ரு செய்வது வாஜிபு என்பதால், இது ஹராம் ஆகாது! ஏனெனில், அல்லாஹ்வை திக்ரு செய்வது என்பதற்கு எதிர் அல்லாஹ்வை திக்ரு செய்யாமலிருப்பது தான்.

3) அல்லாஹ்வை திக்ரு செய்வதற்கு எதிர் அல்லாஹ் அல்லாதவரை நினைவு கூருவது என்று ஒரு வாதத்திற்கு ஏற்றுக்கொண்டாலும், ஹராம் என்று வருமே தவிர, ஷிர்க் ஆகாது, காரணம், வாஜிபுக்கு எதிர் ஹராம்! ஷிர்கு அல்ல!

ஹராம் அல்லது பர்ளு ஆவதெலாம் செயலின் பண்பினாலேயே தவிர, செய்யாதிருப்பதால் அல்ல! என்பதை கவனத்தில் கொள்ள வேண்டும்.

4) ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களை

திக்ருச் செய்வது அல்லாஹ்வை திக்ருச் செய்வதற்குரிய வழியாகும்.

அல்லாஹு தஆலா கூறுகிறான்.

مَّن يُطِعِ الرَّسُولَ فَقَدْ أَطَاعَ اللَّهَ

*எவர் ரஸூலுக்கு வழிபட்டாரோ அவர் அல்லாஹ்வுக்கும் வழி பட்டவர் ஆவார்.*

*(அல் குர்ஆன்: 4 : 80).*

கலிமா, தொழுகை, ஹஜ், குத்பாவில் ஸலவாத், அதான் உள்ளிட்ட அனைத்து இபாதத்களிலும் ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் திருநாமம் இருக்கிறது! அது அவசியமுமாகும். அப்படியிருக்க, தொழுகைக்கு வெளியே எப்படி ஹராமாகும்?

ஒருவர் சகல நிலையிலும், நின்றுக் கொண்டும், உட்கார்ந்துக் கொண்டும் ஸலவாத் ஓதினால், அல்லது திருமாவை மொழிந்தால், ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களை நினைவு கூருகிறார். இவை நன்மை பயக்கும் நற்செயல் ஆகும்.

5) ஸூரத்துல் லஹபில் வரும்

تَبَّتْ يَدَا اَبِىْ لَهَبٍ وَّتَبَّ

*அபூலஹபின் இரு கைகளும் நாசமாகட்டும்!*

*(அல் குர்ஆன்: 111 : 1)*

இன்னும், முனாஃபிக்கின் அத்தியாயம், காஃபிர்களின் சிலைகள் பற்றி வரும் திருவசனங்களை நினைவு கூர்வது அல்லாஹ்வை திக்ரு செய்வது ஆகுமா? இல்லையா? இவையாவும் திருமறை வசனங்களாக இருப்பதால், இவற்றிலுள்ள ஒவ்வொரு வார்த்தைகளுக்கும் நன்மை இருப்பதால், நிச்சயமாக அல்லாஹ்வை திக்று செய்வதாகவே ஆகும். இத்திருவசனங்களில் வரும் பெயர்கள் காஃபிர்கள், சிலைகள் பற்றியிருந்தாலும் அவை அல்லாஹ்வின் (கலாம்) பேச்சாகும்.

அல்லாஹ்வின் கலாமை ஓதுவதும், அல்லாஹ்வை திக்ரு செய்வது தான். அப்படியிருக்க,

அல்லாஹ்வின் ரஹ்மத், அல்லாஹ்வின் பேரொளி முஹம்மது முஸ்தஃபா ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களை திக்ருச் செய்வது அல்லாஹ்வை திக்ருச் செய்வதாகாதா?

قال என்றால், 30 நன்மைகள், فرعون என்பதற்கு 50 நன்மைகள், காரணம் ஒரு எழுத்துக்கு 10 நன்மைகள் உண்டு! திருக்குர்ஆனில் வருகின்ற ஃபிர்அவன் என்றசொல்லைக் கூறினால், 50 நன்மைகள் கிடைக்கின்றன! முஹம்மதுர் ரஸூலுல்லாஹ் என்றால் முஷ்ரிக்காகின்றார் என்றால், இது என்ன வகையான புத்தி?

7) ஹளறத் யாகூப் அலைஹிஸ்ஸலாம் ஹளறத் யூசுஃப் அலைஹிஸ்ஸலாம் அவர்களின் பிரிவின் துயரத்தால், நின்றுக் கொண்டும், இருந்துக் கொண்டும், எல்லா நிலையிலும் நினைத்து நினைத்து மனம் உருகினார்கள்; அவர்கள் நினைத்து நினைத்து அழுத காரணத்தால் இரு கண்களும் வெளிறி விட்டன.

இவ்வாறே நபி ஆதம் அலைஹிஸ்ஸலாம் அன்னை ஹவ்வா நாயகியை நினைத்தும், ஹளறத் ஜெய்னுல் ஆபிதீன் ரலியல்லாஹு அன்ஹு ஸெய்யித் ஹுஸைன் ரலியல்லாஹு அன்ஹு அவர்களை நினைத்தும் நின்றுக் கொண்டும், உட்கார்ந்துக் கொண்டும் கண்ணீர் சிந்தி கூர்ந்தார்கள்.

இவர்கள் மீதும் இந்த லின்க் பத்வா பாயுமா? இல்லையா? இல்லை யென்றால், ஒவ்வொரு காதலனும் தனது நபியை பற்றி சகல நிலைகளிலும் நினைவு கூர்வது எப்படி ஷிர்க் ஆகும்.?

ஒருவணிகன் இரவு பகலாக தனது வாணிபத்தைப் பற்றி நினைக்கின்றான், அறிவுத் தாகம் கொண்ட மாணவன் இரவு பகலாக தனது பாடத்தை ஞாபகப் படுத்துகின்றான், இதுவும் அல்லாஹ் அல்லாத வரை நினைவு கூர்வது தானே! ஏன் இங்கே ஷிர்க் பாய்வதில்லை? ஏன் இவர்களை முஷ்ரிக் என்று கூறுவதில்லை?

## குறிப்பு:

பஞ்சாப் நகரில் எனக்கும் மௌலவி தனா உல்லாஹ் அமிர் தரஸி என்பவருக்குமிடையில் "யாரஸூலல்லாஹ்! என்று அழைக்கலாமா?" என்ற தலைப்பில் ஒரு விவாதம் நடந்தது.

மௌலவி தனா உல்லாஹ் தனது வாதத்திற்கு மேற்கண்ட திருவசனத்தை ஆதாரமாக முன் வைத்தார், அவரைப் பார்த்து பின்வரும் மூன்று கேள்விகளை நான் கேட்டேன்

1) திருக்குர்ஆனில் கட்டளை வாக்கியம் எத்தனை பொருளில் வந்துள்ளது? இங்கு எந்த கருத்தில் உபயோகிக்கப்பட்டுள்ளது?

2) ஒன்றின் எதிர் வாஜிபாக இருந்தால், மற்றதின் எதிர் ஹறாமாகுமா? இல்லையா?

3) திக்றுல்லாஹ்வுக்கு எதிர் எது? அல்லாஹ் அல்லாத திக்ரா? அல்லாஹ்வை திக்ரு செய்யாமலிருப்பதா?

இம்மூன்று கேள்விகளுக்கும் அவர் முன்வைத்த பதில் ”இக்கேள்விகள் யாவும் உஸூலுல் பிக்ஹு, மன்திக் இவைகளோடு தொடர்பானவை. இவ்விரண்டு துறைகளும் பித்அத்தானவையாகும். அதனால் இக்கலைகளை அறியாமல் ஜாஹிலாக இருப்பது ஸுன்னத் ஆகும்” என்றார்.

பித்அத்திற்கு சரியான வரைவிலக்கணத்தைக் கூறுங்கள்! உங்கள் வரைவிலக்கணத்தின் படி, மீலாது விழாக் கொண்டாடுவது ஹராம்! "அஹ்லே ஹதீஸ்" என்ற பத்திரிகையை வெளியிடுவது ஸுன்னத்தாகுமோ?

இந்தக் கேள்விகள் இப்போதும் அவர்களிடம் விடையைக் கேட்டுக் கொண்டிருக்கின்றன! அவர்களிடம் பதிலைக் கேட்டு கூறினால் நன்றி உடையவனாக இருப்பேன்! கைசேதம்! மௌலவி தனா உல்லாஹ் பதில் கூறாமலேயே மரணித்து விட்டார்! அவரின் அபிமானிகளில் யாராவது இதற்கான பதிலைக் கூறி அவரின் ஆத்மாவை சந்தோஷப்படுத்தலாம்.

**குற்றச்சாட்டு: 03,**

புகாரி ஷரீஃப் வால்யும் 3, அனுமதி கோரல் என்ற அத்தியாயத்தில் "இரு கைகளையும் பிடித்து முஸாபஹாச் செய்தல்" என்ற பாடத்தில், ஹளறத் அப்துல்லாஹ் இப்னு மஸ்ஊத் றழியல்லாஹு அன்ஹு அவர்களின் பின்வரும் அறிவிப்பு இடம் பெற்றுள்ளது.

ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அத்தஹிய்யாத்தில்,

السلام عليك ايها النبي ورحمة الله وبركاته

என்று கற்றுக் கொடுத்தார்கள். பின்னர் ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் வஃபாத்தான பின்பு,

السلام علي النبي صلي الله عليه وسلم

என்று ஓதத் தொடங்கினோம்.

*ஆதாரம்: ஐனி ஜுஹு புகாரி ஷரீஃப்.*

ஐனி என்ற நூலில் இந்த ஹதீசுக்குக் கீழே பின் வருமாறு எழுதப் பட்டுள்ளது,

فظاهرها انهم كانوا يقولون السلام عليك بكاف الخطاب في حياتي النبي عليه السلام ، فلما مات تركوا الخطاب وذكروه بلفظ الغيب فصاروا يقولون السلام علي النبي

ஸஹாபாக்கள் ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் உயிருடன் இருக்கும் போது السلام عليك என்று முன்னிலைப் படுத்தி ஸலாம் கூறினார்கள்; வஃபாத்தின் பின், முன்னிலைப்படுத்துவதைத் தவிர்த்து, السلام علي النبي எனக் கூறத் தொடங்கினர்,

மேற்கண்ட ஹதீஸிலும், அதற்கான விளக்கத்திலும் அஸ்ஸலாமு அலைக்கும் என்று முன்னிலைப் படுத்திக் கூறுவது உயிரோடு வாழும் பொழுது தான் இருந்தது, ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் வஃபாத்தான பின்பு நபியவர்களை முன்னிலைப்படுத்தி ஸலாம் கூறுவதைத் தவிர்த்துக் கொண்டனர்.

ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களை அத்தஹிய்யாத்தில் முன்னிலைப்படுத்திக் கூறுவதைத் தவிர்திருக்கும்போது, தொழுகைக்கு வெளியே யாரஸூலுல்லாஹ்! என்றோ, அல்லது இதையொத்த வாக்கியங்களையுமோ கூறினால், ஒட்டுமொத்தமாக முஷ்ரிக்காக ஆகிவிடுவார்.

**பதில்:**

புகாரி ஷரீஃப், மற்றும் அதன் விரிவுரை நூலான ஐனி உள்ளிட்ட நூல் களின் சொற்றொடர்கள் கூட உங்களுக்கும் எதிராகவே உள்ளது! ஏனெனில்,

இமாம்களில் எந்த ஒரு இமாமும் அத்தஹிய்யாத்தை மாற்றுமாறு கூற வில்லை,

இமாமுல் அஃழம் அபூஹனீஃபா ரஹ்மத்துல்லாஹி அலைஹி அவர்கள் ஹளறத் இப்னு மஸ்ஊத் றழியல்லாஹு அன்ஹு அவர்களின் மத்ஹபையும், இமாம் ஷாபிஈ ரஹ்மத்துல்லாஹி அலைஹி அவர்கள் இப்னு அப்பாஸ் ரலியல்லாஹுதஆலா அன்ஹுமா அவர்களின் அறிவிப்புகளையும் தெரிவு செய்துள்ளார்கள்.

இவ்விருவரின் அறிவிப்புகளிலும் அத்தஹியாத்தில்

السلام عليك ايها النبي

என்று தான் உள்ளது. நைறு முகல்லிதுகளின் மௌலவிகளான தனா உல்லாஹ்வும், கஸ்னவியும் இதே அத்தஹிய்யாத்தையே ஓதி வருகின்றனர்

இதிலிருந்து புரிவது யாதெனில், சில ஸஹாபாக்கள் அவர்களின் இஜ்தி ஹாதின் படி, அத்தஹிய்யாத்தில் மாற்றம் செய்து உள்ளனர். மர்ஃபூஆன ஹதீஸுக்கு எதிராக வருகின்ற ஸஹாபியின் இஜ்திஹாத் ஏற்கத்தக்கதல்ல!

பொதுவாக ஸஹாபாக்கள் அத்தஹிய்யாத்தில் மாற்றம் செய்யவில்லை. அதனால் அத்தஹிய்யாத்தில் மாற்றம் செய்து முன்னிலைப்படுத்தாமல், படர்க்கையாகக் கூறுவது ஹறாமாகும்.

அவ்வாறு இல்லையாயின், தூர இடங்களில் வாழ்ந்த ஸஹாபாக்கள் அத்தஹிய்யாத்தில் முன்னிலைப்படுத்தாமல் ஓதியிருப்பார்கள்.

எமன், கைபர், நஜ்து இராக் உள்ளிட்ட சகல இடங்களிலும் தொழுகை நடந்து வருகிறது இதே அத்தஹிய்யாத்தை முன்னிலைப் படுத்தியேதான் ஓதி வருகின்றனர்.

ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் ஹிஜாஸில் பல இடங்களுக்குச் சென்றார்கள், அங்கெல்லாம் அத்தஹியாத்தில் ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களை முன்னிலைப்படுத்தியே அத்தஹிய்யாத் ஓதப்பட்டது.

ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் அவர்களைத் தடுக்கவில்லை அதற்கான சந்தேகத்தை ஸஹாபாக்கள் வெளிப்படுத்தவுமில்லை.

ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அத்தஹிய்யாத்தைக்

கற்றுக் கொடுத்தபோது எனது ஜீவிய காலத்தில் மட்டுமே இந்த அத்தஹிய்யாத்தை ஓத வேண்டும், எனது வஃபாத்தின் பின் வேறு அத்தியாத்தை ஓத வேண்டும் என்றும் கூறவில்லை!

தேவ்பந்தின் ஞானபீடம் மௌலவி அப்துல் ரஷீத் கங்கோஹி தனது ஃபதாவா ரஷீதியாவில் பாகம்:01, பக்:17ல், பின் வருமாறு எழுதுகின்றார்.

அத்தஹியாத்தில் முன்னிலையாக கூறும் முறையை மாற்ற வேண்டிய அவசியம் கிடையாது! இதில், சில ஸஹாபாக்களைப் பின்பற்ற வேண்டியதும் அவசியம் இல்லை;

அவ்வாறில்லையாயின், எனது வஃபாத்தின் பின், முன்னிலைப்படுத்தி கூற வேண்டாம் என்று ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களே கூறியிருப்பார்கள். அதனால் முன்னிலைப் படுத்தி ஓதுவது தான் ஏற்றமாகும்.

அத்தஹிய்யாத்தைக் கற்பித்த முறையும் இவ்வாறு தான் இருக்கிறது! அத்தஹிய்யாத் பற்றிய கேள்விக்கான பதில் சுருக்கமும் இவ்வாறுதான் உள்ளது. சில ஸஹாபாக்களின் செயல்கள் இதற்கு மாற்றமாக இருப்பது ஒருபோதும் ஆதாரமாகாது! அப்படியாயின்,

ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் காலத்திலேயே "ஷிர்க்" உண்டாகிவிட்டது,! அதனை நபியவர்கள் தடுக்கவில்லை என்று கூறுவதும் அவசியமாகி விடும்.

ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் வஃபாத்தின் பின் , ஒரு சிலர் தான் அத்தஹிய்யாத்தை மாற்றினார்களே தவிர அனைவருமல்ல! மிஷ்க்காத் ஷரீஃபின் விரிவுரை நூலான மிர்க்காத்தில் அத்தஹிய்யாத்தின் பாடத்தின் இறுதிப் பிரிவில் இவ்வாறு எழுதுகின்றார்கள்.

واما قول ابن مسعود كنا نقول الخ فهو رواية ابي عوانه ، ورواية البخاري اصح فيها بينت ان ذلك ليس من قول من ابن مسعود بل من فهم ا لراوي عنه ولفظها فلما قبض قلنا سلام يعني علي النبي فقوله قلنا سلام يحتمل انه اراد به استمرارنا علي ما كنا عليه في حياته

இதிலிருந்து ஸஹாபாக்கள் அத்தஹிய்யாத்தை மாற்றவில்லை, இக்கருத்து அறிவிப்பாளரின் புரிதல் மட்டுமே உண்மையான நிகழ்வின் எதார்த்தமல்ல! என்பது உறுதியாகிவிட்டது.

**குற்றச்சாட்டு: 04**

யாராவது ஒரு நபி அல்லது ஒரு வலி தூரத்திலிருந்து நாம் அழைப்பதைக் கேட்கிறார்கள் என்று நம்பி அழைப்பது ஷிர்க் ஆகும் என்று சில வஹாபிகள் கூறுகின்றனர். காரணம்,

தூரத்தில் உள்ளவற்றைப் கேட்பது அல்லாஹ்வின் பண்பாகும்; அல்லாஹ் அல்லாதவருக்கு இந்த பண்பு இருப்பதாக நம்புவது ஷிர்க் ஆகும். இந்த அகீதா இல்லையாயின், யாரஸூலல்லாஹ்! யாகௌது! என்று அழைப்பது ஆகுமானது தான்.

காற்றைப் பார்த்து தென்றலே கேள்! என்று கூறும்போது நமது பேச்சை காதால் கேட்கிறது என்று நம்புவதில்லை.

இப்போது உள்ளவர்களும் இதை ஒரு காரணமாகக் கூறுகின்றனர் ஃபதாவா றஷீதியா உள்ளிட்ட மற்ற நூற்களிலும் இதை வலியுறுத்தி கூறப்படுகிறது.

**பதில்:**

தூரத்தில் இருப்பதை கேட்பது ஒருபோதும் அல்லாஹ்வின் பண்பு அல்ல! ஏனெனில், தூரத்திலுள்ள சப்தத்தை கேட்பவன் கூப்பிடு தூரத்தில் இருக்க வேண்டும்;

அல்லாஹுத்தஆலா நமது பிடரி நரம்பை விட மிக அண்மையில் இருக்கின்றான்.

அல்லாஹுத்தஆலா கூறுகின்றான்.

وَاِذَا سَاَلَكَ عِبَادِىْ عَنِّىْ فَاِنِّىْ قَرِيْبٌ

***எனது அடியான் என்னைப் பற்றி உங்களிடம் கேட்டால் நான் அண்மையில் இருக்கிறேன் என்று கூறுங்கள்.***

*(அல் குர்ஆன்: 21 : 186).*

மேலும் கூறுகின்றான்.

وَنَحْنُ اَقْرَبُ اِلَيْهِ مِنْكُمْ وَلٰكِنْ لَّا تُبْصِرُوْنَ

***நாம் நோயாளியிடத்தில் உங்களை விட மிக நெருக்கமாக இருக்கி றோம், ஆயினும் நீங்கள் பார்க்க மாட்டீர்கள்.***

*(அல் குர்ஆன்: 56:85).*

அதனால் அல்லாஹுத் தஆலா மிக அணமையில் இருந்து தான் செவி மடுக்கின்றான்.

சகல சப்தங்களும் அவனுக்கு நெருக்கமாகவே இருக்கின்றன; அவனே மிக நெருக்கமாகவே இருக்கின்றான்.

அல்லாஹுத் தஆலா தூரத்திலிருந்து கேட்பது அவனுடைய பண்பு என்று ஒரு வாதத்திற்காக ஏற்றுக் கொண்டாலும், அண்மையிலிருந்து கேட்பதும் அவனுடைய பண்பு தானே!

அதனால் அணமையிலுள்ள வரும் கூட தனது அழைப்பை கேட்கிறார் என்று கருதி நம்பி அழைக்கக் கூடாது தவறினால் முஷ்ரிக் ஆகி விடுவார். என்று எச்சரிக்கையாக இருக்குமாறு அறிவித்து விடுங்கள்.

தூரத்தில் உள்ளதை கேட்பது அல்லாஹ்வுடைய பண்பாக இருப்பது போன்று தான் தூரத்தில் இருப்பதை பார்ப்பதும், தூரத்திலிருந்து நுகர்வதும் அல்லாஹ்வின் பண்பாகத் தான் இருக்க வேண்டும்;

இல்முல் கைபு – மறைஞானம் – ஹாழிர், நாழிர் பற்றிய ஆய்வில் வலிமார்களுக்கு தூரமும், அருகாமையும் சமம்தான் என்று தக்க சான்றுகளுடன் நிரூபித்துள்ளோம்.

இவர்களின் பார்வை தூரத்தில் இருப்பதையும், அண்மையில் இருப்பதையும் சமனாக பார்ப்பதாயின், அவர்களின் காது தூரத்திலிருப்பதையும், கிட்ட இருப்பதையும் ஒன்றாக கேட்பதில் எப்படி ஷிர்க் வரும்? இந்தப் பண்பு அல்லாஹுத் தஆலாவின் தனிப் பெரும் கருணையால் வழங்கப்பட்டதாகும். நபிமார்கள், வலிமார்கள் அண்மையிலுள்ள, தூரத்திலுள்ள சப்தத்தைக் கேட்கிறார்கள் என்பதை இப்போது உங்களுக்கு காட்டப் போகிறோம் வாருங்கள்.!

ஹளரத் யஃகூப் அலைஹிஸ்ஸலாம் அவர்கள் கன்ஆன் என்ற இடத்தில் இருந்துக் கொண்டு ஹளரத் யூஸுஃப் நபி அலைஹிஸ் ஸலாம் அவர்களின் சட்டையின் வாடையை நுகர்ந்தார்கள்;




இப்போது கூறுங்கள்! இது ஷிர்க்கா? இல்லையா?

ஹளறத் அமீருல் முஃமினீன் உமர் இப்னு கத்தாப் ரலியல்லாஹு அன்ஹு மதீனத்துல் முனவ்வறாவில் மிம்பர் படியிலிருந்து கொண்டு பாரசீகத்தில் உள்ள நகாவந்து என்ற இடத்தில் போராடிக்கொண்டிருந்த தளபதி ஸாரியா ரலியல்லாஹு அன்ஹு அவர்களுக்கு கட்டளை பிறப்பித்தார்கள். அதனை ஹளறத் ஸாரியா றழியல்லாஹு அன்ஹு அவர்கள் கேட்டார்கள்.

*மிஷ்க்காத்: பாடம்: கறாமாத்.*

ஹளரத் அமீருல் முஃமினீன் உமர் ரலியல்லாஹு தஆலா அன்ஹு தூரத்தில் நடப்பதைப் பார்த்தார்கள், ஹளறத் ஸாரிய்யா ரலியல்லாஹு தஆலா அன்ஹு தூரத்திலுள்ள சப்தத்தை கேட்டார்கள்.

தஃப்ஸீர் றூஹுல் பயான், தஃப்ஸீர் ஜலாலைன், மதாரிக் உள்ளிட்ட தஃப்ஸீர்களில்

وَأَذِّن فِي النَّاسِ بِالْحَجِّ

***ஹஜ்ஜுக்கு மக்களை அழைப்பீராக! என்ற திருவசனத்திற்கான விளக்கத்தில் பின் வருமாறு எழுதுகின்றார்கள்.***

*(அல் குர்ஆன்: 22 :27).*

ஹளரத் கலீலுல்லாஹ் இப்ராஹீம் அலைஹிஸ்ஸலாம் அவர்கள் கஃபாவை கட்டி முடித்த பின்பு, அபூ குபைஸ் மலையில் ஏறி நின்றுக் கொண்டு ஹஜ்ஜுக்கு வருமாறு சகலருக்கும் அழைப்பு விடுத்தார்கள். கியாமத்து நாள் வரை பிறக்க இருக்கின்ற சகல ஆத்மாக்களும் அதனைச் செவிமடுத்தன.

இந்த அழைப்புக்கு பதில் அளித்தவர்கள் நிச்சயம் ஹஜ் செய்வார்கள்,

அமைதியாக இருந்த ஆத்மாக்கள் ஹஜ் செய்ய மாட்டார்கள்.

தூரத்திலுள்ளவர் கேட்கின்ற விஷயத்தை விடுங்கள்! பிறப்பதற்கு முன்பே கலீலுல்லாஹ் இப்ராஹீம் அலைஹிஸ்ஸலாம் அவர்களின் சப்தத்தை அனைவரும் கேட்டார்களே! இது ஷிர்க்கா? இல்லையா?

இவ்வாறு கலீலுல்லாஹ் நபி இப்ராஹீம் அலைஹிஸ்ஸலாம் யா அல்லாஹ்! மரணித்தவர்களை எப்படி உயிர்ப்பிக்கிறாய்? அதை எனக்கு காட்டி தா! என்று கேட்டார்கள். அல்லாஹ்விடமிருந்து கட்டளை வந்தது

பாருங்கள்! செத்த உயிரினங்கள் அழைக்கப்பட்டன, அவை விரைந்து வந்தன. வலிமார்கள் இந்த உயிரினங்களை விடவும் கேவலமானவர்களா?

தற்காலத்தில் லண்டனிலிருந்து டெலிஃபோன் மூலமாக இந்தியாவில் உள்ளவர்களுடன் உரையாடுகிறனர், நமது அழைப்பு அவர்களுக்குக் கேட்கும் என்று நம்பிக்கை கொண்டு அவருடன் உரையாடுகின்றார்,

இந்தியாவில் இருக்கும் நபர் கருவியின் மூலமாக எனது பேச்சை கேட்கிறார் என்று நம்பி இவ்வாறு அழைப்பது ஷிர்க்கா? இல்லையா?

யாராவது ஒருவரின் நம்பிக்கையின் படி, நபிமார்களின் ஆற்றல் டெலிஃபோனின் சக்தியை விட அதிகம்! அதனால், நபிமார்கள் அல்லாஹுத்தஆலா வழங்கிய இந்த சக்தியின் மூலமாக சகல சப்தங்களையும் கேட்கிறார்கள் என்று நம்பிக் கொண்டு யாரஸூலல்லாஹ்! எனக்கு உதவி செய்யுங்கள்! என்று அழைத்தால், எப்படி ஷிர்க் வரும்?

ஹளறத் ஸுலைமான் நபி அலைஹிஸ்ஸலாம் அவர்கள் ஒரு பயணத்தில் சென்று கொண்டிருக்கும்போது, ஒரு காட்டில் தூரத்திலிருந்து கொண்டு

يٰۤاَيُّهَا النَّمْلُ ادْخُلُوْا مَسٰكِنَكُمْ لَا يَحْطِمَنَّكُمْ سُلَيْمٰنُ وَجُنُوْدُهٗ وَهُمْ لَا يَشْعُرُوْنَ

***"எறும்புகளே! நீங்கள் உங்கள் வீடுகளுக்குள் புகுந்து கொள்ளுங்கள்! ஸுலைமானும், அவருடைய படையினரும் தான் அறியாமலேயே உங்களை திண்ணமாக மிதித்து விட வேண்டாம் என்று மற்றவர்களிடம் தாயெறும்பு கூறியது.***

*(அல் குர்ஆன்: 27 : 18).*

தஃப்ஸீர் ரூஹுல் பயானில் இந்த வசனத்திற்கு விளக்கம் எழுதும்

போது நபி ஸஜலைமான் அலைஹிஸ்ஸலாம் மூன்று மைல்களுக்கு அப்பால் இருந்து கொண்டு இந்த சப்தத்தை கேட்டார்கள். மூன்று மைல் தூரம் என்பதை கற்பனை செய்யுங்கள்! இது ஷிர்க் ஆகுமா? இல்லையா?

மிஷ்க்காத்தில் கப்றின் வேதனையை நிலைப்படுத்தும் பாடத்தில் பின்வருமாறு வருகிறது.

அடக்கம் செய்த பின் மையத்தில் கப்றில் இருந்துக் கொண்டு வழியில் உள்ளவர்களின் காலடி சப்தத்தைக் கேட்கிறது, ஜியாரத் செய்பவர்களை பார்க்கிறது, அவர்களை அடையாளம் காண்கிறது. இதனால் தான், கப்றடிக்குச் சென்று அவர்களுக்கு ஸலாம் கூறப்படுகின்றது.

இந்த அளவு மண்ணுக்குக் கீழே இருந்து கொண்டு இவ்வளவு மெல்லிய சத்தத்தைக் கேட்பதாயின், எவ்வளவு தூரத்திலிருந்து கொண்டு கேட்கின்றது என்று சொல்லுங்கள்! இது ஷிர்க்கா? இல்லையா?

இல்மு கைபு பற்றிய ஆய்வில் மிஷ்க்காத்தில் "தஃவாத்" (பிரார்த்தனைகள்) என்ற பாடத்தில் வருகின்ற வலிமார்கள் பற்றிய ஹதீதை குறிப்பிட்டுள்ளோம். வலிமார்கள் அல்லாஹுத்தஆலா வழங்கிய ஆற்றலின் மூலம் பார்க்கின்றார்கள், கேட்கின்றார்கள, நுகருக்கின்றார்கள். யாருக்காவது அல்லாஹுத்தஆலா இந்த ஆற்றலை வழங்கி அதன்மூலம் தூரத்தில் உள்ளதை கேட்டால், ஷிர்க் எப்படி வரும்?

மறுப்பாளர்களின் பலமிக்க நம்பிக்கைக்குரிய ஆலிம் பெருந்தகை மௌலவி அப்துல் ஹை ஸாஹிப் லக்னவி அவர்கள் ஃபதாவா அப்துல் ஹை என்ற நூலில், அகீதா பற்றிய பாடம், பக்கம் 43ல் ஒரு கேள்விக்கான பதிலில் பின்வருமாறு எழுதுகின்றார்கள்.

ஒரு மனிதர் கூறுகின்றார்,

لَمْ يَلِدْ وَلَمْ يُولَدْ

அவன் பெறவுமில்லை, பெறப்படவும் இல்லை என்பது ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் தகுதியாகும்.

நபியே! கூறுவீராக! அல்லாஹ் ஒருவன்

قُلْ هُوَ اللَّهُ أَحَدٌ

என்பது ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் பண்பாகும் என்று கூறியதோடு அதற்கே ஆதாரமாக ஒரு ஹதீதையும் பின்வருமாறு நக்லு செய்கிறார்கள்.

அல்லாஹ்வின் திருத்தூதரே! நீங்கள் நாற்பது நாட்கள் நோன்பு இருக்கும் போது சந்திரன் தங்களுடன் எப்படி நடந்து கொண்டது? என்று அப்பாஸ் ரலியல்லாஹு தஆலா அன்ஹு கேட்டதற்கு,

பாசமிக்க தாய் என் கையை இறுக கட்டினார்கள் அதன் வேதனையால் எனக்கு அழுகை வந்தது; சந்திரன் தடுத்தது,

நீங்கள் 40 நாட்கள் நோன்பாக இருக்கையில் இவ்விரண்டையும் எப்படி அறிந்து கொண்டீர்கள்? என்று ஹளறத் அப்பாஸ் றழியல்லாஹு அன்ஹு கேட்டார்கள்,

இதற்கு நபியவர்கள் இவ்வாறு பதில் கூறினார்கள். லௌஹுல் மஹ்பூழ் ஏட்டில் கலமாகிய எழுது கோல் எழுதும் சப்தத்தை என்தாயின் வயிற்றிலிருக்கும் போது நான் கேட்டேன். மலக்குகள் அர்ஷுக்குக் கீழே இருந்துக் கொண்டு தஸ்பீஹ் செய்வதையும் என் தாயின் வயிற்றிலிருக்கும் போது நான் கேட்டேன்;

இந்த ஹதீஸிலிருந்து ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் தாயின் வயிற்றில் இருக்கும்போதே அர்ஷு, பர்ஷு உள்ளிட்ட சகல சப்தங்களையும் கேட்டிருக்கிறார்கள் என்பது தெளிவாகின்றது;

ஹதீஸில் பின்வருமாறு பதிவாகி உள்ளது

மனைவி வீட்டில் கணவரோடு சண்டை பிடித்தால், சொர்க்கத்திலுள்ள ஹூருல் ஈன்கள் அவளை எச்சரிக்கின்றனர்; வீட்டுச் சண்டையை கூட இத்தனை தூரத்தில் இருக்கும் சொர்க்கத்து ஹூருல் ஈன்களும் பார்க்கின்றார்கள், கேட்கின்றார்கள். அவர்களுக்கு மறைவான அறிவும் இருக்கிறது!

தூரத்தில் இருந்து கொண்டே தூரத்து செய்திகளை பார்க்கின்றார்கள், ரேடியோ டெலிஃபோன் மூலமாக தூரத்துச் செய்திகளைக் கேட்கின்றார்கள். அப்படியாயின், நுபுவ்வத்தின் பிரகாசமும், விலாயத்தின் ஆற்றலும் மின்சாரத்தின் ஆற்றலை விட தரம் குறைந்ததா?

மிஃறாஜில், ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் பிலால் றழியல்லாஹு அன்ஹு அவர்களின் காலடி சப்தத்தைக் கேட்டார்கள்,ஆனாலும் அவர் பிலால் ரலியல்லாஹு மிஃறாஜ் செல்ல வில்லை தன் வீட்டிலேயே இருந்தார்கள். இங்கே தஹஜ்ஜுதுக்காக நடமாடி கொண்டிருக்கிறார்கள், அங்கே காலடி சப்தம் கேட்கிறது! ஹளரத் பிலால் ரலியல்லாஹு தஆலா அன்ஹு அவர்களின் சூட்சும உடல் சொர்க்கம் புகுந்தது என்றால் கூட அங்கே ஹாழிர், நாழிருக்கான ஆதாரம் வந்துவிடும்.

மேற்கண்ட அனைத்து விஷயங்கள் தொடர்பாகவும் மறுப்பாளர்கள் இதையே கூறுவர்,

அல்லாஹுத்தஆலா கேட்க வைத்தான்,கேட்கின்றார்கள், அல்லாஹ்வின் பண்பு அவர்களுக்கு வழங்கப்பட்டது, அல்லாஹ்வின் பண்பு சுயமானது! இவர்களின் பண்பு புதிதானது! அல்லாஹ்வின் பண்பு யாருடைய கட்டுப்பாட்டிலும் இல்லை!

இவர்களின் பண்பு அல்லாஹ்வின் கட்டுப்பாட்டில் இருக்கின்றது. அல்லாஹுத்தஆலா காது இன்றி வேறு உறுப்பின்றி கேட்கிறான். அவர்கள் காதால் கேட்கின்றார்கள். இத்தனை வேறுபாடுகள் இருக்க ஷிர்க் எப்படி வரும்? இவ்வாறு அழைப்பது பற்றி அதிகமாக கூற முடியும்! இத்தோடு நிறுத்திக் கொள்கிறோம்.

وصلي الله علي خير خلقه سيدنا محمد وعلي اله وصحبه وبارك وسلم عليه

# ஆய்வு-7

# நபிமார்கள், வலிமார்களிடம் உதவி தேடுவது பற்றிய ஆய்வு!

## அத்தியாயம்: 1

அல்லாஹ்வின் வலிமார்கள், சங்கையான நபிமார்கள் உள்ளிட்டவர்களிடம் உதவி தேடுவது ஆகுமானது. இது பற்றிய அகீதாக் கோட்பாடு பின்வருமாறு,

**அகீதா:**

எதார்த்தத்தில் உதவி செய்வது அல்லாஹுத்தஆலா மட்டுமே! இவர்கள் அல்லாஹ்வின் உதவி வெளிவரும் வழிகள் மட்டும் தான்!. இது தான் முஸ்லிம்களின் அகீதாவாகும். அடி முட்டாள் கூட வலிமார்களை

அல்லாஹ் என்று கற்பனை செய்வதில்லை.

இந்த ஆய்வில் இரு அத்தியாயங்கள் உள்ளன.

## அத்தியாயம்: 01

அல்லாஹ் அல்லாதவர்களிடம் உதவி பெறுவதற்கான சான்றுகள்.!

01) திருக்குர்ஆன் வசனங்கள்.

02) ஸஹீஹான ஹதீதுகள்.

03) சட்ட அறிஞர்கள்.

04) ஹதீஸ் கலை மேதைகள்.

05) மறுப்பாளர்களின் கூற்றுக்கள்.

உள்ளிட்டவை ஆதாரங்களாக இருக்கின்றன. இவற்றிலிருந்து தனித் தனியாக ஒவ்வொன்றையும் விளக்குவோம்.

## 01)- திருக்குர்ஆனின் சான்றுகள்

١- وَادْعُوْا شُهَدَآءَكُمْ مِّنْ دُوْنِ اللّٰهِ اِنْ كُنْتُمْ صٰدِقِيْنَ

***01) நீங்கள் உண்மையாளர்களாக இருந்தால், அல்லாஹ் அல்லாத உங்களின் பாதுகாவலர்களை உதவிக்கு அழையுங்கள்.***

*(அல் குர்ஆன்: 2 : 23).*

இத்திருவசனத்தில் திருக்குர்ஆனைப் போன்ற ஓர் அத்தியாயத்தை உண்டாக்குவதற்கு காஃபிர்களுக்கு அழைப்பு விடுக்கப்பட்டுள்ளது. இக்காரியத்தை நிறைவேற்றுவதற்கு அல்லாஹ் அல்லாத உங்களின் பாதுகாவலர்களை உதவிக்கு அழைக்குமாறு அனுமதியும் வழங்கப்பட்டுள்ளது.

٢- مَنْ اَنْصَارِىْ اِلَى اللّٰهِ قَالَ الْحَوَارِيُّوْنَ نَحْنُ اَنْصَارُ اللّٰهِ

*02) அல்லாஹ்வின் மார்க்கத்திற்கு எனக்கு உதவி செய்பவர்கள் யார்? என்று நபி ஈஸா அலைஹிஸ்ஸலாம் கேட்டார்கள். (அப்பொழுது அவர்களுடைய சீடர்களாகிய) ஹவாரியூன்கள் நாங்கள் அல்லாஹ்வின் (மார்க்கத்திற்கு) உதவியாளர்களாக இருக்கிறோம் என்றனர்.*

*(அல் குர்ஆன்: 3 : 52).*

இத்திருவசனத்தில் நபி ஈஸா அலைஹிஸ்ஸலாம் அவர்கள் ஹவாரியூன்களை விளித்து எனக்கு உதவி செய்பவர்கள் யார்? என்று கேட்டார்கள். இங்கே நபி ஈஸா அலைஹிஸ்ஸலாம் அல்லாஹ் அல்லாத வர்களிடம் உதவி கோரியுள்ளார்கள்.

٣- وَتَعَاوَنُوْا عَلَى الْبِرِّ وَالتَّقْوٰى. وَلَا تَعَاوَنُوْا عَلَى الْاِثْمِ وَالْعُدْوَانِ

*03) நன்மைக்கும் (பயபக்தியான) தக்வாவுக்கும் நீங்கள் ஒருவருக் கொருவர் உதவி செய்து கொள்ளுங்கள்; பாவத்திற்கும், அநியாயத்திற்கும் நீங்கள் ஒருவருக்கொருவர் உதவி செய்து கொள்ள வேண்டாம்,*

*(அல்குர்ஆன்: 05: 02).*

இத்திருவசனத்தில் மற்றவர்களுக்கு உதவி செய்வதற்கு கட்டளை யிடப்பட்டுள்ளது.

٤-اِنْ تَنْصُرُوا اللّٰهَ يَنْصُرْكُمْ

*04) நீங்கள் அல்லாஹ்வுக்கு உதவி செய்தால் உங்களுக்கு அவன் உதவி செய்வான்.*

*(அல் குர்ஆன்: 47:07).*

அல்லாஹுத்தஆலா *"ஙனி"* தேவையற்றவனாக இருந்துக் கொண்டு தனது அடியார்களிடம் உதவி கோருகின்றான். ஆலமுல் அர்வாஹில் நபிமார்களின் அர்வாஹுகளிடம் ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுடைய விஷயத்தில் உறுதிமொழி எடுத்த போது,

٥- لَتُؤْمِنُنَّ بِهٖ وَلَتَنْصُرُنَّهٗ

***05) அவர் மீது நீங்கள் திண்ணமாக ஈமான் கொள்ள வேண்டும். அவருக்கு திண்ணமாக நீங்கள் உதவி செய்ய வேண்டும்.***

*(அல் குர்ஆன்: 3 : 81).*

அடியார்களுக்கு உதவுவது என்ற கட்டளை உறுதி மொழி எடுக்கப்பட்ட அர்வாஹுடைய உலகத்திலேயே ஆரம்பமாகிவிட்டது என்று இதிலிருந்து தெரியவருகின்றது.

٦ - وَاسْتَعِيْنُوْا بِالصَّبْرِ وَالصَّلٰوةِ

***06) பொறுமையைக் கொண்டும் தொழுகையைக் கொண்டும் அல்லாஹ்விடம் நீங்கள் உதவி தேடுங்கள்.***

*(அல் குர்ஆன்: 02 : 45).*

தொழுகை, பொறுமை ஆகிய இரண்டை கொண்டும் உதவி தேடுமாறு முஸ்லீம்களுக்கு இத்திருவசனத்தில் கட்டளையிடப்பட்டுள்ளது. தொழுகையும், பொறுமையும் அல்லாஹ் அல்லாதவையாகும்.

٧- فَاَعِيْنُوْنِىْ بِقُوَّةٍ

***07) (உங்கள் உழைப்பின்) சக்தியை கொண்டு எனக்கு நீங்கள் உதவி செய்யுங்கள்.***

*(அல் குர்ஆன்: 18 : 95).*

ஹளறத் துல்கர்னைன் அலைஹிஸ்ஸலாம் யஃஜூஜ், மஃஜூஜ் கூட்டத்தை தடுத்து நிறுத்தும் விஷயத்தில் அவர்களைச் சுற்றி மதில் கட்டினார்கள். இதற்கு மக்களிடத்தில் உதவித் தேடினார்கள்.

٨- اَيَّدَكَ بِنَصْرِهٖ وَبِالْمُؤْمِنِيْنَ

*08) அவன் தான் தன்னுடைய உதவியை கொண்டும், முஃமின்களைக் கொண்டும் உம்மைப் பலப்படுத்தினான்.*

*(அல் குர்ஆன்: 8 : 62).*

٩- يٰاَيُّهَا النَّبِيُّ حَسْبُكَ اللّٰهُ وَ مَنِ اتَّبَعَكَ مِنَ الْمُؤْمِنِيْنَ

*09) நபியே! அல்லாஹ்வும், முஃமீன்களில் உம்மைப் பின்பற்றியவர்களும் உமக்குப் போதுமாகும்.*

*(அல் குர்ஆன்: 8 : 64).*

١٠-فَاِنَّ اللّٰهَ هُوَ مَوْلٰهُ وَجِبْرِيْلُ وَصَالِحُ الْمُؤْمِنِيْنَ وَالْمَلٰٓئِكَةُ بَعْدَ ذٰلِكَ ظَهِيْرٌ

*10) நிச்சயமாக அல்லாஹ் அவன் அவருடைய உதவியாளனாக இருக்கிறான். இன்னும் ஜிப்ரீலும் முஃமின்களில் ஸாலிஹானவர்களும் (அவருக்கு உதவியாளராவார்கள் )*

*(அல் குர்ஆன்: 66 : 4).*

١١- اِنَّمَا وَلِيُّكُمُ اللّٰهُ وَرَسُوْلُهٗ وَالَّذِيْنَ اٰمَنُوا الَّذِيْنَ يُقِيْمُوْنَ الصَّلٰوةَ وَيُؤْتُوْنَ الزَّكٰوةَ وَهُمْ رَاكِعُوْنَ

*11) உங்களின் காரியஸ்தர்களெல்லாம் அல்லாஹ்வும் அவனுடைய ரஸூலும் இன்னும் முஃமினீன்களும் தான், அவர்கள் எத்தகையோரென்றால் (எந்நேரமும் அல்லாஹ்வின் கட்டளைக்குத்) தலை சாய்த்தவர்களாக இருக்கும் நிலையில் தொழுகையை நிலை நிறுத்தி ஸகாத்தையும் கொடுத்து வருகின்றவர்கள்.*

*(அல் குர்ஆன்: 5 : 55).*

١٢- وَالْمُؤْمِنُوْنَ وَالْمُؤْمِنٰتُ بَعْضُهُمْ اَوْلِيَآءُ بَعْضٍ

*12) முஃமினான ஆண்களும், முஃமினான பெண்களும் அவர்களில்*

*சிலர் சிலருக்கு உதவியாளர்களாக இருக்கின்றனர்.*

(அல் குர்ஆன்: 9 : 71).

١٣- نَحْنُ اَوْلِيٰٓؤُكُمْ فِى الْحَيٰوةِ الدُّنْيَا وَفِى الْاٰخِرَةِ

***நாங்கள் உலக வாழ்விலும், மறுமையிலும் உங்களுக்கு உதவியாளர் களாவோம்.***

(அல் குர்ஆன்: 41 : 31).

மேற்கண்ட திருவசனத்தில் அல்லாஹுத் தஆலா உங்களின் உதவியாளன். முஸ்லிம்களும், மற்றவர்களுக்கும் உதவியாளர்கள் என்று புரிகிறது. அல்லாஹுத்தஆலா சுயமாக உதவி செய்பவன். மற்றவர்கள் அல்லாஹ் கொடுத்ததை கொண்டு உதவி செய்பவர்கள் என்று புரிந்து கொள்ள வேண்டும்.

நபி மூஸா அலைஹிஸ்ஸலாம் அவர்களுக்கு ஃபிர்அவ்னிடம் சென்று தப்லீஃ செய்யுமாறு கட்டளை வந்த போது,

وَاجْعَلْ لِّىْ وَزِيْرًا. مِّنْ اَهْلِىْ هٰرُوْنَ .اَخِى اشْدُدْ بِهٖ اَزْرِىْ

***என் குடும்பத்திலிருந்து ஓர் உதவியாளரையும் எனக்கு நீ ஏற்படுத்து வாயாக! என்னுடைய சகோதரர் ஹாரூனை அவ்வாறு ஏற்படுத்துவாயாக! அவரை கொண்டு என்னுடைய முதுகை நீ வலுவாக்குவாயாக!***

(அல் குர்ஆன்: : 20 : 29-_31).

நபி மூஸா அலைஹிஸ்ஸலாம் இவ்வாறு கேட்ட போது என் அல்லாதவரிடம் ஏன் உதவி தேடுகின்றீர்? நான் உமக்கு செய்த உதவி போதாதா? என்று அல்லாஹுத்தஆலா கேட்கவில்லை. மாறாக, அவர்களின் கோரிக்கையை ஏற்றுக் கொண்டான்.

இதன் மூலம் அடியார்களிடம் உதவி கோருவது, அடியார்களை உதவியாளர்களாக வைத்துக் கொள்வது நபிமார்களின் ஸுன்னத்தாகும்.

ஹளரத் ரபீஆ பின் கஃபு ரலியல்லாஹுதஆலா அன்ஹு மூலம் இமாம் முஸ்லிம் ரஹ்மதுல்லாஹி அலைஹி அறிவிக்கும் பின் வரும்

ஹதீஸ் மிஷ்க்காத் ஷரீஃப் ஸுஜூதின் பாடத்தில் இடம் பெறுகின்றது.

ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் என்னிடம் விரும்பியதைக் கேள்! என்றார்கள். சொர்க்கத்தில் உங்களோடு இருப்பதையே கேட்கின்றேன் என்றேன் இதுவல்லாத வேறு ஏதும் உண்டோ? என்று கேட்டார்கள். அது மட்டும் தான் என்றேன். உனது நஃப்ஸின் மீது அதிகம் நஃபில் தொழுவதன் மூலம் எனக்கு நீ உதவி செய்! என்றார்கள்.

மேற்கண்ட ஹதீஸில் ஹளறத் றபீஆ ரலியல்லாஹு தஆலா அன்ஹு நபி அவர்களிடத்தில் சொர்க்கத்தை கேட்டதால், அல்லாஹ் அல்லாத என்னிடத்தில் சொர்க்கத்தைக் கேட்டதால் முஷ்ரிக் ஆகி விட்டாய்! என்று கூறாமல் அவரின் கோரிக்கையை ஏற்றுக் கொண்டார்கள்.

தவிர வேறு ஏதும் இருப்பின் கேட்டு பெற்றுக் கொள்! என்றும் கூறினார்கள். இது அல்லாஹ் அல்லாதவரிடம் உதவி தேடுவதாகும்.

இந்த விஷயத்தில் அதிகம் நஃபில் தொழுவதன் மூலம் எனக்கும் நீர் உதவி செய்யும் என்று ஹளறத் றபீஆ றழியல்லாஹு அன்ஹு அவர்களிடம் நபியவர்கள் உதவி கேட்டதுதான் இதிலுள்ள சுவாரசியமான செய்தியாகும். இது கூட அல்லாஹ் அல்லாதவரிடம் உதவி தேடியது தான்.

மேற்கண்ட ஹதீஸுக்கு ஷைகு அப்துல் ஹக் முஹத்திது திஹ்லவி ரஹ்மத்துல்லாஹி அலைஹி "அஷிஃஅத்துல் லம்ஆத்" என்ற நூலில் பின் வருமாறு எழுதுகின்றார்கள்.

விரும்பியதைக் கேள்! என்று குறிப்பிட்டு எதையும் குறிப்பிடாமல் பொது வாககக் கேள்! என்று கேட்டதிலிருந்து சகலதும் நபியவர்களின் கையில், அவர்களின் அதிகாரத்தில் இருக்கிறது. அவர்கள் விரும்பியதை அன்னார் விரும்பியவர்களுக்கு அல்லாஹ்வின் அனுமதியோடு கொடுக்க முடியும்.

ஏனெனில், இம்மையும் – மறுமையும் அன்னாரின் கொடையில் உள்ள தாகவே இருக்கின்றது. லௌஹு, கலம் ஆகியவற்றில் உள்ள ஞானமும் அன்னாரின் ஞானத்தின் ஒரு சிறு பகுதி தான்.

இம்மை, மறுமையில் நற்பேறைப் பெற விரும்புபவர்கள் அன்னாரின் திருச்சபைக்கு வாருங்கள்! வேண்டியதை பெற்றுக் கொள்ளுங்கள்

புனித கஃபத்துல்லாஹ்வில் 300 ஆண்டுகளாக 360 சிலைகள் இருந்தன. பின்னர் ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் மூலமாக கஃபத்துல்லாஹ் புனிதம் பெற்றது.

எனது இனிய நேசரின் புனித உதவியின்றி கஃபாவும் பரிசுத்தம் ஆகாது என்று றப்புத் தஆலா கூறி விட்டான் என்றால் உமது மனம் அன்னாரின் அருள் பார்வை படாமல் ஒரு போதும் புனிதம் பெற முடியாது என்பதைப்

புரிந்து கொள்! .

"நூறுல் அன்வார்" என்ற நூலின் ஆசிரியர் அதன் முன்னுரையில் "நற்குணம்" என்ற ஆய்வில் எழுதுகின்றார்கள்.

هُو الْجُوْدُ بِالْكَوْنَيْنِ وَالتَوَجُهُ اِلَي خَالِقِهِمَا

இரு உலகத்திற்கும், மற்றவர்களுக்கும் அருள்பாலிப்பதும், அல்லாஹுத் தஆலாவின் பக்கம் அவர்கள் முன்னோக்குவதும் ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் நற்குணமாகும்.

இரு உலகிலும் மற்றவர்களுக்கு உதவி செய்பவர், அவற்றுக்கு அவரே உரிமையாளராக இருக்க வேண்டியது அவசியம் என்பது வெளிப்படையான செய்தி. இந்த வகையில் சகலதும் நபியவர்களுக்குச் சொந்தமானது என்பது உறுதியாகி விட்டது.

மேற்கண்ட ஷைகு அப்துல் ஹக் முஹத்திது திஹ்லவி ரஹ்மத் துல்லாஹி அலைஹி அவர்களின் கூற்றிலிருந்து பின்வரும் தீர்ப்பை வெளியிட்டுள்ளார்கள்.

இம்மை, மறுமை உள்ளிட்ட சகல அருட் பாக்கியங்களையும் ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களிடமிருந்து பெற்றுக் கொள்ளுங்கள்! குழந்தைச் செல்வத்தைக் கேளுங்கள்! சொர்க்கத்தைக் கேளுங்கள்! நரகத்திலிருந்து விடுதலை பாதுகாப்பை கேளுங்கள்! ஏன் அல்லாஹ்வையே கேளுங்கள்!

**ஒரு சூஃபி கவிஞர் மிக அழகாக பாடுகின்றார்.**

அல்லாஹ்வின் திருத்தூதரே! உங்களிடம் நான் அல்லாஹ்வையே கேட்கின்றேன். யா அல்லாஹ்! உன்னிடத்தில் அல்லாஹ்வின் திருத்தூதரைக் கேட்கின்றேன்.

ஹளறத் கிப்லா ஆலிம் முஹத்திது அலி பூரி ரஹ்மத்துல்லாஹி அலைஹி கூறுகின்றார்கள்.

وَلَوْ اَنَّہُمْ اِذْ ظَّلَمُوْا اَنْفُسَهُمْ جَآءُوْكَ فَاسْتَغْفَرُوا اللّٰهَ وَاسْتَغْفَرَ لَهُمُ الرَّسُوْلُ لَوَجَدُوا اللّٰهَ تَوَّابًا رَّحِيْمًا

***நிச்சயமாக அவர்கள் தமக்குத் தாமே அநியாயம் செய்த பொழுது நபியே உம்மிடம் அவர்கள் வந்து அல்லாஹ்விடம் பாவ மன்னிப்புத் தேடி அல்லாஹ்வின் ரஸூலும் அவர்களுக்கு பாவமன்னிப்புத் தேடினால் அப்பொழுது அல்லாஹ் தவ்பாவை ஏற்றுக் கொள்ளுகின்றவனாகவும், மிகக் கிருபையுடையவனாகவும் அல்லாஹ்வைக் காண்பார்கள்.***

*(அல் குர்ஆன்: : 4 : 64).*

அதாவது, நபியவர்களிடம் வந்ததும் அல்லாஹ் கிடைத்து விடுகின்றான். அல்லாஹ்வும் கூட உங்கள் தெருவில் கிடைக்கின்றான். மதீனத்து மாமன்னரே யாரஸூலல்லாஹ்!

அஷிஃஃஅத்துல் லம்ஆத் கூறுவதை ஒத்த கருத்தை அல்லாமா முல்லா அலீ காரி ரஹ்மத்துல்லாஹி அலைஹி மிர்க்காத் என்ற நூலில் மேற்கண்ட ஹதீஸின் விரிவுரையில் பின்வருமாறு எழுதுகின்றார்கள்.

فَيُعْطِيهَا لِمَنْ شَاءَ مَا شَاءَ

ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் விரும்பியவர்களுக்கு விரும்பியதை வழங்குவார்கள்.

தஃஃப்ஸீர் கபீரில் இமாம் பக்ருத்தீன் றாஸி ரஹ்மத்துல்லாஹி அவர்கள் பின்வரும் திருவசனத்தின் விளக்கத்தில் எழுதுகின்றார்கள்.

وَلَوْ اَشْرَكُوْا لَحَبِطَ عَنْهُمْ مَّا كَانُوْا يَعْمَلُوْنَ

***அவர்கள் இணை வைத்தால் அவர்கள் செய்து கொண்டிருந்த நல்லவை அவர்களை விட்டும் அழிந்து விடும்.***

*(அல் குர்ஆன்: : 6 : 89).*

وَثَالِثُهَا اَلْاَنْبِيَاءُ وَهُمُ الَّذِيْنَ اَعْطَاهُمُ اللّٰهُ تَعَالٰى مِنَ الْعُلُوْمِ وَالْمَعَارِفِ مَا لِاَجْلِهِ يَقْدِرُوْنَ عَلٰى التَّصَرُّفِ فِي بَوَاطِنِ الْخَلْقِ وَاَرْوَاحِهِمْ وَأَيْضًا اَعْطَاهُمْ مِنَ الْقُدْرَةِ والْمَكَنَةِ مَا لاَجَلِهِ يَقْدِروْنَ علي التَّصَرُفِ فِي ظَوَاهِرِ الْخَلْقِ

மூன்றாவது, நபிமார்களாகும். இவர்களுக்கு அல்லாஹுத் தஆலா அறிவுகளையும், ஞானங்களையும் வழங்கியுள்ளான். அதன் மூலம் படைப்புக்களின் அந்தரங்க விடயங்களை அவர்கள் அறிகின்றார்கள். இன்னும் ஆன்மாக்களில் ஆட்சி அதிகாரமும் செலுத்துகிறார்கள். படைப்புகளுக்கு வெளிப்படையாகவே அதிகாரம் செலுத்தக் கூடிய சக்தியையும் ஆற்றலையும் கூட அவர்களுக்கு அல்லாஹ் வழங்கியுள்ளான்.

இதே தஃப்ஸீரில்,

وَاِذْ قَالَ رَبُّكَ لِلْمَلٰٓئِكَةِ اِنِّىْ جَاعِلٌ فِى الْاَرْضِ خَلِيْفَةً

*நபியே உம்முடைய றப்பு வானவர்களை நோக்கி நிச்சயமாக நான் பூமியில் என்னுடைய பிரதிநிதியை (ஆதமை) உண்டாக்கப் போகிறேன்*

*(அல் குர்ஆன்: 2 : 30).*

என்று கூறியபோது

இந்த திருவசனத்தின் விளக்கத்தில் பின்வருமாறு எழுதுகின்றார்கள்.

ஹளறத் அப்துல்லாஹ் பின் அப்பாஸ் ரலியல்லாஹு தஆலா அன்ஹுமா அவர்களின் அறிவிப்பில் பின்வருமாறு உள்ளது.

اَعِيْنُوْنِيْ عِبَادَاللّٰه يَرْحَمُكُمُ اللّٰه

அல்லாஹ்வின் நல்லடியார்களே! எனக்கு உதவி செய்யுங்கள். அல்லாஹ் உங்களுக்கு அருள் புரிவான்! என்று கூறுங்கள்.

وَيَسْعَوْنَ فِى الْاَرْضِ فَسَادًا

*அவர்கள் பூமியில் குழப்பம் செய்து வருகின்றனர்.*

*(அல் குர்ஆன்: 5: 20).*

என்ற திருவசனத்தின் விளக்கத்தில் தஃஃப்ஸீர் ரூஹுல் பயானில் பின்வருமாறு எழுதுகின்றார்கள்.

ஷைகு ஸலாஹுத்தீன் ரஹ்மத்துல்லாஹி அலைஹி கூறுகின்றார்கள். “வானத்தை பூமியில் வீழ்த்தும் சக்தியை அல்லாஹ் எனக்கு வழங்கி யுள்ளான். நான் நாடினால் பூமியில் உள்ள அனைவரையும் அழித்து விடுவேன்.! ஆயினும், சமாதானத்திற்காகவே துஆக் கேட்கின்றோம்.”

மஸ்னவி ஷரீஃஃபில் இமாம் ஜலாலுத்தீன் ரூமி ரஹ்மத்துல்லாஹி அலைஹி கூறுகின்றார்கள்.

“சீறிப் பாய்ந்த அம்பை மீண்டும் திருப்பி எடுப்பதற்குரிய ஆற்றல் வலிமார்களுக்கு அல்லாஹ்வின் தரப்பிலிருந்து கிடைத்துள்ளது.“

ஷைகு அப்துல் ஹக் முஹத்திதுத் திஹ்லவி றஹ்மதுல்லாஹி அலைஹி அஷிஃஃஅத்துல் லம்ஆத் என்ற நூலில் பின்வருமாறு கூறுகின்றார்கள்.

“ஹுஜ்ஜத்துல் இஸ்லாம் இமாம் கஸ்ஸாலி ரஹ்மத்துல்லாஹி அலைஹி கூறுகின்றார்கள். உயிரோடு இருக்கும்போது எவரிடம் உதவி பெறப் பட்டதோ அவர் மரணித்த பின்பும் அவரிடமிருந்து உதவி கிட்டும்.“

ஒரு பெரியார் கூறுகின்றார். “உயிரோடு இருக்கும் போது செய்த அமலை விட கப்றுக்குள்ளே அதிகம் அமல் செய்யக் கூடிய நான்கு நபர்களை நாங்கள் பார்த்துள்ளோம்.

உயிரோடு இருப்போர் செய்கின்ற உதவி சக்தி மிக்கது என்று அறிஞர்களில் ஒரு கூட்டத்தினர் கூறுகின்றனர். ஆனால், நான் கூறுகிறேன். மரணித்தவர்களின் உதவிகள் தான் சக்திமிக்கது. வலிமார்களின் அரசாங்கம் உலகத்தில்தான் நடக்கின்றது. ஆனால், மரணித்தவர்களின் றூஹுகளுக்குரிய றூஹுகள் எப்போதும் உலகத்தில் நிலைத்திருப்பதற்குரிய வாய்ப்பு இவ்வுலகில் உயிரோடு இருப்பவர்களுக்கு இல்லை.”

மிஷ்க்காத் ஷரீஃஃபின் ஓரக்குறிப்பில் "கப்றுகளைத் தரிசித்தல்" என்ற பாடத்தில் பின் வருமாறு எழுதப்பட்டுள்ளது.

واما الاستمداد بأهل القبور في غير النبي عليه السلام أوالأنبياء قذانكره كثير من الفقهاء واثبت المشائخ الصوفية وبعض الفقهاء - قال الإمام الشافعي رحمه الله قبر موسى الكاظم ترياق مجرب لاجابة الدعاء وقال الامام الغزالي رحمه الله من يشتبه في حياته يشتبه بعد وفاته

ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம், மற்றும் ஏனைய நபிமார்கள் தவிர்ந்த கப்றாளிகளிடம் துஆக் கேட்பதை அனேகமான ஃபுகஹாக்கள் நிராகரித்துள்ளனர். ஸூஃபியாக்களான ஷைகுமார்களும், சில ஃபுகஹாக்களும் ஆதரித்துள்ளனர்.

இமாம் ஷாபிஈ ரஹ்மத்துல்லாஹி அலைஹி கூறுகின்றார்கள்.

“ஹளறத் மூஸல் காழிம் றழியல்லாஹு தஆலா அன்ஹு அவர்களின் கப்று ஷரீஃப் துஆ கபூலாவதற்குரிய இடம் என்பது அனுபவ ரீதியாக பரீட்சித்துப் பார்க்கப்பட்டதாகும்.“

“உயிரோடு இருக்கும் போது எவரிடமிருந்து உதவி பெறப்பட்டதோ அவர் வஃபாத்தான பின்பும் அவரிடமிருந்து உதவி கிடைக்கும்“ என்று இமாம் கஸ்ஸாலி ரஹ்மத்துல்லாஹி அலைஹி கூறுகின்றார்கள்.

மேற்கண்ட கூற்றிலிருந்து நபிகள் நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் மற்றும் ஏனைய நபிமார்களிடமிருந்து உதவி தேடுவதில் எவ்வித ஆட்சேபனையும் கிடையாது.

இதில் எவருக்கும் கருத்து வேறுபாடு கிடையாது. வலிமார்களிடம் உதவி தேடுவதில் கருத்து வேறுபாடு உண்டு. வெளிப்படையான கலைகளைக் கற்ற உலமாக்கள் மறுக்கின்றனர். சங்கைமிகு ஸூஃபியாக்களும், கஷ்ஃபுடைய சில ஃபுகஹாக்களும் ஆதரித்துள்ளனர்.

ஹிஸ்னுல் ஹஸீன் என்ற நூல் பக்கம்-202ல் பின்வரும் ஹதீஸ் இடம் பெற்றுள்ளது.

وان اراد عونا فليقل يا عباد الله اعينوني يا عباد الله اعينوني يا عباد الله اعينوني

யாராவது ஒருவருக்கு ஏதும் உதவி தேவைப்பட்டால், அல்லாஹ்வின் நல்லடியார்களே! எனக்கு உதவுங்கள். அல்லாஹ்வுடைய நல்லடியார்களே! எனக்கு உதவுங்கள். அல்லாஹ்வுடைய நல்லடியார்களே! எனக்கு உதவுங்கள். என்று கூறவும்.

இதற்கான விரிவுரை ஷறஹு ஹிர்ஸுத் தமீன் என்ற நூலில் இமாம் முல்லா அலீ காரி ரஹ்மத்துல்லாஹி அலைஹி கூறுகின்றார்கள்.

اِذَانْفَلَتَتْ دابَّةُ اَحَدِكُمْ بِاَرْضِ فُلَاةٍ فَلْيُنَادِ يَا عِبَادَ اللهِ اَحْبِسوْا

யாராவது ஒருவருடைய மிருகம் காட்டில் ஓடி விட்டால் “அல்லாஹ்வின் நல்லடியார்களே அதைத் தடுத்துக் கொள்ளுங்கள்!“ என்று கூறவும்.

அல்லாஹ்வின் அடியார் நல்லடியார்களே என்ற சொற்றொடருக்குக் கீழ் எழுதுகிறார்கள்.

اَلْمُرَادُ بِهِمْ اَلْمَلَائِكَةُ اَوِ الْمُسْلِمُوْنَ مِنَ الْجِنِّ اَو رِجَالُ الْغَيْبِ الْمُسَمُّوْنَ بِاَبْدَالِ

நல்லடியார் என்பதன் கருத்து மலக்குகள் அல்லது முஸ்லிம்களான ஜின், அல்லது மறைவான மனிதர்கள் என்ற பெயருடைய அப்தால்கள் ஆவார்கள். இந்த ஹதீது ஸஹீஹான ஹதீதின்தரத்தைச் சேர்ந்தது என்றும், பிரயாணிகளுக்கு இந்த ஹதீது மிக முக்கியமானது என்றும்; அனுபவ ரீதியாக பரிசோதிக்கப்பட்டது என்றும் குறிப்பிட்டுள்ளார்கள்.

ஷாஹ் அப்துல் அஸீஸ் முஹத்திதுத் திஹ்லவி றஹ்மத்துல்லாஹி அலைஹி ஃபத்ஹுல் அஸீஸ் என்ற அவர்களின் அகமியம் நிறைந்த தஃப்ஸீரில் எழுதுகின்றார்கள்.

அறிந்துக் கொள்! அல்லாஹ் அல்லாதவர்களிடம் உதவி தேடும் போதும் அல்லாஹ்வுடைய உதவி இல்லாமல் உதவி செய்கிறார் என்று நம்பி அவரிடம் உதவி கேட்பது ஹராம் ஆகும்.

இவர்கள் உதவி வெளிவருவதற்கு ஒருவழியாக இருக்கிறார்கள். அல்லாஹ்வின் ஹிக்மத், உதவி இவர்கள் வழியாக வருகிறது. இவர்கள் அதற்கு ஒரு காரணமாக இருக்கிறார்கள் என்று நம்பிக்கை வைத்து உதவியை அல்லாஹ்வில் எதிர்பார்த்து வேண்டுவது மெஞ்ஞானத்தில் தூரம் அல்ல! இது ஷரீஅத்திலும் ஆகுமானது தான்.

இப்படியான உதவிகள் அல்லாஹ் அல்லாத நபிமார்கள், வலிமார்களிடமிருந்தும் பெற முடியும். எதார்த்தத்தில் இவை அல்லாஹ் அல்லாதவரிடமிருந்து பெறுவதில்லை. அல்லாஹ்விடமிருந்து தான் பெறப்படுகிறது.

மேலும் இதே தஃப்ஸீரில் ஸூரத்துல் பகரா பக்கம் 460ல் ஷாஹ் அப்துல் அஜீஸ் ரஹ்மதுல்லாஹி அலைஹி எழுதுகிறார்கள்.

குழந்தை வரம் கொடுத்தல், இரணத்தை விசாலப்படுத்தல் நோயை குணப்படுத்துதல் அல்லாஹ்விற்குரிய வேலையாகும்.

இது போன்ற செயலை முஸ்லீம்கள் அல்லாத கெட்ட ஆத்மாக்கள் மற்றும் சிலைகளோடு இணைத்து கூறுகின்றனர். அதனால் காஃபிராகி

விடுகின்றனர்.

முஸ்லிம்கள் இப்படியான காரியங்களை அல்லாஹ்வின் தீர்ப்பாகவோ, அல்லது அவருடைய சொந்த நல்லடியார்களின் சிறப்பம்சமாகவோ கருதுகின்றனர்.

உதாரணமாக மருந்துகள், லேகியங்கள் அல்லது நல்லடியார்களின் துஆக்கள். அதாவது அல்லாஹ்விடத்தில் துஆ கேட்டு மக்களின் தேவைகளை நிறைவேற்றுதல் என்று கருதிச் செய்வதால் மூமின்களின் ஈமானில் எவ்வித குறையும் வந்துவிடப் போவதில்லை.

புஸ்தானுல் முஹத்தீன் என்ற நூலில் ஷாஹ் அப்துல் அஸீஸ் முஹத்திதுத் திஹ்லவி ரஹ்மதுல்லாஹி அலைஹி ஷைகு அப்துல் அப்பாஸ் அஹ்மது ஸர்ரூக் ரஹ்மதுல்லாஹி அலைஹி அவர்களின் பின் வரும் ஒரு கவிதையைக் குறிப்பிடுகின்றார்கள்

أنا لمريدي جامع لشتاته     إذا مسه جور الزمان بنكبة

وإن كنت في ضيق وكرب ووحشة     فناد بيازروق آت بسرعة

காலத்தின் கொடுமையால் துன்பப்படும் எனது முரீதின் சிதறிப்போன உள்ளத்தை நான் ஒன்று சேர்க்கின்றவனாக இருக்கின்றேன். நெருக்கடியிலும் சோதனைகளிலும் மருட்சியிலும் (அச்சத்திலும்) இருப்பாயானால் யாஸர்ரூக்! என்று என்னை கூப்பிடுவாயாக!, உடனே விரைந்து வருவேன்.

தஃப்ஸீர் கபீர், தஃப்ஸீர் காஸின் உள்ளிட்ட தஃப்ஸீர்களில்

فَلَبِثَ فِى السِّجْنِ بِضْعَ سِنِيْنَ

***மேலும் சில ஆண்டுகள் சிறையில் தங்கி விட்டார்.***

*(அல் குர்ஆன்: 12:42).*

என்ற திருவசனத்தில் பின் வருமாறு எழுதுகின்றார்கள்

الاستعانة بالناس في دفع الضرر والظلم جائزة

சோதனைகளைத் தட்டுவதற்காக மனிதர்களிடத்தில் உதவி தேடுவது ஆகுமானது.

இதே கருத்தை தஃப்ஸீர் காஸினில்,

فَاَنْسٰهُ الشَّيْطٰنُ

என்ற திரு வசனத்தின் விளக்கத்தில்,

*(அல் குர்ஆன்: 12:42).*

اَلْاِسْتِعَانَةُ بِالْمَخْلُوْقِ فِي دَفْعِ الضَّرَرِ جَائِزُ

தங்கடங்களைத் தடுப்பதற்காக படைப்பில் உதவி தேடுவது ஆகும் என்று எழுதுகின்றார்கள்.

துர்ருல் முக்தார் என்ற நூலில் காணாமல் போன பொருளைத் தேடுதல் என்ற பாடத்தில் எழுதுகின்றார்கள்.

اِنَّ الْاِنْسَان أَذَا ضَاعَ لَهُ شَيُّئ وَارَادَ أَنْ يَرُدَّهُ اللّٰهُ عَلَيْهِ فَلْيَقِفُ عَلٰي مَكَانٍ عَالٍ مُسْتَقْبِلَةِ الْقِبلَةِ وَيَقْرَءُ الْفَاتِحَةُ وَيَهْدِي ثوَابَهَا لِلنَّبِيّ صَلَّي اللّٰهُ عَلَيْهِ وَسَلَّمَ ثُمَّ يَهْدِيْ ثوَابَهَا لِسَيِّدِ اَحْمَدَ ابْنِ عَلَوَان يَقُولُ يَا سَيِّدِيْ يَا اَحْمَد عَلوَان اِنْ لَمْ تَرُدّ عَلَيَّ ضَالَّتِيْ وَاِلَّا نَزَعْتُكَ مِن دِيْوَانِ الْاَوْلِيَاءِ فَاِنَّ اللّٰه يَرُدُّ ضَالَّتَهُ بِبَرَكَتِهِ

யாராவது ஒருவரின் பொருள் காணாமல் போய்விட்டால் பொருளை அல்லாஹுத் தஆலா மீட்டித் தர வேண்டுமாயின், ஓர் உயர்ந்த இடத்தில் கிப்லாவை முன்னோக்கி நின்று கொண்டு ஸூரத்துல் ஃபாத்திஹாவை ஓதி அதன் தவாபை முதலில் ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கு சேர்த்து வைத்த பின் செய்யிது அஹ்மது அலவான் ரஹ்மத்துல்லாஹி அலைஹி அவர்களுக்கும் சேர்த்து வைக்க வேண்டும். பின்னர் இந்த துஆவை ஓத வேண்டும்.

யா செய்யிது அஹ்மது பின் அலவானே! பிறகு காணாமல் போன

பொருளை நீங்கள் மீட்டித் தராவிட்டால், உங்களை வலிமார்களின் ஏட்டிலிருந்து நீக்கி விடுவேன் என்று கூற வேண்டும் அவர்களின் பரக்கத்தினால் காணாமல் போன பொருளை அல்லாஹ் தஆலா மீட்டித் தந்து விடுவான்.

மேற்கண்ட துஆவில் செய்யிது அஹ்மத் அலவான் அவர்களை விளித்து அழைக்கப்படுகிறது. உதவியும் கேட்கப்படுகிறது. காணாமல் போன பொருளையும் அவர்களிடம் வேண்டப்படுகிறது.

ஹளறத் இமாமுல் அஃழம் அபூஹனீஃபா ரஹ்மத்துல்லாஹி அலைஹி தனது கஸீதத்துன் நுஃமானியாவில் பின்வருமாறு பாடுகின்றார்கள்.

يٰا اَكْرَمَ الثَّقَلَيْنِ يٰا كَنْزَ الْوَرَى جُدْ لِيْ بِجُودِكَ اِرْضِنِي بِرِضَاكَا

اَنَا طَامِعٌ بِالْجُوْدِ مِنْكَ لَمْ يَكُنْ لِاِبْنِ حَنِيفَة فِي الْاَنَامِ سِوَاكَا

மனு, ஜின்களில் மிக்க சங்கையானவரே! இறையருளின் கருவூலத்தை அல்லாஹுத்த ஆலா உங்களுக்குத் தந்துள்ளான். அதனை எனக்கும் தாருங்கள். அல்லாஹுத்தஆலா உங்களைப் பொருந்திக் கொண்டான். அதனால், என்னையும் நீங்கள் பொருந்திக் கொள்ளுங்கள். நான் உங்களின் கொடையை ஆசையோடு எதிர் பார்க்கின்றேன். அபூஹனீஃபாவுக்கு படைப்பில் நீங்களின்றி வேறு எவரும் கிடையாது.

இந்தப் பாடலில் இமாமுல் அஃழம் அபூஹனீஃபா ரஹ்மதுல்லாஹி அலைஹி மிகத் தெளிவாக ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களிடத்தில் உதவி தேடியுள்ளார்கள்.

புர்தா ஷரீஃபில் இமாம் பூஸரி றஹ்மதுல்லாஹி அலைஹி பின் வருமாறு பாடுகின்றார்கள்.

يٰا اَكْرَمَ الْخَلْقِ مَا لِي مَنْ اَلُوْذُ بِهِ سِوَاكَ عِندَ حُلُولِ الْحَادِثِ الْعَمَمِ

படைப்பில் சங்கையானவரே! சோதனைகள் ஏற்படும் வேளை உங்களன்றி நான் ஒதுங்க யாருமில்லையே!

(புர்தா ஷரீஃபுக்கு ஹதீதுக்கலை மேதைகள், சட்ட அறிஞர்கள், ஸூஃபியாக்கள் உள்ளிட்ட பல நூறு பேர்கள் விரிவுரை எழுதியிருப்பது ஈண்டு கவனிக்கத்தக்கது.)

மேற்கண்ட உலமாக்கள், ஃபுகஹாக்கள், ஷைகுமார்கள் உள்ளிட்டோரின்

கூற்றுக்களை தொகுத்துப் பார்க்கும் போது இவர்கள் அனைவரும் ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களிடத்திலும், வலிமார்களிடத்திலும் உதவி தேடியுள்ளனர் என்பது திண்ணமாகியுள்ளது.

இவ்வாறு உதவி தேடியதற்குரிய ஆதாரங்கள் ஏராளமுண்டு. அவற்றை யெல்லாம் எழுதப் புகுந்தால் ஏடு தாங்காது. அதனால் இத்தோடு நிறுத்திக் கொள்கின்றோம்.

"கப்றுகளைச் ஸியாறத்துச் செய்வதற்காக பிரயாணம் செய்தல்" என்ற பாடத்தில் ஷாமி (றத்துல் முக்தார்) என்ற நூலில் பின்வரும் குறிப்பைப் பதிவு செய்துள்ளார்கள். சட்ட மேதை இமாம் ஷாஃபிஈ றஹ்மதுல்லாஹி அலைஹி கூறுகின்றார்கள்.

(நான் பகுதாதில் இருக்கும் போது) எனக்கு ஏதும் தேவையேற்பட்டால் இமாமுல் அஃழம் அபூ ஹனீஃபா ரஹ்மதுல்லாஹி அலைஹி அவர்களின் மஜார் ஷரீஃபுக்கு வருவேன். அவர்களின் பறக்கத்தினால் எனது தேவை நிறைவேறும்.

"நுஸ்ஹத்துல் காதிர்" ( نزهة الخاطر ) என்ற நூலில் அல்லாமா முல்லா அலி காரி றஹ்மதுல்லாஹி அலைஹி எழுதுகின்றார்கள். (இக்குறிப்பு பஹ்ஜத்துல் அஸ்ஸாரில் பதிவாகியுள்ளது.)

கௌதுல் அஃழம் முஹ்யித்தீன் அப்துல் காதிர் ஜீலானி கத்தஸல்லாஹு ஸிர்ரஹூல் அஸீஸ் பின்வருமாறு கூறினார்கள்.

مَنْ اِسْتَغَاثَ بِيْ كُرْبَةٍ كُشِفَتْ عَنْهُ وَمَنْ نَادَانِي ْبِاِسْمِي فِيْ شِدَّةٍ فُرِجَتْ عَنْهُ وَمَنْ تَوَسَّلَ بِيْ اِلَى اللّٰهِ فِي حَاجَة قُضِيَتْ

யாராவது ஒருவர் கவலையிலும், மன சஞ்சலத்திலும் என்னைக் கொண்டு அல்லாஹ்விடத்தில் வஸீலாத் தேடினால் அவரின் தேவை நிறைவேறும்.

மீண்டும் எழுதுகின்றார்கள். இரண்டு ரக்கஅத் தொழவேண்டும். ஒவ்வொரு றக்காஅத்திலும் 11 விடுத்தம் ஸூரத்துல் இக்லாஸ் ஓத வேண்டும். ஸலாம் கொடுத்த பின், ஸலவாத் ஸலாம் ஓதவேண்டும். பின் பகுதாத் பக்கமாக 11 எட்டு வைக்க வேண்டும். ஒவ்வொரு எட்டிலும் எனது பெயர் கூறி தேவையைக் கூற வேண்டும். இதன்பின் பின்வரும் கவிதையைப்

பாடவேண்டும்.

أيدركني ضيم وأنت ذخيرة وأظلم فى الدنيا وأنت نصيرى

وعار على حامي الحمى وهو منجدي إذا ضاع في البيدا عقال بعيرى

நீங்கள் எனது கருவூலமாக இருக்கும் போது எனக்கு அநியாயம் செய்ய முடியுமா?

நீங்கள் எனக்கு உதவியாளராக இருக்கும் நிலையில் உலகில் நான் அநியாயத்திற்குள்ளாவேனா?

கௌதுல் அஃழம் எனக்கு அபயமாக இருக்கத்தக்க, வனாந்திரத்தில் எனது ஒட்டகத்தின் ஒரு கயிறாவது களவு போனாலும் அது காவலாளியின் குறைபாடாகவே அமையும்.

மேற்கண்ட கௌதிய்யா தொழுகையின் பலனாக தேவைகள் நிறைவேறியுள்ளதை பல முறை அனுபவ ரீதியாக பரீட்சித்துப் பார்க்கப் பட்டுள்ளது என்று அல்லாமா முல்லா அலி காரி ரஹ்மதுல்லாஹி அலைஹி குறிப்பிடுகின்றார்கள்.

பாருங்கள்! கஷ்டமான நேரத்தில் தன்னிடம் உதவி கோருமாறு கௌதுல் அஃழம் முஹ்யித்தீன் அப்துல் காதிர் ஜெய்லானி கத்தஸல்லாஹு ஸிர்ரஹுல் அஸீஸ் தங்களுடைய முரீதீன்களுக்குக் கட்டளையிட்டுள்ளார்கள். இத்தகவலை ஹனஃபி மத்ஹபின் மிக சிறந்த அறிஞர் எவ்வித மறுப்பும் இன்றி தனது நூலில் பதிவு செய்து இருப்பதோடு, இது பலமுறை பரீட்சித்துப் பார்க்கப்பட்டது என்றும், அது முற்றிலும் முழுக்க சரியாகவே அமைந்துள்ளது என்றும் எழுதியுள்ளார்கள்.

இதன் மூலம் வஃபாத்தான பின் ஒருவரிடம் உதவி தேடுவது ஆகுமானது, பயன்மிக்கது என்பது தெளிவாகிவிட்டது. இதுவரை திருக்குர் ஆன், ஹதீஸ்; சட்ட அறிஞர்கள்! உலமாக்கள் ஷெய்குமார்கள் உள்ளிட்டோரின் சான்றுகளை முன் வைத்துள்ளோம்.

அடுத்து, தேவ்பந்திய மறுப்பாளர்களின் கூற்றுக்களையும் முன் வைக்கின்றோம் படியுங்கள்.!

தேவ்பந்திகளின் ஷைகுல்ஹிந்த் என்று அழைக்கப்படுகின்ற மௌலவி மஹ்மூதுல் ஹசன் என்பவர் தர்ஜுமதுல் குர்ஆனுக்கு 4 பகுதிகளுக்கு மட்டும் அடிக்குறிப்பு எழுதியுள்ளார். மீதி அனைத்துக்கும் மௌலவி சபீர் அஹ்மத் அடிக்குறிப்பு எழுதியுள்ளார்.

ஸூரத்துல் ஃபாத்திஹாவில் "உன்னிடமே உதவி தேடுகின்றோம்" என்ற திருவசனத்திற்குரிய விளக்கத்தில் பின்வருமாறு எழுதுகின்றார்.

"அல்லாஹ்வின் நெருங்கிய நல்லடியார்களை அல்லாஹ்வின் ரஹ்மத்தின் ஊடகமாகவும், சுயமாக உதவி செய்பவர் அல்ல என்றும் கருதி அவரிடம் வெளிப்படையாக உதவி கோருவது ஆகுமானதே! இப்படியான உதவி கோரல் என்பது எதார்த்தத்தில் அல்லாஹ்விடம் உதவி கோருவதாகும்." என்று அவர் தீர்ப்பை கூறிவிட்டார்.

எந்த ஒரு முஸ்லிமும் யாராவது ஒரு வலியுல்லாஹ்வையோ, நபியையோ அல்லாஹ் என்று நம்புவதில்லை. அல்லாஹ்வின் மகன் என்றும் எண்ணுவதில்லை. அவர்களை வஸீலாவாக மட்டுமே ஆக்குகின்றனர். இதைத்தான் நாமும் கூறுகின்றோம்.

தேவ்பந்தின் ஞானபீடம் மௌலவி அப்துர் ரஷீத் கங்கோஹி தனது ஃபதாவா ரஷீதியா பாகம் ஒன்றில்" ஹலால் ஹராம் என்ற பாடம் பக்கம் 64ல் ஒரு கேள்விக்கு பின்வருமாறு பதில் எழுதுகிறார்.

கேள்வி: யாரஸூலல்லாஹ் அபயம்.! யாமுஹம்மத் முஸ்தஃபா அபயம்! அல்லாஹ்வின் சம்பூரணமான ஹளறத் முஹம்மது முஸ்தஃபா ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களே! உங்களின் உதவி ஒவ்வொரு வினாடியும் எனக்குத் தேவைப்பட்டுக் கொண்டே இருக்கிறது என்ற கருத்துள்ள கவிதைகளைப் பாடுவது ஆகுமா?

பதில்: இப்படியான கவிதைகள் தனிமையிலும் (கல்வத்திலும்) கூட்டத்தோடு (ஜல்வத்திலு)ம் பாடுவது வெளிப்படையானது தான்.! ஹக்குத் தஆலா தன்னைப் பார்க்க வேண்டும் என்று, அல்லது வேறு காரணமின்றி தனித்த மஹப்பத்தால் கேட்பது ஆகுமானதே!

இதே ஃபதாவா றஷீதியா பாகம் 3, பக்கம் 52ல் பின்வருமாறு எழுதப்பட்டுள்ளது.

**கேள்வி:**

يٰارَسُولَ اللهِ اُنْظُرْ حٰالَنَا    يٰارَسُوْلَ اللهِ اِسَّمَعْ قَالَنَا
اِنَّي فِي بَحْرِ غَمِّ مُغْرَقِخُذ    بِيَدِيً سَهِّلْ لَنَا اَشْكَالَنَا

அல்லாஹ்வின் திருத்தூதரே எங்கள் நிலைகளை நீங்கள் உற்று நோக்கிப்

பாருங்கள்! யாரஸூலல்லாஹ்! எங்களின் பேச்சைக் கேளுங்கள்.!

நான் கவலை என்ற கடலில் மூழ்கித் தவித்துக் கொண்டிருக்கின்றேன். எனது இருகைகளையும் பிடித்து எமது சிக்கல்களை எங்களுக்கு இலேசாக்கி விடுங்கள்!

மேலும் புர்தா ஷரீஃபில்,

يَا اَكْرَمَ الْخَلْقِ مَا لِي مَنْ اَلُوْذُ بِهِ سِوَاكَ عِندَ حُلُولِ الْحَادِثِ الْعَمَمِ

படைப்பில் அதி சங்கையானவரே! சோதனைகள் இறங்கும் வேளை தாங்களையன்றி நான் ஒதுங்க வேறு பாதையில்லை!

மேற்கண்ட இரு பாடல்களையும் தினமும் வழீஃபாவாகவோ, அல்லது பொதுவாகவோ ஓதுவது கூடுமா?

**பதில்:**

இப்படியான வார்த்தைகளை கவிதைகளாகவோ, வசனங்களாகவோ எதுவாயினும் சரி வழக்கமாக்கி ஓதுவது மக்ரூஹ் தன்ஸீஹ் ஆகும். குஃப்றோ, பெரும் பாவமோ அல்ல!

மேற்கண்ட இரு பாடல்களிலும் ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களிடத்தில் உதவி தேடுவது குஃப்று, ஷிர்க் இல்லை என்றும், ஆகுமானது என்றும், மிஞ்சிப் போனால் மக்ரூஹ் தன்ஸீஹாகும் என்றும் மௌலவி றஷீத் அஹ்மத் கங்கோஹி கூறியுள்ளார்.

கஸாயிஸ் காஸிமி என்ற பாடலில் மௌலவி காஸிம் நானோத்தவி இவ்வாறு பாடுகின்றார்.

கொடை வள்ளலான அஹமதே! எனக்கு உதவுங்கள்.!

உங்களையன்றி காசிமுக்கு உதவுவார் வேறு யாரும் இல்லையே!

மேற்கண்ட பாடலில் நானோத்தவி அல்லாஹு ஸுப்ஹானஹு தஆலாவை முற்று முழுதாக மறந்துவிட்டார். ஸிறாத்துல் முஸ்தகீம் உருது

மொழிபெயர்ப்பு பகுதி மூன்று பக்கம் 103ல் மௌலவி இஸ்மாயீல் திஹ்லவி கூறுகின்றார்.

மௌலவி ரஷீத் அஹ்மதின் ஷைகு ஹாஜி இம்தாதுல்லாஹ் சாஹிப் கூறுகின்றார்.

யாரஸூலல்லாஹ்! உம்மத்தின் கப்பலை அல்லாஹுத்தஆலா உங்களின் கரத்தில் தந்துள்ளான். நீங்கள் விரும்பினால் அதை முழுமையாக அழிக்கலாம். அல்லது, கரை சேர்க்கலாம். பதாவா றஷீதிய்யா பாகம் 1 பக்கம் 99 பித்அத் என்ற அத்தியாயத்தில் பின் வருமாறு எழுதுகின்றார்.

ஹதீஸின் சில அறிவிப்புகளில்

اَعِيْنُونِي يٰا عِبَا دَاللّٰهِ

அல்லாஹ்வின் நல்லடியார்களே! எனக்கு உதவுங்கள். என்று வந்துள்ளது! எதார்த்தத்தில் இவ்வுதவி ஏதாவது மையித்திடம் கேட்கின்ற உதவியில்லை.

பாலைவனங்களில் சிலர் அல்லாஹ்வின் நல்லடியார்கள் இருக்கின்றனர். இது அவர்களிடம் கேட்கின்ற உதவியாகும். அல்லாஹுத்தஆலா இதற்காகவே அவர்களை அங்கேயே நிலை நிறுத்தி வைத்துள்ளான்.

மேற்கண்ட வாக்கியத்தின் மூலம் மக்களுக்கு உதவி செய்வதற்காக வேண்டி வனாந்திரத்தில் சில நல்லடியார்களை அல்லாஹுத்தஆலா நிறுத்தி வைத்துள்ளான். அவர்களிடம் உதவி தேடுவது போதுமானது என்று தெரிய வருகின்றது. அல்லாஹ் அல்லாத அல்லாஹ்வின் நல்லடியார்களிடம் உதவி தேடுவது ஆகும் என்றுதான் நாமும் கூறுகின்றோம். அதைத்தான் மறுப்பாளர்களும் கூறுகின்றனர்.

இப்போது ஒரு தீர்வுக்கு வருவோம்.

ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களிடம் உதவி தேடலாமா? இல்லையா? என்பது தொடர்பாக நாம் நிறைய எழுதி உள்ளோம். அடுத்து பகுத்தறிவு ரீதியான பக்கம் கவனத்தை செலுத்துவோம்.

மௌலவி முஹம்மது ஹசன் அதில்லா காமிலா " ادلة كاملة " என்ற நூல்

பக்கம் 14ல் கூறுகின்றார்.

அடிப்படையில் அல்லாஹ்வுக்கு அடுத்தபடியாக உயிருள்ள உயிரற்ற பொருட்களின் உலகங்களின் சொந்தக்காரர் நீங்கள்தான்.!

இவற்றில் மனிதனாக இருந்தாலும் சரி, மனிதன் அல்லாதவையாக இருந்தாலும் சரி அடிப்படையில் நீங்கள்தான் சொந்தக்காரர்! இதன் காரணமாகத்தான் நீதமும், முத்திரையும் உங்கள் பொறுப்பில் வாஜிபானது.

ஸிறாத்துல் முஸ்தகீம் என்ற நூலில் இரண்டாவது வழி காட்டுதல் என்ற அத்தியாயம் பகுதி ஒன்று பக்கம் 60ல் மௌலவி இஸ்மாயீல் திஹ்லவி எழுதுகின்றார்.

ஹளறத் அலி முர்தழா ரழியல்லாஹு அன்ஹு அவர்களுக்கு ஒரு விதத்தில் ஹளறத் செய்யிதினா அபூபக்கர் சித்தீக், செய்யிதினா உமர் ஃபாரூக் ரழியல்லாஹு அன்ஹுமா ஆகிய இருவரையும் விட பின்வரும் ஒரு சிறப்பு இருக்கின்றது.

இவர்களின் பேச்சை அதிகமானோர் பின்பற்றுகின்றனர். விலாயத், குத்பியத், கௌதிய்யத், அப்தாலியத் உள்ளிட்டவை யாவும் இவர்களின் காலத்திலிருந்து உலக முடிவு நாள் வரை இவர்கள் ஊடாகவே இருக்கும். மன்னாதி மன்னர்கள், மற்றும் ஆட்சியாளர்களின் ஆட்சியிலும் இவர்களின் ஊடுருவல் இருக்கும்.

இந்த பேருண்மை சூக்கும அதீத உலகத்தில் சஞ்சாரம் செய்வோருக்கு மறைந்ததல்ல!

மேற்கண்ட கூற்றின் மூலம் ஆட்சி, அதிகாரம் விலாயத், கௌதிய்யத் உள்ளிட்டவை ஹளறத் அலி ரலியல்லாஹு தஆலா அன்ஹு அவர்களின் ஆட்களுக்குத்தான் கிடைக்கின்றன என்பது தெரிய வருகின்றது.

மௌலவி அஷ்ரஃப் அலி தானவி " இம்தாதுல் பதாவா" பாகம்: 04 அத்தியாயம் அகாயித் பக்கம் 99 ல் எழுதுகின்றார்.

உதவி தேடுவதும், உதவி செய்வதும், அறிவும், ஆற்றலும் சுயமானது என்று நம்பினால், ஷிர்க்காகும். அறிவும், ஆற்றலும் சுயமானது அல்ல! அந்த அறிவும், ஆற்றலும் ஏதோ ஒரு ஆதாரத்தின் அடிப்படையில் உள்ளது என்று நம்பினால் ஆகுமானது!

உதவி செய்பவர் உயிருள்ளவராக இருந்தாலும் சரி, மரணித்தவராக இருந்தாலும் சரி! இதே கருத்தைத்தானே நாமும் கூறுகின்றோம், முரண்பாடு ஏன்?

மௌலவி அஷ்ரப் அலி தானவி தனது "நஷ்றுத் தீபு" என்ற நூலில்,

ஷமீமுல் ஹபீப் என்ற அரபி கவிதைக்கான மொழி பெயர்ப்பில் பின் வருமாறு கவிதை வடிக்கின்றார்.

يا شفيْعَ الْعِبْادِ خُذْ بِيَدِي    اَنْتَ فِي الْاِضْطِرَابِ مُعْتَمَدَ

அடியார்களுக்கு ஷஃபாஅத்துச் செய்பவர்களே! எனது கரம்பற்றி உதவுங்கள்! கஷ்டமான நேரத்தில் நீங்கள்தான் எனது பாதுகாவலர்!

لَيّسَ لِي مَنجًا سِوَاكَ اَغِثْ    مَسَّنِيْ الضُّرُّ سَيِّدِيْ سَنَدِيْ

நீங்களன்றி ஒதுங்கும் தலம் எனக்கில்லை! அதனால், என்னை இரட்சி யுங்கள். கஷ்டங்கள் என்னைத் தொட்டு அடர்தேறிவிட்டது நாயகமே! என் ஆதாரமே!

غشيَ الدَّهْرُ ابْنَ عَبْدِاللهِ    كُنْ مُغِيْثًا فَاَنتَ لِيْ مَددىْ

அப்துல்லாஹ்வின் மகனாரே! காலம் விரோதமாகிவிட்டது. என்னை இரட்சிக்கின்றவராகுங்கள். நீங்கள்தான் எனக்கு உதவியாளராகும்.

*ஆதாரம்: நஷ்றுத்தீபி பீ திக்றில் ஹபீபி*

## வலிமார்களிடம் உதவி தேடுவதற்கான பகுத்தறிவு விளக்கம்.

இவ்வுலகில் உள்ள செயல்கள் யாவும் மறுமையில் முகவரி கொடுக்கின்ற ஒரு நமூனாவாகும்.

இதன் காரணமாகவே மறுமையில் எழுப்பப்படுதல், மஹ்ஷர் பெரு வெளியில் பரந்து நிற்றல், றப்பின் உலூஹிய்யத் உள்ளிட்ட வற்றுக்கு உலகியல் சார்ந்த உதாரணங்களை திருக்குர்ஆன் கூறுகின்றது.

உதாரணமாக, உயிரற்ற மரணித்தவர்கள் மீண்டும் உயிர் பெறுவதை வறண்ட நிலத்தில் மழை பொழிந்து புல் முளைத்து பசுமையாக இருப்பதையும்,

உமது அடிமைகளில் எந்தவிதமான கூட்டும் இருப்பதை விரும்பாத

நீங்கள் எமது அரசாட்சியில் சிலைகளையும், மக்களையும் ஏன் கூட்டாக்குகின்றீர்கள்? இது போன்ற உதாரணங்கள் இம்மை மறுமைக்கான ஒரு நமூனா என்பதனை புரிந்து கொள்கின்றோம்.

இவ்வுலகிலுள்ள அரசர் சகல காரியங்களையும் தானே முன்னின்று செய்யாமல் திணைக்களங்கள், காரியாலயங்களை நிறுவி ஒவ்வொரு நிறுவனத்திலும் பல தரத்திலுள்ள அதிகாரிகளை நியமிப்பார். அவர்களுள் கீழ் நிலையிலுள்ளவர்கள் மேலதிகாரியின் கட்டளையில் இயங்குவார்கள்.

பின்னர், சகல காரியாலயங்களையும் கண்காணிக்க ஓர் அதி உயர் சபையை நிறுவுவார். அதில் நீதியரசர்கள், பிரதம மந்திரி, அமைச்சர்கள் உள்ளிட்டோர் தேர்ந்தெடுக்கப்படுவார்கள்.

அரசர் தன் கையால் நிர்வாகத்தை நடத்தாமல் இவர்கள் ஊடாக தனது நாட்டத்தையும், விருப்பத்தையும் செயல்படுத்துவார். மற்றவர்களுக்கு நிர்வாகத்தில் எதுவித தொடர்பும் கிடையாது.

இவ்வாறு நிர்வாகத்தை நடத்த அரசர் நிர்ப்பந்தமான நிலையில் இருக்கின்றார் என்பது கருத்து அல்ல.! அரசர் தானே சென்று தன்கையால் நீரை எடுத்து பருக முடியும். முக்கியமான தேவைகளில் அதிகமானவற்றை அரசரே செய்ய முடியும். ஆயினும், நிர்வாகத்தின் ஒழுங்கின்படி சகலதையும் ஊழியர்களைக் கொண்டே செய்ய வேண்டும். அதுதான் வழிகாட்டுதலாக இருக்கும்.

தனது முக்கியமான தேவைக்குரிய நேரத்தில் அதற்காக நியமிக்கப்பட்ட அந்த அதிகாரிகளை நாடுவதுதான் நிர்வாகத்தின் வழிகாட்டுதலாகும்.

நோயாளி தனது பிரச்சினையை மருத்துவமனைக்குச் சென்று மருத்துவரிடமே கூற வேண்டும். வழக்கு விஷயங்களில் நீதிமன்றம் சென்று நீதிபதியிடம் வக்கீல் துணையுடன் முறையிட வேண்டும்.

சோதனைகளான கட்டங்களில் நிர்வாகத்தில் துறை சார்ந்தவர்களிடம் செல்வது மன்னருக்கு எதிரான பயங்கரவாதம் அல்ல!

இது அவரின் நாட்டத்தற்கு உடன்பட்ட செயலாகும். அவர்தான் இத்தியாதி வேலைகளுக்கு இவர்களை நியமித்துள்ளார். இது அவரின் நோக்கத்திற்கு உட்பட்டது. அவர்களை இதற்காகத்தான் அவர் நியமித்திருக்கிறார்.

மக்கள் வேறு ஒருவரை மன்னராக்கி அவரிடம் உதவியை எதிர் பார்ப்பார்களாயின், அது பயங்கரவாதமாக அமையும். மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட அரசாங்கத்தை விட்டுவிட்டு வேறு ஒருவரை நிர்வாகியாக தேர்ந்தெடுத்த குற்றம் அப்போது வரும்.

இந்த விஷயத்தை தெளிவாகப் புரிந்து கொண்டால், இதே ஒழுங்கு அல்லாஹ்வின் ஆட்சிக்கும் பொருந்தும்.அல்லாஹுத்தஆலா முழு ஆற்றல் பெற்றவன். உலகத்தின் சிறிய, பெரிய சகல வேலைகளும் அவனது சக்தியால் தான் நிறைவேறுகின்றன. சகலவற்றையும் அவனே நிறைவேற்றுகிறான் என்றால் கருமம் அவ்வாறல்ல!

உலக நிர்வாகத்தை செயல்படுத்த மலக்குகளையும், மற்றவர்களையும் நியமித்திருக்கிறான். அவர்கள் ஒவ்வொருவருக்கும் தனித்தனியாக நிர்வாகத்தையும் ஒப்படைத்து விட்டான். உயிரைக் கைப்பற்றுவதில் ஒரு நிர்வாகம். அதற்கு தலைவர் இஸ்ராயீல் அலைஹிஸ்ஸலாம் ஆவார்கள்.

இவ்வாறு மனிதர்களுக்கு பாதுகாப்பு அளிப்பது, இரணத்தை சேர்த்து வைப்பது, மழையைப் பொழிவிப்பது, தாயின் வயிற்றில் குழந்தையை உருவாகுவது, அதன் விதியை எழுதுவது, அடக்கம் செய்யப்பட்ட மையத்திடம் கேள்வி கேட்பது, ஸூர் ஊதி மரணிக்கச் செய்து அவர்களை மீண்டும் உயிர்பிப்பது, மறுமையை ஏற்படுத்துவது, மறுமையில் சொர்க்கம், நரகம் உள்ளிட்டவை ஒழுங்கு செய்வது இப்படியாக இம்மை மறுமை உள்ளிட்ட சகல காரியங்களையும் மலக்குகளே பங்கிட்டுக் கொள்கின்றனர்.

இவ்வாறு தான் அல்லாஹ்வின் சொந்த நல்லடியார்களுக்கும் உலகத்தின் நிர்வாகத்தில் அதிகாரம் வழங்கியிருக்கின்றான். அவர்களுக்கு விசேஷமான சுதந்திரத்தையும் அதில் கொடுத்திருக்கின்றான்.

தஸவ்வுஃப் நூல்களை வாசிக்கும் போது தான் வலிமார்களில் எத்தனை வகையினர் உள்ளனர் என்பதும், யார் யாருக்கு என்னென்ன பொறுப்புகள் இருக்கின்றன என்பதும் தெரிய வருகின்றது.

இவையெல்லாம் அல்லாஹு ஸுப்ஹானஹு தஆலாவால் செய்ய முடியாததால் அவர்களிடம் ஒப்படைத்துள்ளான் என்பது கருத்தல்ல! அரசாங்கத்தின் ஒழுங்கு இதுதான்.!

இதன் காரணத்தினால் தான் இவை யாவற்றையும் எங்களால் செய்ய முடியும் என்கின்றனர். இவையெல்லாம் எமது அனுமானத்தின் கூற்றல்ல! இதற்கு திருக்குர்ஆன் ஹதீஸ் கட்டியம் கூறுகின்றன.

ஹளறத் ஜிப்ரில் அலைஹிஸ்ஸலாம் சித்தி மர்யம் அலைஹஸ்ஸலாமிடம் கூறினார்கள்.

اِنَّمَا اَنَا رَسُوْلُ رَبِّكِ لِاَهَبَ لَكِ غُلٰمًا زَكِيًّ

*(மர்யமே!) நான் உனது இரட்சகனின் தூதர்! உமக்கு பரிசுத்தமான*

***ஒரு ஆண்குழந்தையை நன்கொடையாக தருவதற்காக வந்துள்ளேன்.***

*(அல் குர்ஆன்: 19 : 19).*

இதன்படி ஹளறத் ஜிப்ரீல் அலைஹிஸ்ஸலாம் குழந்தையை கொடுப்பவர் என்று தெரியவருகின்றது.

ஹளறத் ஈஸா மஸீஹ் அலைஹிஸ்ஸலாம் கூறுகின்றார்கள்.

اَنِّىْ اَخْلُقُ لَكُمْ مِّنَ الطِّيْنِ كَهَيْئَةِ الطَّيْرِ فَاَنْفُخُ فِيْهِ فَيَكُوْنُ طَيْرًا بِاِذْنِ اللّٰهِ

***நான் உங்களுக்காக களிமண்ணால் பறவையின் கோலத்தைச் செய்து அதில் ஊதுவேன். அல்லாஹ்வின் உத்தரவால் அது பறவையாக ஆகிவிடும்.***

*(அல் குர்ஆன்: 03 : 49).*

அதாவது, ஹளறத் ஈஸா மஸீஹ் அலைஹிஸ்ஸலாம் அல்லாஹ்வின் உத்தரவுடன் உயிரற்றதற்கு உயிர் கொடுப்பவர் என்று தெரியவருகின்றது.

قُلْ يَتَوَفّٰكُمْ مَّلَكُ الْمَوْتِ الَّذِىْ وُكِّلَ بِكُمْ

***கூறுவீராக ! உங்கள் மீது சாட்டப்பட்ட மலக்குல் மவ்த் உங்களின் உயிரை கைப்பற்றுகிறார்.***

*(அல் குர்ஆன்: 32 : 11).*

ஹளறத் மலக்குல் மௌத் உயிர் உள்ளவர்களை உயிர் அற்றவராக்கு கின்றார் என்று தெரிகிறது. இது போன்ற நிறைய திருவசனங்கள் உள்ளன. இது அல்லாஹ்வின் வேலையை அடியார்களுடன் சேர்த்து கூறப்பட்டுள்ளன.

ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் விடயத்தில் அல்லாஹுத்தஆலா கூறுகின்றான்.

وَيُزَكِّيْهِمْ وَيُعَلِّمُهُمُ الْكِتٰبَ وَالْحِكْمَةَ

*(எமது மஹ்பூபாகிய) அவர் அவர்களை பரிசுத்த படுத்துகின்றார். இன்னும் அவர்களுக்கு வேதத்தையும், ஞானத்தையும் கற்றுக் கொடுக் கின்றார்.*

*(அல் குர்ஆன்: 62 : 02).*

اَغْنٰهُمُ اللّٰهُ وَرَسُوْلُهٗ مِنْ فَضْلِهٖ

*அவர்களுக்கு அல்லாஹ்வும் அவனது திருத்தூதரும் தனது அருட் கொடையால் அவர்களை சீமான்களாக்கினர்.*

*(அல் குர்ஆன்: 09 : 74).*

ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் அசுத்தமான அனைவரையும் பரிசுத்த படுத்துகின்றார்கள். ஏழைகளை சீமான்களாக ஆகின்றார்கள் என்பது தெரிய வருகின்றது.

خُذْ مِنْ اَمْوَالِهِمْ صَدَقَةً تُطَهِّرُهُمْ وَتُزَكِّيْهِمْ

*அவர்களின் செல்வத்திலிருந்து தானமாக எடுத்துக்கொண்டு அதிலிருந்து அவர்களை பரிசுத்த படுத்துங்கள்.*

*(அல் குர்ஆன்: 09: 103).*

பெருமானார் ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களிடத்தில் ஏற்றுக் கொள்ளப்பட்டவை தான் அல்லாஹுத்தஆலாவால் அங்கீகரிக்கப்படும் என்று புரிகிறது.

وَلَوْ اَنَّهُمْ رَضُوْا مَاۤ اٰتٰهُمُ اللّٰهُ وَرَسُوْلُهٗ وَقَالُوْا حَسْبُنَا اللّٰهُ سَيُؤْتِيْنَا اللّٰهُ مِنْ فَضْلِهٖ وَ رَسُوْلُهٗ

*நிச்சயமாக அவர்கள் அல்லாஹ்வும், அவனுடைய ரஸூலும் அவர் களுக்குக் கொடுப்பதைக் கொண்டு திருப்தியடைந்து "அல்லாஹ்*

***எங்களுக்கு போதுமானவன். அல்லாஹ் தன் கருணையாலும் அவனுடைய ரஸூலும் எங்களுக்கு விரைவில் மிகுதத்தை வழங்கு வாரகள்.***

*(அல் குர்ஆன்: 09 : 59).*

யாராவது ஒருவர் ரலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் எங்களுக்கு இரணத்தைக் கொடுத்தார்கள். குழந்தைகளை வழங்கினார்கள் என்று கூறினால், மேற்கண்ட வசனத்தின் அடிப்படையில் சரியானது தான். இவ்வாறு கூறுவதன் நோக்கம் இவர்கள் அல்லாஹ்வின் ஆட்சியில் நிர்வாகிகள். அல்லாஹுத்தஆலா அவர்களுக்கு கொடுத்ததை நமக்குத் தருகிறார்கள்.

இவ்வாறுதான் நோயாளி மருத்துவரிடமும், வழக்கில் நீதிபதியிடமும் உதவி கோருவது போன்று சோதனைகள் ஏற்படும் போது வலிமார்கள் நபிமார்களிடம் உதவி கோருவதுமாகும்.

திருக்குர்ஆன் கூறுகின்றது.

وَلَوْ اَنَّهُمْ اِذْ ظَّلَمُوْا اَنْفُسَهُمْ جَآءُوْكَ فَاسْتَغْفَرُوا اللّٰهَ وَاسْتَغْفَرَ لَـهُمُ الرَّسُوْلُ لَوَجَدُوا اللّٰهَ تَوَّابًا رَّحِيْمًا

***நிச்சயமாக அவர்கள் தமக்குத் தாமே அநியாயம் செய்த பொழுது (நபியே!) உம்மிடம் அவர்கள் வந்து அல்லாஹ்விடம் பாவ மன்னிப்புத் தேடி (அல்லாஹ்வின்) ரஸூலும் அவர்களுக்காக மன்னிப்புத் தேடி னால், அப்பொழுது தவ்பாவை ஏற்பவனாகவும் கிருபை உள்ளவனாகவும் அல்லாஹ்வை அவர்கள் கண்டு கொள்வார்கள்.***

*(அல் குர்ஆன்: 04 : 64).*

ஃபதாவா ஆலம்கீர் கிதாபுல் ஹஜ் ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் புனித கப்று ஷரீஃபை ஸியாரத் செய்தல் என்ற பாடத்தில் பின்வருமாறு எழுதப்பட்டுள்ளது .

புனித ரவ்ழாவை இப்போதும் ஸியாரத் செய்பவர்கள் இந்த ஆயத்தை ஓத வேண்டும் இது (தவ்பா வேண்டுதல்) இந்த உலகத்தில் நடக்கக் கூடியதாகும்.

கப்றில் மூன்று கேள்விகள் கேட்கப்படும்.

1) உனது றப்பு யார்? அல்லாஹ் என்று அடியான் கூறுவான்.

2) உனது மார்க்கம் யாது? இஸ்லாம் என்று அடியான் கூறுவான்.

3) பச்சை நிற குப்பாவுக்குரிய மன்னரைப் பற்றிய உமது அபிப்பிராயம் என்ன?

ஆம்! அவரை நான் அறிவேன். எனது நபி! ரஸூல் முஹம்மது ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் என்று தெளிவாகக் கூறினால், சகல கேள்விகளும் முற்றுப் பெறும். நபியவர்களின் பறக்கத்தாலும், உதவிகளாலும் வெற்றியடைந்து விடுவார்.

மறுமையில் ஷஃபாஅத்துச் செய்பவரைத் தேடித்தேடி மக்கள்களைப் படைந்த நிலையில் தான் நபியவர்களின் வாசலை காட்டுவார்கள். அப்போதுதான் கேள்வி கணக்கு ஆரம்பமாகும். இதுவும் கூட நபியவர்களின் ஷஃபாஅத்தால்தான் நடக்கின்றது.

உலகிலுள்ள சகல காரியங்களும் ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களைத் தாங்கியே (அவர்கள் பால் தேவைப்பட்டுக் கொண்டே) நிற்க வேண்டும் என்பது அல்லாஹுத் தஆலாவின் நாட்டமாகும். கப்றிலும் சரி, மஹ்ஷரிலும் சரி இதே நிலைதான்.

இதனால்தான் அல்லாஹுத்தஆலா கூறினான்.

وَابْتَغُوْ اِلَيْهِ الْوَسِيْلَةَ

***நீங்கள் அல்லாஹ்விடத்தில் வஸீலாத் தேடுங்கள்.***

*(அல் குர்ஆன்: 04: 64).*

அதாவது, சகல இடங்களிலும் ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் ஷஃபாஅத் அவசியமாகும்.,இத்திருவசனத்தில் “வஸீலா” என்று குறிப்பிடப்பட்டிருப்பது அவரின் நல்லமல்கள் என்று பொருள் கொண்டால்,

முஸ்லிம்களில் பாவிகள், நடத்தை கெட்டவர்கள், முஸ்லிமான சிறுவர்கள், பைத்தியக்காரர்கள், மனநோயாளிகள் உள்ளிட்ட அனைவரும் ஈமான் இல்லாமலேயே மரணிக்க வேண்டிவரும். இவர்களில் எவருக்கும் (நல்லமல்கள் இல்லாத காரணத்தால்) வஸீலா கிடைக்காது.

மேலும், நல்லமல்களும் கூட நபியவர்களின் பறக்கத்தினால் தானே

கிடைக்க வேண்டும். தலைமை வஸீலாவும் நபியவர்களின் ஊடாகவே நடக்க வேண்டும். நபியவர்களின் வஸீலா பற்றி காஃபிர்களும் கூறவே செய்கின்றனர்.

وَكَانُوْا مِنْ قَبْلُ يَسْتَفْتِحُوْنَ عَلَى الَّذِيْنَ كَفَرُوْا

***காஃபிர்களுக்கு எதிராக (நபியவர்களை வஸீலாவாக்கி) வெற்றியை தேடினார்கள்.***

*(அல் குர்ஆன்: 02: 89).*

நபிகள் நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களால் மக்காவில் புனித கஃபதுல்லாஹ்விலிருந்த சிலைகள் அகற்றப்பட்டு புனித கஃபா புனிதம் பெற்றது. நபிகள் நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் வஸீலாவால்தான் கஃபா கிப்லாவானது.

அல்லாஹுத்தஆலா கூறுகின்றான்.

فَلَنُوَلِّيَنَّكَ قِبْلَةً تَرْضٰهَا

***நீர் விரும்புகிற கிப்லாவை உம்மை திண்ணமாக நாம் திருப்பி விடு கின்றோம்.***

*(அல் குர்ஆன்: 02: 144).*

ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் வஸீலாவால்தான் திருக்குர்ஆனுக்கும் திருக்குர்ஆன் எனப்படுகின்றது.

ஷைத்தான் நபிமார்களின் துணையின்றி ரப்பிடம் செல்ல முயற்சிக்கும் போதெல்லாம் சுட்டெரிக்கும் தீப்பந்தத்தால் அடித்து விரட்டப்படுவான். ஆனால், மதீனத்துல் முனவ்வறாவில் உள்ள தெருக்களில் அவன் சென்றால் விரட்டப்பட மாட்டான்.

அல்லாஹ்வை நம்புங்கள். அவன் அல்லாதவர்களை நம்பாதீர்கள்! என்று கூறுகின்றவர்(களான தேவ்பந்தி)களுக்கும் இது பொருந்தும்.

மேற்கண்ட எமது விளக்கத்தின் மூலம் நபிமார்கள், வலிமார்கள் உள்ளிட்டவர்களிடம் உதவி கோருவது ஷிர்க்கில்லை என்பதும்,இது

அல்லாஹ்வுக்கு எதிரான கேடுமல்ல அல்லாஹ்வின் நாட்டத்திற்கு முற்றிலும் உடன்பட்ட இஸ்லாமிய சட்டமாகும் என்பதும் தெளிவாகி விட்டது.

ஹளரத் மூஸா அலைஹிஸ்ஸலாம் அவர்களின் வேண்டுதலின் பேரில் மிஃறாஜில் ஐம்பது வேளைத் தொழுகை ஐந்தாகக் குறைக்கப்பட்டது. அது ஏன்?

ஹளறத் மூஸா அலைஹிஸ்ஸலாம் அவர்களின் உதவியும், பங்களிப்பும் உண்டு என்பதை மக்கள் அறிய வேண்டும் என்பதற்காக வேண்டியேயாகும்! அதாவது, அல்லாஹ்வின் நல்லடியார்கள் அவர்கள் வஃபாத்தான பின்பும் உதவி செய்ய முடியும் என்பது இதன் மூலம் நிரூபிக்கப்பட்டுள்ளது.

முஷ்ரிகீன்கள் அவர்களின் சிலைகளிடத்தில் உதவி தேடுவது ஷிர்க்காகும். அதற்கு இரண்டு காரணங்கள் உண்டு.

1) சிலைகளில் தெய்வீக சக்தி உண்டு என்று கருதி அவற்றை சிறிய கடவுளாக நம்பி உதவி தேடுகின்றனர். இதனால்தான் சிலைகளை "இலாஹ்" என்றும், ஷுரக்கா என்றும் கூறப்படுகின்றது. சிலைகளை அல்லாஹ்வின் அடியார்கள் என்று நம்பிக் கொண்டு அவற்றுக்கு உலூஹியத்தில் ஒருபகுதி இருப்பதாகவும் நம்பினர்.

இவ்வாறு கிறித்தவர்களும் நபி ஈஸா அலைஹிஸ்ஸலாம் அவர்களை அல்லாஹ்வின் நல்லடியார் என்று நம்பிக் கொண்டு அல்லாஹ்வின் குமாரர், மூன்றில் மூன்றாமவர் அல்லாஹ்வே என்றனர்.

ஒரு முஃமின் வலிமார்கள், நபிமார்களை அல்லாஹ்வின் நல்லடியார்கள் என்று மட்டும் நம்பிக் கொண்டு அவர்களிடம் உதவி தேடுகின்றார்.

இச்செயல் தேவ்பந்திகள் வசதி படைத்தவர் என்று மட்டும் நம்பிக் கொண்டு அவரிடம் மத்ரஸாவுக்காக சந்தா வசூல் செய்வது போன்றும், மருத்துவர், நீதிபதி உள்ளிட்டோருக்கு அரசாங்கத்தின் நிர்வாகத்தில் சுதந்திரம் உண்டு என்று நம்பிக் கொண்டு அவர்களிடம் உதவி தேடுவது போன்று உள்ளது.

2) சிலைகளுக்கு அல்லாஹுதஆலா இப்படியான சுதந்திரத்தை கொடுக்கவில்லை. தங்களின் தேவைகளை நிறைவேற்றும் ஆற்றல் இவற்றுக்கு இருப்பதாக அவர்களாகவே கற்பனை செய்து கொண்டு உதவி தேடுகின்றனர். இதனால் அவர்கள் பாவிகளாகவும், அல்லாஹ்வுக்கு எதிராக கேடு விளைவிப்பவர்களாகவும் ஆனார்கள். இதற்கான மிகச் சிறந்த உதாரணத்தை நாம் இப்போது முன் வைத்துள்ளோம்.

இந்த வேறுபாட்டை ஷாஹ் அப்துல் அஸீஸ் முஹத்திதுத் திஹ்லவி கத்தஸல்லாஹு ஸிர்ரஹுல் அஸீஸ் அவர்கள் கவனத்திலெடுத்து தீர்ப்பும் கூறியுள்ளார்கள்.

சிலை வணங்கி சிலைக்கு ஸஜதாச் செய்கின்றான். அதனால் முஷ்ரிக்காகின்றான். இந்த செயலை அவனது கற்பனையான முடிவால் எடுத்தான்.

ஒரு முஸ்லிம் கஃபத்துல்லாஹ்வுக்கு முன் ஸஜதா செய்கின்றான். அதுவும் கல்லால் ஆன கட்டிடம் தான். ஆனால், முஷ்ரிக்காவதில்லை. காரணம், எதார்த்தத்தில் அவனது ஸுஜூது அல்லாஹ்வுக்குரியதாகும். கஃபாவுக்கு அல்ல! அல்லாஹ்வின் கட்டளையோடு செய்கின்றான்.

முஷ்ரிக் அல்லாஹ்வின் கட்டளைக்கு மாறாக சிலைக்கு ஸுஜூது செய்கின்றான். இந்த முக்கியமான வேறுபாடு கவனிக்கப்பட வேண்டியதாகும்.

கங்கா நதி நீரை கண்ணியப்படுத்துவது குஃப்றாகும். அதே நேரம் ஜம்ஜம் நீரை கண்ணியப்படுத்துவது ஈமானாகும். காரணம், கங்கா நீருக்குரிய மரியாதையை தனது முடிவால் எடுத்தான்.

ஜம்ஜம் நீருக்கான கண்ணியத்தை ஷரீஅத்தின் ஆணைப்படி எடுத்தான். இவ்வாறு கோயிலிலுள்ள கல்லுக்கு மரியாதை செய்வது ஷிர்க்! ஆனால், மகாமே இப்ராஹிமில் உள்ள கல்லை கண்ணியப்படுத்துவது ஈமான்! ஆனால், அதுவும் கல்லுதான்.!

## வலிமார்களிடம் உதவி தேடுவதற்கான மறுப்புரைகள் பற்றிய விளக்கம்.

இத்தலைப்பில் மறுப்பாளர்களின் மிகப் பிரபலமான சில மறுப்புக்கள் இருக்கின்றன. இதையே பல இடங்களிலும் பிரஸ்தாபிக்கின்றனர்.

1- மிஷ்க்காத் "எச்சரித்தல்" என்ற பாடத்தில் பின்வரும் ஹதீஸ் இடம் பெறுகிறது.

ஹளறத் ஃபாத்திமுத்து ஜஹ்ரா ரலியல்லாஹு தஆலா அன்ஹா அவர்களைப் பார்த்து ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் பின்வருமாறு கூறினார்கள்.

لا اُغْنِي عَنْكِ شَيْئاً

என்னால் உமக்கு உதவி செய்ய முடியாது.

தனது மகள் ஃபாத்திமாவுக்கே ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களால் உதவி செய்ய முடியாதபோது அடுத்தவர்களுக்கு எப்படி உதவி செய்ய முடியும்.?

**பதில்:**

முதலில் இது தப்லீஃ பற்றிய நிகழ்வாகும். இதன் நோக்கம் பின்வருமாறு,

ஃபாத்திமா ஈமான் கொள்ளாவிட்டால் அல்லாஹ்வுக்கு முன்னால் தண்டனையிலிருந்து நீக்க என்னால் முடியாது. இதனால்தான் ஹளறத் நூஹ் நபி அலைஹிஸ்ஸலாம் அவர்களால் பாதுகாக்கப்பட்டவர்கள் அல்லாஹ்வில் நின்றும் உள்ளவர்கள் என்று குறிப்பிட்டான் என்பதைக் கவனித்துப் பாருங்கள்!

முஸ்லிம்களுக்கு ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் எல்லா இடங்களிலும் உதவி செய்கின்றவர்களாகவே இருக்கின்றார்கள்.

அல்லாஹுத்தஆலா கூறுகின்றான்.

اَلْاَخِلَّاءُ يَوْمَئِذٍ بَعْضُهُمْ لِبَعْضٍ عَدُوٌّ اِلَّا الْمُتَّقِيْنَ

***(உலகிலிருந்த) நண்பர்கள் அந்நாளில் அவர்களில் சிலர் சிலருக்கு எதிரிகள் ஆவார்கள் பயபக்தியாளர்களைத் தவிர,***

*(அல் குர்ஆன்: 43: 67).*

ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் பெரும்பாவிகளுக்கும் ஷஃபாஅத் செய்வார்கள். சறுக்கி விழுவோரையும் காப்பாற்றுவார்கள்.

ஷாமி (றத்துல் முக்தார்) நூலில் மய்யித்தைக் குளிப்பாட்டல் என்ற பாடத்தில் பின்வருமாறு பதியப்பட்டுள்ளது.

ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள். மறுமையில் சகல உறவுகளும் துண்டித்து விடும் எனது குடும்பம் உறவு தவிர! தேவ்பந்திகளுக்கு உண்மையாகவே ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் உதவி செய்யமாட்டார்கள். அல்ஹம்துலில்லாஹ்!

"நாங்கள் உண்மை முஸ்லிம்கள் அதனால் நிச்சயமாக எங்களுக்கு உதவி செய்வார்கள்."

اِيَّاكَ نَعْبُدُ وَاِيَّاكَ نَسْتَعِيْنُ

*2: உன்னையே வணங்குகின்றோம் உன்னிடமே உதவி தேடுகின்றோம்.*

*(அல் குர்ஆன்: 01 : 05).*

இபாதத் என்ற விதத்தில் வேண்டுவது அல்லாஹ்விடமிருந்து மட்டுமே சொந்தமாகும். அல்லாஹ் அல்லாதோரை வணங்குவதும், அவர்களிடம் உதவி தேடுவதும் ஷிர்க்காகும் .

**பதில்:**

இத்திருவசனத்தில் உதவி என்பது எதார்த்தமான உதவியாகும். அதாவது, எதார்த்தமான உதவி உன்னுடையது என்று நம்பி உன்னிடம் உதவி தேடுகின்றேன். அல்லாஹ்வின் அடியார்களிடம் உதவி தேடுவதெல்லாம் அல்லாஹ்வின் அருளினால் மட்டுமே என்று நம்பி உதவி தேடுவதாகும்.

அல்லாஹுத் தஆலா கூறுகின்றான்.

اِنِ الْحُكْمُ اِلَّا لِلّٰهِ

*தீர்ப்பு (செய்யும் அதிகாரம்) அல்லாஹ்வுக்கு மட்டுமே!*

*(அல் குர்ஆன்: 06 : 57).*

மேலும் கூறுகின்றான்.

لَهٗ مَا فِى السَّمٰوٰتِ وَمَا فِى الْاَرْضِ وَمَا بَيْنَهُمَا وَمَا تَحْتَ الثَّرٰى

***வானங்களில் உள்ளவையும், பூமியில் உள்ளவையும் அவ்விரண்டுக்கும் மத்தியில் உள்ளவையும் பூமியில் உள்ளவையும் அல்லாஹ்வுக்கே உரியவை.***

*(அல் குர்ஆன்: 20 : 06).*

இப்படி இருக்க நாம் நீதிபதியின் தீர்ப்பை ஏற்கின்றோம். எனது சொத்து என்று உரிமை கோருகின்றோம்.

இத்திருவசனங்களின் நோக்கம் எதார்த்தமான தீர்ப்பு! எதார்த்தமான உரிமை! அல்லாஹுக்குரியதாகும். அடியானுக்கு அல்லாஹ் தஆலா வழங்கியவையாகும்.

இபாதத்திற்கும், உதவி கோரலுக்குமிடையிலுள்ள தொடர்பு என்ன என்பதை கூறுங்கள் பார்க்கலாம்?

மேற்கண்ட திருவசனத்தில் (இபாதத், உதவி தேடல் ஆகிய) இந்த இரண்டும் சேர்க்கப்பட்டுள்ளன. இதன் தொடர்பு யாதெனில், எதார்த்தமாக உதவி செய்பவன் என்று நம்பிக்கொண்டு உதவி தேடுவது இதே இபாதத்தின் ஒரு கிளையாகும். சிலை வணங்கிகள் சிலைகளை வணங்கும் போது உதவி கோரும் வசனங்களையும் பாவிக்கின்றனர். அதனால் தான் இபாதத், உதவி கோரல் என்ற இரு வார்த்தைகளும் ஒன்று சேர்க்கப்பட்டுள்ளன.

இதுவல்லாமல் அல்லாஹ் அல்லாதவர்களிடம் உதவி கோருவது ஷிர்க் என்பது இத்திருவசனத்தின் நோக்கமாயின், உலகத்தில் ஒரு முஸ்லிமையும் காண முடியாது. ஸஹாபாக்களும் இல்லை! திருக்குர்ஆனை ஏற்றவர்கள், மறுப்பாளர்கள் என்று எவரும் இருக்க முடியாது. இதற்கான தக்க ஆதாரங்களை ஆரம்பத்திலேயே தந்துள்ளோம்.

மதரஸாக்களுக்கு செல்வந்தர்களிடமிருந்து சந்தா வசூல் செய்யும் வழக்கம் இன்றும் இருக்கிறது. மனிதன் பிறந்ததிலிருந்து அடக்கப்பட்டு கியாமத்து நாள் வரை அடியார்களின் உதவியில் தேவையுள்ளவனாக இருக்கின்றான்.

குழந்தை பிறக்கும் போது தாதியின் உதவி தேவைப்படுகிறது. பிறந்ததும் பெற்றோரின் உதவியால் பராமரிக்கப்படுகிறது. ஆசிரியரின் உதவியால் கல்வி கிடைக்கின்றது. செல்வந்தர்களின் உதவியால் வாழ்க்கை கழிகிறது.

மரணவேளையில் அருகிலிருக்கும் உறவினர்களின் தல்கீனால் (கலிமா

சொல்லிக் கொடுப்பதால்) ஈமானோடு மரணிக்க முடிகிறது.

குளிப்பாட்டுபவரின் உதவியால் குளிப்பும், கஃபனும் கிடைக்கின்றது. கப்று தோண்டுபவரின் உதவியால் கப்று கிடைக்கின்றது. முஸ்லிம்களின் உதவியால் தான் கப்று மூடப்படுகின்றது.

உறவினர்களின் உதவியால் ஈஸாலுத் தவாப் கிடைக்கின்றது. இவ்வாறு பிறந்ததிலிருந்து அடக்கம் செய்யப்படும் வரை அனைவரதும் உதவியை பெற்றுக்கொண்டு அல்லாஹ் அல்லாத எவரிடமும் நாம் உதவி கோருவதில்லை என்று எந்த முகத்தால் கூறுகின்றீர்கள்?

وَمَا لَكُمْ مِّنْ دُوْنِ اللّٰهِ مِنْ وَّلِيٍّ وَّلَا نَصِيْرٍ

***3: அல்லாஹ்வைத் தவிர உங்களுக்கு எந்த பாதுகாவலனும் இல்லை, இன்னும் எந்த உதவியாளரும் இல்லை.***

*(அல் குர்ஆன்: 02: 107).*

**பதில்:**

இத்திருவசனத்தில் வலியுல்லாஹ்வுக்கு மறுப்பில்லை! வலிய்யும் மின் தூனில்லாஹ்வுக்குத்தான் மறுப்புள்ளது. அல்லாஹ் அல்லாத வலி என்பது அவர்கள் தங்களின் உதவியாளர்கள், பாதுகாவலர்கள் என்று நம்பிய சிலைகள், ஷைத்தான்களாகும்.

வலியுல்லாஹ் என்பவர் தனது அடியார்களுக்கு உதவி செய்வதற்காக அல்லாஹுத்தஆலா நியமித்த நபிமார்கள் வலிமார்களைக் குறிக்கும். இவர்கள் அல்லாஹ்வின் பிரதிநிதிகள்.

யாராவது ஒருவர் யாரையாவது தன்னிச்சையாக நீதிபதியாக அல்லது அதிகாரியாக கருதி ஏற்படுத்தினால் அவர் குற்றவாளி ஆவார். அரசாங்கத்தால் நியமிக்கப்பட்ட அதிகாரிகளை மட்டும் ஏற்றுக் கொள்ள வேண்டும். தன்னிச்சையாக தோன்றிய அதிகாரிகளை நிராகரிக்க வேண்டும்.

இவ்வாறுதான் அல்லாஹ்வால் நியமிக்கப்பட்ட அதிகாரிகளிடம் உதவி கோருங்கள். போலியான உதவியாளர் களிடமிருந்து தவிர்ந்து கொள்ளுங்கள்.!

மூஸா அலைஹிஸ்ஸலாம் அவர்களுக்கு அல்லாஹுத் தஆலா கட்டளையிட்டான்.

اِذْهَبْ اِلٰى فِرْعَوْنَ اِنَّهٗ طَغٰى

***ஃபிர்அவ்னிடம் நீர் செல்வீராக! நிச்சயமாக அவன் வரம்பு மீறி விட்டான்.***

*(அல் குர்ஆன்: 20: 24).*

அதற்கு மூஸா அலைஹிஸ்ஸலாம் கூறினார்கள்.

وَاجْعَلْ لِّىْ وَزِيْرًا مِّنْ اَهْلِىْ هٰرُوْنَ اَخِى اشْدُدْ بِهٖۤ اَزْرِىْ

***என் குடும்பத்திலிருந்து ஓர் உதவியாளரை எனக்கு ஏற்படுத்துவாயாக! என்னுடைய சகோதரர் ஹாரூனை அவ்வாறு ஏற்படுத்துவாயாக! அவரைக் கொண்டு என்னுடைய முதுகை நீ வலுப்படுத்துவாயாக!***

*(அல் குர்ஆன்: 20: 29_31).*

நபி மூஸா அலைஹிஸ்ஸலாம் அவர்களைப் பார்த்து அல்லாஹ் அல்லாதவரிடம் ஏன் உதவி கேட்கின்றீர் என்று அல்லாஹுத் தஆலா கேட்க வில்லை மாறாக, அவர் வேண்டுதலை ஏற்றுக் கொண்டான். வலிமார்களிடம் உதவி தேடுவது நபிமார்களின் ஸுன்னத் என்பது இதிலிருந்து தெரிகின்றது.

4- துர்ருல் முக்தார் என்ற நூலில் "முர்தத்" என்ற பாடத்தில் கறாமாத்துல் அவ்லியா வைப்பற்றிய விளக்கத்தில் "ஷைஅன் லில்லாஹ்!" என்ற வார்த்தையை கூறுவது குஃப்று என்று ஒரு கூற்று உண்டு என்று பதிவாகி உள்ளது. அதனால், யாஅப்தல் காதிர் ஜீலானி ஷைஅன் லில்லாஹ்! என்று கூறுவது குஃப்றாகும்.

**பதில்:**

இங்கு ஷைஅன் லில்லாஹ் என்பதன் பொருள் அல்லாஹ்வின் தேவையை நிறைவேற்றுவதற்காக ஏதாவது கொடுங்கள். இதில், அல்லாஹுத் தஆலா உம்மில் தேவையாகின்றான். உதாரணமாக, அனாதைகளுக்கு

ஏதாவது கொடுங்கள் என்பதை ஒத்துள்ளது. இவ்வாறு கூறுவது உண்மையாகவே குஃப்றாகும்.

துர்ருல் முக்தாரின் விரிவுரை நூலான ஷாமியில் பின்வருமாறு எழுதப்பட்டுள்ளது.

امَّا اِنْ قصَدَ الْمَعْنَى الصَحِيْحَ فالظَاهِرُ انْ لاَ بَاْسَ به

இதில் சரியான பொருள் நாடப்படுமாயின், அல்லாஹ்வுக்காக எனக்கு கொடுங்கள்! என்று ஆகும். இவ்வாறு கூறுவது ஆகும்.

وہ کیاھے جو نہی ملتاخدا سے جسے تم مانگتےھو اولیا سے

5- அல்லாஹ்விடம் கேட்டும் கிடைக்காததை வலிமார்களிடம் கேட்கின்றீர்களே! அது என்ன? இப்படி கிண்டலாக கவிதையின் மூலம் கேட்கின்றனர்.

அதற்கு கவிதையில் இவ்வாறு நாம் பதில் கூறுகின்றோம்.

**பதில்:**

وہ چنداھے جو نہیں ملتا خدا سے جیسے تم مانگتے ھو اغنیا سے

توسل کر نہیں سکتے خدا سے اسے ھم مانگتے ھیں اولیا سے

அல்லாஹ்விடமிருந்து கிடைக்காதது செல்வந்தர்களிடமிருந்து நீங்கள் கறக்கின்ற பணம்தான். அல்லாஹ்விடம் வஸீலா மூலம் கிடைக்காததை வலிமார்களிடமிருந்து பெறுகின்றோம்.

6- அல்லாஹ்வின் அடியானாக இருந்து கொண்டே அவன் அல்லாதவர்களிடம் ஏன் செல்கின்றீர்கள்? நாம் அவனின் அடியார்கள். அவனிடமே நமது தேவைகளை கேளுங்கள். (தக்வியத்துல் ஈமான்).

**பதில்:**

நாம் அல்லாஹ்வின் அடியார்கள்தான். அல்லாஹ்வின் அனுமதியோடு தான் அல்லாஹ்வின் நல்லடியார்களிடம் செல்கின்றோம். திருக்குர்ஆன் கூறுவதை ஏற்கனவே கூறியுள்ளோம். அல்லாஹுத் தஆலா அவனது நல்லடியார்களை இதற்காகவே தான் உலகிற்கு அனுப்பியிருக்கின்றான்.

**கவிதை,**

மருத்துவனே! மருந்தைக் கொடு!

நிராகரிக்கப்பட்டவனே! எந்த மருந்தையும் கொடுக்காதே!

இந்த கருத்தை எந்த வேதத்திலிருந்து எடுத்தாய்.?

7- திருக்குர்ஆன் காஃபிர்களின் குஃப்றுகளைப் பற்றி விளக்கியுள்ளது. அவர்கள் சிலைகளிடம் உதவி கோருகின்றனர். அவர்கள் சிலைகளிடம் உதவி கோரியதால் முஷ்ரிக் ஆனார்கள். அப்படியாயின், வலிமார்களிடம் உதவி கோரும் நீங்களும் முஷ்ரிக்குகள்தான்.

**பதில்:**

உமது வாதப்படி நீரும் செல்வந்தர்களிடம் உதவி கோரியதாலும், போலீஸ, நீதிபதி உள்ளிட்டவர்களிடம் உதவி கோருவதாலும் முஷ்ரிக் ஆகிவிட்டீர். இதற்கான வித்தியாசத்தை பகுத்தறிவு ரீதியான விளக்கம் என்ற பகுதியில் கூறியுள்ளோம்.

அல்லாஹுத் தஆலா கூறுகின்றான்.

وَمَنْ يَّلْعَنِ اللّٰهُ فَلَنْ تَجِدَ لَهٗ نَصِيْرًا

***அல்லாஹ் எவரை சபிக்கின்றானோ அவருக்கு எந்த உதவியாளரையும் நீர் காணமாட்டாய்.***

*(அல் குர்ஆன்: 04: 52).*

பூமியின் மீது அல்லாஹ்வின் ரஹ்மத் உண்டு! அவருக்கு அல்லாஹுத் தஆலாவின் ஏராளமான றஹ்மத் இருக்கின்றது.

8: ஷறஹு ஃபிக்ஹுல் அக்பர் என்ற நூலில் முல்லா அலி காரி ரஹ்மத்துல்லாஹி அலைஹி கூறுகின்றார்கள்.

ஹளறத் இப்றாஹீம் கலீல் அலைஹிஸ்ஸலாம் அவர்கள் நெருப்பில் வீசப்பட்ட போது ஜிப்ரீல் அலைஹிஸ்ஸலாம் உதவிகள் எதுவும் தேவையா? என்று கேட்டும் “ஜிப்ரயீலே! உம்மிடமிருந்து எந்தவித உதவியும் வேண்டாம்“ என்றார்கள். அல்லாஹ் அல்லாதவர்களிடம் உதவி தேடுவது ஆகுமாக இருந்தால், இப்படியான இக்கட்டான நிலையிலும் ஹளறத் இப்றாஹீம் கலீல் அலைஹிஸ்ஸலாம் ஜிப்ரீல் அலைஹிஸ்ஸலாம் அவர்களிடம் ஏன் உதவி தேடவில்லை?

**பதில்:**

இது சோதனைக்குரிய நேரமாகும். முறையீடு வாயால் வெளி வருவதை அல்லாஹுத் தஆலா விரும்பாமலிருக்கவும் கூடும் என்ற அச்சம் இருந்தது. அதனால்தான் இப்ராஹீம் அலைஹிஸ்ஸலாம் அல்லாஹ்விடமும் கூட கேட்கவில்லை. எனவேதான் “ஜிப்ரயீலே! உம்மிடம் எந்த தேவையும் இல்லை. யாரிடம் உதவி தேவைப்படுமோ அவன் என் நிலையை நன்கு அறிந்துள்ளான்“ என்று கூறினார்கள்.

எவ்வாறெனில், ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் ஹளறத் ஹுஸைன் ரலியல்லாஹு தஆலா அன்ஹு அவர்களின் ஷஹாதத் பற்றி முன்னறிவிப்புச் செய்த போது அந்த சோதனையை நீக்குமாறு ஒருவரும் துஆக் கேட்கவில்லை.

ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களும் கேட்க வில்லை. ஹளறத் அலி முர்தழா ரலியல்லாஹு தஆலா அன்ஹு அவர்களும் கேட்கவில்லை. ஹளறத் ஃபாத்திமுத்து ஜஹ்ரா ரலியல்லாஹு தஆலா அன்ஹா அவர்களும் கேட்கவில்லை.

**பதில்:**

திருக்குர்ஆனில்

اَيَّاكَ نَعْبُدُ وَاَيَّاكَ نَسْتَعِينُ

***உன்னையே வணங்குகின்றோம் உன்னிடமே உதவி தேடுகின்றோம். என்றுள்ளது.***

*(அல் குர்ஆன்: 01: 05).*

இதில் உயிர் உள்ளவர், மரணித்தவர் என்ற வேறுபாடு எங்கே இருக் கின்றது? உயிர் உள்ளவருக்கு இபாதத் செய்யலாம். மரணித்தவருக்கு இயலாதா?

அல்லாஹ் அல்லாதவர்களிடம் உதவி தேடுவது பொதுவாகவே ஷிர்க்கு என்று இருக்குமாயின், உயிருள்ளவர், மரணித்தவர் யாராக இருந்தாலும் அவரிடம் உதவி தேடுவது ஷிர்க் என்று தானே ஆக வேண்டும்.

ஹளறத் நபி மூஸா அலைஹிஸ்ஸலாம் வஃபாத்தாகி சுமார் 2500 ஆண்டுகளுக்குப் பின் மிஃறாஜின் இரவில் உம்மத்தே முஹம்மதியாவுக்கு ஐம்பது வேளைத் தொழுகையை ஐந்து வேளையாக்கி உதவி செய்திருக் கிறார்கள். மரணித்தவர்களின் உதவியை மறுக்கின்றவர்கள் ஐம்பது வேளை தொழட்டும். ஐவேளைத் தொழுகையில் அல்லாஹ் அல்லாதவர்களின் உதவியும் சம்பந்தப்பட்டுள்ளது.

அல்லாஹ்வின் வலிமார்கள் உயிரோடு இருக்கின்றனர். அவர்களை மரணித்தவர்கள் என்று கூறக் கூடாது என்று திருக்குர்ஆனே கூறுகின்றது.

وَلَا تَقُوْلُوْا لِمَنْ يُّقْتَلُ فِيْ سَبِيْلِ اللّٰهِ اَمْوَاتٌ ؕ بَلْ اَحْيَآءٌ وَّلٰكِنْ لَّا تَشْعُرُوْنَ

***அல்லாஹ்வுடைய வழியில் கொல்லப்பட்டவர்களை மரணித்தவர்கள் என்று கூற வேண்டாம். அவர்கள் உயிரோடு இருக்கின்றனர். ஆயினும் நீங்கள் அதை உணர மாட்டீர்கள்.***

*(அல் குர்ஆன்: 02: 154).*

இவர்கள் உயிரோடு இருந்தால் அவர்களிடம் உதவி தேடுவது ஆகுமானது தானே!

யுத்தக் களத்தில் போராடி வாளால் வெட்டப்பட்டு ஷஹீதாக்கப் பட்டவர்கள் விஷயத்தில் இத்திருவசனம் இறங்கியது என்று சிலர் கூறுகின்றனர். இது சற்று மிகைப்பான கூற்றாகும்.

இத்திருவசனத்தில் உலோகத்தால் ஆன வாளால் கொல்லப்பட்டவர் என்று குறிப்பிடப்படவில்லை "இஷ்கு" என்ற இறை காதலால் கொல்லப் பட்டவரும் இதில் அடங்குவார்.

*ஆதாரம்: தஃப்ஸீர் றூஹுல் பயான்.*

காரணம், ஹதீது ஷரீஃபில் வந்துள்ளது. நீரில் மூழ்கி மரணிப்பவர், எரியுண்டு மரணிப்பவர், காலரா மூலம் மரணிப்பவர், பிரசவ நிலையில் மரணிக்கும் பெண், மார்க்கத்தை கற்கும் மாணவன் வழியில் மரணிப்பது உள்ளிட்ட சகலரும் ஷஹீத் ஆகும்.

வாளால் வெட்டப்பட்டு மரணித்தவர் மட்டும் தான் உயிரோடு இருப்பது என்றால் ஏனையோர் மரணித்தவர்கள் என்றாகும். அப்படியாயின், ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களும், ஸித்தீக்குல் அக்பர் ரலியல்லாஹு தஆலா அன்ஹு அவர்களும் மஆதல்லாஹ்! மரணித்தவர்கள் என்று கூற வேண்டிய நிலை ஏற்படும்.

ஹுஜ்ஜத்துல் இஸ்லாம் இமாம் கஸ்ஸாலி றஹ்மத்துல்லாஹி அலைஹி கூறுகின்றார்கள்.

உயிரோடு இருக்கும்போது எவரிடம் உதவி தேடப்படப்பட்டதோ அவர் மரணித்த பின்பும் அவரிடமிருந்து உதவி தேட முடியும்.

இது தொடர்பான சில விளக்கம் முத்தமிடல், தபர்ருக்குரிய பொருட்கள் பற்றிய அத்தியாயத்திலும், கப்றுகளைச் ஸியாரத் செய்வதற்காக பிரயாணம் மேற்கொள்ளல் என்ற அத்தியாயத்திலும் இன்ஷா அல்லாஹ் இடம் பெறும்.

9: தப்ஸீர் ஸாவியில்

وَلَا تَدْعُ مَعَ اللهِ اِلٰهًا اٰخَرَ

*அல்லாஹ்வுடன் வேறு எவரையும் இறைவனாக வணங்க வேண்டாம்* என்ற திருவசனத்தின் விளக்கத்தில் பின்வருமாறு எழுதுகின்றார்கள்.

وحينئذ فليس في الآية دليل على ما زعمه الخوارج، من أن الطلب من الغير حياً أو ميتاً شرك، فإنه جهل مركب، لأن سؤال الغير من حيث إجراء الله النفع أو الضر على يده قد يكون واجباً، لأنه من التمسك بالأسباب، ولا ينكر الأسباب إلا جحود أو جهول

இங்கு அழைக்காதீர்கள் என்பதன் பொருள் வணங்காதீர்கள் என்பதாகும். அதனால், இத்திருவசனத்தில் கவாரிஜ்களுக்கு எவ்வித ஆதாரமும் கிடையாது.

அல்லாஹ் அல்லாதவர்கள் உயிரோடு இருந்தாலும் சரி, மரணித்தாலும் சரி, அவர்களிடம் உதவி தேடுவது ஷிர்க் என்று அவர்கள் கூறு கின்றனர். கவாரிஜ்களின் இந்த உளறல்கள் முட்டாள் தனமானதாகும்.

ஏனெனில், அல்லாஹுத் தஆலா அவர்கள் ஊடாக இலாபம், நட்டத்தை தருகின்றான் என்று அவர்களிடம் கேட்பது சிலவேளை வாஜிபாகவும் ஆகும்.

இவை காரண காரியங்களோடு தொடர்பு பட்டவை காரணங்களை, காரியங்களை மறுப்பவன் ஒன்றில் மடையனாக இருப்பான். அல்லது முரண்டு பிடிப்பவனாக இருப்பான்.

மேற்கண்ட சொற்றொடரில் மூன்று விஷயங்கள் தெரிய வருகின்றன.

1- அல்லாஹ் அல்லாதவரிடம் உதவி கோருதல் ஆகுமானது. மட்டுமல்ல, சில வேளை வாஜிபாகவும் ஆகின்றது.

2- இதை மறுப்பவன் வழி தவறிய கவாரிஜ் கொள்கையை சார்ந்தவனாகும்.

3- லாதத்உ لا تدع என்ற சொல் சிலையை வணங்குவதற்கு மறுப்பாகும். தவிர அழைத்தல் , உதவி தேடல் என்பதற்கல்ல!

10: மார்க்கப் பெரியார்களைப் பார்க்கும் போது அவர்கள் வயதானவர் களாகவும், இளைத்தவர்களாகவும் காணப்படுகின்றர். இவர்கள் வஃபாத்தான பின்பு முழுமையாகவே செயலிழந்து போய் விடுகின்றனர்.

இப்படியான பலவீனமானவர்களிடம் உதவி தேடுவது சிலைகளிடம் உதவி தேடுவது போன்ற வீணான காரியமாகும் என்று அல்லாஹுத் தஆலாவும் குறை கூறியுள்ளான்.

وَاِنْ يَّسْلُبْهُمُ الذُّبَابُ شَيْئًا لَّا يَسْتَنْقِذُوْهُ

***ஓர் ஈ அவற்றுடன் ஏதேனும் ஒரு பொருளைப் பிடிங்கிக் கொண்டாலும் அதனை அதனிடமிருந்து அவை விடுவிக்கவும் முடியாது.***

*(அல் குர்ஆன்: 22: 73).*

இந்த வலிமார்கள் அவர்களின் கப்றிலிலுள்ள ஈயைக்கூட விரட்ட முடியாதவர்கள். எப்படி நமக்கு உதவப் போகின்றார்கள்?.

**பதில்:**

இந்தக் குறைபாடுகள் யாவும் பௌதீக உடல் சார்ந்தவையாகும் இந்த குறைபாடுகள் றூஹோடு அதற்குள்ள தொடர்பு பலவீனமானதால் ஏற்பட்டதாகும். றூஹில் எவ்வித குறைபாடும் கிடையாது.

உண்மையில் மரணத்தின் பின் றூஹ் பலமானதாக இருக்கும். கப்றிலிருந்து கொண்டு வெளியில் உள்ளவர்களைப் பார்க்கின்றது. காலடி ஓசையைக் கேட்கின்றது. குறிப்பாக காஃபிர்களின் றூஹுகள்கூட இந்த ஆற்றலைப் பெற்றிருக்கின்றன.

அல்லாஹுத் தஆலா கூறுகின்றான்.

وَلَلْاٰخِرَةُ خَيْرٌ لَّكَ مِنَ الْاُوْلٰى

***வருகின்ற ஒவ்வொரு நாழிகையும் கடந்த நாழிகையை விட மேலானதாகும்.***

*(அல் குர்ஆன்: 93: 04).*

உதவி வலியின் றூஹிடமிருந்தே கிடைக்கின்றன. உடம்பிலிருந்து அல்ல! ஆத்ம சக்தி இல்லாத சிலையிடம் காஃபிர்கள் உதவி தேடுகின்றனர்.

يُحِلُّوْنَهٗ عَامًا وَّيُحَرِّمُوْنَهٗ عَامًا

***ஏதேனும் ஓராண்டில் அதனை(பிற்படுத்துவதை) ஹலாலாக்கிக் கொள் கின்றனர். (வேறு) ஏதேனும் ஓர் ஆண்டில் அதனை (ப்பிற்படுத்துவதை) ஹராமாக்கிக் கொள்கின்றனர்.***

*(அல் குர்ஆன்: 09: 37).*

என்ற திருவசனத்தின் விளக்கத்தில் தஃப்ஸீர் ரூஹுல் பயானில் பின்வருமாறு எழுதப்பட்டுள்ளது.

ஹளறத் காலித் பின் வலீத், ஹளறத் உமர் ஃபாரூக் ரலியல்லாஹு அன்ஹுமா ஆகிய இருவரும் கைபரில் விஷத்தை குடித்தார்கள். கைபரில் விஷமூட்டப்பட்ட இறைச்சியை ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்கள் சாப்பிட்டார்கள். ஆயினும் வஃபாத் நேரத்தில் அதன் தாக்கம் வெளிப்பட்டது.

இவர்கள் ஹகீகத்தின் நிலையிலிருக்கும் போது விஷத்தைச் சாப்பிட்டார்கள். அந்த நிலையில் விஷம் தாக்கம் செய்ய வில்லை. வஃபாத்தின் நேரம் என்பது மனிதத்துவ உடலின் வெளிப்பாடாகும். மரணம் உடலில்தான் நிகழும். அதனால் தான் இங்கு அதன் தாக்கம் வெளிப்பட்டது .

வலிமார்கள் கப்றில் ஈயை விரட்டுவது அல்ல! உலகத்தையே புரட்டிப் போடும் அளவுக்கு சக்தி உண்டு! ஆனாலும் அவர்கள் அதன் பக்கம் கவனம் செலுத்துவதில்லை.

கஃபத்துல்லாஹ்வில் 360 சிலைகள் இருந்தன. அவற்றை அல்லாஹுத் தஆலா அகற்றவில்லை. தனது வீட்டிலிருந்த நஜீஸைக் கூட சுத்தப்படுத்த முடியவில்லை! இதை றப்புடைய பலவீனம் என்று கூற முடியுமா?

11- ஹளறத் அலி, இமாம் ஹுஸைன் றழியல்லாஹு அன்ஹுமா ஆகிய இருவருக்கும் சக்தி இருந்தால் ஏன் எதிரிகளால் அவர்கள் ஷஹீதாக ஆனார்கள்? அவர்களுக்கு ஏற்பட்ட சோதனையை தடுக்க அவர்களாலேயே முடியாமல் இருக்கும் போது உங்களுடைய சோதனையை எப்படி தடுப்பார்கள்.?

அல்லாஹுத் தஆலா கூறுகின்றான்.

وَاِنْ يَّسْلُبْهُمُ الذُّبَابُ شَيْئًا لَّا يَسْتَنْقِذُوْهُ

***ஓர் ஈ அவற்றுடன் ஏதேனும் ஒரு பொருளை பிடிங்கிக் கொண்டாலும் அதனை அதனிடமிருந்து விடுவிக்கவும் முடியாது.***

*(அல் குர்ஆன்: 22: 73).*

**பதில்:**

அவர்களில் சோதனையை தடுப்பதற்கான சக்தி இருந்தது. ஆனாலும் அதனை அவர்கள் பயன்படுத்தவில்லை. காரணம், அல்லாஹுத் தஆலாவின் விருப்பமும் அவ்வாறு தான் இருந்தது. ஹளறத் மூஸா அலைஹிஸ்ஸலாம் அவர்களின் தடி ஃபிர்அவ்னையும் விழுங்கக் கூடியதாக இருந்தது. ஆனால், அங்கே அதைப் அவர்கள் பயன்படுத்தவில்லை.

ஹளறத் ஹுசைன் ரலியல்லாஹுத் தஆலா அன்ஹு அவர்களால் யூப்ரடீஸ் நதியென்ன, ஹவ்ழுல் கௌதரையே கொண்டு வருவதற்குரிய சக்தி அவர்களுக்கு இருந்தது. அல்லாஹ்வின் பொருத்தம் அவர்களின் ஹகீகத்தாக இருந்தது.

பாருங்கள்! ரமலானில் எம்மிடன் தண்ணீர் இருந்தும் அல்லாஹ்வின் கட்டளைக்கு பணிந்து உபயோகிப்பதில்லை. இதற்கு மாறாக சிலைகளுக்கு எதுவுமே கிடையாது. அதனால், இந்தத் திருவசனத்தை நபிமார்கள், வலிமார்கள் விஷயத்தில் கூறுவது மார்க்க மற்றவர்களின் செயலாகும் இத்திருவசனம் சிலைகளை பற்றியதாகும்.

முற்றும்

وصلي الله تعالي وسلم علي سيد المرسلين وعلي اله وصحبه اجمعين امين

# ஆய்வு-8

# பித்அத் ஓர் ஆய்வு!

இத்தொடரில் இரு அத்தியாயங்கள் உள்ளன.

முதல் அத்தியாயத்தில் பித்அத்திற்கான பொருளும், அதன் வகைகளும் அதற்கான சட்டங்களும் விளக்கப்படும்.

இரண்டாம் அத்தியாயத்தில் குற்றச்சாட்டுகளும் அதற்கான பதில்களும் இடம் பெறும்.

## அத்தியாயம்: 1

நவீனம், புதிய பொருள் என்பது பித்அத்திற்கான அகராதி பொருளாகும் .

திருக்குர்ஆன் கூறுகின்றது.

مَا كُنْتُ بِدْعًا مِنَ الرُسُلِ

***(நபியே!) நீர் கூறுவீராக! ரசூல்களில் நான் புதியவனாக இருக்கவில்லை.***

*அல் குர்ஆன் (46:9).*

بَدِيْعُ اَلسَمَوَاتِ وَالْاَرْضِ

***(அவன்) வானங்களையும் பூமியையும் (முன்மாதிரியின்றி) நவீனமாகப் படைத்தவன்.***

*அல் குர்ஆன் (23:117).*

وَرَهْبَانِيَةً ابتَدَعُوْهاَ مَا كَتَبْنَاهَا عَلَيْهِم

***இன்னும் துறவறத்தை அதைப் புதிதாக அவர்கள் உண்டாக்கிக் கொண்டார்கள். ஆனால், அதை அவர்கள் மீது நாம் விதியாக்கவில்லை.***

*அல் குர்ஆன் (57: 27).*

மேற்கண்ட திருவசனங்களில் பித்அத்திற்கான அகராதிப் பொருள் கையாளப்பட்டுள்ளது. அதாவது, உண்டாக்குவது, புதிதாக படைத்தல் உள்ளிட்டவை இதன் பொருளாகும்.

மிஷ்க்காத்தின் விரிவுரை மிர்க்காத்தில் باب الاعتصام بالكتاب والسنة என்ற பாடத்தில் பின்வருமாறு எழுதப்பட்டுள்ளது.

قَالَ النَوَوِي اَلْبِدْعَةُ : كُلُ شَيْئٍ عُمِلَ عَلٰي غَيْرِ مِثَالٍ سَبَقَ

முன்மாதிரியின்றி செய்யப்படுகின்ற ஒவ்வொரு பொருளும் பித்அதாகும் என்று இமாம் நவவி ரஹ்மத்துல்லாஹி அலைஹி கூறியுள்ளார்கள்.

பித்அத் என்பதற்கு ஷரீஅத் ரீதியான பொருள் வருமாறு:

ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் ஜீவியகாலத்தில் இல்லாமல் அவர்களின் காலத்திற்குப்பின் தோன்றிய அகீதா, கிரிகைகள் தொடர்பானவையைக் குறிக்கும். இதன்படி,

## ஷரீஅத் அடிப்படையிலான பித்அத் இருவகைப்படும்.

1- பித்அத் இஃதிகாத்: அகீதா தொடர்பான பித்அத்

2- பித்அத் அமல்: கிரிகை தொடர்பான பித்அத்.

பித்அத் இஃதிகாத் என்பது, ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களுக்குப் பின்னால் இஸ்லாத்தில் தோற்றுவிக்கப்பட்ட தீய அகீதாக் கொள்கைகளை குறிக்கும்.

ஈஸாயி, யஹூதி, மஜூஸி, முஷ்ரிக்கீன்களின் அகீதாக்கள் ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் காலத்தில் இருந்தன; ஆகவே, இவற்றை தீய அகீதாக்கள் என்று கூறுவதில்லை,

இவற்றை ஈஸாயி, யஹூதிகளின் அகீதாக்கள் என்று கூறலாமே தவிர, இஸ்லாமிய அகீதா என்று கூற முடியாது.

ஜப்ரிய்யா, கதரிய்யா, முர்ஜிஆ, முஃதஸிலா, ஜக்டாலவிய்யா, (வஹாபி) தேவ்பந்தி (தப்லீக்) உள்ளிட்டோரின் அகீதாக்கள் றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் காலத்தில் இல்லாத காரணத்தால், அவை தீய அகீதாக்களாகும்.

ஆனால், இவர்களின் எண்ணத்தில் தங்களின் அகீதாவை இஸ்லாமிய அகீதா என்று தப்பாக புரிந்துள்ளனர்.

உதாரணமாக,

“அல்லாஹுத்தஆலா பொய் சொல்வதற்கு ஆற்றல் பெற்றவன்.” “றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களுக்கு மறைவான விடயங்கள் தெரியாது"!

"றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின்

நினைவு தொழுகையில் வருவது ஆடு, மாடு, கழுதைகளின் நினைவு வருவதை விடக் கெட்டது"

தேவபந்திகள் கூறுகின்ற அசிங்கமான கேடுகெட்ட இந்த அகீதாக்கள் ஹிஜ்ரி, 13,14ம் நூற்றாண்டுகளில் தோற்றுவிக்கப்பட்டதாகும்.

இதைப் பற்றிய ஷாமி என்ற நூலின் குறிப்பை நூலின் ஆரம்பத்தில் குறிப்பிட்டுள்ளோம்.

நல்ல பித்அத்திற்கான ஆதாரத்தைக் கவனியுங்கள்! .

அல்லாஹுத்த ஆலா கூறுகின்றான்.

وَجَعَلْنَا فِىْ قُلُوْبِ الَّذِيْنَ اتَّبَعُوْهُ رَاْفَةً وَّرَحْمَةً وَرَهْبَانِيَّةَ اۨبْتَدَعُوْهَا مَا كَتَبْنٰهَا عَلَيْهِمْ اِلَّا ابْتِغَآءَ رِضْوَانِ اللّٰهِ فَمَا رَعَوْهَا حَقَّ رِعَايَتِهَا

***இன்னும், அவரைப் பின்பற்றியவர்களின் உள்ளங்களில் பாசத்தையும், கருணையையும் நாம் உண்டாக்கினோம்.இன்னும் துறவறத்தை அவர்கள் அதைப் புதிதாக உண்டாக்கிக் கொண்டார்கள், (ஆனால்) அதை அவர்கள் மீது நாம் வெளியாக்கவில்லை எனினும் அல்லாஹ்வுடைய திருப்தியைத் தேடுவதற்காக (அதனை அவர்கள் ஆக்கிக் கொண்டார்கள்.), அப்பால் அதனைப் பேண வேண்டிய விதத்தில் அவர்கள் பேணவில்லை.***

*அல் குர்ஆன் (57:27).*

நஸாறாக்கள் துறவரம் என்ற நல்ல பித்அத்தை உருவாக்கினார்கள். அதை அல்லாஹுத்தஆலா பாராட்டி நற்கூலியும் வழங்கியுள்ளான். பின்னர் அதை கைவிட்டதனால் அவர்களைத் தண்டித்தானே தவிர, அதைப் புதிதாக உருவாக்கியதற்காக தண்டிக்க வில்லையென்பதை மேற்கண்ட திருவசனத்தின் மூலம் அறிகின்றோம்.

நல்ல பித்அத்கள் நன்மையை ஈட்டித்தரும் நற்காரியங்கள் என்பதையும், அதை தொடர்ச்சியாகப் பேணாமல் கைவிடுவது தவறு என்பதும் இதன் மூலம் தெரிய வருகின்றது.

خَيْرُ الْاُمُوْرِ اَدْوَمُهَا

கருமங்களில் தொடர்ச்சியாகச் செய்பவைகளே சிறப்பானது. ஆகவே, முஸ்லிம்கள் மீலாத் ஷரீப் உள்ளிட்ட நல்லமல்களைத் தொடர்ந்து பேணிக் கொள்ள வேண்டும்.

மிஷ்க்காத் ஷரீபில் பாபுல் இஃதிஸாம் என்ற பாடத்தின் முதல் ஹதீது பின்வருமாறு உள்ளது.

مَنْ اَحْدَثَ فِيْ اَمْرِناَ هٰذَا ماَ لَيْسَ مِنْهُ فَهُوَ رَدٌّ

எவராவது ஒருவர் எமது மார்க்கத்தில் இல்லாத புதிய அகீதாவை தோற்று வித்தால் அது நிராகரிக்கத்தக்கதாகும். ما என்பதற்கு அகீதா என்று பொருள் கொடுத்தோம்.

தொழாதவர் பாவி தவிர, மார்க்கம் இல்லாத காபிர் அல்ல! கெட்ட அகீதாவைக் கொண்டிருப்பவர் வழிகேடர் அல்லது காபிராவார்.

மேற்கண்ட ஹதீஸுக்கு மிர்க்காத் என்ற நூலில் பின்வருமாறு விளக்கம் எழுதப்பட்டுள்ளது.

وَالْمَعْنٰي أَنَ مَنْ اَحْدَثَ فِي الْاِسْلام رَأْياً فَهُوَ مَرْدُوْدُ عَلَيْهِ أَقُوْلُ فِي وَصْفِ اَمْرِناَ بِهٰذَا اِشَارَةُ أَنَ الْاِسْلام كَمُلَ

மார்க்கத்தில் இல்லாத ஓர் அகீதாவை இஸ்லாத்தில் எவாராவது உருவாக்கினால், அது நிராகரிக்கதக்கது, நான் கூறுகின்றேன் امرنا என்பதன் வர்ணிப்பில் இஸ்லாத்தின் காரியங்கள் யாவும் பூரண மாகிவிட்டன என்பதில் சாடை உள்ளது.

இதன்படி, பித்அத் என்பது தீய அகீதாவைக் குறிக்கும் என்பது தெளிவாகிவிட்டது.

மிஷ்க்காத்தில அல்ஈமான் பில் கத்ர் (விதியை நம்புதல்) என்ற பாடத்தில் பின்வரும் ஹதீது இடம் பெறுகின்றது.

ஹளறத் இப்னு உமர் றழியல்லாஹு அன்ஹுமா அவர்களிடம் இன்னார் உங்களுக்கு ஸலாம் கூறினார் என்று கூறப்பட்ட போது,

بلغني أنه قد أحدث فإن كان قد أحدث فلا تقرأه مني السلام

அவர் பித்அத்காரராக மாறிவிட்டதாக எனக்கு தகவல் கிடைத்துள்ளது. அது உண்மையானால், அவருக்கு எனது சலாத்தைக் கூற வேண்டாம்

என்று பதில் கூறினார்கள்.

பித்அத்துக் காரனாக ஆனது எப்படி? என்று கேட்டதற்கு

يقول يكون في هذه الأمة أو في أمتي الشك منه خسف أو مسخ أو قذف في أهل القدر

எனது உம்மத்தில் பூமியில் புதையுண்டு போவதும், உருமாற்றம் நிகழ்வதும், கல்மாரி பொழிவதும் கத்ரியாக் கூட்டத்தில் தான் நடக்கும் என்று ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் கூறினார்கள்.

கத்ரிய்யாக்கள் என்பவர்கள் கழாக்கத்றை நிராகரிப்பவர்கள். இவர்களை பித்அத்து வாதிகள் என்று கூறியுள்ளார்கள்.

துர்ருல் முக்தாரில் அத்தியாயம் தொழுகை, இமாமத்துச் செய்தல் பற்றிய பாடத்தில் பின்வருமாறு எழுதப்பட்டுள்ளது.

وَمُبْتَدَعٍ أَيْ صَاحِبِ بِدْعَةِ وَهِيَ اِعْتِقَادُ خِلاف الْمَعْرُوْفِ عَنِ الرَسُوْلِ

பித்அத்துக் காற இமாமுக்கு பின் தொழுவது மக்ரூஹ்! இவர் ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களிலிருந்து நன்கு அறியப்பட்ட அகீதாவுக்கு மாறான அகீதாவைக் கொண்டிருப்பவராவார்.

மேற்கண்ட மேற்கோள்களின் மூலம் பித்அத் என்பது நவீன, மற்றும் தீய அகீதாக்களுக்கு கூறப்படும் என்று தெரியவருகின்றது. பித்அத், பித்அத்காறன் பற்றி கடுமையான எச்சரிக்கை ஹதீதுகளில் வந்துள்ளயாவும் தீய அகீதா உள்ள பித்அத்துக்காறனையே குறிக்கும். எவராவது பித்அத்காரனுக்குக் கண்ணியம் செய்தால், அவன் இஸ்லாத்தை உடைப்பதற்கு உதவி செய்தவனாவான்" என்று ஹதீதில் குறிப்பிடப்படுவது தீய அகீதாவைக் கொண்டிருக்கும் பித்அத்காறனையே குறிக்கும் .

பதாவா றஷீதிய்யா பாகம், 1- பித்அத்துக்கள் பற்றிய பாடம் பக்கம் 90 ல் மௌலவி றஷீத் அஹ்மத் கங்கோஹி எழுதுகின்றார்.

بدعت میں ایسی شدید وعید ہے وہ بدعت فی العقائد ہے جیسا کہ روافض خوارج کی بدعت ہے

பித்அத் பற்றிய கடுமையான எச்சரிக்கை இருப்பதெல்லாம் றவாபிழிகள், கவாறிஜிகளின் கெட்ட அகீதாக்கள் பற்றிய பித்அத்களாகும்.

பித்அத் அமலி என்பது, றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி

அவர்களின் புனிதமான காலத்திற்குப் பின் உருவானவை, அது உலகியல் தொடர்பானதாகவோ, மார்க்கம் தொடர்பான தாவோ இருக்கலாம், அது,ஸஹாபாக்கள் காலத்தில்,அல்லது, அதற்குப் பின்னுள்ள காலத்திலிருக் கலாம்;

மிர்க்காத்தில் باب الاعتصام என்ற பாடத்தில் இவ்வாறு எழுதப்பட்டுள்ளது,

وفي الشرع احداث مالم يكن في عهد رسول الله عليه السلام

பித்அத் என்பது, றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் காலத்திற்குப்பின் உருவானதற்குக் கூறப்படும்என்று. அஷிஃஃஅத்துல் லம்ஆத்தில் இதே பாடத்தில் இவ்வாறு எழுதப் பட்டுள்ளது,

றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி அவர்களின் காலத்திற்குப் பின் தோன்றியதற்கு “பித்அத்“ என்று கூறப்படும்.

றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்ல மவர்களுக்குப் பின் தோன்றியவை ,அது ஸஹாபாக்கள் காலமாக இருக்கலாம், அல்லது அதற்குப் பின் உள்ள காலமாக இருக்கலாம் அதுவே பித்அத்தாகும் .

வழக்குச்சொல்லில் (عرف) ஸஹாபாக்கள்காலத்தில் தோன்றிவைக்கு “ஸஹாபாக்களின் ஸுன்னத்” என்று கூறப்படும். பித்அத் என்று கூறப்படுவதில்லை என்பதுவழக்குச் (عرف) சொல்லாகும்.

ஹளறத் உமர்பாறூக் றழியல்லாஹு அன்ஹு அவர்கள் தராவீஹுத் தொழுகையை சட்டபூர்வமாக ஜமாஅத்தாக ஆக்கியதற்குப் பின், نعمت البدعة இது நல்ல பித்அத் என்று கூறியது இதற்கு நல்ல எடுத்துக் காட்டாகும்.

## பித்அத் அமலி இருவகைப்படும்.

*1- பித்அத்துல் ஹஸனா. நல்ல பித்அத்.*

*2- பித்அத் ஸய்யிஆ. தீய பித்அத்.*

### 1- பித்அத்துல் ஹஸனா.

பித்அத்துல் ஹஸனா (நல்ல பித்அத்) என்பது சுன்னத்திற்கு எதிரில்லாத புதியவை.

உதாரணமாக;

மீலாத் ஷரீப் கொண்டாடுதல், மார்க்கப் பாடசாலைகளை நிறுவுதல், விதவிதமான உணவுகளை தயாரித்தல், திருக்குர்ஆன், மற்றும் மார்க்க நூற்களைப் பிரசுரித்தல் உள்ளிட்டவை.

## 2- பித்அத் ஸய்யிஆ

பித்அத் ஸய்யிஆ (தீய பித்அத்) என்பது மார்க்கத்திற்கு எதிரானது. அல்லது ஸுன்னத்தை அழிக்கக் கூடியது.

உதாரணமாக:

அரபு மொழி அல்லாத மொழியில் ஜும்மாவிலும், இருபெருநாட்களிலும் கொத்பா ஓதுவது. ஒலிபெருக்கியில் தொழுகை நடத்துவது.

இவற்றில் அரபியில் கொத்பா ஓதுவது ஸுன்னத் (ஷாபிஈ மத்ஹபில் ஷர்த்து). இமாமின் சப்தம் கேட்காதவருக்கு முபல்லிகு மூலம் எத்திவைத்தல் ஸுன்னத் ஆகிய இரண்டு ஸுன்னத்துக்களும் நீக்கப்படுவதால் இவை கெட்ட பித்அத் ஆகும்.

இமாமின் சப்தம் கேட்காதவருக்கு முபல்லிகு மூலம் எத்தி வைத்தல் நல்ல பித்அதாகும். சில வேளை முஸ்தஹப்பாகவும், வாஜிபாகவும்கூட ஆகலாம்.

கெட்ட பித்அத் என்பது மக்றூஹ் தன்ஸீஹ், மக்றூஹ் தஹ்ரீமி, ஹறாம் ஆக வரும். இதன் விளக்கம் இன்ஷாஅல்லாஹ் பின்னால் வரும்.

நல்ல பித்அத், தீய பித்அத் ஆகியவற்றிற்கான ஆதாரங்கள் வருமாறு,

அடிப்படை கோட்பாடுகள், சட்ட விதிமுறைகள் உள்ளிட்டவைக்கு நேர்பட்டிருக்கும் ஒவ்வொரு புதியவையும் நல்ல அழகிய பித்அத்துக்கள்;. இவற்றிற்கு மாறானவை கெட்ட பித்அத்துக்கள்.

*ஆதாரம்: அஜிஃஃஅத்துல் லம்ஆத்.*

(சட்ட மேதை இமாமுனா ஷாபிஈ றஹ்மதுல்லாஹி அலைஹி

கூறுகின்றார்கள்.

مَا اُحْدِثَ يُخَالِفُ كِتَابًا اَوْ سُنَةً اَوْ اَثَرًا اَوْ اِجْمَاعًا فَهُوَ بِدْعَةُ الضَلال وَمَا اُحْدِثَ مِنَ الْخَيْرِ لَا يُخَالِفُ شَيْئًا مِنْ ذٰلِكَ فَهِيَ مُحْدَثَةُ غَيْرُ مَذْمُوْمَةٍ. فتح الباري، ج- ٣١, ص، ٣٥٣

புதிதாக உருவாக்கப்பட்டவை திருக்குர்ஆனுக்கும், ஹதீதுக்கும், ஸஹாபாக்களின் நடைமுறைக்கும், இஜ்மாஃவிற்கும், முரண்படுமாயின், அது வழிகேடான பித்அத்தாகும் மேற்கண்டவையில் எதற்கும் புதியவைகள் முரண்படவில்லையாயின் பழிப்பில்லாத புதியவையாகும்.

*ஆதாரம்: பத்ஹுல்பாரி, பாகம்:13, பக்கம்:353*

اَنَ كُلٌ مَا وَافَقَ اْلكِتَابَ اَوِ السُنَةَ اَوِ الاَجْمَاعَ اَوِ الْقِيَاسَ فَهُوَ سُنَةُ وَمَا خَرَجَ عَنْ ذٰلِكَ فَهُوَ بِدًعَةُ مَذْمُوْمَةُ

திருக்குர்ஆனுக்கும், சுன்னத்திற்கும், இஜ்மாவிற்கும், கியாஸிற்கும் நேற்பட்ட (புதியவைகள்) அனைத்தும் சுன்னத்தாகும். அவற்றிலிருந்து வெளியேறிய யாவும் கெட்ட பித்அத்தாகும்.

*(ஆதாம்: துஹ்பத்துல்முரீது.)*

இஸ்லாத்தில் அறிவு பற்றிய பாடத்தில் பின்வரும் ஹதீது இடம் பெறுகின்றது.

مَنْ سَنَ فِي اْلاِسْلَامِ سُنَةً حَسَنَةً فَلَهُ اَجْرُهَا وَاَجْرُ مَنْ عَمِلَ بِهَا مِنْ بَعْدِه مِنْ غَيْرِ أَنْ يُنْقَصَ شَئُ وَمَنْ سَنَّ فِي الْاِسْلَام سُنَةَ سَيِئَةً فَعلَيْهِ وِزْرُهاَ وَوِزْرُ مَنْ عَمِلَ بِهَا مِنْ غَيْرِ أَنْ يُنْقَص مِنْ اَوْزَارِهِمْ شَئُ

எவராவது ஒருவர் இஸ்லாத்தில் நல்ல காரியத்தை உருவாக்கினால், அதற்கான நற்கூலி அவருக்குக் கிடைக்கும். அவருக்குப் பின் அதை செய்கின்றவர்களின் நற்கூலியில் அவர்களுக்கு எது வித குறையும்

இல்லாமல் அதுபோன்ற நற் கூலியும் அவருக்குக் கிடைக்கும். எவராவது ஒருவர் ஒரு தீய செயலை உருவாக்கினால், அதற்கான பாவம் அவருக்கு உண்டு. அவருக்குப் பின் அதை செய்தவர்களின் பாவத்தில் அவர்களுக்கு எதுவித குறைவும் இல்லாமல் அதை ஒத்த பாவம் இவருக்கும் கிடைக்கும்.

இஸ்லாத்தில் புதிய நல்ல காரியங்களை உருவாக்குவது நன்மை தரும் நற்காரியம். அதை அகற்ற முயற்சிப்பது பாவமான செயல் என்று இதன் மூலம் தெரிய வருகின்றது.

ஷாமி என்ற ஹனபி மத்ஹபின் சட்ட நூலின் முன்னுரையில் இமாமுல் அஃழம் அபூஹனீபா ரஹ்மத்துல்லாஹி அலைஹி அவர்கள் பற்றிய விளக்கத்தில் பின்வருமாறு கூறுகின்றார்கள்.

قَالَ الْعُلَمَاءُ هٰذِهِ اَحَادِيْثُ مِنْ قَوَاْعِدِ الْاِسْلام  وَهُوَ اَنَ كُلَ مَنْ اِبْتَدَعَ شَيْئاً مِنَ الشَرِ كَاَنَ عَلَيْهِ مِثْلُ وِزْرِ مَنْ اِقْتَدَىْ بِهِ فِي ذٰلِكَ وَكُلُّ مَنْ اِبتَدَعَ شَيْئًا مِنَ الْخَيْرِ كَانَ لَهُ مِثْلُ اَجْرِ كُلُّ مَنْ يُعْمَلُ اِلٰي الْقِيٰمَةِ

இந்த ஹதீஸ்கள் இஸ்லாத்தின் அடிப்படைச் சட்டத்தைக் கூறக் கூடியவை என்று அறிஞர்கள் கூறுகின்றனர். எவராவது ஒருவர் ஒரு தீய காரியத்தை புதிதாக தோற்றுவித்தால், அதை பின்பற்றுவோரின் பாவமும் அவர் மீது சாரும். எவராவது ஒருவர் நல்ல காரியத்தைப் புதிதாக உருவாக்கினால், கியாமத்து நாள் வரை அதை பின்பற்றுவோரின் நன்மை அவருக்குக்கிடைக்கும்.

நல்ல பித்அத்தைத் தோற்றுவிப்பது நன்மையான காரியம் என்றும், தீய பித்அத் பாவமான காரியம் என்றும் இதன் மூலம் புரிந்து கொள்கின்றோம்.

கெட்ட பித்அத் என்பது சுன்னதிற்கு எதிரானதாகும். இதற்கான ஆதாரம் வருமாறு,

مَنْ اَحْدَثَ فِيْ اَمْرِنَا هٰذَا مَا لَيْسَ مِنْهُ فَهُوَ رَدٌّ

எவராவது ஒருவர் நமது மார்க்கத்தில் இல்லாத புதிய வையை உருவாக்கினால், அது நிராகரிக்கத்தக்கது.

மார்க்கத்தில் இல்லாதவை என்பது மார்க்கத்திற்கு எதிரானது என்பது பொருள்.

இந்த ஹதீதுக்கு அஷிஃஃஅத்துல் லம்ஆத் என்ற நூலில் பின்வருமாறு விளக்கம் எழுதப்பட்டுள்ளது.

مَنْ اَحْدَثَ قَوْمُ بِدْعَةً اِلَا رُفِعَ مِثْلُهَا مِنَ السُنَةِ وَتَمَسُكُ بسنَةِ خَيْرُ مِنْ أَحْدَاثِ بِدًعَةٍ

ஒரு பித்அத்தை உருவாக்கும் ஒரு சமூகம் அது போன்றதொரு சுன்னத்தை நீக்காமல் விடுவதில்லை. ஒரு சுன்னத்தை எடுத்துக்கொள்வது பித்அத்தை உருவாக்குவதை விட மேலாகும்.

இந்த ஹதீதுக்கு அஷிஃஃஅத்துல் லம்ஆத்தில் இவ்வாறு விளக்கம் எழுதப்பட்டுள்ளது.

ஒரு பித்அத்தை வெளிப்படுத்துவதன் மூலம் ஒரு சுன்னத் அழிக்கப்படுகிறது. ஒரு சுன்னத்தை நிலைநாட்டும் போது ஒரு பித்அத் அழிக்கப்படுகிறது. பித்அத் சுன்னத்தான அமலை அளிக்கவல்லது என்பதை மேற்கண்ட ஹதிலும் அதற்கான விளக்கத்திலும் புரிந்து கொள்கின்றோம். இதற்கான உதாரணத்தை ஆரம்பத்தில் குறிப்பிட்டுள்ளோம்.

நல்ல பித்அத், கெட்ட பித்அத் ஆகிய இரண்டையும் பிரித்து அறியும் ஒழுங்கை நன்கு நினைவில் கொள்ளவேண்டும். இங்குதான் ஏமாற்றமும், மோசடியும் இடம் பெறுகின்றன என்பதை நினைவில் கொள்ளல் வேண்டும் .

## பித்அத்தின் வகைகளும், அதன் சட்டங்களும்.

அழகிய பித்அத், கெட்ட பித்அத் என்று இரண்டு வகைப்படும் என்பது தெளிவாகிவிட்டது.

### (அ) பித்அத்துல் ஹஸனா (அழகியப் பித்அத்) மூன்று வகைப்படும்.

1) ஆகுமான பித்அத்.

2) சுன்னத்தான பித்அத்.

3) வாஜிபான பித்அத்.

### (ஆ) கெட்ட பித்அத் இருவகைப்படும்.

1) மக்றூஹான பித்அத்.
2) ஹறாமான பித்அத்.

இதற்கான ஆதாரம் வருமாறு

மிர்க்காத்தில் "அல் இஃதிஸாம் பில் கிதாபி வஸ்ஸுன்னா" என்ற பாடத்தில் பின் வருமாறு பதியப்பட்டுள்ளது.

اَلْبِدَّعَةُ اِمَا وَاجِبَةٌ كَتعَلُمِ النَحْوِ وَتَدْوِيْنِ اُصُوْلِ الْفِقْهِ ، وَأَمَا الْحُرْمَةُ كَمَذْهَبِ الْجَبْرِيَةِ ،وَامَا مَنْدُوْبَةٌ كَاحْدَاثِ الرَوَابِطِ وَالْمَدَارِسِ ، وَكُلُّ اِحْسَانٍ لَمْ يعْهَدْ فِي الصَدْرِ الْأَوَلِ وَكَالتَّرَاوِيحِ اَيْ بِالْجَمَاعَةِ الرَّاتِبَةِ وَأَمَا مَكْرُوْهَة كَزُخْرُفَةِ الْمَسْجِدِ وَأَمَا مُبَاحَةٌ كَالْمُصَافَحَةِ عَقِبَ الصُبْحِ وَالتَوسُّعِ بِلَذِيذِ أَكْلِ وَالْمَشَارِبِ

**பித்அத் வாஜிப்:**

அரபி இலக்கணம் (நஹ்வு) கற்பது. பிக்ஹின் அடிப்படை (உஸூல்) முறையியல் விதிகளைத் திரட்டுவது.

**பித்அத் ஹறாம்:**

வழிகெட்ட ஜப்றிய்யா மத்ஹபுகளை ஒத்தவைகள்.

**பித்அத் ஸுன்னத்:**

பயணிகள் விடுதிகள், மதரஸாக்கள் உள்ளிட்டவையைத் தோற்றுவித்தல். ஆரம்ப காலத்தில் இல்லாத அனைத்து நற்காரியங்களும்,

உதாரணமாக, தராவீஹுத் தொழுகையை ஜமாஅத்தாகத்தொடர்ந்து தொழுவது.

**பித்அத் மக்றூஹ்:**

பெருமையை நாடி பள்ளிவாசல்களை அலங்கரிப்பது, அழகுபடுத்துவது.

பித்அத் ஜாயிஸ்:

சுபுஹு த்தொழுகைக்குப் பின் முஸாபஹாச் செய்வது சுவையான உணவு குடிபானம் உள்ளிட்ட வையை விஸ்தீரணம் செய்வது.

ரத்துல் முக்தார் (ஷாமி) பாகம்-1 அத்தியாயம் தொழுகை, இமாமத் செய்தல் என்ற பாடத்தில் பின்வருமாறு பதியப்பட்டுள்ளது.

أَيْ صَاحِب بِدْعَة مُحَرَمَة وَالا تَكُوْنُ واجِبَة كَالنَصْبِ الْاَدلَة وَتَعْلِيْم النحو وَمَنْدُوْبَة كَاحْداث نَحْو رِبَاط وَمَدْرَسَة وكُلُ اِحْسَان لَمْ يَكُنْ فِي صَدْرِ الْأَوَل وَمَكْرُوْهة كَزُخْرُفَة الْمَسْجِد وَمُبَاحة كَالتَوَسُع بِلَذِيْذِ الْمَأْكِلِ وَاللْمَشَارِبِ وَالثِيَابِ كَمَا فِي شَرَحِ الْجَامِعِ الصَغِيْرِ

ஹராமான பித்அத்தைச் செய்கின்றவருக்குப் பின்னால் நின்று ஜமாஅத்தாகத் தொழுவது மக்ரூஹ்! தவிர, பித்அத் என்பது ஒன்றில் வாஜிபாக இருக்கும் உதாரணமாக, மார்க்கத்தின் ஆதாரங்களை நிறுவுதல். அரபி இலக்கணம் (நஹ்வு) கற்றல், இன்னும் சுன்னதாக இருக்கும்.

உதாரணமாக,

பயணிகள் விடுதிகள், மதரஸாக்களை உருவாக்குதல். மற்றும் ஆரம்ப காலத்தில் இல்லாத நன்மையான சகல காரியங்களையும் செய்தல்.

இன்னும் மக்றூஆக இருத்தல். உதாரணமாக, பள்ளிவாசல்களைப் பெருமைக்காக அழகுபடுத்துதல். ஆகுமாக இருத்தல்

உதாரணமாக,

சுவையான விதவிதமான உணவு வகைகளிலும், நல்ல தரமான ஆடைகளிலும் விசாலப் படுத்துதல் இவ்வாறு ஷறஹு ஜாமிஉஸ் ஸகீர் என்ற நூலில் குறிப்பிடப்பட்டுள்ளது.

மேற்கண்ட மேற்கோள்களின் மூலமாக பித்அத்தின் 5 வகைகளும் தெளிவாக புரிந்து விட்டன.

இதன்படி, சகல பித்அத்துக்களும் ஹராம் அல்ல! என்று தெரிய வந்துள்ளது. ஆயினும், சில பித்அத்துக்கள் சில நேரம் அவசியமானதாகவும் ஆகிவிடும். சட்டக்கலை (பிக்ஹு) உசூல்பிக்ஹு சட்ட முறையில், திருக்குர்ஆனை ஒன்று சேர்த்தல், திருக்குர்ஆனுக்கு ஒலி குறியீடு வைத்தல் மற்றும், தற்காலத்தில் திருக்குர்ஆனைச் சிறந்த வடிவில் அச்சடித்தல், மதரஸாக்களில் பலதுறை சார்ந்த துறைகளை ஏற்படுத்துதல் உள்ளிட்டவையை குறிப்பிடலாம்.

## பித்அத்தின் வகைகளை அறிவதற்கான மார்க்கமும், அதன் அடையாளங்களும்.

நல்ல பித்அத், கெட்டபித்அத்தை அறிந்து கொள்வதற்கான மார்க்கத்தை ஏற்கனவே விளக்கியுள்ளோம். கெட்ட பித்அத் என்பது இஸ்லாத்திற்கு எதிரானது. சுன்னத்தை அழிக்கக் கூடியது. இவை தவிரவுள்ளவை நல்ல பித்அத் ஆகும்.

பித்அத்தின் ஐந்து வகைகளின் அடையாளங்களை அடுத்து விளங்கிக் கொள்ளுங்கள்!.

### ஆகுமான பித்அத்.

ஷரீஅத்தில் தடையில்லாத, நன்மையை நாடாத புதிய செயல்.

உதாரணமாக, பல் சுவை உணவு வகைகள். பல தரத்திலான ஆடைகள்.

இதற்கான ஆதாரங்களை மிர்க்காத், ரத்துல் முக்தார் உள்ளிட்ட நூல்களிலிருந்து ஏலவே குறிப்பிட்டுள்ளோம். இவ்வகையான செயற்பாடுகளில் நன்மையுமில்லை தண்டனையுமில்லை.

### சுன்னத்தான பித்அத்.

ஷரீஅத்தில் தடையில்லாததும், நன்மையான செயல்கள் என்று பொதுமக்கள் கருதி நன்மையை நாடி செய்கின்ற புதிய செயல்கள்.

உதாரணமாக,

மீலாது விழாக்கள், வலிமார்களான நாதாக்களுக்கு பாத்திஹா ஓதுவது உள்ளிட்டவையைக் குறிப்பிடலாம்.

பொதுவாக முஸ்லிம் மக்கள் இவற்றை நன்மையான செயல்கள் என்று நினைக்கின்றார்கள். இவற்றைச் செய்பவர் நன்மைகளைப் பெறுவார். செய்யாதவர் குற்றவாளிகள் அல்ல. இதற்கான ஆதாரங்கள் வருமாறு.

மிர்க்காத் என்ற நூலில் "அல் இஃதிஸாம் பில்கிதாபி வஸ்ஸுன்னா" என்ற பாடத்தில் பின்வரும் ஹதீதைக் குறிப்பிடுகின்றார்கள்.

وَرُوِيَ عَنِ ابْنِ مَسْعُوْدٍ رَضِيَ اللهُ تَعَالٰي عَنْهُ مَا رَأَهُ الْمُسْلِمُوْنَ حَسَناً فَهُوَ عِنْدَ اللهِ حَسَنٌ وَفِي حَدِيث مَرْفُوْعٍ وَلا تَجْتَمِعُ أُمَتِيْ عَلَي الضَلالَةِ

முஸ்லீம்கள் நல்லதாகக் கருதுகின்ற செயல்கள் அல்லாஹ்விடத்திலும் நல்லதாகவே இருக்கும் எனது உம்மத் வழிகேட்டில் ஒன்று சேராது!என்று மர்பூஆன ஹதீஸில் வந்துள்ளது.

மிஷ்க்காத் ஷரீபின் ஆரம்பத்தில் பின்வரும் ஹதீஸ் இடம் பெறுகின்றது.

إِنَّمَا الأَعْمَالُ بِالنِّيَّاتِ، وَانَّمَا لِكُلِّ امْرِئٍ مَا نَوَى

செயல்கள் யாவும் எண்ணங்களைப் பொறுத்தே அமைகின்றன. ஒவ்வொரு மனிதனுக்கும் அவன் எண்ணியது தான் கிடைக்கும்.

துர்ருல் முக்தார் பாகம்-1 வுழுவின் சுன்னத்துக்கள் என்ற பாடத்தில் பின்வருமாறு குறிப்பிடப்பட்டுள்ளது.

وَمُسْتَحبهُ وَهُوَ مَا فَعَلَهُ النَبِيُ صلَي اللهُ عَلَيْهِ السلام مَرَةً وَتَرَكَهُ اُخْرَي وَمَا اَحبَهُ السَلَفُ

ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் ஒரு செயலை சில நேரம் செய்தும், சில நேரம் விட்டதையும் முன்னோர்களான ஸலபுகள் விரும்பியதையும் "முஸ்தஹப்பு" என்ற சொல் குறிக்கும்.

துர்ருல் முக்தாரின் விரிவுரையான ரத்துல் முக்தார் பாகம் 5 குர்பானி பற்றிய பாடத்தில் பின்வருமாறு கூறுகின்றார்கள்

فَاِنَ النِيَاتِ تَجْعَلُ الْعَادَاتِ عِبَادَاةٍ

வழக்கத்தில் உள்ள நல்லவைகள் நிய்யத்தினால் இபாதாத்துகளாகின்றன .

இவ்வாறு மிர்க்காத்தில் நிய்யத் பற்றிய பாடத்திலும் எழுதுகின்றார்கள்.

மேற்கண்ட ஹதீதுகள் ஃபிக்ஹு சட்ட நூல்களின் சொற்றொடர்கள்

மூலமாக பின்வரும் விளக்கத்தை பெறமுடிகின்றது.

ஆகுமான ஒரு செயலை நன்மையை நாடி செய்தால், அல்லது முஸ்லிம்கள் அச்செயலை நன்மை பயக்க வல்லது என்று கருதினால் அது அல்லாஹ்விடத்தில் நன்மையானதுதான். முஸ்லிம்கள் அல்லாஹ்வின் சாட்சியாளர்கள். அவர்கள் நல்லது என்று சாட்சி பகிர்ந்தால் அது நல்லதுதான்.

"சாட்சி பகர்தல்" பற்றி மிக அழகான ஒரு விளக்கம் "ஷஃஃனே ஹபிபுர் ரஹ்மான்"! என்ற நமது நூலில் உள்ளது. (இந்நூலை மாமறை போற்றும் முஸ்தபா மாநபி! ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள்"என்ற பெயரில் தமிழாக்கம் செய்துள்ளோம்,) விரும்பியவர்கள் அதனைப் பார்த்துக் கொள்ளலாம்.

மேலும், இதே நூலில் வலிமார்களின் உரூஷ் கந்தூரி பற்றிய பாடத்திலும் சாட்சி கூறுதல் பற்றிய சில விளக்கங்கள் இன்ஷா அல்லாஹ்வரும்.

**பித்அத் வாஜிப்:**

ஷரீஅத் தடுக்காத புதிய செயல்!. இதை விடுவதால் ஷரீஅத்திற்கு பங்கம் வரும்.!

உதாரணமாக,

திருக்குர்ஆனுக்கு ஒலிக்குறியீடு அமைத்தல், மார்க்கரீதியான மத்ரஸாக்களை நிறுவுதல், அரபு இலக்கணம் கற்றல் உள்ளிட்டவை. இவை பற்றி எலவே குறிப்பிட்டுள்ளோம்.

**பித்அத் மக்றூஹ்:**

சுன்னத்திற்கு எதிரான, அல்லது சுன்னத் விடுபடக்கூடிய புதிய செயல். முஅக்கதா அல்லாத ஒரு சுன்னத் விடுபட்டால் மக்றூஹ் தன்ஸீஹ்! சுன்னத் முஅக்கதா விடுபட்டால் மக்றூஹ் தஹ்ரீம்.! இதற்கான உதாரணங்களும், ஆதாரங்களும் ஏற்கனவே கூறப்பட்டுள்ளன.

**பித்அத் ஹராம்:**

வாஜிப்பான ஒரு செயலை இல்லாதொழிக்கும் புதிய செயல்.

துர்ருல் முக்தார் என்ற நூலில் பின்வருமாறு எழுதுகின்றார்கள்.

அதானுக்குப் பின் ஸலவாத் கூறும் வழக்கம் ஹிஜ்ரி 781ல் ஆரம்பிக்கப் பட்டது. (இதற்கு சில ஆண்டுகளுக்குப் பின் அதானுக்கு முன் ஸலவாத் கூறும் நல்ல வழக்கமும் ஆரம்பமானதுஆதாரம் நிஹாயா,புஜைரமி) ஆயினும்., இது நல்ல பித்அத்தாகும்.

ரத்துல்முக்தார் என்ற நூலில் பின்வருமாறு விளக்கம் எழுதப்பட்டுள்ளது.

فَفِيْهِ دَلِيْلُ عَلٰي اَنَهُ غَيْرُ مَكْرُوْهٍ لانَ الْمُتَوَارِثَ لَا يَكُوْنُ مَكْرُوهًا وَكَذٰلِكَ نَقُوْلُ فِي الْآذَانِ بَيْنَ يَدي الْخَطِيْبِ فَيَكُوْنُ بِدْعَةً حَسَنَةً ، أَذَا رَآهُ الْمُؤْمِنُوْن حَسَناً فَهُوَ عِنْدَ الله حَسَنُ

முஸ்லிம்கள் மத்தியில் தொன்று தொட்டு வழக்கில் இருந்து வருகின்ற செயல் மக்றூஹ் அல்ல! அது நன்மை தரக்கூடியதுதான். என்பதை இதன் மூலம் அறிந்து கொள்கின்றோம்.ஜும்ஆவில் கதீபுக்கு முன்னால் சொல்லப்படும் அதானும் நல்ல பித்அத்தாகும். முஃமீன்கள் நல்ல செயல் என்று பார்க்கின்ற செயல் அல்லாஹ்விடத்திலும் நல்லதுதான்.

இஸ்லாத்தில் இப்பொழுது நடைமுறையில் இருக்கின்ற நல்ல செயல்கள் யாவும் பித்அத்துல் ஹஸனாவை விட்டும் நீங்கி இருக்க முடியாது என்பதை பட்டியலிட்டு இப்பொழுது கூறுகின்றோம் வாருங்கள் பார்க்கலாம்.

### ஈமான்

முஸ்லிம் குழந்தைகளுக்கு ஈமானிய விடயங்களை முஜ்மல், முபஸ்ஸல் என்று சுருக்கமாகவும், விரிவாகவும் கற்றுக் கொடுக்கப்படுகின்றன. இந்த இரு வகைப்படுத்தலும், அதற்கான பெயர்களும் இஸ்லாத்தின் முதல் மூன்று நூற்றாண்டிலும் இல்லாத பித்அத்தான செயல்களாகும்.

### கலிமா:

ஒவ்வொரு மனிதனும் ஐந்து கலிமாக்களை மனனம் செய்து கொள்கின்றார். அவற்றுள் இது முதல் கலிமா,! இது இரண்டாம் கலிமா! என்ற எண்ணிக்கையும், அதன் ஒழுங்கும் அதன் பெயர்களும் இஸ்லாத்தின்

ஆரம்ப முதல் மூன்று நூற்றாண்டுகளிலும் இருந்ததற்கு ஆதாரம் கிடையாது!. ஆகவே, இவை புதிய பித்அத்துக்களாகும்.

## திருக்குர்ஆன்:

திருக்குர்ஆனை முப்பது பாகங்களாகவும், றுகூஉகளாகவும் பிரித்ததும், அதற்கு உச்சரிப்பு குறியீடு (ஸஃபர், சேர், பேஷ்....) வைத்ததும், அதனை அச்சிட்டு பைண்டிங் செய்ததும் முதல் மூன்று நூற்றாண்டிலும் இல்லாத பித்அத்தாகும்.

## ஹதீது:

ஹதீஸ் நூற்கள் புத்தக வடிவில் திரட்டப்பட்டதும், அதற்கான அறிவிப்பாளர்கள் பட்டியல் பற்றி கூறுவதும், அறிவிப்பாளர்கள் பட்டியலை பகுப்பாய்வு செய்வதும், ஹதீதுகளை வகைப்படுத்துவதும் பித்அத்தாகும்.

மேலும், ஹதீதுகளை ஸஹீஹ், ஹசன், ழயீப், முஃழல், முதல்லஸ் என்று வகைப்படுத்தியதும், ஸஹீஹான ஹதீது முதல் தரம், ஹஸன் இரண்டாம் தரம், ழயீப் மூன்றாம் தரம் என்று தரப்படுத்தியதும், ஹலால், ஹறாம் உள்ளிட்டவை ஸஹீஹான ஹதீஸின் மூலம் தீர்மானிக்கப்படும். பழாயில் என்ற சிறப்பான நல்லமல்களுக்கு ழயீபான ஹதீதை ஆதாரமாகக் கொள்ளலாம் என்று சட்ட விதிகளை ஏற்படுத்தியதும் பித்அத்தாகும்.

இவ்வாறே ஹதீதின் ஏனைய துறைகளும் ஆரம்ப மூன்று நூற்றாண்டிலும் இல்லாத பித்அத்துகளாகும்.

## உஸூலுல் ஹதீத்:

இத்துறை முற்றிலும் பித்அத்தாகும், இதன் பெயரும், இதன் சட்ட முறை களும் பித்அத்துத்தான்.

## ஃபிக்ஹு:

ஃபிக்ஹு என்ற சட்டத்துறையில் தான் இப்போது இஸ்லாத்தின் மூலச்சக்கரமே சுழன்று கொண்டிருக்கின்றது.

இத்துறை பற்றி இஸ்லாத்தின் ஆரம்ப முதல் மூன்று நூற்றாண்டிலும் பேசப்படவில்லை. இதன் ஆரம்பம் தொட்டு இறுதி வரையிலான அனைத்துமே பித்அத்தாகும்.

## உஸூலுல் பிக்ஹ்:

சட்ட நியமங்களாகிய இத்துறையின் பெயரும், இதன் அனைத்து சட்ட விதிகளும் முற்றிலும் பித்அத்தாகும்.

### உஸூலுல் ஃபிக்ஹு, இல்முல் கலாம் (தர்க்க கலை).

சட்ட நியம முறைகள், தர்க்க இறையியல் ஆகிய துறைகளும் அதன் அனைத்து விதிகளும் பித்அத்தாகும்.

### தொழுகை:

தொழுகையில் வாயால் நிய்யத்து வைத்தலுக்கு முதல் மூன்று நூற்றாண்டிலும் ஆதாரம் இல்லை. தறாவீஹ் தொழுகையை தொடர்ந்து நிரந்தமாக 20 ரக்காத்துகளாக ஜமாஅத்தாகத் தொழுவது என்ற முடிவு பித்அத்தாகும்.

ஹளரத் அமீருல் முஃமினீன் உமர் பாரூக் ரலியல்லாஹுதஆலா அன்ஹு அவர்களே نِعْمَتِ الْبِدْعَةُ هٰذِهٖ இது நல்ல பித்அத்! என்று கூறியுள்ளார்கள்.

### நோன்பு:

நோன்பு துறக்கும் போது اَللّٰهُمَ لَكَ صُمْتُ என்று துஆ ஓதுவதும், ஸஹர் வேளை نَوَيْتُ صَوْمَ غَدٍ أَنْ أَدَاءِ என்று கூறுவதும் பித்அத்தாகும்.

### ஸக்காத்:

ஸக்காத் நிறைவேற்றுவதில் தற்போது வழக்கிலிருக்கும் முறை பித்அத்தாகும். இஸ்லாத்தின் முதல் மூன்று நூற்றாண்டிலும் இம்முறை இருக்கவில்லை தற்போதுள்ள அளவு முறையில் ஸகாத்துல் பித்ரா நிறைவேற்றுவதும் பித்அத்தாகும்.

### ஹஜ்

தொடர் ஊதி, (புகையிரதம்) விமானம், கப்பல், வாகனங்கள் மூலம் ஹஜ்ஜுக்குச்செல்வதும், வாகனத்தில் அரபாவுக்கு அழைத்துச் செல்வதும் பித்அத்தாகும். அக்காலத்தில் மோட்டார் வாகனங்கள் இருக்கவில்லை. அதன்மூலம் ஹஜ்ஜும் நடக்கவில்லை.

## தரீக்கத்

தரீக்கத்தில் அனுஷ்டிக்கப்படுகின்ற நடைமுறைகளும், ஏறத்தாள அனைத்து பிரச்சனைகளும் பித்அத்தாகும். முறாக்கபா, ஸில்ஸிலா, மூச்சுப் பயிற்சி, குரு தியானம் (தஸவ்வுரு ஷைகு) திக்ரின் வகைகள் உள்ளிட்ட அனைத்தும் பித்அத்தாகும். இதற்கு முதல் மூன்று நூற்றாண்டிலும் ஆதாரம் கிடையாது.

## நான்கு ஸில்ஸிலா

ஷரீஅத்தின் நான்கு வகைகளான ஹனபி, ஷாபிஈ, மாலிக்கி, ஹன்பலி மற்றும் தரீக்கத்தின் வகைகளான காதிரிய்யா, ஜிஷ்தியா, நக்ஷ்பந்தியா, ஸுஹ்ரவர்தியா உள்ளிட்ட அனைத்து வகைகளும் பித்அத்தாகும். இவற்றில் ஜிஷ்தி, நக்ஷ்பந்தி உள்ளிட்ட பெயர்கள் கூட அரபியல்ல என்பது ஈண்டு கவனிக்கத்தக்கது.

ஸஹாபாக்கள், தாபியீன்களில் எவரும் ஹனபி, காதிரி கிடையாது! இந்த நிலையில் மார்க்க விடயங்களில் இதை தவிர்த்து நடக்க முடியும் என்று தேவ்பந்திகளால் கூற முடியுமா?

ஈமானின் பகுதிகளான ஈமான், கலிமா உள்ளிட்டவை கூட பித்அத்திற்குள் வந்திருக்கும் போது பித்அத்தை விட்டும் உங்களால் எப்படி நீங்கி இருக்க முடியும்?

## உலகியல் பொருட்கள்.

தற்காலத்தில் உலகத்தில் உற்பத்தி செய்யப்பட்டுள்ள பொருட்களின் பெயர்களும், அடையாளங்களும் இஸ்லாத்தின் பொற்காலமான முதல் மூன்று நூற்றாண்டிலும் இருக்கவில்லை. இவைகளைத் தவிர்த்து உலகில் வாழவே முடியாது! நிர்ப்பந்தமாக ஒவ்வொருவரும் இவற்றை அனுபவிக்க வேண்டியுள்ளது.

தொடர்ஊதி, (புகையிரதம்) மோட்டார் வண்டி, விமானம், கப்பல், படகு மற்றும் தபால், டெலிபோன், தொலைக்காட்சி, வானொலி, ஒலி பெருக்கி, மின்னஞ்சல், தொலைநகல் உள்ளிட்டவை தற்காலத்தில் அவசியமான பொருளாக ஆகிவிட்டன. இவையாவும் பித்அத்துகளாகும். இவற்றை சகல தரப்பினர்களும் எதுவித கூச்சமும் இல்லாமல் பாவிக்கின்றனர்.

வஹ்ஹாபிகளே! தேவ்பந்திகளே! இப்போது சொல்லுங்கள்! இதைத்

தவிர்த்து உங்களால் வாழ முடியுமா? நிச்சயமாக முடியாது!.

# அத்தியாயம் – 2
# குற்றச்சாட்டுகளும், அதற்கான பதில்களும்.

றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வசல்லமவர்களுக்குப் பின் புதிதாகத் தோன்றிய மார்க்கம் தொடர்பான, அல்லது உலகியல் தொடர்பான புதிய செயலை "பித்அத்தே அமலி" என்ற சொல் குறிக்கும். ஸஹாபாக்களின் காலத்தில் தோன்றிய புதிய செயல்களும் இச்சொல்லுக்குள் அடங்கும்.

"பித்அத் அமலி" க்கு நாம் கூறிய வரைவிலக்கணத்திற்கு எதிராக இரண்டு குற்றச்சாட்டுக்கள் முன்வைக்கப்பட்டுள்ளன.

**குற்றச்சாட்டு: 1**

றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் காலத்திற்குப் பின் தோன்றிய மார்க்கம் தொடர்பான புதிய செயலை மட்டும்தான் "பித்அத்" என்ற சொல் குறிக்கும். உலகியல் தொடர்பான புதிய செயல்களை இச்சொல் குறிக்காது.! இதன்படி, மீலாத் கொண்டாடுவது பித்அத்தாகும். தொலைபேசி, தொடர்ஊதி,(புகையிரதம்) மோட்டார் வாகனம், உள்ளிட்டவையில் பயணம் செய்வது பித்அத் ஆகாது.

றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்கள் கூறினார்கள்.

مَنْ اَحْدَثَ فِيْ اَمْرِناَ هٰذاَ ماَ لَيْسَ مِنْهُ فَهُوَ رَدٌّ

எவராவது ஒருவர் எமது மார்க்கத்தில் இல்லாத ஒன்றை உருவாக்கினால் அது நிராகரிக்கத்தக்கது.

மேற்கண்ட ஹதீதில் ஃபீ அம்ரினா - في امرنا - என்ற சொல்லின் மூலம் உலகியல் கண்டுபிடிப்புக்கள் பித்அத் அல்ல என்று தெரிகிறது. ஹதீது ஷரீபில் அவையனைத்தும் நிராகரிக்கத்தக்கவை என்று வந்துள்ளதால்,

அவற்றில் எதுவும் நல்லவையில்லை. சகலதும் ஹறாமாகும் .

**பதில்:**

பித்அத் அமலி- செயல் சார்ந்த- பித்அத்தை மார்க்கம் தொடர்பான செயல் என்று மட்டுப்படுத்துவது, ஸஹீஹான ஹதீதுகள், முஹத்திதுகள், உலமாக்களுக்கு எதிரான தன்னிச்சையான வாதமாகும்.

ஹதீது ஷரீபில், كُلُّ مُحْدَثٍ بِدْعَة

புதியவை அனைத்தும் பித்அத் என்று பொதுவாகவே கூறப்பட்டுள்ளது. இங்கு மார்க்கம், உலகியல் என்று வேறுபடுத்திக் கூறப்படவில்லை. நாம் முன்வைத்த வரைவிலக்கணத்திற்கு ஆதாரமாக அஷிஃஃஅத்துல் லம்ஆத் , மிர்க்காத் உள்ளிட்ட நூற்களை சான்றாதாரமாக முன்வைத்திருக்கின்றோம்.

மேற்படி நூற்களில், சுவையான உணவுவகைகள், தரமிக்க விதவிதமான ஆடைகள் உள்ளிட்ட உலகியல் தொடர்பானவையை ஆகுமான பித்அத்தின் பட்டியலில் சேர்த்திருக்கின்றனர். ஆகவே, பித்அத்தை மார்க்கம், உலகியல் என்று வேறுபடுத்திக் கூறுவது தவறாகும்.

அவர்கள் கூறுவது போன்று ஒரு வாதத்திற்கு பித்அத் என்பது மார்க்கம் தொடர்பான வையை த்தான் குறிக்கும் என்று வைத்துக் கொண்டாலும், நன்மை தரும் அனைத்தும் மார்க்கத்திற்குள் அடங்கும்.

முஸ்தஹப்பு, நபில்கள், பர்ளுகள், வாஜிபுகள் உள்ளிட்ட அனைத்தும் மார்க்கம் தொடர்பானவை. இவற்றை மனிதர்கள் நன்மையை நாடியே செய்கின்றனர். உலகியல் தொடர்பான எச்செயலையும் நன்மையை நாடிச் செய்யும் போது அதற்கு நற்கூலி கிடைக்கவே செய்யும்.

றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்கள் கூறினார்கள்.

حَتَي اللُقْمَةِ تَرْفَعُهَا فِي فَمِ اِمْرَأتِكَ

தனது மனைவியின் வாயில் ஊட்டபடுகின்ற ஒரு பிடி கவளம் உட்பட அதுவும் நன்மையானது தான்.

இதன்படி, ஒரு முஸ்லிமின் உலகியல் சார்ந்த சகல செயல்களும் மார்க்கமாகவே கருதப்படும். நல்லெண்ணத்தோடு வழங்கப்படும் ஊணும், குடிப்பும் பித்அத்தாகுமா? இல்லையா? என்பதை இப்போது கூறுங்கள்

பார்க்கலாம். இந்த வகையில் பித்அத்திற்கு மார்க்கம் தொடர்பானவை என்று நிபந்தனையிடுவதால் நீங்கள் அடையும் பயன் எதுவுமில்லை!

தேவ்பந்து மத்ரஸாவும், அங்குள்ள பாடத்திட்டமும், அங்கு நடக்கின்ற ஹதீது வகுப்பும், ஊதியம் பெற்று கற்பிப்பதும், பரீட்சை நடத்துவதும், திருக்குர்ஆனுக்கு ஒலிக்குறியீடு வைத்ததும், திருக்குர்ஆன், புகாரிஷரீப் உள்ளிட்டவையை அச்சடிப்பதும் சோதனைகள்நீங்குவதற்காக 15 ரூபாய்க்கு (நூலாசிரியரின் காலத்தில்) புகாரிஷரீப் ஓதி தமாம் செய்வதும்,

ஹதீதுகளை மட்டும் நூல் வடிவிலாக்குவதும், ஹதீஸில் பல துறைகளை ஏற்படுதததியதும், திருக்குர்ஆனை காகிதத்தில் திரட்டியதும், இவையாவும் ஹலாலா? ஹறாமா? என்று கூறுங்கள்!.

றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லமவர்களின் காலத்திற்குப்பின் புதிதாக தோற்றுவிக்கப்பட்தாக நாம் பட்டியலிட்ட சகலதும் ஹலால்? மீலாத் ஷரீப், வலிமார்களுக்கு பாத்திஹா ஓதுவது ஹறாம்? இதில் நீங்கள் கண்டுபிடித்த குறைதான் என்ன? றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் காலத்தில் இவை இல்லை என்பதுதானே! நாம் மேலே குறிப்பிட்ட அனைத்தும் ஹலால்?

பஞ்சாப் அமிர்ஸில் உள்ள வஹாபி மௌலவி தனாஉள்ளாஹ்வுக்கும், நமக்குமிடையில் நடந்த விவாதத்தில் பின்வரும் சவாலை பகிரங்கமாகக் கூறினோம்.

நீங்கள்பித்அத், ஷிர்க், தீன், இபாதத் உள்ளிட்ட நான்கிற்கும் எதுவித ஆட்சேபனையும் கூற முடியாத (ஜாமிஉ, மானிஉ جامع، مانع) வரை விலக்கணத்தைக் கூறிவிட்டு நீங்கள் விரும்புகின்ற சன்மானத்தை எம்மிடமிருந்து பெற்றுக்கொள்ளுங்கள்!

அல்லாஹுத்தலாவின் மீது தவக்குல் வைத்து நாம் கூறுகின்றோம். உலக முடிவு நாள் வரை இந்நான்கிற்கும் உலகிலுள்ள எந்தவொரு வஹாபி, தேவ்பந்திகளாலும் வரைவிலக்கணம் கூறவே முடியாது. தற்காலத்தில் வாழுகின்ற தேவ்பநதி, வஹாபிகளுக்கும் இந்த சவாலை பகிரங்கமாக விடுக்கின்றோம். முடிந்தால் கூறுங்கள்.!

(1986ம் ஆண்டு மௌலவி பீ. ஜெய்னுலாப்தீனுக்கும், நமக்குமிடையில் கோட்டாரில் நடந்த பகிரங்க விவாதத்தில் பின்வரும் கேள்விகளை முன்வைத்தேன்.

1) ஷிர்க், தவ்ஹீதுக்கு ஜாமிஉ, மானிஉ வரைவிலக்கணம் கூறுங்கள்.

2) வஸீலாவை மறுக்கும் நீங்கள் நிஸ்பத் ஹகீகி, நிஸ்பத் மஜாஸியை ஏற்கின்றீரகளா? மறுக்கின்றீர்களா?

3) வஸீலா, தபர்ருக்கு, இஸ்திஙாதா, தவஜ்ஜுஹு, தஜவ்வுஹு, தஷப்புஉ இவையாவும் ஒன்றா? அல்லது தனித்தனியானதா?

4) இந்த உலகத்தில் ஷிர்க்காக இருப்பவை, கப்றில், அல்லது மஹ்ஷரில் ஷிர்க்கில்லாது போகுமா?

இரண்டு நாள் நடந்த விவாதத்தில் பல முறை கேட்டும் அவர் வாய் திறக்கவில்லை. முடிவாக கியாமத் நாள் வரை இதற்கு உங்களால் பதில் கூற முடியாது என்று கூறினேன். இதுவரை பதில் இல்லை. இதற்குப் பிறகும் வரப்போவதில்லை. இன்ஷாஅல்லாஹ்!)

மீலாத் ஷரீப் ஹறாம் என்று கூறுவதற்கான வரைலவிலக்கணத்தை கூறுமாறு இப்போதும் தேவ்பந்தி, வஹாபிகளுக்கு சவால் விடுக்கின்றோம்.

றிஸாலா காஸிமி, அஹ்லே ஹதீஸ் பத்திரிகை வெளியிடுவது ஹலால்?

வலிமார்களிடம் உதவி தேடுவது ஷிர்க்? பொலிஸிடம் உதவி தேடுவது இஸ்லாம். ?

இவற்றிற்கெல்லாம் பதில் கூற முடியாது! கூறவும்மாட்டோம் என்று நமது சவாலுக்கு பதில் கூறமுடியாதவர்கள் கூறுகின்றனர்.

பதில் கூறத் திராணியில்லாத நீங்கள் அடிப்படையில்லாத வரட்டுவாதம் நிறைந்த உங்கள் மத்ஹபைக் கை விட்டுவிட்டு தவ்பாச் செய்து தூய இஸ்லாமாகிய அஹ்லுஸ் ஸுன்னத் வல் ஜமாஅத்தின் பக்கம் வந்து சேருங்கள்! என்று அவர்களுக்கு அழைப்பு விடுக்கின்றோம்.

நீங்கள் முன்வைத்த ஹதீதுகளுக்கான விளக்கத்தை ஏற்கனவே குறிப்பிட்டுள்ளோம்.

"தீன்" என்பதன் பொதுப் பெயர் அது அகீதாவாகும். "புதியவைகளைக் கொண்டுவருவார்கள்" என்று ஹதீஸில் குறிப்பிடப்படுவதும் அகீதாவையே குறிக்கும்.

"நமது மார்க்கத்தில் இல்லாதது" என்று ஹதீஸில் குறிப்பிடப்படுவது "அமல்கள்" என்று பொருள் வைத்தால், ஸுன்னத்திற்கு எதிரான அமல்கள் அல்லது, தீனுக்கு எதிரான அமல்கள் என்பது பொருளாகும்.இதற்கான ஆதாரங்களையும் ஏலவே கூறியுள்ளோம். சகல பித்அத்துக்களும் ஹறாம். பித்அத்துல் ஹஸனா என்பது கிடையாது என்ற வாதம் பின்வரும் ஹதீஸுக்கு எதிரானதாகும்.

எவராவது ஒருவர் இஸ்லாத்தில் நல்ல காரியத்தைச்செய்தால் அவருக்கு அதற்கான நற்கூலி கிடைக்கும். எவராவது ஒருவர் தீய காரியத்தை உருவாக்கினால் அதற்கான தண்டனை அவருக்குக் கிடைக்கும்.

பித்அத்தை வாஜிப், ஹறாம், சுன்னத், மக்றூஹ், முபாஹ் என்று அஷிஃஅத்துல்லம்ஆத், ஷாமி, மிர்க்காத், உள்ளிட்ட நூற்களில் குறிப்பிடப்பட்டுள்ளதையும் ஆரம்பத்தில் குறிப்பிட்டிருக்கின்றோம். இவை சகல பித்அத்துகளும் ஹறாம் என்பதை மறுக்கின்றன.

சகல பித்அத்துக்களும் ஹறாம் என்ற கருத்தை ஏற்றுக்கொண்டால், மத்ரஸாக்களை மூடிவிடுங்கள். உங்கள் வாதப்படி அதுவும் ஹறாம்தான். ஃபிக்ஹு கலையின் சட்டப் சிக்கல்கள் அதற்கான தீர்வுகள், ஸூபியாக்களின் செயற்பாடுகள் உள்ளிட்ட எவையும் இஸ்லாத்தின் முதல் மூன்று நூற்றாண்டிலும் இருக்கவில்லை, ஆகவே, அவையும் ஹறாமாகிவிடும்.

ஹனபி, மாலிகி, ஷாபிஈ, ஹன்பலி உள்ளிட்ட ஷரீஅத்தின் நான்கு மத்ஹப் வழிகளும், காதிரி, ஜிஷ்த்தி, நக்ஷபந்தி, சுஹ்ரவர்தி ஆகிய தரீக்கத்தின் நான்கு ஸில்ஸிலாக்களும் றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வசல்லமவர்களின் காலத்திலோ, ஸஹாபாக்கள், தாபியீன்கள், தப உத்தாபியீன்கள் காலத்திலோ இருக்க வில்லை. பின்னால் வந்தவை

மேலும், இவர்களின் இஜ்திஹாத் மூலம் எடுக்கப்பட்ட சட்டங்கள், அதனால் வந்த அமல்கள், அன்றாடம் ஓதி வருகின்ற வழீபாக்கள், முறாக்கபா (உற்றுநோக்கல் தியானம்) ஸில்ஸிலா உள்ளிட்ட சகலதும் பிற்காலத்தில் வந்தவையாகும்.இவையனைத்தையும் சகலமுஸ்லிம்களும் மார்க்கம் என்று கருதியே செய்து வருகின்றனர்.

ஐந்து கலிமாக்கள், ஈமான் முஜ்மல், ஈமான் முபஸ்ஸல், திருக்குர்ஆனை முப்பது பாகங்களாக்கியவை, ஹதீஸின் வகைகள் அவற்றின் சட்டங்கள், ஸஹீஹ், ஹஸன், ழயீப், முஃழல், முதல்லஸ் என்று வகைப்படுத்தியது, அரபு மத்ரஸாக்களின் பாடத்திட்டம், பட்டமளிப்பு விழா, சான்றிதழ் வழங்குதல், தலைப்பாகை சூட்டும் விழா, உள்ளிட்டவைக்கு திருக்குர்ஆனிலோ, ஹதீதிலோ எதுவித ஆதாரமும் கிடையாது. எந்த வஹாபியும், தேவ்பந்தியும் இதற்கான ஆதாரத்தையோ, குறைந்தது இவற்றிற்கான பெயரையோ காட்ட முடியாது.!

ஹதீதுகளை அறிவிக்கின்றவர்களின் பெயர் பட்டியல், (இஸ்னாத்) அவர்கள் மீது குற்றங்காணல்

உள்ளிட்டவைக்கு முதல் மூன்று நூற்றாண்டிலிருந்தும் ஆதாரம்காட்ட முடியாது. ஷரீஅத், தரீக்கத் முதலானவற்றின் எந்தவொரு அமலும் கூட

பித்அத் தொடர்பு படாமலில்லை.

மௌலவி இஸ்மாயீல் திஹ்லவி தனது ஸிறாத்தே முஸ்தகீம் என்ற நூல் பக்கம்-7ல் கூறுகின்றார்.

தஸவ்வுபில் ஒவ்வொரு வேளைக்கும் பொருத்தமான செயற்பாடுகள், பயிற்சிகள் தனித்தனியானவையாகும். தஸவ்வுபுக்குரிய ஸூபியாக்களின் அமல்களும், அவர்களின் பயிற்சி முறைகளும் அவர்களால் உருவாக்கப்பட்டவை. ஒவ்வொரு காலத்திலும் புதிதுபுதிதாக மாறிக் கொண்டேயிருக்கும். இவை ஆகுமானதுதான். இவ்வாறுதான் ஆத்மீக வழிநடைபோடுகின்றது.

ஒவ்வொரு புதிய செயல்களும் ஹறாம் என்ற உங்களின் கோட்பாடு இப்போது எங்கே போய்விட்டது.?

ஆகவே, சுன்னத்திற்கு எதிரான பித்அத்துத்தான் தீய பித்அத்தாகும் என்ற நமது விளக்கத்தை ஏற்றுக் கொண்டுதான் ஆக வேண்டும்.

**குற்றச்சாட்டு: 2**

றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் காலத்தில் அல்லது ஸஹாபாக்கள், தாபியீன்கள், தப உத்தாபியீன்கள் காலத்தில் உண்டான புதிய செயல்கள் பித்அத்தல்ல!. சுன்னத்! இவர்களுக்குப்பின் உருவான விடயங்கள் பித்அத் அவை ஹறாமாகும்.

இதை மிஷ்க்காத்தில் "அல் இஃதிஸாம்" என்ற பாடத்தில் பின்வரும் ஹதீது உறுதிப்படுத்துகின்றது

١- فعليكم بسنتي وسنة الخلفاء الراشدين المهديين تمسكوا عليها بالنواجد

எனது சுன்னத்தையும், எனது நேர்வழி பெற்ற கலீபாக்களின் சுன்னத்தையும் கடவாய் பற்களால் பலமாக பிடித்துக் கொள்ளுவது உங்களுக்குக் கடமையாகும்.

மிஷ்க்காத்தில் "ஸஹாபாக்களின் சிறப்புக்கள்" என்ற பாடத்தில் பின்வரும் ஹதீது இடம் பெறுகின்றது.

٢-خير امتي قرني ثم الذين يلونهم ثم الذين يلونهم ثم بعد ذلك قوما يشهدون ولا يستشهدون ويخونون ولا يؤتمون

எனது உம்மத்தில் சிறந்த கூட்டத்தினர் எனது காலத்தில் வாழ்வோர். பின், அவர்களை அடுத்துவருவோர்.அடுத்து அவர்களுக்குப் பின் வருவோராகும். இவர்களுக்குப் பின் வரும் கூட்டத்தினர் சாட்சி கூறுமாறு கேட்காமலேயே சாட்சி சொல்வதற்கு சந்தர்ப்பம் தேடி அலைவார்கள். (இவர்கள்) மோசடி செய்வார்கள். நம்பிக்கையாளர்களாக இருக்க மாட்டார்கள்.

மேற்கண்ட ஹதீதின் படி, ஸஹாபாக்கள், தாபியீன்கள்; தப உத்தாபியீன்களின் மூன்று காலங்களும் சிறந்த காலங்ளாகும் என்பதை புரிந்து கொள்ள முடிகின்றது. இவர்களுக்குப் பின் வரும் காலத்தில் நன்மை, தின்மை இரண்டும் கலந்திருக்கும். இதில் நன்மையானது சுன்னத், தின்மையமானது தீய பித்அத்தாகும்.

மிஷ்க்காத் "அல் இஃதிஸாம்" என்ற பாடத்தில் பின்வரும் ஹதீது இடம் பெறுகின்றது.

٣- تفترق أمتي علي ثلاث وسبعين ملة كلهم في النار الا واحدة قالوا من هي يا رسول الله قال ما أنا عليه واصحابي

எனது உம்மத்தில் 72 கூட்டங்கள் தோன்றும். அதில் ஒரு கூட்டத்தினர் தவிர்த்து ஏனையோர் நரகம் செல்வர். சொர்க்கம் செல்லும் கூட்டம் யார்? என்று ஸஹாபாக்கள் கேட்டனர். நானும் எனது ஸஹாபாக்களும் இருக்கின்ற வழியில் இருப்பவர்கள் என்று றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்கள் கூறினார்கள்.

மேற்கண்ட ஹதீஸின் மூலம் ஸஹாபாக்களைப் பின்பற்றுவது சொர்க்கம் செல்வதற்கான வழி என்று தெரிகின்றது. ஆகவே, இவர்களால் தோற்று விக்கப்பட்டவையை பித்அத் என்று கூற முடியாது.

மிஷ்க்காத்தில் "ஸஹாபாக்களின் சிறப்புக்கள்" என்ற பாடத்தில் இந்த ஹதீது இடம் பெறுகின்றது.

٤- اصحابي كا لنجوم فايهم اقتديتم اهتديتم

எனது தோழர்கள் (றழியல்லாஹு அன்ஹும்) விண்மீன்களை யொத்தவர்கள். அவர்களில் எவரைப் பின் தொடர்ந்தாலும் நேர்வழி பெறுவீர்கள்

ஸஹாபாக்களைப் பின் தொடர்வது வெற்றிக்குரிய வழி என்பது இதன் மூலம் தெரிகின்றது. ஆகவே, இவர்களின் உருவாக்கம் பித்அத்தாகாது. ஏனெனில், பித்அத் வழிகேடாகும்.

**பதில்:**

இவர்கள் முன்வைக்கும் பித்அத்திற்கான விளக்கம் பின் வரும் காரணங்களால் சுத்தமான மோசடியாகும்.

1) பித்அத் என்பது, றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் காலத்திற்குப் பின் புதிதாக உருவானவை என்று அஷிஃஃஅத்துல் லம்ஆத், மிர்க்காத் என்ற நூற்களில் கூறப்பட்டவையை ஏற்கனவே குறிப்பிட்டுள்ளோம். இங்கு ஸஹாபாக்கள், தாபியீன்களின் பெயர்கள் குறிப்பிடப்படவில்லை.

2) ஹளறத் அமீறுல் முஃமினீன் உமர் பாரூக் றழியல்லாஹு அன்ஹு தறாவீஹ் தொழுகையை 20 ரக்அத்களாக ஜமாஅத்தாக நிரந்தமாக்க்கிய பின், نعمت البدعة هذه "இது மிக நல்ல பித்அத்" என்றார்கள். இந்த ஹதீது மிஷ்க்காத்தில் "றமழான் மாதத்தில் நின்று வணங்குதல்" என்ற பாடத்தில் பதிவாகியுள்ளது.

3) ஹளறத் உமர் பாரூக் றழியல்லாஹு அன்ஹு அவர்களே தங்களால் புதிதாக உருவாக்கப்பட்ட செயலை "அழகிய பித்அத்" என்று கூறியிருப்பது கவனிக்கத்தக்கது.ஸஹாபாக்கள் காலத்தில் தோற்றுவிக்கப்பட்டவை பித்அத் இல்லையென்றால், தறாவீஹ் தொழுகை ஜமாஅத்தாக நிரந்தரமாக்கப்பட்டதை "நல்ல பித்அத்" என்று ஏன் கூறினார்கள்.? ஹளறத் உமர் பாரூக் றழியல்லாஹு அன்ஹு தறாவீஹை ஜமாஅத்தாக்கியதை பித்அத்துன் ஹஸனா என்று குறிப்பிட்டதாக மிர்க்காத் என்ற நூலிலே குறிப்பிடப்பட்டுள்ளது.

4) புகாரி ஷரீபில் திருக்குர்ஆனின் சிறப்புக்கள் என்ற பாடத்தில் "திருக்குர்ஆனை ஒன்று திரட்டுதல்" என்ற பாடத்தில் பின்வரும் செய்தி

பதிவாகியுள்ளது. திருக்குர்ஆனை தொகுக்கும் பணியை ஹளறத் ஸைத் இப்னு தாபித் ரலியல்லாஹு அன்ஹு அவர்களிடம் ஹளறத் அபூபக்கர் ஸித்தீக் றழியல்லாஹு அன்ஹு அவர்கள் ஒப்படைத்த போது,

كيف تفعلون شيئا لم يفعله رسول الله صلي الله عليه وسلم

றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்கள் செய்யாத வேலையை எப்படி செய்வீர்கள்? என்று ஹளறத் ஸைத் இப்னு தாபித் றழியல்லாஹு அன்ஹு தொடர்ந்து கேட்டுக்கொண்டிருந்தார்கள். இதற்கு இது நல்ல காரியம் என்று ஸித்தீக்குல் அக்பர் றழியல்லாஹு அன்ஹு அவர்களும் கூறிக் கொண்டேயிருந்தார்கள்.

அதாவது, திருக்குர்ஆனை ஒன்று சேர்ப்பது பித்அத்தான காரியம் என்று ஹளறத் ஸைத் இப்னு தாபித் ரலியல்லாஹு அன்ஹு கூறினார்கள். அதனை ஏற்றுக்கொண்ட ஹளறத் ஸித்தீக்குல் அக்பர் றழியல்லாஹுஅன்ஹு இது நல்ல பித்அத். என்று சான்று பகன்றார்கள்.

ஸஹாபாக்களின் செயல் பித்அத்துல் ஹஸனா வைச்சேர்ந்தது என்பது இதன்மூலம் புரிந்து கொள்ள முடிகின்றது. தொடர்ந்து மறுப்பார்கள் முன் வைத்த ஹதீதுகளுக்கான விளக்கத்தைப் பார்க்கலாம்.

١- فعليكم بسنتي  وسنة الخلفاء الراشدين

எனது சுன்னத்தையும், குலபாஉர் ராஷிதீன்களின் சுன்னத்தையும் பின்பற்றுவது உங்களுக்குக் கடமை! என்பதில் வரும் "சுன்னத்" என்பது அகராதிப் பொருளில் கூறப்பட்டுள்ளது.

அதாவது, முஸ்லிம்களே! என்னுடையதும், எனது கலீபாக்களுடையதும் வழி(தரீக்காக்)களை எடுத்துக் கொள்ளுங்கள்!. இதற்கான ஹதீதாரங்களை முதல் அத்தியாயத்தில் முன்வைத்துள்ளோம்.

٢- من سن في الاسلام سنة حسنة فله اجرها من سن سنة سيئة فله وزرها

இஸ்லாத்தில் அழகிய ஒரு சுன்னத்தை ஒருவர் உருவாக்கினால், அதற்கான கூலி அவருக்குக் கிடைக்கும். எவராவது ஒருவர் ஒரு தின்மையை உருவாக்கினால் அதன் பாவம் அவரைச் சாரும்...

இந்த ஹதீதிலும் வரும் "சுன்னத்" என்பது அகராதிப் பொருளான "தரீக்கா வழி" என்ற பொருளில்தான் கூறப்பட்டுள்ளது.

திருக்குர்ஆன் கூறுகின்றது.

سنة من قد ارسلنا قبلك من رسلنا ولن تجد لسنتنا تحويلا

மேலும் கூறுகின்றது

سنة الله التي قد خلت

மேற்கண்ட திரு வசனங்களிலும் ஹதீதுகளிலும் கூறப்படும் "சுன்னத்" என்பது பித்அத்திற்கு எதிரில்லாத சுன்னத்துஷ்ஷறஇய்யாவாகும்.

சுன்னத்துள்ளாஹ் என்றால், அல்லாஹ்வின் வழிமுறை ,சுன்னத்துல் அன்பியா என்றால் நபிமார்களின் வழிமுறை فعليكم بسنتي என்ற ஹதீதின் விளக்கத்தில் அஷிஃஅத்துல் லம்ஆத்தில் பின்வரு மாறு எழுதுகின்றார்கள்.

குலபாஉர் ராஷிதீன்களின் சுன்னத் என்பது, எதார்த்தத்தில் றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்ல மவர்களின் காலத்தில் பிரபல்யமாகாமல் இவர்களின் காலத்தில் பிரபலமான சுன்னத்துன் நபவிய்யாவாகும்.

இந்த சுன்னத்கள் குலபாஉர்ராஷிதீன்களின் காலத்தில் வெளியானதால் அவர்கள் பெயரால் அழைக்கப்படுவதாயினும் அடிப்படையில் இது றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹுஅலைஹி வஸல்லமவர்களின் சுன்னத்தாகும். பின்னால் இதை நடைமுறைப் படுத்தியவர்கள் கலீபாக்களின் சுன்னத் என்று குறிப்பிட்டுள்ளனர்.

கலீபாக்களின் செயல் எதார்த்தத்தில் சுன்னத் கிடையாது! சுன்னத் தோடு இணைக்கப்பட்டுள்ளதாக முஹத்திதீன்களும், புகஹாக்களும் கூறுகின்றனர்.

கலீபாக்களால் உருவாக்கப்பட்டவை உண்மையில் சுன்னத்தாக இருந்திருந்தால், சுன்னத்தோடு சேர்க்கப்பட்டது என்று கூறுவதின் பொருள் என்ன ?

நூறுல் அன்வார் என்ற உஸூல் நூலின் விரிவுரையில் பின்வருமாறு எழுதப்பட்டுள்ளது.

وقول الصحابي فيما يعقل ملحق بالقياس وفيما لا يعقل فملحق بالسنة

ஸஹாபாக்களின் அறிவார்ந்த செய்திகள் கியாஸோடு சேர்க்கப் பட்டுள்ளன. அறிவார்ந்தவையோடு சேர்க்கப்படாதவை சுன்னத்தோடு சேர்க்கப்பட்டன.

ஸஹாபாக்களின் ஒவ்வொரு சொற்களும், செயல்களும் சுன்னத்தாக

இருந்திருந்தால் "கியாஸ்" என்பதற்கும், சுன்னத் தோடு சேர்க்கப்பட்டது என்பதற்கும் என்ன பொருள்?

فعليكم بسنتي என்ற ஹதீதின் அடியில் அஷிஃஃஅத்துல் லம்ஆத் என்ற நூலில் பின்வருமாறு பதியப்பட்டுள்ளது.

"குலபாஉர் ராஷிதீன்கள் தங்களின் இஜ்திஹாத், மற்றும் கியாஸ் மூலமாகக் கூறிய தீர்ப்புக்கள் நபிகள் நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் சுன்னத்திற்கு நேர்பட்டிருக்குமாயின், அதை "பித்அத்" என்ற வார்த்தையால் கூறப்படமாட்டாது.

மேற்கண்ட ஆதாரங்களின் படி, குலபாஉர்ராஷிதீன்களின் சுன்னத் என்பது அகராதிப் பொருளான தரீக்கா, (வழிமுறை) என்ற பொருள் கொண்ட சொல்லாகும் என்பது இப்போது தெளிவாகிவிட்டது.

கலீபாக்களின் வழிமுறையை சுன்னத்துஷ் ஷர இய்யாவோடு இணைக்கப் பட்டுள்ளது. பொதுவாக கெட்ட பித்அத்தையே பித்அத் எனக்கூறப்படுவதால் கலீபாக்களின் உருவாக்கத்தை பித்அத் என்று கூறப்படமாட்டாது . خير القرون قرني காலத்தில் சிறந்தது எனது காலம் என்ற ஹதீதில் குறிப் பிடப்பட்டுள்ளதின் கருத்து,

இம்மூன்று நூற்றாண்டிலும். நன்மைகள் அதிகம் காணப்படும். இதன்பின் நன்மைகள் குறைந்து தின்மைகள் அதிகரித்துக் காணப்படும்.தவிர, இம்மூன்று நூற்றாண்டிலும் தோற்றுவிக்கப்படுபவை யாவும் சுன்னத்தாகிவிடும் என்பது கருத்தல்ல!, இக்காலத்தில் தோன்றியவையிலும் சுன்னத் என்று எங்கே கூறப்பட்டுள்ளது?

ஜப்றிய்யா, கத்ரியாயா, (முஃஃதஸிலா) உள்ளிட்ட வழிகெட்ட மத்ஹபுகள் யாவும் தாபியீன்கள் காலத்தில் தோன்றியவையாகும்.

ஹளறத் ஹுஸைன் றழியல்லாஹு அன்ஹு அவர்களின் படுகொலையும், ஹஜ்ஜாஜின் அட்டூழியங்களும் இந்தக் காலத்தில்தான் அரங்கேறின. ம ஆதல்லாஹ்! இவற்றையும் சுன்னத் என்று கூற முடியுமா?

اصحابي كالنجوم - 3&4

ما أنا عليه اصحابي

3-4- "எனது தோழர்கள் விண்மீனையொத்தவர்கள்."

"நானும், எனது தோழர்களும் இருக்கும் வழியில் இருப்பவர்கள்"

ஆகிய இரு ஹதீதுகளின் மூலம், நேர்வழிக்கான மார்க்கம் என்பது சங்கையான ஸஹாபாக்களை அடியொற்றி நடப்பதைக் குறிக்கும் என்பது தெளிவாகிவிட்டது என்பதும், இவர்களுக்கெதிரானவை வழிகேடான மார்க்கம் என்பதும் முற்றிலும் உண்மை! சகல முஸ்லிம்களின் ஈமானும் இதுதான்.

ஆகவே, ஸஹாபாக்களின் ஒவ்வொரு செயலும் சுன்னத்துஸ் ஷர இய்யா என்று எங்கே கூறப்பட்டுள்ளது? பித்அத்துல் ஹஸனாவில் சிலவற்றைப் பின்பற்றுவது வாஜிபாக உள்ளது என்பது ஈண்டு கவனிக்கத்தக்கது.

மிஷ்க்காத்தில் "அல்இஃதிஸாம்" என்ற பாடத்தில் பின்வரும் ஹதீது இடம் பெறுகின்றது.

اتبعوا السواد الاعظم فإنه من شذ شذ في النار

பெரும் கூட்டத்தைப் பின்பற்றுங்கள். ஜமாஅத்தை விட்டும் தூரமாகி தனித்து செல்பவர் நரகத்திலும் தனித்து விடப்படுவார்.

ما رآه المسلمون حسنا فهو عند الله حسن ومن فارق الجماعة شبرا خلع ربقة الاسلام عن عنقه

முஸ்லிம்கள் நல்லதாகக் காண்பவை அல்லாஹ்விடத்திலும் நல்லவை தான். எவராவது ஒருவர் முஸ்லிம் ஜமாஅத்தை விட்டும் ஒரு "சாண்" அளவு பிரிந்து சென்றால் அவன் இஸ்லாத்தின் கயிற்றை தனது கழுத்திலிருந்து அகற்றி விட்டான்.

திருக்குர்ஆன் கூறுகின்றது.

وَ يتبع غَيْرَ سَبِيْلِ الْمُؤْمِنِيْنَ نُوَلِّهٖ مَا تَوَلّٰى وَنُصْلِهٖ جَهَنَّمَ وَسَآءَتْ مَصِيْرًا

***இன்னும்,எவன் முஃமின்கள் வழியல்லாததைப் பின்பற்றுகிறாரோ அவனை அவன் திரும்பிய (தவறான) வழியிலேயே நாம் திருப்பி விடுவோம். மேலும், நரகத்தில் அவனைப் புகச் செய்வோம். அதுவோ அவன் சென்றடையும் இடத்தில் மிகக் கெட்டது.***

*அல் குர்ஆன்: (04:115).*

மேற்கண்ட திருவசனங்கள், ஹதீதுகள் மூலம் பின்வரும் விடயங்களைப் புரிந்து கொள்கின்றோம்.

ஒவ்வொரு மனிதனும் அகீதாக்களிலும், அமல்களிலும் முஸ்லிம் ஜமாஅத்தோடு இருக்க வேண்டும்.இதற்கு மாறு செய்வது நரகத்தின் வழியாகும். இதன் காரணத்தினால் முஸ்லிம்களால் புதிதாக உருவாக்கப்படும் எந்தவொரு செயலும் பித்அத்தாகாது.

சஹாபாக்களில் உருவாக்கப்பட்ட பித்அத்துன் ஹஸனாவை சுன்னத் என்பது போன்று முஸ்லிம் சமூகம் உருவாக்கிய நல்ல செயலை பித்அத்துன் ஹஸனா என்று கூறப்படும். இவ்வாறே ஸலபுகளான முன்னோர்களின் உருவாக்கங்களையும் முன்னோர்களின் சுன்னத்துக்கள் எனப்படும்.. அதாவது, அகராதிப் பொருளில் நல்ல நடைமுறை எனப்படும்.

முக்கிய வழிகாட்டடல்:

ஒவ்வொரு புதியவைகாளான பித்அத்தும் ஹறாம்.! என்று கூறுவோர்

الاصل في الأشياء الاباحة

அடிப்படையில் சகல வஸ்த்துக்களின் சட்டம் ஹலால்!

என்ற பொது சூத்திரத்தைப் பற்றி என்ன கூறப்போகின்றனர்.? ஷரீஅத் ஒன்றைத் தடுத்திருந்தால் அது ஹறாம். அல்லது செய்வதற்குத் தடை!

ஒருதடையால் ஹறாம் என்ற சட்டம் வரலாம். தவிர, புதியவை என்பதனால் அல்ல! இந்த பொதுச் சட்டம் திருக்குர்ஆன், ஹதீதுகள்;, சட்ட அறிஞர்களான புகஹாக்கள் .உள்ளிட்டோரின் கூற்றுக்களால் நிரூபணமாகியுள்ளது. "முகல்லிது" என்று கூறும் எவரும் இதை மறுக்க முடியாது.!

திருக்குர்ஆன் கூறுகின்றது

يٰاَيُّهَا الَّذِيْنَ اٰمَنُوْا لَا تَسْئلواعَنْ اَشْيَآءَ اِنْ تُبْدَ لَكُمْ تَسُؤْكُمْ وَاِنْ تَسْئلوا عنها حِيْنَ يُنَزَّلُ الْقُرْاٰنُ تُبْدَ لَكُمْ عَفَا اللّٰهُ عَنْهَ

***முஃமின்களே! சில விஷயங்கள் குறித்து கேட்காதீர்கள்.!***

***அவை வெளிப்படுத்தப் பட்டால், உங்களுக்குத் தீங்கைத் தரும். திருக்குர்ஆன் இறக்கியருளப்படும் சமயத்தில் அவர்களைப்பற்றி நீங்கள் வினவுவீர்களாயின் அவை உங்களுக்கு வெளிப்படுத்தப்படும். (வீணாகக் கேட்டுக் கொண்டிருந்த) அதனை விட்டும் அல்லாஹ் மன்னித்து விட்டான்.***

*அல் குர்ஆன் (05:101).*

எது பற்றி ஹறாம் என்றோ, ஹலால் என்றோ கூறப்படாதவையனைத்தும் மன்னிக்கப்பட்டவை என்பதை இத்திருவசனத்தின் மூலம் தெரிந்து கொள்ள முடிகின்றது.

இதன் காரணமாகவே திருமணம் முடிப்பதற்கு ஹறாமான பெண்களைப் பற்றிக் கூறிய பின், واحل لكم ما وراء ذلكم "அவர்களைத் தவிர ஏனையோர் உங்களுக்கு ஹலாலாகும்" என்று திருமறையில் அல்லாஹுத்த ஆலா குறிப்பிடுகின்றான்.

மேலும் கூறுகின்றான்.

وَقَدْ فَصَّلَ لَكُم مَّا حَرَّمَ عَلَيْكُمْ

***எதை உங்களின் மீது தடுத்துள்ளானோ அதை அவன் உங்களுக்கு விவரித்துக்காட்டியுள்ளான்.***

*அல் குர்ஆன்: (06:119).*

ஹலால் பொருட்களுக்கான சான்றிதழ் அவசியமல்ல! அனுபவ ரீதியாக கூடாது என்று விலக்கப்பட்டால் தவிர அடிப்படையில் அனைத்தும் ஹலால் தான்.

மிஷ்க்காத்தில் "அல் அத்யிமா" என்ற பாடத்தில் "உண்பதின் ஒழுக்கம்" என்ற பகுதியில் பின்வரும் ஹதீது இடம்பெறுகின்றது.

الحلال ما احل الله في كتابه والحرام ما حرم الله في كتابه وما سكت عنه مما عفي عنه

ஹலால் என்பது அல்லாஹுத்தஆலா அவனுடைய வேதத்தில் ஹலாலாக்கியது. ஹறாம் என்பது அல்லாஹுத்தஆலா அவனுடைய வேதத்தில் ஹறாமாக்கியது. ஒன்றைப்பற்றி (ஹலால், ஹறாம் என்று கூறாமல்) மௌனமானவிடப்பட்டது மன்னிக்கப்பட்டதில் உள்ளது.

மேற்கண்ட ஹதீதிலிருந்து பின்வரும் விடயங்கள் தெரிய வருகின்றன.

பொருட்கள் மூன்று வகைப்படும்.

1) திருக்குர்ஆனில் தெளிவாகக் கூறப்பட்ட ஹலால்.

2) ஹறாம் என்று தெளிவாக்கப்பட்டது.

3) எதுவும் பேசப்படாமல் மௌனமாக விடப்பட்டவை. அது ஹலால்.

ரத்துல் முக்தார் (ஷாமி) பாகம்: 1 சுத்தம் பற்றிய பாடத்தில் சுன்னத் பற்றிய ஆய்வில் பின்வருமாறு எழுதுகின்றார்கள்.

المختار أن الاصل الاباحة عند الجمهور من الحنفية والشافعية

ஹனபி, ஷாபி மத்ஹபுகளில் உள்ள பெரும்பான்மையான அறிஞர் களிடத்தில் "ஒன்றின் அடிப்படைச் சட்டம் ஆகுமானதாகும்.!"

ஒன்றின் அடிப்படைச் சட்டம் ஆகும் என்பதுதான். ஆகாது என்ற சட்டம் (கூடாது என்ற) தடைகளின் மூலமே வரும். இவ்வாறு தப்ஸீர் காஸின், றூஹுல் பயான்; தப்ஸீர் கஸாயினுல் இர்ஃபான் உள்ளிட்ட நூற்களிலும் கூறப்பட்டுள்ளன.

மீலாத் ஷரீப் கொண்டாடுவது ஆகும் என்பதற்கு எங்கே ஆதாரம் இருக்கின்றது?

றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்,ஸஹாபாக்கள்; தாபியீன்கள்; தப உத்தாபியீன்கள் எப்போது மீலாத் ஷரீப் கொண்டாடினார்கள்?

என்று அஹ்லுஸ் ஸுன்னத் வல்ஜமா அத்தினர்களிடம் சிலர் கேட்கின்றனர். இந்தக் கேள்வி அப்பட்டமான மோசடியாகும்.

இவ்வாறு கேட்கின்றவர்களைப் பார்த்து, "மீலாத் ஷரீப் கொண்டாடுவது ஹறாம் என்று எங்கே கூறப்பட்டுள்ளது? என்று கேட்க வேண்டும்.

மீலாத் ஷரீப் கொண்டாடுவது ஹறாம் என்று அல்லாஹுத்த ஆலா கூறவில்லை. றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் தடுக்கவில்லை. எந்த வொரு ஆதாரத்தாலும் கூடாது என்று நிரூபிக்கப் படவில்லை இந்நிலையில் எந்த ஆதாரத்தின் படி ஹறாம் என்கின்றீர்கள்?

மீலாத் ஷரீப் கொண்டாடுவது கூடாது என்பதற்கு தக்க ஆதாரம் காட்ட முடியாமலிருப்பதுதான் மீலாத் ஷரீப் ஆகும் என்பதற்கான தக்க ஆதாரமாகும்.

அல்லாஹுத்த ஆலா கூறுகின்றான்.

قُل لَّآ اَجِدُ فِىْ مَآ اُوْحِىَ اِلَىَّ مُحَرَّمًا عَلٰى طَاعِمٍ يَّطْعَمُهٗٓ اِلَّآ اَنْ يَّكُوْنَ مَيْتَةً اَوْ دَمًا مَّسْفُوْحًا اَوْ لَحْمَ خِنْزِيْرٍ فَاِنَّهٗ رِجْسٌ اَوْ فِسْقًا اُهِلَّ لِغَيْرِ اللّٰهِ بِهٖ‌ۚ

***(நபியே!) நீர் கூறுவீராக! தானாகச் செத்தவை அல்லது ஓடும் இரத்தம், அல்லது பன்றியின் மாமிசம் இவைகளைத்தவிர (வேறு எவையும்) உண்பவருக்கு அதை உண்பதற்கும் தடை செய்யப்பட்டதாக எனக்கு வஹி மூலம் அறிவிக்கப்பட்ட வற்றில் காணவில்லை. ஏனெனில், அவை அசுத்தமானதாகும். அல்லது அதை அல்லாஹ் அல்லாதவரின் பெயர் கூறப்பட்டு (அறுக்கப்பட்டு)ள்ளபாவமானதாகும்.***

*அல் குர்ஆன் (05: 145).*

மேலும் கூறுகின்றான்.

قُلْ مَنْ حَرَّمَ زِيْنَةَ اللّٰهِ الَّتِىْٓ اَخْرَجَ لِعِبَادِهٖ وَالطَّيِّبٰتِ مِنَ الرِّزْقِ‌ؕ

***(நபியே!) அல்லாஹ் தனது அடியார்களுக்கு வெளிப்படுத்தியிருக்கும், (சகலவித) அலங்காரத்தையும் உணவில் தூய்மையானதையும் (தடுக்கப்பட்டது எனக் கூறி) தடை செய்தவர் யார்? எனக் கேட்பீராக!***

*அல் குர்ஆன் (07:32).*

மேற்கண்ட இரு திரு வசனத்திலிருந்தும் தெரிய வருவது யாதெனில், "ஒரு பொருள் பற்றி ஹறாம் என்பதற்கான ஆதாரம் கிடைக்கா விட்டால், அப்பொருள் ஹலாலே தவிர ஹறாம் அல்ல! கண்மூடித்தனமாக இவைகளை ஹறாம் என்று சட்டத்தை தலைகீழாக்கிக் கூறுவது ஆச்சரியமான தர்க்கமாக இருக்கின்றது.

புகையிரதத்தில் பயணம் செய்வதும், மதரஸாகளை நிறுவுவதற்கும் ஷரீஅத்தில் எங்கே ஆதாரம் இருக்கின்றது? என்று முடிந்தால் கூறுங்களேன் பார்க்கலாம்?. இச்செயல் ஹலாலா எந்த ஸஹாபி, எந்த தாபிஈ தாபஉதாபியீன்கள் செய்திருக்கின்றார்கள்? நீங்கள் செய்யும் வேலை ஹலால் என்றால் நாங்கள் செய்வதும் ஹலால் தான்.

# ஆய்வு-9
# மீலாத் ஷரீப் விழாக்கள் ஓர் ஆய்வு!

இந்த ஆய்வில் இரு அத்தியாயங்கள் உள்ளன.

1) மீலாத் விழாக்களுக்கான ஆதாரங்கள்.

2) குற்றச்சாட்டுக்களும் பதில்களும்.

# அத்தியாயம்: 1

முதலில் மீலாத்விழாவின் எதார்த்தம் என்ன? அதற்கான சட்டம் யாது? என்பதை அறிந்து கொண்ட பின்புதான் மீலாத் விழாவுக்கான ஆதாரங்கள் யாவை? என்பதை அறிந்து கொள்வது அவசியமாகும்.

மீலாத் ஷரீபின் எதார்த்தம்!

1) றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் பிறப்பின் போது நிகழ்ந்த அற்புத நிகழ்வுகளை விளக்கிக்கூறுவது.

2) தாயின் வயிற்றில் கற்பமாக இருந்தவையை கூறுவது.

3) நூறே முஹம்மதிய்யாவின் அற்புதங்களை எடுத்துக் கூறுவது.

4) குடும்ப பரம்பரை, குழந்தைப்பருவம்; ஹளறத் ஹலீமா நாயகியின் (றழியல்லாஹு அன்ஹா) அரவணைப்பில் இருந்த போது நிகழ்ந்த அற்புத நிகழ்வுகளைக் கூறுவது.

இவற்றைக் கவிதையாகவோ, உரையாகவோ வசனங்களாகவோ கூறுவது. இவற்றை தனியாகவோ, கூட்டமாகவோ; கவிதையாகவோ; உரையாகவோ; இருந்து கொண்டோ; நின்று கொண்டோ எவ்வாறு செய்தாலும் அதனை மீலாத் விழா என்றே கூறப்படும்.

மீலாத் விழாவை ஏற்பாடு செய்வதும், அதைப்பற்றிய மகிழ்ச்சியை வெளிப்படுத்துவதும்; பெருமானாரின் திருப்புகழ் கூறும் போது வாசனைத் திரவியங்களைப் பூசுவதும் மலர் தூவுவதும் இனிப்புக்கள் பங்கிடுவதும் குறிப்பாக மகிழ்ச்சியை வெளிப்படுத்தும் ஆகுமான சகல காரியங்களும் சுன்னத்தானவையாகும். இவை அதிகளவில் பறக்கத்தையும், அல்லாஹ்வின் பேரருளையும் ஈட்டித்தருவதற்குக் காரணமான வையுமாகும்.

ஹளறத் நபி ஈஸா அலைஹிஸ்ஸலாம் இவ்வாறு துஆக்கேட்டார்கள்.

قَالَ عِيْسَى ابْنُ مَرْيَمَ اللّٰهُمَّ رَبَّنَآ اَنْزِلْ عَلَيْنَا مَآئدة مِّنَ السَّمَآءِ تَكُوْنُ لَنا عِيْدًا لِّاَوَّلِنَا وَاٰخِرِنَا وَاٰيَةً مِّنْكَ

*(அப்பொழுது) மர்யமுடைய மகன் ஈஸா, (தம்முடைய ரப்பிடம்)*

***இரட்சகா! வானத்திலிருந்து உணவுத் தட்டை எங்களுக்கு இறக்கி வைப்பாயாக! எங்களுக்கும், எங்கள் முன்னோருக்கும், எங்களுக்குப் பின் வருபவர்களுக்கும் பெருநாளாகவும், என்னிலிருந்து ஓர் அத்தாட்சியாகவும் அது ஆகிவிடும்.***

*அல் குர்ஆன் (05: 114).*

நஸாறாக்கள் ஞாயிற்றுக்கிழமை அன்று உணவுத்தட்டு இறங்கியதால் தான் இன்று வரை அந்த நாளை பெருநாளாக கொண்டாடி வருகின்றனர்.

றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்ல மவர்களின் சிறப்பான வருகை இந்த உணவுத்தட்டு இறங்கியதை விட எத்தனையோ மடங்கு பேரருளாகும். ஆகவே நபிகள் நாதர் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லமவர்களின் பிறந்த தினமும் கொண்டாட்ட நாள் தான்.

இப்புனித நாளில் ஹறாமான செயல்களைச் செய்வது கடுமையான குற்றமும் பாவமுமாகும். அந்நிய பெண்கள் அந்நிய ஆண்கள் கேட்கத்தக்க விதத்தில் சத்தமிட்டு பெருமானார் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் திருப்புகழைப்பாடுவது கடுமையான குற்றமாகும். பெண்ணின் சப்தத்தை அந்நிய ஆண் கேட்பது ஆகாது.

தொழுகையில் எவராவது ஒருவர் முன்னால் வெளியாவதைத் தடுப்பதாயின் சுப்ஹானல்லாஹ்!, என்று கூறவேண்டும். ஆனால், பெண்கள் எவரையாவது தடுப்பதாயின், சுப்ஹானல்லாஹ் என்று கூறக்கூடாது. மாறாக இடது கையின் மேல் வலது கையின் உட்பாகத்தால் தட்டி ஓசை எழுப்ப வேண்டும். தொழுகையில் நிர்பந்த அவசியமான நேரத்தில் கூட ஒரு பெண் தனது குரலை எவருக்கும் வெளிப்படுத்தக் கூடாது என்பதை இதன் மூலம் புரிந்து கொள்கின்றோம்.

இவ்வாறே மீலாத் விழாக்களில் பெண்கள் கீதம் இசைப்பது மிகப்பெரிய குற்றமாகும். இப்படியான கச்சேரிகள் வீண்விளையாட்டைச் சேர்ந்தாகவே கணிக்கப்படும். இவ்வாறான விளையாட்டுக்கள் ஹறாமான செயலாகும்.

றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் புனித புகழ்பாடுவது இபாதத்! அதில் இசைக் கருவிகளைப் பாவிப்பதும் குற்றமாகும். எங்காவது மீலாத் விழாக்களில் இப்படியான அநாச்சாரங்கள் நடக்குமாயின், அந்த அனாச்சாரங்களை அகற்ற வேண்டுமே தவிர, அடிப்படை மீலாத் ஷரீபை நீக்கக்கூடாது.

பெண்கள் அதிக சப்தத்துடன் திருக்குர்ஆனை ஓதினால், அதாவது

திருக்குர்ஆனை இசைக்கருவியோடு ஓதினால் அந்த அனாச்சாரத்தைத் தடுக்க வேண்டுமே தவிர, திருக்குர்ஆன் ஓதுவதைத் தடுக்கக்கூடாது. காரணம் திருக்குர்ஆன் ஓதுவது இபாதத் ஆகும்.

மீலாத் ஷரீப் திருக்குர்ஆன், ஹதீதுகள், அறிஞர்களின் கூற்றுக்கள், மலக்குகள், நபிமார்களின் செயல்கள் மூலம் நிரூபணமாகியுள்ளது.

திருக்குர்ஆன் கூறுகின்றது.

وَّاذْكُرُوْا نِعْمَتَ اللّٰهِ عَلَيْكُمْ

***1) உங்கள் மீது அல்லாஹ் அருளிய அருட்கொடைகளை நினைவு கூருங்கள்.***

*அல் குர்ஆன்: (02:231).*

றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் வருகை அல்லாஹ்வின் மிகப் பெரிய அருளாகும். மீலாத் விழாவில் அது பற்றியேதான் கூறப்படுகின்றது. ஆகவே மீலாத் விழா இந்த திருவசனத் தினடிப்படையில் செய்யப்படும் அமலாகும்.

وَاَمَّا بِنِعْمَةِ رَبِّكَ فَحَدِّثْ

***2) உமது இரட்சகனின் அருட்கொடையை பிறருக்கு எடுத்துக் கூறுவீராக!.***

*அல் குர்ஆன்: (93:11).*

றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்கள் இந்த உலகத்திற்கு வருகை தந்தது சகல அருட்கொடைகளையும் மிகைத்த அருட்கொடையாகும். அல்லாஹுத்தஆலா இதில் எமக்கு மிகப் பெரிய உபகாரம் செய்திருக்கின்றான்.. அந்த உபகாரத்தை மக்களுக்கு எடுத்துச் சொல்வது இந்த திருவசனத்தின் படிசெய்கின்ற அமலாகும்.

இப்பொழுதெல்லாம் பிள்ளை பிறந்த நாளை ஒவ்வொரு வருடமும் கொண்டாடுகின்றனர். ஆட்சி அதிகாரம் சுதந்திரம் கிடைத்த நாளை வருடா வருடம் அதே நாளில் கொண்டாடுகின்றனர். அப்படியாயின், அல்லாஹ்வின் பேரருள் இறங்கிய நாளை ஏன் கொண்டாடக்கூடாது.? ஏன் அதற்குத் தடை?

திருக்குர்ஆனே பல இடங்களில் நபிகள் நாயகம்ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் மீலாதைப்பற்றிக் கூறுகின்றது.

அல்லாஹுத்தாஆலா கூறுகின்றான்.

لَقد جَآءَكُمْ رَسُوْلٌ مِّنْ اَنْفُسِكُمْ عَزِيْزٌ عَلَيْهِ مَا عَنِتُّمْ حَرِيْصٌ عَلَيْكُمْ بِالْمُؤْمِنِيْنَ رَءُوْفٌ رَّحِيْمٌ

***(மனிதர்களே!) உங்களிலிருந்தே ஒரு ரஸூல் உங்களிடம் திட்டமாக வந்து விட்டார்; நீங்கள் வருத்தப் படுவது அவருக்குக் கஷ்டமாக இருக்கும்; (நீங்கள் நேர்வழி பெற்று நன்மையடைய வேண்டுமென்று) உங்களின் மீது பேராசை கொண்டவர்; (அன்றியும்) முஃமின்களின் மீது அன்பும், கிருபையும் உள்ளவர்.***

*அல் குர்ஆன்: (9:128).*

மேற்கண்ட திரு வசனத்தில் பெருமானாரின் பிறப்புச் செய்தி உள்ளது. "உங்களிலிருந்து" என்பதில் அன்னாரின் குடும்ப பரம்பரை கூறப்பட்டுள்ளது. அவர் உங்களில் மிகச்சிறந்த கூட்டத்தைச்சேர்ந்தவர். "உங்கள் மீது பேராசை கொண்டவர் என்பதிலிருந்து திருவசனத்தின் இறுதிவரையிலான பகுதி பெருமானாரின் பண்புகளைக் கூறுகின்றது.

இப்பொழுது மீலாத் விழாக்களில் இந்த மூன்று விடயங்கள் தான் கூறப்படுகின்றன.

لَقَدْ مَنَّ اللّٰهُ عَلَى الْمُؤْمِنِيْنَ اِذْ بَعَثَ فِيْهِمْ رَسُوْلاً

***3) முஃமின்களின் மீது அவர்களிலிருந்தே ஒரு ரஸூலை அவர்கள் மத்தியில் அனுப்பிய நேரத்தில் அல்லாஹ் திட்டமாக அருள் புரிந்து விட்டான்.***

*அல் குர்ஆன்: (3:164).*

هُوَ الَّذِىْ اَرْسَلَ رَسُوْلَهٗ بِالْهُدٰى وَدِيْنِ الْحَقِّ

*4)அவன் எத்தகையவன் என்றால் தன்னுடைய ரஸூலை நேர்வழியைக் கொண்டும், சத்திய சன்மார்க்கத்தைக் கொண்டும் அனுப்பி வைத்தான்.*

*அல் குர்ஆன்: (48:28).*

றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் பிறப்புச் செய்திகளைக் கூறுகின்ற திருவசனங்கள் திருக்குர்ஆனில் ஏராளமாக இருக்கின்றன. இதன்படி மீலாதைப்பற்றிக் கூறுவது சுன்னத்தே இலாஹிய்யாவாகும் என்று விளங்க முடிகின்றது.

தொழுகையில் இமாம் இதே திருவசனத்தை ஓதுவாராயின், தொழுகையின் நடுவிலும் எமது மாமன்னரின் மீலாத் நிகழ்வு நினைவு கூறப்படுகின்றது. பாருங்கள்! இமாமுக்குப் பின்னால் ஒரு கூட்டம் இருக்கின்றது. அங்கே நின்று கொண்டுமிருக்கின்றனர். மீலாதைப் பற்றிய செய்தியும் நினைவு கூறப்படுகிறது.

கலிமா தைய்யிபாவிலும் "முஹம்மத் அல்லாஹ்வின் ரஸூல்"! என்று கூறுவதன் மூலம் மீலாத் இருக்கின்றது. றஸூல் என்றால் அனுப்பப்பட்டவர் என்று பொருள். அனுப்பப்படுவதற்கு வருகைதருவது (பிறப்பது), கடமையாகும். றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் மீலாதின் அடிப்படையாகிய அன்னாரின் வருகை பற்றிய விளக்கம் கிடைத்து விட்டது.

திருக்குர்ஆன் முந்திய நபிமார்களின் மீலாதையும் கூட விளக்கிக் கூறுகின்றது.

மர்யம் என்ற அத்தியாயத்தில் ஹளறத் பீவி மர்யம் அலைஹஸ்ஸலாம் அவர்கள் கருத்தரித்தது, ஹளறத் ஈஸா அலைஹிஸ்ஸலாம் பிறந்தது, ஹளறத் மர்யம் அலைஹஸ்ஸலாம் பிரசவ வேதனைப்பட்டதும் அப்போது

قَالَتْ يٰلَيْتَنِىْ مِتُّ قَبْلَ هٰذَا وَكُنْتُ نَسْيًا مَّنْسِيًّا

***"இதற்கு முன்னதாகவே நான் இறந்து போய் (மக்களால்) முற்றிலும் மறக்கப்பட்டவளாக நான் ஆகி இருக்க வேண்டுமே! "***

*அல் குர்ஆன் (19:23).*

என்று கூறிய வார்த்தை பின்னர் மலக்குகள் அவர்களுக்குக் கூறிய ஆறுதல் அந்த நேரத்தில் சாப்பிட்ட ஆகாரம், பின்னர் ஹளறத்

ஈஸா அலைஹிஸ்ஸலாம் சமுகத்திற்கு முன்னால் பேசியது உள்ளிட்ட சகலதையும் விளக்கிக் கூறுகின்றது. இதைத்தான் மீலாத் மௌலிதுகளிலும் ஓதப்படுகின்றன.

அன்னை ஹளறத் அமீனா நாயகி றழியல்லாஹு அன்ஹா பெருமானாரின் ஜனன தினத்தன்று இன்னின்ன அற்புதங்களைக் கண்டார்கள். பிரசவ நேரத்தில் சொர்க்கத்து ஹுருல்ஈன்மாதர்கள் உதவிக்கு வந்தார்கள். கஃபத்துள்ளாஹ் ஆமீனா நாயகியின் (றழியல்லாஹு அன்ஹா) வீட்டுக்கு சஜதா செய்தது உள்ளிட்ட இதுபோன்ற விடயங்களைத் தான் மௌலிது, மீலாதில் கூறப்படுகின்றன. இவை திருக்குர்ஆன் கூறுகின்ற சுன்னத்தாகும்.

இவ்வாறுதான் திருக்குர்ஆன் நபி மூஸா அலைஹிஸ்ஸலாம் அவர்களின் பிறப்பு, அவர்களுக்குப் பாலூட்டப்பட்டவிதம், வளர்ப்பு, ஆடு மேய்த்தல், அவர்களின் திருமணம் அவர்களுக்கு நபித்துவம் கிடைத்தல் உள்ளிட்ட சகலதையும் கூறுகின்றது. இந்த செய்திகளைத் தான் மீலாதிலும் கூறப்படுகின்றன. மதாரிஜுன் நுபுவ்வத் உள்ளிட்ட நூற்கள் இவ்வாறு கூறுகின்றன.

சகல நபிமார்களும் தங்களின் உம்மத்தினருக்கு றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லமவர்களின் வருகையைப் பற்றிய தகவலைக் கூறிக்கொண்டிருந்தனர். ஹளறத் ஈஸா அலைஹிஸ்ஸலாம் கூறிய தகவலை திருக்குர்ஆன் இவ்வாறு இயம்புகின்றது.

وَمُبَشِّرًا بِرَسُوْلٍ يَّأْتِيْ مِنْۢ بَعْدِى اسْمُهٗٓ اَحْمَدُ

***பின்னால் வரப்போகின்ற ரஸூலைப் பற்றி அவருடைய பெயர் அஹ்மத் நற்செய்தி சொல்கிறவராகவும் இருக்கின்றேன்.***

*அல் குர்ஆன்: (61:06).*

சுப்ஹானல்லாஹ்! பிள்ளை பிறந்து 7, வது நாளில்தான் பெற்றோர் பிள்ளைக்குப் பெயர் வைப்பார்கள். ஆனால், பெருமானார் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லமவர்களின் பிறப்பிற்கு 570 ஆண்டுகளுக்கு முன்பே நபி ஈஸா மஸீஹ் அலைஹிஸ்ஸலாம் அன்னாரின் பெயர் அஹ்மத் என்று கூறிவிட்டார்கள். அது எப்போது வைக்கப்பட்டது? என்று கூறவில்லை. அப்படியாயின், அல்லாஹுத்த ஆலாவே அன்னாருக்கு பெயர் சூட்டினான். அதை எப்போது சூட்டினான் என்பதை அல்லாஹ்வே நன்கு அறிவான்.

இதுவும் மீலாது தான். ஒரு வித்தியாசம். நபிமார்கள் அவர்கள் சமுகத்தில்

அவர்கள் வருவார்கள் என்றார்கள். வருகை தந்து விட்டார்கள் என்று நாம் கூறுகின்றோம். இறந்த கால, எதிர்கால வேற்றுமை தான் இருக்கின்றது. விடயம் ஒன்றுதான். இதன்படி, மீலாத் ஷரீப் நபிமார்களின் சுன்னத் என்பது தெளிவாகி விட்டது.

அல்லாஹுத்த ஆலா கூறுகினாறான்.

قُلْ بِفَضْلِ اللّٰهِ وَبِرَحْمَتِهٖ فَبِذٰلِكَ فَلْيَفْرَحُوْا

***(நபியே!) கூறுவீராக! அல்லாஹ்வின் கருணையைக் கொண்டும், அவனுடைய றஹ்மத்தைக் கொண்டும் அவர்கள் மகிழ்ச்சியடையட்டும்.***

*அல் குர்ஆன் (10:58).*

அல்லாஹ்வின் கருணை மீது மகிழ்ச்சியடைவது அல்லாஹ்வின் கட்டளையிலுள்ளது என்பது புலனாகின்றது. றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அல்லாஹ்வின் கருணையும், அவனுடைய றஹ்மத்துமாகும். ஆகவே, அன்னாரின் பிறப்பின் மீது மகிழ்ச்சியடைவது இந்த திருவசனத்தின் அடிப்படையிலான நற்செய்யலாகும்.

இத்திருவசனத்தில் பொதுவாக மகிழ்சியடைதல் என்று குறிப்பிடப் பட்டிருப்பதால் ஆகுமான சகல மகிழ்ச்சியும் உள்ளடங்கும். ஆகவே, மீலாத் விழாக்களை நடத்துவது அதற்கான அலங்காரங்கள் யாவும் நன்மை பயக்கும் நற்செயல்களாகும்.

4) மவாஹிபுல்லதுன்னியா, மதாரிஜுன் நுபுவ்வத் உள்ளிட்ட நூற்களில் பெருமானார் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் மீலாத் சிறப்பு நிகழ்வுகளைப் பற்றி பின்வருமாறு எழுதப்பட்டுள்ளது.

நபிகள் கோமான் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்கள் பிறந்த அன்றிரவு ஹளறத் அன்னை ஆமினா றழியலலாஹு அன்ஹா அவர்களின் வீட்டின் தலைவாசலில் மலக்குகள் நின்ற வண்ணம் ஸலவாத்து ஸலாம் கூறி வாழ்த்துக் கூறினார்கள். அதே நேரம் பரம எதிரியான இப்லீஸ் பித்துப் பிடித்தவனாக அங்குமிங்கும் ஒப்பாரி வைத்து அலைந்து திரிந்தான். இதன் மூலம் மீலாத் நிகழ்வும், நின்று கொண்டு பூமான்நபியின் புகழ்பாடுவதும் மலக்குகளின் முன்மாதிரியில் முகிழ்த்த சுன்னத் என்பதை புரிந்துக் கொள்கின்றோம்.

மீலாத் நிகழ்வை சகிக்க முடியாமல் மனம் வெதும்பி புலம்பித் திரிவது

ஷைத்தானின் முன்மாதிரி என்பதையும் புரிகின்றோம். மீலாத் நிகழ்வில் மலக்குகளின் முன்மாதிரியைப் பின்பற்றுவதா? அல்லது ஷைத்தானின் இழிசெயலைப் பின்பற்றுவதா? என்பதை பொதுமக்கள் முடிவு செய்து கொள்ளட்டும்.

5) நபிகள் நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்கள் ஸஹாபாக்களின் அவையில் மிம்பரில் ஏறி நின்றவர்களாக தனது பிறப்புச் செய்திகளையும், தனது நற்பண்புகளையும் கூறினார்கள். மீலாத் நிகழ்வுகளை எடுத்துக் கூறுவது றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் சுன்னத் என்பதை இதன் மூலமும் தெரிந்து கொள்கின்றோம்.

மிஷ்க்காத் ஷரீப் ஸெய்யிதுல் முர்ஸலீன் அவர்களின் சிறப்புக்கள் என்ற பாடத்தில் ஹளறத் இப்னு அப்பாஸ் றழியல்லாஹு அன்ஹுமா அவர்களின் அறிவிப்பில் பின்வரும் ஹதீது பதிவாகியுள்ளது.

ஒரு தினம் றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் திருச்சபைக்கு வந்தேன். றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் பரம்பரையைப் பற்றி சிலர் குறை கூறியது நபிகளார் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களுக்கு எட்டியிருக்கக்கூடும். உடனே மிம்பர் மேடையில் ஏறி நான் யார் தெரியுமா? என்று கேட்டார்கள். நீங்கள் அல்லாஹ்வின் றஸூல் என்று சகலரும் பதில் கூறினார்கள். பின்னர் றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் கூறினார்கள்.

நான் அப்துல் முத்தலிபின் மகன் அப்துல்லாஹ்வின் மகனாகிய முஹம்மதாகும். அல்லாஹுத்தஆலா படைப்புகளைப் படைத்த போது எங்களை சிறந்தமனித கூட்டத்தில் ஆக்கினான். பின்னர் அவர்களை அரபிகள் அஜமிகள் என்று இரண்டாகப் பிரித்தான். அவர்களின் உயர்ந்த கூட்டமாகிய அரபிகளில் எம்மை ஆக்கினான். பின்னர் அரபிகளின் சில கோத்திரத்தாரைக்கூறி அவர்களில் சிறந்த கோத்திரமாக குறைஷிகளைத் தேர்வு செய்தான். குறைஷிகளையும் பல பிரிவுகளாக்கினான். அவர்களில் உயர் குடும்பமாக பனூஹாஷிமைத் தெரிவு செய்தான்.

இதே மிஷ்க்காத்தில் இதே பாடத்தில் பின்வரும் ஹதீது இடம்பெறுகின்றது.

நான் காதமுன்–இறுதி– நபி, இப்றாஹீம் நபியவர்களின் துஆவில் வந்தவர். ஹளறத் ஈஸாவின் நற்செய்தியில் வந்தவர், பிரசவ நேரத்தில் எனது தாய் கண்ட பேரொளியுமாவேன், அதன் மூலம் ஷாம் நாட்டின் கட்டிடங்கள் அவர்களுக்கு தெரிந்தன.

இந்த ஹதீஸில் றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி

வஸல்லமவர்கள் தனது குடும்பம், தனது பிறப்பு நேரத்தில் நடந்த நிகழ்வு உள்ளிட்டவையை எடுத்துக் கூறினார்கள். மீலாத், மௌலித் நிகழ்வுகளில் இதுதானே நடக்கின்றன. இப்படியான பல நூறு எடுத்துக்காட்டுக்களை ஹதீதுகளில் கூற முடியும்.

6) ஸஹாபாக்களில் ஒரு கூட்டத்தினர் சில ஸஹாபாக்களிடம் சென்று நபிகள் நாதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் சிறப்புக்களை எடுத்துக் கூறுமாறு வேண்டிக் கொள்வார்கள். இதன்படி மீலாத் சுன்னத்தே ஸஹாபா என்றும் தெரிகிறது.

மிஷ்க்காத்தில் இதே பாடத்தில் பின்வரும் ஹதீது இடம் பெறுகின்றது. ஹளறத் அதாஃ இப்னு யஸார் றழியல்லாஹு அன்ஹு கூறுகின்றார்கள்.

நான் ஹளறத் அப்துல்லாஹ் இப்னு அம்ருஇப்னு ஆஸ் றழியல்லாஹு அன்ஹுமா அவர்களைச்சந்தித்து எனக்கு றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் சிறப்பைக் கூறுமாறு கேட்டேன். தௌறாத் திலிருந்து சில விடயங்களை எனக்கு ஓதிக்காட்டினார்கள்.

இவ்வாறு ஹளறத் கஃபுல் அக்பார் றழியல்லாஹு அன்ஹு அவர்களும் பின்வருமாறு கூறுகின்றார்கள்.

தௌறாத் வேதத்தில் றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் பின்வரும் சிறப்புக்களை பார்த்துள்ளோம்.

முஹம்மது ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அல்லாஹ்வின் திருத்தூதர் ஆவார்கள். எனது விருப்பத்திற்குரிய நல்லடியார் ஆவார்கள். தீய குணமோ, கடினசுபாவமோ கொண்டவரல்ல! அன்னார் மக்காவில் பிறப்பார்கள். தைபாவிற்கு ஹிஜ்ரத் செல்வார்கள். அவரின் ஆட்சி ஷாமில் இருக்கும். அவர்களின் உம்மத்தினர் அல்லாஹ்வை இன்பத்திலும், துன்பத்திலும் அதிகமாக அல்லாஹுவின் திருப்புகழை நினைவு கூருவார்கள்.

7) நாம் இது வரை முன்வைத்த ஆதாரங்கள் யாவும் அல்லாஹ்வால் ஏற்றுக்கொள்ளப்பட்ட நல்லடியார்களின் கூற்றுக்களாகும். றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்ல மவர்களின் மீலாத் ஷரீபை கொண்டாடி காபிர்கள் சந்தோஷப் பட்டாலும்கூட ஏதாவது பிரயோசனம் அவர்களுக்கும் கிடைக்கவே செய்யும்.

புகாரிஷரீபில் திருமணம் பற்றிய அத்தியாயத்தில், 4:23 திருவசனத்தின் விளக்கத்தில் பின்வரும் ஹதீது பதிவாகியுள்ளது.

அபூலஹபின் நெருங்கிய உறவினர்கள் அபூலஹப் மரணித்த பின்

மிகமோசமான நிலையிலிருப்பதைக் கனவில் கண்டு உமக்கு என்ன நடந்தது? என்று கேட்டனர். உங்களை விட்டும் பிரிந்த பின் எனக்கு நல்லது எதுவும் கிடைக்கவில்லை. ஆனாலும், எனது சுட்டு விரல் அசைத்து எனது அடிமை துவைபாவை உரிமையிட்டேன். அந்த சுட்டுவிரலிலிருந்து நீர் சுரக்கிறது என்று அபூலஹப் கூறினான்.

அபூலஹப் ஹளறத் அப்துல்லாஹ் நாயகத்தின் சகோதரர். உங்கள் சகோதரர் அப்துல்லாஹ்வுக்கு அழகிய ஆண்குழந்தை பிறந்துள்ளது என்ற சுப செய்தியை முதலில் துவைபா கூறியதால் சந்தோஷ மீக்குற்று துவைபாவை சுட்டுவிரல் அசைத்து உன்னை உரிமையிடுகின்றேன் என்றான் அபூலஹப்.

அபூலஹப் வன்காபிர்!. இவனின் குறையை திருக்குர்ஆன் ஓர் அத்தியாயத்தில் தனியாகவே கூறியுள்ளது.. ஆயினும், அன்று அவன் மனதில் முகிழ்த்த சந்தோஷத்தின் பறக்கத்தினால் அவன்மீது அல்லாஹுத்த ஆலா கருணை புரிந்தான்.

நரகத்தில் அபூலஹபுக்கு தாகம் வந்தால் விரலைப் சுகித்து தாகத்தைத் தீர்த்துக் கொள்கின்றான். இத்தனைக்கும் அபூலஹப் வன்காபிர்.

நாம் முஃமின்கள். அவன் அல்லாஹ்வின் விரோதி. நாம் அல்லாஹ்வின் விசுவாசமான அடியார்கள். அபூலஹப் தனது சகோதரர் அப்துல்லாஹ்வுக்கு அழகிய ஆண்குழந்தை பிறந்துள்ளது என்ற மகிழ்ச்சியில் அடிமையை உரிமையிட்டானே தவிர, அல்லாஹ்வின் றஸூல் என்ற காரணத்தால் அல்ல!

ஆனால், நாம் அல்லாஹ்வின் திருத்தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்கள் பிறந்தார்கள் என்ற சந்தோஷத்தால் மீலாத் கொண்டாடுகின்றோம். அல்லாஹுத்த ஆலா சங்கையானவன். நமக்கு ஏதும் தரமாட்டானா?

மதாரிஜுன் நுபுவ்வத் என்ற நபிகள் நாயகத்தின் வரலாற்று நூலில் பெருமானார் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லமவர்களின் பால்குடி தொடர்பான விடயங்களைக் கூறும் போது அபூலஹபின் நிகழ்வையும் பின்வருமாறு குறிப்பிடுகின்றார்கள்

இந்த நிகழ்வில் அதிக மதிகம் செலவு செய்து மீலாத் தினத்தைக் கொண்டாடு வோருக்கு மிகப் பெரிய ஆதாரம் இருக்கின்றது. அபூலஹப் வன்காபிர்! தனது சகோதரருக்கு ஆண்குழந்தை பிறந்துள்ளது என்ற மகிழ்ச்சியில் பாலூட்டுவதற்காக துவைபாவை உரிமையிட்டான். மனதில் மகிழ்வையும், மஹப்பத்தையும் நிறைத்து மீலாத் கொண்டாடும் முஸ்லிம்களாகிய நமது

நிலை என்ன?

பாமர மக்களால் உருவாக்கப்பட்டுள்ள ஹறாமான இசைக்கச்சேரிகள் மீலாத் விழாவில் இல்லாதிருத்தல் அவசியமாகும். .

8) சகல காலத்திலும், சகல இடங்களிலும் வாழுகின்ற உலமாக்கள், ஷைகுமார்கள் உள்ளிட்ட சகல முஸ்லிம்களும் மீலாத் ஷரீபைக் கொண்டாடுவது சுன்னத் என்றுதான் விளங்கி வைத்துள்ளனர். புனித மக்காவிலும், புனித மதீனாவிலும் கூட மீலாத் ஷரீபுக்கு அதிக முக்கியத்துவம் கொடுத்து கொண்டாடியுமுள்ளனர். நீங்கள் எந்த ஒரு முஸ்லிம் நாட்டுக்குச் சென்றாலும் அங்கெல்லாம் முஸ்லிம்கள் மீலாத் ஷரீப் கொண்டாடுவதைக் காண்பீர்கள். வலிமார்களும் இந்த சமுதாயத்தின் சத்திய சீலர்களான உலமாக்களும் மீலாத் விழாவின் மிகப்பெரிய பெரிய பலாபலன்களையும், பறக்கத்துக்களையும் கூறியுள்ளனர்.

முஸ்லிம்கள் நல்லது என்று காண்பவை அல்லாஹ்விடத்திலும் நல்லதுதான் என்ற ஹதீஸை ஏற்கனவே நாம் குறிப்பிட்டிருக்கின்றோம். திருக்குர்ஆனும் لتكون شهداء நீங்கள் அல்லாஹ்வின் சாட்சியாளர்கள் என்றும்,

ஹதீது ஷரீபில் انتم شهداء الله في الارض நீங்கள் பூமியில் அல்லாஹ்வின் சாட்சியாளர்கள் என்றும் வந்துள்ளது. ஆகவே, மீலாத் ஷரீப் கொண்டாடுவது சுன்னத் தாகும்.

இறுதியாக மஜ்ம உல் பிஹார் பக்கம் 55 ல் ஷைகு முஹம்மத் தாஹிர் முஹத்திது றஹ்மதுல்லாஹி அலைஹி றபீஉல் அவ்வல் தொடர்பாக கூறுயதையும் குறிப்பிடுகின்றேன்..

فانه شهر امرنا باظهار الحبور فيه كل عام

ஒவ்வொரு வருடத்திலும் றபீஉல் மாதத்தில் மகிழ்ச்சியை வெளிப் படுத்துவதற்கு எமக்குக்கட்டளையிடப் பட்டுள்ளது. இதன்படி, றபீஉல் அவ்வல் மாதத்தில் மகிழ்ச்சியை வெளிப்படுத்துவது கடமையாகும் என்று தெரிய வருகின்றது.

தப்ஸீர் றூஹுல் பயானில் 48: 29 திருவசனத்தின் விளக்கத்தில் பின்வருமாறு எழுதுகின்றார்கள்.

ومن تعظيمه عمل المولد إذا لم يكن فيه منكر قال الامام السيوطي ، يستحب لنا اظهار الشكر بمولد عليه السلام

றஸூலுளளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் மீலாத் ஷரீபில் தீய விடயங்கள் இல்லையாயின், அத்தினத்தில் மௌலித் ஓதுவது அத்தினத்தைக் கண்ணியப்படுத்துவதாகும்.

ஹாபிழ் இமாம் சுயூத்தி றஹ்மதுல்லாஹி அலைஹி கூறுகின்றார்கள்.

றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்கள் அவதரித் ததற்கு நன்றி செலுத்துவது நமக்கு சுன்னத் தாகும்.

மேலும் கூறுகின்றார்கள்.

قال ابن الحجر الهيتمي أن البدعة الحسنة متفق علي ندبها وعمل المولود واجتماع الناس له كذلك بدعة حسنة قال السخاوي لم يفعله أحد من القرون الثلثة وانما حدث بعد ثم لم يزل اهل الاسلام من سائر الاقطار والمدن الكبار يعملون المولد ويتصدقون بانواع الصدقت ويعتنون بقراءة مولده الكريم ويظهرون من بركاته عليهم كل فضل عظيم قال ابن الجوزي من خواصه انه امان في ذلك العام وبشري عاجلة بنيل البغية والمرام واول من احدثه من الملوك صاحب اربل وصنف له ابن دحية كتابا في المولد فاجازه بالف دينار وقد استخرج له الحافظ ابن حجر اصلا من السنة وكذا الحافظ السيوطي ورد علي انكارها في قوله أن عمل المولد بدعة مذمومة

இமாம் இப்னு ஹஜர் ஹைதமி, மக்கி றஹ்மதுல்லாஹி அலைஹி கூறுகின்றார்கள்.

பித்அத்துன் ஹஸனா என்ற நல்ல பித்அத் சுன்னத் என்று சகலரும் ஏகோபித்துக் கூறியுள்ளார்கள். மீலாத் ஷரீப் கொண்டாடுவதும், அதற்காக ஒன்று கூடுவதும் பித்அத்துன் ஹஸனாவாகும்.

ஹாபிழ் இமாம் ஸகாவி றஹ்மதுல்லாஹி அலைஹி கூறுகின்றார்கள்.

இஸ்லாத்தின் ஆரம்ப மூன்று நூற்றாண்டிலும் எவரும் மீலாத் ஷரீபை விழாவாக கொண்டாடவில்லை. இது பின்னர் உருவானது

இதனைத் தொடர்ந்து சகல முஸ்லிம்களும் சகல நகரங்களிலும் தொடர்ச்சியாக மீலாத் ஷரீபை கொண்டாடியே வருகின்றனர். விதவிதமான தர்மங்களையும் நன்மையான காரியங்களையும் செய்கின்றனர்.

றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் மௌலிது ஷரீபை ஓதுவதற்கு பிரமாண்டமான வகையில் ஏற்பாடும் செய்கின்றனர். இந்த மஜ்லிஸின் பறக்கத்தினால் அவர்களுக்கு பாரியளவில் சகலபறக்கத்தும் கிடைக்கின்றன.

இமாம் ஜவ்ஸி றஹ்மதுள்ளாஹி அலைஹி கூறுகின்றார்கள்.

அந்த வருடம் முழுவதும் மௌலித் ஷரீபின் பறக்கத்தினால் பாதுகாப்பு கிடைக்கின்றது. நோக்கங்கள் நிறைவேறுவதற்கான நற்செய்தியும் இருக்கின்றது.

மீலாதைப் பெரு விழாவாக முதன்முதலில் கொண்டாடியவர் இர்பல் நாட்டின் அரசர் ஆவார். ஹாபிழ் இப்னு திஹ்யா என்பவர் முதலில் மௌலிது ஷரீப் நூலை அவருக்காக கோர்வை செய்து கொடுத்தார். அதற்காக மன்னர் ஆயிரம் பொற்காசுகளை அன்பளிப்பாக வழங்கினார்.

ஹாபிழ் இப்னு ஹஜர், ஹாபிழ் ஸுயூத்தி றஹிமஹுமுல்லா ஆகிய இருவரும் மீலாத் ஷரீபுக்கும், மௌலிது ஓதுவதற்கு முரிய ஆதாரத்தை ஹதீதிலிருந்து நிறுவிக் காட்டியுள்ளனர். இவை கெட்ட பித்அத் என்று கூறி தடைசெய்வோருக்கு எதிராக மறுப்பும் கூறியுள்ளனர்.

அல்லாமா முல்லா அலி காரி றஹ்மதுல்லாஹி அலைஹி "மௌரிதுர் றவிய்யி" என்ற நூலில் எழுதுகின்றார்கள்.

لا زال اهل الاسلام في كل سنة جديدة ويعتنون بقراءة مولده الكريم ويظهرون عليهم من بركاته كل فضل عظيم

முஸ்லிம்கள் ஒவ்வொரு வருடங்களிலும் புதிதாக மீலாத் ஷரீபைக் கொண்டாடுகின்றனர். மௌலிதை ஓதுகின்றனர். அதன்பறக்கத்தினால் சகல சிறப்புக்களும் அவர்களுக்குக் கிடைக்கின்றன.

இதே நூலில் பின்வரும் கவிதையும் இடம்பெற்றுள்ளது.

لهذا الشهر في الاسلام فضل    ومنقبة تفوق علي الشهور
ربيع في ربيع في ربيع    ونور فوق نور فوق نور

இஸ்லாத்தில் றபீஉல் மாதத்திற்கு தனித்துவமான சிறப்பு இருக்கின்றது. ஏனைய மாதங்களை மிகைத்த புகழும் அதற்கிருக்கின்றது. வசந்தத்தில்

வசந்தத்தில் வசந்தமாகும். ஒளிக்கு மேல் ஒளிக்கு மேல் ஒளியாகும்.

மேற்கண்ட சொற்றோடர்களின் மூலமாக மூன்று விடயங்கள் தெரிய வருகின்றன.

1- கிழக்கிலும், மேற்கிலும் உள்ள முஸ்லிம்கள் மீலாத், மௌலிது ஷரீபை நல்ல செயல் என்று பார்க்கின்றனர்.

2- மிகப் பெரிய உலமாக்கள், சட்ட அறிஞர்கள், ஹதீதுக்கலை மேதைகள், திருக்குர்ஆன் விரிவுரையாளர்கள், ஸூபியாக்கள் உள்ளிட்டவர்களான அல்லாமா இப்னு ஹஜர் ஹைதமி, இமாம் ஸகாவி, இப்னுஜவ்ஸி, ஹாபிழ் இப்னு ஹஜர் றஹ்மத்துள்ளாஹி அலைஹிம். உள்ளிட்டவர்கள் இதை மிக நல்ல செயலாகப் பார்க்கின்றனர்.

3-மீலாத்ஷரீபின் பறக்கத்தினால் வருடம் முழுவதும் வீட்டில் பாதுகாப்பும், பறக்கத்தும் கிடைக்கின்றது. நோக்கங்களும் நிறைவேறுகின்றன.

9) மீலாத் விழாக்கள் மிகப் பெரியளவில் பயன்மிக்க ஒன்று என்பதை பகுத்தறிவும் கூட ஏற்றுக் கொள்கின்றது. இதில் சில பிரயோசனங்களும் இருக்கின்றன.

1- முஸ்லிம்களின் உள்ளத்தில் றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி அவர்களின் மாண்புகளைக் கேட்டு அவர்களின் உள்ளங்களில் றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லமவர்களின் நேசம் வளர்கின்றது.

றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லமவர்களின் நேசத்தை வளர்ப்பதற்கான சிறந்த ஔடதம் றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி அவர்களின் வாழ்வின் நிலைகளைப் படிப்பது அவசியமாகும், என்று ஷைகு அப்துல் ஹக் முஹத்திதுத் திஹ்லவி, மற்றும்கண்ணியமிக்க ஸூபியாக்கள் றஹ்மதுள்ளாஹி அலைஹிம் உள்ளிட்டோர் கூறுகின்றனர்.

எழுத்தறிவு, படிப்பறிவு உள்ளவர்கள் நூற்களில் உள்ள விடயங்களைப் புரிந்து கொள்வார்கள், ஆனால்,படிப்பறிவற்ற பாமரர்களால் இது சாத்தியமில்லை;இவர்களுக்கு இப்படியான விழாக்கள் வாய்ப்பாக அமைகின்றன;

2- இந்த மஜ்லிஸ் முஸ்லிம் அல்லாதவர்களுக்கு சட்டங்களை எத்தி வைக்கும் வழியாகவும் அமைகின்றது,அவர்களும் இதில் கலந்து கொண்டு றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி அவர்களின் நிலைகளைக் கேட்கவும்,இஸ்லாத்தின் சிறப்புக்களை விளங்கிக் கொள்களவும் வசதியாக

அமைகின்றது,அவர்கள் இஸ்லாத்தின் பக்கம் வருவதற்கு அல்லாஹ் தவ்பீக் செய்வானாக!

3- இந்த சபையின் ஊடாக முஸ்லிம்களுக்கு மார்க்க பிரச்சினைகளின் சட்டப் பிரச்சினைகளை விளங்க வாய்ப்புக் கிடைக்கின்றது,

சில கிராமப் புறத்து மக்கள் ஜும்ஆவுக்குக் கூட வரமாட்டார்கள், மார்க்கம் படிக்க வாருங்கள் என்று அழைத்தால், வரமாட்டார்கள், ஆனால், மீலாத் சபைகளின் பெயரைக் கேட்டால், உடனே ஆசையோடு உற்சாகமாக ஒன்று கூடுவார்கள். நானே இதை அனுபவித்திருக்கின்றேன்.

இந்த சபையில் மார்க்க சட்டங்களின், விளக்கங்களை கூறுங்கள்! ஹிதாயத்திற்கான சிறந்த வாய்ப்பாக அது அமையும்.

4-மீலாத் ஷரீப் மஜ்லிஸில் முஸ்லிம்களுக்கு வழிகாட்டக் கூடிய மார்க்க சட்டங்களை உள்ளடக்கிய கவிகளையும் இடம்பெறச்செய்ய வேண்டும், ஏனெனில், உரையை விட, கவிதை மனதில் அதிகம் தாக்கம் செலுத்தும்;.மேலும், விரைவில் பாடமாகும்.

5-இப்படியான சபைகளில் கேட்டுக் கேட்டு றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி அவர்களின் குடும்பத்தின் சிறப்பு, புனித பிள்ளைகள், பரிசுத்தமான மனைவிமார்கள், அன்னாரின் பிறப்பு, வளர்ப்பின் நிலைகள், பாடமாகிவிடும்.

தற்காலத்தில் காதியானி, றாபிழி (ஷீஆ), மற்றும் இவர்கள் தவிர்ந்த வழிகேடர்களுக்கு தங்கள் மத்ஹபின் முழுமையான விளக்கம் இருக்கின்றது. றாபிழிகளின் பிள்ளைகளுக்கும் கூட உண்டு!

ஆனால், அஹ்லுஸ்ஸுன்னத் வல் ஜமாஅத்தில் உள்ள இமாம்களின் பெயர்கள், இன்னும் குலபாஉர் றாஷிதீன்களிகன் பெயர்கள் பெரியவர்களுக்கு நினைவிலிருக்கும், ஆனால், அஹ்லுஸ் ஸுன்னத் வல்மாஅத்தினரின் பிள்ளைகளுக்கு ஏதும் தெரியாதிருக்கின்றனர்,

அதிகளவான முதியவர்களிடம் றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம வர்களுக்கு எத்தனை பிள்ளைகள்?, மருமக்கமார்கள் எத்தனை? என்று கேட்டிக்கின்றேன், எதுவும் தெரியாது! இப்படியான சபையில் அது பற்றி பிரஸ்தாபித்தால், மிகப் பெரிய பிரயோசனமாக இருக்கும். இருக்கின்றவையை குழப்ப வேண்டாம்! குழம்பியுள்ளதை சீர் செய்யுங்கள்.!

10) மறுப்பாளர்களின் குருவும் ஷைகுமான ஹாஜி இம்தாதுல்லாஹ் ஸாஹிப் “பைஸலா ஹப்த் மஸ்அலா” என்ற நூலில் “மீலாத் ஷரீப்“ விழாக்களை ஆகும் என்றும், பறக்கத் பொருந்தியது என்றும் கூறியிருக்கின்றார்,

மேற்படி நூல் பக்கம் 8ல் கூறுகின்றார்,

மௌலித் மஜ்லிஸுகளில் கலந்து கொள்வது எனது வழக்கமாகும், எனினும், இதை பறக்கத்தான செயலாகக் கருதி ஒவ்வொரு வருடமும் நடத்திவருகின்றேன்; நடுவில் எழுந்து நிற்கும் போது இன்பமும், பரவசமும் அடைகின்றேன்.

குருவும் ஷைகுமானவர் மௌலித் மஜ்லிஸை பறக்கத்தின் வழியாகக் கருதி ஒவ்வொரு வருடமும் செய்து வருகின்றார், ஆனால், அவரின் அப்பழுக்கற்ற முரீதீன்களின் அகீதாவோ மௌலித், மீலாத் மஜ்லிஸுகளில் கலந்து கொள்வது ஷிர்க், குப்றாக இருக்கின்றது?இது புரியாத விசித்திரமாக இருக்கின்றது.!

குருவின் மீது எப்படிப் பத்வா எழுதுவார்கள்?

11) புகஹாக்களான சட்ட அறிஞர்கள் மத்தியில் மக்றூஹ் தன்ஸீஹ் கூட ஆதாரமின்றி நிரூபணமாகாது என்றிருக்கும் போது , ஹறாம் என்பது மிகப் பெரிய விடயமாகும்என்பதை “உரூஸ்” பற்றிய ஆய்வில் குறிப்பிடுவோம் இன்ஷாஅல்லாஹ்!

ஒரு விடயம் சுன்னத் என்பதற்கு அதைமுஸ்லிம்கள் நல்லதாகக் கண்டால், ஷரீஅத்தில் தடையில்லை; மேலும், முஸ்லிம்கள் அதை நன்மையானதாகக் கருதினாலோ, அல்லது பொதுவாக முஸ்லிம்கள் நல்லவிடயமாகக் கருதினாலோ அது முஸ்தஹப்பாகும்.இதற்கான ஆதாரத்தை “பித்அத்” பற்றிய ஆய்வில் குறிப்பிட்டுள்ளோம்.

எனவே, மௌலித் மீலாத் மஜ்லிஸுகளை முஸ்லிம்கள் நன்மையான தாகவும், நல்ல விடயமாகவும் கருதுகின்றனர், ஆகவே அதற்குத் தடைகிடையாது!, முஸ்தஹப்பாகும்.

ஹறாம் என்று கூறுபவர்கள் அதற்கான திட்டவட்டமான ஆதாரத்தை ஹதீதிலிருந்து அல்லது, திருக்குர்ஆன் வசனத்திலிருந்து முன்வைக்கவேண்டும், வெறுமனே “*பித்அத்*“ என்று கூப்பாடு போடுவது வேலைக்காகாது!

# *அத்தியாயம் – 2*

# *மீலாத் ஷரீப் பற்றிய குற்றச்சாட்டுகளும், அதற்கான பதில்களும்.*

மறுப்பாளர்களின் பின்வரும் குற்றச்சாட்டுக்களுக்குரிய பதில்கள் வருமாறு.

**குற்றச்சாட்டு : 1**

மீலாத் விழா றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்ல மவர்களின் காலத்திலோ, ஸஹாபாக்கள், தாபியீன்கள் காலத்திலோ இல்லாத புதிய பித்அத்தாகும். சகல பித்அத்தும் ஹறாம். ஆகவே, மௌலூதும் ஹறாமாகும்.

**பதில்:**

மீலாத் ஷரீபை பித்அத் என்று கூறுவது புத்திகெட்டவன் கூற்றாகும். மீலாத் ஷரீபிற்கான மூல ஆதாரமாக இருப்பது அல்லாஹ்வின் வழிமுறை, மற்றும் நபிமார்கள்; மலக்குகள்; றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்கள்; ஸஹாபாக்கள், ஸலபுஸ் ஸாலிஹீன்கள் உள்ளிட்டோரின் சுன்னத்தாக இருப்பதோடு சகல முஸ்லிம்களினதும் நடைமுறையிலும் உள்ளவை என்பதை முதல் அத்தியாயத்தில் குறிப்பிட்டுள்ளோம். அப்படியிருக்க, எப்படி பித்அத்தாகும்.?

ஒருக்கால் பித்அத் என்றே வைத்துக் கொண்டாலும் கூட, சகல பித்அத்தும் ஹறாம் அல்ல! பித்அத் வாஜிப் சுன்னத், ஆகுமானது, மக்றூஃ, ஹறாம் என்றெல்லாம் பலவகைகள் உள்ளன என்ற விளக்கத்தை பித்அத் பற்றிய ஆய்வில் குறிப்பிட்டுள்ளோம்.

மீலாத் விழா நடத்துவது பித்அத்துன் ஹஸனாவைச் சேர்ந்த சுன்னத்தான அமல் என்பதை தப்ஸீர் றூஹுல் பயானின் மேற்கோளோடு ஏற்கனவே நிறுவியுமிருக்கின்றோம். அப்படியிருக்க, றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் புகழை, வரலாற்றை எடுத்துக் கூறுவது எப்படி ஹறாமாகமுடியும்.?

## குற்றச்சாட்டு : 2

மீலாத் விழாவில் ஹறாமான பல விடயங்கள் நிகழ்கின்றன. உதாரணமாக, ஆண்- பெண் கலப்பு இடம் பெறுகின்றது. தாடியை முழுமையாக மழிப் பவர்களின் நபி புகழ் பாடல்கள் அரங்கேறுகின்றன. பிழையான வரலாற்றுப் புராணங்களை ஒப்புவிக்கின்றனர். ஆகவே, இப்படியான மஜ்லிஸ் பல ஹறாமான விடயங்களின் ஒன்றுகூடலாக இருப்பதனால் ஹறாமாகும்.

## பதில்:

இங்கு பட்டியலிடபபட்ட ஹறாமான விடயங்கள் சகல மஜ்லிஸில்களிலும் அரங்கேறுவதில்லை. அதிகமான மஜ்லிஸுகளில் பெண்கள் பர்தா அணிந்து தனியான இடத்திலும், ஆண்கள் வேறு இடத்திலும் ஷரீஅத்தைப் பேணி பக்தியோடு இருக்கின்றனர். மஜ்லிஸில் உரையாற்றுவோர் ஸஹீஹான றிவாயத்துக்களையே பேசுகின்றனர்.

மௌலித் ஓதுபவர்களும், கேட்டுக்கொண்டு இருப்பவர்களும் வுழுச்செய்து கொண்டு ஒழுக்கத்தோடு இருந்து கொண்டு ஸலவாத் ஓதுவதையும், ஒருவிதமான அன்பு மேலிட்டு கண்ணீர் வடிப்பதையும் நான் பார்த்திருத்திருக்கின்றேன்.

றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் புகழ் பாக்களைக் கேட்டு அதில் பரவசமடைந்து தன்னிலை இழந்து ஆடி அசைவதைக்கூட பார்த்திருக்கின்றேன். அதிகமான மௌலித் மஜ்லிஸுகளில் இதுதான் நடக்கின்றது.

எங்காவது ஏதாவது சில இடங்களில் மேற்கண்டவை நடக்குமாயின், அவை ஹறாம்தான். அதைத் தடுக்க வேண்டும். அதற்காக மீலாத் ஷரீபின் அடிப்படையாகிய றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லமவர்களின் மீலாத் நிகழ்வைக் கூறுவதில் எப்படி ஹறாம் வந்து விடும்?

ஹறாமான விடயங்கள் கலப்பதால் சுன்னத்தான அல்லது ஆகுமானவை ஒருபோதும் ஹறாமாகிவிடாது என்ற விளக்கத்தை இன்ஷாஅல்லாஹ் உருஷ்- கந்தூரி- பற்றிய ஆய்வில் குறிப்பிடுவோம்.

ஆகுமான ஒன்றில் ஹறாம் கலந்தால் சகலதும் ஹறாமாகிவிடும் என்பது விதியானால் முதலில் மத்ரஸாக்களை இழுத்து மூடவேண்டும்.

அங்கே மீசை முளைக்காத ஆண்சிறுவர்களோடு பெரிய ஆண்கள் கலந்து படிக்கின்றார்கள். அங்கே சில நேரம் பிழையான துஷ்பிரயோகங்களும் நிகழ்கின்றன.

அங்கே திர்மிதி, புகாரி, இப்னு மாஜா உள்ளிட்ட ஹதீது நூற்கள், மற்றும் தப்ஸீர்கள் ஓதிக் கொடுக்கப்படுகின்றன. இவற்றில் இருப்பவை எல்லாம் ஸஹீஹல்ல! சில ளயீபானவையும் மௌலுஆனவையும் கூட இருக்கின்றன.

சில மாணவர்களும் சில ஆசிரியர்களும் தாடியை முழுமையாக மழிக் கின்றவர்களும் கற்பிக்கின்றனர். அப்படியானால், இவற்றையெல்லாம் காரணம் காட்டி மத்ரஸாக்களை இழுத்து மூடலாமா? நிச்சயமாக இல்லை! ஹறாமானவற்றை மட்டும் அகற்ற முயற்சிக்க வேண்டும்.

தாடியை மழிப்போர் திருக்குர்ஆனை எப்படி ஓதுவது? இதைக் காரணம் காட்டி திருக்குர்ஆன் ஓதுவதை தடுக்க முடியுமா? நிச்சயமாக இல்லை. அப்படியாயின், தாடியை சிரைப்பவர்கள் மௌலித் ஓதுவதை மட்டும் ஏன் தடுக்கின்றீர்கள்? மீலாத் விழா நிறைய பயனுள்ள ஒருமஜ்லிஸ் என்பதை பகுத்தறிவும் கூட ஏற்றுக் கொள்கின்றது.

இதில் பல பயன்கள் உள்ளன.

1) றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் சிறப்புக்களை கேட்பதன் மூலம் அன்னாரின் மீதுள்ள மஹப்பத் அதிகமாகின்றது.

ஷைகு அப்துல் ஹக் முஹத்திதுத் திஹ்லவி றஹ்மதுள்ளாஹி அலைஹி உள்ளிட்ட ஸூபியாக்கள் கூறுகின்றனர்.

றஸூலுளளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் மஹப்பத்தை அதிகப்படுத்துவதற்காக அன்னாரின் மீது அதிகமதிகம் ஸலவாத் ஓதுவதும், அன்னாரின் வாழ்க்கை வரலாற்றை வாசிப்பதும் அவசியமாகும்.

நூற்களில் உள்ளவற்றை எழுத்தறிவுள்ளவர்களால் மட்டுமே வாசிக்க முடியும். பாமரர்களுக்கு அந்த வாய்ப்பு இல்லை. இவ்வாறான விழாக்களில் ஆற்றப்படுகின்ற உரைகளின் மூலம் அந்த வாய்ப்பை பாமரர்கள் பயன்படுத்திக் கொள்கின்றனர்.

2) மீலாத் விழாவில் நிகழ்த்தப்படுகின்ற உரைகளின் மூலமாக முஸ்லிம் அல்லாதவர்களுக்கு இஸ்லாத்தின் சட்டங்களை எத்தி வைப்பதற்கு நல்ல சந்தர்ப்பம் கிடைக்கின்றது. அவர்களும் இந்த சபையில் கலந்து கொண்டால், றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின்

சிறப்புக்களையும் நற்பண்புகளையும் கேட்பதனால் அல்லாஹுத் தஆலா அவர்களுக்கு தவ்பீக் செய்தால் இஸ்லாத்தில் இணையும் வாய்ப்புள்ளது.

3) மீலாத் விழாக்களின் மூலம் முஸ்லிம்களுக்கு மார்க்க சட்ட விளக்கங்களை எடுத்துக் கூறுவதற்கு நல்ல வாய்ப்புள்ளது.

சில குக்கிராமத்தில் வசிப்பவர்கள் ஜும்ஆவுக்கும் செல்வதில்லை. மார்க்க விடயங்களைப் படிப்பதற்கென்று அழைத்தால் வரமாட்டார்கள். ஆனால், மீலாதின் பேரால் அழைத்தால் உடனே அதிக சந்தோஷத்தோடு திரண்டு வருவார்கள்.இதுவிடயத்தில் நிறைய அனுபவங்கள் எனக்கும் உண்டு! இப்படியான மஜ்லிஸுகளில் மார்க்க விடயங்களை கற்றுக்கொடுத்து அவர்களை நல்வழிப்படுத்த முடியும்.

4) மீலாத் விழாவில் மார்க்க சட்டங்களை பாடலாகப்பாடி முஸ்லிம்களை நல்வழிப்படுத்தலாம். உரையை விட பாடல், கவிதை மனதில் அதிக தாக்கத்தை ஏற்படுத்தும். விரைவாக நினைவிலும் தங்கும்.

5) இப்படியான மஜ்லிஸுகளில் கலந்து அங்கு நிகழ்தப்படுகின்ற உரைகளைக் கேட்பதன் மூலம் றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் குடும்ப பரம்பரை, அவர்களின் புனிதமான குடும்பம் பிள்ளைகள், பரிசுத்தமான உம்முஹாத்துல் முஃமினீன்கள், பெருமானாரின் ஜனன நிகழ்ச்சிகள் அவர்களின் வளர்ப்பு முறை உள்ளிட்ட சகலதும் நினைவு கூரப்பட்டு. நினைவில் பதிக்கப்படுகின்றன.

தற்காலத்தில் காதியானி, ஷீஆ, றாபிழி உள்ளிட்ட வழிகேடர்களுக்கு அவர்களின் விடயங்களைப் பற்றி முழுமையான விளக்கம் இருக்கின்றது.

றாபிழி-(ஷீஆக்)களின் பிள்ளைகளுக்கு குலபாஉர் றாஷிதீன்களின் பெயர்களைத் தவிர்ப் பதற்காக 12 இமாம்களின் பெயர்களை மனனமிடச் செய்கின்றனர்.ஆனால் அஹ்லுஸ்ஸுன்னத் வல்ஜமாஅத்தார்களின் பிள்ளைகளிடம் கேட்டால் திருதிருவென முழிக்கின்றனர். சில வயதானவர்களிடம் றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களுக்கு எத்தனை குழந்தைகள்? அவர்களுக்கு எத்தனை மருமக்கர் மார்கள்? என்று கேட்டேன். தெரியவில்லை.

இப்படியான மஜ்லிஸுகளில் இவை பற்றி அதிகம் பேசப்படுவதால் அவர்களுக்கு நல்ல பயனைக்கொடுக்கும். இருக்கின்றவைகளை அழிக்க முயலாதீர்கள். அழிந்துபோன வைகளை மீள கட்டியெழுப்ப முயலுங்கள்.

மறுப்பாளர்களான தேவ்பந்திகளின் ஷைகு ஹாஜி இம்தாதுல்லாஹ் ஸாஹிப் அவர்கள் தனது "பைஸலா ஹப்த் மஸ்அலா" என்ற நூலில் மீலாத் ஷரீப் ஆகுமானது என்றும், அதிகம் பறக்கத்துக்கள் நிறைந்தது என்றும்

கூறியுள்ளார்.

அதில் பக்கம் 8-ல் இவ்வாறு கூறுகின்றார். மீலாத் விழாக்களில் நான் கலந்து கொள்கின்றேன். அது பறக்கத்தை ஈட்டித்தரும் என்று நம்பி ஒவ்வொரு ஆண்டும் மீலாத் நிகழ்ச்சியை நடத்துகின்றேன். மீலாத் மஜ்லிஸில் எழுந்து நின்று ஸலாம் பைத்து பாடும்போது ஒருவிதமான ஆனந்தம் எனக்கு ஏற்படுகின்றது.

ஷைகு அவர்கள் மீலாத் ஷரீப் மூலம் பறக்கத் கிடைக்கின்றது என்று நம்பி வருடாவருடம் மீலாத்ஷரீப் நடத்துவதாகக் கூறுகின்றார். ஆனால், அவரின் அப்பழுக்கற்றசீடர்களின் அகீதா மீலாத், மௌலித் மஜ்லிஸுகள் குப்று, ஷிர்க்கு நிறைந்தவைஎன்றுள்ளது.? இதுதான் முடிவு தெரியாத ஆச்சரியமாக இருக்கின்றது.

இப்படிக்கூறுபவரகள் ஷைகுக்கு என்ன பத்வா வழங்கப் போகின்றனர்.?

சட்ட அறிஞர்களான புகஹாக்களுக்கு மத்தியில் ஹறாம் என்பது பெரிய விடயம்! தக்க ஆதாரமின்றி மக்றூஹ் தன்ஸூஹைக் கூட நிரூபிக்க முடியாது என்ற விளக்கத்தை உருஷ்-கந்தூரி- பற்றிய ஆய்வில் விளக்கமாக கூற இருக்கின்றோம். இன்ஷாஅல்லாஹ்!

ஒரு ஸுன்னத்தான விடயத்திற்கு ஒரு செயலை முஸ்லிம்கள் நல்லதாகக்காண்பது போதுமாகும்.

ஏதாவது ஒரு செயல் ஷரீஅத்தில் தடுக்கப்படவில்லையாயின், முஸ்லிம்கள் அதை நல்ல செயல் என்று கருதி செய்து வந்தால் அல்லது பொதுவாக முஸ்லிம்கள் அதை நல்ல செயல் என்று நம்பினால் அது சுன்னத்தாகும். இதுபற்றிய விளக்கத்தை " பித்அத் பற்றிய ஆய்வில்" குறிப்பிட்டுள்ளோம்..

மீலாத் விழாக்களுக்கு ஷரீஅத்தில் எதுவித தடையும் கிடையாது. முஸ்லிம்கள் அதை நன்மையானதாகக் காண்கின்றனர். நல்லெண்ணத்துடன் நன்மையை நாடியே செய்கின்றனர். ஆகவே மீலாத் விழா சுன்னத்தாகும்.

மீலாத் விழாவை ஹறாம் என்று கூப்பாடு போடுவோர் திட்டவட்டமான எந்த திருவசனத்தை அல்லது ஹதீஸை முன்வைக்கின்றனர்?. பித்அத் என்று கூப்பாடு போடுவதால் மட்டும் காரியம் நடக்காது.

## குற்றச்சாட்டு : 3

மீலாத் விழாவை இரவில் நீண்ட நேரம்வரை நடத்துவதால் நேரம்

பிந்தியே தூங்குகின்னர். இதனால், சுப்ஹுத் தொழுகை கழாவாகி விடுகின்றது. பர்ளுத்தொழுகை கழாவாகுவதற்குக்கு எது காரணமாக உள்ளதோ அதைச்செய்வது ஹறாமாகும். இதன் காரணமாக மீலாத் விழா கொண்டாடுவதும் ஹறாமாகும்.

**பதில்:**

மீலாத் விழாக்கள் இரவு முழுக்க நடப்பதில்லை என்பதை முதலில் புரிந்து கொள்ள வேண்டும். அதிகமான நாட்கள் பகலில் தான் நடக்கின்றன. எங்காவது இரவில் நடந்தால் கூட அதிக நேரம் நடப்பதில்லை. 10,11 மணிக்குள் முடிந்து விடும். சாதாரணமாக இந்த நேரம் வரை மக்கள் விழித்துக் கொட்டுதானிருக்கின்றனர்.

சில வேளை நேரம் தாண்டி மீலாத் விழா நடந்தாலும், சுப்ஹுத் தொழுகையை ஜமாஅத்தாக தொழக் கூடிய வழக்கம் உள்ளவர்கள் உரிய நேரத்தில் எழும்பவே செய்கின்றனர். இதனை பல முறை எனது அனுபவத்தில் பார்த்திருக்கின்றேன். ஆகவே, குற்றச்சாட்டு றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் மௌலித் ஓதுவதை தடுப்பதற்காகக் கூறப்படுகின்ற அப்பட்டமான அபாண்டமாகும்.

மீலாத் ஷரீப் நேரம் தாண்டி நடந்து சுப்ஹுத் தொழுகையும் கழாவாகி விட்டது என்றும் வைத்துக் கொள்வோம் இதனால் மீலாத் ஷரீப் எப்படி ஹறாமாகும்?

மத்ரஸாக்களில் பட்டமளிப்பு விழாக்கள் உள்ளிட்ட எத்தனையோ மார்க்க ரீதியானவிழாக்கள் இரவில் நீண்ட நேரம் வரை நடக்கின்றன. சில இடங்களில் திருமண மஜ்லிஸுகள் இரவில் பிந்திய பகுதியிலேயே நடக்கின்றன. இரவில் புகையிரதத்தில் பயணம் செய்கின்றனர்.

உங்கள் தீர்ப்பின்படி இவையெல்லாம் ஹலாலா? ஹறாமா? இவையாவும் ஹலால் என்றால், மீலாத் விழா மட்டும் எப்படி ஹறாமானது? இந்த வேற்றுமைக்கான காரணத்தை கண்டிப்பாக தெளிவாக்கிவைக்க வேண்டும்.

**குற்றச்சாட்டு : 4**

அல்லாமா ஷாமி மீலாத் மஜ்லிஸை ஹறாம் என்று கூறியது அக்காலத்திலிருந்த நடைமுறையோடு சம்பந்தமானது. அக்காலத்தில் மீலாத் விழா என்ற பெயரில் நன்மையை நாடி பாட்டுக்குக் கச்சேரிகள் அரங்கேறின. அதனையே தடுத்தார்கள். இதனை பின்வருமாறு கூறுகின்றார்கள்.

واقبح منه النذر بقراءة المولد في المنائر مع اشتماله علي الغناء واللعب وايهاب ثواب ذلك الي حضرات المصطفي صلي الله عليه وسلم

இதைவிடக்கேவலமானது யாதெனில், மனாறாக்களில் மௌலூத் ஓதுவதற்காக நேர்ச்சை செய்வதாகும். இப்படியான மௌலிதுகளில் பாட்டுக் கச்சேரி, வீண் விளையாட்டுக்கள் நடைபெறுகின்றன. இதற்கான கூலியை றஸூலுள்ளாஹி ஸல்லலலாஹு அலைஹி வஸல்லமவர்களுக்கும் சேர்த்து வைக்கின்றனர்.

பாட்டுக்கச்சேரி, வீண்விளையாட்டுக்கள், மதுபானம் உள்ளிட்டவை இடம் பெறுகின்ற நிகழ்வை. மக்கள் கவ்வாலி என்றுகூறி அதை நன்மை பயக்கக் கூடியது என்று நம்பி செய்கின்றனர்.

இப்படியான அநாச்சாரங்கள் நிறைந்த விழாக்களைத்தான் தப்ஸீர் அஹ்மதி மிகத் தெளிவாக மறுக்கின்றது. தப்ஸீர் அஹ்மதியில் சூறா லுக்மானின் ஆரம்பத்தைப் பார்க்கவும். உண்மை புரியும்.!

கராச்சியில் எனது கண்ணால் கூட மீலாத் என்ற பெயரில் பாட்டுக் கச்சேரி நடப்பதைப் பார்த்திருக்கின்றேன்.

ஒரு தினம் பதாயூன் என்ற ஊரில் தனது தந்தையின் பெயரில் கத்தம் ஓதும் நிகழ்வைஒருவர் ஏற்பாடு செய்திருந்தார். திருக்குர்ஆனை ஓதுவதற்குப் பதிலாக கிராம போனில் சூறா யாஸீனை ஒலிக்கச்செய்து அதன் தவாபை தனது தந்தையின் றூஹுக்குச் சேர்த்து வைத்தார்.

இப்படியான கேலிக்கூத்துக்களையும், ஹறாமான அநாச்சாரங்களையும் யார்தான் ஏற்றுக் கொள்வார்கள்.?

இவ்வாறே மேற்படி இமாம்களின் காலத்தில் நடைமுறையிலிருந்த விழாக்களையே அவர்கள் தடை செய்தார்கள். பொதுவாக மீலாத் விழாக்கள் குற்று என்றால் தேவ்பந்துகளில் ஷைகான ஹாஜி இம்தாதுலாஹ் ஸாஹிபும் இந்த குற்றுக்குள் அடங்குவார் என்பதை அவர்கள் மறக்கக்கூடாது.

**குற்றச்சாட்டு: 5**

நபிபுகழ்பாடுவதும் ஒரு வகையில் பாட்டுக் கச்சேரியை ஒத்துள்ளது. ஹதீது ஷரீபில் பாட்டுபாடுவதை, கவிதை பாடுவதை குறையாகக் கூறப் பட்டுள்ளது. இப்படியான மௌலித் நிகழ்வில் நார்சா, இனிப்புகள் வழங்குவது வீண்விரையம் ஆகவே, மீலாத், மௌலித் மஜ்லிஸுகள் கூடாது.

**பதில்:**

நபி புகழ் பாடுவதும், பேசுவதும் மிகச்சிறந்த நல்ல வணக்கமாகும். திருக்குர்ஆன் முழுக்க முழுக்க றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் புகழைத் தான் கூறுகின்றது. இதைப்பற்றிய திட்டவட்டமான விளக்கத்தை நமது *"ஷம்ஃனே ஹபீபுர் றஹ்மான்"* என்ற நூலில் விளக்கிக் கூறியுள்ளோம். விரும்பியவர்கள் அங்கு பார்த்துக் கொள்ள முடியும்.

கடந்தகால நபிமார்கள் சகலரும் றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமர்களின் புகழைப் பாடியிருக்கின்றார்கள். ஸஹாபாக்கள் உள்ளிட்ட அனைத்து முஸ்லிம்களும் றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் நற்புகழ்பாடுவதை சுன்னத்தாகவே கருதுகின்றனர்.

றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களே தனது புகழை பிறர் பாடக் கேட்டிருக்கின்றார்கள். நபியவர்களைப் புகழ்ந்து பாடியவர்களுக்கு துஆச் செய்திருக்கின்றார்கள்.

ஹளறத் ஹஸ்ஸான இப்னு தாபித் றழியல்லாஹு அன்ஹு நபியவர்களைப் பற்றி புகழ்ந்தும், காபிர்களைப் பற்றி இகழ்ந்தும் நபியவர்களுக்கு முன்னால் கவிபாடியுள்ளார்கள். அப்போது றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்கள் ஹளறத் ஹஸ்ஸான் றழியல்லாஹு அன்ஹு அவர்களுக்கு மஸ்ஜிதுன் நபவியில் கவிபாடுவதற்காக ஒரு மிம்பரை ஏற்பாடே செய்து கொடுத்தார்கள். அதில் ஏறி நின்று கவிபாடுவார்கள்.

இதைக்கேட்டு யாஅல்லாஹ் ஹஸ்ஸானுக்கு றூஹுல் குத்ஸைக் கொண்டு உறுதிப்படுத்துவாயாக! என்று துஆச்செய்வார்கள்.

*(பார்க்க மிஷ்க்காத் கவி பற்றிய பாடம்)*

மேற்கண்ட ஹதீஸின் படி றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களைப் பற்றிப் புகழ்ந்து பாடுவது உயர்ந்த வணக்கம் என்ற காரணத்தினால்தான் பள்ளிவாசலில் மிம்பர் அமைத்துக் கொடுத்தார்கள். அபூதாலிபும் றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்ல மவர்களைப் புகழ்ந்து கவிபாடியுள்ளார்கள்

புர்தா ஷரீபின் விரிவுரை நூலில் இமாம் கர்பூதி றஹ்மதுள்ளாஹி அலைஹி பின்வருமாறு எழுதுகின்றார்கள்.

புர்தா ஷரீபைப் பாடிய இமாம் பூசரி றஹ்மதுல்லாஹி அலைஹி

அவர்களுக்கு பக்க வாதம் ஏற்பட்டது. மருத்துவம் அவர்களுக்குப் பயன் கொடுக்க வில்லை. இறுதியாக புர்தாஷரீபைக் கோர்வை செய்தார்கள். கனவில் றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களுக்கு முன் ஏழுந்து நின்று தான் இயற்றிய புர்தா ஷரீபைப் பாடினார்கள். பக்கவாதம் குணமாகிவிட்டது. பாடலைக் கேட்டு இரசித்த நபிகள் நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்கள் இமாம் பூஸரி றஹ்மதுல்லாஹி அலைஹி அவர்களுக்கு ஒரு பொன்னாடை போர்தினார்கள்.

நபியவர்களை பற்றி புகழ் பாடுவதில் தீன், துன்யா ஆகிய இரண்டின் நன்மைகளும் இருக்கின்றன.

ஹளறத் மௌலானா ஜாமி, இமாமுல் அஃழம் அபூ ஹனீபா, றழியல்லாஹு அன்ஹுமா கௌதுல் அஃழம் உள்ளிட்ட சகல வலிமார்களும் றஹ்மதுல்லாஹி அலைஹிம் நபிகள் நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களைப் பற்றி புகழ்ந்து கவி பாடியிருக்கின்றார்கள். இவர்கள் பாடியகவிதைகள் மிகப் பிரபலமானவை.

ஹதீது ஷரீபிலும், பிக்ஹு நூற்களிலும் இசைக்ச்சேரிகளைப் பற்றி குறை கூறப்பட்டுள்ளதே தவிர நபி புகழ் பற்றிக் குறை கூறப்படவில்லை!

ஹறாமான தீய குணங்களை ஏற்படுத்தும் கருத்துள்ள கவிதைகள், மதுவை மாதுவையும் புகழ்ந்து பாடுகின்ற கவிதைகள் ஹறாமாவைதான். இதுபற்றிய முழுவிளக்கத்தை மிஷ்க்காத்தின் விரிவுரை நூலான மிர்க்காத்தில் தொழுகைக்குப் பின் "திக்ரு செய்தல்" என்ற பாடத்தில் பார்த்துக்கொள்ளவும்.

அணி இலக்கியம் நிறைந்த உயர்இலக்கியத்தின் கருத்துக்கள் பிழையாக இருந்தாலும் அதனைக் கற்பது "பர்ளு கிபாயா" என்று சட்ட அறிஞர்கள் மார்க்கத்தீர்ப்புக் கூறியுள்ளார்கள். காரணம், அதன் உயர்ந்த சொற்கள், இலக்கிய நயம் மூலம் அறிவைப் பெற்றுக் கொள்ள முடிகிறது.

தீவானே முதநப்பி உள்ளிட்ட கவிதைகள் மார்க்கம் கற்பிக்கின்ற மத்ரஸாக்களில் போதிக்கப்படுகின்றன. ஆனால் அதன் உள்ளடக்கம் மோசமானதாகும். இந்நிலையில்,

நபியவர்களின் புகழ்பாடும் உயர் இலக்கியத்தை தாங்கி நிற்கும் கவிதைகளைப் பாடக்கூடாது என்பதை எந்த வகையில் ஏற்பது?

ஷாமி என்ற சட்ட நூலின் முன்னுரையில் கவிதை பற்றிய ஆய்வில் பின்வருமாறு எழுதுகின்றார்கள்.

ومعرفة شعرهم رواية عند فقهاء الاسلام فرض كفاية لانه تثبت به قواعد العربية وكلامهم وان جاز فيه الخطاء في المعاني فلا يجوز فيه الخطاء في الالفاظ

ஜாஹிலியாக் காலத்து சங்க கவிதைகளை படிப்பதும் அதனை புரிந்து கொள்வதும், அதனை பிறருக்கு அறிவிப்பதும் "பர்ளு கிபாயா" என்று புகஹாக்கள் கூறியுள்ளனர். இதில் கருத்துப் பிழை இருப்பதற்கு வாய்ப்புண்டு! ஆனால் சொற்பிழை கிடையாது.

கவிதை பாடுவது பற்றிய முழுமையான ஆய்வு உருஷ் - கந்தூரி - பற்றிய ஆய்வில் கவ்வாலியை பற்றிய விளக்கத்தில் இன்ஷாஅல்லாஹ் கூறுவோம்.

**குற்றச்சாட்டு : 6**

மீலாத் விழாவுக்காக மற்றவர்களை அழைப்பது ஹறாமாகும். நபில் தொழுக்காக மக்களைத் ஒன்று திரட்டுவதற்கு தடையிருக்கின்றது என்றால் மீலாத்விழா இதைவிட பெரிதாகிவிட்டதா என்ன? - பறாஹீன்-

**பதில்.**

உபதேசமஜ்லிஸ், வலிமாவுக்கு அழைத்தல், பரீட்சைகள் நடத்தப் படுகின்ற சபைகள்,நிகாஹ் மஜ்லிஸ், அகீக்கா உள்ளிட்டவைக்கு மக்கள் அழைக்கப்படுகின்றார்கள். இப்போது சொல்லுங்கள்! இவையெல்லாம் ஹறாமாகி விட்டதா? அல்லது, ஹலாலாகத்தான் இருக்கின்றதா?

நிகாஹ் பயான் உள்ளிட்ட மஜ்லிசுகள் இஸ்லாத்தின் பர்ளுகளோடு தொடர்பானவை யாதலால் அதற்காக ஒன்று கூடுவது ஆகுமானதுதான் என்று கூறுவீர்களாயின், றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களைக் கண்ணியப்படுத்துவது அதைவிட முக்கியமான பர்ளாகும் ஆகவே, அதற்காக ஒன்று கூடுவது ஹலால்தான்.

தொழுகையை அதுவல்லாத மற்றவற்றோடு ஒப்பிட்டு கியாஸ் பிடிப்பது படுமோசமான முட்டாள்தனமாகும்.

வுழுவில்லாமல் தொழக் கூடாது என்று ஒருவர் கூறினால் அதை வைத்து வுழு இல்லாமல் திருக்குர்ஆனை ஓதுவதும் கூடாது என்று கூறினால் அவன் சுத்த மடையன் ஆவான்., இதுவேறுபட்ட வைகளோடு கியாஸ் பிடிக்கப்படுகின்றது. கியாஸில் இரண்டின் காரணங்களும் ஒரே இனத்தில் ஒன்றாக இருக்க வேண்டும்.

**குற்றச்சாட்டு : 7**

ஒருவரை நினைவு கூருவதும், அதற்காக ஒரு தினத்தைக் குறிப்பிடுவதும் ஷிர்க்காகும். மீலாத் விழாவில் இவை இரண்டும் ஒன்றுசேர்வதால் மீலாதும் ஷிர்க்குத்தான்.

**பதில்:**

மகிழ்சியான ஒரு விடயத்தை நினைவு கூருவது சுன்னதாதாகும். அதற்காக ஒரு தினத்தை குறிப்பதும் சுன்னத்துதான். இதை ஷிர்க்கென்று கூறுவது உச்சக்கட்ட மடத்தனமும் மார்க்கமில்லாத தனமுமாகும்.

ஃபிர் அவ்ன் மூழ்கடிக்கப்பட்டது, மன்னு ஸல்வா இறங்கியது உள்ளிட்டவையில் பனூஇஸ்ரவேலர்களுக்கு அல்லாஹுத்தஆலா அருள் புரிந்த நாட்களை நினைவு கூருமாறு நபி மூஸா அலைஹிஸ் ஸலாம்மவர்களுக்கு அல்லாஹுத்தஆலா وذكرهم بايام الله அல்லாஹ்வின் நாட்களை நினைவு கூருங்கள் என்று கட்டளையிடுள்ளான்.

அல்லாஹுத்த ஆலா தனது அடியார்களுக்கு அருள் பாலித்த நாட்களை நினைவு கூருவது அல்லாஹ்வின் கட்டளையாகும்.

மிஷ்க்காத்தில் நோன்பு பற்றிய அத்தியாயம் சுன்னத்தான நோன்பு என்ற பாடத்தில் பின்வரும் ஹதீது பதிவாகியுள்ளது.

سئل رسول الله صلي الله عليه وسلم عن صوم الاثنين فقال فيه ولدت وفيه انزل علي

திங்கள் நோன்பு தோற்பது பற்றி றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களிடத்தில் கேட்கப்பட்டதற்கு அந்த நாளில்தான் நாம் பிறந்தோம். அதேநாளில் தான் எனக்கு வஹியும் ஆரம்பமானது என்று விடை பகர்ந்தார்கள்.

திங்கள் நபியவர்களின் பிறந்த நாள் என்பதனால்தான் அந்த நாளில் நோன்பு நோற்பது சுன்னத்தாக்கப்பட்டுள்ளது என்பதை இதன்மூலம் புரிந்து கொள்கின்றோம்.

இதில் மூன்று விடயங்களைப் புரிந்து கொள்கின்றோம்.

1) நல்ல விடயத்தை நினைவு கூருவது சுன்னத்

2) அதற்காக ஒருதினத்தை நிர்ணயிப்பதும் சுன்னத்.

3) றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் பிறந்த நாளில் மகிழ்ச்சியை வெளிப்படுத்த அந்த நாளில் இபாதத் செய்வதும் சுன்னத்.

நோன்பு, நபிலான வணக்கங்கள் உள்ளிட்ட சிறந்த உடல் சார்ந்த வணக் கங்களைச் செய்யலாம். ஸதக்கா கொடுத்தல், நன்மையான காரியங்களைச் செய்தல், நார்ஸாக்கள், இனிப்புகள்கள் வழங்கல் உள்ளிட்ட பொருள் சார்ந்தவையையும் செய்யலாம்.

மிஷ்க்காத் ஷரீபில் இதே பாடத்தில் மூன்றாம் பிரிவில் பின்வரும் ஹதீது இடம்பெறுகிறது.

றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்கள் மதீனா ஷரீபுக்கு வந்த போது அங்குள்ள யூதர்கள் ஆஷூறா தினத்தன்று நோன்பு நோற்றிருந்தனர். காரணம் கேட்டதற்கு இந்த நாளில்தான் நபி மூஸா அலைஹிஸ்ஸலாமவர்களுக்கு பிர்அவ்னிலிருந்து வெற்றியைக் கொடுத்தான்.

ஆகவே, அதற்கு நன்றி செலுத்தும் நோக்கில் இத்தினத்தில் நோன்பு நோற்கின்றோம் என்றனர். இதைக்கேட்ட றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்கள் கூறினார்கள்.

فنحن احق واولي بموسي منكم

நாங்கள் உங்களை விட மூஸாவுக்கு நெருக்கமானவர்கள் என்று கூறி அத்தினத்தில் ஸஹாபாக்களை நோன்பு நோற்குமாறு கூறியதுடன் நபியவர்களும் நோன்பு நோற்றார்கள்.

ஆரம்ப காலத்தில் ஆஷூறா நோன்பு பர்ழாக இருந்தது. பின்னர் மாற்றப்பட்டுள்ளது. ஆயினும், சுன்னத் என்பது இதுவரை உள்ளது.

இதே மிஷ்க்காத்தில் இதே பாடத்தில் பின்வரும் ஹதீது பதிவாகியுள்ளது

ஆஷூறா நோன்பு யூதர்களோடு ஒப்பாக இருக்கின்றதே என்று றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களிடத்தில் ஒருவர் கேட்டார். உண்மைதான்! அடுத்த வருடம் நான் உயிரோடு இருந்தால் இருநோன்புகள் வைப்போம் என்று றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லமவர்கள் கூறினார்கள். அதாவது, ஒரு நோன்பை

அதிகரித்து வேதக்காறர்களுக்கு ஒப்பாகுவதிலிருந்து பாதுகாத்தார்கள்.

ஐவேளைத் தொழுகைகளில் றக்காஅத்தின் வேறுபட்டிருப்பதற்கான காரணத்தை பல் வேறு நூற்களின் மேற்கோளோடு நமது ஷஃனே ஹபீபுர்றஹ்மான் என்ற நூலில் குறிப்பிட்டுள்ளோம்.

பஜ்ரு இரண்டு றக்காஅத்துக்கள் மங்ரிப் மூன்று றக்காஅத்துக்கள் அஸர் உள்ளிட்ட ஏனைய தொழுகைகள் நான்கு றக்காஅத்துக்களாக இருப்பதற்கான பதிலை பின்வருமாறு கூறியுள்ளோம்.

ஹளறத் நபி ஆதம் அலைஹிஸ்ஸலாம் பூமிக்கு இறங்கிய பின் இருட்டைப்பார்த்து சிரமப்பட்டார்கள். சுப்ஹானதும் வெளிச்சத்தைப் பார்த்து அல்லாஹ்வுக்கு நன்றி செலுத்தும் நோக்கில் இரண்டு றக்காஅத் தொழுதார்கள்.

ஹளறத் இப்றாஹீம் அலைஹிஸ்ஸலாம் தனது ஆருயிர் மகனை அறுக்க நாடிய போது அல்லாஹுத்த ஆலா ஒரு செம்மறி ஆட்டை அனுப்பி குர்பானை ஏற்கச் செய்து தனது ஆருயிர் மகனைப் பாதுகாத்ததற்கு நன்றி செலுத்தும் நோக்கில் நான்கு றகாஅத் தொழுதார்கள். அதுவே ழுஹர் தொழுகையானது. இவ்வாறே ஏனைய தொழுகைகளும் ஆயின.

இதன் மூலம் தொழுகைகள் ஏனைய நபிமார்களின் நினைவூட்டல் என்பதை புரிந்து கொள்கின்றோம்.

ஹஜ் வணக்கம் ஆரம்பம் முதல் இறுதிவரை ஹளறத் இப்றாஹீம் அலைஹிஸ்ஸலாம் ஹளறத் நபி இஸ்மாயீல் அலைஹிஸ்ஸலாம் அவர்களின் நினைவூட்டலாகும்.

ஹஜ்ஜில் இப்போது தண்ணீர் தேடுவதில்லை. ஷைத்தான் குர்பானி கொடுப்பதை தடுப்பதுமில்லை. ஸபா மர்வாவுக்கிடையிலான தொங்கோட்டம், மினாவில் கல்லெறிவது இன்றும் அதே விதத்திலிருக்கின்றன. ஏன்? அதே நிகழ்வுகளை நினைவூட்ட வேண்டும் என்பதற்காகத்தானே! இதைப்பற்றிய விரிவான விளக்கம் நமது ஷஃனே ஹபீபுர் றஹ்மான் என்ற நூலில் குறிப்பிட்டுள்ளோம்.

மௌலித் ஓதிய பின் நார்ஸாக்கள், இனிப்புகள் வழங்குவது மிகச் சிறந்த நல்லகாரியமாகும். சந்தோஷமான வேளைகளில் உணவளிப்பது, இனிப்புகள் பகிர்வது பற்றி ஹதீதுகளில் வந்துள்ளன.

அகீக்கா, வலீமா உள்ளிட்டவற்றில் விருந்தளிப்பது சுன்னத்தாகும். எதற்காக இவை வழங்கப்படுகின்றன.? சந்தோஷமானவை நடந்திருப்பதனால் தானே விருந்தளிக்கப்படுகின்றது. கூறிப்பாக திருமணத்தின்போது காய்ந்த

பேரீத்தம் பழத்தை சபையில் தூவுவது சுன்னத்தாகும். சந்தோஷத்தை இதன்மூலம் வெளிப்படுத்துகின்றனர்.

றஸூலுல்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களைப் பற்றிப் பேசும் போது முஸ்லிம்கள் சந்தோஷப்படுகின்றனர். சந்தோஷத்தை வெளிப் படுத்துவதற்காக தர்மம் கொடுக்கின்றனர். நல்ல காரியங்களைச் செய்கின்றனர். இனிப்புக்களைப் பகிர்கின்றனர். இவ்வாறு மத்ரஸாக்களில் பாடத்தை ஆரம்பிக்கும் போதும், முடிக்கும் போதும் ஓதும் மாணவர்கள் மூலமாக இனிப்புக்களைப் பகிரவைப்பது உஸ்தாதுமார்களின் நடைமுறையாகும்.

அலிகட் ஜில்லாவில் *"மேண்டா"* என்ற ஊரில் சிறிது காலம் ஓதிக் கொண்டிருந்தேன். அங்கு தேவ்பந்திகளின் மத்ரஸா ஒன்றும் இருக்கின்றது. அங்கும் பாடத்தை ஆரம்பிக்கும் போது இனிப்புக்களை வழங்குகின்றனர். இதிலிருந்து மார்க்க விடயங்களை ஆரம்பிக்கும் போதும் சரி, முடிக்கும் போதும் சரி இனிப்புகள் வழங்குவது ஸலபுஸ் ஸாலிஹீன்களின் சுன்னத் என்பதைப் புரிகின்றோம்.

மீலாத் விழாவும் மார்க்கத்தில் முக்கியமான நிகழ்வுதான். அதில் குடும்பத்தவர்கள், மீலாதில் கலந்து கொண்டோர், விருந்தாளிகள் உள்ளிட்டோருக்கு விருந்தளித்து விட்டு கடைசியாக இனிப்பு வழங்குவதும் இதற்குள் அடங்கவே செய்யும்..

அல்குர்ஆன் கூறுகின்றது.

يٰۤاَيُّهَا الَّذِيْنَ اٰمَنُوْۤا اِذَا نَاجَيْتُمُ الرَّسُوْلَ فَقَدِّمُوْا بَيْنَ يَدَىْ نَجْوٰىكُمْ صَدَقَةً ؕ ذٰ لِكَ خَيْرٌ لَّكُمْ وَاَطْهَرُ

***முஃமின்களே! நீங்கள் அல்லாஹ்வின் திருத்தூதரிடம் இரகசியமாகப் பேசுவதாயின், அதற்கு முதல் (ஸதக்காவை) அன்பளிப்பை முன்வைக்க வேண்டும். இது உங்களுக்கு நன்மையானதும், பரிசுத்தமானதுமாகும்.***

*அல் குர்ஆன் (58:12).*

இஸ்லாத்தின் ஆரம்பகாலத்தில் றஸூலுல்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்ல மவர்களிடத்தில் முக்கியமான ஆலோசனைகள் செய்வதாக இருந்தால், அதற்கு முதல் தர்மத்தை முன்வைக்க வேண்டியது வசதியுள்ளவர்களுக்கு அவசியமாக இருந்தது.

ஹளறத் அலி றழியல்லாஹு அன்ஹு அவர்கள் ஒரு தீனார் கொடுத்து பத்து மார்க்கப் பிரச்சினைகளுக்கான தீர்வை பெற்றுக் கொண்டார்கள்.

பின்னர், இந்த சட்டம் மாற்றப்பட்டுள்ளது.

*(பார்க்க, தப்ஸீர் கஸாயினுல் இர்பான், காஸீன், மதாரிக்)*

சட்டம் மாற்றப்பட்டாலும் அதன் அடிப்படை ஆகும் என்பதும், ஸுன்னத் என்பதும் இன்னும் இருக்கவே செய்கின்றது.

வலிமார்களின் மஸார் ஷரீபுகளுக்கு சிறிதளவு இனிப்புகள் எடுத்துச் செல்வதும், ஷைகுமார்கள் உள்ளிட்ட ஸாலிஹான மனிதர்களிடம் செல்லும் போது அவர்களுக்கு முன்னால் எதையாவது கொஞ்சம் முன் வைப்பதும் சுன்னத்தாகும். இவ்வாறுதான் ஹதீதுகள், திருக்குர்ஆன், மார்க்க நூற்கள் உள்ளிட்டவையை ஆரம்பிக்கும் போது தர்மம் செய்வது நல்ல நடைமுறையாகும். மௌலித் ஓதுவதற்கு முன் சிறிதளவு தர்மம் கொடுப்பதும் நன்மையான காரியம்தான்.

மீலாத் என்பது எதார்த்தத்தில் றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களிடத்தில் உரையாடுவது என்பதை கவனத்தில் கொள்க!

ஷாஹ் அப்துல் அஸீஸ் முஹத்திதுத் திஹ்லவி றஹ்மதுள்ளாஹி அலைஹி அவர்கள் தப்ஸீர் பத்ஹுல் அஸீஸில் பின்வரும் ஹதீஸை எடுத்துக்கூறுகின்றார்கள்.

ஹளறத் உமர் பாறூக் றழியல்லாஹு அன்ஹு சூறா பகறாவின் அந்தரங்க விளக்கங்களை பன்னிரண்டு ஆண்டுகள் கற்றார்கள். கற்று முடித்த பின் ஓர் ஒட்டகத்தை அறுத்து அதிகம் சமைத்து ஸஹாபாக்களுக்குக் கொடுத்தார்கள்.

இதனை ஹளறத் இப்னு உமர் றழியல்லாஹு அன்ஹுமா அறிவிக்க இமாம் பைஹகீ ஷுஃபுல் ஈமானில் பதிவு செய்துள்ளார்கள்.

முக்கியமான ஒருகாரியம் நிறைவேறிய பின்பு இனிப்புகள் வழங்குவதும், உணவளிப்பதும் இதன் மூலம் நிரூபணமாகி விட்டது. மீலாத் விழாவும் முக்கியமானவைதான் என்பதையும் நினைவில் கொள்க!

உறவினர்களைச் சந்திக்கச் செல்லும் போது வெறும் கையோடு செல்லக்கூடாது. எதையாவது எடுத்துச் செல்ல வேண்டும் என்று மார்க்கப் பெரியார்கள் கூறியுள்ளார்கள்.

றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்கள் கூறினார்கள்

تهادوا وتحابوا

உங்களுக்குள் ஒவ்வொருவரும் அன்பளிப்புக்களை பரிமாறி அன்பை வளர்த்துக் கொள்ளுங்கள்.!

மதீனத்துல் முனவ்வறாவுக்குச் செல்லும் போது றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களை அண்டி வாழுகின்ற ஏழைகளுக்கு ஸதக்கா வழங்க வேண்டும் என்று சட்ட அறிஞர்களான புகஹாக்கள் கூறியுள்ளனர். அல்லாஹுத்த ஆலாவும் என்ன கொண்டு வந்துள்ளீர்? என்றுதான் முதன்முதலாகக் கேட்பான்.

ஆகவே நார்ஸாக்கள் வழங்குவதோ, இனிப்புகள் கொடுப்பதோ ஒருபோதும் வீண்விரயமாகாது.

யாரோ ஒருவர் ஹளறத் உமர் பாறூக் றழியல்லாஹு அவர்களிடம் வந்து

لاخير في الاسراف

வீண்விரயத்தில் நன்மை கிடையாது என்ற போது தாமதிக்காமல்

لا سرف في الخير

நன்மையான வையில் வீண்விரயம் இல்லை என்று சுடச்சுட பதில் கூறினார்கள்.

றமழானும் குறிப்பாக லைலத்துல் கத்றும் அந்த மாதத்தில் திருக்குர்ஆன் இறங்கியதால் தான் சிறப்புப் பெற்றன.

அல்லாஹுத்தஆலா கூறுகின்றான்.

شَهْرُ رَمَضَانَ الَّذِىٓ اُنْزِلَ فِيْهِ الْقُرْاٰنُ

***றமழான் மாதம் எப்படிப்பட்டதென்றால் அதில்தான் திருக்குர்ஆன் இறக்கப்பட்டது.***

*அல் குர்ஆன் (2:185).*

மேலும் கூறுகின்றான்.

اِنَّآ اَنْزَلْنٰهُ فِىْ لَيْلَةِ الْقَدْرِ

***திண்ணமாக திருக்குர்ஆனை கத்றுடைய இரவில் நாம் இறக்கி வைத்தோம்.***

*அல் குர்ஆன் (97:1).*

திருக்குர்ஆன் இறங்கிய காரணத்தினால் இந்த மாதமும், இரவும் கியாமத் நாள் வரை சிறப்புப் பெற்றுள்ளனதென்றால் திருக்குர்ஆனுக்குச் சொந்தக்காரரான றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்கள் பிறந்த 12வது நாளும் பிறந்த மாதமாகிய றபீஉல் அவ்வலும் கியாமத் நாள் வரை சிறப்பும், கீர்த்தியும் பெற்று விட்டன.

ஹளறத் இஸ்மாயீல் அலைஹிஸ்ஸலாம் அவர்களின் குர்பானுக்கான நாள் துல்ஹஜ் 10வது நாள் பெருநாளாக்கப்பட்டது.

இதன் மூலம் அல்லாஹ்வின் நல்லடியாகளுக்கு அல்லாஹுத்தஆலா அருள் பாலித்த நாளும், அந்த தேதியும் கியாமத் நாள் வரை றஹ்மத்துக்குரிய நாளாகி விட்டதென்பதை விளங்கிக் கொள்கின்றோம். ஜும்ஆவுடைய நாளில் கடந்த கால பல நபிமார்களுக்கு அல்லாஹ்வின் உதவிகள் கிடைத்த காரணத்தினால்தான் அந்த நாள் சிறப்புப் பெற்றது.

பாருங்கள்! ஆதம் நபி அலைஹிஸ்ஸலாமவர்களின் பிறப்பு, அவர்களுக்கு மலக்குகள் ஸஜதாச் செய்தது, உலகத்திற்கு அவர்கள் வருகை தந்தது., நூஹ் நபி அலைஹிஸ்ஸலாம் வெள்ளப் பிரளயத்திலிருந்து கரையேறியது, யூனுஸ் நபி அலைஹிஸ்ஸலாம் மீனின் வயிற்றிலிருந்து வெளியேறியது.

யாஃகூப் நபி அலைஹிஸ்ஸலாம் அவர்களின் பிரியமான மகனாகிய நபி யூஸுப் அலைஹிஸ்ஸலாமவர்களைச் சந்தித்தது, நபி மூஸா அலைஹிஸ்ஸலாமவர்களுக்கு ஃபிர்அவ்னின் கொடுமையிலிருந்து விடுதலை கிடைத்தது,

இப்படியான பல நிகழ்வுகள் வெள்ளிக்கிழமை நடந்ததனால்தான் வெள்ளிக்கிழமை ஸெய்யிதுல் அய்யாம் நாட்களின் நாயகன் என்ற சிறப்பைப் பெறுகின்றது.

இதற்கு மாறாக முன்னைய சமுகத்திற்கு அல்லாஹ்வின் தண்டனை இறங்கிய நாளைத் தவிர்க்குமாறு கூறப்பட்டுள்ளது.

செவ்வாய் கிழமையில் முதன் முதல் இரத்தம் ஒட்டப்பட்ட காரணத்தினால் அத்தினத்தில் இரத்தம் குத்துதலாகிய ஹிஜாமத் செய்யக்கூடாது.

இந்த நாளில்தான் ஹாபிலின் கொலை நடந்தது. இதேதினத்தில்தான் அன்னை ஹவ்வா நாயகிக்கு தீட்டு ஆரம்பமானது.

இத்தினத்தில் இப்படியான நிகழ்வுகள் ஒரு விடுத்தம்தான் நடந்தன. இந்த நிகழ்வுகளின் காரணத்தால் அத்தினத்தின் மகத்துவமும், கேவலமும்

நிரந்தரமாகிவிட்டன.

மகான்களின் மகிழ்ச்சி, அல்லது இபாதத்தை நினைவு கூருவதும் இபாதத்துத்தான் என்பதை இதன்மூலம் புரிந்து கொள்கின்றோம்.

இஸ்மாயீல் திஹ்லவி, காஸீம் நானோத்தவி உள்ளிட்டோரின் நினைவு நாளை இன்று வரை மறுப்பாளர்கள் நினைவு கூறுகின்றனர்.

ஏதாவது ஒன்றுக்காக ஒருநாளைத் தீர்மானிப்பது ஷிர்க்கென்றால் தேவ்பந்து மத்ரஸாவில் பரீட்சைக்கான நாள் குறிப்பிடுவது, விடுமுறைக்காக றமழான் மாதத்தை தீர்மானிப்பது, பட்டமளிப்பு விழாவுக்காக நாள்குறிப்பது, மத்ரஸாவில் ஊதியத்தை நிர்ணயிப்பது, உண்பதற்கும், உறங்குவதற்கும் நேரம் குறிப்பது, ஜமாஅத் தொழுகைக்காக மணி , நிமிடம் குறிப்பது, நிகாஹ், வலீமா, அகீக்கா உள்ளிட்டவைக்கு திகதி குறிப்பது இவையெல்லாம் என்ன?

மீலாத் ஷரீபை ஷிர்க் என்பதற்காக தன்வீட்டுக்கே தீ வைக்க வேண்டாம்.

இப்படியான விடையங்களுக்கு வழக்கத்தையொட்டி திகதி குறிப்பிடப்படுகின்றன. குறிப்பிட்ட நாளைத் தவிர வேறு நாட்களில் மீலாத் ஷரீப் கொண்டாடக்கூடாது என்று எவரும் கூறுவதில்லை. றபீஉல்அவ்வல் மாதம் முழுக்க மீலாத் விழாக்கள் நடக்கின்றன..

எமது உத்திரபிரதேச மாநிலத்தில் சோதனைகள் உள்ள ஒவ்வொரு நேரத்திலும், யாராவது வபாத்தானதின் பின்பும் மௌலித் ஓதப்படுகின்றன. சகல இடங்களிலும் றபீஉல்அவ்வல் மாதம் பூறாவும் மீலாத் நிகழ்ச்சிகள் நடக்கின்றன.

ஆனால், தேவ்பந்தில் மட்டும் அவர்களின் பட்டமளிப்பு விழா மட்டும் கோலாகலமாக நடக்கின்றது. அங்கும் சில இடங்களில் பொதுமக்கள் மீலாத் ஷரீப் நடத்துவதாக கேள்விப்படுகின்றோம்.

ஒருதினத்தை, அல்லது ஒரு இடத்தை தீர்மானிப்பது சில காரணங் களுக்காக தடை செய்யப்பட்டுள்ளன என்பதை கவனத்தில் கொள்ள வேண்டும்.

1) ஏதாவது ஒரு தினம், அல்லது இடம் ஏதாவது சிலைகளோடு தொடர்பாக இருந்தால், உதாரணமாக, தீபாவளி, ஹோலி உள்ளிட்டவயைக் கண்ணியப்படுத்தும் நோக்கில் அன்றைய தினத்தில் ஏதாவது சமைப்பது, கோயிலுக்குச் சென்று தர்மம் செய்வது கூடாது.

மிஷ்க்காத்தில் நேர்ச்சை பற்றிய பாடத்தில் பின்வரும் ஹதீது பதிவாகியுள்ளது.

ஒருவர் *"புவானா"* என்ற இடத்தில் ஒட்டகம் அறுப்பதற்கு நேர்ச்சை செய்தார். அங்கே ஏதாவது சிலைஉண்டா? அல்லது காஃபிர்களின் விழாக்கள் நடக்கின்றதா? என்று அவரிடம் றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் கேட்டார்கள். இல்லை என்றார். அப்படியாயின், அங்கே சென்று உமது நேர்ச்சையை நிறைவேற்றும் என்று றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் கூறினார்கள்.

2) ஒன்றை குறிப்பிடுவதில் காஃபிர்களுக்கு ஒப்பாக இருத்தல்கூடாது.

3) ஒன்றைக் குறிப்பாக்குவதை வாஜிபாகக்கருதுதல்.

மிஷ்க்காத் ஷரீபில் சுன்னத்தான நோன்பு என்ற பாடத்தில் பின்வரும் ஹதீது பதிவாகியுள்ளது.

ஜும்ஆ தினத்தில் மட்டும் நோன்பு தோற்பது தடுக்கப்பட்டுள்ளது. அதில் யூதர்களுக்கு ஒப்பாக இருக்கின்றது.

4) அல்லது ஜும்ஆ தினத்தில் நோன்பு நோற்பதை வாஜிபாக கருதுவதற்கு தடையுள்ளது. ஜும்ஆவுடைய தினம் பெருநாளாகும்.. ஆத்தினத்தில் நோன்பு நோற்கக்கூடாது.

மேற்கண்ட குற்றச்சாட்டுக்களிலிருந்து மீலாத் விழா ஹறாம் என்பதற்கு மறுப்பாளர்களிடத்தில் எதுவித ஆதாரமும் கிடையாது என்பது வெட்ட வெளிச்சமாகிவிட்டது.

பிழையான கியாஸ் மூலமே மீலாத்விழாவை ஹறாம் என்ற விதையை விதைத்துள்ளனர். தெளிவாக புரிந்து கொள்ளுங்கள்!

கவிதை

பகைவர்களே! உங்கள் ஆட்டம் அழிந்து விட்டது! அழிந்து கொண்டே இருக்கின்றது!, அழிந்தே தீரும்.!

உமது பிரச்சாரத்தால் ஒருபோதும் அழியவுமில்லை! அழியும் மாட்டாது!

# ஆய்வு-10

# மௌலிதில் எழுந்து நிற்பது பற்றிய ஆய்வு!

இந்த ஆய்வில் ஒரு முன்னுரையும், இரு அத்தியாயங்களும் உள்ளன. முன்னுரையில் எழுந்து நிற்பது தொடர்பான முக்கிய ஆதாரங்கள் இடம் பெறும்.

தொழுகையில் இருவகையான இபாதத்துக்கள் உள்ளன.

1- சொல்சார்ந்தது.

2- செயல்சார்ந்தது.

திருக்குர்ஆனை ஓதுவது, றுகூஉ, சுஜூதில் ஓதப்படுகின்ற தஸ்பீஹ், அத்தஹிய்யாத் ஓதுதல் உள்ளிட்ட ஏனையவைகள் சொல் சார்ந்தவை

செயல்சார்ந்த பர்ளுகள் நான்கு!

1 - நிலை

2 - றுகூஉ

3 - ஸஜதா

4 - உட்காருதல்.

நிலை என்பதன் பொருள் சீராக நிற்க வேண்டும் கை முழங்கால் வரை செல்லாமல் தக்பீர் கட்டி நிற்க வேண்டும்.

றுகூஉ என்பது குனிந்து இரு கைகள் முழங்காலைத் தொட்டு இருக்க வேண்டும். இதனால்தான் வளைந்து கூனிப்போனவருக்குப் பின்னால் ஆரோக்கியமானவர் தொழுவது கூடாது. காரணம் அவரால் சீராக நிலையில் நிற்க முடியாது. றுகூஉம் சரியாகச் செய்ய முடியாது. எப்போதும் றுகூஉவிலேயே இருப்பார்.

ஸஜ்தா என்பது ஏழு உறுப்புக்கள் நிலத்தில் படவேண்டும்.

அதாவது, இருகால்பாதங்களின் உட்பகுதி முட்டுக்கால் இருகைகள், மூக்கு, நெற்றி, ஆகியன நிலத்தில் படவேண்டும்.

முந்திய நபிமார்களின் காலத்தில் எவராவது ஒருவருக்கு மரியாதை செலுத்துவதற்காக நிற்பது, றுகூஉ, சுஜூது செய்வது, முன்னால் அமர்ந்திருப்பது உள்ளிட்ட சகல செயல்களும் அனுமதிக்கப்பட்டிருந்தன. இவை இபாதத்தின் எண்ணத்தினால்அல்ல! கண்ணியம் மரியாதை என்ற விதத்தில் ஆகுமானது.

அல்லாஹு சுப்ஹானஹுவ தஆலாவுக்கு முன்னால் ஹளறத் ஆதம் அலைஹிஸ்ஸலா மவர்களுக்கு சுஜூது செய்விக்கப்பட்டது. ஹளறத் யஃகூப் அலைஹிஸ் ஸலாமவர்களும் அவர்களின் பிள்ளைகளும் ஹளறத்

யூஸுஃப் நபி அலைஹிஸ் ஸலாமவர்களைக் கண்ணியப்படுத்த சுஜூது செய்தனர். அல்குர்ஆன் இதை தெளிவாகக் கூறுகின்றது.

இஸ்லாம் கண்ணியத்திற்காக எழுந்து நிற்றல், உட்காருதல் உள்ளிட்டவையை அனுமதித்துள்ளது. மரியாதைக்காக றுகூஉ, சுஜூது செய்வதை ஹறாமாக்கியுள்ளது.

அல்லாஹ் அல்லாதவர்களை கண்ணியப்படுத்தி மேம்படுத்த றுகூஉ, செய்யலாம் என்பதை திருக்குர்ஆன் உறுதிப்படுத்துகின்றது. இந்த சட்டம் ஹதீதின் மூலம் மாற்றப்பட்டுள்ளது.

ஒருவருக்கு முன்னால் குனிவது, நிலத்தில் நெற்றியை வைப்பது றுகூஉ, ஸுஜூது செய்வதாக நினைக்கும் போதுதான் ஹறாமாகும் என்பதைக் கவனத்தில் கொள்ளல் வேண்டும்.

எவராவது ஒருபெரியாரின் பாதரட்சையை சரிசெய்வதற்காகக் குனிவது, அல்லது அவருடைய கையை முத்தமிடுவதற்காக குனிவது உள்ளிட்டவையை றுகூஉடைய எண்ணமில்லாமல் செய்தால் அது றுகூஉ ஆகாது. ஆனாலும் றுகூவின் எல்லைவரை குனிந்து ஒருவரைக் கண்ணியப்படுத்தி ஸலாம் கூறுவது ஹறாமாகும்.

ஏதாவது ஒரு செயலுக்காககுனியும், அந்த செயல் அவரைக் கண்ணியப்படுத்துவதாக இருந்தால் உதாரணமாக செருப்பை ஒழுங்கு படுத்துவது உள்ளிட்டதை போன்றிருந்தால் குற்றமில்லை.

இந்த நுட்பமான வேறுபாட்டை அவசியம் கவனத்தில் கொள்ள வேண்டும்.

ஷாமி என்ற நூலில் ஐந்தாம் பாகம் “வெறுக்கத்தக்கவை” என்ற அத்தியாயத்தில் பின்வருமாறு எழுதுகின்றார்கள்.

الاسلام في السلام الي قريب الركوع كالسجود وفي المحيط أنه يكره الحناء للسلطان وغير

ஸலாம் கூறுவதில் றுகூஇன் எல்லை வரை குனிந்து சைகை செய்வது சுஜூது செய்வது போன்று ஹறாமாகும். அரசர்களுக்கு முன்னால் குனிவதை மக்றூஹ் தஹ்ரீம் என்று “முஹீத்” என்ற நூலில் குறிப்பிடப்பட்டுள்ளது.

## அத்தியாயம்: 1

## மௌலிதில் எழுந்து நிற்பதற்கான சான்றுகள்.!

எழுந்து நிற்பது ஆறு விதத்தில் உள்ளன.

1- ஆகுமானது,

2- பர்ளு,

3- சுன்னத்,

4- முஸ்தஹப்பு,

5- மக்றூஹ்,

6- ஹறாம்.

ஒவ்வொன்றையும் புரிந்து கொள்வதற்கான விதிகளை நாம் முன்வைக்கின்றோம். இதன்மூலம் மௌலிதில் எழுந்து நிற்றல் எந்தத் தரத்திலிருக்கின்றது என்பது தானாகவே புரிந்து விடும்.

1- உலகத்தின் முக்கிய விவகாரங்களுக்காக எழுந்து நிற்றல் ஆகுமானது. இதற்கு நூற்றுக்கணக்கான உதாரணங்களைக் கூறமுடியும். கட்டிடம் கட்டுதல் உள்ளிட்ட உலகியல் காரியங்களைச் செய்தல்.

அல்லாஹுத் தஆலா கூறுகின்றான்.

فَاِذَا قُضِيَتِ الصَّلٰوةُ فَانْتَشِرُوْا فِى الْاَرْضِ

***நீங்கள் ஜும்ஆவை தொழுது முடித்து விட்டால், பூமியில் பரந்து செல்லுங்கள்.***

*அல் குர்ஆன் (62:10).*

எழுந்து நிற்காமல் பரந்து செல்வது சாத்தியமில்லை.

2- ஐவேளை பர்ழான தொழுகையிலும் வாஜிபான தொழுகையிலும் எழுந்து நிற்பது பர்ழாகும்.

அல்லாஹுத்தஆலா கூறுகின்றான்

وَقُوْمُوْا لِلّٰهِ قٰنِتِيْنَ

*அல்லாஹ்வுக்கு முன்னால் அவனுக்கு வழிப்பட்டவர்களாக எழுந்து நில்லுங்கள்!.*

*அல் குர்ஆன் (2:238).*

ஒருவருக்கு எழுந்து நின்று தொழ முடியுமாக இருந்து, உட்கார்ந்து தொழுதால் அத்தொழுகை நிறைவேறாது.

3- நபிலான தொழுகையில் எழுந்து நிற்பது சுன்னத் உட்கார்ந்தும் தொழ முடியும். நின்றுகொண்டு தொழுதால் அதிக நன்மை கிடைக்கும்.

4- சில சந்தர்ப்பங்களில் எழுந்து நிற்பது சுன்னத். மார்க்க ரீதியான பொருட்களைக் கண்ணியம் படுத்துவதற்காக எழுந்து நிற்பது சுன்னத் . ஆகவேதான் ஸம்ஸம் நீர், வுழுச்செய்தபின் அதன் எச்சநீர் போன்ற வற்றை நின்ற நிலையில் குடிப்பது சுன்னத்தாகும்.

பதாவா ஆலம் கீரியில் றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் புனித றௌழாவை ஸியாரத் செய்யும் ஒழுக்கம் என்ற பாடத்தில் பின்வருமாறு எழுதுகின்றார்கள்.

ويقف كما يقف في الصلوة ويمثل صورته الكريمةكانه نائم في لحده عالم به يسمع كلام

பரிசுத்தமான றௌழாவுக்கு முன்னால், தொழுகைக்கு எழுந்து நிற்பது போன்று நிற்க வேண்டும். பெருமானாரின் பேரழகை மனக்கண்ணில் பதிக்க வேண்டும். றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்கள் புனித கப்றில் சைனித்துக் கொண்டு தனது பேச்சைக் கேட்கின்றார்கள் என்று நினைக்க வேண்டும்.

இவ்வாறு சாதாரணமானவர்களின் கப்றை ஸியாறத் செய்யும் போதும் கிப்லாவை பின் நோக்கி கப்றை முன்னோக்கி நிற்பது சுன்னத்தாகும்.

பதாவா ஆலம் கீரியில் "ஸியாறத்துல் குபூர்" என்ற பாடத்தில் பின்வருமாறு எழுதுகின்றார்கள்.

يخلع نعليه ثم يقف مستدبر القبلة مستقبلا لوجه الميت

தனது செருப்பை கழட்ட வேண்டும். கிப்லாவுக்கு பின் காட்டி

மையத்தின் பக்கம் முகத்தை முன்னோக்கி நிற்க வேண்டும்.

புனித றௌழா ஷரீப், ஸம்ஸம் நீர், வுழுவின் எச்ச நீர், முஃமினின் கப்று உள்ளிட்டவை பறக்கத்தானவை அவற்றை நின்றுகொண்டு கண்ணியப்படுத்த வேண்டும்.

2) எவராவது ஒருமார்க்கப் பெரியார் வருகை தந்தால் ,அவரைக் கண்ணியப் படுத்துவதற்காக எழுந்து நிற்றல் சுன்னத்தாகும். இவ்வாறு ஒரு மார்க்க பெரியார் நிற்கும் போது உட்கார்ந்திருப்பது ஒழக்கமில்லாத செயலாகும்.

மிஷ்க்காத்தில் “ஜிஹாத்” பற்றிய அத்தியாயம் “எழுந்து நிற்றல்” என்ற பாடத்தில் பின்வரும் ஹதீது பதிவாகியுள்ளது.

ஹளறத் ஸஃதுப்னு முஆத் றழியல்லாஹு அன்ஹு மஸ்ஜிதுன் நபவிக்கு வந்ததும், “உங்கள் தலைவருக்கு எழுந்து நில்லுங்கள்! என்று அன்ஸாரிகளுக்கு றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்கள் கட்டளையிட்டார்கள்.

இது கண்ணியம் படுத்துவதற்காக நிற்பதைக் குறிக்கும்.

குதிரையிலிருந்து இறங்குவதில் உள்ள நிர்பந்தத்திற்காக உதவி செய்வது என்றிருந்தால், “*உங்கள் தலைவருக்கு*“ என்ற சொல்லை கூறியிருக்க மாட்டார்கள். இச்சொல்லின் மூலம் தலைவர் என்ற காரணத்தினால்தான் எழுந்து நிற்கச் செய்தார்கள் என்பதைப் புரிகின்றோம்.

குதிரையிலிருந்து இறங்கும்போது உதவி செய்வதற்காக எழுந்து நிற்குமாறு கூறியிருந்தால், அதற்கு இரண்டொரு நபர்கள் போதுமாயிருக்கும். அனைவரையுமே எழுந்து நிற்கச்சொன்னார்கள்.

குதிரையிலிருந்து இறங்குவதற்கு உதவிசெய்ய எழும்புவதாயின், சபையிலிருந்தவர்களில் சிலர் போயிருக்கலாம் குறிப்பாக அன்ஸாரிகளை ஏன்குறிப்பிட்டுக் கூறினார்கள்.? ஆகவே, கண்ணியப்படுத்தவே எழுந்திருக்கு மாறு கூறினார்கள் என்பதை ஏற்றுத்தான் ஆக வேண்டும்.

ஹளறத் ஸஃது றழியல்லாஹு அன்ஹு அனாஸாரிகளின் தலைவ ராவார்கள். அவர்களைக் கண்ணியம் படுத்தவே எழும்பச்சொன்னார்கள்.

قوموا الي سيدكم

“உங்கள் தலைவருக்காக எழுந்து நில்லுங்கள்”

என்பதில் வரும் இலா الي வுக்கு உதவி செய்வதற்காக எழும்பச் சொன்னார்கள் என்று கூறி ஏமாற்றப்பார்க்கின்றனர். அப்படியாயின்,

واذا قمتم الي الصلوة

தொழுகைக்காக எழுந்தால் என்பதில் வருகின்ற الي வுக்கு என்ன

கூறப்போகின்றார்கள்? உதவி செய்தல் என்று பொருள் வைத்தால், தொழுகை என்ன நோயாளியா? தொழுகைக்கு உதவி செய்வதற்காக எழுந்திருப்பதாக ஆகும்.

மேற்கண்ட ஹதீஸுக்கு "அஷிஃஃஅத்துல் லம்ஆத்" தில் பின்வருமாறு விளக்கம் எழுதப்பட்டுள்ளது.

ஹளறத் ஸஃஃது றழியல்லாஹு அன்ஹு அவர்களை பனூகுறைழா கோத்திரத்தாரின் விடயத்தில் தீர்ப்புக் கூறுவதற்காகவே அழைக்கப்பட்டார்கள். அவர்களின் கண்ணியத்தையும் கௌரவத்தையும் வெளிப்படுத்த வேண்டியது அந்தக் கட்டத்தில் பொருத்தமாக இருந்ததால்தான் எழுந்து மரியாதை செய்யுமாறு பணித்தார்கள்.

மிஷ்க்காத்தில் "எழுந்து நிற்றல்" என்ற பாடத்தில் பின்வரும் ஹதீது பதிவாகியுள்ளது.

فاذا قام قمنا قياما حتي نراه قد دخل بعض بيوت ازواجه

றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்கள் சபையிலிருந்து எழுந்தால், அன்னாரின் மனைவிமார்களின் வீட்டுக்குள் நுழைவதை காணும்வரை நாங்களும் எழுந்து நிற்போம்.

அஷிஃஃஅத்துல் லம்ஆத்தில் "ஒழுக்கம்" என்ற அத்தியாயத்தில் எழுந்து நிற்றல் என்ற பாடத்தில் "உங்கள் தலைவருக்கு எழுந்து நில்லுங்கள்" என்ற ஹதீஸின் விளக்கத்தில் பின்வருமாறு எழுதுகின்றார்கள்.

இந்த ஹதீஸை ஆதாரமாகக் கொண்டு ஸாலிஹான உலமாக்களைக் கண்ணியப் படுத்த வேண்டும் என்று பெரும்பான்மையான அறிஞர்கள் இஜ்மாவாகக் கூறியுள்ளனர்.

மார்க்கப்பெரியார்கள் வருகை தரும் போது எழுந்து நின்று மரியாதை

செய்வது சுன்னத் என்றும், இது தொடர்பில் பல ஹதீதுகள் வந்துள்ளன என்றும், இதற்கு எதிராக எந்தவொரு தடையும் வரவில்லையென்றும் இமாம் நவவி றஹ்மதுல்லாஹி அலைஹி குறிப்பிடுகின்றார்கள்.

உட்கார்ந்திருப்பவர் வருகை தருவோருக்காக எழுந்து நின்று மரியாதை செய்வது மக்றூஹ் அல்ல! என்று “கின்யா’ என்ற நூலில் கூறப்பட்டுள்ளது.

பதாவா ஆலம் கீரியில் “வெறுக்கத்தக்கவை” என்ற அத்தியாயத்தில் அரசர்களைச்சந்தித்தல் என்ற பாடத்தில் பின்வருமாறு எழுதப்பட்டுள்ளது.

تجوز الخدمة لغير الله تعالي بالقيام وأخذ اليدين والانحناء

அல்லாஹ் அல்லாதவர்களைக் கண்ணியப் படுத்தும் நோக்கில் எழுந்து நின்று மகத்துவம் செய்தல் முஸாபஹாச் செய்வதற்காக குனிவது உள்ளிட்ட சகலதும் ஆகுமாகும்.

றுகூஇன் எல்லையை விட குறைவாகவே குனிய வேண்டும். றுகூஇன் எல்லைவரை குனிந்து ஸலாம் கூறுவது ஆகாது. இதுபற்றி முன்னுரையில் குறிப்பிட்டுள்ளோம்.

துர்ருல் முக்தார் பாகம் 5 “வெறுக்கத்தக்கவை” என்ற பாடத்தின் இறுதியில் எழுதுகின்றார்கள்.

يجوز بل يندب القيام تعظيما للقادم يجوز القيام ولو للقاري بين يدي العالم

திருக்குர்ஆன் ஓதக்கூடியவர் வருகை தருகின்ற ஆலிமுக்கு எழுந்து நிற்பது ஆகுமானது போல வருகை தருகின்றவருக்காக எழுந்து நின்று மரியாதை செய்வதும் ஆகுமானதுமட்டுமல்ல சுன்னத்துமாகும்.

ஒருவர் திருக்குர்ஆன் ஓதிக் கொண்டிருக்கும் போதும் கூட ஓர்ஆலிம் வருகை தந்தால் அவருக்காக எழுந்து நின்று மரியாதை செய்வது சுன்னத் என்பதை இதன்மூலம் புரிந்து கொள்கின்றோம்.

இந்த சொற்றொடரின் விளக்கத்தில் ஷாமியில் பின்வருமாறு எழுதுகின்றார்கள்.

وقيام قاري القرآن لمن تجيئ تعظيما لا يكره إذا كان ممن يستحق التعظيم

திருக்குர்ஆன் ஓதிக் கொண்டிருப்பவர் வருகின்றவர் கண்ணியப்

படுத்துவதற்குத் தகுதியானவராக இருப்பின், அவரைக் கண்ணியப் படுத்துவதற்காக எழுந்து நிற்பது மக்றூஹ் அல்ல!

ஷாமி என்ற நூலில் பாகம் 1 “இமாமத் செய்தல்” என்ற பாடத்தில் இவ்வாறு எழுதப்பட்டுள்ளது.

தொழுகைக்காக ஒருவர் ஜமாஅத்தை எதிர்பார்த்து முதல் வரிசையில் நிற்கும் போது எவராவது ஓர்ஆலிம் அங்கே வந்தால், அவருக்காக இடத்தைவிட்டுக் கொடுது பின்வாங்குவது சுன்னத்தாகும். அவருக்கு முதல் வரிசையில் நின்று தொழுவதை விட இது சிறப்பாகும். இந்த மரியாதை உம்மதிலுள்ள உலமாக்களுக்களுக்கும் உரித்தாகும்.

ஹளறத் ஸித்தீக்குல் அக்பர் றழியல்லாஹு அன்ஹு தொழுவித்துக் கொண்டிருக்கும் போது றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்கள் வருகை தந்ததைக் கண்டதும் பின்னுக்குவந்து இமாமைப் பின்பற்றுபவராக நின்றார்கள். தொழுகையின் நடுவில் றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் இமாமானார்கள்.

மார்க்கப் பெரியார்களுக்கு இபாதத்தின் நடுவிலும் கூட மரியாதை செய்ய வேண்டும் என்பதை இதன்மூலம் புரிந்து கொள்கின்றோம்.

முஸ்லிம் ஷரீபில் இப்னு மாலிக் அவர்களின் தௌபா என்ற பாடத்தில் பின்வரும் ஹதீது பதிவாகியுள்ளது.

فقام طلحة ابن عبيدالله يهرول حتي صافحني وهناني

ஹளறத் தல்ஹா இப்னு உபைதுள்ளாஹ் றழியல்லாஹு அன்ஹு எழுந்து ஓடிவந்து என்னை முஸாபஹாச் செய்து வாழ்த்துக் கூறினார்கள்.

இந்த ஹதீதுக்குக் கீழ் இமாம் நவவி றஹ்மதுல்லாஹி அலைஹி விளக்கம் எழுதும் போது

فيه استحباب مصافحة القادم والقيام له اكراما والهرولة الي لقائه

வருகை தருவோரை முஸாபஹாச் செய்வதும், அவரைக் கண்ணியப்படுத்துவதற்காக எழுந்து நிற்பதும் அவரைச் சந்திப்பதற்காக ஓடோடிச் செல்வதும் சுன்னத் என்பதை இதன் மூலம் புரிந்து கொள்கின்றோம்.

3) தனக்கு விருப்பமானவர் எவராவது தன்னிடம் வந்தால், அவரை

மகிழ்விக்க எழுந்து சென்று அவர்களின் கையை முத்தமிடுவது சுன்னத்தாகும். மிஷ்க்காத்ஷரீபில் ஒழுகவியல் அத்தியாயத்தில் முஸாபஹாச்செய்தல் என்ற பாடத்தில் பின்வரும் ஹதீது இடம்பெற்றுள்ளது.

ஹளறத் ஸைத் இப்னு ஹாரிதா றழியல்லாஹு அன்ஹு றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் புனித வீட்டுக்கு வந்து கதவைத் தட்டியதும்

فقام رسول الله صلي الله عليه وسلم عريانا فاعتنقه وقبله

றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் மேலங்கியில்லாமல் எழுந்து நின்று ஆலிங்கனம் செய்து முத்தமிட்டார்கள்.

மிஷ்காத்தில் இதே பாடத்தில் வருகின்றது.

ஹளறத் பாத்திமத்து ஸஹ்றா றழியல்லாஹு அன்ஹா றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் திருச்சபைக்கு வருகைதந்தால்,

قام إليها فاخذ بيدها فقبلها واجلسها في مجلسه

அவர்களுக்காக எழுந்து சென்று அவர்களின் கையைப்பிடித்து முத்தமிட்டு தனது இருப்பிடத்தில் அமரச் செய்வார்கள்.

இவ்வாறே றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் இல்லம் சென்றால் ,அவர்களும் எழுந்து வந்து அன்னாரின் முபாறக்கான கையைப்பிடித்து முத்தமிட்டு தனது இருப்பிடத்தில் அமரச் செய்வார்கள்.

மிர்க்காத்தில் ஜனாஸாவோடு நடந்து செல்லல் என்ற பாடத்தில் பின் வருமாறு எழுதுகின்றார்கள்.

وفيه ايماء الي ندب القيام لتعظيم الفضلاء والكبراء

சங்கையானவர்களையும், கண்ணியத்திற்குரியவர்களையும் கண்ணியம் படுத்துவதற்காக எழுந்து நிற்பது சுன்னத் என்று இதில் சைகையாகச் சொல்லப்பட்டுள்ளது.

இதன்படி கண்ணியமானவர்களுக்காக எழுந்து நிற்பது சுன்னத் என்பதை இதன்மூலம் புரிந்து கொள்ள முடியும்.

4) எவராவது நண்பரின் செய்தியைக் கேட்டால், அல்லது ஒரு

மகிழ்ச்சியான செய்தியைக் கேள்விப் பட்டால், அந்த நேரத்திலும் எழுந்து நிற்பது சுன்னத் தாகும். ஸஹாபாக்கள் ஸலபுஸ்ஸாலிஹீன்களின் சுன்னத்தும் இதுவாகும்.

மிஷ்க்காத்தில் ஈமானுடைய பாடத்தில் பிரிவு மூன்றில் எழுதப்பட்டுள்ளது.

ஹளறத் உதுமான் றழியல்லாஹு அன்ஹு அறிவிக்கின்றார்கள்.

எனக்கு ஹளறத் ஸித்தீக்குல் அக்பர் றழியல்லாஹு அன்ஹு அவர்களிடமிருந்து மகிழ்ச்சியான ஒரு செய்தி வந்ததும்

فقمت إليه وقلت بابي انت وامي انت احق بها

எனது தாயும் தந்தையும் தங்களுக்கு அற்பணமாகட்டும்! இதற்கு தாங்கள் தான்மிகப் பொருத்தமானவர் என்று எழுந்து நின்று கூறினேன்.

தப்ஸீர் றூஹுல் பயானில் 48:29 திருவசனத்தின் விளக்கத்தில் பின்வருமாறு எழுதுகின்றார்கள்.

இமாம் தகியுத்தீன் சுப்கி றஹ்மதுல்லாஹி அலைஹி உலமாக்கள் நிறைந்த சபையிலிருக்கும் போது நபி புகழ் பாடுகின்ற ஒருவர் இரு பாசுரங்களைப் பாடினார்.

فعند ذلك قام الإمام السبكي وجميع من في المجلس فحصل انس عظيم

உடனே இமாம் சுப்கி றஹ்மதுல்லாஹி அலைஹி அவர்களும் சபையிலிருந்தவர்களும் எழுந்து நின்றார்கள். அப்போது அச்சபையில் மகத்தான பரவச நிலை காணப்பட்டது.

5) எவராவது ஒரு காபிர்களின் தலைவர் இஸ்லாத்தில் இணைவார் என்ற நம்பிக்கை காணப்படுமாயின், அவரைக் கண்ணியம் படுத்த அவருக்காக எழுந்து நிற்பது சுன்னத்தாகும்.

ஹளறத் உமர் பாறூக் றழியல்லாஹு அன்ஹு இஸ்லாத்தை ஏற்கும் நோக்கில் றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களிடம் வந்த போது றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்கள் எழுந்து நின்று தனது முபாறக்கான நெஞ்சை அவர் நெஞ்சோடு அணைத்தார்கள்.

பதாவா ஆலம்கீரியில் வெறுக்கத்தக்கவை என்ற பாடத்தில் திம்மிக் காபிர்கள் என்ற பாடத்தில் எழுதுகின்றார்கள்.

إذا دخل ذمي علي مسلم فقام له طمعا في اسلامه فلا بأس

எவராவது ஒரு திம்மிக்காபிர் இஸ்லாத்தில் வேட்கை கொண்டு ஒரு முஸ்லிமின் இல்லத்திற்கு வருகை தந்தால், அவருக்காக எழுந்து நிற்பது ஆகுமானது.

சில இடங்களில் எழுந்து நிற்பது மக்றூஹ் அல்லது ஹறாம்.

1) ஸம்ஸம் நீர், வுழுவின் எச்ச நீர் உள்ளிட்டவையைத் தவிர ஏனைய நீரை காரணமின்றி எழுந்து நின்று குடிப்பது மக்றூஹ் ஆகும்.

2) உலகியல் வாதியை உலகியல் இலாபத்திற்காக அவரைக் கண்ணியப் படுத்த எழுந்து நிற்பது மக்றூஹ் ஆகும்.

3) ஒரு காபிரின் செல்வத்திற்காக அவரைக் கண்ணியம் படுத்த எழுந்து நிற்பது மக்றூஹ்

பதாவா ஆலம் கீரியில் வெறுக்கத்தக்கவை என்ற பாடத்தில் பின் வருமாறு பதிவாகியுள்ளது.

وان قام له من غير ان ينوي شيئا مما ذكرنا او قام طمعا لغناه كره له ذلك

நாம் கூறிய வற்றில் ஒன்றையும் நினைக்காமல் அவரின் செல்வத்தில் ஆசைவைத்து அவருக்காக எழுந்து நிற்பது அவருக்கு மக்றூஹ் ஆகும்.

4) தன்னை கண்ணியப் படுத்த வேண்டும் என்று விருப்புபவரைக் கண்ணியப்படுத்த எழுந்து நிற்பதற்குத் தடையுண்டு.

5) ஒரு பெரியவர் சபையின் நடுவில் இருக்கும் போது அவரைச் சுற்றி கைகட்டி பந்தாவாக ஒரு கூட்டம் எழுந்து நிற்பார்களாயின், அது கடுமையாகக் கண்டிக்கத்தக்கதாகும். தனக்காக மற்றவர்கள் எழுந்து நிற்பதை விரும்புவதற்கு தடையுண்டு. இதற்கான சான்று அடுத்த பாடத்தில் வரும் இன்ஷாஅல்லாஹ்.!

இந்த வகைப்படுத்தலை அவசியம் கவனத்தில் கொள்ள வேண்டும்.

எழுந்து நிற்பதில் உள்ள சட்டங்கள் திட்டவட்டமாகிவிட்டதால் றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் பிறப்புச் செய்தியைக் கூறும்போது எழுந்து நிற்றல் ஸஹாபாக்கள் ஸலபுஸ்ஸாலிஹீன்களின் சுன்னதிலிருந்து நிரூபணமாகியுள்ளது காரணம், எழுந்து நிற்பது சுன்னத்தான 4வது காரணத்தில் உள்ளடக்கியுள்ளது.

1) மகிழ்ச்சியான செய்தியைக் கேட்கும் போதும், அல்லது

விருப்பத்திற்குரியவரின் செய்தியைக் கேட்கும் போதும் எழுந்து நிற்பது சுன்னத் என்பதை ஏற்கனவே கூறியுள்ளோம். மார்க்கத்தில் மகத்துவமானவரின் பொருளைக் கண்ணியம் படுத்துவதற்காக எழுந்து நிற்பது சுன்னத் என்பதை முதல் காரணத்தில் கூறியுள்ளோம்.

2) றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் பிறப்புச் செய்தியைக் கேட்பதை விட மிகைத்த சந்தோஷம் ஒரு முஸ்லிமுக்கு வேறு என்ன இருக்க முடியும்? ஒரு சந்தோஷமான செய்தியைக் கேட்கும் போது எழுந்து நிற்பது சுன்னத்தாகும்.

3) ஒரு முஸ்லிமுக்கு றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களை விட அதிக விருப்பத்திற்குரியவர் யார் இருக்கின்றார்கள்.? அவர்கள்தனது உயிர், பிள்ளைகள், தாய், தந்தை, செல்வம் உள்ளிட்ட யாவற்றையும் விட அதிக விருப்பத்திற்குரியவர்களாகும். ஆகவே, றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் பிறப்புச் செய்தியைக்கேட்கும் போது எழுந்து நிற்பது ஸலபுஸ் ஸாலிஹீன்களின் சுன்னத் தாகும்.

4) றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்கள் பிறந்த நேரம் மலக்குகள் நின்றுகொண்டிருந்தனர். ஆகவே, மீலாத் மௌலித் வேளையில் றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் பிறப்புச் செய்தியைக் கேட்கும் போது எழுந்து நிற்பது மலக்குகளின் செயலை ஒத்திருக்கின்றது.

5) றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்கள் தனது பண்புகளையும், தனது குடும்ப பாரம்பரியத்தின் சிறப்புக்களையும் மிம்பரில் ஏறி நின்றவர்களாக எடுத்துரைத்தார்கள் என்பதை ஏற்கனவே மீலாத் பற்றிய ஆய்வில் ஹதீதின் மூலம் எடுத்துக் கூறியுள்ளோம். இந்த செயல் மீலாதில் எழுந்து நிற்பதற்கு அடிப்படை ஆதாரமாக கிடைத்து விட்டது.

6) மீலாத் நேரத்தில் எழுந்து நிற்பதை ஷரீஅத் தடைசெய்ய வில்லை. சகல நாட்டிலும் முஸ்லிம்கள் இதை நன்மையான காரியம் என்று நம்பி செய்து வருகின்றனர்.

முஸ்லிம்கள் நல்ல செயலாக கருதுகின்ற எந்த செயலும் அல்லாஹ்விடத்திலும் நல்லதாகவே இருக்கும். இதுபற்றிய திட்டவட்டமான விளக்கத்தை மீலாத் மற்றும் பித்அத் பற்றிய ஆய்வில் விளக்கிக்

கூறியுள்ளோம். மேலும் முஸ்லிம்கள் சுன்னத்தாக நம்புகின்ற ஒரு செயல் ஷரீஅத்திலும் சுன்னத்துத் தான் என்பதை ஏலவே குறிப்பிட்டுள்ளோம்.

ஷாமி பாகம் 3 வக்பு பற்றிய பாடத்தில் பின்வருமாறு எழுதுகின்றார்கள்.

لان التعامل يترك به القياس لحديث ما رأه المؤمنون حسنا فهو عند الله حسن

வற்புறுத்தல், மற்றும் ஜனாஸா மற்றும் இதுவல்லாதவையில் கியாஸ் ஆகாததாகவே இருக்க வேண்டும். ஆயினும், பொதுமக்கள் இதை நடைமுறைப்படுத்துகின்றனர். ஆகவே, கியாஸ் இங்கு தவிர்க்கப்படுகின்றது. அதை ஆகுமானதாதுதான் என்று ஏற்க வேண்டியுமுள்ளது முஸ்லிம்கள் நல்லதாகக் காணும் ஒன்றில் ஹறாம் என்பதற்கான திட்ட வட்டமான ஆதாரம் இல்லையாயின், அங்கு கியாஸைத் தவிர்க்க வேண்டியது அவசியமாகும்.

துர்ருல் முக்தார் பாகம் 5ல் கூலிக்கு விடுதல் என்ற பாடத்தில் பின்வருமாறு எழுதப்பட்டுள்ளது.

وجاز اجارة الحمام لانه عليه السلام دخل حمام الجحفة وللعرف وقال النبي صلي الله عليه وسلم ما راه المؤمنون حسنا فهو عند الله حسن

குளியலறையை கூலிக்குக் கொடுப்பது ஆகுமானது. காரணம் றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்கள் ஜுஹைபா என்ற இடத்திலுள்ள குளியலறைக்குள் சென்றிருக்கின்றார்கள். ஆகவே ஊர்நடைமுறை தொடர்ந்துள்ளது. மேலும் முஸ்லிம்கள் நல்லதாகக்காண்பவை அல்லாஹ்விடத்திலும் நல்லதுதான் என்று றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்கள் கூறியுள்ளார்கள்.

இச்சொற்றோடருக்கு அடியில் ஷாமியில் பின் வரும் விளக்கம் எழுதப்பட்டுள்ளது.

قال ملا علي القاري ذكر الدميري والنووي انه ضعيف جدا

றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்கள் ஜுஹைபாவிலுள்ள குளியலறைக்குள் சென்றார்கள் என்ற தகவல் மிகவும் பலவீனமான தாகும். சிலர் இதனை இட்டுக்கட்டப்பட்ட மௌலூஊ என்றும் கூறியுள்ளனர். இதனால், குளியலறையில் குளிப்பது ஆகும்

என்ற சட்டம் ஊர்நடைமுறை என்ற ஒரேஒரு ஆதாரத்தின் மூலமே நிரூபணமாகியிருக்கின்றது. அதாவது, முஸ்லிம்கள் பொதுவாக ஆகுமானது என்று கருதிச் செய்பவை ஆகுமானதுதான்.

ஷாமியில் இதே இடத்தில் எழுதுகின்றார்கள்.

لأن الامصار يدفعون أجرة الحمام فدل اجماعهم علي جواز ذلك وان كان القياس ياباه

சகல நகரங்களிலும் குளியறைகளில் கூலி வாங்குகின்றனர். அது இஜ்மாஃவினடிப்படையில் ஆகுமானது என்று தெரியவருகின்றது. இது கியாஸுக்கு மாற்றமாக இருந்தாலும் சரிதான்.

குளியலறையில் வாங்குகின்ற கூலி கியாஸின் அடிப்படையில் ஆகாதவை. காரணம் செலவாகும் தண்ணியின் அளவை மட்டிட முடியாது. கூலிவாங்குவதில் பாவிக்கும் அளவுக்குத்தான் கூலி வாங்க வேண்டும் என்பது கட்டாயமாகும். ஆயினும், முஸ்லிம்கள் இதை நல்லதாகக் கருதுவதால் தான் இது ஆகுமாகின்றது.

மீலாத், மௌலிதில் றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் பிறப்புச் செய்தியைக் கேட்கின்ற போது எழுந்து நிற்பதை முஸ்லிம்கள் சுன்னத்தாகவே கருதுகின்றனர். ஆகவே, இதுவும் ஸுன்னத்துத்தான்.

7) அல்லாஹுத்த ஆலா கூறுகின்றான்.

وَتُعَزِّرُوْهُ وَتُوَقِّرُوْهُ

***முஸ்லிம்களே! நமது நபிக்கு உதவி செய்யுங்கள், அவரைக் கண்ணியப் படுத்துங்கள்.***

*அல் குர்ஆன் (48:09).*

கண்ணியம் எவ்வாறு செய்ய வேண்டும் என்ற எந்தவொரு கட்டுப்பாடும் இங்கு விதிக்கப்படவில்லை. எந்தெந்த காலத்தில் எந்தெந்த ஊரில் எவ்விதமான விதத்தில் கண்ணியப்படுத்த முடியுமோ அந்த விதத்தில் கண்ணியம் படுத்தலாம்.

றுகூஊ சுஜூது செய்வது போன்று ஷரீஅத் ஹராம் என்று கூறாத வகையில் கண்ணியம் அமைதல் வேண்டும்.

நமது காலத்திலும் அரசாங்க சட்டங்களை நின்ற வண்ணமே

பிரஸ்தாபிக்கின்றனர். ஆகவே, விருப்பதிற்குரியவரின் செய்தியையும் நின்று கொண்டே கூறவேண்டும்.

திருக்குர்ஆனில்,

كلوا واشربوا

உண்ணுங்கள் குடியுங்கள். இதில் பொதுவாக உண்பதற்கும், குடிப்பதற்கும் அனுமதியுள்ளது.

ஹலாலான சகலதையும் உண்ணுங்கள் குடியுங்கள். பிரியாணி, குளம்பு, குருமா உள்ளிட்ட சகலதும் ஹலால் தான். இவற்றில் உள்ளவை ஆரம்ப பொற்காலமான மூன்று நூற்றாண்டிலும் இல்லா திருந்தாலும் சரிதான்.

இவ்வாறுதான். توقروه அவரைக்கண்ணியப் படுத்துங்கள் என்பதும் பொதுவான கட்டளைதான். சகலவிதமான கண்ணியங்களும் அவை முதல் மூன்று நூற்றாண்டிலும் இல்லாதிருந்தாலும் ஆகுமானதுதான் என்பது இதன்மூலம் உறுதியாகி விட்டது.

8) அல்லாஹுத்த ஆலா கூறுகின்றான்.

وَمَنْ يُّعَظِّمْ شَعَآئِرَ اللّٰهِ فَاِنَّهَا مِنْ تَقْوَى الْقُلُوْبِ

***அல்லாஹ்வின் நினைவுச்சின்னத்தைக் கண்ணியப்படுத்துவது கல்பினால் செய்கின்ற தக்வாவில் நின்று முள்ளதாகும்.***

*அல் குர்ஆன் (22:32).*

தப்ஸீர் றூஹுல் பயானில் பின்வரும் திருவசனத்தின் விளக்கத்தில் எழுதுகின்றார்கள்.

وَتَعَاوَنُوْا عَلَى الْبِرِّ وَالتَّقْوٰى وَلَا تَعَاوَنُوْا عَلَى الْاِثْمِ وَالْعُدْوَانِ

***தக்வாவுக்கும் நன்மையிலும் ஒருவருக்கொருவர் உதவியாக இருங்கள். பகைக்கும் பாவத்திலும் ஒருவருக்கொருவர் உதவியாக இருக்க வேண்டாம்.***

*அல் குர்ஆன் (05:02).*

மகத்துவமிக்க ஒவ்வொரு பொருளும் அல்லாஹ்வின் நினைவுச் சின்னமாகும். அதற்குக் கண்ணியம் செய்ய வேண்டியது அவசியமாகும். உதாரணமாக, சில மாதங்கள், சில தினங்கள், சில இடங்கள், சில நேரங்கள் மற்றும் இவை தவிர்ந்தவைகள்; இதனால்தான் ஸபா, மர்வா, சங்கையான கஃபா, றமழான்மாதம், கத்றுடைய இரவு உள்ளிட்டவைக்கு கண்ணியம் செய்யப்படுகின்றது.

றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் பிறப்புச் செய்தியைக் கூறுவதும் அல்லாஹ்வின் நினைவுச் சின்னம்தான். ஆகவே அதற்கும் கண்ணியம் செய்ய வேண்டியது ஏற்றமாகும். அந்த கண்ணியம் எழுந்து நிற்பதன் மூலம் நிறைவேறுகின்றது.

எழுந்து நிற்பது தொடர்பாக எட்டு நியாயங்களை முன்வைத்துள்ளோம். ஆனால், மறுப்பாளர்களிடத்தில் அல்லாஹ்தான் அறிவான் ஹறாம் என்பதற்கு எந்த ஒரு ஆதாரமும் கிடையாது. கற்பனையால் மட்டுமே ஹறாம் என்று கூறுகின்றனர்.

# *அத்தியாயம் – 2*

# *மீலாதில் எழுந்து நிற்பது பற்றிய குற்றச்சாட்டுகளும், அதற்கான பதில்களும்.*

**குற்றச்சாட்டு : 1**

மீலாத் விழாவில் எழுந்து நிற்கும் வழக்கம் இஸ்லாத்தின் முதல் மூன்று நூற்றாண்டிலும் இருக்கவில்லை. ஆகவே, அது பித்அத் ஆகும். சகல பித்அத்துக்களும் ஹறாமாகும்.

றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களுக்கு கண்ணியம் செய்வதாக இருந்தால் அதை சுன்னத்தின் மூலமாக நிரூபிக்க வேண்டும். தங்களுடைய உருவாக்கங்களை இதில் நுழைக்கக்கூடாது. ஸஹாபாக்கள் இவ்வாறு செய்ய வில்லை. அவர்களை விடவா? நமக்கு றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் மீது மஹப்பத் அதிகமுண்டு?

**பதில் :**

பித்அத் பற்றிய குற்றச்சாட்டுக்களுக்கான பதிலை அதாவது, பித்அத்துக்கள் யாவும் ஹறாமல்ல! என்பதை தெளிவாக ஏற்கனவே கூறியுள்ளோம்.

றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களைக் கண்ணியப்படுத்துவதென்றால், அது சுன்னத்தின் மூலமாகவே நிரூபிக்க வேண்டும் என்ற கோட்பாடு றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களைக் கண்ணியம் படுத்துவதற்கு மட்டுமா? அல்லது, தேவ்பந்து உலமாக்களுக்கும் மற்றும், ஏனையவர்களுக்குமா?,

அப்படியாயின், கிதாபு மத்ரஸாக்களில் நடக்கின்ற ஒவ்வொரு பொருளுக்குமான கண்ணியத்தையும் சுன்னத்தின் மூலமே நிரூபிக்க வேண்டும்

தேவ்பந்து உலமாக்கள் வருகை தரும்போது புகையிரத நிலையத்திற்குச் சென்று அவர்களுக்கு மாலையிட்டு வரவேற்பது, அவர்களுக்காக ஊர்வலம் செல்வது, வீதியெங்கும் பதாகைகள், கொடிகள் மூலம் அலங்கரிப்பது, மேடையலங்காரம் செய்து சிம்மாசனம் போடுவது, கதிரைகள் போடுவது, உபதேசத்தின் மத்தியில் "ஜிந்தாபாத்" என்று கூறுவது சாய்ந்திருப்பதற்கு ஏற்ற பெரிய தலையணையை வைப்பது, விரிப்புக்கள் போடுவது

இன்னும் இதுவல்லாத கண்ணியங்கள் அனைத்தும் ஹறாமா? ஹலாலா? என்று சுன்னாவிலிருந்து நீங்கள் ஆதாரம் காட்ட வேண்டும். உங்களால் நிச்சயம் காட்டவே முடியாது!. ஆகவே நீங்கள் வகுத்த விதி

சுத்தத் தவறானதாகும்.

ஒவ்வொரு நாட்டிலும், ஊர்களிலும் என்னென்ன நடைமுறைகள் உள்ளனவோ, அவற்றில் சுஜூது, அல்லது றுகூஉ இல்லையாயின், ஆகுமானது தான். எப்பக்கம் மனம் வழிகாட்டுகின்றதோ அது இபாதத் ஆகும்.

ஒவ்வொரு ஊரிலும் ஒவ்வொருவிதமான நடைமுறைகள் இருக்கும். ஓர் ஊரில் கண்ணியமாகச் சொல்லப்படுகின்ற வார்த்தை வேறு ஓர் ஊரில் இகழ்ச்சியாக இருக்கும். (ஒருவர் பேச்சு மறு ஊருக்கு ஏச்சு என்று பொதுவாக தமிழிலும் கூறுவார்கள்.) ஆகவே, ஊர்நடைமுறையைக் கவனிக்கவேண்டும்.

மிர்க்காத், அஷிஃஃஅத்துல் லம்ஆத் உள்ளிட்ட நூற்களின் முன்னுரையில் பின்வருமாறு இமாம் மாலிக் றஹ்மதுல்லாஹி அலைஹி அவர்களின் வரலாற்றுப் பதிவு ஒன்று எழுதப்பட்டுள்ளது.

இமாம் மாலிக் றஹ்மதுல்லாஹி அலைஹி மதீனத்து புனித மண்ணில் ஒருபோதும் குதிரையில் சவாரி செய்ததில்லை. ஹதீது ஷரீபைப்பற்றி விளக்கம் கூறும் போது குளித்து உயர்ரக ஆடையணிந்து வாசம் பூசி கம்பீரமாக உட்காருவார்கள். புனிதமதீனா ஷரீப் மண்ணுக்கு, அல்லது ஹதீது ஷரீபுக்கு ஸஹாபாக்களில் எவராவது இவ்வாறு கண்ணியம் செய்திருக்கின்றார்களா? இல்லையே!

இமாம் மாலிக் றஹ்மத்துள்ளாஹி அலைஹி அவர்களின் மன உணர்வுக்கு ஏற்ற நற்கூலி கிடைக்கும்.

தப்ஸீர் றூஹுல் பயானில், சூறா அஹ்ஸாப் 40வது திருவசத்தின் விளக்கத்தில் பின்வருமாறு எழுதுகின்றார்கள்.

அயாஸின் மகனின் பெயர் முஹம்மது. சுல்தான் மஹ்மூது அவரின் பெயர் கூறியே அழைப்பது வழக்கம். ஒருதினம் குளியலையிலிருந்து கொண்டு அயாஸின் மகனே! தண்ணீர் கொண்டுவா!, என்று அழைத்தார். மன்னா! அடியேனின் பெயர்கூறாமல் எதற்காக இப்படி விளித்தீர்கள்? என்று பவ்வியமாகக் கேட்டார் அயாஸ். உன்னை நான் கூப்பிடும் போது எனக்கு வுழு இருக்கவில்லை என்று அடக்கமாக சுல்தான் பதில் கூறினார்.

இந்த கண்ணியத்திற்கு சான்று எங்கே உள்ளது? என்று கூறுங்களேன். சுல்தான் மஹ்மூதும், இமாம் மாலிக் றஹ்மதுல்லாஹி அலைஹி அவர்களும் சஹாபாக்களை விடவா றஸூலுள்ளாஹி ஸல்லாஹு அலைஹி வஸல்லமவர்கள் பேரில் காதல் கொண்டிருந்தனர்.?

**குற்றச்சாட்டு : 2**

றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களைக் கண்ணியப்படுத்துவதாயின், எழுந்து நின்று கண்ணியம் படுத்துங்கள்!. அதை மௌலிதின் ஆரம்பத்திலேயே செய்யுங்கள். ஆரம்பத்திலும், முடிவிலும் உட்காருகின்றீர்கள். நடுவிலே எழுந்து நிற்கின்றீர்கள். இது என்ன புதுமை?,

**பதில்:**

இது ஒரு குற்றச்சாட்டே கிடையாது. அல்லாஹுத்த ஆலா யாருக்காவது தவ்பீக் செய்தால், பெருமானாரின் ஒவ்வொரு புகழ் கூறும் போதும் எழுந்து நிற்கட்டும். மௌலிதின் ஆரம்பம் முதல் முடிவு வரை எழுந்து நிற்பதில் எங்களுக்குள் எந்தத்தடையும் கிடையாது. சகல நேரங்களிலும் எழுந்து நிற்கலாம். அல்லது சில நேரங்களிலும் எழுந்து நிற்கலாம். அனைத்தும் ஆகுமானதுதான்.

அஃலா ஹளறத் இமாம் அஹ்மது றிழாகான் றஹ்மதுல்லாஹி அலைஹி நின்று கொண்டே ஹதீது வகுப்பை நடத்துவார்கள். பாடம் கற்றவரும் நின்றுகொண்டே கற்றதாக என்னிடம் கூறினார். அவர்களின் இந்த செயல் உன்னதமான முபாறக்கான செயலாகும்.

மீலாதில் ஆரம்பம் தொட்டு இறுதி வரை நிற்பதால் பாமர மக்களுக்கு அதிக சிரமம் ஏற்படும். ஆகவேதான் பெருமானாரின் பிறப்புச் செய்தியைக் கூறும் போது மட்டும் எழுந்து நிற்கின்றார்கள். சிலர் உட்கார்ந்து கொண்டே தூங்கி விடுவார்கள். நின்று கொண்டு ஸலவாத்து ஸலாம் கூறும் போது தூக்கம் பறந்து விடும். ஆகவேதான் அந்த நேரத்தில் பன்னீர் தெளிக்கின்றனர். தண்ணீர் பட்டால் தூக்கம் கலைந்துவிடும்.

தொழுகையில் சில நிகழ்வுகளை நின்று கொண்டு ஓதுகின்றோம். சிலவற்றை றுகூஇலும், சுஜூதிலும், இருப்பிலும் செய்கின்றோமே! ஏன்? சகல நிகழ்வுகளையும் ஏன் நின்று ஓதக்கூடாது.?

அத்தஹிய்யாத்தில் அஷ்ஹது அன்லாயிலாக இல்லல்லாஹ் என்று கூறும் போது சுட்டு விரலை அசைக்க வேண்டும் என்று கட்டளையிடப் பட்டுள்ளது. ஆயிரமாயிரம் விடுத்தம் இந்தக் கலிமாவை மொழிகின்றீர்கள். அப்பொழுதெல்லாம் ஏன் விரலசைப்பதில்லை.?

ஸூபியாக்களின் சில வழீபாக்களில் சைக்கினையான சில விதியை வைத்திருக்கின்றனர்.

உதாரணமாக, வழக்கில் நீதிபதிக்கு முன்னால் சென்றால், كهيعص என்பதை ஒவ்வொரு எழுத்துக்கும் ஒவ்வொரு விரலை மட்டக்கவேண்டும். ஆடுத்து حمعسق என்பதை ஒவ்வொரு எழுத்தையும் கூறி கையை விரித்து நீதிபதிக்கு முன்னால் ஊதவேண்டும். திருக்குர்ஆனை ஓதும் போது இந்த

வகையான எழுத்துக்கள் வரும் போது ஏன் கையை பொத்துவதுமில்லை விரிப்பதுமில்லை?

இப்படியான சைக்கினைகள் ஸஹாபாக்களில் இருந்ததற்கு ஏதும் ஆதாரங்கள் இருக்கின்றனவா?

ஹிஸ்புல் பஹ்று ஓதும் வழக்கமுள்வர்கள் சில இடங்களில் குறிப்பாக சைக்கினை செய்கின்றனர். மற்ற இடங்களில் ஏன் சாடை செய்வதில்லை.

தவாபு செய்யும் போது முதல் நான்கு சுற்றிலும் குதித்து ஓடுகின்றனர். றமலிலும் இவ்வாறு செய்கின்றனர். அதற்குப்பின்னால் ஏன் செய்வதில்லை.? இப்படியான பல நூறு கேள்விகளை அடுக்க முடியும்.

இமாம் புகாரி றஹ்மதுல்லாஹி அலைஹி சில அறிவிப்புக்களை அறிவிப்பாளர் வரிசையோடு கூறியிருக்கின்றார்கள். சிலவற்றை அறிவிப்பாளர்கள் இன்றி கூறியிருக்கின்றார்கள். எல்லாவற்றையும் ஒன்று போல் ஏன் விளக்கிக் கூறவில்லை? இப்படியான செய்திகளினால் ஹறாம் வந்து விடவா போகின்றது.?

**குற்றச்சாட்டு : 3**

மீலாத் மௌலிதில் எழுந்து நிற்பதை மக்கள் கட்டாயமானதாகக் கருதுகின்றனர். இதைச் செய்யாதவர்கள் மீது குறை கூறுகின்றனர். கட்டாயமில்லாத ஒன்றை கட்டாயமானதாகக் கருதுவது ஆகாத காரியமாகும். ஆகவே, எழுந்து நிற்பது கூடாது.

**பதில்:**

மீலாதில் எழுந்து நிற்பதை வாஜிபாகக்கருதுகின்றனர் என்பது முஸ்லிம்கள் மீது கூறுகின்ற அப்பட்டமான அபாண்டமாகும். இவ்வாறு எந்தவொரு ஆலிமும் கூறியது கிடையாது. பிரசங்கத்திலும்யாரும் கூறியதுமில்லை. மீலாதில் எழுந்து நிற்பது நன்மையானது என்றுதான் பாமரனும் கூறுகின்றான். இப்படியிருக்கையில், மீலாதில் எழுந்து நிற்பது வாஜிப் என்று விளங்கிவைத்திருக்கின்றனர் என்று எப்படி குற்றம் சுமத்த முடியும்.?

இதை வாஜிப் என்றுதான் விளங்கிவைத்துள்ளனர் என்று வைத்துக் கொண்டாலும் அந்த விளக்கம் தான் தவறாகுமே தவிர, ஆகவே, எழுந்து நிற்பது ஒருபோதும் ஹறாமாக மாட்டாது.

தொழுகையில் அத்தஹிய்யாத்தில் ஸலவாத் ஓதுவது இமாம் ஷாபிஈ றஹ்மதுல்லாஹி அலைஹிடத்தில் பர்ழாகும். ஹனபிகளிடத்தில் அது வாஜிபல்ல! ஹனபிகளாகிய எங்களிடத்தில் அவர்களின் இக்கருத்து சரியல்ல! ஆகவே, தொழுகையில் ஸலவாத் ஓதுவதற்கு தடைவராது.

இதுபற்றிய தெளிவான விளக்கத்தை ஹாஜி இம்தாதுல்லாஹ் ஸாஹிப் ஹப்த்து மஸ்ஆலாவில் அழகாகக் கூறியுள்ளார்.

முஸ்லிம்கள் மீலாதில் எழுந்து நிற்பதை நேமமாகப் பேணி வருகின்றனர். இதைச்செய்யாதவர்களை "வஹாபி" என்கின்றனர். இது முற்றிலும் சரிதான்.!

மிஷ்க்காத்தில் "அமலில் நாட்டங்கொள்ளல்" என்ற தலைப்பில் பின்வரும் ஹதீது இடம் பெறுகின்றது.

أحب الاعمال الي الله ادومها وان قل

அல்லாஹ்வுக்கு மிக விருப்பமான அமல்கள் கொஞ்சமாக இருந்தாலும் சரி, தொடரச்சியாகச் செய்து வருவதாகும். இதனால்,நல்ல காரியத்தை தொடர்ச்சியாகச் செய்து வருவது சுன்னத்தாகும்.

முஸ்லிம்கள் ஒவ்வொரு பெருநாட்களிலும் நல்ல ஆடைகளையே அணிகின்றனர். ஒவ்வொரு ஜும்ஆவுக்கும் குளிக்கின்றனர். மணம் பூசுகின்றனர். றமழானிலும், ஜும்ஆவிலும் சகல மத்ரஸாக்களுக்கு விடுமுறை வழங்குகின்றனர்.

ஒவ்வொரு ஆண்டும் பரீட்சை நடத்துகின்றனர். ஒவ்வொரு இரவிலும் முஸ்லிம்கள் தூங்குகின்றனர். பகல் தோறும் சாப்பிடுகின்றனர். இவையாவற்றையும் வாஜிப் என்று விளங்கியா செய்கின்றனர்.? அல்லது, தொடர்ச்சியாகச் செய்து வருவது வாஜிபுக்கான அடையாளமா?

மீலாத், மௌலிதில் எழுந்து நிற்காதவர்களை வஹாபி என்று கூறுகின்றனர். அதற்கான காரணம் இதுதான். தற்காலத்தில் இந்தியாவில் மீலாத், மௌலிதில் எழுந்து நிற்காமலிருப்பது வஹாபிகளின் அடையாளமாகிவிட்டது.

ஈமான் உள்ளவர்களுக்கு ஒவ்வொரு காலத்திலும் வித்தியாசமான அடையாளங்கள் உள்ளன. அக்காலத்தில் வாழுகின்ற காஃபிர்களின் அடையாளங்களிலிருந்து தங்களைப் பாதுகாத்துக் கொள்வதற்காக ஈமான் உள்ளவர்கள் சில குறிப்பான அடையாளங்களைத் தெரிவு செய்து கொள்வது அவசியமாகும்.

இஸ்லாத்தின் ஆரம்ப காலத்தில் யார் "லாஇலாஹ இல்லல்லாஹ்"! என்று கூறுகின்றாரோ அவர் சொர்க்கவாதி என்று சொல்லப்பட்டது.

*(மிஷ்க்காத் ஈமான் பற்றிய பாடம்.)*

காரணம், அக்காலத்தில் கலிமாவை மொழிவது தான் ஈமானின் அடையாளமாக அப்போது இருந்தது. பின்னர், கலிமாவை மொழிவதில் நயவஞ்சகர்களும் நுழைந்து கொண்ட போது திருக்குர்ஆன் கூறுகின்றது.

நபியே! உங்களுக்கு முன்னால் முனாபிக்குகள் வந்து நீங்கள் அல்லாஹ்வுடைய றஸூல் என்று கூறுகின்றனர். நீங்கள் அல்லாஹ்வின் திருத்தூதர் என்பதை அல்லாஹுத் தஆலா நன்கு அறிவான். ஆயினும், முனாபிக்குகள் பொய்யர்கள் என்று அல்லாஹ் சாட்சி பகர்கின்றான்.

சொல்லுங்கள் பார்க்கலாம்.! முனாபிக்குகள் உண்மையைத்தானே கூறுகின்றனர். ஆயினும், பொய்யர்கள்என்றுஅவர்களை அல்லாஹுத்த ஆலா குறிப்பிடுகின்றான்.

மேலும், ஹதீது ஷரீபில் வருகின்றது.

ஒருகாலம் வரும். அக்காலத்தில் ஒருகூட்டம் அதிகமாக அமல் செய்கின்றவர்களாக இருப்பார்கள். ஆயினும், அவர்கள் வில்லிலிருந்து அம்பு சீறிப் பாய்ந்து செல்வதைப் போன்று இஸ்லாத்தை விட்டும் வெளியேறி விடுவார்கள்.

மேலும், ஹதீது ஷரீபில், கவாறிஜிகளின் அடையாளம் "தலை முடியைச் சிரைப்பது" என்றுள்ளது.

இந்த மூன்று காரியங்களும் மூன்று காலத்தைக் கவனித்துக் கூறப்பட்டதாகும்.

ஷறஹு பிக்ஹுல் அக்பரில் முல்லா அலி காரி றஹ்மதுல்லாஹி அலைஹி கூறுகின்றார்கள்.

ஒருவர் சுன்னத் வல்ஜமாஅத்தைச் சேர்ந்தவர் என்பதற்கான அடையாளம் என்ன? என்று யாரோ ஒருவர் இமாமுல் அஃழம் அபூஹனீபா றஹ்ம துல்லாஹி அலைஹியிடத்தில் கேட்டார். அதற்கு பின்வருமாறு கூறினார்கள்.

حب الختنين تفضيل الشيخين والمسح علي الخفين

இரண்டு மருமக்கள்மார்களாகிய ஹளறத் உதுமான் ஙனி, ஹளறத்

அலி றழியல்லாஹு அன்ஹுமா ஆகிய இருவரையும் நேசித்தல், இரண்டு ஷைய்குமார்களாகிய ஹளறத் அபூபக்கர் சித்தீக் றழியல்லாஹு அன்ஹு அவர்களையும், ஹளறத் உமர் பாறூக் றழியல்லாஹு அன்ஹு அவர்களையும் ஏனைய அனைவர்களையும் விட சிறப்பானவர்களாகக் கருதுதல். தோலால் செய்யப்பட்ட கால் மேசுக்கு மேல் மஸஹு செய்தல். என்று பதில் கூறினார்கள்.

சூறா அன்ஆம் 156 வது திருவசனத்தின் விளக்கத்தில் தப்ஸீர் அஹ்மதியில் பின்வருமாறு எழுதுகின்றார்கள்.

எவரிடம் பத்து விடயங்கள் வழக்கமானதாக உள்ளதோ அவர் சுன்னத் வல்ஜமாஅத்தைச் சேர்ந்தவராவார் என்று ஹளறத் அப்துல்லாஹ் இப்னு அப்பாஸ் றழியல்லாஹு அன்ஹுமா கூறுகின்றார்கள்.

அவையாவன,

١ تفضيل الشيخين ,٢- توقير الختنين ٣ تعظيم القبلتين ٤ الصلوة علي الجنازتين ٥ الصلوة خلف الامامين ٦ ترك الخروج علي الامامين ٧ مسخ علي الخفين ٨ والقول يالتقدير ين٩ والامساك عن الشهادتين ١٠واداء الفريضتين

மிர்க்காத்தின் ஆரம்பத்தில் கால்மேசில் மஸஹு செய்தல் பாடத்தில் கூறுகின்றார்கள்.

அஹ்லுஸ்ஸுன்னத் வல்ஜமாஅத்தின் அடையாளம் என்ன? என்று ஹளறத் அனஸ் றழியல்லாஹு அன்ஹு அவர்களிடம் கேட்கக்கப்பட்டதற்கு,

فقال أن تحب الشيخين ، ولا تطعن الختنين وتمسح علي الخفين

என்று பதில் கூறினார்கள்.

துர்ருல் முக்தாரில் தண்ணீர் பற்றிய பாடத்தில் எழுதுகின்றார்கள்.

والتوضء من الحوض افضل رغما للمعتزلة لا يجبونه من الحياض فرغمهم بالوضوء منها

முஃதஸிலாக்களுக்கு எரிச்சலை ஏற்படுத்துவதற்காக ஹவ்ழில் வுழுச்செய்வது ஏற்றமாகும்.

இதே இடத்தில் ஷாமியில் பின்வருமாறு எழுதப்பட்டுள்ளது.

لأن المعتزلة لا يجيزونه من الحياض فرغمهم بالوضوء منها

முஃதஸிலாக்கள் ஹவ்ழில் வுழுச் செய்வதை கூடாது என்கின்றனர். ஆகவே, நாம் ஹவ்ழில் வுழுச்செய்து அவர்களுக்கு எரிச்சலை ஊட்டவேண்டும்.

பாருங்கள்! ஹவ்ழில் வுழுச்செய்வது, கால்மேசில் மஸஹு செய்வது, இன்னும் இதுவல்லாத ஏனையவைகளும் வாஜிபானவற்றில் உள்ளதல்ல! ஆயினும், இதை மறுக்கின்றவர்கள் அக்காலத்தில் தோன்றிவிட்டனர். ஆகவே,இவை சுன்னத்து வல்ஜமாஅத்தின் அடையாள மாகிவிட்டது.

இவ்வாறுதான் மீலாதில் எழுந்து நிற்றல், கத்தம் பாத்திஹா ஓதுவது உள்ளிட்டவைகள் வாஜிபானவையல்ல! ஆனாலும், அதை மறுப்பவர்கள் தோன்றி விட்டனர். இதனால், இவை இந்தியாவில் அஹ்லுஸ்ஸுன்னத் வல்ஜமாஅத்தின் அடையாளங்களாகிவிட்டன. மீலாதில்நிற்காமல் தனித்துப் போய் நிற்பது தேவ்பந்திகளின் அடையாளமாகும்.

من تشبه بقوم فهو منهم

எந்தக் கூட்டத்தோடு யார் ஒப்பாகியிருக்கின்றாரோ அவரும் அந்தக் கூட்டத்தைச் சேர்ந்தவர்தான். ஆகவே,வழிகேடர்களைத் தவிர்ந்து கொள்ளவேண்டும்.

மேலும், ஷாமியின் மேற்கண்ட சொற்றொடரிலிருந்து பின்வரும் விளக்கத்தைப் பெற முடிகின்றது.

ஏதாவது ஓர் ஆகுமான காரியத்தை அல்லது, ஒரு சுன்னத்தான ஒன்றை காரணமின்றி மக்கள் தடுத்தால், அதை கண்டிப்பாகச் செய்ய வேண்டும்.

இப்போது இந்தியாவில் மாட்டை குர்பானி கொடுப்பதை ஹிந்துக்கள் தடுக்கின்றனர். குறிப்பாக மாட்டைத்தான் குர்பானி கொடுக்க வேண்டும் என்பது இஸ்லாத்தில் வாஜிபல்ல! ஆயினும், முஸ்லிம்கள் இரத்தம் சிந்தி அதைப் நடைமுறைப்படுத்துகின்றனர்.

இதேபோன்றுதான் மீலாதும் மீலாதில் எழும்பி நிற்பதுமாகும்.

சட்ட அறிஞர்களால் புகஹாக்களிடத்தில் பூநூல் போடுவது, ஹிந்துக்துக்களைப்போன்று குடுமி வைத்துக்கொள்வது, திருக்குர்ஆனை நஜீஸில் வீசுவது உள்ளிட்டவையை குப்று என்கின்றனர். காரணம், இவையாவும் காபிர்களுடைய மத்ஹபின் அடையாளமாகும்.

## முக்கிய குறிப்பு:

மூன்றாவது குற்றச்சாட்டில் கூறப்பட்டவையை அநேகமாக தேவ்பந்திகளே செய்கின்றனர். கத்தம், பாத்திஹா, மீலாத் உள்ளிட்ட சகலவற்றையும் இதன் காரணமாகவே ஹறாம் என்கின்றனர். நீங்கள்தான் சுன்னதுவல்ஜமாஅத்தின் ஆடையாளத்தை உருவாக்கிக் கொண்டுள்ளீர்கள் குர்ஆனிலோ,, ஹதீதிலோ இதற்கான அடையாளம் ஏதுவும் கிடையாது என்றும் கூறுகின்றனர். எல்லா இடங்களிலும் நாம் கூறிய இதே பதிலையே கூறுங்கள் அதிக பயனைக் கொடுக்கும் இன்ஷாஅல்லாஹ்!,

## குற்றச்சாட்டு : 4

எவராவது ஒருவரைக் கண்ணியப்படுத்துவதற்காக எழுந்து நிற்பதற்கு இஸ்லாத்தில் தடையுண்டு!.

மிஷ்க்காத்தில் எழுந்து நிற்றல் என்ற பாடத்தில் பின்வருமாறு எழுதப்பட்டுள்ளது.

وكانوا اذاراوهم لم يقوموا لما يعلمون من كراهيته لذلك

ஸஹாபாக்கள் றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்ல மவர்களைக் கண்டால் எழுந்து நிற்பதில்லை. காரணம், றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்கள் இதை விரும்ப மாட்டார்கள்என்பதை அவர்கள் அறிந்திருக்கினறனர்.

மிஷ்க்காத்தில் இதே பாடத்தில் அடுத்து வரும் விடயம் எழுதப்பட்டுள்ளது.

من سره أن يتمثل له الرجال قياما فليتبوء مقعده من النار

தனக்கு முன்னால் தனக்காக ஒருவர் எழுந்து நிற்பதை எவர் விரும்புகின்றாரோ அவர் தனது இடத்தை நரகத்தில் ஆக்கிக் கொள்ளட்டும்.

மிஷ்க்காத்தில் எழுந்து நிற்றல் என்ற பாடத்தில் எழுதப்பட்டுள்ளது.

لاتقوموا كما تقوم الاعاجم

அரபியல்லாத அஜமிகளைப் போன்று எழுந்து நிற்க வேண்டாம்.

மேற்கண்ட ஹதீதுகளின் மூலம் விளங்க வருவது யாதெனில்,

வாழ்நாளில் யக்ஷ எவராவது ஒரு பெரிய மனிதர் வந்தால், அவரைக் கண்ணியப்படுத்துவதற்காக எழுந்து நிற்கக்கூடாது. மீலாத் ஷரீபில் றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்கள் வந்தாலும் எழுந்து நிற்கக்கூடாது. அப்படியிருக்க கண்ணியத்திற்காக எழுந்து நிற்பது எப்படிக் கூடும்.?

**பதில்:**

மேற்கண்ட ஹதீதுகளில் பொதுவாக எழுந்து நிற்பதைத் தடைசெய்ய வில்லை. முதற்பாடத்தில் ஹதீதுகள், புகஹாக்களின் கூற்றுக்களிலிருந்து மேற்கோள் காட்டியவைக்கு எதிரானவையாக இருக்க வேண்டும். பின்வரும் காரணங்களுக்காக எழுந்து நிற்பதற்கு தடையுண்டு.

தனக்காக எழுந்து நிற்க வேண்டும் என்று விரும்புகின்றவர்களுக்கு முன்னால் எழுந்து நிற்பதும் ஒரு வழிகாட்டி அல்லது ஒருதலைவருக்குமுன்னால் அவர் உட்கார்ந்திருக்கும் போது மற்றவர்கள் எழுந்து நிற்பது போன்ற இவ்வகையான இரண்டு விதமான எழுந்து நிற்றலுக்கும் தடையென்று நாமும் தான் எழுதியுள்ளோம்.

முதல் ஹதீதிற்கு அடியில் அஷிஃஃஅத்துல் லம்ஆத்தில் எழுதப்பட்டுள்ளது.

சுருக்கம் இதுதான்!,. கண்ணியத்திற்காக எழுந்து நிற்பது, அல்லது, நிற்காமலிருப்பது கால சூழல் உரிய நபர்கள் உள்ளிட்டவையை கருத்தில் கொண்டு வேறுபடுகின்றன. இதனால்தான் ஸஹாபாக்கள் சில வேளை றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களைக் கண்டதும் எழுந்து நின்றார்கள்.

இதன்மூலம் ஸஹாபாக்கள் சில நேரங்களில் எழுந்து நிற்கின்றனர். சில வேளைகளில் எழும்பாமலும் இருந்திருக்கின்றனர் என்பதை இதன் மூலம் தெரிந்து கொள்கின்றோம்.

எழுந்து நிற்காததத்தற்கான காரணத்தை இப்போது கூறியுள்ளோம். நிற்பதற்கான காரணத்தை ஏற்கனவே குறிப்பிட்டுள்ளோம்.

றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்கள் எழுந்து நிற்பதைத் தடுத்தது பணிவு தன்னடக்கத்தினாலாகும். ஆகவே, எப்போதும்

எழுந்து நிற்பதற்கோ, பொதுவாக எழுந்து நிற்பதற்கோ தடைகிடையாது.

இரண்டு மூன்றாவது ஹதீதுகளுக்கு அடியில் அஷிஃஃஅத்துல் லம்ஆத்தில் இவ்வாறு எழுதப்பட்டுள்ளது.

எழுந்து நிற்பது தன்னில் மக்றூஹ் அல்ல! இன்னும் எழுந்து நிற்பதை எதிர்பார்த்தால் மக்றூஹாகும். எழுந்து நிற்பதை எதிர்பார்க்காதவர்களுக்கு எழுந்து நிற்பது மக்றூஹ் அல்ல!

இமாம் காழி இயால் றஹ்மதுல்லாஹி அலைஹி கூறுகின்றார்கள்.

எழுந்து நிற்பதற்குத் தடை வந்ததற்கான காரணம், அவர் இருந்து கொண்டிருக்க மற்றவர்கள் எழுந்து நிற்றல். உலகாயுதவாதிகளைக் கண்ணியப்படுத்துவதற்காக எழுந்து நிற்றல் போன்றவைக்கு கடுமையான எச்சரிக்கை விடுக்கப்பட்டுள்ளதோடு இச்செயல் மக்றூஹுமாகும்.

இவ்வாறே மிஷ்க்காத்தின் ஓரக்குறிப்பில் ஜிஹாத் பற்றிய அத்தியாயத்தில் கைதி பற்றிய பாடத்தின் கீழ் "உங்களின் தலைவருக்காக எழுந்து நில்லுங்கள்"! என்ற ஹதீதில் பின்வரும் சொற்றொடர் பதிவாகியுள்ளது.

قال النووي فيه اكرام اهل الفضل وتلقيهم والقيام اليهم واحتج به الجمهور وقال القاضي عياض ليس هذا من القيام المنهي عنه وانما ذلك فيمن يقومون عليه وهو جالس ويمثلون له قياما طول جلوسه

இமாம் நவவி றஹ்மதுள்ளாஹி அலைஹி கூறுகின்றார்கள்.

பெரியோர்களைக் கண்ணியப்படுத்துவது, அவர்களைச் சந்திப்பது அவர்களுக்காக எழுந்து நிற்பது உள்ளிட்டவைக்கு இதில் ஆதாரமுள்ளது. பெரும்பான்மையான உலமாக்கள் இதனை ஆதாரமாக எடுத்துள்ளனர்.

இவ்வகையான எழுந்து நிற்றலுக்கு எதுவித தடையும் கிடையாது. குறிப்பிட்ட ஒரு நபர் இருந்து கொண்டிருக்க மற்றவர்கள் எழுந்து நிற்பதுக்கும், அல்லது அவர் உட்காரும் வரை எழுந்து நிற்பதற்குத்தான் தடையிருக்கின்றது.

மேற்கண்ட சொற்றொடர்களிலிருந்து தெரிய வருவது யாதெனில்,

இந்த இரண்டு ஹதீதுகளிலும் குறிப்பான தடைகளுண்டு. மீலாத் விழாவில் எழுந்து நிற்பபது இவ்வகையான நிற்றலில் சேராது. கண்ணியத்திற்காக எழுந்து நிற்பதற்கும் தடையிருக்குமாயின், தேவ்பந்து உலமாக்களும் அவர்கள் அல்லாதவர்களும் வருகைதரும் போது தலைதெறிக்க எழுந்து நிற்பது மட்டும் எப்படி கூடுமோ?!.

# ஆய்வு-11

# 03ம், 10ம், 40ம் நாள் ஓதுவது பற்றிய ஆய்வு!

இந்த ஆய்வில் ஒரு முன்னுரையும் இரு அத்தியாங்களும் இடம் பெறும்

## முன்னுரை

உடலாலும், பொருளாலும் செய்கின்ற இபாதத்தின் தவாபை அடுத்த முஸ்லிம்களுக்கு சேர்த்து வைப்பது ஆகுமானது. இதற்கான ஆதாரம் திருக்குர்ஆன், ஹதீது, மற்றும் சட்ட அறிஞர்களான புகஹாக்களின் கூற்றுக்களில் காணக்கிடைக்கின்றன. முஸ்லிம்களில் ஒருவர் மற்றவருக்கு துஆக் கேட்பதற்கு திருக்குர்ஆன் கட்டளையிடுவதனால்தான் ஜனாஸாத் தொழுகை நடத்தப்படுகின்றது.

மிஷ்க்காத்தில் "ஸதக்காவின் சிறப்பு"! என்ற பாடத்தில் வருகின்றது. ஹளறத் ஸஃது றழியல்லாஹு அன்ஹு ஒரு கிணற்றைத் தோண்டிய பின், இது (மரணித்த) எனது தாய்க்குரியது என்று கூறினார்கள்.

புகஹாக்கள் ஈஸாலுத் தவாபின் சட்டத்தை பின்வருமாறு தெளிவு படுத்தியுள்ளனர்: உடல் ரீதியான இபாததத்தில் அடுத்தவருக்கு அதனைப் பகரமாக்குவது கூடாது. அதாவது, எவராவது ஒருவருக்காக மற்றவர் தொழுதால் அத்தொழுகை நிறைவேறாது. ஆனால், தொழுகையின் நன்மையைச் சேர்த்து வைக்க முடியும்.

மிஷ்க்காத்தில் "குழப்பங்கள்" என்ற பாடத்தில் வருகின்றது:

ஹளறத் அபூஹுறைறா றழியல்லாஹு அன்ஹு யாரோ ஒருவருக்கு இப்படிக் கூறினார்கள்.

من يضمن لي ان يصلي في مسجد العشار ركعتين ويقول هذه لابي هريرة

எனக்காக அல் ஆஷர் பள்ளியில் இரண்டு ரக்காஅத் தொழுது விட்டு இது அபூஹுறைறாவுக்குரியது என்று கூறுவதற்கு யாராவது பிணை நிற்பார்களா?

இதில் மூன்றுமார்க்கச் சட்டங்கள் தெரிய வருகின்றன:

1) உடலால் செய்கின்ற இபாதத் அதாவது, தொழுகையைக்கூட எவராவது ஒருவருக்கு ஈஸாலுத் தவாஃப் என்ற எண்ணத்தில் நிறைவேற்ற முடியும்.

2) யாஅல்லாஹ் இதன் தவாபை இன்னாருக்குச் சேர்த்துவை! என்று கூறினால் மிகநல்லது.

3) பறக்கத்தின் எண்ணத்தில் நாதாக்களின் பள்ளியில் தொழுவதும்

நன்மைக்குரியதுதான்.

பொருள் தொடர்பான இபாதத்தில் அல்லது பொருளும், உடலும் சேர்ந்த இபாத்தத்திலும் உதாரணமாக, ஸக்காத், ஹஜ் போன்றவற்றிலும் பகரமாக்கலாம். ஒருவர் மற்றவரிடம் எனது தரப்பிலிருந்து எனது ஸக்காத்தை நிறைவேற்று! என்று கூறி அவர் அதை நிறைவேற்றினால், நிறைவேறும். உடற்பலமில்லாத வசதியுள்ளவர் ஹஜ்செய்வதற்காக அடுத்தவரை பதிலுக்கு ஹஜ் செய்விக்கலாம்.

(ஷாபி மத்ஹபில் இவர் தனது கடமையான ஹஜ்ஜை ஏற்கனவே நிறைவேற்றியிருக்க வேண்டும்.) இப்படியான சகல இபாதத்துகளின் நன்மைகளும் கண்டிப்பாகச் சேரும். எவராவது ஒருவருக்கு தனது செல்வத்தை வழங்கினால், அவர் அதற்குச் சொந்தக்காறனாகிவிடுவார். இதுவும் இதுபோன்றதுதான். ஆனால், இதில் ஒரு வித்தியாசம் உண்டு.!

எவராவது ஒருவருக்கு தனது செல்வத்தை வழங்கினால், அது தன்னிடமிருக்காது. பலருக்கு பங்கிட்டுக் கொடுத்த பின் அதன் நன்மையை சகலருக்கும் சேர்த்துவைக்குமாறு துஆக்கேட்டால்அனைவருக்கும் முழுமையாகவே கிடைக்கும். அதனால் அவர் நன்மையில்லாத வெறுங்கையாளாக மாட்டார்.

உதாரணமாக, ஒருவர் வேறு ஒருவருக்காக திருக்குர்ஆனை ஓதுவித்து. அதன் தவாபை அனைவருக்கும் சேர்த்து வைத்தால், அனைவருக்கும் போய்ச்சேரும். அதன் நன்மை ஓதிவித்தவருக்கு கிடைக்காமல் போய்விடாது.

ஷாமி பாகம் 1ல் “மைய்யித்தை நல்லடக்கம் செய்தல்” என்ற பாடத்தில் இவ்வாறு கூறப்பட்டுள்ளது. பருவ வயதை எட்டாத சிறுபிள்ளையிடம் ஹதியா வாங்குவது கூடாது! ஆனால், தாவாபைப் பெற்றுக் கொள்வது ஆகும்.

தவாபை எவருக்கும் சேர்த்து வைக்க முடியாது என்று கூறும் சிலர்

لها ماكسبت وعليها ما اكتسبت

***‘‘ஒவ்வொரு ஆத்மாவுக்கும் அவராகச் செய்த நன்மையானவையும் தின்மையானவையும் தான் கிடைக்கும்‘‘***

என்ற திருமறை வசனத்தை ஆதாரமாகக்காட்டுகின்றனர். இதன்படி, மற்றவரின் செயல் தனக்குப் பயனளிக்காது என்று விளங்க முடிகின்றது என்பது அவர்கள் வாதமாகும். இது பிழையான விளக்கமாகும்.

காரணம், இத்திருவசனத்தில் வரும் لام லாம் என்ற இடைச்சொல் உரிமையைக் குறிக்கும்,தனது உரிமையில் உள்ள அமல்கள் மட்டும்தான் தனக்குக்கிடைப்பது உறுதி. அடுத்தவர் தனக்கு நன்மையைச் சேர்த்து வைப்பாரா? இல்லையா? என்பது நிச்சயமற்றது என்ற கருத்தையே மேற்படி திருவசனம் குறிப்பிடுகின்றது.

ஆகவே, திருக்குர்ஆனுக்குப் பிழையான விளக்கத்தைக் கூறுவோரின் ஏமாற்றிலிருந்து மதிமயங்கி விடாதே! (பார்க்க தப்ஸீர் கஸாயினுல் இர்பார் உள்ளிட்டவை).

ஒருவரின் செயல் மட்டும்தான் மரணத்தின் பின் சேரும் என்ற இந்தச் சட்டம் ஹளறத் இப்றாஹீம், ஹளறத் மூஸா அலைஹிமஸ்ஸலாம் அவர்களின் சுஹ்புகளில் ஊள்ளவையாகும்.தவிர இறுதி மார்க்கமாகிய இஸ்லாத்தில் உள்ளதல்ல! என்பதைக் கவனத்தில் கொள்ளல் வேண்டும். அடுத்தவரின் செயலின் நன்மை மரணித்தவருக்குச் சேரும் என்பதற்கு ஏராளமான மேற்கோள்கள் ஆதாரங்களாக இருக்கின்றன.

அல்லது, இத்திருவசனம் பின்வரும் திருவசனத்தின் மூலமாக மாற்றப்பட்டதாகும்.

وَاتَّبَعَتْهُمْ ذُرِّيَّتُهُم بِإِيمَـٰنٍ

***ஈமானின் மூலம் அவர்களின் பிச்சளங்கள் அவர்களைப் பின் பற்றுவார்கள்.***

*அல் குர்ஆன் (52:21).*

என்று திருமறை கூறுகின்றது.

இத்திருவசனத்தின் மூலம் மேற்கண்ட திருவசனத்தின் கருத்து மாற்றப்பட்டுள்ளது என்பது ஹளறத் அப்துல்லாஹ் இப்னு அப்பாஸ் றழியல்லாஹு அன்ஹுமா அவர்களின் மத்ஹபாகும்.

இதனால்தான் சிறு குழந்தைகளின் பறக்கத்தினால் பெற்றோர் சொர்க்கம் செல்கின்றனர். அமல்கள் இல்லாமலே பதவிகளையும் பெற்றுக் கொள்வார்கள்.

*(பார்க்க தப்ஸீர் ஷமல், காஸின்)*

அல்லது, இத்திருவசனம் உடல் ரீதியான அமல்களை அடுத்தவருக்கு

கொடுப்பதற்கான மறுப்பாகும். இதனால்தான் இத்திருவசனத்தில் كسب،سعي உழைப்பு, முயற்சி என்ற சொற்கள் பாவிக்கப்பட்டுள்ளன. ஹிபா நன்கொடை .என்ற வார்த்தை பாவிக்கப்படவில்லை

மேற்படி முதல் வசனம் நீதியைப் பற்றிக் கூறும் திருவசனமே தவிர கருணைக்கான திருவசனமல்ல, இவ்வாறான ஏராளமான கருத்துரைகள் இத்திருவசனத்திற்குண்டு என்பதைக் கவனத்தில் கொள்ளல் வேண்டும்.

ஒருவர் தனது செயலின் நன்மையை மரணித்தவருக்காகச் சேர்த்து வைக்கின்ற எண்ணத்தில் தான் 3ம், 10, 40 பாத்திஹாவும் மற்றும் இதுவல்லாத நன்மையானவைகளும் உள்ளடங்குகின்றன

கத்தம் பாத்திஹாவில் பின்வரும் அம்சங்கள் உள்ளடங்கியிருக்கின்றன.!

மரணித்தவர் பெயரால் திருக்குர்ஆன் ஓதப்படும், இச்செயல் உடல் ரீதியான இபாதத் ஆகும். அடுத்து உணவு, பணம் உள்ளிட்டவை வழங்கப்படும், இவை பொருளோடு தொடர்பான ஸதக்கவாகும்; உடல்சார்ந்ததும், பொருள் சார்ந்ததுமான இவை இரண்டும் சேர்ந்த தவாபை மரணித்தவருக்குச் சேர்த்து வைக்கப்படுகின்றன.

## அத்தியாயம் : 1

தப்ஸீர் றூஹுல் பயானில் 6:93 வது வசனத்தின் விளக்கத்தில் பின் வருமாறு எழுதுகின்றார்கள்.

وعن حميد الاعرج قال من قرأ القرآن وختمه ثم دعا امن علي دعائه اربعة ألاف ملك ثم لايزالون

يدعون له ويستغفرون عليه الي المساء او الي الصباح

ஹளறத் அஃறஜ் றழியல்லாஹு அன்ஹு அறிவிக்கின்றார்கள்:

எவராவது ஒருவர் திருக்குர்ஆனை ஓதி அதனைத் தமாம் செய்த பின், துஆக் கேட்டால், நான்காயிரம் மலக்குகள் அந்தத் துஆவுக்கு ஆமீன் கூறுகின்றனர். பின்னர், அவருக்காக மாலை அல்லது காலை வரை துஆவும், மன்னிப்பையும் கேட்டுக் கொண்டேயிருப்பார்கள்.

இதே விளக்கத்தை இமாம் நவவி றஹ்மதுல்லாஹி அலைஹி அவர்கள் தனது அல்அத்கார் என்ற நூலில் “திருக்குர்ஆன் ஓதுதல்” என்ற பாடத்திலும் குறிப்பிட்டுள்ளார்கள். இதன் மூலம் திருக்குர்ஆனை தமாம் (கத்மு) செய்யும் போது கேட்கின்ற துஆ கபூலாகும் என்பது தெரிய வருகின்றது.

ஈஸாலுத் தவாபும் ஒருவகையில் துஆதான். அதனால் அந்த நேரத்தில் கத்முல் திருக்குர்ஆன் மிக ஏற்றமாகும்.

அஷிஃஅத்துல் லம்ஆத்தில் “*ஸியாறத்துல் குபூர்*“ என்ற பாடத்தில் பின் வருமாறு எழுதுகின்றார்கள்.

ஒருவர் மரணித்து ஏழு நாட்கள் வரை ஸதக்காக் கொடுக்க வேண்டும்.

இதே நூலில் மேலும் எழுதுகின்றார்கள். வியாழக்கிழமை (வெள்ளி இரவு) மரணித்தவரின் றூஹு வீட்டுக்கு வருகின்றது. தனக்காக யாராவது ஸதக்காக் கொடுக்கின்றார்களா? இல்லையா? என்பதையும் அது கவனித்துக் கொண்டிருக்கின்றது.

சில இடங்களில் மரணித்து ஏழு நாட்கள் வரை தொடர்ச்சியாக றொட்டி சுட்டுக்கொடுப்பதும், வியாழக்கிழமை தோறும் (வெள்ளி இரவு) பாத்திஹா ஓதுவதும் நடைமுறையிலிருக்கின்றது. இதற்கு இதுதான் மூல ஆதாரம் என்பதை இதன்மூலம் தெரிந்து கொள்கின்றோம்.

இமாம் நவவி றஹ்மதுள்ளாஹி அலைஹி ஷறஹுல் முஹத்தப் பாகம் 5 பக்கம் 29 ல் எழுகின்றார்கள்.

يستحب ان يقرا عنده شيئ من القرآن وان ختموا القرآن كله كان افضل، شرح المهذب, ج،٥ص-٩٢

மைய்யித்தை அடக்கிய பின் கப்றடியில் இருந்து கொண்டு திருக் குர்ஆனில் சில பகுதிகளை ஓதுவது சுன்னத்தாகும். திருக்குர்ஆனை முழுமையாக ஓதுவது மிகச்சிறப்பாகும்.

*ஆதாரம்: ஜறஹுல் முஹத்தப்: பாகம்:5 பக்கம்:29.*

இமாம் ஹாபிழ் ஜலாலுத்தீன் சுயூத்தி றஹ்மதுல்லாஹி அலைஹி ஷறஹுஸ் ஸுதூர் பாகம் 1 பக்கம் 31 ல் இவ்வாறு எழுதுகின்றார்கள்.

قال الإمام جلال الدين السيوطي رحمه الله بعد بحث طويل عن وصول ثواب القراءة فمجموعها (المذكورات) يدل علي ان لذلك اصلا وبان المسلمين ما زالوا في كل عصر يجتمعون ويقرؤن من غير نكير فكان ذلك اجماعا ذكر ذلك كله الحافظ شمس الدين ابن الواحد المقدسي

மையித்துக்காக திருக்குர்ஆன் ஓதி ஈஸாலுத் தவாபு செய்வதைப் பற்றி ஒரு நீண்ட விளக்கத்தைக் கொடுத்த பின் கூறுகின்றார்கள்.

மேற் கூறப்பட்டவையின் சுருக்கம் யாதெனில், இதற்கு அடிப்படையான ஓர் ஆதாரம் இருக்கின்றது. அதாவது, சகல காலத்திலும் மக்கள் ஒன்று கூடி எந்தவிதமான மறுப்பு மின்றி மரணித்தவருக்காக திருக்குர்ஆன் ஓதி வருகின்றனர். அதனால் இது இஜ்மாஃவாகிவிட்டது. இவையனைத்தையும் ஹாபிழ் ஷம்சுத்தீன் இப்னு அல்வாஹிதுல் முகத்தஸி றஹ்மதுல்லாஹி அலைஹி கூறுகின்றார்கள்.

இமாம் நவவி றஹ்மதுல்லாஹி அலைஹி தஹ்தீபுல் அஸ்மாஇ வல்லுஙாத் என்ற நூலில் பாகம் 2 பக்கம்126 ல் எழுதுகின்றார்கள்.

قال النووي رحمه الله في ترجمة نصر المقدسي ذكر دمشقيون أنهم لم يروا جنازة مثلها قال واقمنا علي قبره سبع ليال نقرأ كل ليلة عشرين ختمة

நஸ்றுல் முகத்திஸி றஹ்மதுல்லாஹி அலைஹி வபாத்தான போது அவர்களின் ஜனாஸா வுக்கு மக்கள் திரண்டது போன்று அதற்கு முதல் டமஸ்கஸில் எவருக்கும் திரண்டதில்லை. நாங்கள் அவர்களின் கப்றடியில் இருந்து கொண்டு ஏழு நாட்கள் வரை தினமும் 20 குர்ஆனை ஓதி முடிப்போம் என்றும் கூறுகின்றார்கள்.

இமாம் அப்துல் வஹாபுஷ் ஷஃறானி றஹ்மதுல்லாஹி அலைஹி தன்பீஹுல் முங்தர்ரீன் என்ற நூல் பக்கம் 43ல் இமாம் சுப்யானுத் தௌரி

றஹ்மதுல்லாஹி அலைஹி அவர்களின் ஒரு கூற்றை பின்வருமாறு நக்லு செய்கின்றார்கள்.

أن الميت يفتن في قبره سبعة ايام ولذلك استحبوا التصدق عنه تلك المدة مساعدا له حتي يلقن حجته

மரணித்தவர் கப்றில் ஏழு நாட்கள் வரை சோதிக்கப்படுவார். அதனால் அந்தக்காலத்தில் அவருக்காக ஸதக்காக் கொடுப்பது சுன்னத்தாகும். அது அவருக்கு (மலக்குகளின் கேள்விகளுக்கான) ஆதாரத்தை முன்வைப்பதற்கு உதவி செய்யும்.

மரணித்தவருக்காக திருக்குர்ஆன் ஓதி அதன்தவாபை அவருக்குச் சேர்த்து வைப்பது இஜ்மாஃவின்படி சுன்னத் தாகும். மேலும், ஒருவர் மரணித்து ஏழு நாள் வரை மைய்யித்துக்காக ஸதக்காச் செய்வது அவரின் கப்றின் கேள்விகளுக்கு பதில் கூற துணை செய்யும் என்பதும், மரணித்து ஏழு நாட்கள் வரை திருக்குர்ஆன் ஓதுவது மறுப்பின்றி காலம் காலமாக நடந்துவருகின்ற சுன்னத்தான நடைமுறை என்பதையும் இதன் மூலம் தெரிந்து கொள்கின்றோம்.)

“அன்வாறுஸ்ஸாதிஆ” பக்கம் 145 மற்றும் ஹாஷியா கஸானத்துர் றிவாயாத் என்ற நூலிலும் பின்வருமாறு எழுதப்பட்டுள்ளது.

றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்கள் ஹளறத் அமீர் ஹம்ஸா றழியல்லாஹு அன்ஹு அவர்களுக்காக மூன்று, ஏழு, நாற்பது, ஆறாவது மாதம் பின் வருடம் முடிந்த பின் ஸதக்காக் கொடுத் தார்கள்.இது மூன்றாம் நாள், ஆண்டு கத்தத்திற்கான ஆதாரமாகும்.

இமாம் நவவி றஹ்மதுள்ளாஹி அலைஹி அத்காருன் நவவியில் எழுதுகின்றார்கள்.

ஹளறத் அனஸ் றழியல்லாஹு அன்ஹு கத்முல் திருக்குர்ஆன் செய்யும் போது வீட்டிலுள்ள குடும்பத்தார்களை அழைத்து துஆக்கேட்பார்கள்.

ஹளறத் ஹிகம் இப்னு அத்பா றழியல்லாஹு அன்ஹு கூறுகின்றார்கள்.

ஒரு கூட்டத்தினர் ஹளறத் முஜாஹித், ஹளறத், அப்தா. பின் அபீ லுபாபா றழியல்லாஹு அன்ஹுமா ஆகிய இருவரையும் அழைத்து. இன்று கத்முல் திருக்குர்ஆன் இங்கே நடக்கின்றது. கத்முல் குர்ஆன் செய்யும் நேரத்தில் துஆ கபூலாகின்றது ஆகவே தான் உங்களை அழைத்தோம் என்று அழைப்புக்கான காரணத்தைக் கூறினார்கள்.

ஹளறத் முஜாஹித் றழியல்லாஹு அன்ஹு அவர்களிலிருந்து ஸஹீஹான அறிவிப்பின் மூலம் நக்லு செய்கின்றார்கள்.

கத்முல் குர்ஆன் செய்யும் போது மார்க்கப் பெரியார்கள் மக்களை அழைத்து. இந்த நேரத்தில் றஹ்மத் இறங்குகின்றது என்றும் அவர்களுக்கு விளக்கம் கூறுகின்றனர்.

*ஆதாரம்: அல்அத்கார் நவவி.*

இதனால் மூன்றாம் நாள்(ஏழாம் நாள்) நாற்பதாவது நாள் பாத்திஹாவுக்கு மக்களை அழைப்பது ஸலபுஸ் ஸாலிஹீன்களின் (இஜ்மாஃவான) சுன்னத்தாகும்.

துர்ருல் முக்தாரில் "மையயித்தை அடக்கிய பின் திருக்குர்ஆன் ஓதுதல்" என்ற ஆய்வில் பின்வருமாறு எழுதுகின்றார்கள்.

وفي الحديث من قرأ الإخلاص احد عشر مرة ثم وهب اجرها للاموات اعطي من الاجر بعد الاموات

ஹதீது ஷரீபில் பின்வருமாறு கூறப்பட்டுள்ளது.

எவராவது ஒருவர் 12 விடுத்தும் சூறா இக்லாஸை ஓதி அதன் தவாபை மரணித்தவர்களுக்காக சேர்த்து வைத்தால், மரணித்தவர்களுக்கு அதன் நன்மை சமனாக வழங்கப்படும்.

ஷாமியில் இதே இடத்தில் எழுதப்பட்டுள்ளது.

ويقرء من القرآن ما تيسر له من الفاتحة واول البقرة الي المفلحون وأية الكرسي وأمن الرسول وسورة يس وتبارك الذي بيده الملك وسورة التكاثر والاخلاص اثني عشر مرة او احدي عشر او سبعا او ثلاثا ثم يقول اللهم اوصل ثواب ما قرأناه الي فلان او اليهم

எவராவது ஒருவருக்கு முடியுமாக இருந்தால் சூறா பகறாவின் ஆரம்பத்திலிருந்து முப்லிஹூன் வரையிலும், ஆயத்துல் குர்ஸிய்யி ஆமனற்றஸூல் சூறா யாஸீன் சூறா முல்கு, சூறா தகாதுர் சூறா இக்லாஸ் 13 அல்லது 11 அல்லது 7 அல்லது 3 விடுத்தம் ஓதிய பின், யாஅல்லாஹ்! இதன்நன்மையை இன்னாரின் றூஹுக்கு அல்லது இன்னின்னவர்கள் அனைவருடைய றூஹுகளுக்கும் சேர்த்து வைப்பாயாக! என்று கூறவேண்டும்.

மேற்கண்ட வாசகத்தில் நடைமுறையிலுள்ள பாத்திஹாவின் சகல

முறைகளும் கூறப்பட்டுள்ளன.அதாவது, மரணித்தவர்களுக்காக கத்தம், பாத்திஹா ஓதப்படும் அனைத்து இடங்களிலும் இருக்கும் நடைமுறை இதுதான்!

திருக்குர்ஆன் ஓதப்படும், பின்னர் ஈஸாலுத் தவாபுக்காக துஆக் கேட்கப்படும் துஆவில் கையேந்துவார்கள் இவையாவும் சுன்னத்தான நற்கருமங்களாகும். நடைமுறையிலுள்ள கத்தம், பாத்திஹாவுக்கான முழுமையான ஆதாரம் கிடைத்து விட்டது.

பதாவா அஸீஸியா பக்கம் 75ல் எழுதப்பட்டுள்ளது:

ஹளறத் ஹஸன், ஹளறத் ஹுஸைன் றழியல்லாஹு அன்ஹுமா ஆகிய இருவருக்கும் நேர்ந்து உணவு சமைத்து அதில் குர்ஆனில் வருகின்ற காபிரூன், இக்லாஸ், பலக், நாஸ் ஆகிய ஸூறத்துக்களையும் பாத்திஹாவையும் ஓதி ஆதன் தவாபை சேர்த்து வைப்பது அதிக பறக்கத்திற்குரியதாகும். இந்த உணவு மிகச் சிறந்ததுமாகும்.

இதே பதாவா அஸீஸியாவில் வருகின்றது:

எவராவது ஒருபெரியாரின் பேரில் பாத்திஹா ஓதுவது என்ற எண்ணத்தில் பாற்சோறு ஆக்கிக் கொடுப்பது ஆகுமானதுதான். அதில் எந்தத்தவறும் கிடையாது.

மறுப்பாளர்களுக்கும் ஷைகாகிய ஷாஹ் வலியுள்ளாஹ் கத்தஸல்லாஹு ஸிர்ரஹுல் அஸீஸ் அவர்கள் வபாத்தாகி மூன்றாம் நாளன்று எண்ணிக்கைக்கு அப்பாற்பட்ட சனத்திரள் கூடியது. 81 விடுத்தத்தை விடவும் அதிகமான கத்முல் குர்ஆன் ஓதப்பட்டதோடு கணக்கிற்கு அப்பால் ஏராளமான கலிமா தைய்யிபாவும் ஓதப்பட்டது.

இதில் மூன்றாம் நாள் பாதிஹா ஓதுவதற்கும், கத்முல்குர்ஆன் நிகழ்த்துவதற்கும் ஆதாரம் கிடைத்து விட்டது.

தேவ்பந்து மத்ரஸாவின் நிறுவனர் மௌலவி காஸிம் நானோத்தவி "தஹ்தீறூன் நாஸ்" என்ற நூல் பக்கம் 24ல் எழுதுகின்றார்.

ஹளறத் ஜுனைதுல் பகுதாதி றழியல்லாஹு அன்ஹு அவர்களின் முரீதுகளில் ஒருவரின் முகத்தில் அடிக்கடி நிறம் மாறிக் கொண்டிருந்தது. அதற்கான காரணத்தை அவரிடம் கேட்ட போது எனது தாய் நரகத்தில் வேதனை செய்யப்படுகின்றார் என்று கஷ்பின் மூலம் அறிந்து கூறினார்.

ஹளறத் ஜுனைத் றழியல்லாஹு அன்ஹு ஓர் இலட்சத்தி ஐயாயிரம் கலிமாத்தைய்யிபாவை ஓதி வைத்திருந்தார்கள். இந்தளவு கலிமாவின் தவாபினால் மன்னிப்புக் கிடைக்கும் என்று வாக்குக் கூறப்பட்டிருக்கின்றது.

அதனால் மனதில் அவரின் தாய்க்கு அதன் தவாபைச் சேர்த்து

வைத்தார்கள். அவர்கள் இவ்வாறு சேர்த்து வைத்தது பற்றி அவருக்குச் சொல்லவில்லை. அந்த வாலிபர் மகிழ்ச்சியால் சிரித்தார். ஏன் சிரிக்கின்றீரகள்? என்று கேட்டதற்கு எனது தாய் சொர்க்கத்திலிருப்பதைப் பார்க்க்கின்றேன் என்றார்.

இதை வைத்து ஹளறத் ஜுனைதுல் பகுதாதி றஹ்மதுல்லாஹி அலைஹி கூறினார்கள்.இந்த வாலிபரின் கஷ்பால் ஹதீது ஸஹீஹாகி விட்டது என்று எனக்குத் தெரிந்து விட்டது என்றார்கள்.கஷ்பாலும் ஹதீது ஸஹீஹாகும். என்பதை இதை வைத்து அறிஞர்கள் தீர்மானித்தார்கள்.

இதன் மூலம் ஓர் இலட்சத்தி ஐயாயிரம் தடவை கலிமாத் தைய்யிபாவை ஓதி மரணித்தவருக்கு அதன் தவாபைச் சேர்த்து வைத்தால், அவரின் பாவங்கள் மன்னிக்கப்படும் என்பதில் நம்பிக்கை வைக்க முடியும்.

மூன்றாம் நாள் பாத்திஹாவில் உணவுக்குப் பதிலாக கடலை அவித்து மேற்படி முறைப்படி ஓதும் வழக்கம் (இந்தியா, பாகிஸ்தானில்) நடைமுறையிலிருக்கின்றது.

(மிர்க்காத் உள்ளிட்ட வேறு சில நூற்களில் இந்த நிகழ்வு இவ்வாறு எழுதப்பட்டுள்ளது. ஷைகுல் அக்பர் இப்னு அரபி றஹ்மத்துள்ளாஹி அலைஹி அவர்களும் இருக்கும் சபையில் கஷ்புள்ளவர் என்று கருதப்படுகின்ற ஒரு வாலிபரும் இருந்தார்.

அந்த வாலிபர் திடீரென அழுதார். அழுகைக்கான காரணத்தைக் கேட்டதும் எனது தாய் நரகத்திலிருப்பதைக் காண்கின்றேன் என்றார். இப்போது ஹளறத் ஷைகுல் அக்பர் றழியல்லாஹு அன்ஹு ஏற்கனவே 70,000 தடவை கலிமா தைய்யிபாவை ஓதி வைத்திருந்தார்கள். உடனே அதன் தவாபை அவரின் தாய்க்கு ஈஸாலுத் தவாபு செய்தார்கள். மறுவினாடி இந்த வாலிபர் முறுவலித்தார். காரணம் கேட்ட போது இப்போது எனது தாய் சொர்க்கத்திலிருக்கின்றார் என்றார்.

"யாராவது ஒருவர் 70,000 தடவை கலிமா தைய்யிபாவை ஓதினால், அவருக்கு நரக விடுதலை கிடைக்கும்" என்று ஹதீஸில் வருகின்றது. ஸனதின் அடிப்படையில் இந்த ஹதீது ழயீபாகும். ஆயினும், வாலிபரின் கஷ்பினால் ஹதீது ஸஹிஹாஹி விட்டது. ஹதீதினால் வாலிபரின் கஷ்பும் நிரூபணமாகி விட்டது. மேற்கண்ட சகல மேற் கோள்களிலிருந்தும் நடைமுறையிலிருக்கின்ற 3- நாள் உள்ளிட்ட சகல பாத்திஹாக்களுக்குமான ஆதாரங்கள் கிடைத்து விட்டன.

பாத்திஹா ஓதும் போது ஐந்து ஆயத்துக்கள் ஓதுவது, பின்னர் ஈஸாலுத் தவாபுக்காக கையேந்தி துஆக் கேட்பது மூன்றாம் நாளில் திருக்குர்ஆன்

ஓதுவது கலிமாத் தைய்யிபா ஓதுவது, உணவு சமைத்து நேர்ச்சை செய்வது உள்ளிட்ட சகலதும் ஆதாரங்களுடன் விளங்கிவிட்டன.

நடைமுறையிலுள்ள வழக்கத்தில் உணவை முன்னால் வைத்து கையேந்தி துஆக்கேட்பது மட்டும் எஞ்சியிருக்கின்றது.

இது தொடர்பாக பல நடைமுறைகள் காணப்படுகின்றன.

1- சில இடங்களில் முதலில் ஏழைகளுக்கு உணவைப் பகிர்வர். பின்னர் ஈஸாலுத் தவாபு செய்வர். அதன்பின்பு சாப்பிடக் கொடுப்பார்கள்.

இந்தியாவில் உத்தரப்பிரதேஸ், பஞ்சாப் மாநிலங்களிலும் மற்றும் அரபு நாடுகளிலும் உணவை முன்னால் வைத்து ஈஸாலுத்தவாபு செய்த பின் சாப்பிடக் கொடுப்பார்கள்.மேற்கண்ட இரண்டுமுறை பற்றியும் ஹதீதில் வந்துள்ளன.

மிஷ்க்காத் ஷரீபில் இதுபற்றி பல அறிவிப்புக்கள் காணப்படுகின்றன:

றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹுஅலைஹி வஸல்லம் அவர்கள் உணவை முன்னால் வைத்துக்கொண்டு உணவுக்குரியவருக்கு துஆச் செய்வார்கள். பின்னர், சாப்பிட்ட பின்னர் விருந்தாளிகளுக்கு அழைப்புக் கொடுக்குமாறு பணிப்பார்கள்.

இவ்வாறே மிஷ்க்காத்தில் "உணவின் ஒழுக்கங்கள்" என்ற பாடத்தில் பின்வருமாறு உள்ளது:

றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்கள் சாப்பிட்டு முடித்த பின்,

الحمد لله حمدا كثيرا طيبا مباركا فيه غير مكفي ولا مودع ولا مستغني عنه ربنا

என்று துஆக் கேட்பார்கள். இதிலிருந்து சாப்பிட்ட பின்,

1) அல்லாஹுத்தஆலாவைப் புகழ்வது,

2) உணவுக்குரியவருக்கு துஆச் செய்வது.

ஆகிய இரு விடயங்களும் சுன்னத்தான காரியங்கள் என்று தெரிய வருகின்றது.

பாத்திஹா ஓதுவதில் அல்லாஹ்வைப் புகழுவது, உணவுக்குரியவருக்குத் துஆச்செய்வது ஆகிய இவ்விரண்டும் உள்ளடங்குகின்றன என்பது கவனிக்கத்தக்கது. பெரும்பாலும் மறுப்பாளர்களும் கூட இந்தளவு செய்வதற்கு மறுப்புத் தெரிவிக்க மாட்டார்கள் போலும்! உணவை முன்னால் வைத்து துஆக் கேட்பது தொடர்பாக ஏராளமான ஹதீதுகள் காணக்கிடைக்கின்றன.

மிஷ்க்காத்தில் முஃஜிஸாத் என்ற பாடத்தில் இரண்டாவது பிரிவில் பின்வரும் ஹதீது இடம் பெறுகின்றது.

ஹளறத் அபூஹுறைறா றழியல்லாஹு அன்ஹு கூறுகின்றார்கள்.

நான் சிறிதளவு காய்ந்த பேரித்தம் பழத்தை றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களிடம் கொண்டு வந்து இதில் பறக்கத் வருவதற்குத் துஆச்செய்யுமாறு வேண்டினேன்.

فضمهن ثم دعا لي فيهن بالبركة

நபியவர்கள் அதனை கலந்தார்கள். பின்னர் பறக்கத்திற்காக துஆச்செய்தார்கள்.

இதே பாடத்தில் முதலாம் பிரிவில் வருகின்றது.

தபூக் யுத்தத்தில் முஸ்லிம் வீரர்களுக்கு உணவுப் பஞ்சம் ஏற்பட்டது. அச்சேனையிலிருந்த அனைவரிடமும் இருப்பதைக் கொண்டு வருமாறு நபியவர்கள் கட்டளையிட்டார்கள். அவர்களிடம் எவ்வளவு இருந்ததோ அதனைக் கொண்டு வைத்தனர். அதை ஒரு விரிப்பில் கொட்டிய பின்,

فدعا رسول الله صلي الله وسلم بالبركة  ثم قال خذوا في اوعيتكم

றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்கள் அதில் துஆச்செய்த பின், உங்களுடைய பாத்திரங்களில் நிறைத்துக் கொள்ளுங்கள் என்றார்கள்.

இதே மிஷ்க்காத்தில் இதே பாடத்தில் வருகின்றது.

றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்கள் பீவி ஜைனப் றழியல்லாஹு அன்ஹா அவர்களை தபூக்கில் வைத்துத்தான் நிகாஹ் செய்தார்கள்.

ஹளறத் உம்மு சுலைம் றழியல்லாஹு அன்ஹா அவர்கள் வலிமாவுக்காக சிறிதளவு உணவு சமைத்திருந்தார்கள். ஆனால், அநேகம் பேர் அழைக்கப்பட்டார்கள்.

فرايت النبي صلي الله عليه وسلم وضع يده علي تلك الحيسة وتكلم بما شاء الله

அந்த உணவில் பெருமானார் றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் முபாறக்கான கையை வைத்து ஏதோ கொஞ்சம் ஓதினார்கள்.

இதே மிஷ்க்காத்தில் இதே பாடத்தில் வருகின்றது:

இந்த யுத்தத்தின் போது ஹளறத் ஜாபிர் றழியல்லாஹு அன்ஹு சிறிதளவு உணவு சமைத்து றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களை விருந்துக்கு அழைத்தார்கள். றஸூலுளளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் ஹளறத் ஜாபிர் றழியல்லாஹு அன்ஹு அவர்களின் வீட்டுக்கு வருகை தந்தார்கள்.

فاخرجت له عجينا فبصق فيه وبارك

நபியவர்களுக்கு முன்னால் குழைத்த மாவை கொண்டுவந்து வைக்கப்பட்டது. அதில் முபாறக்கான உமிழ்நீரை உமிழ்ந்து விட்டு அதற்காகத் துஆச்செய்தார்கள்.

இது போன்ற பல றிவாயத்துக்களை முன்வைக்க முடியும். ஆயினும் இத்தோடு நிறுத்திக் கொள்கின்றோம்.

இப்போது பாத்திஹாவின் சகல பகுதிகளுக்குமான ஆதாரங்கள் கிடைத்துவிட்டன. அல்ஹம்துலில்லாஹ்.!

பகுத்தறிவு ரீதியாகப் பார்த்தாலும் கூட பாத்திஹாவில் எதுவித குற்றமும் கிடையாது. இதைப்பற்றி முன்னுரையிலேயே குறிப்பிட்டுள்ளோம். அதாவது, பாத்திஹா என்பது இரண்டு இபாதத்துக்களின் கூட்டுக்குரிய பெயராகும்.

1-திருக்குர்ஆன் ஓதுவதும்,

2-ஸதக்காக் கொடுப்பது,

இவையிரண்டையும் தனித்தனியாகப் பார்க்கும் போது ஆகுமானதாக இருக்கும் போது அதைச் சேர்த்துச் செய்யும்போது எப்படி ஹறாமாகும்.?

பிரியாணி சாப்பிடுவதற்கு எங்கும் ஆதாரம் கிடையாது. ஆனாலும் அது ஹலால்தான். காரணம் பிரியாணி என்பது அரிசி, இறைச்சி(கறி) நெய் இன்னும் இவை தவிர்ந்த ஏனைய மஸாலாபோன்றவையின் கூட்டாகும்.

அதன் சகல பாகங்களும் ஹலாலாக இருக்கும் போது பிரியாணியும் ஹலாலாகும்.

எங்காவது சில ஹலாலானதை ஒன்று சேர்க்கும் போதுசில ஹறாமும் வருவது முண்டு தான். உதாரணமாக , உடன்பிறந்த இருசகோதரிகளை ஒரேநேரத்தில் திருமணம் செய்வது, அல்லது, இரண்டு ஹலாலான பொருட்களைக் கலக்கும் போது ஹறாமான ஒன்று உருவாவது உதாரணமாக, கூட்டுச் சேர்ப்பதால் போதை வருமாயின் இடையில் குறுக்கிட்ட போதை என்ற காரணத்தால் அக்கூட்டும் ஹறாமாகும்

இங்கு திருக்குர்ஆனையும், ஸதக்காவையும் ஒன்று சேர்ப்பதை ஷரீஅத் நமக்கு ஹறாமாக்கவில்லை. மேலும் அக்கூட்டினால் எதுவித ஹறாம் தோன்றுவதுமில்லை அப்படியிருக்க பாத்திஹா உணவு ஹறாமாவதற்கு என்ன காரணம்.?,

ஆடு சாகிறது!. தானாகச்செத்தால் பிணமாகிவிடும். எங்காவது அல்லாஹ்வின் பெயர்கூறி அறுத்தால் ஹலாலாகி விடுகின்றது. திருக்குர்ஆன் முஃமின்களுக்கு றஹ்மத்தாகவும், நோய் நிவாரணமாகவு மிருக்கின்றது.

شِفَاءٌ وَرَحْمَةٌ لِلْمُؤْمِنِينَ

அதை ஓதுவதால் உணவு ஹறாமாக இருந்தால், திருக்குர்ஆன் எப்படி றஹ்மத்தாகும்? மாறாக நிந்தனையாகிவிடுமே! ஆனால், திருக்குர்ஆன் முஃமின்களுக்கு றஹ்மத்! காஃபிர்களுக்கு நிந்தனையாகும்.

وَلَا يَزِيْدُ الظّٰلِمِيْنَ اِلَّا خَسَارًا

***இதில் அநியாயக்காரன் நஷ்டமடைந்து கொண்டேயிருப்பான்.***

*அல் குர்ஆன்:(17:82).*

அதை ஓதுவதால் உணவிலிருந்து அவன் தவிர்க்கப்படுகின்றான்.

எவருக்காவது துஆச்செய்வதாக இருந்தால், அவருக்கு முன்னாலேயே துஆக்கேட்க வேண்டும். ஜனாஸாத் தொழுகையில் ஜனாஸாவை முன்னால் வைத்தே தொழுவிக்கப்படுகின்றது. காரணம், துஆ அதற்குரியது. அதனால்தான், முன்னால் வைக்கப்படுகின்றது. இவ்வாறு உணவவை முன்னால் வைத்து துஆக்கேட்பதில் என்ன சீர்கேடு வந்து விடப்போகின்றது.? இவ்வாறு தான் கப்றுக்கு முன்னால் நின்று கொண்டு துஆக்கேட்கப்படுகின்றது.

றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் தங்களுடைய உம்மத்துக்காக குர்பானி கொடுத்த பின், அறுக்கப்பட்ட பிராணியை முன்னால் வைத்து اللهم هذا من أمة محمد யாஅல்லாஹ்! இது எனது உம்மத்தின் தரப்பிலானதாகும் என்று கூறினார்கள்.

ஹளறத் கலீல் இப்றாஹீம் அலைஹிஸ்ஸலாம் கஃபாவைக் கட்டி முடித்த பின், கஃபாவுக்கு முன்னால் நின்றுகொண்டு ربنا تقبل منا என்று துஆக்கேட்டார்கள்

இப்போதும் கூட அகீக்காப் பிராணியை முன்னால் வைத்தே துஆக் கேட்கப்படுகின்றது. அதனால், உணவை முன்னால் வைத்து துஆக் கேட்பதில் என்ன விதமான குற்றம் வந்து விடப் போகின்றது.? பிஸ்மில்லாஹ் கூறியே உணவை உண்ண ஆரம்பிக்கின்றோம். பிஸ்மிலலாஹ்வும் திருக்குர்ஆனைச் சேர்ந்ததுதான். சாப்பாட்டை முன்னால் வைத்து திருக்குர்ஆன் ஓதுவது தடையென்றால் பிஸ்மில்லாஹ் என்று கூறுவதும் தடைதான்.

மறுப்பாளர்களுக்கும் ஷைகாக விளங்குகின்ற ஷாஹ் வலியுள்ளாஹ் கத்தஸல்லாஹு ஸிர்ரஹுல் அஸீஸ் அவர்கள் கூட வழக்கமான பாத்திஹாவை ஆகும் என்றே விளங்கியுள்ளார்கள்.

ஹளறத் ஷாஹ் வலியுள்ளாஹ் கத்தஸல்லாஹு ஸிர்ரஹுல் அஸீஸ் அவர்கள் தனது நூலான "அல்இன்திபாஹ் பீ ஸிலாலத்தில் அவ்லியா" வில் கூறுகின்றார்கள்.

பின்னர் 10 அல்லது 12 விடுத்தம் ஸலவாத் ஓதுங்கள். இன்னும் முழுமையாக முடித்த பின் சிறிதளவு இனிப்புப் பண்டத்தில் ஜிஷ்தியா ஷைகுமார்களுக்கு பாத்திஹா ஓதி அல்லாஹ்விடம் துஆக் கேளுங்கள்.

மேலும் ,ஷாஹ் வலியுள்ளாஹ் கத்தஸல்லாஹு ஸிர்ரஹுல் அஸீஸ் அவர்கள் "ஸூப்தத்துன் நஸாயிஹ்" என்ற தனது நூல் பக்கம் 132ல் ஒரு கேள்விக்குப் பதில் கூறும் போது எழுதுகின்றார்கள்.

பால்சோற்றை ஏதாவது ஒரு பெரியாருக்கு பாத்திஹா ஓதும் எண்ணத்தில் சமைப்பதும், சாப்பிடுவதும் அல்லது ஏதாவது ஒரு பெரியாருக்கு பாத்திஹா ஓதினால் வசதி படைத்தவர்களும் இதைச் சாப்பிடுவதும் ஆகுமாகும்.

மௌலவி அஷ்ரப் அலி தானவி, மற்றும் றஷீத் அஹ்மது கங்கோஹி ஆகிய இருவரின் ஷைகாகிய ஹாஜி இம்தாதுல்லாஹ் ஸாஹிப் தனது "பைஸலா ஹப்த்து மஸ்அலா" என்ற நூலில் பின்வருமாறு எழுதுகின்றார்கள்.

மரணித்த றூஹுகளுக்கு ஈஸாலுத் தவாஃப் செய்வதில் எவருக்கும் மாற்றுக் கருத்துக் கிடையாது. இதில் கூட குறிப்பாக்குவதும், தனித்துவப்படுத்துவதால்

உரியவருக்கு நன்மை கிடைக்குமென்றோ, அல்லது இதை வாஜிப், பர்ளு என்று நிர்ணயம் கொண்டாலோ தடைவரும். இப்படியான இஃதிகாத் இல்லையென்றால், அது ஒரு நல்லசெயல் என்ற அமைப்பில் வரும். இதில் எதுவித குற்றமும் இல்லை.

உதாரணமாக, தொழுகையில் சில நன்மையைக் கருதி சில சூறாக்களை குறிப்பாக்குவதை நிபுணத்துவமிக்க புகஹாக்கள் அனுமதித்திருக்கின்றார்கள். தஹஜ்ஜுதில் அதிகமான ஷைகுமார்களின் அமல்களில் இது இருக்கின்றது. மேலும் கூறுகின்றார், தொழுகையில் எப்படியாகிலும் மனதில் நிய்யத் வைத்தால் போதுமாகும். ஆனால், கல்பும், நாவும் ஒன்றுபடவேண்டும் என்பதற்காக பொதுமக்களுக்கு வாயாலும் சொல்லவேண்டியது சுன்னத்தாகும். (ஷாபிஈ மத்ஹபில் தக்பீரை ஆரம்பித்து முடிக்க முன் தொழுகின்றேன், பர்ளு வக்து ஆகியவற்றை நினைப்பது பர்ளாகும்.)

இதே போன்று இங்கும் யாஅல்லாஹ்! இந்த உணவிற்குரிய தவாபை இன்னமனிதனின் றூஹுக்குச் சேர்த்து வைப்பாயாக! என்று வாயால் சொல்வது ஏற்றமாகும்.

எவராவது ஒருவர் ஏதோ ஒரு கற்பனையிலிருப்பாராயின், அவர் பக்கம் வார்த்தையால் சாடை செய்யவும். மன உருக்கத்தோடு முன்னாலிருப்பாராயின்; உணவை முன்னால் கொண்டு வந்து வைக்கவும். யாருக்காவது இப்படியொரு சந்தர்ப்பம் வந்தால், இதுவொரு துஆதான் அதோடு சேர்த்து திருக்குர்ஆனையும் சேர்த்து ஓதினால் துஆ கபூலாகுவதற்கான நம்பிக்கை உண்டு. இதற்கான தவாபும போய்ச் சேரும். ஆதாலால் இது இபாதத்துக்களின் கூட்டாக அமையும்.

மேலும் கூறுகின்றார்.

கௌதுல் அஃழம் அவர்களின் 11வது நாள் பாத்திஹா மற்றும் பத்தாம் நாள், இருபதாம் நாள் ,ஆறாவது மாதம், வருடம் உள்ளிட்ட காலத்தில் ஓதுகின்றவையும், ஹளறத் ஷைகு அப்துல் ஹக், ஹளறத் ஷாஹ் பூ அலி கலந்தர் உள்ளிட்டவர்குளுக்காக் கொடுக்கப்படுகின்றன கந்தூரிகளும், பறாஅத் இரவில் சுடுகின்ற பணியாரமும், ரொட்டியும் இதுவல்லாத சகல வழிமுறைகளும் ஈஸாலுத் தவாபு என்ற கோட்டிற்குள் அமைந்தவையாகும் .

ஹாஜி இம்தாதுல்லாஹ் ஸாஹிப் இந்த பிரச்சினைக்கான தெளிவைக் கொடுத்துள்ளார்.

அல்ஹம்துலில்லாஹ்! பாத்திஹா ஓதுவது பற்றிய பிரச்சினைக்கு மார்க்க ரீதியாகவும், பகுத்தறிவு ரீதியாகவும் மறுப்பாளர்களின் கூற்றுக்களிலிருந்தும்

மிகச் சிறப்பான தெளிவு கிடைத்து விட்டது. அல்லாஹுதஆலா கபூலாக்குவதற்குத் தௌபீக் செய்வானாக! ஆமீன்

# *அத்தியாயம் : 2*

# *கத்தம், பாத்திஹா பற்றிய குற்றச்சாட்டுக்களும் பதில்களும்*

இந்தப் பிரச்சினையில் மறுப்பாளர்களின் பின் வரும் குற்றச்சாட்டுக்கள் பிரபலமானவை!

**குற்றச்சாட்டு : 1**

1- அதிகமான புகஹாக்கள் மைய்யித்துக்காக 3ஆம் 7ஆம் நாட்களில்உணவு சமைப்பதைத் தடுத்திருக்கின்றார்கள்.

ஷாமி, ஆலம்கீரி, பஸ்ஸாஸியா உள்ளிட்ட நூற்களில் وبعد الاسبوع ஏழாம் நாளுக்குப் பின், சமைப்பதற்கு தடையுள்ளது என்று எழுதப்பட்டுள்ளது. இதில் 40ம் நாள் ஆறுமாதம், வருடம் உள்ளிட்ட பாத்திஹாக்களும் உள்ளடங்கும்.

மேலும் காழி தனாவுள்ளாஹ் பானி பத்தி றஹ்மதுல்லாஹி அலைஹி பின்வருமாறு வஸிய்யத் செய்திருக்கின்றார்கள்.

அதாவது, மரணித்த பின் உலகியல் நோக்கத்திற்காக 10,40 ஆறாவது மாதம் வருடம் உள்ளிட்ட காலங்களில் பாத்திஹாவுக்காகச் சமைக்க வேண்டாம். காரணம், “மைய்யித்துக்குரிய உணவு மனதை மரணிக்க செய்யும்” என்று றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்கள் கூறியிருக்கின்றார்கள்.

**பதில்:-**

மைய்யித்துக்கு ஈஸாலுத் தாவாபு செய்வதை புகஹாக்கள் ஒருபோதும் தடைசெய்ய வில்லை. மாறாக செய்யுமாறு தான் தீர்ப்புக் கூறியுள்ளார்கள். இது பற்றிய விளக்கத்தை ஏற்கனவே கூறிவிட்டோம். புகஹாக்கள் தடைசெய்தது ஈஸாலுத் தவாபையல்ல! அது வேறு விடயமாகும்.

அதாவது, மரணித்தவருக்கு பாத்திஹா ஓதவில்லையென்று பொதுமக்கள் கூறும் குறைகளிலிருந்து தவிர்ந்து கொள்ளும் நோக்கில் மைய்யித்துக்காக 3,ஆம் 10ஆம் மற்றும் இதுவல்லாத நாட்களில் முகஸ்துதிக்காக அழைப்பு விடுப்பது பொதுவாக தடைசெய்யப்பட்டுள்ளது.

மரணித்தவர் பெயரில் பேரும் புகழுக்காகக் கொடுப்பதற்கு குறிப்பிட்ட நேரம் கிடையாது. ஆனால், ஈஸாலுத் தவாபு என்ற ரீதியில் உணவு சமைத்து ஏழைகளுக்கு உணவளிப்பது சகலர்களிடத்திலும் ஆகுமாகும்..

ஷாமி பாகம் 1 ஜனாஸாவின் பாடத்தில் பின்வருமாறு எழுதுகின்றார்கள்:

ويكره اتخاذ الضيافة من اهل الميت لانه شرع في السرور لا في الشرور

மைய்யித்துக்குரியவர்களிடமிருந்து விருந்தை எதிர்பார்ப்பது மக்றூஹாகும். இது சந்தோஷத்திற்கான இடமாக இருக்குமே தவிர கவலைக்குரிய இடமாக இருக்காது.

விருந்து கொடுப்பதில் இரண்டு பொருள்கள் காணப்படுகின்றன.

1) நிர்பந்தம்.

2) பேருக்காக

பின்னர், கூறுகின்றார்கள்.

هذه الافعال كلها للسمعة والرياء فيحترز عنها لانهم لا يريدون بها وجه الله

இப்படியான சகல காரியங்களும் பகட்டுக்காகச் செய்வதாகும். ஆகவே, அதிலிருந்து தவிர்ந்து கொள்ள வேண்டும். காரணம் அதில் அல்லாஹ்வின் பொருத்தம் கிடையாது. இந்த வாசகம் மிகத் தெளிவாகவே இருக்கின்றது. பெருமைக்கும், பகட்டுக்குமுரிய விருந்துக்கு தடையுண்டு!.

அடுத்து கூறுகின்றார்கள் وان اتخذ طعاما للفقراء كان حسنا மைய்யித்துக் குரியவர்கள் ஏழைகளுக்கு சமைத்துக் கொடுத்தால், அது நல்ல காரியமாகும். இக்கருத்து கத்தம் பாத்திஹா ஓதுவது உணவளிப்பது ஆகும் என்பதை

குறிக்கின்றது.

காழி பானிபத்தி ஸாஹிபவர்கள் தனக்கு 3ஆம், 10ஆம் நாட்களில் உணவளிக்க வேண்டாம் என்று கூறியது உண்மைதான்!. உலகத்திற்கு காட்டுவதற்காக 3,மற்றும் 10ஆம் நாட்களில் செய்ய வேண்டாம் என்பதுதான் அவர்களின் நோக்கமாகும்.

உலகியல் சடங்கு என்று அவர்கள் கூறியதன் எதார்த்தம் என்ன?

மூன்றாவது நாளில் பெண்கள் ஒன்று கூடி அழுது ஒப்பாரி வைக்கின்றனர். உண்மையிலேயே இது ஹறாமாகும். இதனால்தான் மூன்று நாட்களுக்கு மேல் துக்கம் அனுஷ்டிக்கக்கூடாது என்று கூறினார்கள். இந்த இடத்தில் ஈஸாலுத் தவாபு, பாத்திஹா பற்றி எந்தப் பேச்சும் கிடையாது. இவ்வாறு கூறியதன் நோக்கம் 3, மற்றும் 10ஆம் நாட்களில் துக்கம் அனுஷ்டிக்கக்கூடாது.

“மைய்யித்துக்கான உணவு மனதை சாவடிக்கும்” என்ற ஹதீஸை நாம் எங்கும் காணவில்லை.இது ஹதீதாக இருந்தால் மைய்யித்தின் தரப்பில் தர்மங்களைச் செய்யுங்கள் என்று ஆசையுட்டி வந்துள்ள ஹதீதுகளுக்கு என்ன பொருள் கொடுப்பது?

நாள் குறிக்காமல் மைய்யித்தின் பெயரால் சதக்காக் கொடுப்பது ஆகும் என்று தேவ்பந்திகளாகிய நீங்களும்தானே கூறுகின்றீர்கள்.அப்படியாயின் அந்த உணவுகளை சாப்பிடுவது யார்? மனிதன் சாப்பிட்டால் அவனுடைய மனம் செத்துவிடும்என்றால். என்ன மலக்குகளா சாப்பிடுவார்கள்.?

**சட்டப் பிரச்சினை:**

மைய்யித்திற்குரிய உணவை ஏழைகளுக்கு மட்டுமே கொடுக்க வேண்டும்.

அஃலா ஹளறத் இமாம் அஹ்மது றிழாகான் றஹ்மதுல்லாஹி அலைஹி அவர்கள் இது தொடர்பாக جلي الصوت لنهي الدعوت عن اهل الموت என்று ஒரு சிறு நூலை எழுதியுள்ளார்கள்.

அஃலா ஹளறத் அவர்கள் ஏதாவது ஒரு மைய்யித்தின் வீட்டுக்குத் தஃஸிய்யத் செய்வதற்காகத் சென்றால், அங்கு வெற்றிலை கூட சாப்பிட மாட்டார்கள். ஹுக்காப் புகைக்க மாட்டார்கள். வேறு எந்த ஒரு பொருளையும் பயன்படுத்தமாட்டார்கள் என்று நேரில் கண்டவர்கள் என்னிடம் கூறினார்கள்.

மேலும், அஃலா ஹளறத்தவர்களின் இரண்டு வஸிய்யத் ஏடுகள் இருக்கின்றனஅதில், எமக்கு பாத்திஹா ஓதுவாக இருந்தால், அதனை

ஏழைகளுக்கு மட்டுமே வழங்க வேண்டும் என்று குறிப்பிட்டுள்ளார்கள்.

மைய்யித்துக்காக ஓதப்படுகின்ற பாத்திஹாவை மைய்யித்தின் சொத்திலிருந்தே கொடுக்க வேண்டும். தூரத்திலிருக்கக் கூடிய வாரிசின் பங்கிலிருந்தோ, பருவமடையாதவரின் பங்கிலிருந்தோ கொடுக்கக்கூடாது என்பதை கவனத்தில் கொள்ள வேண்டும்.

முதலில் மைய்யித்தின் சொத்துக்கள் பங்கிடப்படவேண்டும். இதன் பின் பருவமடையாதவர் தனது பங்கிலிருந்து நன்மையான காரியங்களைச் செய்ய வேண்டும். இல்லையாயின், இந்த உணவு எவருக்கும் ஹலாலாகாது. சொந்தக்காரனின்அனுமதியில்லாமல், அல்லது, சிறு பிள்ளைகளின் சொத்திலிருந்து சாப்பிடுவது ஆகாது! இதை அவசியம் கவனத்தில் கொள்ளல் வேண்டும்.

**குற்றச்சாட்டு : 2**

பாத்திஹாவுக்காக தேதி குறிப்பிடுவது ஆகாது. 11 வது நாள், அல்லது, 3, 10, 20, 40, நாட்கள் வருடம் இன்னும் இதுவல்லாத வகையில் நாள் குறிப்பாக்கப்படுகின்றன இவ்வாறு நாள் குறிப்பது வீணானதாகும்.

திருக்குர்ஆன் கூறுகின்றது,

وَالَّذِينَ هُمْ عَنِ اللَّغْوِ مُعْرِضُونَ

***இன்னும் அவர்கள் (முஸ்லிம்கள்) வீணானவற்றைப் புறக்கணிக்கின்றனர்.***

*அல் குர்ஆன் (23:3).*

எந்தளவு ஈஸாலுத் தவாபு செய்ய முடியுமோ அந்தளவு அவசரமாகச் செய்ய வேண்டும். இதற்காக 3வது நாளை ஏன் எதிர் பார்க்க வேண்டும்.? மேலும், மூன்றாவது நாளில் கடலையை அவித்துக் கொடுப்பதை குறிப்பாக்குவதும் வீணானதும் பயனற்றதாகும். இதனால், 3ம் நாள் உள்ளிட்ட மற்றும் ஏனையவைகள் யாவும் கூடாது.

**பதில்:**

நாள் குறிப்பதற்கான பதிலை “மீலாதில் எழுந்து நிற்றல்” என்ற ஆய்வில் தந்து விட்டோம். ஆகுமான ஒரு காரியத்திற்காக நாளைக்குறிப்பதன்

பிரதான நோக்கம் அனைவரையும் ஒரேநாளில் ஒன்று திரட்டி அனைவரும் சேர்ந்து இந்தக் காரியத்தைச் செய்ய வேண்டும் என்ற ஒரே நோக்கமாகும்.

இதனால்தான் ஹளறத் அப்துல்லாஹ் இப்னு மஸ்ஊத் றழியல்லாஹு அன்ஹு உபதேசம் செய்வதற்கு வியாழக்கிழமையை குறிப்பாக்கினார்கள். தினசரி உபதேசம் செய்யுங்கள் என்று மக்கள் வேண்டியபோது மக்களை கஷ்டத்தில் ஆழ்த்த எனக்கு விருப்பமில்லை என்று கூறினார்கள்.

*(பார்க்க, மிஷ்க்காத் அறிவு பற்றிய பாடம்.)*

இது ஒரு வாய்ப் பேச்சுக் குற்றச்சாட்டே தவிர, இதில் எதுவுமே கிடையாது.இன்றும் கூட மத்ரஸாக்களில் பரீட்சைக்காகவும், விடுமுறைக்காகவும் தேதி குறிப்பிடப்படுகின்றன. ஒவ்வொரு வருடமும் தேதி குறிக்காமல் குறிப்பிட்ட தேதியில் மக்கள் தானாகவே ஒன்று கூடுவார்கள் என்றால், இந்த நோக்கம் உங்களுக்கும் தான் பொருந்தும். இந்தக் கேள்வியை ஒருபக்கம் வைத்து விட்டு தேதி குறிப்பிடுவது ஏன் என்பதைப் பார்ப்போம். கேளுங்கள்.!

கியார்வீன்(கௌதுல் அஃழமவர்கள் பேரில் ஓதப்படும்) பாதிஹா ஈஸாலுத் தவாபுக்காக 11வது நாளைக் குறிப்பதற்குரிய காரணங்களில் இதுவும் ஒன்று! இஸ்லாமிய மன்னர்களின் ஆட்சிக் காலத்தில் சகல அரச நிறுவனங்களிலும் பிறை 10ல் தான் மாதச்சம்பளம் வழங்கப்படும். சம்பளத்தை எடுத்து முதலில் கௌதுல் அஃழம்றழியல்லாஹு அன்ஹு அவர்களின் 11வது நாள் பாத்திஹாவுக்குச் செலவு செய்ய வேண்டும் என்பது ஊழியர்களின் விருப்பமாக இருந்தது.

இதனால் காரியாலயத்திலிருந்து வீட்டுக்கு வரும் போதே சில இனிப்புத் தீன்பண்டங்களை வாங்கி வந்து மங்ரிபுக்குப் பின் பாத்திஹா ஓதுவார்கள். இதுவே 11வது நாள் பாத்திஹா என்று ஆகிவிட்டது. இந்த நடைமுறை முஸ்லிம்களிடம் 11வது நாள் பாத்திஹா என்று பிரபலமாகி விட்டது. இப்போது எந்தத் தேதிலாவது கௌதுல் அஃழம் றழியல்லாஹு அன்ஹு அவர்கள் பேரில் பாத்திஹா ஓதினாலும், அல்லது கொஞ்சம் பணத்தை அவர்கள் பேரில் செலவு செய்தாலும் 11வது பாத்திஹா நிறைவேறிவிடும்.

இந்தியாவில் உத்திரப் பிரதேசம், காட்டியாவாழ் உள்ளிட்ட இடங்களில் றபீஉல் ஆகிர் மாதம் முழுவதும் பாத்திஹா நடந்து கொண்டேயிருக்கும். இது 11வது நாள் கியார்வீன் பாத்திஹா என்ற பெயரிலேயே நடக்கும். பெரியார்களின் பெரும் பெரும் நிகழ்வுகள் எல்லாம் பத்தாவது நாளில்தான் நடந்திருக்கின்றன. இதற்குப் பின்புதான் 11வது நாள் பிறக்கின்றது.

ஹளறத் ஆதம் அலைஹிஸ்ஸலாம் பூமிக்கு இறங்கியது, அவர்களின்

தௌபா கபூலானது, ஹளறத் நூஹ் அலைஹிஸ்ஸலாம் அவர்களின் கப்பல் கரையொதிங்கியது., ஹளறத் இஸ்மாயீல் அலைஹிஸ்ஸலாம் அறுப்பிலிருந்து விமோசனம் பெற்றது, ஹளறத் யூனூஸ் அலைஹிஸ்ஸலாம் மீனின் வயிற்றிலிருந்து வெளியேறியது., ஹளறத் யஃகூப் அலைஹிஸ்ஸலாம் தனது பிரியத்திற்குரிய மகனான ஹளறத் யூஸூப் அலைஹிஸ்ஸலாம் அவர்களை சந்தித்தது,

ஹளறத் மூஸா அலைஹிஸ்ஸலாம் பிர்அவ்னின் கொடுங்கோலிருந்து வெற்றி பெற்றது, ஹளறத் அய்யூப் அலைஹிஸ்ஸலாம் நோயிலிருந்து நிவாரணம் பெற்றது, ஹளறத் இமாம் ஹுஸைன் றழியல்லாஹு அன்ஹு ஷஹீதானது ஷஹீதுகளின் தலைவர் என்ற நாமத்தை அவர்கள் பெற்றது உள்ளிட்ட சகல நிகழ்வுகளும் பத்தாம் நாளில்தான் நிகழ்ந்தன.

இந்த நிகழ்வுகளுக்குப் பின்வந்த முதலிரவு 11வது நாள் இரவாகும். இதனால், இந்த இரவு பறக்கத்தான இரவானது. இதனால்தான் 11வது பாத்திஹா அநேகமாக 11வது இரவில் நடக்கின்றது. காரணம், பறக்கத்தான இரவில் சதக்கா மற்றும் நல்ல காரியங்களைச் செய்ய வேண்டும்.

மேலும், இப்போது கூறப்போகின்ற விடயம் அனுபவத்தினால் நிரூபணமானதாகும். எனது சொந்த அனுபவமிது. குறிப்பிட்ட சில பெரியார்கள் பேரில் 11வது நாளில்தொடர்ச்சியாக பாத்திஹா ஓதி வந்தால், வீட்டில் அதிகமான பறக்கத்தைக் காணமுடியும். அல்ஹம்துலில்லாஹ்! அல்லாஹுத் தலாவின் உதவியால் கஷ்டப்பட்டு அதனை நான் பேணி வருகின்றேன். அதன் பறக்கத்தை அதிகமாக நான் பார்க்கின்றேன்.

“யாஸ்தா மஜ்லிஸ்” என்ற நூலில் எழுதுகின்றார்கள்.

ஹளறத் கௌதுல் அஃழம் றழியல்லாஹு அன்ஹு 12 வது மீலாது நாளை மிகச்சிறப்பாக செய்வார்கள். ஒரு தினம் றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் கனவில் வந்து அப்துல் காதிரே!, 12வது நாளில் நீர் எம்மை நினைவு கூறுகின்றீர் மக்கள் உம்மை (நீர் வபாத்தான) 11வது நாளை நினைவு கூருவார்கள் என்று கூறினார்கள்.

இதனால்தான் பொதுவாக றபீஉல் அவ்வல் மாதத்தில் 12வது நாளை மக்கள் பொதுவாக விழாக்களை நடத்துகின்றார்கள். றபீஉல் ஆகிர் 11வது நாளில் கௌதுல் அஃழம் றழியல்லாஹு அவர்கள் பெயரில் பாத்திஹா ஓதுகின்றார்கள். இது மஹ்மூது மாமன்னரின் காணிக்கையாகும். இதனால்தான் கௌதுல் அஃழம் அவர்களின் கந்தூரி உலகம் பூராவும் பெருகிவிட்டது. விரோதிகள் ஷிர்க், பித்அத் என்று கூறி தடுக்க முயற்சிக்கின்றனர். ஆனால்,

அது பெருகிக் கொண்டுதான் இருக்கின்றது.

**கவிதை:-**

உங்களை மேலோங்கச் செய்ய உங்களின் நாயனாகிய அல்லாஹுத்த ஆலா நாடும் போது நிறுத்த நினைப்பவர்களால் நிறுத்த முடியாது.! நிறுத்தவும் மாட்டார்கள்.

மூன்றாம் நாள் பாத்திஹாவுக்காக நாள் குறிப்பிடுவதிலும் பல நன்மைகள் இருக்கின்றன. முதல் நாளில் மக்கள் நல்லடக்கத்திற்கான வேலையில் ஈடுபட்டுக்கொண்டிருப்பார்கள். இரண்டாம் நாள் ஓய்வெடுப்பதற்காக அந்த நாளில் எதுவும் செய்யாமல் இருப்பார்கள். மூன்றாம் நாளில் பொதுவாக சகலரும் ஒன்று சேர்ந்து பாத்திஹா உள்ளிட்ட ஏனையவற்றை ஓதுவார்கள்.

இதுதான் தஃஸியத்துக்கான இறுதித் தினமாகும். இதற்குப் பின் தூரத்திலிருந்து வந்தவர்களைத் தவிர மற்றவர்களுக்கு தஃஸியத் செய்வதற்குத் தடையாகும்.

பதாவா ஆலம் கீரியில் ஜனாஸாவின் பாடத்தில் அடக்கத்திற்குப் பின் செய்ய வேண்டியவை என்ற விளக்கத்தில் பின்வருமாறு எழுதுகின்றார்கள்.

ووقتها من حين يموت الي ثلثة ايام ويكره بعدها الا ان يكون المعزي ا و المعزي اليه غائبا

துக்கம் அனுஷ்டிக்க வேண்டிய காலம் மரணித்ததிலிருந்து மூன்று நாட்கள் வரையிலாகும். இதற்குப் பின் மக்ரூஹ்!. ஆனால், துக்கம் அனுஷ்டிப் பவரும், அல்லது துக்கத்தைத் தெரிவிருப்பவரும் அப்போது ஊரில் இல்லா திருந்தால் தவிர,

இன்று வரை துக்கம் தெரிவிப்பதற்காக மக்கள் வந்து போய்க் கொண்டுதானிருக்கின்றார்கள். இப்போது வராவிட்டால் கொஞ்சம் போல ஈஸாலுத் தவாபு செய்து விட்டுச் சென்று விடுவார்கள்.

வெளியூர் வாசிகளும், விருப்பத்திற்குரியவர்களும் இந்த பாத்திஹாவில் கலந்து கொள்கின்றனர். வெளியூர்களிலிருந்து வந்தவர்களும் மூன்று நாளைக்குப் பின் தங்களுடைய வீட்டுக்குச் சென்று விடுவார்கள். (மூன்றாம் நாள் ஏழாம் நாள் நாற்பதாவது நாள் பாத்திஹாவுக்கு மேற்கூறிய காரணங்கள் தவிர்த்து வேறு முக்கிய காரணங்களும் இருக்கின்றன.

அதாவது, ஒருவர் மரணித்து அடக்கப்பட்டதிலிருந்து ஏழு நாட்கள் வரை கப்றிலேயே இருப்பார். அந்த ஏழு நாட்களும் அவருக்கு சோதனையானதாக இருக்கும். அதாவது இக்காலத்தில் அவரின் கேள்வி கணக்கு நடைபெறும். அதனால், விசாரணையிலிருந்து அவர் விடுபடவும், அவரின் கேள்விக்கு இலகுவாக ஆதாரத்தை முவைக்கவும் திருக்குர்ஆனும், ஸதக்காவும் அவருக்குத் துணைநிற்கும்.

இமாம் இப்னு ஹஜர் மக்கி றஹ்மதுல்லாஹி அலைஹி பதாவா ஹதீதிய்யா பக்கம் 4ல் எழுதுகின்றார்கள்.

وعن مجاهد أنها تكون علي القبور سبعة ايام من يوم دفن لاتفارقه أي ثم تفارقه بعد ذلك

மரணித்தவரின் றூஹ் நல்லடக்கம் செய்யப்பட்டதிலிருந்து ஏழு நாட்கள் வரை கப்றிலேயே இருக்கும். அதன்பின்பு கப்றிலிருந்து வெளியேறிச் செல்லும் என்று ஹளறத் முஜாஹித் றழியல்லாஹு அன்ஹு அவர்களைத் தொட்டும் அறிவிக்கப்படுகின்றது.

ஹளறத் தாவூஸ் றழியல்லாஹு அன்ஹு ஸஹாபி என்றும் தாபிஈ என்று பலகருத்துக்கள் உள்ளன. இமாம் முஸ்லிம் றஹ்மதுல்லாஹி அலைஹி அவர்களின் கூற்றின்படி ஸஹாபியாகும். இவர்கள் பின்வருமாறு கூறுகின்றார்கள்.

இதனை இமாம் சுயூத்தி றஹ்மத்துள்ளாஹி அலைஹி அல்ஹாவி பக்கம் 325ல் பின்வருமாறு எழுதுகின்றார்கள்.

أن الموتي يفتنون في قبورهم سبعا فكانوا يستحبون أن يطعموا عنهم تلك الايام

மரணித்தவர்கள் அவர்களின் கப்றுகளில் ஏழு நாட்கள் விசாரிக்கப் படுவார்கள். அதனால், அக்காலத்தில் அவர்களுக்காக உணவளிப்பதை ஸஹாபாக்கள் சுன்னதாக்கினார்கள்.

மேலும், இதே நூல் இதே பக்கத்தில் எழுதுகின்றார்கள்.

قال ابن جريج في مصنفه عن الحارث بن ابي الحارث عن عبيدبن عمير قال يفتن رجلان مؤمن ومنافق فاماالمؤمن فيفتن سبعا وأما المنافق فيفتن أربعين صباحا

இரண்டு நபர்கள் கப்றில் சோதிக்கப்படுவார்கள். 1) முஃமின், 2) முனாபிக், முஃமின் ஏழு நாட்கள் சோதிக்கப்படுவார், முனாபிக் நாற்பத் நாட்கள் சோதிக்கப்படுவார்.

கிதாபுர் றூஹ் என்ற நூல் பக்கம் 14ல் இப்னு தைமிய்யாவின் மாணவர் இப்னுல் கைய்யூம் எழுதுகின்றார்.

وعن الشعبي كانت الانصار إذا مات لهم الميت اختلفوا الي قبره يقرؤن عنده القران

அன்ஸாரிகளில் எவராவது ஒருவர் மரணித்தால், அவரின் கப்றுக்கு அவர்கள் சென்று அங்கிருந்து கொண்டு திருக்குர்ஆனை ஓதுவார்கள்.

ஹாபிழ் இமாம் சுயூத்தி றஹ்மதுல்லாஹி அலைஹி அல்ஹாவி பக்கம் 325 எழுதுகின்றார்கள்.

أن السنة الاطعام سبعة ايام بلغني انها مستمرة الي الآن بمكة والمدينة : فالظاهر انها لم تترك من عهد الصحابة الى لان وانهم اخذوها خلفا عن السلف الي الصدر الأول واقام الناس علي قبره سبعة ايام يقرؤن القرأن

மரணித்தவருக்காக ஏழு நாட்கள் உணவளிப்பது சுன்னத் என்ற விடயம் இது நாள் வரை புனித மக்காவிலும் புனித மதீனாவிலும் நிலைத்திருப்பதாக எனக்குத் தகவல் கிடைத்துள்ளது. ஸஹாபாக்கள் காலம் தொட்டு இது நாள் வரை விடுபடாமல் நடந்து வருகின்றது என்பது வெளிப்படையானதாகும். ஸஹாபாக்களிடமிருந்து ஸலபுகளான முன்னோர்களும் இவர்களிடமிருந்து கலபுகளான பின்னோர்களும் இந்த வழக்கத்தை எடுத்துள்ளனர்.

வரலாற்று நூற்களில் அதிகமான இமாம்களின் வரலாற்றில் மக்கள் ஏழு நாட்கள் கப்றடியிலிருந்து கொண்டு திருக்குர்ஆன் ஓதுவார்கள் என்று கூறியிருப்பதை நான் பார்த்திருக்கின்றேன்.

மேற்கண்ட ஹதீதுகளின் சாரத்தை ஹாபிழ் இமாம் சுயூத்தி றஹ்மதுல்லாஹி அலைஹி அதேநூல் அதே பக்கத்தில் பின்வருமாறு எழுதுகின்றார்கள்.

ويكون الحديث اشتمل علي امرين احدهما : أصل اعتقادي وهو فتنة الموتي سبعة ايام ، والثاني حكم شرعي وهو استحباب التصدق والاطعام عنهم مدة تلك الايام السبعة كما استحب سؤالك

التثبيت بعد الدفن ساعة

மேற்படி ஹதீது இரண்டு விடையங்களைப் பொதிந்திருக்கின்றது.

1) அகீதாவின் அடிப்படை கோட்பாடு அதாவது, மரணித்தவர் ஏழு நாட்கள் கப்றில் விசாரிக்கப்படுவார்.

2) ஷரீஅத்தின் கிளைச்சட்டம்.

அதாவது, அவர்களுக்காக ஏழு நாட்கள் உணவளிப்பதும், ஸதக்காக் கொடுப்பதும் அடக்கிய பின் ஒரு மணிநேரம் கப்றடியிலிருந்து அவருக்காக பாவமன்னிப்புத் தேடுவதும் சுன்னத்தாக இருப்பது போன்று இதுவும் சுன்னத்தாகும்.மேற்கண்ட எடுத்துக்காட்டுக்களின் படி 3,7,40 நாட்கள் பாத்திஹா சஹாபாக்கள் காலத்திலிருந்து தொடர்ச்சியாக வருகின்ற சுன்னத்தான நடை முறை என்பதும், இந்நாட்களில் செய்கின்ற திருக்குர்ஆன் ஓதுவது, தர்மம் கொடுப்பது மரணித்தவரின் விசாரணையை இலகுவாக்கும் என்பதும் தெரிய வருகின்றது.

நடைமுறையிலிருக்கும் இதே பாத்திஹா முறை மரணித்தவரின் நலன் நாடி ஸஹாபாக்கள் காலம் தொட்டு செய்து வருபவை என்பதும் உறுதியாகிவிட்டது. இதன்படி, குறிப்பிட்ட தினங்களில் பாத்திஹா ஓதுவதைத் தடுப்பது சுன்னத்திற்கு எதிர் மட்டுமல்ல மரணித்தவருக்கும் செய்யும் துரோகம் என்பதையும் புரிந்து கொள்ள வேண்டும்.)

நாற்பது மற்றும், வருட பாத்திஹாவுக்கான காரணங்கள் பின்வருமாறு,

வருடம் முழுவதும் நேரத்துக்கு நேரம் நன்மைகள் போய் சேர்ந்து கொண்டேயிருக்க வேண்டும் என்பது முஸ்லிம்களின் விருப்பமாகும். காரணம், மரணித்த ஆரம்பத்தில் மையித்தின் மனம் தனது நண்பர்கள் விருப்பத்திற்குரியவர்களுடன் உறவைப் பேணிக் கொண்டிருக்கும். பின்னர் மெது மெதுவாக தொடர்புகள் குறைந்து முழுமையாக நின்று விடும்.

மகளுக்குத் திருமணம் முடித்துக் கொடுத்தபின், ஆரம்பத்தில் சீர்வரிசைகளெல்லாம் அனுப்புவார்கள். ஆரம்பத்தில் அடிக்கடி விரைவாக விருந்துக்கு அழைப்பார்கள். அன்பளிப்புக்கள் உள்ளிட்ட ஏனையவையையும் கொடுப்பார்கள். காலம் நீண்டு செல்லச்செல்ல குறைந்து போய் விடும். காரணம், ஆரம்பத்தில் மணமகளுக்கு மாப்பிள்ளையின் வீட்டில் மனம் ஒன்றித்து இருக்காது. அதனால் தனது பிறந்தகத்தின் உறவை அதிகம் தேடும். இதற்கு அடிப்படையான ஓர் ஆதாரம் ஹதீஸின் மூலம் கிடைத்திருக்கின்றது.

மையித்தை அடக்கிய பின் கப்றடியில் சற்று நேரம் நின்று கொண்டு

ஈஸாலுத் தவாபு மற்றும் தல்கீன் மூலம் மையயித்திற்கு உதவி செய்து கொண்டிருக்க வேண்டும்.

ஹளறத் அம்றுப்னு ஆஸ் றழியல்லாஹு அன்ஹு பின்வருமாறு வஸிய்யத் செய்தார்கள்:

என்னை அடக்கம் செய்த பின், சிறிது நேரம் எனது கப்றடியில் நீங்கள் தாமதித்து நிற்க வேண்டும். அதன் காரணமாக எனக்கு மனத்துணிவு வரும். அப்போது முன்கர், நகீரின் கேள்விகளுக்கு என்னால் பதில் கூறமுடியும்.

மிஷ்க்காத் அடக்கம் பற்றிய பாடத்தில் தெளிவாக இவ்விடயம பதியப்பட்டுள்ளது.

ثم اقيموا حول قبري حتي استأنس بكم واعلم ماذا اراجع رسل ربي

இதனால்தான் அடக்கம் செய்யப்பட்ட பின் அவசரவசரமாக ஈஸாலுத் தவாபு செய்யப்படுகின்றது.

ஷாஹ் அப்துல் அஸீஸ் முஹத்திதுத் திஹ்லவி றஹ்மதுல்லாஹி அலைஹி தப்ஸீர் அஸீஸிய்யில் والقمر اذاتسق என்ற ஆயத்தின் விளக்கத்தில் பின்வருமாறு எழுதுகின்றார்கள்.

மையித்தின் ஆரம்ப நிலைஎன்பது உடலிலிருந்து உயிர் பிரிகின்ற நேரம் மட்டும்தான். அந்த நேரத்தில் வாழ்க்கையின் குணபாடும், உடல் மற்றும் குடும்பத்தவர்களின் தொடர்பும் ஆரம்பத்தில் கொஞ்சம் கொஞ்சம் இருக்கத்தான் செய்யும். இந்தக்கட்டம் பர்ஸகை பரலோகத்தைப் (திரையுலகத்திற்கும், சட உலகத்திற்கும் இடைப்பட்ட இடத்தை)ப் போன்று இருக்கும்.

இந்த உலகத்தின் தொடர்பும், இந்த நிலையில் இங்கு உயிரோடு வாழ்பவர்களின் உதவியும் மைய்யித்திற்கு விரைவாகக் கிடைக்கும். மைய்யித் இந்த உதவிகளை அதிகமாக எதிர்பார்த்துக் கொண்டேயிருக்கும். அதனால், இக்காலத்தில் செய்யப்படுகின்ற ஸதக்கா, மற்றும் துஆ மைய்யித்திற்கு அதிகளவு நன்மையைக் கொடுக்கும்.

இதன் காரணமாகவே சகல மக்களும் ஒருவருடம் வரை குறிப்பாக மரணித்து நாற்பது நாட்கள் வரை இப்படியான உதவிகளை அனுப்பிக் கொண்டிப்பதற்கு அதிக பிரயாசை எடுக்கின்றனர்.

இதே நிலை உயிரோடு இருப்பவர்களுக்கும் இருக்கின்றது. ஆரம்பத்தில் அதிக கவலை இருக்கும். பின்னர் காலம் செல்லச் செல்ல கவலை குறைந்து கொண்டே செல்லும். இதனால் வருடம் பூராவும் சதக்காக் கொடுக்கவேண்டும் என்ற நாட்டத்தில்தான் வருடம் அதில் பாதி ஆறுமாதம், அதில் பாதி மூன்று மாதம் அதில் பாதி 45 வது நாள் பாத்திஹாக்கள் நடக்கின்றன.

40 என்ற எண்ணிக்கை றூஹ், உடல் உள்ளிட்டவையின் வளர்ச்சியை மெய்ப்படுத்தியதாகும். அதனால்தான் 40வது நாள் தீர்மானிக்கப்பட்டது. பின்னர், இதன்பாதி 20 பின்னர் இதன் பாதி 10. 40ல் உள்ள முன்னேற்றத்தைக் கவனியுங்கள்.!

ஹளறத் ஆதம் அலைஹிஸ்ஸலாம் குழைத்த மண்ணாக 40 வருடங்கள் ஒரே நிலையிலிருந்தார்கள். பின்னர் நாற்பது வருடத்தில் உறைந்து விட்டது. தாயின் வயிற்றில் சிசு நாற்பது நாட்கள் நுத்பாவாக இருக்கின்றது. பின்னர் 40 நாட்கள் இரத்தக்கட்டியாக இருக்கின்றது. பின்னர் 40 வது நாளில் தசைக்கட்டி ஆரம்பிக்கின்றது.

*(பார்க்க மிஷ்க்காத் விதியைப்பற்றிய ஈமான் என்ற பாடம்)*

குழந்தை பிறந்ததும் 40 நாள் தாய்க்கு தீட்டு வருகின்றது. பின்னர் 40 வயதானதும் அறிவில் முதுர்ச்சி ஏற்படுகின்றது. இதனால்தான் அதிகமான நபிமார்களுக்கு 40வது வயதில் நபித்துவம் வழங்கப் படுகின்றது.

ஸூபியாக்களின் ஆத்மீக வழக்கமானபயிற்சிக்கும் 40நாள் கொடுக்கப் படுவதால் ஆத்மீக முன்னேற்றம் ஏற்படுகின்றது.

ஹளறத் மூஸா அலைஹிஸ்ஸலாம் அவர்களும் தூர் சீனாய் மலைக்கு வந்து 40 நாட்கள் இஃதிகாப் இருந்ததால்தான் தௌறாத்வேதம் வழங்கப்படும் என்று கட்டளை வந்தது.

وَإِذْ وٰعَدْنَا مُوسَىٰٓ أَرْبَعِينَ لَيْلَةً

இமாம் பைஹகி றஹ்மதுல்லாஹி அலைஹி அவர்கள்ஹளறத் அனஸ் றழியல்லாஹூ அன்ஹு அறிவிக்கும் பின்வரும் ஹதீஸை நாற்பதாவது நாள் பாத்திஹாவுக்கு ஆதாரமாக அன்வாறுஸ் ஸாதிஆ என்ற நூலின் ஆசிரியர் நாற்பதாவது நாள் பாத்திஹா பற்றிய தனது ஆய்வில் எடுத்துக் காட்டுகின்றார்கள்.

ان الانبياء لا يتركون في قبورهم اربعين ليلة  ولكن هم يصلون بين يدي الله حتي ينفخ في الصور

இதன் பொருளை மவாஹிபின் விரிவுரை ஸர்க்கானியில் இவ்வாறு கூறப்பட்டுள்ளது.

சங்கையான நபிமார்களின் றூஹின் தொடர்பு அடக்கம் செய்யப்பட்ட உடலோடு 40 நாட்கள் வரை மிக அதிகமாக இருக்கும். இதன் பின் றூஹ் அல்லாஹ்வின் நெருக்கத்தில் இபாதத் செய்து கொண்டிருக்கும். மேலும், சடகோலத்தில் எங்கு செல்ல வேண்டுமோ அங்கெல்லாம் செல்லும்.

பொதுமக்களிடத்தில் பின்வரும் செய்தி பிரபலமாக உள்ளது. 40 நாட்கள் வரை மைய்யித்தின் றூஹ் வீட்டோடு தொடர்பைக் கொண்டிருக்கும். இதற்கு ஏதும் அடிப்படை ஆதாரம் இருக்கக் கூடும். (இதுபற்றி " இறந்தவர்கள் ஆத்மா இல்லம் வருமா? என்ற எமது ஆய்வுக் கட்டுரையில் தெளிவான விளக்கத்தைக் கொடுத்துள்ளோம்.)

இதிலிருந்து 40 என்ற எண்ணிக்கையில் மாற்றங்கள் ஏற்படுகின்றன என்று தெரிய வருகின்றது. அதனால், அந்த நாளில் பாத்திஹா ஓதுவது பொருத்தமாகும். இதற்கு ஷரீஅத்தில் எந்தத்தடையும் வரவில்லை.

3ம் நாள் பாத்திஹாவில் பல்வேறுபட்ட இடங்களில் பல்வேறுபட்ட சடங்குகள் நடக்குகின்றன. சில இடங்களில் திருக்குர்ஆன் மட்டும் ஓதுவார்கள். வேறு சில இடங்களில் பாலும், பழமும் வைத்து பாத்திஹா ஓதுவார்கள். மற்றும் சில இடங்களில் திருக்குர்ஆனும் ஓதுவார்கள் அவித்த கடலையைவைத்து கலிமா ஓதி ஈஸாலுத் தவாபு செய்வார்கள்.

1,25,000 கலிமாவை ஓதி அதன்தவாபை மைய்யித்திற்குச் சேர்த்து வைத்தால், மைய்யித்தின் பாவங்கள் மன்னிக்கப்படும் என்ற அறிவிப்பை மௌலவி காஸீம் நானோத்தவி "தஹ்தீருன் நாஸ்" என்ற நூலில் கூறியதை ஏலவே எடுத்துக் காட்டியுள்ளோம்.

இதில் பல்வேறுபட்ட அறிவிப்புக்கள் வந்துள்ளன. ஒரு இலட்சம் கலிமாத் தைய்யிபா(எண்ணி) ஓதுவிப்பதற்கு 12. லு கொத்து கடலைத் தேவைப்படும். இந்தளவு இருந்தால் தான் அதில் ஒரு இலட்சம் கடலை இருக்கும். இது சுமாரான கணக்குத்தான்.

இந்தளவு எண்ணிக்கைக்கு தஸ்பீஹ் மணிகளையோ, பொடிக்கற்களையோ திரட்டுவதில் அதிக சிரமம் உண்டு. ஒவ்வொரு மனிதனும் மௌத்தான பின்ஓர் இலட்சம் பொடிக்கற்கள் தேடித் திரிய வேண்டி வரும். இதனால்தான் கடலையைத் தெரிவு செய்தார்கள். இதில் கலிமாவின் எண்ணிக்கையும் உண்டாகின்றது ஸதக்காவும் நிகழ்கின்றது.

அவித்த கடலையைத் தெரிவு செய்த நோக்கம், பச்சைக் கடலையைக் கொடுத்தால் வீசி விடுவார்கள்.அல்லது, குதிரைக்குரிய தீனியாக்கி விடுவார்கள். அதில் மரியாதையீனம் உண்டு.! அவித்த கடலை சாப்பிடுவதற்கு மட்டுமே பயன்படும்.

கடலையைக் கொடுப்பதற்கு வேறு சில காரணங்களும் உண்டு

1) மலிவான விலை, சொற்பத் தொகையிலும் குறைந்த சிரமத்திலும் நிறையபேருக்கு உணவளிக்கமுடியும்

2) ஷைகுனா ஷாஹ் வலியுள்ளாஹ் கத்தஸல்லாஹு ஸிர்ரஹுல் அஸீஸ் அவர்கள் றபீஉல் அவ்வல் பிறை 12ல் றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் மீலாதை சிறப்பாக உணவு சமைத்து கொடுப்பார்கள்; ஒரு வருடம் வழக்கம் போன்று செய்வதற்கானபொருள் வசதி இருக்கவில்லை,

ஆகவே கடலையை அவித்துக் கொடுத்து மீலாதை நிறைவு செய்தார்கள்; அன்றிரவு றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்கள் அந்தக் கடலையை விரும்பி உண்பதாகக் கனவு கண்டு மகிழ்ந்தார்கள். இதன்பின் வசதி குறைந்தவர்கள் கடலையை அவித்து ஏழைகளுக்குக் கொடுப்பதை வழக்கமாக்கிக் கொண்டார்கள்.)

## குற்றச்சாட்டு: 3

பாத்திஹா இன்னும் இதுவல்லாத ஏனையவையிலும் ஹிந்துக்களுக்கு ஒப்பாக இருக்கின்றது.

من تشبه بقوم فهو منهم

எவர் எந்தக் கூட்டத்தோடு ஒப்பாகின்றாரோ அவர் அவர்களைச் சேர்ந்த வராவார். அதனால் பாத்திஹா ஓதக்கூடாது.

## பதில்:

காபிர்களோடு சகல ஒப்புதலுக்கும் தடையில்லை. கெட்ட விடயங்களில் ஒப்பாகுவதற்குத்தான் தடையிருக்கின்றது. மேலும், அந்த விடயங்கள் அவர்களின் மார்க்க, சமய, சமுக அடையாளங்களாகவும் இருக்க வேண்டியது அவசியமாகும். அதைப்பார்க்கும் மக்கள் இவர் அந்தக் கூட்டத்தைச் சேர்ந்தவர் என்று அடையாளம் காணக்கூடியதாக இருக்கும்.

உதாரணமாக, காவியுடை, பூனூல், அவர்களின் ஆசாரத் தொப்பி, கோவணம் இன்னும் இதுவல்லாதவை. இவ்வாறு இல்லாவிட்டால். மக்காவிலிருந்து ஸம்ஸம் நீரை நாமும் தான் கொண்டு வருகின்றோம். ஹிந்துக்கள் கங்காவிலிருந்து கங்கா நீரைக் கொண்டுவருகின்றனர். நாமும் தான் வாயால் சாப்பிடுகின்றோம், காலால் நடக்கின்றோம். காபிர்களும் அவ்வாறுதான் செய்கின்றனர்.

றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் ஆஷுறா நோன்பைப் பிடிக்குமாறு பணித்தார்கள். இது யூதர்களுக்கு ஒப்பானது. பின்னர் இரண்டு நோன்பு நோற்று சிறிய மாற்றத்தை ஏற்படுத்தினார்கள். ஆனால், அதை நிறுத்தவில்லை. நாம் பாத்திஹாவில் கலிமா திருக்குர்ஆன் உள்ளிட்டவையை ஓதுகின்றோம். அதனை காபிர்கள் செய்வதில்லை. அப்படியிருக்க ஒப்பு எப்படி வரும்.?

இதுபற்றிய விளக்கம் ஷாமியில் தொழுகையில் வெறுக்கத்தக்கவை என்ற பாடத்தில் பின்வருமாறு வருகின்றது. அதை படியுங்கள்.!

கா.ஃபிர்களுக்கு ஒப்பாகுவதாக நினைத்துச் செய்கின்ற ஒவ்வொரு செயலுக்கும் தடையுண்டு.!, பாத்திஹா ஓதுவது பற்றிய விரிவான விளக்கத்திற்கு"அன்வாறுஸ்ஸாதிஆ"என்ற நூலை வாசிக்கவும்.

**குற்றச்சாட்டு :4**

பாத்திஹா உடலும்,, பொருளும் இணைந்த வணக்கம் என்றால், நஜீஸானவற்றை தானம் செய்யும் போதும் பாத்திஹா ஓதுங்கள். சாணம் உள்ளிட்டவையிலும் பாத்திஹா ஓதிக் கொடுங்களேன். எருமைமாடு சாணம் போட்டால் அதிலும் பாத்திஹா ஓதி அதை வீட்டை விட்டு அப்புறப்படுத்துங்கள்.

*ஆதாரம்: தேவ்பந்தில் தஹ்தீப்.*

**பதில்:-**

நஜீஸான பொருளின் மீதோ, அல்லது நஜீஸ் உள்ள இடத்திலோ திருக்குர்ஆனை ஓதுவது ஹறாமாகும்;

ஆகவே, அவ்வானவற்றை தானம் செய்யும் போது திருக்குர்ஆனை

ஓதமுடியாது! ஏப்பம் விடும்போது அல்ஹம்துலில்லாஹ் கூறுகின்றோம், காற்றுப் போகும் போது அவ்வாறு கூறுவதில்லை; அது நஜுஸானது, வுழுவை முறிக்கக்கூடியது, இவ்வாறு தும்மும் போது அல்ஹம்துலில்லாஹ் என்று கூறுகின்றோம்,

மூக்கால் குருதி வடியும் போது கூறுவதில்லை (ஒவ்வொன்றுக்கும் அதற்கேற்ற ஒழுக்கமும் பொருத்தமும் உண்டு! வஹாபிகள், மற்றும் தேவ்பந்திகளின் மார்க்கத்தில் ஒழுங்குமில்லை; ஒழுக்கமுமில்லை! இப்படியான கல்புகள் குருடாகிப்போன இக்கூட்டங்களின் ஏமாற்று சதி வலையில் சிக்காமல் நம்மனைவரையும் அல்லாஹு ஸுப்ஹானஹு வதஆலா பாதுகாப்பானாக!, ஆமீன்)

# ஆய்வு-12

# ஜனாஸாத் தொழுகைக்குப் பின் துஆ ஓதுவது பற்றிய ஆய்வு!

இந்த ஆய்வில் இரு அத்தியாயங்கள் உள்ளன. முதற் அத்தியாயத்தில் அதற்கான சான்றுகள் இடம் பெறும். இரண்டாம் அத்தியாயத்தில் குற்றச்சாட்டுக்களும், பதில்களும் இடம் பெறும்.

# அத்தியாயம்: 1

ஜனாஸாத் தொழுகைக்குப் பின், துஆக்கேட்பதற்கான சான்றுகள்.!

முஸ்லிம்கள் மரணித்த பின், மூன்று நிலைகள் உள்ளன.

1) ஜனாஸாத் தொழுகைக்கு முன்.

2) ஜனாஸாத் தொழுகைக்குப் பின்.

3) அடக்கத்திற்கு முன், அடக்கத்திற்குப் பின்,

இந்த மூன்று நிலைகளிலும் மையியித்திற்காகத்துஆக் கேட்பது, ஈஸாலுத்தவாபு செய்வது ஆகுமானது மட்டுமல்ல ஏற்றமானதுமாகும். குளிப்பாட்டுவதற்கு முன் மைய்யித்திற்குப் பக்கத்திலிருந்து கொண்டு திருக்குர்ஆன் ஓதினால், தடுக்க வேண்டும். காரணம், மைய்யித் அப்போது அசுத்தமாக இருக்கும். குளிப்பாட்டிய பின், திருக்குர்ஆன் உள்ளிட்ட சகலதும் ஓதலாம்.

மறுப்பாளர்கள் தொழுகைக்கு முன்பும், அடக்கம் செய்யப்பட்டதற்குப் பின்பும் துஆ அல்லாத ஏனையவையைச் செய்வது ஆகும் என்கின்றனர். ஆனால், ஜனாஸாத் தொழுகைக்குப் பின், அடக்கம் செய்வதற்கு முன் துஆக் கேட்பதை ஆகாது, ஹறாம், ஷிர்க்க என்கின்றனர்.இவர்கள் என்ன சொல்ல வருகின்றார்கள் என்பது புரியவில்லை. இந்த இடத்தில் இதுபற்றிய திட்ட வட்டமான விளக்கத்தைக் கவனியுங்கள்!.

மிஷ்க்காத்தில் ஜனாஸாவின் பாடத்தில் இரண்டாம் பிரிவில் பின்வரும் ஹதீது இடம்பெறுகின்றது.

إذا صليتم علي الميت فاخلصوا له الدعاء

நீங்கள் அனைவரும் மைய்யித்திற்காகத் தொழுது முடித்தால், அதற்காக கலப்பற்ற துஆவைக் கேளுங்கள்!.

இதில் ف என்ற இடைச் சொல்லிலிருந்து தொழுகைக்குப் பின் உடனடியாக தாமதமின்றி துஆக்கேளுங்கள் என்றுதான் புரிய முடிகின்றது. சிலர் இதற்கு தொழுகையில் கேளுங்கள்! என்று பொருள் கொடுக்கின்றனர் இவர்கள் ف என்ற இடைச்சொல்லின் பொருளை மறந்து விடுகின்றனார்

صليتم– தொழுதால், என்பது நிபந்தனை! فاخلصوا இக்லாஸாக துஆக் கேளுங்கள்! என்பது ஷர்த்துக்குப் பதில்! பதிலில் வேற்றுமை تغاير –இருக்க வேண்டும். பதிலும் ஷர்த்துக்குள் நுழையக்கூடாது. அடுத்து صليتم –நீங்கள் தொழுது முடித்தால், என்பது இறந்த காலமாகும். فاخلصوا –உடனே துஆக் கேளுங்களா! என்பது கட்டளை! இதிலிருந்து துஆச் செய்யுங்கள் என்ற கட்டளை தொழுது முடித்த பின்புதானிருக்க வேண்டும்.

உதாரணமாக, فاذا طعمتم فانتشروا என்பதில் சாப்பிட்ட பின், வெளியே செல்வதற்கு கட்டளையிடப்பட்டுள்ளது. சாப்பாட்டின் நடுவிலல்ல

واذا قمتم الي الصلوة فاغسلوا وجوهكم

நீங்கள் தொழுகைக்காக எழுந்தால், உங்கள் முகத்தைத் கழுவுங்கள். இங்கு தொழுகைக்காக எழுந்திருத்தல் நோக்கமாகும். தொழுகைக்காக நிற்றல் அல்ல! இதனை الي என்ற இடைச்சொல்லிலிருந்து புரிகின்றோம்.

ஆகவே, இங்கு வுழு என்பது தொழுகைக்கு நாடிய பின்பு நடக்கின்றது. மேலும், ف என்பதிலிருந்து தாமதத்தையே புரிய முடிகின்றது. இப்படி எதார்த்தமான ஆதாரத்தை விட்டு விட்டு ஆதாரமில்லாமல் இரவல் مجازي பொருள் கொள்வது ஆகுமானதல்ல!

இதே மிஷ்க்காத்தில் இதே பாடத்தில்

قرأ علي الجنازة بفاتحة الكتاب

றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்கள் ஜனாஸாவில் பாத்திஹா சூறத் ஓதினார்கள் என்று எழுதப்பட்டுள்ளது. இதன் விளக்கத்தை அஷிஃஅத்துல் லம்ஆத்தில் ஷைகு அப்துல் ஹக் முஹத்திதுத் திஹ்லவி றஹ்மதுல்லாஹி அலைஹி இவ்வாறு எழுதுகின்றார்கள்.

றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் இப்போதும் வழக்கத்திலிருப்பது போன்று ஜனாஸாத் தொழுகைக்குப் பின்பு அல்லது முன்பு ஓதியிருக்கக்கூடும்.

இதிலிருந்து ஷைகு அப்துல் ஹக் முஹத்திதுத் திஹ்லவி றஹ்மதுள்ளாஹி அலைஹி அவர்களின் காலத்திலும் ஜனாஸாத் தொழுகைக்கு முன்பு அல்லது பின்பு பாத்திஹா சூரத் பறக்கத்திற்காக ஓதும் வழக்கம் இருந்துள்ளது என்பது தெரிய வருகின்றது.இந்த வழக்கத்தை ஷைகு அவர்கள் மறுக்கவில்லை. மாறாக அதற்கு ஹதீஸை ஆதாரமாக முன்வைக்கின்றார்கள்.

பத்ஹுல் கதீர் என்ற நூலில் ஜனாஸா பற்றிய அத்தியாயத்தில் தொழுகை பற்றிய பாடத்தில் எழுதுகின்றார்கள்.

றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்கள் மிம்பரிலிருந்து கொண்டு “மௌத்தா” என்ற யுத்த களத்தின் நிலவரங்களைக் கூறிக் கொண்டிருந்தார்கள். அப்போது பேச்சின் நடுவில் ஹளறத் ஜஃபர் இப்னு அபீதாலிப் றழியல்லாஹு அன்ஹு அவர்களின் ஷஹாதத் பற்றிய தகவலையும் கூறினார்கள்

فصلي عليه رسول الله صلي الله عليه وسلم ودعا له وقال استغفرواله

உடனே அவர்களுக்காகத் தொழுவிததார்கள். இன்னும் அவர்களுக்காக துஆவும் கேட்டார்கள். பின்னர் அவர்களுக்காக இஸ்திஃபார் தேடுமாறு மக்களிடமும் வேண்டினார்கள். ودعا என்பதில் உள்ள واو என்ற இடைச் சொல்லிலிலிருந்து இந்தத் துஆ தொழுகைக்கு அப்பாலுள்ளது என்று தெரிய வருகின்றது.

மவாஹிபுல் லதுன்னிய்யா பாகம் 2 இரண்டாம் பிரிவில் فيما اخبر من الغيوب மறைவான வையிலிருந்து அறிவித்தவையில். என்ற பாடத்தில் இதே நிகழ்ச்சியை கூறிய பின், ثم قال استغفروا استغفرواله அவருக்காக இஸ்திஃபார் தேடுங்கள்! என்றார்கள் .இவ்வாறு ஹளறத் அப்துல்லாஹ் இப்னு றவாஹா றழியல்லாஹு அன்ஹு அவர்களுக்கு ஜனாஸாத் தொழுத பின் துஆக்கேட்டார்கள்.இதிலிருந்து ஜனாஸாத் தொழுகைக்குப் பின், துஆக்கேட்பது ஆகுமாகும்.

“முன்தகப் கன்ஸுல் உம்மால்” என்ற நூலில் ஜனாஸாவுடைய பாடத்தில் ஹளறத் இப்றாஹீம் ஹுஜ்ரி றழியல்லாஹு அன்ஹு அவர்களின் அறிவிப்பு ஒன்று காணப்படுகின்றது.

قال رأيت ابن ا وفي وكان من اصحاب الشجرة ماتت ابنته الي أن قال ثم كبر عليها اربعا ثم قام بعد

ذلك قدر ما بين التكبيرتين يدعوا وقال رأيت رسول الله صلي الله عليه وسلم كان يصنع هكذا

ஹளறத் இப்னு அபீ அவ்பா றழியல்லாஹு அன்ஹு அவர்கள் பைஅத்துர் றிழ்வான் சஹாபியாவார்கள். அவர்களின் மகள் மரணித்த போது இவ்வாறு செய்ததை நான் கண்டேன். நான்கு தக்பீர்கள் கூறினார்கள். அதற்குப் பின் இரண்டு தக்பீர்களுக்குள்ள இடைவெளியளவு நின்று கொண்டு துஆக் கேட்டார்கள். இவ்வாறு றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்கள் செய்ததை நான் பார்த்துள்ளேன் என்று பின்பு கூறினார்கள்.

பைஹகியில் பின்வரும் ஹதீது இடம் பெறுகின்றது.

وعن المستظل ابن حصين أن عليا صلي علي جنازة بعد ما صلي عليه

ஹளறத் முஸ்தழல்லு பின் ஹுஸைன் றழியல்லாஹு அன்ஹு அறிவிக் கின்றார்கள். ஹளறத் அலீ றழியல்லாஹு அன்ஹு ஒரு ஜனாஸாவைத் தொழுவித்தார்கள். பின்னர், துஆக்கேட்டார்கள்.

முதவ்வனத்துல் குப்தா என்ற நூலில் வருகின்றது.

يقول هكذا كلما كبر واذ كان التكبير الآخر قال مثل ذلك ثم يقول اللهم صل علي محمد

சகல தக்பீர்களிலும் இவ்வறு செய்யுங்கள். கடைசித் தக்பீர் ஆனதும் இவ்வாறு சொல்லுங்கள். பின்னர், அல்லாஹும்ம ஸல்லி அலா முஹம்மத் என்று கூறவும். இதிலிருந்து ஜனாஸாத் தொழுகைக்கும் பின் ஸலவாத் ஓதவேண்டும் என்று தெரிய வருகின்றது.

கஷ்புல் அதா என்ற நூலில் பின்வருமாறு எழுதப்பட்டுள்ளது.

மைய்யித்துக்காக, அடக்கம் செய்வதற்கு முதல் பாத்திஹா மற்றும் துஆக்கேட்பது ஆகுமானதாகும். இவ்வாறுதான் நடைமுறையிலும் இருக்கின்றது என்று “குலாசத்துல் பத்ஹு” என்ற நூலில் குறிப்பிடப்பட்டுள்ளது.

## *அத்தியாயம் – 2*

# குற்றச்சாட்டுக்களும் பதில்களும்

இவ்வாறு துஆ ஓதுவது பற்றி நான்கு குற்றச்சாட்டுக்கள் காணப்படுகின்றன. இதில் மூன்று குற்றச்சாட்டுக்கள் பகுத்தறிவானது, ஒன்று கிதாபு ஆதாரத் தோடுள்ளது. இவையல்லாத வேறு குற்றச்சாட்டுக்கள் இல்லை.

**குற்றச்சாட்டு**: 1

இவ்வாறு துஆக் கேட்பது பித்அத்! சகல பித்அத்தும் ஹறாம்.! ஆகவே, இந்த துஆ ஓதுவது ஹறாம், ஷிர்க் ஆகும்.

**பதில்**:

இவ்வாறான துஆ பித்அத் கிடையாது. இதற்கான ஆதாரம் றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் முபாறக்கான கூற்றுக்கள், செயல்கள் மூலமும், ஸஹாபாக்களின் செயலும் இவ்வாறுதான் இருந்தன என்றும் ஏலவே நிரூபித்துள்ளோம். இதற்கு புகஹாக்களும் அனுமதி வழங்கியுள்ளனர். இதை முந்திய ஆய்வில் குறிப்பிட்டுள்ளோம்.

இதை பித்அத் என்று ஏற்றுக்கொண்டாலும் கூட சகல பித்அத்துக்களும் ஹறாமாகாது. அதில் ஐந்து வகைகள் உள்ளன. இதன் முழு விபரத்தை பித்அத் பற்றிய ஆய்வில் விளக்கியுள்ளோம்.

**குற்றச்சாட்டு** : 2

ஜனாஸாத் தொழுகையே துஆதான். பின்னர், இரண்டாம் விடுத்தும் துஆக் கேட்பது ஆகாது. முதல் துஆவே போதுமாகும்.

**பதில்**:

இது முற்றிலும் அபத்தமான குற்றச்சாட்டு! . ஐவேளைத் தொழுகையிலும் துஆ உண்டு! இஸ்திகாறாத் தொழுகை, கிரகணத் தொழுகை, மழை தேடும் தொழுகை உள்ளிட்ட அனைத்திற்கும் தனியான துஆக்கள் இருக்கின்றன. இவையனைத்திற்குப் பின்பும் துஆக் கேட்பது ஆகும். தவிர, சுன்னத்தாகும்.

ஹதீது ஷரீபில் வருகின்றது. اكثروا الدعاء அதிகமாக துஆக் கேளுங்கள்!. துஆவுக்குப் பின் துஆக் கேட்டால்தான் அதிகமாக துஆக் கேட்டதாகும்.

ஜனாஸாத் தொழுகை யென்பது முழுக்க முழுக்க துஆதான். சில கட்டங்களில் ஜனாஸாத் தொழுகை முடிந்தபின், மறுமுறையும் ஜனாஸாத் தொழுகை நடப்பதுண்டு! மைய்யித்தின் வலிகாறன் ஜனாஸாத் தொழாவிட்டால், இரண்டாம் விடுத்தம் தொழ முடியும். றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் வபாத் திங்கள் நிகழ்ந்தது. நல்லடக்கம் புதன் கிழமை நடந்தது.

*(ஜாமி)*

இந்த இரண்டு தினங்களிலும் மக்கள் வந்து ஜனாஸாத் தொழுகையைத் தொழுது கொண்டேயிருந்தார்கள். காரணம், இதுவரை ஹளறத் ஸித்தீக்குல் அக்பர் றழியல்லாஹு அன்ஹு வலியாக இருந்தும் தொழவில்லை. அவர்கள் இறுதி நாளன்று தொழுத பின், கியாமத் நாள் வரை வேறு எவருக்கும் தொழுவது அனுமதிக்கப்படமாட்டாது.

*(பார்க்க: ஷாமி)*

இப்போது சொல்லுங்கள்! இந்தத் தொழுகை துஆதானே!, அது நிறைவேற்றப் பட்டிருக்கின்றதே! இது இரண்டு விடுத்தும் எப்படி நடக்கிக்கின்றது? இந்தக் கேள்வி எப்படியிருக்கின்ற தென்றால், உணவிலேயே தண்ணீர் இருக்கின்றது. அது தண்ணீர் விட்டு சமைக்கப்பட்டிருக்கின்றது. அதனால், சாப்பிட்ட பின், தண்ணீர் குடிக்காதே! என்று கூறுவது போன்றுள்ளது.

**குற்றச்சாட்டு: 3**

துஆக்கேட்கின்ற காரணத்தால், நல்லடக்கம் செய்வதற்குத் தாமதம் ஏற்படுகின்றது. இது ஹறாமாகும். ஆகவே, துஆவும் ஹறாமாகும்.

**பதில்:**

இது முற்றிலும் அர்த்தமற்ற ஒரு குற்றச்சாட்டு

1) அடக்கம் செய்வதற்கு தாமதமாகுவதனால்தான் துஆவை நீங்கள் தடுக்கின்றீர்கள். தாமதமில்லையாயின், தடையில்லை என்று விளங்க முடிகின்றது. தொழுது முடித்த பின், கப்று தோன்டுவதில் தாமதமானால், இப்போது துஆ ஓதமுடியுமா? இல்லையா? என்று சொல்லுங்கள்!. இங்கு தாமதம் துஆவினால் அல்ல! கப்றைத் தயார் செய்வதிலாகும்.

2) துஆ ஓதுவதில் அதிக நேரமாகுவதில்லை. 2,3 நிமிடங்கள் எடுக்கும். இந்தளவு நேரத்தை ஒரு தாமதமாகக் கருதுவதில்லை. இதை விட ஜனாஸாவை தூக்கிச் செல்லும் போது வழியில் அசைந்து அசைந்து செல்வதிலும், குளிப்பாட்டுவதிலும்; ஆறுதலாக கப்றைத் தோன்டுவதிலும் ஏற்படுகின்றது. துஆ ஓதுமளவு சொற்ப நேரத்தை தாமதமாகக் கருதுவது ஹறாமானால், குளிப்பாட்டி கபன் செய்வதிலும் அவசரம் காட்ட வேண்டியது அவசியமாகும். கப்றைத் தோன்டுபவர்கள் இயந்திரம் போல் செயல்படவேண்டும். வேகமாகச் சென்று உடனடியாக அடக்க வேண்டும்.

3) அடக்கம் செய்வதற்கு முன்பே மைய்யித்திற்குரியவர்களுக்கு தஃஸிய்யத் செய்வது, ஆறுதல் கூறுவது ஆகும். தவிர, சுன்னத் என்று முதற் அத்தியாயத்தில் கூறியுள்ளோம். .தஃஸிய்யத்தை தொழுகைக்குப் பின் கூறினாலும் சரி, தொழுகைக்கு முதல் கூறினாலும் சரி, தஃஷிய்யத் மற்றும் ஆறுதல் கூறும் வார்த்தைகளைக் கூறுவதில் தாமதம் ஏற்படுமா? இல்லையா? நிச்சயமாக ஏற்படவே செய்யும். இந்தத் தாமதம் மார்க்க ரீதியான காரணங்களுக்காக அனுமதிக்கப்பட்டது..

4) றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்கள் திங்கள் வபாத்தாகி புதன் நல்லடக்கம் செய்யப்பட்டார்கள் என்பதை ஏற்கனவே கூறியுள்ளோம்.

ஹளறத் ஷாமி றஹ்மதுல்லாஹி அலைஹி இந்த நிகழ்வைக் குறிப்பிட்ட பின், இவ்வாறு எழுதுகின்றார்கள்.

وهذه السنة باقية الي الان لم يدفن خليفة حتي يولي غيره

(மறு), கலீபாவைத் தெரிவு செய்யும் வரை இந்த சுன்னத் இதுவரை நடைமுறையில் தொடர்ந்திருக்கும். அதாவது, அதுவரை கலீபாவை நல்லடக்கம் செய்ய முடியாது. மறு கலீபா தெரிவு செய்யப்படவில்லையாயின், அடக்கத்தில் காட்டும் தாமதம் மக்றூஹ் என்று தெரிகின்றது.

கலீபாவைத் தெரிவு செய்வது மார்க்க ரீதியான விடயம். அதனால், உலக விடயமானாலும் மார்க்கவிடயத்தின் அளவைப் பொறுத்து ஆகுமாகின்றது. இதன் காரணமாக அடக்கத்தில் தாமதமாகின்றது. துஆக் கேட்பதும் மார்க்க ரீதியான காரணம்தான்!.

எவராவது ஒருவர் தொழுகையில் கடைசியில் வந்து சேர்ந்தால், அவர் துஆ ஓதிவிட்டு ஸலாம் கொடுக்க முடியும். ஆயினும், தொழுது முடித்த பின் உடனே ஜனாஸாவைத் தூக்கினால், இவரால் துஆவை முழுமையாக முடிக்க முடியாது. தூக்கப்பட்ட ஜனாஸாவைத் தொழுவிக்க முடியாதல்லவா! இதனால், ஜனாஸா தொழுகைக்கும் பின் துஆக் கேட்பதில் பிந்தி வந்து தொழுதவர்களும் கவனிக்கப்பட வேண்டியுள்ளது. அவர அதை உணராமலேயே தாமதம் வந்தாலும் ஆகும்தான்.

5) அடக்கம் செய்வதில் பொதுவாக தாமதப்படுத்தக் கூடிய துஆ ஹராம் என்று எங்கு எழுதப்பட்டுள்ளது? ஜும்ஆவுடைய தினத்தில் ஒருவர் மரணித்தால், ஜும்ஆத் தொழுகை வரை எதிர்பார்க்கக் கூடாது. ஜும்ஆத் தொழுகைக்கு முதலே நல்லடக்கம் செய்ய வேண்டும் என்று புகஹாக்கள் கூறுகின்றார்கள். தவிர, பிற்படுத்துவது ஹராம், ஷிர்க், குப்று என்று கூறவில்லை. மஆதல்லாஹ்,!

**குற்றச்சாட்டு : 4**

ஜனாஸாத் தொழுகைக்குப் பின் துஆக்கேட்பதை புகஹாக்கள் தடுத்திருக்கின்றார்கள்.

ஜாமிஉர் றுமூஸ் என்ற நூலில் பின்வருமாறு எழுதப்பட்டுள்ளது.

لا يقوم داعيا له

தொழுகைக்குப் பின், துஆவுக்காக எழுந்து நிற்க வேண்டாம்.

தகீறா குப்றா, முஹீது உள்ளிட்ட நூற்களில் இவ்வாறு எழுதப்பட்டுள்ளது.

لا يقوم بالدعاء بعد صلوة الجنازة

ஜனாஸா தொழுகைக்குப்பின் துஆவுக்காக எழுந்து நிற்க வேண்டாம்.

பதாவா ஆலம் கீரியில் எழுதப்பட்டுள்ளது.

لا يدعوا بعده في ظاهر المذهب

மத்ஹபின் வெளிப்படையில் அதற்குப் பின் துஆக் கேட்கக் கூடாது.

மிஷ்க்காத்தின் ஷறஹு மிர்க்காத்தில் வருகின்றது.

.ولا يدعوا للميت بعد صلوة الجنازة لانه يشبه الزيادة في صلوة الجنازة

ஜனாஸாத் தொழுகைக்குப் பின் மைய்யித்திற்காக துஆக் கேட்க வேண்டாம். இது ஜனாஸாத் தொழுகையில் அதிகமாகச் செய்வதற்கு ஒப்பாக இருக்கின்றது.

கஷ்புல் அதா என்ற நூலில் எழுதப்பட்டுள்ளது. ஜனாஸாத் தொழுகைக்குப் பின் துஆவுக்காக எழுந்திருக்க வேண்டாம்.

ஜாமிஉர் றுமூஸில் வருகின்றது.

.ولا يقوم بالدعاء بعد الصلوة الجنازة لانه يشبه الزيادة

ஜனாஸாத் தொழுகைக்குப் பின் துஆவிற்காக எழுந்து நிற்க வேண்டாம். இது அதிகப்படுத்துவதற்கு ஒப்பாக உள்ளது.

ஹளறத் அபூபக்கர் இப்னு ஹாமிது றஹ்மதுல்லாஹி அலைஹி அவர்கள் மூலம் அறிவிக்கப்படுகின்றது.

.ان الدعاء بعد الصلوة الجنازة مكروه

ஜனாஸாத் தொழுகைக்குப்பின் துஆக் கேட்பது மக்றூஹ்.

ஜாமிஉர் றுமூஸில் வருகின்றது.

.ولا يقوم بالدعاء بعد صلوة الجنازة ولانه تشبه الزيادة

ஜனாஸாத் தொழுகைக்குப் பின் துஆவுக்காக எழுந்திருக்க வேண்டாம்.

ஏனெனில், அது அதிகத்திற்கு ஒப்பாகும். மேற் கண்ட புகஹாக்களுடைய வாசகங்களிலிருந்து ஜனாஸாத் தொழுகைக்குப்பின் துஆக் கேட்பது ஆகாது என்று தெரிய வருகின்றது.

**பதில்:**

இதற்கு இருவிதமான பதில்கள் உள்ளன.

1. சுருக்கமானது.
2. விரிவானது.

## 1) சுருக்கமான விளக்கம்.

இந்தத் துஆ தடுக்கப்பட்டதற்கு மூன்று காரணங்கள் உள்ளன.

1) நான்காவது தக்பீருக்குப் பின், ஸலாம் கொடுப்பதற்கு முன்.

2) நல்லடக்கம் செய்வதை அதிகமாகத் தாமதப்படுத்தக் கூடியளவு நீண்ட துஆவாக இருக்கக் கூடாது. இதனால் தான் ஜும்ஆத் தொழுகையை எதிர்பார்த்து நல்லடக்கம் செய்வதை பிற்படுத்துவதற்கு தடை விதிக்கப்பட்டது.

3) ஜனாஸாத் தொழுகையில் துஆக்கேட்பதைப் போன்று வரிசையில் நிற்கக் கூடாது. இதைப் பார்ப்பவர் தொழுகை தொடர்வதாக எண்ணக்கூடும். இது அதிகப் படுத்தலுக்கு ஒப்பாக உள்ளது இதனால், ஸலாம் கொடுத்த பின், வரிசையை உடைத்து இடைவெளி விட்டு சற்று நேரம் துஆவுக்காக நிற்க வேண்டும். இது மக்றூஹ் இல்லாமலே ஆகுமாகும்.

மேற்கண்ட விதங்களை எடுத்துக் கூறியதற்கான காரணம், புகஹாக்களின் கூற்றுக்களில் முரண்பாடு வராமலும், மேற்கண்ட ஹதீதுகளின் கூற்றுக்களுக்கும், ஸஹாபாக்களின் கூற்றுக்கும், அவர்களின் செயற்பாட்டிற்குமிடையில் மாற்றம் வராமலிருகவும் வேண்டியாகும்.

## 2) விரிவான விளக்கம்.

மேற்கண்ட வாசகங்களில் ஜாமிஉர்றுமூஸ், தகீறா, முஹீத், கஷ்புல் அதா

உள்ளிட்டவையின் சொற்றொடர்களில் துஆக் கேட்பதற்குத் தடையில்லை. நின்று கொண்டு துஆக்கேட்பதற்குத்தான் தடையுண்டு!. அதனை நாங்களும் தான் தடுக்கின்றோம்.

மிர்க்காத், ஜாமி உர்று மூஸில் இப்படியும் உள்ளது

لانه يشبه الزيادة

இது அதிகத்திற்கு ஒப்பாகும்.

அதாவது, இந்த துஆவினால் தொழுகையில் அதிகம் ஏற்பட்டுவிட்டது என்ற ஒரு தப்பெண்ணம் ஏற்படுகின்றது. அதனால் இப்படியான தப்பெண்ணத்தை ஏற்படுத்தக் கூடியளவு துஆக் கேட்பதற்குத் தடையுண்டு. இதுவும் கூட வரிசையில் சீராக நின்று கொண்டு துஆக்கேட்கும் போது தான் வரும். வரிசையை உடைத்துக் கொண்டு நின்று துஆக்கேட்டால் குற்ற மில்லை.

ஜமாஅத் இன்னும் தொடர்கிறது என்ற தப்பெண்ணம் வராமலிருக்க, பர்ளான தொழுகைக்குப்பின், வரிசையை உடைத்துக் கொண்டு சுன்னத் தொழுமாறு கூறப்பட்டிருந்தது போல,

*(பார்க்க, ஜாமி, மிஷ்க்காத் சுன்னத் பற்றிய பாடம்),*

இதனால், பர்ளுக்குப் பின் சுன்னத் தொழுவது தடை என்பது பொருளாகாது. ஆனால், பர்ளோடு சேர்த்துத் தொழுவதற்குத் தடையுண்டு! இவ்வாறுதான் ஆலம்கீரியின் வாசகத்தையும் தவறாக நக்லு செய்திருக்கின்றனர். அதன் உண்மையான வாசகம் வருமாறு,

وليس بعد التكبير الرابعة قبل السلام دعاء

நான்காவது தக்பீருக்குப் பின், ஸலாம் கொடுப்பதற்கு முன் துஆக் கிடையாது.

அதாவது, ஜனாஸாத் தொழுகையில் முதல் மூன்று தக்பீர்களுக்குப் பின், ஏதாவது ஒன்று ஓதப்படுகின்றது. ஆனால், நான்காவது தக்பீருக்குப் பின், எதுவும் ஓதக்கூடாது.! இதை ஏலவே நாம் குறிப்பிட்டுள்ளோம்.

பதாயிஃ, கிபாயா, இனாயா உள்ளிட்ட நூற்களில் வருகின்றது.

ليس بعد التكبير الرابعة قبل السلام دعاء

ஏலவே நாம் பதிவு செய்த ஹளறத் அபூபக்கர் இப்னு ஹாமித் அவர்களின் வாசகமானது கின்யா என்ற நூலில் வரும் வாசகமாகும். கின்யா என்ற நூல் ஆதாரபூர்வமானதல்ல! இதில் உள்ளபடி பத்வாக் கொடுக்க முடியாது.

ஷாமி என்ற நூலின் முன்னுரையில் முப்தியின் விதி என்ற தலைப்பில் இவ்வாறு எழுதப்பட்டுள்ளது. “கின்யா” என்ற நூலுக்குரியவர் பலவீனமான அறிவிப்புக்களையும் எடுப்பவர். அதன்படி பத்வாக் கொடுப்பது ஆகாது.

ஷாமி கூறுகின்றார்கள்.

او لنقل الاقوال الضعيفة فيها كالقنية للزاهد فلا يجوز الافتاء من هذه

அஃலா ஹளறத் கத்தஸல்லாஹு ஸிர்ரஹுல் அஸீஸ் அவர்கள் பத்லுல் ஜவாயிஸ் بذل الجوائز என்ற நூலில் கூறுகின்றார்கள்.

கின்யா என்ற நூலின் ஆசிரியர் வழிகெட்ட முஃதஸிலாக் கொள்கையைச் சேர்ந்தவர். "கின்யா" என்ற நூலின் இந்த வாசகத்தை ஏற்றுக்கொண்டால் அது மறுப்பாளர்களுக்கும் கூட மறாகவே இருக்கும். ஏனெனில், ஜனாஸாத் தொழுகைக்குப் பின் துஆக் கேட்பதற்கு தடையுண்டு என்கின்றார்.

அப்படியாயின், அடக்கத்திற்குப் பின்பும் ஆகாது என்றுதானே வரவேண்டும். ஏனெனில், இத்தடைக்குரிய நேரம் தொழுகைக்குப் பின்னாலாகும். இதனால், எந்தவொரு வாசகமும் உங்களுக்கு சாதகமானதாக இல்லை! அதனால், ஜனாஸாத் தொழுகைக்குப் பின், துஆக்கேட்பது ஆகும். சுன்னத் !

இத்துடன் இவ்வாய்வு நிறைவு பெறுகின்றது. அல்ஹம்து லில்லாஹ்.!

# ஆய்வு-13

# வலிமார்களின் கப்றுகளில் குப்பா, கட்டடம் கட்டலாமா? என்பது பற்றிய ஆய்வு!

முஸ்லிம்கள் இருவிதங்களில் இருக்கின்றார்கள்.

1) பாமர முஸ்லிம்கள்.

2) உலமாக்கள், மஷாயிகுமார்கள், வலிமார்கள்.

இவர்களைக் கண்ணியப் படுத்துவதும், மகத்துவப் படுத்துவதும் எதார்த்தத்தில் இஸ்லாத்தைக் கண்ணியப்படுத்துவதாகும்.

பாமரர்களின் கப்றைக் கெட்டியாக்குவதும், அதில் குப்பா உள்ளிட்ட ஏனையவையைக் கட்டுவதும் பயனற்றதாகும். ஆகவே, அவ்வாறு செய்வதற்குத் தடையுண்டு! ஆனாலும், அதில் களிமண் உள்ளிட்டவையைப் பூசி அடையாளமிட்டு வைப்பதால், பாத்திஹா உள்ளிட்டவை ஓதலாமென்றிருந்தால் ஆகும்.

உலமாக்கள், ஷைகுமார்கள் வலிமார்கள் உள்ளிட்டோரின் கப்று ஷரீபுகளில் மக்கள், ஒன்று கூடுவர். மக்கள் அங்கிருந்து கொண்டு பாத்திஹா, திருக்குர்ஆன் ஓதுவார்கள். அங்கிருந்து ஓய்வெடுப்பதற்கும், வலிமார்களின் கௌரவத்தை வெளிப்படுத்துவதற்கும் அதன் அக்கம் பக்கத்தில் நிழலை ஏற்படுத்துவதற்கும், குப்பா உள்ளிட்டவைக் கட்டுவதற்கும் ஷரீஅத்தில் அனுமதி உள்ளது. தவிர,

இது சுன்னத்துஸ் ஸஹாபா மூலம் நிரூபணமாகியுள்ளது; பாமர முஃமின்களின் கப்றுகளைக் கெட்டியாக்குவது, அதில் குப்பாக் கட்டுவதற்குத் தடையுண்டு; ஆனால், கப்றைக் கட்டியிருந்தால், அதை உடைப்பது ஹறாமாகும்.

முதல் மஸ்அலாவில் சகலருக்கும் உடன்பாடு உண்டு! கடைசியாக உள்ள இரண்டு மஸ்அலாக்களிலும் கருத்து வேறுபாடுகள் இருக்கின்றன. ஆகவே, இந்த ஆய்வை இரண்டு அத்தியாயங்களாக்கியிருக்கின்றோம். முதல் அத்தியாயத்தில் இதற்கான ஆதாரங்களும், இரண்டாம் அத்தியாயத்தில் மறுப்பாளர்களின் குற்றச்சாட்டுக்களும்அதற்கான பதில்களும் இடம்பெறும்.

# அத்தியாயம்.1

## வலிமார்களின் கப்றுகளில் கட்டடம் கட்டுவதற்கான சான்றுகள்.!

இந்த இடத்தில் மூன்று விடயங்கள் உள்ளன.

1) கப்றை உறுதியாக்குதல்.

2) வலியின் கப்றின் சுன்னத்தான அளவு ஒரு முழத்தை விட அதிகமாக உயரமாக்குதல்.

3) கப்றுக்குப் பக்கத்தில் கட்டடம் கட்டுதல்.

கப்றை உறுதிப்படுத்துவதில் இரு வழிகள் உள்ளன.

1) கப்றின் உட்பகுதியில் மையித்தை அண்டியிருக்கும் பகுதியை (பச்சைக்கல் மூலமாகக்) கெட்டிப்படுத்துதல்.

2) கப்றுக்கு மேல் கண்ணுக்குத் தெரியக் கூடிய முகட்டுப்பகுதியை கெட்டியாக்குதல்.

1) கப்றின் உட்பகுதியை பச்சைக்கல்லால் பலப்படுத்துதல். அங்கு மரம் (பலகை) வைப்பதற்குத் தடையுண்டு. கல்லால், அல்லது பிள்ளைக்குழியால் பலப்படுத்துவது ஆகும். ஏனெனில் விறகிலும், சுட்ட கல்லிலும் நெருப்பின் குணம் இருக்கின்றது. பாமர முஃமின்களின் கப்றுகளில் கப்றின் வெளி முகட்டுப் பகுதியை பலப்படுத்துவதற்கு தடையுண்டு! குறிப்பாக உலமாக்கள், ஷைகுமார்களுக்கு ஆகும்.

2) கப்றின் மேல் பகுதியை ஒரு முழத்தைவிட அதிகப்படுத்துவதற்குத் தடையுண்டு. அக்கம் பக்கம் எல்லாவற்றையும் சரி செய்து ஒரு முழம் உயர்த்தினால் கூடும்.

3) கப்றுக்கு அக்கம் பக்கத்தில் அல்லது கப்றுக்கு அருகில் முஸ்லிமான பொதுமக்களுக்கு கப்று கட்டுவது தடை!, புகஹாககள் உலமாக்கள் கப்று களில் கூடும்.

ஆதாரங்கள் இதோ!,

1) மிஷ்க்காத் அத்தியாயம் ஜனாஸாவை அடக்கம் செய்தல் பற்றிய பாடத்தில் ஹளறத் அபூதாவூத் றழியல்லாஹு அன்ஹு அவர்களின் அறிவிப்பில் பின்வரும் ஹதீது பதிவாகியுள்ளது.

ஹளறத் உதுமான் இப்னு மழ்னூன் றழியல்லாஹு அன்ஹு அவர்களை

றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் நல்லடக்கம் செய்த பின், அவர்களின் தலைப்பக்கமாக ஒரு கல்லை வைத்த பின், இவ்வாறு கூறினார்கள்.

اعلم بها اخي و ادفن إليه من مات اهلي

இதன்மூலம் எனது சகோதரரின் கப்றில் அடையாமிடுகின்றேன். இந்த இடத்தில் எனது குடும்பத்தில் மரணிப்பவரை நல்லடக்கம் செய்வேன்.

2) புகாரி ஷரீப், அத்தியாயம் ஜனாஸா, "கப்றில் பச்சை மட்டையை நடுதல்" பற்றிய பாடத்தில் ஹளறத் காரிஜா றழியல்லாஹு அன்ஹு கூறுகின்றார்கள்.

ان اشدنا وثبة الذي يثب قبر عثمان ابن مظنون حتي يجاوزه

எங்களில் அதிகம் உயரம் பாய்பவர் உதுமான் இப்னு மழ்னூன் றழியல்லாஹு அன்ஹு அவர்களின் கப்றை பாய்ந்து தாண்டுபவராகும்.

மிஷ்க்காத்தின் அறிவிப்பிலிருந்து ஹளறத் உதுமான் இப்னு மழ்னூன் றழியல்லாஹு அன்ஹு அவர்களின் கப்றின் தலைப்பக்கமாக ஓர் உயரமான கல் இருந்தது என்பது தெரிய வருகின்றது.

இரண்டு அறிவிப்புக்களையும் இவ்வாறு ஒன்றாக்க முடியும்.

கப்றின் தலைப்பக்கமாக கல் நட்டப்பட்டதாக மிஷ்க்காத்தில் வருவதின் கருத்து, கப்றை விட்டும் தனியாக வலைப்பக்கம் கல் இருந்தது என்று பொருளாகாது. கப்றின் தலைப் பக்கத்திலேயேதான்கல் இருந்தது. அல்லது முழுக்கப்றும் அந்தக் கல்லிருந்தது. ஆனாலும், தலைப்பகுதி மட்டும் கூறப்படடுள்ளது. மேற்கண்ட இருஹதீதிலிருந்து பின்வரும் விடயம் நிரூபணமாகின்றது.

விசேடமான ஒருவரின் கப்றில் அடையாளமிடுவதற்காக கப்றை சற்று உயர்த்தி வைப்பதும், அல்லது கல் உள்ளிட்ட ஏதாவது ஒன்றின் மூலமாக உறுதிப்படுத்துவதும் ஆகும். அப்போதுதான் இது இன்ன பெரியவரின் கப்று என்று தெரிய வரும். இதற்கு முதல் இரண்டு மஸ் அலாக்களுக்கு தீர்வு கிட்டிவிட்டது.

மேலும் புகஹாக்கள் கூறுகின்றார்கள்: நிலம் சொரிமணலாக இருந்தால் , மரம், அல்லது இரும்புப் பெட்டியில் மைய்யித்தை வைத்து அடக்கினால், அதன் உட்பகுதியின் நான்கு பக்கத்திலும் மண்ணால் வெறுமையாக்க வேண்டும்.

*(பார்க்க, ஜாமி, ஆலம் கீரி உள்ளிட்டவை)*

3) சங்கைமிகு ஷைகுமார்கள், கண்ணியத்திற்குரிய வலிமார்களின் கப்றுகளுக்கு அக்கம் பக்கத்தில் அல்லது, அதற்கு அருகில் எதாவது ஒரு கட்டடம் கட்டுவது ஆகும். இதற்கான ஆதாரம் திருக்குர்ஆன், சங்கையான சஹாபாக்கள் பொதுவான முஸ்லிம்களின் செயல் உலமாக்களின் கூற்றுக்கள் உள்ளிட்டவற்றில் இருக்கின்றது.

திருக்குர்ஆன் குகை வாசிகளின் கதையை கூறும் போது

قَالَ الَّذِيْنَ غَلَبُوْا عَلٰٓى اَمْرِهِمْ لنتخذن عَلَيْهِمْ مَّسْجِدًا

***அவர்கள் இவர்களுடைய விஷயத்தில் தங்களுக்கிடையே தர்க்கித்துக் கொண்டிருந்த போது, " இவர்கள் (இருந்த இடத்தின்) மீது ஒரு பள்ளியைக் கட்டுங்கள் என்று கூறினார்.***

*அல் குர்ஆன்: (18: 21).*

இந்த திருவசனத்தின் விளக்கத்தில் தப்ஸீர் றூஹுல் பயானில் பின்வருமாறு எழுதப்பட்டுள்ளது.

لا يعلم احد تربتهم وتكون محفوظة من تطرق الناس كما حفظت تربت رسول الله صلي الله عليه وسلم بالحظيرة

குகைவாசிகள் மீது எவரும் உள்ளே நுழைய முடியாதவாறு, உதாரணமாக,, றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் கப்று ஷரீபைச் சுற்றி சுவர் எழுப்பப்பட்டிருப்பது போன்று சுற்றுமதில் போடுவோம் என்று அவர்கள் கூறிய சமயம், அவர்கள் அதனை ஏற்காதபோது பள்ளிவாசல் கட்டப்பட்டது. مسجدا என்ற வார்த்தையின் விளக்கத்தில்,

يصلي فيه المسلمون ويتبركون بمكانهم

மக்கள் அதில் தொழுவார்கள். அதிலிருந்து பறக்கத்தைப் பெறுவார்கள் என்று எழுதுகிறார்கள்.

திருக்குர்ஆன் குகை வாசிகளைப்பற்றி இரு விடயங்களைக் கூறுகின்றது.

1) குகைவாசிகளுக்குப் பக்கத்தில் குப்பா, மக்பறா கட்டுவது பற்றி ஆலோசிக்கப்பட்டது.

2) அவர்களுக்குப் பக்கத்தில் பள்ளிவாசல் கட்டப்பட்டது. இதற்கு எதிராக எந்த மறுப்பும் கூறப்படவில்லை.

மேற்கண்ட இரு செயல்களும் ஆகுமான காலத்திலிருந்து இதுவரையிலும் ஆகுமானதுதான். இது பற்றி உஸூல் நூற்களில் தெளிவாக உள்ளது.

அதாவது, شرائع قبلنا يلزمنا றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களை ஹளறத் ஆயிஷா ஸித்தீக்கா றழியல்லாஹு அன்ஹா அவர்களின் இல்லத்தில் நல்லடக்கம் செய்யப்பட்டது. வீட்டில் நல்லடக்கம் செய்வது ஆகாதென்றிருந்தால், ஸஹாபாக்கள் முதலில் வீட்டைத் தரைமட்டமாக்கி விட்டு நல்லடக்கம் செய்திருப்பார்கள்.

பின்னர், ஹளறத் உமர் பாறூக் றழியல்லாஹு அன்ஹு அவர்களின் ஆட்சிக் காலம் வந்த போது, அதைச்சுற்றி கல்லால் சுவர் எழுப்பினார்கள். அடுத்து, வலீத் இப்னு அப்துல் மாலிக் அவர்களின் ஆட்சிக் காலத்தில் செய்யிதுனா அப்துல்லாஹ் இப்னு ஸுபைர் றழியல்லாஹு அன்ஹு சகல ஸஹாபாக்களுக்கு முன்னால் ஹிஜ்ரி 88ல் இக்கட்டிடத்தை மிகச்சிறப்பாகக் கட்டினார்கள். அதில் கற்களையும் பதிப்பித்தார்கள்.

குலாஸத்துல் வபா பிஅக்பாரில் முஸ்தபா(خلاصة الوفا باخبار دار المصطفي) என்ற நூலில் பின்வருமாறு எழுதுகின்றார்கள்.

عن عمرو وابن دينار وعبيدالله بن ابي زيد قال لم يكن في عهد النبي صلي الله عليه وسلم علي بيت النبي صلي الله عليه وسلم جدار فكان اول من بني عليه جدارا عمر ابن الخطاب ، ثم بناه عبدالله ابن الزبير فكانت حجرته من الكعسة من سعير مربودة في خشب عرعرة

இதன் தமிழாக்கம் மேலே கூறப்பட்டுள்ளது.

புகாரி ஷரீப் அத்தியாயம் ஜனாஸா, "நபியவர்களின் கப்றும், அபூபக்கர், உமர் ஆகியோரின் கப்றும்" என்ற பாடத்தில் பின்வருமாறு உள்ளது.

ஹளறத் உர்வா றழியல்லாஹு அன்ஹு கூறுகின்றார்கள்:

வலீத் இப்னு அப்துல் மலீக் அவர்களின் ஆட்சிக் காலத்தில் றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் றௌழா ஷரீபிலுள்ள ஒரு சுவர் இடிந்து விழுந்து விட்டது. فاخذه في بنائه ஸஹாபாக்கள் அதனைக் கட்டுவதில். கவனத்தைச் செலுத்தினார்கள்.

فبدت لهم قدم ففزعوا وظنوا انها قدم النبي صلي الله عليه وسلم

அப்போது ஒரு பாதம் வெளிப்பட்டது. மக்கள் திகிலடைந்து விட்டனர். இப்பாதம் றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களுடையது என்று அவர்கள் நம்பினர்.

حتي قال لهم عروة  لا والله ماهي قدم النبي صلي الله عليه وسلم  ما هي الا قدم عمر

ஹழறத் உர்வா றழியல்லாஹு அன்ஹு கூறினார்கள். அல்லாஹ்வின் மீது ஆணையாக! இது றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் பொற்பாதமல்ல! ஹழறத் உமர் பாறூக் றழியல்லாஹு அன்ஹு அவர்களின் பாதமாகும்.

ஜத்புல் குலூப் இலா தியாரில் மஹ்பூப் جذب القلوب الي ديار المحبوب என்ற நூலில் ஷைகு அப்துல் ஹக் முஹத்திதுத் திஹ்லவி றஹ்மதுள்ளாஹி அலைஹி எழுதுகின்றார்கள்:

ஹிஜ்ரி 505-ல் ஜமாலுத்தீன் இஸ்பஹானி என்பவர் உலமாக்களுக்கு முன்னிலையிலேயே சந்தண மரத்தினால் றௌழாவைச்சுற்றியுள்ள சுவரைப் சுற்றி கிராதி போட்டார்.

ஹிஜ்ரி 557-ல் சில கிறிஸ்த்தவ பாதிரிகள் மதீனா ஷரீபுக்கு வந்து சுரங்கம் தோண்டி றஸூலுள்ளாஹி ஸல்லலாஹு அலைஹி வஸல்லமவர்களின் பொன்னுடலை களவாடிச் செல்ல முயற்சி செய்தார்கள். றஸூலுள்ளாஹி ஸல்லலாஹு அலைஹி வஸல்லமவர்கள் மூன்று முறை அரசரின் கனவில் தோன்றி இதைத் தெரிவித்தார்கள். அரசர் இந்த நாய்களை கொன்று போட்டார்.

இதன் பின், அரசர் றௌழாவைச் சுற்றி தண்ணீர் வரும் வரை தோண்டி ஈய்யத்தால் உருக்கி நிரப்பினார். பின்னர், ஹிஜ்ரி 678-ல் சுல்தான் கலாஊன் ஸாலிஹி என்பவர் பச்சைக் குப்பாவை நிர்மாணித்தார். அந்த குப்பாதான் இப்போது வரை இருக்கின்றது.

மேற்கண்ட வாசகங்களிலிருந்து தெரிய வருவது யாதெனில்,

றஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் புனித றௌழாவை ஸஹாபாக்கள் கட்டினார்கள். இது றஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களுக்கு மட்டும் சொந்தமானது என்று எவராவது கூறினால், இந்த றௌழாவில் ஹஸறத் ஸித்தீக்குல் அக்பர் அவர்களும்,

ஹஸறத் உமர் பாறூக் அவர்களும் றழியல்லாஹு அன்ஹுமா இருக்கின்றார்கள். ஹஸறத் நபி ஈஸா அலைஹிஸ்ஸலாம் அவர்களும் அங்கேதான் அடங்க இருக்கின்றார்கள். ஆகவே, இது நபியவர்களுக்குரிய தனித்துவம் என்று கூற முடியாது.

புகாரி ஷரீப் "ஜனாஸாவின் பாடம் "மிஷ்க்காத்," மையயித்துக்காக அழுதல்" என்ற பாடத்தில் பின்வரும் ஹதீது பதிவாகியுள்ளது.

ஹஸறத் இமாம் ஹஸன், இப்னு ஹஸன், இப்னு அலி றழியல்லாஹு அன்ஹும் வபாத் தான போது

ضربت امراته القبة علي قبره سنة

அவர்களின் மனைவி ஒரு வருடம் வரை அதில் ஒரு குப்பாவை நிர்மாணித்து அதிலேயே தங்கியிருந்தார்கள்.

இது சஹாபாக்கள் சகலரும் உயிரோடு இருக்கும் போது அவர்களுக்கு முன்னிலேயே நடந்ததாகும். எவரும் இதை நிராகரிக்கவில்லை. அவர்களின் மனைவி ஒருவருடம் வரை அதிலேயே தங்கியிருந்தார்கள். இதன் பின்பு தனது வீட்டுக்குத் திரும்பிவிட்டார்கள்.இதிலிருந்து பெரியோர்களின் கப்றுக்குப் பக்கத்தில் ஒட்டியிருப்பதற்கு ஆதாரம் கிடைத்து விட்டது.

இதுவரை திருக்குர்ஆன், ஹதீதுகளின் முகாந்திரங்களை முன் வைத்தோம். அடுத்து, புகஹாக்கள், முஹத்திதீன்கள், முபஸ்ஸிரீன்கள் உள்ளிட்டோரின் கூற்றுக்களை எதிர்பாருங்கள்!

## கப்றில் கட்டடம் கட்டுதற்கான புகஹாக்கள், முஹத்திதீன்கள், முபஸ்ஸிரீன்களின் ஆதாரங்கள்.!,

தப்ஸீர் றூஹுல் பயானில் 9:18 திருவாசகத்தின் விளக்கத்தில் பின் வருமாறு எழுதுகின்றார்கள்.

فبناء القبات علي قبور العلماء والاولياء والصلحاء امر جائز إذا كان بذالك التعظيم في اعين العامة حتي لا يحتقروا صاحب هذا القبر

உலமாக்கள், ஸாலிஹீன்களின் கபுறுகளில் கட்டடம் கட்டுவதென்பது, அவர்களை மக்கள் ஏளனமாகப் பார்க்காமல் மக்கள் பார்வையில் அவர்களைப் பற்றிய கண்ணியத்தை ஏற்படுத்துவது தான் நோக்கமாயின், ஆகுமான காரியமாகும். மக்கள் அங்கே ஸியாரத் செய்வதனாலும். அங்கே தங்கியிருந்து ஓய்வெடுப்பதனாலும் அது ஆகுமாக இருக்கும்.

ஷைகு அப்துல் ஹக் முஹத்திதுத் திஹ்லவி றஹ்மதுல்லாஹி அலைஹி தங்களுடைய سفر السعادة என்ற நூலில் பின் வருமாறு எழுதுகின்றார்கள்.

இதனால்தான் ஷைகுமார்கள், ஸாலிஹீன்கள் உள்ளிட்டோரின் கப்று களைக் கட்டுவதில் உள்ள நன்மையைப் பார்த்தபின், அதிகப்படுத்தினர். ஆகவே ,வலிமார்களைப் பற்றிய அச்சம் வெளிப்படும். குறிப்பாக இந்தியாவில் ஹிந்துக்களும், காபிர்களும் அதிகமான மார்க்கத்தின் விரோதிகளும் இருக்கின்றனர்.

இந்த இடங்களில் இவர்களின் தகுதியை வெளிப்படுத்துவது காபிர்களுக்கு அச்சத்தையும், இஸ்லாத்தை வழிப்படுவதற்கும் காரணமாகவும் ஆகிவிடும். அதிகமான செயல்கள் ஆரம்பத்தில் மக்றூஹாக இருந்தன. கடைசி காலத்தில் சுன்னத்தாகி விட்டன.

ஷாமி என்ற நூலில் "நல்லடக்கம்" என்ற பாடத்தில் பின்வருமாறு எழுதப்பட்டுள்ளது.

وقيل لا يكره البناء إذا كان الميت من المشائخ والعلماء والسادات

மணித்தவர் ஷைகுமார்கள், உலமாக்கள், ஸாதாததுமார்களாக இருந்தால், அவர்களின் கப்றுகளைக் கட்டுவது மக்றூஹ் அல்ல!

துர்ருல் முக்தாரில் "நல்லடக்கம்" என்ற பாடத்தில் பின் வருமாறு எழுதுகின்றார்கள்..

لا يرفع عليه بناء و قيل لا بأس به وهو المختار

கப்றில் கட்டடம் கட்டக் கூடாது என்றும, இன்னும் அதில் குற்றமில்லை

என்றும் கூறப்படுகின்றது. இதுதான் விரும்பத்தக்க கூற்றாகும்.

ஷாமி, துர்ருல் முக்தார் உள்ளிட்ட நூற்களிலிருந்து கப்றில் கட்டுவதற்கு قيل என்ற சொற்களிலிருந்து விளக்கம் கூறுகின்றனர். இதனால், இக்கூற்று பலவீனமாகும் என்று சிலர் கருதுகின்றனர்.இது சரியான கூற்றல்ல!

பிக்ஹில் قيل என்பது பலவீனத்தின் அடையாளமல்ல! சில இடங்களில் ஒரு மஸ்அலாவில் இரண்டு கூற்றுக்களை பயான் செய்வார்கள். அவையிரண்டையும் قيل என்று தான் கூறுவார்கள்.

(منطق) தர்க்கக் கலையில் قيل என்பது, பலவீனத்தின் அடையாளமாகும். قيل என்ற கூற்றைப்பற்றிய முழுமையான விளக்கம் இதைத் தொடர்ந்து வருகின்ற "கப்றில் அதான் கூறுவது" பற்றிய ஆய்வில் எதிர்பாருங்கள்! இன்ஷாஅல்லாஹ்!

طحتاوي علي مراقب الفلاح என்ற நூல் பக்கம் 335 ல் பின்வருமாறு எழுதுகின்றார்கள்

وقد اعتاد اهل المصر وضع الاحجار حفظا للقبور عن الاندراس والنبش ولا بأس به ، وفي الدرر ولا يجصص ولا يطين ولا يرفع عليه بناء وقيل لا بأس به وهو المختار

மிஸ்ரில்(எகிப்தில்) உள்ளவர்களிடத்தில் மைய்யித்தில் மண் சரிந்து விழாதிருக்கவும், மண்மூடாதிருக்கவும் கப்றின் (உள்ளே) பச்சைக் கல்லை அடுக்கும் வழக்கம் இருக்கின்றது. அதில் கட்டடம் கட்டக் கூடாது. என்றும், கூடும் என்றும் கூறப்படுகின்றது. இதுவே முக்தாறான தேர்ந்தெடுக்கப்பட்ட கூற்றாகும்.

மீஸானுல் குப்றா என்ற நூலில் "ஜனாஸா" என்ற பாடத்தில் இமாம் அப்துல் வஹாப் ஷஃறானி றஹ்மதுல்லாஹி அலைஹி எழுதுகின்றார்கள்.

ومن ذلك قول الائمة ان القبر لا يبني ولا يجصص مع قول ابي حنيفة يجوز ذلك قال الاول مشدد والثاني مخفف

ஏனைய மூன்று இமாம்களிடத்திலும் கப்றைக் கட்டக் கூடாது. கப்றில் சுண்ணாம்பு பூசக் கூடாது. ஹளறத் இமாமுல் அஃழம் அபூ ஹனீபா றஹ்மதுல்லாஹி அலைஹிடத்தில் இவையனைத்தும் ஆகும். இதன்படி முதற் கூற்று கடினமானது. இரண்டாம் கூற்று இலகுவானது. அல்ஹம்துலில்லாஹ்!

இமாம் அபூ ஹனீபா றஹ்மதுல்லாஹி அலைஹி அவர்கள் கப்றில் குப்பா உள்ளிட்ட ஏனையவையும் கட்டுவது ஆகும் என்று கூறியதற்கான அசைக்க முடியாத ஆதாரம் கிடைத்து விட்டது.

பகுத்தறிவும் கூட பின்வரும் சில காரணங்களுக்காக கப்றில் கட்டடம் கட்டுவதை ஆகும் என்றே கூறுகின்றது.

1) சாதாரமானவர்களின் கப்றின் பக்கம் பாமரர்களின் பார்வையில் ஒழுக்கம் இருப்பதில்லை. மரியாதையுமிருப்பதில்லை. பாத்திஹா ஓதுவதற்கான முக்கியத்துவம் இருப்பதுமில்லை. மக்கள் காலால் மிதித்துக் கொண்டு நடக்கவும் செய்கின்றனர். எங்காவது ஒருகப்றில் கட்டடம் கட்டப் பட்டிருந்தால், இது ஒரு பெரியாரின் கப்று என்று புரிந்து கொள்வார்கள். நடக்கும் போது மிதித்து நடக்காமல் தவிர்ந்து கொள்வார்கள். தானாகவே கையை உயர்த்தி பாத்திஹா ஓதுவார்கள்.

மிஷ்க்காத் "அடக்கம்" பற்றிய பாடத்தில், இன்னும் மிர்க்காத்திலும், முஸ்லிமின் வாழ்க்கை உயிரோடு இருக்கும் போதும், மரணித்த பின்பும் சமம்தான்" என்றுள்ளது. இவ்வாறு பதாவா ஆலம்கீரியில் “வெறுக்கத்தக்கவை” என்ற பாடத்திலும், அஷிஃஅத்துல் லம்ஆத் “அடக்கம்” என்ற பாடத்திலும் பெற்றோரின் கப்றை முத்தமிடுவது ஆகும் என்று எழுதப்பட்டுள்ளது.

ஒரு கப்றாளி உயிரோடு இருக்கும் போது எந்தளவு தூரம் இடைவெளிவிட்டு இருப்பாரோ அவ்வாறே மரணித்த பின் அவரது கப்றிலும இருக்க வேண்டும் என்று சட்ட அறிஞர்களான புகஹாக்கள் கூறுகின்றார்கள். இதன் மூலம் மையித்துக்கான மரியாதை என்பது, உயிரோடு இருக்கும் போதிருந்த அதே மரியாதைதான் என்பதை விளங்கிக் கொள்கின்றோம்.

வலிமார்கள் வாழும் போது அவர்களுக்கு மரியாதை செய்ய வேண்டியது வாஜிபாகும். ஆகவே, வபாத்தான பின்பும் வாஜிபாகும். அவர்களின் கப்றைக் கட்டுவதென்பது, அவர்களைக் கண்ணியப் படுத்துவதற்கான ஒரு வழிதான். எனவே, ஆகக் குறைந்தது சுன்னதாகவே இருக்கும்.

2) சகல கட்டடங்களிலும் அரசாங்கக் கட்டிடமும், பள்ளிவாசல்களும் தனித்துவம் பெற்றிருக்கின்றன. அதை விளங்கி மக்கள் பயனடைகின்றனர். உலமாக்கள் அறிஞரின் கோலத்திற்கு ஏற்ற ஆடையணிய வேண்டும். அப்போது தான் மக்கள் அவரை இனம் கண்டு மார்க்க சட்டங்களைக் கேட்டு அறிந்து கொள்வார்கள்.

இவ்வாறுதான் உலமாக்கள், ஷைகுமார்களின் கப்றுகள் ஏனைய பாமரர்களிலிருந்து வேறுபட்டு தனித்துவமாக இருக்க வேண்டும். அப்போது தான் மக்கள் அதை இனம் கண்டு அவர்களிடமிருந்து அருளை (பைழை)

ப் பெறுவார்கள்.

3) வலிமார்களின் கப்றுகள் அல்லாஹ்வின் நினைவுச் சின்னங்களாகும். இதனை தப்ஸீர்றூஹுல் பயானின் மேற்கோளோடு ஏலவே குறிப்பிட்டிருக் கின்றோம். ஆகவே, அல்லாஹ்வின் நினைவுச் சின்னங்களைக் கண்ணியப் படுத்த வேண்டியதும், அதற்கு மரியாதை கொடுக்க வேண்டியதும் அவசிய மாகும்.

இது விடயம் திருக்குர்ஆன் மூலம் நிரூபணமான விடயமாதலால் திருக்குர்ஆனின் ஒழுக்கத்தைப் பேண வேண்டியதும் அவசியமாகும். ஒழுக்கம் பேணுவதில் ஒவ்வொரு நாட்டிலும், ஒவ்வொரு காலத்திலும் அலாதியான வழிகள் உள்ளன. ஒழுக்கத்தை பேணும் வழி இஸ்லாத்திற்கு எதிராக இல்லையாயின், அதுவும் ஆகும்தான்.

றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் காலத்தில் திருக்குர்ஆனை எலும்பிலும், தோலிலும் எழுதினார்கள். மஸ்ஜிதுன் நபவி கழிமண்ணாலிருந்தது. ஈத்த ஓலையால் கூரை மேயப் பட்டிருந்தது; மழைகாலத்தில் ஒழுகியது; பிற்காலத்தில் மஸ்ஜிதுன் நபவியும், றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் றௌழா ஷரீபும் அதிஉன்னத முக்கியத்துவம் கொடுத்து கட்டபபட்டன. திருக்குர்ஆன் ஷரீபும் உயர்ந்த காகிதத்தில் அச்சிடப்பட்டது.

துர்ருல் முக்தாரில் “வெறுக்கத்தக்கவை” என்ற அத்தியாயத்தில் “வணிகம்” என்ற பாடத்தில் எழுதுகின்றார்கள்.

وجاز تحلية المصحف لما فيه من تعظيمه كما في نقش المسجد

இதற்கு அடியில் ஷாமியில் பின்வருமாறு எழுதப்பட்டுள்ளது.

اي بالذهب والفضة

திருக்குர்ஆனை தங்கம், வெள்ளியால் முலாம் பூசுவதால் திருக் குர்ஆனுக்குக் கண்ணிய மிருப்பதால் ஆகும். பள்ளிவாசலுக்கு மார்பிள் பதிப்பதுபோல,

இதுபோன்று ஸஹாபாக்கள் காலத்தில் திருக்குர்ஆனில் ஒலிக் குறியீடும் ஏனைவையும் இல்லாமலிருக்க வேண்டுமென்றிருந்தது. (அக்காலத்திலுள்ளவர்கள் மொழியில் பாண்டித்தியம் பெற்றிருந்தனர்,) இது அந்தக்காலத்திற்கு மட்டும் தான்!. அதிகமான விடயங்கள் கால, இடமாற்றங்

களால் மாறிவிட்டன.

இதே இடத்தில் ஷாமியில் எழுதுகின்றார்கள்.

وما روي عن ابن مسعود رضي الله عنه جردوا القرآن كان في زمنهم وكم من شيئ يختلف باختلاف الزمان والمكان

ஹளறத் இப்னு மஸ்ஊத் றழியல்லாஹு அன்ஹு மூலம் அறிவிக்கப் படுகின்றது:

திருக்குர்ஆனை اعراب ஒலிக்குறியீடு உள்ளிட்ட மற்றவற்றிலிருந்து வெறுமையாக்கி வைக்கவும். இது அவர்களின் காலத்திலிருந்த வழக்கம். மேலும், எத்தனையோ விடயங்கள் காலத்தின், இடத்தின் மாற்றத்தால் மாற்றமடைகின்றன.

இதே இடத்தில் ஷாமியில் எழுதுகின்றார்கள்;

திருக்குர்ஆனை சிறிதாக்கி தாயத்தின் அளவைப் போன்று அச்சிடக் கூடாது! எழுதுகோல் பெரிதாக இருக்க வேண்டும் எழுத்துக்களை நெருக்கமாக எழுதாமல் இடைவெளிவிட்டு எழுதுவதோடு வசனம்களுக்கிடையிலும் இடைவெளி இருக்க வேண்டும். இத்தனை சட்டங்களும் எதற்காக? திருக்குர்ஆனின் கண்ணியத்தை பாதுகாப்பதற்காக மட்டும்தான்.

இவ்வாறுதான் இதுவுமாகும்.

ஆரம்ப காலத்தில் திருக்குர்ஆனைக் கற்றுக் கொடுப்பதற்கும், அதான், இகாமத் சொல்வதற்கும் கூலி எடுப்பது "ஹறாமா"க இருந்தது. ஹதீஸில், பிக்ஹில் இதுபற்றிக் கூறப்பட்டுள்ளது. பின்னர், நிர்பந்தத்தால் ஆகுமாக்கப்பட்டது.

றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் காலத்தில் உயிரோடு வாழ்பவர்களுக்கு உறுதியான வீடு கட்டுவதற்குக்கூட தடையிருந்தது. றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் காலத்தில் ஒரு ஸஹாபி அழகிய வீட்டைக் கட்டியிருந்தார். அதைப் பார்த்த றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்கள் கோபப்பட்டார்கள். அவருக்கு ஸலாம் கூறுவதைக் கூடத் தவிர்த்தார்கள்.

*(பார்க்க,, மிஷ்க்காத் கிதாபுர் றிகாக்)*

இதே மிஷ்க்காத்தில் இதே பாடத்தில் வருகின்றது.

றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் கூறினார்கள்:

اذالم يبارك للعبد في ماله جعله في الماء والطين

அல்லாஹுத்தஆலா ஓர் அடியானின் செல்வத்தில் பறக்கத் செய்யா விட்டால், அதை கல்லிலும், தண்ணீரிலும் செலவழிக்கச்செய்வான்.

ஆயினும், இந்த சட்டங்கள் இருக்கத்தக்கவே சகல முஸ்லிம்களும் வசதியான பெரிய வீடுகளையும், பள்ளிவாசலையும் கட்டத்தான் செய் கின்றனர். இந்நிலையில், வலிமார்களின் கப்றுகளில் கட்டடம் கட்டுவதையும், குப்பா கட்டுவதையும் இவர்கள் "ஹறாம்" என்று கூப்பாடு போடுவது ஆச்சரியமாக இருக்கின்றது. இவ்வாறு வீரவசனம் பேசுவோர் தங்களின் வீட்டை எதற்காக சிறப்பாகவும், பலமாகவும் மாடிக்குமேல்மாடிவைத்து கட்டுகின்றனர்.?

افتؤمنون ببعض الكتب  وتكفرون ببعض

சில ஹதீதுகளை ஈமான் கொள்கின்றீர்கள். சிலதை மறுக்கின்றீர்கள். ஆகவே அல்லாஹ்வுக்காக இதை எங்களுக்கு விளங்கப்படுத்துங்கள்.

4) வலிமார்களின் கப்றுகள உறுதியாகக் கட்டப்படுவதும், அதில் கட்டடம் கட்டுவதும் இஸ்லாத்தை எத்திவைப்பதற்கான வழியாகும். இதனை அஜ்மீர் ஷரீபிலும் இதுவல்லாத இடங்களிலும் கண்கூடாகக் காணுகின்றோம்.

முஸ்லிம்களை விட ஹிந்துக்களும், காபிர்களுமே அதிகமாக அங்கே ஸியாரத் செய்கின்றனர். அதிகமான ஹிந்துக்களும், றாபிழி(ஷீஆக்)களும் ஹாஜா நாயகத்தின் பெயரைக் கூறிக் கொண்டு முஸ்லிமானதை என் கண்ணாலேயே பார்த்திருக்கின்றேன்.

இப்போது இந்தியாவில் அடையாளமில்லாத எத்தனையோ வக்பு சொத்துக்களை ஹிந்துக்கள் கபளீகரம் செய்திருக்கின்றார்கள். பள்ளிவாசல்கள், கான்காகள், மையவாடிகள் அடையாளமில்லாத காரணத்தால் அவர்களின் ஆதிக்கத்திற்குள் சென்றுவிட்டன.

கப்றிஸ்த்தானிலுள்ள சகல கப்றுகளும் சாதாரண களிமண்ணிலால் அடையாளமிடப்பட்டிருந்தால், சில நாட்களுக்குப் பின் அதை இடித்துத் தரைமட்டமாக்கி விட்டு காபிர்கள் மையவாடியைக்கைப் பற்றிவிடுவார்கள். ஆகவே கப்றுஸ்தானில் கப்றுகளை உறுதியாகக் கட்ட வேண்டியது தற்கால சூழலைக் கவனத்தில் கொண்டு அவசியமாகின்றது. கப்றிஸ்தானில்

சில கப்றுகளாவது உறுதியான கட்டடங்களாக இருக்குமாயின், அந்த கப்றிஸ்த்தானின் நிலத்தின் எல்லையை அறிந்து கொள்ள முடியும்.

எனது நாட்டில் (இந்தியாவில்) நான் கண்ட விஷயம் இது, முஸ்லிம் களுக்குரிய இரு மைய்ய வாடிகள் நிறைந்து விட்டன. இரண்டு மூன்று கப்று களைத் தவிர ஏனைய அனைத்தும் சாதாரணமானவை அடுத்த மைய்ய வாடியில் சிறிய ஒரு பகுதியில் கட்டடம் கட்டப்பட்ட சில கப்றுகள் இருந்தன. முஸ்லிம்களில் உள்ள சில ஏழைகள் இரகசியமாக இதை விற்று விட்டனர்.

இது தொடர்பாக வழக்கு நடந்தது;

நீதிபதி இந்தக்காணி வெறுமையான காணி என்று விளங்குவதற்காக முதலில் கெட்டியாகக் கட்டப்பட்ட கப்றுகளைத் தவிரவுள்ள காணியை முழுமையாக வெறுமைபடுத்தினார்கள். அது முஸ்லிம்களின் பிடியிலிலிருந்து நீக்கப்பட்டது; அடுத்த கப்றிஸ்த்தானில் கெட்டியாகக் கட்டப்பட்ட வற்றில் அரைவாசிக் காணி முஸ்லிம்களுக்குக் கிடைத்தது.

ஏனைய சகல காரணிகளும் போய்ச் சேர்ந்து விட்டன. கப்றுகள் கெட்டியாகக் கட்டப்பட்டிருந்ததால் கப்றுவரையுமுள்ள எல்லைப் பாதுகாக்கப்பட்டது. ஏனையவையை விற்றது சரியென ஏற்கப்பட்டது.

இதிலிருந்து இந்தியாவில் கப்றிஸ்த்தானில் சில கப்றுகளையாவது கெட்டியாகக் கட்டுதல் அவசியமாகும். பள்ளிவாசலுக்கு மனாறா இருப்பது போல சில கப்றுகளையாவது கட்டுவது வக்பு சொத்தைப் பாதுகாப்பதற்குரிய வழியாக அமையும்.

# *அத்தியாயம்: 2*
# *குற்றச்சாட்டுக்களும் பதில்களும்.*

இது தொடர்பாக மறுப்பாளர்களிடம் இரண்டு குற்றச்சாட்டுக்கள் மட்டுமே காணப்படுகின்றன.

**குற்றச்சாட்டு : 1**

மிஷ்க்காத்தில் “அடக்கம்” என்ற பாடத்தில் முஸ்லிமில் வருகின்ற பின்வரும் ஹதீதாகும்.

نهي رسول الله صلي الله عليه وسلم أن يجصص القبور وان يبني عليه وان يقعد عليه

கப்றின் மீது சாந்து பூசுவதையும், அதன்மீது கட்டுவதையும், அதன்மேல் இருப்பதையும் றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்கள் தடுத்தார்கள்.

மேலும், புகஹாக்கள் பொதுவாக பின்வருமாறு கூறுகின்றார்கள்.

يكره البناء علي القبور

கப்றுகளில் கட்டடம் கட்டுவது மக்றூஹ்!

மேற்படி ஹதீதில் பின்வரும் மூன்று விடயங்கள் ஹறாம் என்று தெரிகிறது.

1) கப்றை கெட்டியாக அமைப்பது.
2) கப்றின் மேல் கட்டடம் கட்டுவது.
3) கப்றுக்குப் பக்கத்தில் கான்காஹ் அமைத்து அங்கே தங்குவது.

**பதில்:-**

கப்றைக் கெட்டியாக்குவதற்கான தடைக்கு மூன்று காரணங்கள் இருக்கின்றன.

1) கப்றின் உள்ளே மைய்யித் இருக்கும் பகுதியை கெட்டியாகுவது. இதனால்தான் ஹதீதில் ان يجصص القبور கப்றை சாந்து பூசுவது என்று கூறினார்கள். தவிர, علي القبور கப்றின் மேல் என்று கூறவில்லை.

2) இது முஸ்லிமான பொதுமக்களின் கப்றுகளை உறுதியாகக் கட்டுவதற்குத்தான் தடை, காரணம் இதில் எதுவித பயனும் கிடையாது. இதன்படி இதன்பொருள், சகல சாதாரண கப்றுகளையும் கெட்டியாக்குவதற்கு தடை விதித்தார்கள் என்று பொருள் வரும்.

3) கப்றை பெருமைக்காக அழகுபடுத்தி கெட்டியாக்குவது.

இந்த மூன்றுக்கும் தடை உண்டு!. ஆனால், அடையாளப்படுத்துவதற்காக, ஏதாவது ஒருவலியின் கப்றை கெட்டியாக்குவதாயின், ஆகும். ஏனெனில், றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்கள் ஹளறத் உதுமான் இப்னு மழ்னூன் றழியல்லாஹு அன்ஹு அவர்களின் கப்றை உறுதிப்படுத்தினார்கள். இதை ஆரம்பத்தில் கூறியுள்ளோம்.

“லம்ஆத்” என்ற நூலில் ஷைகு அப்துல் ஹக் முஹத்திதுத் திஹ்லவி றஹ்மதுல்லாஹி அலைஹி أن يجصص القبور என்பதற்கு கீழ் இவ்வாறு எழுதுகின்றார்கள்.

لما فيه من الزينة والتكلف

இதில் அழகு படுத்துவதும், சிரமத்தை ஏற்படுத்துவதும் இருக்கின்றது. இவையில்லையாயின், ஆகும் என்பது இதன்மூலம் தெரிகின்றது.

ان يبني عليه

கப்றின் மீது கட்டடம் கட்டுவதற்குத் தடைவிதித்துக் கூறியதற்கும் சில பொருள்கள் இருக்கின்றன.

1) சுவரை கப்றில் சேரக்கூடியவாறு உயர்த்தி கப்றைக்கட்ட வைப்பது.

ஷாமியில். "அடக்கம்" பற்றிய பாடத்தில் எழுதுகின்றார்கள்:

وتكره الزيادة عليه كما في المسلم نهي رسول الله صلي الله عليه وسلم أن يجصص القبر وان يبني عليه

கப்றை ஒரு ஷானுக்கு மேல் உயர்த்துவதற்குத் தடையாகும்.

துர்ருல் முக்தாரில் இதே பாடத்தில் எழுதுகின்றார்கள்:

وتكره الزيادة عليه من التراب لانه بمنزلة البناء

கப்றுக்கு மேல் மண்ணை அதிகமாக்குவது தடையாகும். காரணம் இது கட்டடம் கட்டுவதின் அந்தஸ்த்திலிருக்கின்றது. கப்றில் கட்டுவதென்பது கப்றில் சுவர் எழுப்புவதைக் குறிக்கும்; கப்றைச்சுற்றித்தான் குப்பாக் கட்டப்படுகின்றது. ஆகவே இதற்குத் தடையில்லை.

2) இந்தச்சட்டம் முஸ்லிம்களில் பாமரர்களுக்குரியதாகும்.

3) இந்த ஹதீதுக்குரிய விளக்கத்தை மிஷ்க்காத்தில் "பள்ளிவாசல்கள்" என்ற பாடத்தில் வருகின்ற மற்றுமொரு ஹதீது கூறுகின்றது.

اللهم لا تجعل قبري وثنا يعبد اشتد غضب الله علي قوم اتخذوا قبور انبياءهم مسْجد

யாஅல்லாஹ்! எனது கப்றை வணங்கக் கூடியவாறு கெட்டியாக்காதே! தங்களுடைய நபிமார்களின் கப்றுகளை பள்ளிகளாக்கிய சமுகத்தின் மீது அல்லாஹ்வின் சாபம் உண்டாகும். இதிலிருந்து ஒரு கப்றை பள்ளியாக்குவது அதில் கட்டடம் கட்டி அதன் பக்கம் தொழுவது ஹறாமாகும். அதற்கு இபாதத் செய்வது என்பதுதான் அந்த ஹதீஸின் நோக்கமாகும்.

அவ்வாறே இப்னு ஹஜர் அஸ்கலானி றஹ்மதுல்லாஹி அலைஹி புகாரி ஷரீபின் விரிவுரையான பத்ஹுல் பாரியில் எழுதுகின்றார்கள்.

قال البيضاوي لما كانت اليهود والنصري يسجدون لقبور الانبياء تعظيما لشأنهم ويجعلونها قبلة يتوجهون في الصلوة نحوها واتخثوها اوثانا لعنهم ومنع المسلمون عن مثل ذلك

இமாம் பைழாவி கூறுகின்றார்கள்:

யஹூதிகளும், நஸாறாக்களும் நபிமார்களின் கப்றுகளைக் கண்ணியப்படுத்துவதற்காக சுஜூது செய்தனர், அதைக் கிப்லாவாக ஆக்கிக் அதன் பக்கமாகத் தொழுதனர்; அவர்கள்கப்றுகளை விக்ரஹமாக்கினார்கள். ஆகவேதான் அவர்கள் மீது றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்கள் சபித்தார்கள்முஸ்லிம்களை அதிலிருந்து தடுத்தார்கள்.

மறுப்பாளர்கள் முன்வைத்த ஹதீதுக்கான விளக்கம் இப்போது கிடைத்து விட்டது.

கப்றில் குப்பா கட்டுவதற்கு மறுப்புக்கிடையாது. கப்றை சுஜூது செய்யுமிடமாக ஆக்கு வதற்குத்தான் தடையிருக்கின்றது.

4) இந்தத் தடை ஷரீஅத் ரீதியானதல்ல!, துறவறம், தக்வாவுக்கான கற்பித்தலாகும். குடியிருப்பதற்குரிய வீட்டைக் கூட கெட்டியாகக் கட்டு வதற்கும் தடைவிதித்து அதை இடித்தது பற்றி முதல் பாடத்தில் குறிப் பிட்டுள்ளோம்.

5) இந்தக் கட்டடத்தால் மரணித்தவர் ஆறுதலாக இருப்பார், அல்லது, இதனால் அவர் பயனடைவார் என்ற மனஉறுதி, கட்டடம் கட்டுபவரின் மனதிலிருக்குமாயின், தடையாகும். இது தவறான கற்பனை;ஸியாரத் செய்பவர்களின் வசதிக்காகக் கட்டடம் கட்டுவதாயின் ஆகும்.

மேற்கண்ட வகைகளை நாம் கூறியதற்காகன காரணம், ஸஹாபாக்கள் குறிப்பான சில ஸஹாபாக்களின் கப்றுகளில் கட்டடம் கட்டியுள்ளார்கள். இதனால் இது ஸஹாபாக்களின் சுன்னத்தாகி விட்டது.

ஹளறத் உமர் பாறூக் றழியல்லாஹு அன்ஹு றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் றௌழாவைச் சுற்றிக் கட்டினார்கள். ஹளறத் ஸைய்யிதினா இப்னு ஸுபைர் றழியல்லாஹு அன்ஹு அவர்கள் அதனை அழகுபடுத்திக் கட்டினார்கள். ஹளறத் இமாம் ஸைனுல் ஆபிதீன் றழியல்லாஹு அன்ஹு அவர்களின் மனைவி தனது கணவரின் கப்றில் குப்பா அமைத்தார்கள். இதனை மிஷ்க்காத்திலிருந்து எடுத்துக் கூறியுள்ளோம்.

ஹளறத் இமாம் ஸைனுலாபிதீன் றழியல்லாஹு அன்ஹு அவர்களின் மனைவியின் இச்செயலுக்குக் கீழ் இமாம் முல்லா அலி காரி றஹ்மதுல்லாஹி அலைஹி அவர்கள் மிர்க்காத்தில் பின்வருமாறு எழுதுகின்றார்கள்.

الظاهر انه لاجتماع الاحباب للذكر والقراءة وحضور الاصحاب بالمغفرة اما حمل فعلها علي العبث المكروه فغير لائق لصنيع اهل البيت

குப்பா என்பது தோழர்களும் நண்பர்களும் ஒன்று கூடி அல்லாஹ்வைத் திக்ரு செய்து திருக்குர்ஆன் ஓதி மஃபிறத்துக்காக துஆ கேட்பதற்குத்தான் என்பது தான் வெளிப்படையானது. ஆனால், அவர்களின் மனைவி

அவர்கள் பயனற்ற மக்றூஹான செயலைச் செய்திருக்கின்றார்கள். இது அஹ்லுல் பைத்தைச் சேர்ந்தவர்களின் தகுதிக்கு மாற்றமானதாகும். இதன் மூலம் பயனில்லாமல் கட்டடம் கட்டுவதற்குத் தடையுண்டு. ஆனால் ஸியாரத் செய்பவர்களின் வசதிக்காகக் கட்டுவது ஆகும்.

ஹளறத் உமர் றழியல்லாஹு அன்ஹு அவர்கள் ஹளறத் ஸைனப் பின்து ஜஹ்ஷ் றழியல்லாஹு அன்ஹா அவர்களின் கப்றில் குப்பா அமைத் தார்கள். ஹளறத் ஆயிஷா ஸித்தீக்கா றழயல்லாஹு அன்ஹா அவர்கள் தனது சகோதரர் அப்துர் றஹ்மான் றழியல்லாஹு அன்ஹு அவர்களின் கப்றிலும், ஹளறத் முஹம்மது இப்னு ஹனீபிய்யா றழியல்லஹு அன்ஹு ஹளறத் அப்துல்லாஹ் இப்னு அப்பாஸ் றழியல்லாஹு அன்ஹுமா அவர் களின் கப்றிலும் குப்பா கட்டினார்கள்.

முன்தகா ஷறஹு முஅத்தா இமாம் மாலிக் என்ற நூலில் அபூ அப்து சுலைமான் றஹ்மதுல்லாஹி அலைஹி கூறுவதாக எழுதப்பட்டுள்ளது.

وضربه عمر لقبر زينب بنت جحش وضربته عائشة علي قبر اخيها عبد الرحمن وضربه محمد ابن الحنفية علي قبر ابن عباس وانما كرهه لمن ضربه علي وجه السمعة والمباهة

ஹளறத் உமர் றழியல்லாஹு அன்ஹு ஹளறத் ஸைனப் பின்து ஜஹ்ஷ் றழியல்லாஹு அன்ஹா அவர்களின் கப்றில் குப்பாக் கட்டினார்கள். ஹளறத் ஆயிஷா ஸித்தீக்கா றழியல்லாஹு அன்ஹா அவர்கள் தனது சகோதரர் அப்துர் ரஹ்மான் றழியல்லாஹு அன்ஹு அவர்களின் கப்றிலும், ஹளறத் முஹம்மது இப்னு ஹனபிய்யா றழியல்லாஹு அன்ஹு ஹளறத் அப்துல்லாஹ் இப்னு அப்பாஸ் றழியல்லாஹு அன்ஹுமா அவர்களின் கப்றிலும் குப்பாக் கட்டினார்கள். குப்பா கட்டுவது மக்றூஹ் என்று கூறுவது பெருமைக்காகக் கட்டுவதையாகும்.

பதாயிஉஸ் ஸனாயிஃ بدائع الصنايع என்ற நூல் பாகம்-1 பக்கம் 320-ல் எழுதுகின்றார்கள்.

روى أن ابن عباس لما مات بالطائف صلي عليه محمد ابن حنفية وجعل قبره مسنما وضرب عليه قسطاطا

ஹளறத் இப்னு அப்பாஸ் றழியல்லாஹு அன்ஹுமா அவர்கள் தாயிபில் வபாத்தான போது அவர்களுக்காக ஹளறத் முஹம்மது இப்னு ஹனபிய்யா றழியல்லாஹு அன்ஹு அவர்களைத் தொழுவித்தார்கள். கப்றைச் சமப்படுத்திவிட்டு அதற்கு மேல் குப்பா கட்டினார்கள்.

புகாரி ஷரீபின் விரிவுரை ஐனியில் எழுதுகின்றார்கள்.

ضربه محمد ابن الحنفية علي قبر ابن عباس

முஹம்மத் இப்னு ஹனபிய்யா ஹளறத் இப்னு அப்பாஸ் றழியல்லாஹு அன்ஹுமா அவர்களின் கப்றுக்கு மேல் குப்பாக் கட்டினார்கள்.

ஸஹாபாக்கள் இவ்வாறெல்லாம் செய்திருக்கின்றார்கள். றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் புனித றௌழாவுக்கு சகல முஸ்லிம்களும் சென்று வருகின்றனர். எந்த ஒரு முஹத்திதும், எந்த ஒரு பகீஹும் இந்த றௌழாவைப் பற்றிக் குறை கூறவில்லை. ஆகவே, இந்த ஹதீதுக்கு நம் கூறிய விளக்கம் தான் சரியானது என்பது தெளிவாகி விட்டது.

கப்றில் உட்காருவது என்பதன் பொருள் கப்றுக்கு மேல் ஏறி உட்காரு வதாகும். இதற்குத் தடையுண்டு, கப்றுக்குப் பக்கத்தில் கான்கா அமைத்துத் தங்குவதற்கு தடைகிடையாது; இதற்கு அனுமதியுண்டு. *"முஜாவிர் "* என்பவர் கப்றைப் பரிபாலிப்பவர் கப்றின் திறப்பை வைத்திருப்பவர். இது ஸஹாபாக்களிடத்தலும் இருந்துள்ளது

ஹளறத் ஆயிஷா ஸித்தீக்கா றழியல்லாஹு அன்ஹா றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் புனித றௌழாவை திறந்து மூடுகின்ற திறப்பை வைத்திருந்தார்கள். ஸஹபாக்கள் ஸியாரத் செய்ய வேண்டியிருந்தால், திறந்து காட்டுவார்கள்.

*(பார்க்க: மிஷ்ககாத். அடக்கம் பற்றிய பாடம்).*

இன்றும் கூட முஸ்தபா ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் புனித றௌழாவுக்குரிய "முஜாவிர்". இருக்கத்தான் செய்கின்றார்,. யாரும் அதைக் கூடாது என்று கூறி மறுதழித்ததில்லை.

**குற்றச்சாட்டு : 2**

மிஷ்க்காத்தில் "அடக்கம்" பற்றிய பாடத்தில் பின்வரும் ஹதீது இடம்பெறுகின்றது.

وعن ابي هياج الاسدي قال قا لي علي الا ابعثك علي ما بعثني رسول الله صلي الله عليه وسلم

ان لا تدع تمثالا الا طمسته ولا قبرا مسرفا الا سويته

அபூ ஹய்யாஜ் அஸ்தி றழியல்லாஹு அன்ஹு மூலம் அறிவிக்கப்படுகின்றது.

என்னிடம் ஹளறத் அலி றழியல்லாஹு அன்ஹு கூறினார்கள்: எதற்காக என்னை றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்கள் அனுப்பினார்களோ அதற்காக அன்றி உம்மை நான் அனுப்பவில்லை. அது இதுதான்!, எந்த ஒரு கபுறையும் அழிக்காமல் விடக்கூடாது. உயர்ந்த கப்றுகளை தரைமட்டப்படுத்தவும்.

புகாரி ஷரீபில் ஜனாஸா பற்றிய அத்தியாயத்தில், " கப்றில் ஈச்சமட்டையை வைத்தல்" பற்றிய பாடத்தில் வருகினறது.

وراي ابن عمر قسطاطا علي القبر عبد الرحمن فقال انزعه ياغلام فانما يظله عمله

ஹளறத் இப்னு உமர் றழியல்லாஹு அன்ஹுமா அவர்கள் ஹளறத் அப்துர் ரஹ்மான் றழியல்லாஹு அன்ஹு அவர்களின் கப்றுக்கு மேல் ஒரு கூடாரம் இருப்பதைக் கண்டார்கள். பின்னர். பிள்ளையே! இதை அகற்றி விடு!, என்றார்கள். ஏனெனில், அவரின் அமலின் நிழல் விழட்டும்.

மேற்கண்ட இரு ஹதீஸிலிருந்தும் தெரிய வருவது யாதெனில்,

எவராவது ஒருவரின் கப்றில கட்டடம் கட்டப்பட்டிருந்தால், அல்லது, கப்று உயரமாக இருந்தால். உடைக்க வேண்டும்.

**முக்கிய குறிப்பு:**

இந்த ஹதீதைப் பிடித்துக் கொண்டுதான் நஜ்தி வஹாபிகள் ஸஹாபாக்கள், மற்றும் அஹ்லுல் பைத்துகளின் கப்றுகளை துவம்சம் செய்து தரைமட்டமாக்கினார்கள்.

**பதில்:**

றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்கள் காபிர்களின் கப்றுகளை உடைக்குமாறுதான் ஹளறத் அலி றழியல்லாஹு அன்ஹு அவர் களுக்குக் கட்டளையிட்டார்கள். தவிர, முஸ்லிம்களுடையதல்ல! இதற்கு பல நியாயங்கள் உள்ளன.

1) றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்கள் எதற்காக

என்னை அனுப்பினார்களோ அதே வேலையைச் செய்வதற்காகவேதான் உங்களை நான் அனுப்புகின்றேன் என்று ஹளறத் அலி றழியல்லாஹு அன்ஹு கூறினார்கள். றஸூலுள்ளாஹி ஸல்லலலாஹு அலைஹி வஸல்லமவர்களின் காலத்தில் ஹளறத் அலி றழியல்லாஹு அன்ஹு தரைமட்டமாக்கியது முஸ்லிம்களுடைய கப்றுகளாக இருக்க முடியாது.

ஏனெனில், சகல ஸஹாபாக்களின் ஜனாஸா அடக்கத்திலும் றஸூலுள்ளாஹி ஸல்லலலாஹு அலைஹி வஸல்லமவர்கள் கலந்து கொண்டார்கள். றஸூலுள்ளாஹி ஸல்லலலாஹு அலைஹி வஸல்லமவர்களின் ஆலோசனையின்றி எந்த ஒரு காரியத்தையும் ஸஹாபாக்கள் செய்வதில்லை.

ஆனால், அக்காலத்தில் ஏதாவது கப்று கட்டப்பட்டிருந்தால், நபியவர்களின் முன்னிலையில் அன்னாரின் அனுமதியோடு தான் நடந்திருக்கும். அப்படியாயின், அனுமதியின்றி ஆகாத வகையில் கட்டப்பட்டு உடைக்கபபட்டது எந்த முஸ்லிமுடைய கப்று?

கிறிஸ்த்தவர்களின் கப்றுகள் உயரமாக இருந்தன என்பதுதான் உண்மை,

புகாரி ஷரீப் மஸ்ஜிதுன் நபவியின் "நிர்மாணம்" என்ற தலைப்பில் பின்வருமாறு வருகின்றது.

امر النبي صلي الله عليه وسلم بقبور المشركين فنبشت

முஷ்ரிக்கீன்களின் கப்றுகளைத் தோண்டுமாறு றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்கள் கட்டளையிட்டார்கள்.

ஷைகு இப்னு ஹஜர் அஸ்கலானி றஹ்மதுல்லாஹி அலைஹி பத்ஹுல் பாரி பாகம்-2 பக்கம் 260-ல் எழுதுகின்றார்கள்.

هل تنبش قبور مشركي الجاهلية اي دون غيرها من قبور الانبياء واتباعهم لم في ذلك اهانة لهم

ஜாஹிலியாக் காலத்திலிருந்த முஷ்ரிக்கீன்களின் கப்றுகளைத் தோண்டப்படுமா? அவர்கள் அல்லாத நபிமார்கள் மற்றும் அவர்களைப் பின்பற்றியவர்களின் கப்றுகளைத் தோண்டக்கூடாது. அதில் அவர்களுக்கு அவமானமுண்டு!

மற்றுமொரு இடத்தில் கூறுகின்றார்கள்.

وفي الحديث جواز تصرف في المقبرة المملوكة وجواز نبش قبور الدراسة إذا لم يكن محرمة

தனது ஆட்சிக்குள் வரும் கப்றிஸ்தானில் தனது அதிகாரத்தைப் பயன் படுத்த முடியும் என்பதற்கும், இத்துப் போன கப்றுகள் சங்கையான வையாவையாக இல்லாதிருந்தால் அதையும் தோண்டுவது ஆகும் என்பதற்கும் இந்த ஹதீதில் ஆதாரமுண்டு.

இந்த ஹதீதும், அதன் விளக்கமும் மறுப்பாளர்கள் முன்வைத்த ஹளறத் அலி றழியல்லாஹு அன்ஹு அவர்களின் ஹதீதுக்கு விளக்கமாகிவிட்டது.

2) இந்த ஹதீதில் கப்றோடு சேர்த்து படமும் (ஓவியமும்) குறிப்பிடப்பட்டுள்ளது. முஸ்லிம்களின் கப்றுகளில் ஓவியம் எங்கே இருக்கின்றது? இதிலிருந்து உடைக்கப்பட்டவை காஃபிர்களின் கப்றுகள் என்பது துலக்கமாகிவிட்டது. காபிர்களின் கப்றுகளில் ஓவியமும் இருக்கும்.

3) உயர்ந்த கப்றுகளை பூமியோடு சமப்படுத்தவும்.

முஸ்லிம்களின் கப்றுகளை பூமிக்கு மேல் ஒரு சாண் அளவு உயர்த்துவது சுன்னத் தாகும். பூமியோடு சமப்படுத்துவது சுன்னத்திற்கு எதிர். ஆகவே, உடைக்கப்பட்டவை காஃபிர்களின் கப்றுகள் தான் என்பதை ஏற்றுத்தான் ஆக வேண்டும்.

இதை மறுத்தால், ஹளறத் ஸெய்யிதினா அலி றழியல்லாஹு அன்ஹு உயர்ந்த கப்றுகளை ஊடைக்கின்றார்கள். அவர்களின் மகன் ஹளறத் முஹம்மது இப்னு ஹனபிய்யா ஹளறத் இப்னு அப்பாஸ் றழியல்லாஹு அன்ஹுமா அவர்களின் கப்றில் குப்பா கட்டுகின்றார். இது என்ன விசித்திரம்?

எவராவது ஒரு முஸ்லிமின் கப்று உயரமாகக் கட்டப்பட்டிருந்தால், அதை உடைக்கக்கூடாது. அது முஸ்லிம்களுக்கு அவமானமாகும். முதலில் கட்டக்கூடாது. கட்டினால் உடைக்கக்கூடாது. திருக்குர்ஆனை சிறிதாக ஆச்சடிப்பதற்குத் தடையுண்டு. அச்சடித்தால், அதை வீசக் கூடாது. காரணம் அது திருக்குர்ஆனுக்கு அவமானமாகும்.

முஸ்லிம்களின் கப்றுகளில் உட்காருவது, அதில் மலம், சலம் கழிப்பது; செருப்போடு அதில் நடப்பது உள்ளிட்டவைக்கு தடையுண்டு என்று ஹதீதில் வந்துள்ளது. மிகக்கவலையான விடயம் நஜ்தி வஹாபிகள் ஸஹாபாக்களின் கப்றுகளை தரைமட்டமாக்கினார்கள். இப்போது ஜித்தாவில் ஆங்கில கிறித்தவர்களின் கப்றுகள் உயரமாக சர்வ சாதாரணமாக கட்டப்படுகின்றன.

يقتلون اهل الاسلام ويتركون اهل الاصنام

முஸ்லிம்களைக் கொல்வார்கள். சிலைவணங்கிகளை விட்டு விடுவார்கள் என்று றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் கூற்று உண்மையாகி விட்டது.

ஹளறத் இப்னு உமர் றழியல்லாஹு அன்ஹுமா அவர்களின் கூற்றை ஆதாரமாக எடுப்பது அறியாமையாகும். மைய்யத்தின் அமலே அவருக்கு நிழல் கொடுக்கப் போதுமாகும் என்று அவர்களே கூறுகின்றார்கள். மைய்யித்திற்கு நிழல் கொடுப்பதற்காக குப்பா கட்டுவதற்குத் தடையுண்டு என்றும், ஸியாரத் செய்கின்றவர்கள் ஓய்வு எடுப்பதற்காக் கட்டுவது ஆகும் என்றும் இதன் மூலம் புரிகின்றோம்.

புகாரி ஷரீபின் விரிவுரை நூலான ஐனியில் இந்த ஹதீதுக்குக் கீழ் பின்வருமாறு விளக்கம் எழுதப்பட்டுள்ளது.

وهي إشارة الي ان ضرب القسطاط بغرض صحيح كالتستر من الشمس مثلا للاحياء لا لاظلال الميت جاز

உதாரணமாக, உயிருள்ளவர்களுக்கு சூரியனின் வெப்பம் படாமலிருப் பதற்காக என்ற சரியான காரணத்திற்காக கப்றில் குப்பா கட்டலாம் என்றும்,மைய்யித்திற்கு நிழல் கொடுப்பதற்காகக்கூடாது என்பதற்கும் இதில் சைக்கினை இருக்கின்றது.

எனக்கு இப்படியும் ஓர் அனுபவம் உண்டு! ஒருநாள் மதியம் நேரம் ஒரு மணி நேரத்துக்காக ஸியாலக் கோட்டுக்குச் சென்றேன். அங்கே அடங்கியிருக்கும் முல்லா அப்துல் ஹக்கீம் பாஸில் ஸியாலக்கோட் றஹ்மத்துள்ளாஹி அலைஹி அவர்களின் கப்றில் பாத்திஹா ஓத வேண்டும் என்ற விருப்பம் கடுமையானது. கஷ்டப்பட்டு வழியை அறிந்து அங்கே போய்ச் சேர்ந்தேன்.

கபுறுக்கு மேல் எந்த நிழலும் இல்லை. நிலமும் அதிக சூடாக இருந்தது. உஷ்ணமும் கடுமையாக இருந்தது. கஷ்டப்பட்டு சில ஆயத்துக்களை ஓதி விட்டு அவசரமாக அங்கிருந்து நகர்ந்து விட்டேன். அவர்களைப்பற்றிய நினைவு மனதில் மேலோங்கியிருந்தது. மஸாறுகளில் கட்டடம் கட்டுவதிலிருக்கும் அதிக பயனை அன்று நான் தெரிந்து கொண்டேன்.

தப்ஸீர் றூஹுல் பயானில் (48:18) திருவசனத்தின் விளக்கத்தில் பின்வருமாறு எழுதுகின்றார்கள்.

இப்போது மக்கள் வலிமார்களின் கப்றுகளைக் கண்ணியப்படுத்துகின்றனர். வலிமார்களுக்கு எந்த விதமான சக்தியும் கிடையாது என்று காட்டுவதற்காக அவர்களின் கப்றுகளை உடைக்கின்றோம். அவர்களுக்கு சக்தி இருந்தால் அவர்களைப் பாதுகாத்துக் கொள்ளட்டும் என்று சிலர் கூறுகின்றனர்.

فاعلم ان هذا الصنيع كفر صريح مأخوذ من قول فرعون ذروني اقتل موسي وليدع ربه اني اخاف ان يبدل دينكم او ان يظهر في الارض الفساد

இது அப்பட்டமான குப்றாகும். பிர்அவ்னின் பின்வரும் கூற்றிலிருந்து இது எடுக்கப்பட்டது.

என்னை விட்டு விடுங்கள். நான் மூஸாவைக் கொலை செய்து விடுகின்றேன். (தம்மைப் பாதுகாத்துக் கொள்ள) அவருடைய றப்பை அவர் அழைத்துக் கொள்ளட்டும்.; உங்களுடைய மார்க்கத்தை அவர் மாற்றி விடுவார், அல்லது பூமியில் குழப்பத்தை அவர் உண்டாக்கி விடுவார் என்று நிச்சயமாக நான் பயப்படுகின்றேன்.(என்று ஃபிர்அவ்ன் கூறினான்.) 40:26

ஸஹாபாக்களுக்கு எதுவித சக்தியும் கிடையாது!, அப்படியிருந்திருந்தால், நஜ்து வஹாபி களிடமிருந்து தங்களை பாதுகாத்திருக்கலாமே! இதிலிருந்து வெறும் மையித்துதான். பின்னர், கண்ணியமும், மரியாதையும் எதற்கு? என்று ஒரு நாள் என்னிடம் யாரோ ஒருவர் கூறினார்.

அவருக்கு இவ்வாறு பதில் கூறினேன்.

றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களுக்கு முன் சங்கையான கஃபத்துள்ளாஹ்வில் 360 சிலைகள் இருந்தன. கியாமத்திற்கு நெருக்கமான காலத்தில் ஒருவன் கஃபாவை இடிப்பான் என்று ஹதீதுகளில் வந்துள்ளது. இப்போது லாகூரில் சீக்கியர்களால் மஸ்ஜித் ஷஹீத் தகர்க்கப்பட்டுள்ளது. அநேகமான பள்ளிவாசல்கள் இடிக்கப்பட்டுள்ளன. உங்களைப் பார்த்து ஒரு ஹிந்து “உங்கள் அல்லாஹ்வுக்கு சக்தியிருந்தால் எங்களிடமிருந்து ஏன் பள்ளிவாசல்களை பாதுகாக்கவில்லை?, என்று கேட்டால் உங்கள் பதில் என்ன?,

நாம் வலிமார்களிடம் செல்வது அவர்களின் சக்திக்காக அல்ல!, பள்ளிவாசல், கஃபா உள்ளிட்டவையில் வைத்திருப்பது போல அவர்களில்

வைத்திருக்கின்ற நேசத்திற்காக!

இப்னு சுஊத் அநேகமான பள்ளிவாசல்களை நிர்மூலமாக்கினான் என்பதும் ஈண்டு கவனிக்கத்தக்கது.

# ஆய்வு-14

# கப்றில் மலர் தூவுதல், போர்வை போடுதல், விளக்கேற்றல் பற்றிய ஆய்வு!

இவ்வாய்வுத் தொடரில் மூன்று விடயங்கள் ஆய்வுக்கு உட்படுத்தப் பட்டுள்ளன.

1) கப்றுகளில் மலர்தூவுதல்.

2) போர்வை போடுதல்.

3) விளக்கேற்றுதல்.

1) ஒவ்வொரு முஃமினின் கப்றிலும் அவர் வலியுள்ளாஹ்வாக இருக்கலாம் அல்லது பாவியாக இருக்கலாம் அவரின் கப்றில் மலர்தூவுதல் ஆகும் என்று அஹ்லுல் ஸுன்னத்வல் ஜமஅத் உலமாக்கள் கூறியுள்ளனர்.

2) வலிமார்கள், உலமாக்கள்; ஸாலிஹீன்களின் கப்றுகளில் போர்வை போடுவது ஆகும். சாமானியர்களின் கப்றுகளில் போர்வை போடுவதில் எதுவித பயனுமில்லையென்பதால் கூடாது.

3) கப்றில் விளக்கேற்றுவது பற்றி விரிவான விளக்கம் உண்டு.

சாமானிய முஸ்லிம்களின் கப்றுகளில் அவசியமின்றி விளக்கேற்றுவது கூடாது. அவசிய மேற்பட்டால் கூடும். வலிமார்களின் கௌரவத்தையும், தகுதியையும் வெளிப்படுத்தும் நோக்கில் விளக்கேற்றுவது ஆகும்.

அவசியத் தேவைகள் மூன்று.

1) இரவில் மையித்தை அடக்கும் போது விளக்கேற்றுவது அவசிய மாயின் கூடும்.

2) கப்று வீதியோரத்திலிருக்குமாயின், அவ்வழியால் செல்வோர் வழுக்கி விழாமலிருக்க விளக்கேற்றலாம். அச்சமின்றி கப்றடியில் பாத்திஹா ஓதுவதாயின், ஆகும். இரவில் கப்றுக்குச் சென்று திருக்குர்ஆனைப் பார்த்து ஓத விரும்பினால் விளக்கேற்றுவது ஆகும்.

இவற்றில் எதுவுமில்லையாயின், விளக்கேற்றுவது வீண்விரயம் என்பதனால் தடுக்கப்பட்டுள்ளது.

3) வலிமார்களின் மஸார் ஷரீபுகளில் மேற்கண்டவையில் ஒன்றுமில்லையென்றாலும் வலியுள்ளாஹ்வைக் கண்ணியப் படுத்துவதற்காக ஒரு விளக்கோ, பலதோ கூடும்.

மறுப்பாளர்கள் இம்மூன்றையும் மறுக்கின்றனர். ஆகவே, இவ்ஆய்வில்

இரு அத்தியாயங்கள் உள்ளன.

1) இவற்றுக்கான ஆதாரங்கள் .

2) மறுபுக்களுகளும், பதில்களும்.

# அத்தியாயம் :1

வலிமார்களின் மஸார் ஷரீபுகள் அல்லாஹ்வின் நினைவுச் சின்னங்கள் என்பதை இதற்கு முன்னுள்ள ஆய்வுகளில் குறிப்பிட்டுள்ளோம். அல்லாஹ்வின் மார்க்கம் தொடர்பான சின்னங்களைக் கண்ணியப்படுத்த வேண்டும் என்பது அல்லாஹ்வின் கட்டளை!.

அல்லாஹுத்த ஆலா கூறுகின்றான்.

وَمَنْ يُعَظِّمْ شَعَائِرَ اللّٰهِ فَإِنَّهَا مِنْ تَقْوَي الْقُلُوْبِ .

***எவர்அல்லாஹ்வின் நினைவுச் சின்னங்களைக் கண்ணியப்படுத்து கின்றாரோ நிச்சயமாக அது இதயங்களின் தக்வாவில் உள்ளதாகும்.***

*அல் குர்ஆன்: (22: 33)*

இந்தக் கண்ணியம் அனைத்து நாட்டிலும், சகல சடங்கிலும் கூடும்; இதற்கு எந்த வரையறையும் கிடையாது. எந்த நாட்டிலும், எந்தக் காலத்திலும் மார்க்கம் அனுமதிக்கும் கண்ணியம் நடை முறையிலிருக்குமாயின், அது அனுமதிக்கப்பட்டதுதான். கப்றில் மலர்தூவுவது, போர்வை போடுவது; விளக்கேற்றுவது உள்ளிட்டவற்றில் அவரின் கண்ணியம் தங்கியிருக்கின்றது. ஆகவே, ஆகும்.

புஷ்பத்தில் உயிருள்ளது!., அது தஸ்பீஹ், திக்ரு செய்கின்றது. ஆகவே, மைய்யித் பயனடைகின்றது. கப்றின் வேதனை அதற்குக் குறைகின்றது;. ஸியாரத் செய்கின்றவர்கள் அதன் மணத்தை நுகர்கின்றனர். இதனால் சகல முஸ்லிம்களின் கப்றுகளிலும் பூப் போடுவது ஆகும்.

கப்றில் மைய்யித்திற்கு வேதனை நடந்து கொண்டிருக்குமாயின், அதன் பறக்கத்தினால் அதன் வேதனை குறையும். பின் வரும் ஹதீது இதற்கு ஆதாரமாக இருக்கின்றது.

மிஷ்க்காத் ஷரீபில் “மலசலகூடம் செல்லும் ஒழுக்கங்கள்”!என்ற பாடத்தின் முதற் பிரிவில் பின்வரும் ஹதீது இடம் பெறுகின்றது.

றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்கள் ஒரு நாள் இரு கப்றுகளைக் கடந்து சென்று கொண்டிருக்கும் போது, அதிலுள்ள இரு மைய்யிதுகளும் வேதனை செய்யப் படுவதைக் கண்டார்கள். அவரில் ஒருவர் சிறுநீர் சுத்தம் செய்வதில் பேணுதலாக இருக்காதவர்; மற்றவர் புறம் பேசித் திரிந்தவர் என்றார்கள்.

ثم اخذ جريدة رطبة فشقها نصفين ثم غرز في كل قبر واحدة قالوا يا رسول الله لما صنعت هذا فقال لعله أن يخفف عنهما مالم ييبسا

இதன்பின், ஒரு மட்டையை இரண்டாகப் பிளந்து இரு கப்றிலும் நட்டார்கள். எதற்காக இவ்வாறு செய்தீர்கள்.? என்று ஸஹாபாக்கள் கேட்டதற்கு, இவை காய்ந்து போகாதிருக்கும் வரை தஸ்பீஹ் செய்யும். அதன் காரணமாக அவர் களின் கப்று வேதனை இலேசாகும். என்றார்கள் வலி றஹ்மத்துள்ளாஹி அலைஹி பின்வருமாறு எழுதுகின்றார்கள்.

وقيل انهما يسبحن مادام رطبين واستحب العلماء قراءة القرأن عند القبر لهذا الحديث اذ تلاوة القرأن اولي باالتخفيف من تسبيح الجريد

அவற்றில் பச்சை இருக்கும் வரை அவை தஸ்பீஹ் செயயும். அதன் காரணமாக கப்று வேதனை குறையும்.

இந்த ஹதீஸை ஆதாரமாகக் கொண்டு கப்றடியில் திருக்குர்ஆன் ஓதுவது சுன்னத் என்றும், கப்று வேதனை குறைவதற்கு ஈத்த மட்டையின் தஸ்பீஹை விட திருக்குர்ஆன் ஓதுவது அதிக தகுதி கொண்டது என்றும் உலமாக்கள் கூறுகின்றனர்.

*ஆதாரம்: ஜறஹு முஸ்லிம்.*

அஷிஃஃஅத்துல் லம்ஆத்தில் இந்த ஹதீதுக்கு பின்வருமாறு விளக்கம் எழுதப்பட்டுள்ளது.

கப்றில் பசுமையான பூக்கள், மற்றும் நறுமணங்கள் போடுவதற்கு சில அறிஞர்கள் இந்த ஹதீதை ஆதாரமாக எடுத்துள்ளனர்.

மிர்க்காத்தில் இந்த ஹதீஸின் விளக்கத்தில் இவ்வாறு எழுதப்பட்டுள்ளது.

ومن ثم افتي بعض الائمة من متأخري اصحابنا بان ما اعتيد من وضع الريحان والجريد سنة لهذالحديث وقد ذكر البخاري أن ابن الخضيب الصحابي اوصي أن يجعل في قبره جريدتان

இப்போது வழக்கத்தில் உள்ளவாறு கப்றுகளில் பூப்போடுவதும், வாசனை திரைவியங்கள் வைப்பதும் சுன்னத் என்று பிற்காலத்தில் வந்த எமது தோழர்களான சில இமாம்கள் இந்த ஹதீஸை ஆதாரமாகக்கொண்டு மார்க்கத் தீர்ப்புக் கூறியுள்ளனர்.

ஹளறத் இப்னு ஹழீப் என்ற ஸஹாபி றழியல்லாஹு அன்ஹு தனது கப்றில் இரு பச்சை மட்டைகளை நடவேண்டும் என்று வஸிய்யத் கூறியதாக இமாம் புகாரி றஹ்மதுல்லாஹி அலைஹி கூறுகின்றார்கள்.

தஹ்தாவி அலா மறாக்கில் பாலாஹி என்ற நூல் பக்கம் 364 ல் பின்வருமாறு எழுதப்பட்டுள்ளது.

وقد افتي بعض الائمة من متأخري اصحابنا بان ما اعتيد من وضع الريحان والجريد سنة بهذ الحديث

இந்த ஹதீதை ஆதாரமாகக் கொண்டு நடைமுறையில் உள்ளவாறு கப்றில் பூக்கள் போடுவதும், வாசனைக் கட்டைகள் வைப்பதும் சுன்னத்தாகும் என்று எமது தோழர்களில் பிற்காலத்தைச் சேர்ந்த சில இமாம்கள் மார்க்கத் தீர்ப்புக் கூறியுள்ளனர்.

மேற்கண்ட சொற்றோடர்களில் “சில உலமாக்கள்” என்று குறிப்பிடப் பட்டுள்ளது. இதன் பொருள் சிலர் சுன்னத் என்கின்றனர். மற்றும் சிலர் கூடாது என்று மறுக்கின்றனர் என்று அர்த்தமாகாது. “சுன்னத்” என்பதில் மட்டும் கருத்து வேறுபாடுகள் உண்டு. ஆகும் என்பதில் அனைவரும் உடன்பாடாகும்.

பதாவா ஆலம் கீரி என்ற பெரு நூலில் ஸியாரத் பற்றிய பாடத்தில் பின்வருமாறு எழுதப்பட்டுள்ளது.

وضع الورود والرياحين علي القبور حسن

கப்றில் பூப்போடுவதும், மணம் வைப்பதும் அழகான செயல்.

ரத்துல் முக்தார் ஸியாறத்துல் குபூர் என்ற பாடத்தில் பின்வருமாறு உள்ளது.

ويؤخذ من ذلك ومن الحديث ندب وضع ذلك للاتباع ويقاس عليه ما اعتيد في زماننا من وضع اعصان واللابس ونحوه

இவற்றையெல்லாம் கப்றில் வைப்பது சுன்னத் என்பதை இதன் மூலமும், ஹதீதுகளின் மூலமும் தெரிந்து கொள்ள முடிகின்றது. இதை கியாஸ் பிடித்து தற்காலத்தில் நடைமுறையிலிருக்கின்ற அகில் கட்டை, ஊதுபத்தி உள்ளிட்டவைகளை (பற்றி) வைப்பதும் சுன்னத்தாகும்.

இதே நூலில் மேலும் எழுதப்பட்டுள்ளது.

وتعليله بالتخفيف عنهما ما لم ييبسا أي يخفف عنهما ببركة تسبيحهما اذ هو أكمل من تسبيح اليابس لما في الاخضر نوع حياة

அவை காயாமலிருப்பதுதான் வேதனை குறைவதற்கான காரணமாகும், சகல மரக்கொப்புகளின் தஸ்பீஹ் காய்ந்தவையை விட பூரணமானதாகும். காரணம் அதில் ஒருவகையான ஜீவ சக்தி உண்டு.!

(ஷாபிஈ மத்ஹபின் சட்ட நூற்களான கல்யூபி, இஆனா; பாஹூரி; பைழுல் இலாஹி உள்ளிட்ட பல நூற்களிலும் கப்றில் பூப்போடுவது சுன்னத் என்று எழுதப்பட்டுள்ளது.)

மேற்கண்ட ஹதீது மற்றும் முஹத்திதீன்கள், புகஹாக்கள் உள்ளிட்டவர்களின் கூற்றுக்களிலிருந்து இரு விடயங்கள் தெளிவாகியுள்ளன.

1) பச்சையுள்ள எந்த ஒன்றையும் சகல முஸ்லிம்களின் கப்றுகளிலும் வைப்பது கூடும். கப்று வேதனை நடந்து கொண்டிருந்த இரு கப்றுகளில் பச்சை மட்டையை றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வசல்லமவர்கள் நட்டார்கள்.

2) பச்சை மட்டையின் தஸ்பீஹினால் கப்றின் வேதனை குறைந்ததேயல்லாமல், றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் துஆவினால் மட்டுமல்ல! கப்று வேதனை குறைவதற்கு பெருமானாரின் துஆ மட்டும் காரணமாயின், மட்டையின் பச்சை காயாமல்

இருக்கும் வரை என்ற நிபந்தனையை ஏன் கூறினார்கள்.?

ஆகவே, நாமும் இப்போது கப்றில் பூக்கள் உள்ளிட்ட வாசனைகளை வைப்பதால் இன்ஷாஅல்லாஹ் மைய்யித் பிரயோசனமடையும்.

பொதுவானவர்களின் கப்றுகளில் பசுமையானவையை வைப்பதால், மழை பொழியும் போது அவை தழைக்கும். அதன் தஸ்பீஹின் பறக்கத்தால் மைய்யித்தின் வேதனை குறையும்;.இதன்மூலம் சகல முஃமின்களின் கப்றுகளிலும் பூக்கள் உள்ளிட்ட பசுமையானவையை வைப்பது ஆகுமானது என்பது நிரூபணமாகிவிட்டது.

மௌலவி அஷ்ரப் அலி தானவி ஸாஹிப் " இஸ்லாகுர்ருஸூம்" என்ற நூலில் பின்வருமாறு எழுதுகின்றார்.

பூக்கள் உள்ளிட்டவையால் கப்று வேதனை குறையும் என்றிருப்தால், அவற்றை பாவிகள், குழப்பவாதிகள் போன்றவர்களின் கப்றுகளில் வைக்க வேண்டுமே தவிர, வலிமார்களின் கப்றுகளில் அல்ல! இவர்களின் கப்றுகளில் வேதனை என்பதே கிடையாதே!.

பாவிகளுக்கு சோதனைகளைத் தடுக்கின்ற ஏந்தவொரு அமலும் ஸாலிஹானவர்களின் தரஜா உயர்வதற்கு காரணமாக இருக்கும் என்பதை கவனத்தில் கொள்ள வேண்டும்.

பள்ளிவாசலுக்கு நடந்து செல்வதால், எமது பாவங்கள் மன்னிக்கப் படுகின்றன; அதே நேரம் ஸாலிஹீன்களின் தரஜாக்கள் உயருகின்றன;. இவ்வாறே சில துஆக்கள் பாவிகளின் குற்றங்களை அழிக்கின்றன;. ஸாலிஹீன்களின் தகுதிகளை உயர்த்துகின்றன; இந்த விதியின் படி, ஸாலிஹீன்கள் பள்ளிவாசலுக்கு வராமலும், இஸ்திஃபார் செய்யாமலு மிருந்தாலும் அவர்கள் குற்றங்களிலிருந்து பரிசுத்தமானவர்கள் என்பது கருத்தல்ல!

அவர்களின் கப்றுகளில் திருக்குர்ஆன் ஓதுவது போன்று பூக்களின் தஸ்பீஹின் பறக்கத்தினால் அவர்களின் கப்றுகளில் அல்லாஹ்வின் ரஹ்மத் அதிகமதிகம் இறங்கிக் கொண்டிருக்கும்.

## போர்வை போடல்:-

வலிமார்களின் கப்றுகளில் போர்வை போடுவது ஆகும். இதன் மூலம் ஸியாரத் செய்பவர்களின் பார்வையில் கப்றாளியின் மகத்துவம் வெளிப்படும்.

ஷாமி என்ற நூல் பாகம்:5 "வெறுக்கத்தக்கவை" என்ற அத்தியாயம் "ஆடைகள்" என்ற பாடத்தில் பின்வருமாறு எழுதுகின்றார்கள்.

قال في فتاوي الحجة وتكره الستور علي القبور ولكن نحن نقول الآن إذا قصد. به التعظيم في عيون العامة حتي لا يحتقروا صاحب القبر بل جلب الخشوع والادب للغفلين والزائرين فهو جائز لأن الاعمال بالنيات

கப்றுகளில் போர்வை போடுவது "மக்றூஹ்" என்று பதாவா ஹுஜ்ஜத்தில் குறிப்பிடப்பட்டுள்ளது. ஆயினும், தற்காலத்தில் இதன்மூலம் பொதுமக்களின் பார்வையில் அவரைப் பற்றி தரக்குறைவான எண்ணம் வராமல் அவரைக் கண்ணியப்படுத்துவதும், உள்ளச்சமும், ஒழுக்கமும் அதனால் ஏற்படும் என்பது நோக்கமாயின், "ஆகும்" என்றே நாம் கூறுவோம். காரணம், எண்ணத்தைப் பொறுத்தே செயல்கள் அமைகின்றன.

(இதன் மூல வாசகம்அல் ஆரிபு பில்லாஹ் இமாம் அப்துல் கனி நாபுலிஸிய்யி றஹ்மதுல்லாஹி அலைஹி அவர்களின் "கஷ்புன்நூர் அன் அஸ்ஸாமில் குபூர்" என்ற நூலிலுள்ளது ; இதை "கஷ்பின் வெளிச்சத்தில் கப்று வாசிகள்" என்ற பெயரில் தமிழாக்கி வெளியிட்டுள்ளோம்.)

ஷாமியின் சொற்றொடர் மூலம் பின்வரும் தீர்பை வெளிப்படுத்தி யுள்ளார்கள்:

“வலிமார்களின் கண்ணியத்தை வெளிப்படுத்தும் எந்தவொரு நல்ல காரியமும் ஆகுமானதுதான்.” இந்த சொற்றொடர் தான் "கப்றில் போர்வை போடுவதற்கு" மூல ஆதாரமாக இருக்கின்றது.

றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் புனிதமான காலத்திலும், கஃபத்துள்ளாஹ்வுக்கு போர்வை போடப்பட்டது. அதை நபியவர்கள் தடுக்கவில்லை. பலநூறு ஆண்டுகளாக றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் புனித றௌழா ஷரீபில் அதி உச்ச விலையுயர்ந்த பச்சை பட்டு போடப்பட்டது; அதை இது வரை எவரும் மறுக்கவில்லை.

நபி இப்றாஹீம் அலைஹிஸ்ஸலாம் நின்று கொண்டு கஃபாவைக் கட்டிய கல்லை “மகாமே இப்றாஹீம்” என்கின்றனர். அதற்கும் பச்சைப் போர்வை போடப்படுகின்றது. அதற்கு ஒரு கூடும் கட்டப்பட்டுள்ளது. நஜ்து வாசிகளும் இதை இப்போதும் நடைமுறைப்படுத்துகின்றனர். இவற்றிற்கெல்லாம் ஏன் போர்வை போடப்படுகின்றன?, இவற்றின் மகத்துவத்தை வெளிப்படுத்துவதற்காகத்தானே!

இவ்வாறு, வலிமார்களின் மகத்துவத்தை வெளிப்படுத்துவதற்கான போர்வை உள்ளிட்டவைகளை போடுவது முஸ்தஹப்பாகும்.

தப்ஸீர் றூஹுல் பயானில் 9:18 திருவசனத்தின் விளக்கத்தில் பின்வருமாறு எழுதுகின்றார்கள்.

فبناء القباب علي قبور العلماء والاولياء والصلحاء ووضع الستور والعمائم والثياب علي قبورهم أمر جائز إذا كان القصد بذلك التعظيم في أعين العامة حتي لا يحتقروا صاحب هذالقبر

உலமாக்கள் வலிமார்கள் ஸாலிஹீன்கள் உள்ளிட்டோரின் கப்றுகளில் கட்டடம் கட்டுவது, போர்வை போடுவது; தலைப்பாகை அணிவிப்பது; விரிப்புகள் போடுவதன் நோக்கம் கப்றாளியைப் பற்றி பொதுமக்கள் பார்வையில் அவரின் கண்ணியம் வரவேண்டும், அவரை அவர்கள் ஏளனமாகப் பார்க்கக் கூடாது என்பது, நோக்கமாயின், ஆகுமானதாகும்.

## விளக்கேற்றல்:-

பொதுமக்களின் கப்றுகளில் அவசிய நிமித்தமாகவும், வலிமார்களின் கப்றுகளில் அவர்களின் மகத்துவத்தை வெளிப்படுத்தும் நோக்கிலும் விளக்கேற்றுதல் ஆகுமானதாகும்.

ஹகீக்கத்துன் நதிய்யா ஷறஹு தரீக்கத்துல் முஹம்மதிய்யா பாகம்: 2 பக்கம்: 429 ல் பின்வருமாறு எழுதப்பட்டுள்ளது.

اخراج الشموع الي القبور بدعة واتلاف مال كذا في البزازية وهذا كله إذا خلا عن فائدة . واما إذا كان موضع القبور مسجدا أو علي طريق او كان هناك أحد جالسا او كان قبر ولي من الاولياء او عالم من المحققين تعظيما لروحه اعلاما للناس انه ولي ليتبركوا به ويدعوالله تعالي عنده فيستجاب لهم فهو أمر جائز

கப்றுகளின் பக்கம் விளக்கை எடுத்துச் செல்வது பித்அத், பணத்தை வீணடிப்பது என்று “பஸாஸிய்யா” என்ற நூலில் குறிப்பிடப்பட்டுள்ளது. இவையனைத்தும் எவ்வித பயனும் இல்லாத போதுதான்;

கப்றுகள் இருக்கும் இடம் பள்ளிவாசல், அல்லது, வீதியோரமாக; அல்லது எவராவது ஒருவர் அங்கு தங்கியிருந்தால், அல்லது அது "வலியுள்ளாஹ்" அல்லது, பண்டிதரான ஆலிமின் கப்றாக இருந்தால், அவரின் றூஹைக் கண்ணியப்படுத்தவும், இது அல்லாஹ்வின் வலியுடைய கப்று என்று மக்களுக்கு தெரியப்படுத்துவதால் அவரைக் கொண்டு அவர்கள் பறக்கத் பெறவும்; அங்கிருந்து கொண்டு துஆக்கேட்டு அது அவர்களுக்கு

அங்கீகரிக்கபடக்கூடியதாக ஆகும் என்றிருந்தால், "விளக்கேற்றுவது" ஆகும்..

தப்ஸீர் றூஹுல் பயானில் 9:18 திருவசனத்தின் விளக்கத்தில் பின்வருமாறு எழுதுகின்றார்கள்.

وكذا ايقاد القناديل والشمع عند قبور الاولياء والصلحاء للاجلال للاولياء فالمقصد فيها مقصد حسن ونذر الزيت والشمع للاولياء يوقد عند قبورهم تعظيما لهم ومحبة فيهم جائز لا ينبغي النهي عنه

இவ்வாறு வலிமார்கள், ஸாலிஹீன்களைக் கண்ணியப்படுத்தும் நோக்கில் அவர்களின் கப்றுகளில் விளக்கேற்றுவது, மெழுகுதிரி பற்றவைப்பதில் இருக்கும் நோக்கம் நல்லதாகும். ஆகவே, கூடும், வலிமார்களுக்கு எண்ணை, மெழுகு திரி உள்ளிட்டவற்றை நேர்ச்சை செய்வது அவர்களைக் கண்ணியப் படுத்தல், அவர்கள்மீது நேசம் வைத்தல் என்றிருந்தால், அவர்களின் கப்று களில் எரிப்பது ஆகும். அதனைக் கண்டிப்பகத் தடுக்கக்கூடாது.

அல்லாமா அப்துல் ஙனி நாபிலிஸி றஹ்மதுல்லாஹி அலைஹி “கஷ்புன் நூர் அன்அஸ்ஹாபில் குபூர்” என்ற நூலிலும் இதே கருத்தைக் கூறியுள்ளார்.

(بل ورد اوقد النبي صلي الله عليه وسلم عند دفنه عبد الله ذا النجادين ،فتاوي حديثية ص،٠٤١)

றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களை நல்லடக்கம் செய்யும் இடத்தில் ஹளறத் அப்துல்லாஹ் தன்நஜாதீன் என்பவர்கள் விளக்கேற்றினார்கள்.

*ஆதாரம்: பதாவா ஹதீதிய்யா:பக்: 140)*

நமது பகுத்தறிவும் கூட இதை அனுமதிக்கவே செய்கின்றது. இதுபற்றி கப்றில் "கட்டடம் கட்டுவது" பற்றிய ஆய்வில் இதற்கு முதல் கூறியுள்ளோம்.

வலிமார்களின் கப்றுகளை அலங்கரிப்பது இஸ்லாத்தின் அலங்காரமாகும். பெருநாளில் உபதேசம் செய்யும் ஆலிம் உயர்ந்த ஆடை அணிவது சுன்னத்தாகும். சகல முஸ்லிம்களும் சிறந்த ஆடையணிந்து மணம் பூசவேண்டும். ஏன்? சந்திக்கின்ற மனிதன் அதன்மூலம் சந்தோஷப்பட வேண்டும். சாதாரண முஸ்லிமோடு தொடர்பு வைத்திருப்பவரும் நல்ல

நிலையில் இருக்க வேண்டியுள்ளது.

வலிமார்களின் மஸார் ஷரீபுகள் என்பது சகல படைப்புக்களும் தரிசிக்கின்ற பொது இடம். ஆகவே அங்கு அதற்கான ஏற்பாடுகளும், முக்கியத்துவமும் கொடுக்கப்படவேண்டியது அவசியமாகும்.

நான் (நூலாசிரியர்) வஹாபிகளின் ஆட்சிக்காலத்தில் (1957க்குமுன்) ஹஜ்ஜுக்குச் சென்று பார்த்த போது கஃபத்துள்ளாஹ்வின் வடிவத்தில் பல மின் அலங்காரங்களைப் பார்த்தேன். அவ்வாறே "ஹதீம்" என்ற அரைவட்டத்தின் சுவர்களும் மின்விளக்குகளால் அலங்கரிக்கப்பட்டிருந்தன. கஃபத்துள்ளாஹ்வின் தலைவாசலில் கற்பூர மெழுவத்தி நான்கு நான்காக எரிந்து கொண்டிருந்தன.

மதீனா ஷரீப் சென்ற போது றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் புனித ரவ்ழா ஷரீப் கஃபாவை விட அதிகமான பிரகாசமாக இருப்பதைப் பார்த்தேன். மக்காவை விட அதிக பிரகாசிக்க மின்விளக்குகள் எரிந்து கொண்டிருப்தைக் கண்டேன்.

இதைக் கண்ணுற்ற ஓர் அன்பர் என்னிடம் கூறினார்;

கஃபத்துள்ளாஹ் அல்லாஹ்வின் வீடு!, றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அல்லாஹ்வின் நூர்! வீட்டின் பிரகாசம் ஒளியினால் வருவது வெளிப்படையானது தான் என்றார்.

இப்படியான முக்கியத்துவமெல்லாம் எதற்கு? மக்கள் பார்வையில் கண்ணியத்தை ஏற்படுத்து ஒவதற்காகும்.

வலிமார்களின் கப்றுகளும் அல்லாஹ், றஸூலின் தஜல்லி வெளியாகும் இடங்களாக இருக்கின்றன. எனின், இங்கு வெளிச்சம் ஏற்றுவதற்கு முக்கியத்துவம் கொடுப்பதில் என்ன குறை வந்து விடுகின்றது.?

இப்போதெல்லாம் நமது திருமணவீடுகளில் தீபங்களை, விளக்குகளை ஏற்றுகின்றோம். இதில் பாரியளவு எண்ணை செலவாக்கின்றன.

மத்ரஸாக்களின் விழாக்களுக்கு அதிக செலவு செய்து மின் அலங்காரம் செய்யப்படுகின்றன..

இற்றைக்கு சில ஆண்டுகளுக்கு(1957) முன் முராதாபாதில் தேவ்பந்தி ஜம்இய்யத்துல் உலமா சபையின் மாபெரும் மாநாடு நடந்தது. அதில் பாரியளவில் மின்விளக்கு அலங்காரம் செய்யப் பட்டிருந்தது. இதற்கு மட்டும் பலநூறு ரூபாய்கள் செலவாகியிருக்கும். இவை மாநாட்டிற்கு வருபவர்களை சந்தோஷப்படுத்துவதற்காகத் தான் செய்யப்பட்டன.

இவ்வாறு மார்க்க மாநாடுகளில் பல்வேறு தோரணங்கள் அமைக்கப்

படுகின்றன. பதாதைகள் கட்டப்படுகின்றன. பிரசங்கிகளின் கழுத்தில் மாலைகள் அணிவிக்கப்படுகின்றன. இவையெல்லாம் வீண்விரயமுமல்ல ஹறாமுமல்ல! இவையாவும் உரூஸ், மார்க்க விழாக்கள் உள்ளிட்டவையில் ஆகுமானதுதான்.

# *பாடம் – 2*

# *குற்றச்சாட்டுக்களும் பதில்களும்*

மேற்கண்ட மூன்று பிரச்சினைகளிலும் மறுப்பாளர்களான தேவ்பந்திகளும், வஹாபிகளும் பின்வரும் குற்றச்சாட்டுக்களை பல்வேறு கோணத்தில் முன்வைக்கின்றனர்.

**குற்றச்சாட்டு**: 1

றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் கூறினார்கள்.

ان الله لم يأمرنا أن نكسو الحجارة والطين

அல்லாஹுத்தா ஆலா கல்லுக்கும், மண்ணுக்கும் ஆடையணிவிக்குமாறு எமக்குத் கட்டளையிடவில்லை.

*(மிஷ்க்காத் பாபுத் தஸாவீர்)*

இதன்படி, கப்றிலும் கல்லும், மண்ணும் இருப்பதால் அங்கு போர்வை போடுவது ஹறாம்!

**பதில்:**

இவ்வாறு கூறியதன் நோக்கம் காரணமின்றி சுவர்களில் திரைச் சீலை போடுவது பற்றியதாகும். இது தக்வா, (ஸுஹ்து ) துறவு பற்றிய விளக்கமே தவிர, பொதுவான தல்ல!. அதாவது, வீடுகளை அலங்கரிப்பது துறவுக்கு

எதிராகும்.

அன்னை ஆயிஷா ஸித்தீக்கா றழியல்லாஹு அன்ஹா சுவரில் திரைச்சீலை போட்டார்கள். அதனைக் கிழித் தெறிந்தபின் நபியவர்கள் மேற்கண்டவாறு கூறினார்கள்.

வலிமார்களின் கப்றுகளில் போர்வை போடுவதற்கும், இதற்கும் எவ்வித தொடர்பும் கிடையாது;. கண்ணியமிக்க கஃபத்துள்ளாஹ்வில் மிகப் பெறுமதியான கறுப்புப் பட்டுப் போர்வை தொங்குகின்றது. றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் புனித றவ்ழாவில் மிகப் பெறுமதிமிக்க பச்சைப் போர்வை ஜொலிக்கின்றது. நபிகள் நாயகம் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லமவர்களின் காலத்திலேயே கஃபத்துள்ளாஹ்வில் போர்வை போடப்பட்டது.

இது கூடுமாயின்,, வலிமார்களின் கப்றுகளிலும் போர்வை போடுவது கூடும்.

**குற்றச்சாட்டு: 2**

கப்றில் பூப்போடுவது, போர்வை போடுவது; வெளிச்சமேற்றுவது வீண்விரயம். ஆகவே, கூடாது. வலிமார்களின் கப்றுகளில் அதிகமான பூக்கள் போடப்படுகின்றன. பல விளக்குகள் எரிக்கப்படுகின்றன. அவசியத் தேவையை நிறைவேற்ற ஒரு பூவும், ஒரு விளக்கும் போதும் தானே!,

**பதில்:**

பயனின்றி பொருளைச் செலவு செய்வது தான் வீண்விரயத்திற்கான பொருள், கப்றில் போடப்படுகின்ற பூக்கள், போர்வைகள்; மற்றும் விளக்கு களால் பயன்கள் உள்ளன;. அதை ஏற்கனவே கூறியுள்ளோம்; . ஆகவே, இவை வீண்விரயமல்ல! ஒரு சின்ன விடயத்தாலும் ஒரு தேவை நிறைவேறலாம்தான்.

உதாரணமாக, நாம் குர்தா அணிகின்றோம். பின் அதற்கு மேலால் அரைக்கோட்டு; அடுத்து பெறுமதியான துணியால் கோட்டு அணிகின்றோம்;. இவற்றில் ஏதாவது ஒன்றினாலும் தேவை முடிந்து விடும்.;சாதாரண துணிகூட தேவையை பூர்த்தி செய்யும்;. இதை வீண்விரயம் என்பீர்களா?, இல்லையா? சொல்லுங்கள்!.

இவ்வாறே கட்டடங்கள், தித்திப்பான பண்டங்கள்; சொகுசு வாகனங்கள் உள்ளிட்ட உலகியல் தொடர்பான பொருட்களிலெல்லாம் ஆடம்பரம் காட்டுகின்றோம்.; இவற்றிலெல்லாம் சாதாரண பொருள்களினால் தேவை நிறைவேறிவிடும்.; ஆயினும் ,இவை வீண்விரயமல்ல!,

ஷரீஅத் எதை நமக்கு ஹலாலாக்கித் தந்துள்ளதோ அதுமொத்தத்தில் ஹலால்தான்.!

அல்லாஹுத்த ஆலா கூறுகின்றான்.

قُلْ مَنْ حَرَّمَ زِيْنَةَ اللهِ الَّتِىْٓ اَخْرَجَ لِعِبَادِهٖ

***தனது அடியார்களுக்கென அவன் வெளிப்படுத்திய அல்லாஹ்வின் அலங்காரத்தை ஹறாமாக்கியவர் யார்? என்று நபியே கேட்பீராக!***

*அல் குர்ஆன்: (7: 32)*

**குற்றச்சாட்டு: 3**

மிஷ்க்காத்தில் பாபுல் மஸாஜித் என்ற பாடத்தில் பின்வரும் ஹதீது இடம் பெறுகின்றது.

لعن رسول الله صلي الله عليه وسلم زائرين القبور والمتخذين عليها المسْجد والسرج

கப்றுகளைத் தரிசிக்கின்ற பெண்களையும், கப்றைப் பள்ளிவாசலாக ஆக்கிக் கொள்பவர்களையும்; அதில் விளக்கேற்றுபவர்களையும் றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்கள் சபித்தார்கள்.

இந்த ஹதீதின் படி, கப்றில் விளக்கேற்றுதும் சாபத்திற்குரிய செயல் என்று தெரிகின்றது.

பதாவா ஆலம்கீரியில்,

اخراج الشموع الي المقابر بدعة لا أصل له

பதாவா பஸாஸியாவிலும் இவ்வாறு எழுதப்பட்டுள்ளது. அதாவது, மைய்யாவாடிக்கு விளக்குகளை எடுத்துச் செல்வது பித்அத்,. இதற்கு எதுவித ஆதாரமும் கிடையாது..

ஷாமி பாகம் 2 நோன்பு பற்றிய பாடத்தில் பின்வருமாறு எழுதப்பட்டுள்ளது

.

اما لو نذر زيتا لايقاد قنديل فوق ضريح الشيخ او في المنارة كما تفعل النساء من نذر الزيت

لسيدي عبد القادر ويوقد في المنارة جهة الشرق فهو باطل

ஷைகின் கப்றுக்கு மேல் அல்லது மனாறாவுக்கு மேல் விளக்கேற்று வதற்காக எண்ணையை நேர்ச்சை செய்வது உதாரணமாக, பெண்கள் கௌதுல் அஃழம் முஹ்யத்தீன் அப்துல் காதிர் ஜீலானி கத்தஸல்லாஹு ஸிர்ரஹுல் அஸீஸ் அவர்களின் கிழக்குப் பக்கத்திலுள்ள மனாறாவில் விளக்கேற்று வதற்காக எண்ணையை நேர்ச்சை செய்வது போன்று; அது வீண்னது.

காழி தனாவுள்ளாஹ் ஸாஹிப் பானிப்பத்தி "இர்ஸாதுத் தாலிபீன்" என்ற நூலில் எழுதுகின்றார்கள்..

(கப்றில்) விளக்கேற்றுவது பித்அத, கப்றில் விளக்கேற்று பவர்களையும், ஸஜதாச் செய்பவர்களையும் றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்கள் சபித்துள்ளார்கள்..

ஷாஹ் அப்துல் அஸீஸ் முஹத்திதுத் திஹ்லவி றஹ்மதுல்லாஹி அலைஹி தங்களின் பத்வாவில் எழுதுகின்றார்கள்.

கந்தூரி தினத்தில் ஹறாமான காரியம் செய்வது உதாரணமாக கப்றில் விளக்கேற்றுவது, கப்றுகளுக்கு போர்வை போடுவது உள்ளிட்ட சகலதும் கெட்ட பித்அத்தாகும்.

மேற்கண்ட சகல ஆதாரங்களின் படி, கப்றுகளில் விளக்கேற்றுவது சுத்தமான ஹறாமாகும்.; புனித மக்காவிலும், புனித மதீனத்துல் முனவ்வறாவிலும் விளக்கேற்றுகின்றார்கள் என்பதெல்லாம் ஆதாரமாகாது.;சிறப்பான மூன்று நூற்றாண்டுகளுக்குப் பின் துருக்கி அரசர்கள் உருவாக்கியவை தான் இவை,

**பதில்:-**

இந்தக் குற்றச்சாட்டு எதார்த்தத்தில் ஆறு குற்றச்சாட்டுக்களின்

மொத்தமானதாகும்; மறுப்பாளர்கள் இதை வைத்தே காட்டுக் கூச்சல் போடுகின்றனர்; பின்வரும் பதிவைக் கவனியுங்கள்! தெளிவு பெறுவீர்கள்!

எதுவித பயனுமில்லாமல் கப்றில் விளக்கெரிப்பது வீண் செலவு, ஆகவே, அதற்குத் தடையுண்டு என்றும்; ஏதும் பிரயோசனமிருப்பின் கூடும் என்றும்; பிரயோசனம் கள் நான்கு என்றும் அவற்றில் மூன்று பொதுமக்களின் கப்றுகளோடு தொடர்பானவை; நான்காவது வலிமார்கள் ஷைகுமார்கள்; உலமாக்கள் உள்ளிட்டோரின் றூஹைக் கண்ணியப் படுத்துவதற்காக என்றும் முதல் அத்தியாயத்தில் குறிப்பிட்டுள்ளோம்; பிரயோசனமின்றி கப்றில் விளக்கெரிப்பதற்குத்தான் ஹதீதில் தடையுள்ளது.

மேற்கண்ட ஹதீதுக்கு ஹாஷியத்துல் மிஷ்க்காத்தில் பின்வரும் விளக்கம் கொடுக்கப்பட்டுள்ளது.

والنهي عن اتخاذ السرج لما فيه من تضييع المال

கப்றில் (பிரயோசனமின்றி) விளக்கெரிப்பதால், பணம் வீணாகின்றது. ஆகவே தடையுள்ளது; .இதே கருத்து மிர்க்காத் உள்ளிட்ட பல நூற்களிலும் குறிப்பிடப்பட்டுள்ளன;

ஹதீக்கத்துன் நதிய்யா ஷறஹு தரீக்கத்து முஹம்மதிய்யா பாகம் : 2 பக்கம் : 429ல் பின்வரும் விளக்கம் கூறப்பட்டுள்ளது.

اي الذين يوقدون السرج علي القبور عبثا من غير فائدة

கப்றுகளில் எதுவித பிரயோசனமுமின்றி விளக்கேற்றுபவர்களுக்குத் தான் சாபம் உண்டு என்று ஹதீஸில் கூறப்பட்டுள்ளது.

மிஷ்க்காத் ஷரீப் “நல்லடக்கம்“ என்ற பாடத்தில் பின்வரும் ஹதீது இடம் பெறுகின்றது.

ان النبي صلي الله عليه وسلم دخل ليلا فاسرج  سراج

ஒரு தினம் றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் இரவில் ஒரு நல்ல டக்கத்திற்காகச் சென்றார்கள். அப்போது விளக்கேற்றப்பட்டது .(றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் நல்லடக்கத்தின் போதும் விளக்கேற்றும் பட்டது, பார்க்க பதாவா ஹதீதிய்யா )

## 2ம்– குற்றச்சாட்டுக்குப் பதில்

٢ - والمتخذين عليها المسجد والسرج

கப்றில் பள்ளிவாசல் கட்டுபவர்களையும், அதில் விளக்கேற்றுபவர்களையும் றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்கள் சபித்தார்கள் என்று ஹதீது ஷரீபில் வந்துள்ளது.

அவ்வாறே முல்லா அலி காரி, ஷைகு அப்துல் ஹக் முஹத்திதுத் திஹ்லவி உள்ளிட்ட ஏனைய ஹதீது விரிவுரையாளர்கள் றஹ்மதுல்லாஹி அலைஹிம் இந்த ஹதீதுக்கு பின்வரும் விளக்கத்தைக் கூறுகின்றனர்.

கப்றுக்குமேல் பள்ளிவாசல் கட்டுவது, கப்றை நோக்கி ஸஜதாச் செய்வது; அல்லது கப்று பள்ளிவாசலின் உள்நிலத்தில் வருமாயின் கூடாது. ஆனால், கப்றுக்குப் பக்கத்தில் பறக்கத்தை நாடி பள்ளிவாசல் இருந்தால் கூடும்.

ஹதீதில் வரும் "அலா" علي என்ற இடை சொல்லிற்கு எதார்த்தமான பொருள் கொடுக்கப் பட்டுள்ளது. இதன்படி, கப்றுக்கு மேல் விளக்கெரிப்பது தடையாகும். (சில முட்டாள்கள் கப்றுக்கு மேல் அலங்கார சிறிய மின் குமுழிகளைப் எரிக்கின்றனர, இதில் நெரேப்பின் தன்மை இருப்பதால், இந்த ஹதீஸின் படி தடையாகும்.)

கப்றுக்குப் பக்கத்தில் கூடும். அது கப்றாகக் கணிக்கப்படமாட்டாது, இதன் விளக்கத்தை கப்றில் கட்டடம் கட்டுவது பற்றிய ஆய்வில் குறிப்பிட்டுள்ளோம்.

அல்ஆரிபு பில்லாஹ் அப்துல் ஙனி நாபுலுஸி றஹ்மதுல்லாஹி அலைஹி தனது "ஹகீக்கத்துன் நதியா" என்ற நூலில் இந்த ஹதீதுக்கு பின்வருமாறு விளக்கம் எழுதுகின்றார்கள்.

المتخذين عليها أي علي القبور

குறிப்பாக கப்றுக்கு மேலால் பள்ளிகட்டுவோர். தடைக்கான காரணங்களில் இதுவும் ஒன்று, விளக்கு என்பது நெருப்பு, கப்றுக்கு மேல் நெருப்பை வைப்பது கேவலமானது;. ஆகவேதான் கப்றுக்கு நெருப்புக் கொள்ளியை எடுத்துச் செல்வதை சட்ட அறிஞர்களான புகஹாக்கள் தடுத்தார்கள்; காரணம், அதில்

நெருப்பின் குணமிருக்கின்றது.

தீக்கொள்ளி கப்றுக்கு வெளியிலிருந்தால் தடையில்லை,. விளக்கில் நெருப்பு இருப்பதானால் தான் விளக்கு தடைசெய்யப்பட்டது;. கப்றைக் கண்ணியப் படுத்துவதனால் அல்ல!

ஹதீது ஷரீபில் علي என்ற இடைச்சொல் ஒருவிடுத்தம்தான் வந்திருக் கின்றது. ஆனால், தடுக்கப்படுபவை பள்ளிவாசல், விளக்கேற்றுதல் என்று இருவிடயங்கள் கூறப்பட்டுள்ளன. அலா علي மீது - மேல்- என்ற சொல்லை பள்ளிவாசலுக்கு எதார்த்தமாகவும், விளக்கேற்றுவதற்கு மஜாஸியாகவும் (கப்றுக்கு அருகில்) என்று பொருள் வைத்தால், ஒரு விடயத்தில் ஹகீகத்தும், மஜாஸியும் ஒன்று சேருவதாக அவசியமாகிவிடும். இது சாத்தியமில்லை.

ஆகவே, இரண்டு இடங்களிலும் علي என்ற இடைச் சொல்லுக்கு எதார்த்தமான பொருளான மீது, மேல் என்று பொருள் கொடுக்க வேண்டும். (இதன்படி, கப்றுக்குமேல் பள்ளிவாசல் கட்டுவதும் கப்றுக்குமேல் விளக்கெரிப்பதும் தடையாகும்.

அவ்வாறே முல்லா அலி காரி றஹ்மதுல்லாஹி அலைஹி மிர்க்காத்தில் பின்வருமாறு எழுதுகின்றார்கள்.

ان اتخاذ المسجد بجنبها لا بأس به

கப்றுக்குப் பக்கத்தில் பள்ளிவாசலை அமைத்துக் கொள்வது குற்றமல்ல!,

கப்றுக்குமேல் என்று நிபந்தனயிடப்பட்டிருப்பதால் கப்றுக்குப் பக்கத்தில் பள்ளிவாசல் கட்டுவது ஆகும். இவ்வாறு علي என்ற இடைச் சொல்லால் கப்றுக்கருகாமையில் விளக்கேற்றுவது ஆகும்.

## 3 வது குற்றச்சாட்டுக்கான விளக்கம்

கப்றில் கட்டடம் கட்டுவது பற்றிய ஆய்வில் ஷாமி, உள்ளிட்ட ஏனைய நூற்களின் துண யாதாரத்துடன் எழுதியுள்ளோம். ஸஹாபாக்களின் காலத்தில் தடுக்கப்பட்ட எத்தனையோ விடயங்கள் இப்போது சுன்னத்தாக இருக்கின்றன.

தப்ஸீர் றூஹுல் பயானில் 9:18 திருவசனத்தின் விளக்கத்தில் பின் வருமாறு எழுதுகின்றார்கள். இஹ்யா உலூமுத்தீனில் ஹுஜ்ஜத்துல்

இஸ்லாம் இமாம் கஸ்ஸாலி றஹ்மதுல்லாஹி அலைஹி பின் வருமாறு எழுதுகின்றார்கள்:-

وفي الاحياء اكثر معروفات هذه الاعصاب منكرات في عصر الصحابة

இக்காலத்தில் இருக்கும் அநேகமான சுன்னத் தான் காரியங்கள் ஸஹாபாக்கள் காலத்தில் ஆகாதவையாக இருந்தன.

மிஷ்க்காத்தில் "கிதாபுல் அமாராத்" என்ற பாடத்தில் பின்வரும் ஹதீது காணப்படுகின்றது:-

எந்த ஓர் அரச அதிகாரியும் கோவேறு கழுதையில் சவாரி செய்யக் கூடாது,. சப்பாத்தி ரொட்டி சாப்பிடக்கூடாது; மெல்லிய துணியாலான ஆடையணியக் கூடாது; தேவையுள்ளவர்களின் வருகைக்காக தலைவாசல் எப்போதும் திறந்திருக்க வேண்டும்.. என்று அமீறுல் முஃமினீன் ஹளறத் உமர் பாரூக் றழியல்லாஹு அன்ஹு ஆணையிட்டபின்

فان فعلتم شيئا من ذلك فقد حلت لكن العقوبة

இவற்றில் எதையாவது நீங்கள் செய்வீர்களாயின், உங்களுக்கு தண்டனை வழங்கப்படும்.

இதே மிஷ்க்காத்தில் மஸ்ஜித் என்ற பாடத்தில் பின்வரும் ஹதீது இடம் பெறுகின்றது.

ما امرت بتشديد المسجد

பள்ளிவாசலை உயரமாக கட்டுமாறு எனக்குக் கட்டளையிடப்படவில்லை.

மேலும் இதே மிஷ்க்காத்தில்,

ولا تَمْنَعُوْا اَمَاءَ اللهِ مَسٰجِدَ اللهِ

பெண்கள் பள்ளிவாசலுக்குள் வருவதைத் தடுக்க வேண்டாம்.

ஸக்காத் பெறத் தகுதியானவர்கள் என்று திருக்குர்ஆன் எட்டுக் கூட்டத்தாரை பட்டியலிட்டுள்ளது. அதில் *"முஅல்லபத்துல் குலூபும்"* ஒன்று! ஆயினும், ஹளறத் உமர் பாரூக் றழியல்லாஹு அன்ஹு அவர்களின்

காலத்தில் முஅல்லபத்துல் குலூபை நீக்கிவிட்டு ஏழு கூடத்தாருக்கு ஸக்காத்தைக் கொடுத்தார்கள்.

*(பார்க்க ஹிதாயா மற்றும் ஏனைய சட்ட நூற்கள்)*

இந்த நடைமுறை இப்போதும் இருக்கின்றதா?

அதிகாரிகள் சாதாரண நிலையிலிருந்தால் குடிமக்களுக்கு அவர்களைப் பற்றிய அச்சம் நீங்கிவிடும். காபீர்களின் வீடும், அவர்களின் கோயில்களும் உயரமாக இருந்து, அல்லாஹ்வின் வீடாகிய பள்ளிவாசல் சிறிதாகவும் சாதாரணமாகவுமிருந்தால், அது இஸ்லாத்திற்கு இழுக்காகும். பெண்கள் பள்ளிவாசலுக்குச் செல்வதால் பல சீர்கேடுகள் உருவாகின்றன.. எந்த ஒரு காபிருக்கும் ஸக்காத் கொடுப்பது கூடாது. இந்த சட்டமெல்லாம் ஏன் மாற்றமடைந்தன. இதன் காரணங்கள் மாறியதோடு சட்டமும் மாறிவிட்டது.

அக்காலத்தில் வெளிப்பகட்டைப் பார்க்காமல் சகல முஸ்லிம்களின் மனதிலெல்லாம் வலிமார்களையும், அவர்களின் கப்றுகளையும் பற்றிய கண்ணியம் மரியாதை இருந்தது,.இப்போதைய உலகத்தின் பார்வை வெளிப்பகட்டையும், வெளிவேஷத்தையுமே பார்க்கின்றது;. ஆகவே, அது அனுமதிக்கப்பட்டுள்ளது.

ஆரம்பத்தில் கப்ருகளில் வெளிச்சமேற்றக் கூடாது என்ற சட்டம்தான் இருந்தது. ஆனால் இப்போது ஆகுமாக்கப்பட்டுள்ளது.

தப்ஸீர் றூஹுல் பயானில் 9:18 திருவசனத்தின் விளக்கத்தில் எழுது கின்றார்கள்.

ஹஉறத் சுலைமான் அலைஹிஸ்ஸலாம் பைத்துல் முகத்தஸை கட்டிய பின் அதன் மினாறாவில் வெளிச்சமேற்றினார்கள். அதன் பிரகாசம் 12 மைல் சுற்றளவு வீசியது. அந்த வெளிச்சத்தில் பெண்கள் ரொட்டி சுட்டுச் சாப்பிட்டார்கள். அதிகளவான தங்கம் வெள்ளியால் அழகுபடுத்தினார்கள். பதாவா ஆலம்கீரியிலிருந்து மறுப்பாளர்கள் முன்வைத்த சொற்றொடர் தவறானதாகும்,. உண்மையான வாசகம் இதுதான்.;

اخراج. الشموع الي رأس القبور في الليالي الأول بدعة

(அடக்கம் செய்யப்பட்ட) ஆரம்ப இரவுகளில் மைய்யவாடிக்கு விளக்கை எடுத்துச் செல்வது பித்அத்தாகும்.

இதில் இரு விடயங்கள் அதிக கவனத்திற்குரியதாகும்.

1) எடுத்துச் செல்லல்,

2) ஆரம்ப இரவுகள்.

அக்காலத்தில் உள்ளவர்கள் கப்றாளி கப்றில் அச்சமற்று இருக்க வேண்டும் என்று நம்பி தங்களுடைய புதிதாக மரணித்தவர்களின் கப்றுக்கு விளக் கெடுத்துச் சென்று எரிக்கும் நடைமுறையிருந்தது என்று தெளிவாக விளங்கு கின்றது.

இக்காலத்திலும் சில பெண்கள் மையித்தைக் குளிப்பாட்டிய இடத்திற்கு மையித்தின் றூஹ் வருகின்றது இருட்டாக இருந்தால் திரும்பிச் சென்றுவிடும் என்று நம்பி தினமும் நாற்பது நாட்கள் வரை அந்த இடத்தில் விளக்கேற்றுகின்றனர்., இது ஹறாமாகும்;. காரணமின்றி எண்ணையை செலவு செய்யப்படுகின்றது. இது மோசமான கொள்கையாக இருப்பதனாலும் இதற்குத் தடை விதிக்கப்படுகின்றது.

கந்தூரி காலத்தில் எரிக்கப்படுகின்ற விளக்குகள் இந்த நோக்கத்தில் எரிக்கப்படுவதில்லை, முதல் இரவில் கொளுத்துவது மில்லை;. நாம் கூறிய இந்த விளக்கம் தான் பதாவா ஆலம்கீரியின் நோக்கமாகும்;. இல்லை யென்றால், "முதல் இரவுகள்" என்று நிபந்தனையிடப்பட்டிருப்பது ஏன்.?

ஷாமி என்ற நூலின் வாசகம் தெளிவானது. அதில் கூட கந்தூரி நாட்களில் விளக்கேற்றுவதைப் பற்றிக் குறிப்பிடப்படவில்லை,. வலிமார்களின் நெருக்கத்தை நோக்கமாகக் கொண்டு வலிமார்களின் கப்றில் விளக்கேற்ற எண்ணையை நேர்ச்சை செய்வது ஹறாமாகும்.

ஷாமியின் இந்த வசனம் துர்ருல் முக்தாரின் வசனத்திற்கு அடியில் குறிப்பிடப்பட்டதாகும்.

துர்ருல் முக்தாரின் வசனம் இதோ!

واعلم أن النذر الذي يقع الاموات من اكثر العوام وما يؤخذ من الدراهم والشمع والزيت ونحوها الي ضرائح الاولياء تقربا اليهم بالاجماع باطل

அறிந்து கொள்! பொதுமக்களில் அதிகமானவர்கள் மரணித்தவர்களுக்காக நேர்ச்சை செய்கின்றனர் பணம், மெழுகுதிரி, எண்ணை உள்ளிட்டவையை எரிப்பதற்காக கப்றுகளுக்கு எடுத்துச் செல்கின்றனர். இவை வலிமார்களின்

நெருக்கத்தைப் பெறுவது என்ற நோக்கமாக இருந்தால், இஜ்மாஃயின் படி வீணாணது.

ஷாமியின் வாசகத்தின் படி ஷைகின் கப்றுக்கு மேல் விளக்கெரிக்க நேர்ச்சை செய்வதற்கு தடையுண்டு! (கப்றுக்குப் பக்கத்திலல்ல!) நாமும் இதைத்தான் கூறுகின்றோம். இவ்வாறு கப்று இல்லாமல் ஓரிடத்தில் எவராவது ஒரு பெரியாரின். பெயரில் விளக்கெரிப்பது, சில முட்டாள் கூட்டம் சில மரங்களில் அல்லது ஏதும் சுவரின் கோணத்தில் எவராவது ஒருவரின் பெயரால் விளக்கேற்றுவது ஹறாமாகும்;.

ஏதாவது ஒரு கிழக்குப் பக்கத்து மனாராவில் கௌதுல் அஃழம் றழியல்லாஹு அன்ஹு அவர்களின் பெயரால் விளக்கேற்றுவது பாதில்- வீணானது;. கௌதுல் அஃழம் றழியல்லாஹு அன்ஹு அவர்களின் கப்று ஷரீப் பகுதாதில் இருக்கின்றது. வாயில் உள்ள மினாராவில் அவர்கள் பெயரால் விளக்கேற்றினாலும் கூடாது.

சுருக்கக் கூறின் ஷாமியின் வாசகம் மூன்று விடயங்களைக் தடை செய்கின்றது.

1) வலிமார்களின் நெருக்கத்தை நாடி விளக்கெரிப்பதற்கு நேர்ச்சை செய்வது.

2) கப்றுக்கு மேல் விளக்கெரிப்பது.

3) கப்று இல்லாத இடத்தில் ஒருவரின் பெயரால் விளக்கெரிப்பது.

கந்தூரி தினங்களில் எரிக்கப்படும் விளக்குகளில் இம்மூன்று தடைகளும் கிடையாது.

அறிவில்லாத சிலர் சில மரங்களிலும் வேறு சில இடங்களிலும் குறித்த இன்ன பெரியார் தவமிருந்தார் என்று நம்பி விளக்கேற்றுகின்றனர்,. அவ்விடத்தை ஸியாரத் செய்கின்றனர். இது சுத்தத் தவறாகும், ஆனால்,, ஏதாவது ஓர் இடத்தில் யாராவது ஒரு பெரியார் இபாதத் செய்திருந்தால், அல்லது தங்கியிருந்தால் இது பறக்கத்தான இடம் என்று நம்பி அந்த இடத்தில் இபாதத் செய்வது ஆகும். தவிர, சுன்னத்து மாகும்.

புகாரி ஷரீபில் தொழுகை பற்றிய அத்தியாயம் "பள்ளிவாசல்கள்" பற்றிய பாடத்தில் “மதீனாவின் பாதையில் உள்ள பள்ளிவாசல்கள்” என்று ஒருபாடமே குறிப்பிட்டப்பட்டுள்ளது. அதில் பின்வரும் ஹதீது இடம் பெறுகின்றது.

றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்கள் எங்கெங்கெல்லாம் தொழுதார்களோ அங்கெல்லாம் ஹளறத் அப்துல்லாஹ் இப்னு உமர் றழியல்லாஹு அன்ஹுமா அவர்கள் தொழுவார்கள். அவ்வாறான சில இடங்களில் பள்ளிவாசல்கள் கட்டப்பட்டுள்ளன. தவறு தலாகவும் சில இடங்களில் பள்ளிகள் கட்டப்பட்டன. அந்த இடங்களில் ஹளறத் இப்னு உமர் றழியல்லாஹு அன்ஹுமா தொழமாட்டார்கள்.

இவ்வாறு பறக்கத்தை மட்டும் நாடியே தொழுதார்கள். இன்றும் கூட ஹாஜிகள் ஹிறா குகைக்குச் சென்று தொழுகின்றனர். காரணம், அங்கு றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்கள் ஆறு மாதங்கள் இபாதத் செய்தார்கள். தொழுதார்கள் என்பதனால். அதனால், காஜா முயீனுத்தீன் அஜ்மீரி போன்றவர்கள் றழியல்லாஹு அன்ஹும் தவமிருந்த இடத்தில் பறக்கத்தை நாடி தொழுவது சுன்னத்துஸ் ஸஹாபாவாகும்.

## நேர்ச்சை ஒரு விளக்கம்.

வலிமார்களுக்குச் செய்யப்படுகின்ற நேர்ச்சை ஷற இய்யத்தான நேர்ச்சையல்ல! மொழிரீதியான நேர்ச்சையாகும்.அன்பளிப்புக் கொடுப்பது என்பது தான் இதன் பொருள், இது உங்களுக்கான நேர்ச்சை என்று தனது ஆசிரியரிடம் கூறி அன்பளிப்பு வழங்குவது போன்றது, இது ஆகுமாகும்.

வலிமார்களுக்கு ஷற இய்யத்தான நேர்ச்சை செய்வதை ஹறாம் என்று புகஹாக்கள் கூறியதற்கான காரணம், நேர்ச்சையின் ஊடாக அவர்களின் நெருக்கத்தைப் قربة பெறுவது என்பது அதில் தொக்கியுள்ளது. ஆகவே,கூடாது, ஷற இய்யத்தான நேர்ச்சை என்பது இபாதத்;. அல்லாஹ் அல்லாதவருக்கு இபாதத் செய்வது சந்தேகமில்லாமல் குப்றாகும்.

கௌதுல் அஃழம் அவர்களே! நீங்கள் துஆச்செய்து எனது நோய் சுகமானால், ஒரு கோழி அறுத்து சமைத்துக் கொடுப்பேன்.! என்று எவராவது கூறினால், அவர் கௌதுல் அஃழத்தை இறைவனாக்கி விட்டார். நோய்சு கமானதற்காக இவ்வாறு இபாதத் செய்தார் என்று பொருளாகாது.

இதன் பொருள், அல்லாஹ்வுக்காக ஸதக்காக் கொடுப்பேன். அதன் தவாபை உங்களுக்குச் சேர்த்து வைப்பேன்;. எவ்வாறெனில், எனது நோய் சுகமானால், மருத்துவருக்கு ஐம்பது ரூபாய் கொடுப்பேன் என்று கூறுவதைப் ஒத்திருக்கின்றது; .இதில் என்ன பாவம் வந்துவிடப் போகின்றது ?

இதை அல்லாமா ஷாமி அவர்கள் தனது நூலில் நோன்பு பற்றிய அத்தியாயத்தில் "மரணித்தவர்களுக்காக நேருதல்" என்ற பாடத்தில் இவ்வாறு எழுதுகின்றார்கள்.

بان تكون صيغة النذر لله تعالي للتقرب اليه ويكون ذكر الشيخ مرادا به فقراؤه

நேர்ச்சை என்பது ,அல்லாஹுத்த ஆலாவுக்குச் செய்யும் இபாதத்,. ஷைகின் பெயர் கூறப்படுவதன் நோக்கம் கப்றைச் சுற்றி தங்கியிருக்கும் ஏழைகளுக்குக் கொடுக்கப்படுவதாகும்;. இது முற்றிலும் ஆகுமானது;

அதாவது, ஸதகா அல்லாஹ்வுக்காகும். அதன் தவாபு ஷைகின் றூஹுக்குச் சேர்த்து வைப்பது;. இந்த ஸதகாவை அனுபவிப்பவர்கள் ஷைகின் மஸார் ஷரீபை அண்டியிருக்கும் ஏழைகளாகும்.

ஹளறத் மர்யம் அலைஹஸ்ஸலாம் அவர்களின் தாய் தனது வயிற்றில் வளருகின்ற குழந்தையை பைத்துல் முகத்தஸில் பணிவிடைக்காக அல்லாஹ்வுக்காக நேர்ச்சை (வக்பு) செய்தார்கள். இங்கு நேர்ச்சை அல்லாஹ்வுக்கு! பயன் பைத்துல் முகத்தஸுக்கு.

அல்லாஹ் அல்லாதவர்களை சத்தியம் செய்வது ஷரீஅத்தில் தடை ஆனால், திருக்குர்ஆனும், றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமும் சத்தியம் செய்திருக்கின்றனர்.

وَالتِّيْنِ وَالزَّيْتُوْنِ وَطُوْرِ سِيْنِيْنَ

***அத்தியின் மீதும், ஸைத்தூன் மரத்தின் மீதும்; தூர்ஸீனாவிலுள்ள தூர் என்ற மலையின் மீதும் சத்தியமாக!***

என்றும் இதுவல்லாதவையின் மீதும் திருக்குர்ஆனில் அல்லாஹுத்த ஆலா சத்தியம் செய்து கூறியுள்ளான்.

றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்கள், افلح وابيه அவர் தந்தையின் மீது சத்தியமாக! அவர் உண்மை கூறினால், நிச்சயமாக வெற்றி பெற்றார். என்று கூறி சத்தியம் செய்தார்கள்.

ஷற இய்யத்தான சத்தியத்தை முறிப்பதால் குற்றப்பரிகாரம் (கப்பாறா) வரும்! சட்டத்திற்குட்பட்ட சத்தியத்தை அல்லாஹ் அல்லாத வேறு எவருக்கும் செய்யக்கூடாது. மொழிரீதியான சத்தியம் என்பது, தனது பேச்சை ஊர்ஜிதம் செய்வதற்காகக் கூறுவதாகும். இது அனுமதிக்கப்பட்டுள்ளது. நேர்ச்சைக்கான நிலையும் இதுதான்.!

ஒரு மனிதர் பைத்துல் முகத்தஸுக்கு விளக்கேற்ற எண்ணையை அனுப்பி வைப்பதாக நேர்ச்சை செய்த போது அந்த நேர்ச்சையைப் பூரணமாக நிறைவேற்றவும் என்று றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு

அலைஹி வஸல்லமவர்கள் கூறினார்கள்.

மிஷ்க்காத் ஷரீபில் நேர்ச்சை பற்றிய பாடத்தில் வருகின்றது. ஒருவர் "*புவானா*" என்ற இடத்தில் ஒட்டகம் அறுப்பதற்கு நேர்ச்சை செய்தார். அங்கு சிலைகள் ஜாஹிலியாக்காலத்து திருவிழாக்கள் உள்ளிட்டவை இல்லையாயின், நேர்ச்சையை நிறைவேற்றும் என்று றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்கள் கூறினார்கள்;. மற்றுமொருவர் பைத்துல் முகத்தஸுக்குச் சென்று தொழுவதற்கு நேர்ச்சை செய்த போது. மஸ்ஜிதுல் ஹறாமில் தொழுமாறு கூறினார்கள்.

மேற்கண்ட ஹதீதுகளிலிருந்து பின்வரும் விடயம் தெளிவாகின்றது.

தர்மம், நன்மையான காரியங்கள் உள்ளிட்டவற்றை நேர்ச்சை செய்வதில் குறிப்பிட்ட இடம், குறிப்பிட்ட ஜமாஅத்தின் ஏழைகள் என்று குறிப்பிட்டுக் கூறுவது ஆகும். மௌலவி றஷீத் அஹ்மத் கொங்கோஹி பதாவா றஷீதிய்யா பாகம் 1 ஹலால் ஹறாம் என்ற பாடம் பக்கம் 54 ல் எழுதுகின்றார்.

மரணித்தவர்கள், வலிமார்கள் உள்ளிட்டோருக்கு நேர்ச்சை செய்வதன் கருத்து அதன் தவாபை அவர்களின் றூஹுக்குச் சேர்த்து வைப்பது என்றிருந்தால், அது ஸதக்காவாகும்; அது கூடும்.; அவர்களின் நெருக்கத்தை நாடி அவர்கள் பெயரால் செய்யும் நேர்ச்சையாக இருந்தால் ஹறாமாகும்.

*இப்படிக்கு*

*றஜீத் அஹ்மத்.*

மிஷ்க்காத் "ஹளறத் உமர் றழியல்லாஹு அன்ஹு அவர்களின் மனாகிப்" என்ற பாடத்தில் வருகின்றது.

றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் உஹது யுத்தத்திலிருந்து நலமாக மீண்டு வந்தால், அன்னாருக்கு முன் றபான் அடிப்போம் என்று சில பெண்கள் நேர்ச்சை செய்தனர். இந்த நேர்ச்சை ஷரஇய்யத்தானதல்ல! ஊர் வழக்கைச் சேர்ந்ததாகும். அதாவது நபியவர்களுக்கு முன்னால் மகிழ்ச்சியை வெளிப்படுத்துவதாகும்.

இதன்படி, நேர்ச்சைக்கு இரு வகையான பொருட்கள் உள்ளன.

1) லுஙவி, மொழிரீதியானது.

இவ்வாறான நோக்கை மார்க்கப் பெரியார்களுக்குக்கு நோவது கூடும்.
எவ்வாறு, தவாபு طواف தவாப் (طواف) என்பதற்கு இருபொருட்கள் உள்ளன.
அங்கும்மிங்கும் சுற்றுவது மொழிரீதியான பொருள்.

ஆதி இல்லமாகிய கஃபத்துல்லாஹ்வைச் சுற்றுவது ஷற இய்யத்தான தவாபு

يَطُوفُونَ بَيْنَهَا وَبَيْنَ حَمِيمٍ آنٍ

*அதற்கும் (நரகத்திற்கும்) கடினமாகக் கொதிக்கும் கொதி நீருக்கு மிடையே அவர்கள் சுற்றிக் கொண்டிருப்பார்கள்.*

*அல் குர்ஆன்:( 55: 44).*

இங்கு தவாஃப் என்ற சொல் மொழிரீதியான அதாவது சுற்றுவது என்ற பொருளைக் கொண்டிருக்கின்றது.

ஷாஹ் அப்துல் அஸீஸ் முஹத்திதுத் திஹ்லவி, காழி தனாஉள்ளாஹ் பானி பத்தி றஹ்மதுல்லாஹி அலைஹிமா ஆகிய இருவரும் மிகப் பெரிய நாதாக்கள் என்பதில் எதுவித சந்தேகமுமில்லை. ஆயினும்; மக்றூஹ் தஹ்ரீமி, ஹறாம் ஆகியன இவர்களின் பேச்சினால் மட்டும் வருவதற்கு இவ்விருவரும் முஜ்தஹிதுகளில்லை,

இதற்கு ஷரீஅத் ரீதியான தனித்துவமான ஆதாரங்கள் அவசியமாகும்.

ஓர் ஆலிமின் கூற்றால், "சுன்னத்" அல்லது "ஆகும்" என்ற சட்டம் வரலாம்., முஸ்தஹப்பு என்பது உலமாக்கள் முஸ்தஹப்பாக கருதியதைக் குறிக்கும். ஆனால், மக்றூஹ் (தஹ்ரீமி) ஹறாம் என்பதற்கு குறிப்பான ஆதாரம் அவசியமாகும்.

ஹளறத் ஷாஹ் அப்துல் அஸீஸ் முஹத்திதுத் திஹ்லவி ஹளறத் காழி தனாஉள்ளாஹ் பானி பத்தி றஹ்மத்துள்ளாஹி அலைஹிமா ஆகிய இருவரும் கப்றில் விளக்கெரிப்பதையும், போர்வை போடுவதையும் ஹறாம் என்கின்றனர். ஆனால், ஹனபி மத்ஹபின் பிரபலமான சட்ட நூலான ஷாமி, தப்ஸீர் றூஹுல் பயான், ஹதீக்கத்துன் நதிய்யா ஆகிய நூல்களின் ஆசிரியர்கள் கப்றில் விளக்கேற்றுவது ஆகும் என்றும், சுன்னத் என்றும் கூறுகின்றனர். இவர்களின் கூற்று சந்தேகமில்லாமல் ஏற்றுக் கொள்வதற்கு மிக்க தகுதியுடையதாகும்.

இவ்விருவருடைய கூற்றுக்களையும் ஏற்றுக்கொண்டால், புனித மக்கவும் புனித மதீனாவும் , றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் புனித றவ்ழாவும் பித்அத், ஹறாமுக்கான மர்க்கஸாக

ஏற்க வேண்டிவரும். காரணம் அங்கு விளக்கெரிக்கப்படுகின்றது போர்வையும் போடப்பட்டுள்ளது.

இதுவரை எந்த ஓர் ஆலிமும், பகீஹும் அதைத்தவறு என்று கூறவில்லை. அப்படியாயின், இவர்களும் பித்அத்வாதிகளாகவும் வழிகேடர்களாகவும் ஆக வேண்டிவரும். இவ்விருவரின் கூற்றுக்களை ஏற்றுக் கொண்டால், பல பிரச்சினைகளுக்கு முகம் கொடுக்க வேண்டிவரும்.

2- ஹறமைன் ஷரீபைன் உலமாக்கள் ஒரு விடயத்தை நல்லதாகக் கண்டால் சந்தேகமில்லாமல் அது சுன்னத் என்பதற்கு ஆதாரமாகும்.

இந்த புனித பூமியில் ஒருபோதும் ஷிர்க் வரமுடியாது. அங்கே அரபிகள் ஷைத்தானை வணங்க வைக்க முடியாமல் ஷைத்தான் கையறு நிலைக்காளாகி விட்டான். என்று ஹதீது ஷரீபில் வந்துள்ளது.; மதீனத்து புனித மண் இஸ்லாத்தின் பாதுகாப்பான இடமாகும்.; காபிர்கள், முஷ்ரிகீன்களை விட்டும் பாதுகாக்கப்பட்டுள்ளது.

மிஷ்க்காத் ஷரீபில் ஹறம் மதீனா என்ற பாடத்தில் பின்வரும் ஹதீது இடம் பெறுகின்றது.

கொல்லன் உலை இரும்பிலிருந்து கழிவை வெளிப்படுத்துவது போன்று, மதீனா தீயவர்களை உடனே வெளியேற்றும்.; அல்லது, சற்று தாமதித்து; அல்லது மரணத்தின் பின் வெளியேற்றும்.

ஜத்புல் குலூப் என்ற நூலில் ஷாஹ் அப்துல் ஹக் முஹத்திதுத் திஹ்லவி றஹ்மதுல்லாஹி அலைஹி கூறுகின்றார்கள்.

இந்த ஹதீஸின் கருத்தாவது,

புனித மதீனாவின் புனித மண் சகல தீயவர்களையும், குழப்பவாதிகளையும் வெளியேற்றும், .இந்த சிறப்பம்சம் எப்போதும் இருக்கும்;. ஆகவே, புனித மதீனத்து உலமாக்களின் செயலை ஷிர்க், பித்அத்என்று கூறுவது கடுமையான குற்றமாகும்.அவ்வாறே இந்த விளக்குகள்யாவும் துருக்கி சுல்தான்களால் ஏற்படுத்தப்பட்டவை என்று கூறுவதும் குற்றமாகும்.

கண்ணியமிக்க இமாம்களான அஸ்ஸெய்யித் நூறுத்தீன் ஸம்ஹூதி, ஹாபிழ் இமாம் ஜலாலுத்தீன் ஸுயூத்தி றஹிமஹுமல்லாஹ் ஆகிய இருவரும் ஹிஜ்ரி 911ல் வபாத்தானார்கள். இமாம் ஸம்ஹூதி றஹ்மதுல்லாஹி அலைஹி “குலாஸத்துல் வபா” என்ற நூலை ஹிஜ்ரி 893ல் கோர்வை செய்தார்கள். இதில் 25வது பாடத்தில் மதீனா ஷரீபில் றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் சங்கையான சிறப்பான வீட்டைச் சுற்றி போடப்பட்டுள்ள வெள்ளி, தங்கத்தினால் செய்யப்பட்ட

விளக்குகளின் எண்ணிக்கையைக் குறிப்பிட்டுகையில்

في قناديل الذهب ، والفضة التي تعلق حول الحجرة الشريفة ، وغيرها من معاليقها اعلم اني لم اقف في كلام احد ذكر ابتداء حدوث ذلك

றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் புனித றவ்ழாவைச் சுற்றி போடப்பட்டுள்ள வெள்ளி தங்கத்தினாலான விளக்குகளின் ஆரம்பம் எப்போது தொடங்கியது என்ற தகவல் என்னிடம் இல்லைஎன்று குறிப்பிடுகின்றார்கள்.

இமாம் சுப்கி றஹ்மதுல்லாஹி அலைஹி இது தொடர்பாக ஒரு தனி நூல் எழுதியுள்ளார்கள், அதன் பெயர், "தனஸ்ஸலுஸ் ஸகீனா அலா கனாதீலில் மதீனா" மதீனத்து விளக்குகளினால் சாந்தம் இறங்குகிறது" அதில் பின்வருமாறு எழுதுகின்றார்கள்.

وذهب فيه الي جوازها وصحة وقفها وعدم جواز صرف شيئ منها لعمارة المسجد

கண்ணியமிக்க றவ்ழாவில் வைக்கப்பட்டுள்ள தங்கம் வெள்ளியினாலான விளக்குகள் ஷரீஅத்தில் ஆகுமானதுதான்,. அதற்கு வக்பு செய்வது கூடும்;. அதிலிருந்து எதையும் பள்ளிவாசலுக்குச் செலவு செய்யக்கூடாது. .

அல்ஹம்துலில்லாஹ்! மறுப்பாளர்களின் சகல குற்றச்சாட்டுக்களுக்கும் பூரணமான விடை கூறப்பட்டுள்ளது.

## முடிவுரை:

பஞ்சாப், உ.பி. காட்டியாவாழ் உள்ளிட்ட இடங்களில் றமழானில் தறாவீஹில் திருக்குர்ஆனை தமாம் செய்யும் இரவில் பள்ளிவாசல்களில் பல விளக்குகளை ஏற்றுவார்கள்,. தேவ்பந்திகள் இதை ஷிர்க், ஹறாம் என்று கூப்பாடு போடுகின்றனர்;. இக்கூப்பாடு அவர்கள் மார்க்கத்தை அறியாததின் விளைவாகும். பள்ளிவாசலை அழகுபடுத்துவது ஈமானின் அடையாளமாகும்.

தப்ஸீர் றூஹுல் 9:18 திருவசனத்தின் விளக்கத்தில் எழுதுகின்றார்கள்.

ஹளறத் சுலைமான் அலைஹிஸ்ஸலாம் பைத்துல் முகத்தஸ்ஸில் 1700 விளக்குகளை எரிக்குமாறு கட்டளையிட்டார்கள். மஸ்ஜிதுன் நபவியில் ஆரம்பத்தில் ஈச்ச மட்டை உள்ளிட்வையை எரித்து வெளிச்சமேற்றப்பட்டது. ஹளறத் தமீமுத் தாரி றழியல்லாஹு அன்ஹு கின்தீல் விளக்குகளை கயிற்றால் தூண்களில் கட்டி ஏற்றினார்கள்.

இதைப் பார்த்த றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்

نور الله عليك نورت مسجدنا

நீங்கள் எமது பள்ளிவாசலுக்கு வெளிச்மேற்றினீர்கள். அல்லாஹுத்தஆலா உம்மைப் பிரகாசமாக்கி வைப்பானாக! என்று துஆச்செய்தார்கள்.

ஹளறத் உமர் றழியல்லாஹு அன்ஹு அவர்களும் பள்ளிவாசலுக்கு விளக்கேற்றினார்கள். இதைப் பார்த்த ஹளறத் அலி றழியல்லாஹு அன்ஹு

نورت مسجدنا نور الله قبرك يا ابن خطاب

உமரே! எமது பள்ளிவாசலுக்கு நீங்கள் விளக்கேற்றி வெளிச்சம் கொடுத் தீர்கள். அல்லாஹுத் தஆலா உமது கப்றை வெளிச்சமாக்கி வைப்பானாக! என்று துஆச்செய்தார்கள்.

தப்ஸீர் கபீரில் 9:18 திருவசனத்தின் விளக்கத்தில் பின்வருமாறு உள்ளது.

وعن النبي صلي الله عليه وسلم من اسرج في مسجد سراجا لم تزل ملائكة وحملة العرش يستغفرون له ما دام في المسجد ضوؤه

எவராவது பள்ளிவாசலில் விளக்கேற்றினால், அந்தப் பள்ளிவாசலில் வெளிச்சம் இருக்கும் வரை மலக்குகளும், அர்ஷைச் சுமந்த மலக்குகளும் அவருக்காக பிழை பொறுக்கத் தேடிக்கொணடிருப்பார்கள்.

பதாவா றஷீதிய்யா இரண்டாம் வால்யூம் *"ஹலால், ஹராம்"* பற்றிய பாடத்தில் றஷீத் அஹ்மத் கங்கோஹி பின்வருமாறு எழுதுகின்றார்.

ஹளறத் உமர் பாறூக் றழியல்லாஹு அன்ஹு அவர்களின் ஆட்சிக் காலத்தில் சில சஹாபாக்கள் பைத்துல் முகத்தஸில் பல விளக்குகள் எரிவதைப் பார்த்துவிட்டு வந்தவர்கள் மஸ்ஜிதுன் நபவியில் பல எண்ணிக்கை

யினாலான விளக்குகளை ஏற்றினார்கள்.

பின் கலீபா மஃமூன் றஷீது பல விளக்குகள் ஏற்றுமாறு பொதுக் கட்டளையிட்டார்கள் .இதனால் பள்ளிவாசல்களுக்கு வெளிச்ச மேற்றுவது நபிமார்கள், ஸஹாபாக்கள் ஏனைய பொதுமக்களின் சுன்னத்தாகும் என்பது தெளிவாகிவிட்டது.

# ஆய்வு-15

# கப்றில் அதான் கூறுவது பற்றிய ஆய்வு!

முஸ்லிமான மையயித்தை கப்றில் அடக்கம் செய்யும் போது *"அதான்"* கூறுவது அஹ்லுஸ் ஸுன்னத் வல் ஜமாஅத்தினரிடத்தில் ஆகுமானது., இதற்கு நிறைய ஆதாரங்கள் இருக்கின்றன; ஆனால், வஹாபிகளும், தேவ்பந்திகளும் இதனை பித்அத், ஹ றாம் ;ஷிர்க் என்கின்றனர்; இவர்கள் என்ன கூறுகின்றார்கள் என்று ஒன்றும் நமக்குப் புரியுதில்லை?, ஆகவே, இந்த ஆய்வை இரு அத்தியாயங்களாக்கப்பட்டுள்ளன.

முதல் அத்தியாயத்தில் இதற்கான ஆதாரங்களும், இரண்டாவது அத்தியாயத்தில் அதற்கெதிரான குற்றச்சாட்டுக்களும்; பதில்களும் அல்லாஹ்வின் உதவியால் இடம் பெறும்.

# அத்தியாயம்: 1

## கப்றில் அதான் கூறுவற்கான ஆதாரங்கள்.

நல்லடக்கம் செய்தபின், கப்றில் அதான் கூறுவது ஆகும, ஹதீதுகள், பிக்ஹின் நூற்கள் உள்ளிட்டவையில் இதற்கான ஆதாரங்கள் இருக்கின்றன.

மிஷ்க்காத் ஷரீபில் ஜனாஸாவின் பாடத்தில் மரணம் நெருங்கி யவனிடத்தில் சொல்லப்பட வேண்டியது" என்ற பாடத்தில் பின்வரும் ஹதீது இடம் பெறுகின்றது.

لقنوا موتاكم لا اله الا الله

உங்களின் மரணித்தவர்களுக்கு لا الله الا الله என்று கற்றுக் கொடுங்கள்.

உலக வாழ்க்கை முற்றுப் பெறுவதென்பது மனிதனுக்கு படுமோசமான இரண்டு இழப்புக்கான நேரமாகும்.

1) உயிர் பிரிவது,

2) அடக்கிய பின், கப்றின் விசாரணை.

உயிர் பிரியும் போது நல்லமுடிவாக ஆகா விட்டால், வாழ்நாள் பூறாக செய்த சகலதும் வீணாகி விடும், மேலும், கப்றின் சோதனையில் வெற்றி பெறாவிட்டால், எதிர்கால வாழ்க்கை நாசமாகி விடும்;.உலகத்தில் ஒருவருட பரீட்சையில் தோல்வியடைந்தால், அடுத்த வருடத்தில் எடுத்துக் கொடுக்கலாம்;. ஆனால், அங்கே இதைச் செய்ய முடியாது; ஆகவே,

உயிருள்ளவர்கள் மரணிக்கின்றவர்களுக்கு இந்த இரண்டு நேரங்களிலும் உதவி செய்ய வேண்டும்.

மரணிக்கின்ற வேளையில் கலிமா சொல்லிக்கொடுங்கள், அ டக்கத்தின் பின், கப்றின் சோதனையிலிருந்து வெற்றி பெறுவதற்காக உலகத்திலிருந்து போகும் வரை கலிமாவின் ஓசையைக் கேட்கச்செய்யுங்கள்; ஆகவே,, இந்த ஹதீதுக்கு இரண்டு பொருள்கள் இருக்கவேண்டும்.

1) மஜாஸி: - இரவலானது,

2) ஹகீகி: - எதார்த்தமானது,.

அவசியமின்றி மஜாஸியான பொருள் கொள்வது சரியல்ல, ஆகவே,, இந்த ஹதீதுக்கான மொழிபெயர்ப்பு இப்படி வரும்;. அதாவது, "மைய்யித்திற்கு கலிமாவைச் சொல்லிக் கொடுங்களஎ". என்பது, அடக்கம் செய்யப்பட்ட நேரத்திற்குப் பின்பாகும்.

ஷாமி, பாகம்1, பாடம் நல்லடக்கம்: "மரணத்தின் பின் தல்கீன்" என்ற விடயத்தில் பின்வருமாறு எழுதுகின்றார்கள்:

أما عند اهل السنة فالحديث أي لقنوا موتاكم علي حقيقته وقد روي عنه عليه السلام انه أمر بالتلقين بعد الدفن فيقول يا فلان ابن فلان اذكر دينك الذي كنت عليها

அஹ்லுஸ் ஸுன்னத் வல்ஜமாஅத்தினர்களின் மத்தியில். لقنواموتاكم "உங்களில் மௌத்தான வர்களுக்கு தல்கீன் சொல்லிக் கொடுங்கள்" என்ற ஹதீதுக்கு-ஹகீகி- எதார்த்தமான பொருளைத்தான் வைக்க வேண்டும். அடக்கம் செய்த பின், தல்கீன் சொல்லிக்கொடுக்குமாறு கட்டளை யிட்டதாக றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்ல மவர்களிடமிருந்து ஒரு அறிவிப்பு இருக்கின்றது. அதில் இன்னாரின் மகன் இன்னாரே! நீ எந்த மார்க்கத்திலிருந்தாயோ, அதை நினைத்துப் பார்! என்று கப்றுக்குப் பக்கத்திலிருந்து கொண்டு கூறவும்.

மேலும், இதே ஷாமியில் இதே இடத்தில் எழுதுகின்றார்கள்.

وانما لا ينهي عن التلقين بعد الدفن لانه لا ضرر فيه بل نفع فان الميت يستأنس بالذكر علي ما ورد به الآثار

அடக்கம் செய்த பின், "தல்கீன்" சொல்வதைத் தடுக்கக்கூடாது. காரணம், அதில் எதுவித நஷ்டமுமில்லை; நன்மைதான் உண்டு! காரணம், மையித் அல்லாஹ்வின் திக்றினால் அன்னியொன்னியத்தையும்; நெருக்கத்தையும் பெறுகின்றது;. இது பற்றி ஹதீதுகளில் வந்துள்ளது.

இந்த ஹதீதிலிருந்தும், மேற்படி நூலின் சொற்றொடரிலிருந்தும் மைய்யித்தை அடக்கம் செய்த பின், தல்கீன் சொல்லிக் கொடுப்பது "சுன்னத்" ஆகவே, முன்கர், நகீரின் விசாரணையிலிருந்து வெற்றி பெறக்கூடும் என்று தெரிகின்றது.

அதானும் கலிமாதானே!. இதுவும் தல்கீன்தான் ஆகவே, இதுவும் சுன்னத்தாகும். காரணம்,அதான் முழுக்க கலிமாதான்;.மைய்யித்திடம் முன்கர், நகீர்மூன்று கேள்விகளைக் கேட்பார்கள்.

1) உனது றப்பு யார்?

2) உனது மார்க்கம் எது?,

3) பச்சைக்குப்பாவுக்குரிய வேந்தர் நபியவர்களைப் பற்றிய உமது கருத்து யாது?

முதலாம் கேள்விக்கான பதில். اشهد أن لا اله الا الله

இரண்டாம் கேள்விக்கான பதில், حي علي الصلوة

எனது மார்க்கம். பர்ஹான் ஐந்து நேரத் தொழுகை;. ஐந்து நேரத் தொழுகை பர்ழான மார்க்கம் இஸ்லாத்தைத் தவிர வேறு எதுவும் கிடையாது;

மூன்றாவதுகேள்விககான பதில், اشهد أن محمدا رسول الله

துர்ருல் முக்தார் பாகம் 1, "அதான்" பற்றிய பாடத்தில்,: பத்து இடத்தில் அதான் கூறுவது "சுன்னத்" என்று எழுதப்பட்டுள்ளது. இதை பின்வரும் அறபுக் கவிதையில் இவ்வாறு கூறுகின்றார்கள்.

1- ஐந்து பர்ளான தொழுகை,

2- குழந்தையின் காதில்;

3- தீப்பிடித்த போது;

4- யுத்தம் நடக்கும் போது;

5- பிரயாணிக்குப் பின்;

6-ஜின் வெளிப்பட்ட போது;

7- சினமுள்ளவரில்;

8-பயணி வழியை மறந்தபோது;

10- வலிப்பு நோய் பிடித்தவருக்கு

இதற்கு அடியில் ஷாமியில் எழுதுகின்றார்கள்:

وقد يسن الاذان بغير الصلوة كما في اذان المولود والمهموم والمصروع والغضبان ومن ساء خلقه من انسان او بهيمة وعند مزدهم الجيش وعند الحريق وقيل عند انزال الميت القبر قياسا علي خروجه للدنيا لكن رده ابن حجر رحمه الله في شرح العباب وعند تفول الغيلان أي تمرد الجن

ஐந்து வேளைத்தொழுகைக்கு அப்பால் சில இடங்களில் "அதான்" கூறுவதும் சுன்னத்தாகும். குழந்தையின் காதில், கவலை பிடித்தவரில்; வலிப்பு நோய் பிடித்தவருக்கு; கோபக்காறரின் காதில்; குணம் கெட்டுப் போன மனிதன், அல்லது மிருகத்திற்கு முன்னால்; யுத்த களத்தில் படைக்கு முன்னால்; தீப்பிடித்து எரிகின்ற போது; குழந்தை பிறக்கும் போது அதான் கூறுவதைக் கியாஸ் பிடித்து மைய்யித்தை கப்றுக்குள் இறக்கும் போது;. இந்த( கப்றுக்குள் மையித்தை இறக்கும் வேளை கூறப்படும்) அதானை இமாம் இப்னு ஹஜர் றஹ்மதுல்லாஹி அலைஹி நிராகரிக்கின்றார்கள்; ஜின்னின் தொல்லையின் போது; அல்லாமா இப்னு ஹஜர் அவர்களின் நிராகரிப்புக்கான பதில் இரண்டாவது பாடத்தில் இடம் பெறும் இன்ஷா அல்லாஹ்!

# *அத்தியாயம்: 2*

# *கப்றில் அதான் கூறுவது பற்றிய குற்றச்சாட்டுக்களும், பதில்களும்.*

இந்தப் பிரச்சினையில் மறுப்பாளர்களின் பின்வரும் குற்றச்சாட்டுக்கள் காணப்படுகின்றன. இதுதவிர, வேறு குற்றச்சாட்டுக்கள் இல்லை.

**குற்றச்சாட்டு**: 1

கப்றில் அதான் கூறுவது "பித்அத்" சகல பித்அத்தும் ஹறாம்!, ஆகவே, இதுவும் ஹறாம்!.றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்கள் இதைச் செய்ததாக எந்த ஒரு ஆதாரமும் கிடையாது! இக்குற்றச்சாட்டும் பழைய பல்லவிதான்.!

**பதில்**:

நல்லடக்கத்திற்குப் பின், அல்லாஹ்வை திக்ரு செய்வதும், தஸ்பீஹ், தக்பீர் கூறுவதற்கும் றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களிடமிருந்து நிரூபணமானதை முதல் அத்தியத்தில் குறிப்பிட்டோம்; ஒரு. காரியத்தின் அடிப்படையானது “சுன்னத்” என்று நிரூபணாமானால், அதை அதிகமாகச் செய்வதற்குத் தடைகிடையாது.

புகஹாக்கள் கூறுகின்றார்கள்:

ஹஜ்ஜில் ஹதீதின் மூலம் வந்த தல்பியா வார்த்தைகளில் எதையும் குறைக்கக் கூடாது, கொஞ்சம் அதிகப்படுத்தினால் கூடும்.

*(பார்க்க ஹிதாயா)*

அதானில் தக்பீரும் உண்டு,. அதை விட சற்று அதிகமும் உண்டு; ஆகவே, இது ஹதீதின் மூலம் நிரூபணமாகின்றது. பித்அத்தாக இருந்தால் கூட, நல்ல பித்அத்தாகும;. இது பற்றி “பித்அத் பற்றிய ஆய்வில்” குறிப்பிட்டுள்ளோம்;

பதாவா றஷீதிய்யா பாகம் 1 அத்தியாயம் பித்அத்துக்கள் பக்கம் 89, ல் எழுதுகின்றார்கள்.

தேவ்பந்தின் தானைத் தலைவர் றஷீத் அஹ்மத் கங்கோஹியிடம், சோதனையான கால கட்டத்தில் புகாரி ஷரீப் கத்மு செய்வது இஸ்லாத்தின்

ஆரம்ப மூன்று நூற்றாண்டிலும் இருந்ததற்கான ஆதாரம் இருக்கின்றதா?, இல்லையா? என்று யாரோ ஒருவர் கேள்வி கேட்டார்.

**விடை:**

முதல் மூன்று நூற்றாண்டில் புகாரி ஷரீப் கோர்வை செய்யப்படவில்லையே!. ஆயினும், புகாரி ஷரீபை கத்மு செய்வது சரிதான்.! நல்ல காரியத்தை நினைவு கூர்ந்ததற்குப் பின், கேட்கின்ற துஆ கபூலாகும். இதற்கான அடிப்படை ஆதாரம் ஷரீஅத்தின் மூலம் உறுதிப்பட்டுள்ளது.

.றஷீத் அஹ்மத் இதே நூலில் 88, ம் பக்கத்தில், குறிப்பிட்ட தேதியைக் குறிப்பிட்டு உணவு கொடுப்பது "பித்அத்", தவாபை சேர்த்து வைப்பதாக இரு ந்தாலும் சரிதான். றஷீத் அஹ்மத் இந்த கத்முல் புகாரியும், வருட பாத்திஹா மீதான தவாபும் எதற்காக நடக்கின்றது என்று விளக்கமாகச் சொல்லுங்க ஜனாப்?

**முக்கிய குறிப்பு:**

சோதனைகள் ஏற்படும் போது தேவ்பந்து மதரஸாவில் "கத்முல் புகாரி ஷரீப்" நடக்கின்றது. அதனால், மாணவர்களுக்குப் பணம் சேருகின்றத;. தேவையுள்ளவர்கள் மாணவர்களுக்கு இனிப்புகள் வழங்குகின்றார்கள்;. குறைந்தது 15 ரூபாய் (80 ஆண்டுகளுக்கு முன்) வசூலிக் கின்றார்கள்;. மத்ரஸாவுக்குப் பணம் அவசியம்; ஆகவே, இந்த "பித்அத்" தங்கம். கிடைக்கும் வழி? அதனால் கூடுமோ? ஆனால், ஒரு முஃமினின் கப்றில் "அதான்" கூறுவது ஏன் ஹறாமாகின்றது?

**குற்றச்சாட்டு: 2**

ஷாமியில் அதானுடைய பாடத்தில் அதான் கூறப்பட வேண்டிய இடங்களை கணக்கிட்டுக் கூறப்பட்ட போது, கப்றில் அதான் கூறுவது பற்றியும் குறிப்பிட்ட பின், لكن رده ابن حجر في شرح العباب ஆயினும், இமாம் இப்னு ஹஜர் ஷாபிஈ றஹிமஹுல்லாஹ். அவர்கள் "ஷறஹுல் உபாப்" என்ற நூலில் இதற்கு றத்துக் கொடுத்துள்ளார்கள் என்றும் குறிப்பிட்டுள்ளார்கள்,. ஆகவே, கப்றில் அதான் கூறுவது நிராகரிக்கப்பட்டது என்று இதன்மூலம் தெரிய வருகின்றது.

**பதில்:**

1) முதலில் இமாம் இப்னு ஹஜர் றஹிமஹுல்லாஹ் ஷாபிஈ மத்ஹபைச் சேர்ந்தவர்கள் என்பதைப் புரிந்து கொள்ளுங்கள்! . அதிகமான உலமாக்கள் இதில் அரைவாசிப் பேர் ஹனபிகளும் அடக்கம்.! கப்றில் அதான் கூறுவது சுன்னத் என்றே கூறுகின்றனர,. இமாம் இப்னு ஹஜர் மறுப்புக் கூறி. உள்ளார்கள்தான்.!. ஹனபிகளுக்குரிய மஸ்அலாவில் ஹனபிகளில் பெரும்பான்மை யானவர்களைப் பின்பற்றுவதா? அல்லது ஷாபிஈ மத்ஹபைச் சேர்ந்த. ஒருவரைப் பின்பற்றுவதா? என்பதை கொஞ்சம் சொல்லிக் காட்டுங்கோ ஸாஹிப்!

2) இமாம் இப்னு ஹஜர் றஹ்மதுள்ளாஹி அலைஹி அவர்கள் கப்றில் அதான் கூறுவதைத் தடை செய்ய வில்லை! அது "சுன்னத்" என்று கூறுவதைத்தான் மறுக்கின்றார்கள். அதாவது, இது சுன்னத் இல்லை! என்கின்றார்கள்; நான் கேட்கின்றேன். புகாரி ஷரீபை பதிப்பித்தல் சுன்னத் இல்லை என்பது உண்மைதான்.! காரணம், றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் காலத்தில் புகாரி ஷரீப் இருக்கவில்லை. அச்சகமும் இருக்கவில்லை. அதற்காக இது கூடாது என்பது பொருளாகாது.

ஷாமி றஹ்மதுல்லாஹி அலைஹி இந்த இடத்தில் وقد يسن الاذان அதான். "சுன்னத்" என்றுதான் குறிப்பிடுகின்றார்கள். இதன் பின்பு தான் இதை இப்னு ஹஜர் நிராகரித்திருக்கின்றார் என்று குறிப்பிடுகின்றார்கள்;. அப்படியாயின், மறுப்பு எதற்கானது? சுன்னத்திற்காகும்.! ஷாமி என்ற நூலை விளங்குவதற்கும் புத்தியும், ஈமானும் அவசியம் வேண்டும்.

3) அல்லாமா இப்னு ஹஜர் றஹ்துள்ளாஹி அலைஹி அவர்கள் இதற்கு மறுப்புக் கொடுத் திருக்கின்றார்கள் என்பதை ஏற்றுக் கொண்டார்கள் என்றுதான் வைத்துக் கொள்வோம். எவராவது ஓர் ஆலிமின் நிராகரிப்பால், மக்றூஹ், அல்லது ஹறாம் வந்து விடுமா?, நிச்சயமாக இல்லை. அதற்கான ஷரீஅத் ரீதியான ஆதாரத்தை அவசியம் முன்வைக்க வேண்டும், ஷரீஅத் ரீதியான ஆதாரமின்றி *"மக்றூஹ் தன்ஸீஹை"*க் கூட நிறுவ முடியாது.

ஷாமி என்ற நூலில் “வுழுவின் முஸ்தஹப்புகள்” என்ற பாடத்தில் எழுதுகின்றார்கள்.

ولا يلزم من ترك المستحب ثبوت الكراهة اذ لا بد له من دليل خاص

ஒரு முஸ்தஹப்பை விடுவதால் மக்றூஹ் நிரூபணமாவதில்லை, காரணம், "மக்றூஹ்" என்பதற்கும் குறிப்பான ஆதாரத்தைக் காட்ட வேண்டியது அவசியமாகும்.

ஷாமி பாகம் 1:, "தொழுகையின் மக்றூஹ்" என்ற பாடத்தில், "முஸ்தஹப்பு, சுன்னத்; மன்தூப்;.பற்றிய விளக்கத்தில் பின்வருமாறு எழுதுகின்றார்கள்.

ترك المستحب لا يلزم منه أن يكون مكروها الا بنهي خاص لان الكراهة حكم شرعي فلا بد له من دليل خاص

ஒரு முஸ்தஹப்பைத் தவிர்ப்பதால் குறிப்பான தடையின்றி மக்றூஹாகி விடும் என்பது அவசியமாகாது,. ஏனெனில், மக்றூஹ் என்பதும் ஷரீஅத் ரீதியான ஓர் ஆதாரமாகும். அதற்கும் தக்க ஆதாரம் காட்ட வேண்டியது அவசியமாகும்.

கப்றில் அதான் கூறுவதை நீங்களோ "ஹறாம்": எனகின்றீர்கள்.? ஆனால், புகஹாக்கள் குறிப்பான தடை வராமல் எந்த ஒரு பொருளையும் " மக்றூஹ் தன்ஸீஹ்" என்று கூறுவதைக் கூட ஏற்கமாட்டோம் என்கின்றன;

ஷாமி அவர்கள் கப்றில் அதான் கூறுவதை قيل கூறப்படுகின்றது. என்று கூறியதிலிருந்துதன் விளக்குகின்றார்;قيل என்பது பலவீனத்தின் அடையாளம் என்று கூறப்படுமாயின், அதற்கான பதில் இதோ!

பிக்ஹில் قيل என்பது பலவீனத்திற்குரியது என்பது அவசியமில்லை. .ஷாமியில் நோன்பு பற்றிய பாடத்தில் "கப்பாறா" பற்றிய பிரிவில் வருகின்றது.

فتعبير المصنف بقيل ليس يلزم الضعف

ஒரு நூலாசிரியர் قيل என்று வாசகமிடுவது பலவீனத்தை அவசியப் படுத்தாது.

இவ்வாறே ஷாமியில் மைய்யித்தை அடக்குதல் பற்றிய பாடத்தில், "ஜனாஸாவோடு திக்ரு செய்தல்", என்ற பாடத்தில் கூறுகின்றார்கள்.

قيل تحريما وقيل تنزيها

ஹறாம் என்பதற்கும் قيل எனப்படும். மக்றூஹ் தன்ஸீஹ் என்பதற்கும்

قيل என்று சொல்லப்படும். பாருங்கள்.! இங்கு இரண்டு கூற்றுக்கும் قيل என்று கூறப்படுகின்றது. இரண்டையும் قيل என்று தான் நக்லு செய்கின்றார்கள்.

பதாவா ஆலம்கீரியில் “*வக்பு*“ பற்றிய அத்தியாயத்தில் “*பள்ளிவாசல்*“ என்ற பாடத்தில் எழுதுகின்றார்கள்.

وقيل هو مسجد ابدا وهو الاصح

இங்கு சரியான கூற்றை قيل என்ற கூற்றிலிருந்து விளக்கியிருக்கின்றார்கள். ஆகவே, قيل என்ற சொல் பலவீனமான சொல் இல்லை என்று விளங்கு கின்றது.

கப்றில் அதான் கூறுவது "சுன்னத்" என்பது, பலவீனமான கூற்றுத்தான் என்பதை ஏற்றுக் கொண்டாலும் கூட, அதான் கூறுவது "சுன்னத்" என்பது பலவீனமாகுமே தவிர, ஆகாது என்றாகாது. ஏனெனில், இது "சுன்னத்" என்பது பற்றிய கூற்றுத்தான்.

கப்றில் அதான் கூறுவதை நாங்களும்தான் "சுன்னத்" என்று கூறுவதில்லை "ஆகும்,"(முபாஹ்) "முஸ்தஹப்பு" என்று மட்டும்தான் கூறுகின்றோம். (ஹனபிகளிடத்தில் சுன்னத்திற்கும், முஸ்தஹப்பிற்கும் வேறுபாடுண்டு! ஷாபிகளிடத்தில் இரண்டும் ஒன்றுதான்)

## குற்றச்சாட்டு – 3

கப்றில் அதான் கூறுவது, பாத்திஹா ஓதுவதற்கு அப்பால் கப்றுக்குப் பக்கமாகச் சென்று நின்று கொண்டு பாத்திஹா உள்ளிட்ட எதையும் செய்ய வேண்டாம் என்று புகஹாக்கள் கூறியுள்ளார்கள். ஆகவே, ஹறாமாகும்.

“பஹ்றுர் றஹாயிக்” என்ற நூலில் பின்வருமாறு எழுதுகின்றார்கள்.

ويكره عند القبر كل ما لم يعهد من السنة والمعهود منها ليس الا زيارتها والدعاء عندها قائما

ஷாமியில் ஜனாஸாவுடைய பாடத்தில் பின்வருமாறு வருகின்றது.

لا يسن الاذان عند ادخال الميت في قبره كما هو المعتاد الان وقد صرح ابن حجر بانه بدعة وقال

من ظن انه سنة فلم يصب

இப்போது நடைமுறையில் இருப்பது போன்று மைய்யித்தைக். கப்றில் இறக்கும் போது அதான் கூறுவது சுன்னத் இல்லை. இப்னு ஹஜர் அவர்கள் இது "பித்அத்" என்று மிகத் தெளிவாகவே கூறியுள்ளார்கள். எவராவது ஒருவர்."சுன்னத்" என்று கூறினால், அவர் சரியானதைக் கூறவில்லை.

துர்ருல் பிஹார் என்ற நூலில் பின்வருமாறு வருகின்றது.

من البدع التي شاعت في بلاد الهند الآذان علي القبر بعد الدفن

இந்தியாவில் பரவியிருக்கும் பித்அத்தான கருமங்களில் அடக்கி யதற்குப் பின் கப்றில் அதான் கூறுவதும் ஒன்றாகும்.

ஷைகு ஷறஹு தன்கீஹ் மஹ்மூத் பல்கி றஹ்மதுல்லாஹி அலைஹி கூறுகின்றார்கள்.

الاذان علي القبر ليس بشئ

கப்றில் அதான் கூறுவது ஒரு விஷயமே இல்லை

மௌலவி இஸ்ஹாக் ஸாஹிப் "மித்அத்து மஸாயில்" என்ற நூலில் கூறுகின்றார்கள்.

கப்றில் அதான் கூறுவது " மக்றூஹ்". ஏனெனில், இதற்கு ஆதாரமில்லை. "சுன்னத்" என்று நிறுவப்படாதது "மக்றூஹ்" ஆகும்.

**பதில்:-**

கப்றின் பக்கம் சென்றால், ஸியாறத், மற்றும் துஆவைத் தவிர்த்து வேறு சில காரியங்கள் செய்வது *"மக்றூஹ்"* என்று *"பஹ்றுர் றாயிக்கி"* ல் கூறியிருப்பது முற்றிலும் உண்மைதான்.! அதாவது, ஸியாறத் செய்யும் நோக்கத்தில் அங்கு சென்றால், கப்றை முத்தமிடுவது, கப்றுக்குச் ஸஜதாச் செய்வது உள்ளிட்ட மற்ற ஆகாத காரியங்கள் செய்யக்கூடாது. இங்கு அடக்கும் போது தான் பேச்சே தவிர, ஸியாரத் செய்யும் போதல்ல!,

அடக்குவதும், இதற்குள் அடங்குமாக இருந்தால், மைய்யித்தைக் கப்றில்

இறக்குவது, பலகையைக் கொடுப்பது, மண்ணைப் போடுவது, அடக்கி யதற்குப் பிறகு தல்கீன் ஓதுவது உள்ளிட்ட சகலதும் செய்யக் கூடாது என்பது அவசியம் என்று வரும். பதாவா றஷீதிய்யாவில் ஆகும் என்று சொல்லப்பட்டதற்கும் தடைவரும்.

பஹ்ருர் றாயிக்கின் வாசகத்தின் நோக்கம் இதுதான்,. இல்லையென்றால், மரணித்தவருக்கு ஸலாம் கூறுவது, பூப்போடுவது ஆகும் என்பதில் சகலரும் கருத்தொற்றுமையாக இருக்கின்றார்கள். றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் மூலமும் நிரூபணமாகி இருக்கின்றது .

ஸியாரத், நின்று கொண்டு துஆக் கேட்டல் தவிர்ந்த வேறு காரியங்களைச் செய்யாதீர்கள் என்றுதான் பஹ்ருர் றாயிக் என்ற நூலில் கூறியுள்ளார்கள்.

மௌலவி அஷ்ரப் அலிதானவியிடம் ஷாஹ் வலியுள்ளாஹ் ஸாஹிபவர்கள் கப்றுகள் கஷ்பாகுவதற்கான ஒரு வழியைக் கூறு கின்றார்கள். அது பற்றி ஒரு கேள்வி கேட்கப்பட்டது. அது பின்வருமாறு,

அதன்பின், ஏழு விடுத்தும் கப்றைச் சுற்றவும், அதில் தக்பீரும் கூறவும்; வலது பக்கத்திலிருந்து ஆரம்பிக்கவும்; கால் பகுதியில் தனது குறைகளை முன்வைக்கவும்; அப்படியாயின், கப்றைத் தவாபு செய்வது, ஸஜதாச் செய்வது ஆகுமா? இதற்குரிய பதிலை ஹிப்ழுல் ஈமான் பக்கம் 8,ல் இவ்வாறு கொடுக்கின்றார்.

இது மரியாதை, நெருக்குதல் உள்ளிட்டதற்காகச் செய்யப்படுகின்ற (மார்கரீதியான) பரிபாஷை தவாஃப் அல்ல! இப்படிச் செய்வதற்கு ஷரீஅத்தில் தெளிவான ஆதாரத்தோடு தடையுண்டு;-இது மொழிரீதியான தவாப் طواف ஆகும். அதாவது, கப்றாளியின் றூஹுக்கு பொருத்தமாகி அவரிலிருந்து அருளைப் பெறுவதற்காக அங்குமிங்குமாகச் சுற்றுவதாகும். இதற்கு நிகரான ஒரு சம்பவம் ஹளறத் ஜாபிர் றழியல்லாஹு அன்ஹு அவர்களின் கதையிலும் வருகின்றது.

அவர்களின் தந்தை வபாத்தான போது, கடன்காறர்கள் நெருக்கடியைக் கொடுக்கத் தொடங்கினார்கள்;.அப்போது அவர்கள் றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களைத் தங்களின் பேரீத்தம் பழத் தோப்புக்கு வந்து கண்காணிக்குமாறு வேண்டிக் கொண்டார்கள்: றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு வஸல்லமவர்களும் அங்கே சென்றார்கள்; பேரீத்தப்பழக் குவியல்களில் பெரிய குவியல் பக்கமாக மூன்று விடுத்தும் சுற்றினார்கள்.

طاف حول اعظم بيدرا

றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸ்லமவர்கள் சுற்றியது

தவாபாகாது. அதில் ஒரு தாக்கத்தை ஏற்படுத்துவதற்காக அதன் நாலு பக்கமாகச் சுற்றினார்கள்; இதுபோன்று தான் கபுறுகள் கஷ்பாகுவதற்காகச் செய்யப்படுகின்ற அமலுமாகும்.

ஸியாரத், மற்றும் துஆ தவிர்ந்தவைகள் செய்யக் கூடாது என்பதனால்தான் கப்றில் அதான் கூறுவது தடையென்றால், கப்றைத் தவாபு செய்வது, அங்கு அருளைப் பெறுவது எப்படி ஆகும்? என்பதை சொல்லுங்கள்.! ஆகவே, பஹ்ருர் றாயிக்கின் வெளிப்படையான விஷயம் உங்களுக்கும் கூட பொருந்த மாட்டாதே!.

இதிலுள்ள சுவாரசியமான விஷயம் என்னவென்றால், கப்றிலிருந்து அருள்- உதவி- கிடைக் கின்றது. அருளை-உதவியைப்- பெறுவதற்காக அங்கு செல்வது, தவாபு செய்வது; கப்றில் தனது குறையை முன்வைப்பது ஆகும் என்று ஹிப்ழுல் ஈமானின் வாசகத்திலிருந்து தெரிகின்றத;. அதே நேரத்தில் இதை தக்வியத்துல் ஈமானில் "ஷிர்க்" என்று எழுதப்பட்டுள்ளது. (பிஹிஷ்தி ஜேவரில் " கப்றைத்தவாப் செய்வதை குன்று , ஷிர்க் என்று இதே அஷ்ரப் அலி தாவி கூறுகின்றார்? .)

ஷாமி, தன்கீஹ் உள்ளிட்டவையின் வாசகங்களுக்கான பதில், அது சுன்னத்திற்கான மறுப்பேயன்றி, "ஆகும்" - என்பதற்கான மறுப்பில்லை என்று முதலாம் குற்றச்சாட்டுக்குரிய பதிலில் கூறப்பட்டுள்ளது. ليس بشئ "அது ஒரு விஷயமேயில்லை" என்ற ஷைகவர்களின் கூற்றுக்கான பொருள் ஹறாம் என்பதல்ல!

இது பர்ழு, வாஜிபு; சுன்னத் அல்ல! வெறுமனே "ஆகும்", "முஸ்தஹப்பு " ஆகும் என்பதாகும். இதை "வாஜிப்", அல்லது "சுன்னத்" என்று கருதுவது சுத்தத்தவறாகும்.

இதை "பித்அத்" என்று எவராவது புகஹாக்கள் கூறியிருந்தால், அது "ஆகுமான பித்அத்" , அல்லது "முஸ்தஹப்பான பித்அத்" என்று பொருளாகும். "பித்அத் மக்றூஹ்" அல்ல! காரணமின்றி "மக்றூஹ்" தீர்மானமாகுவதில்லை.

மௌலவி இஸ்ஹாக் ஸாஹிப் என்பவர் தேபந்திகளின் ஷைகாவார்,. அவரின் கூற்று ஆதாரமாகாது;. ஒருவிடயம் *"சுன்னத்"* என்று ஆகாவிட்டால், அது மக்றூஹாகி விடும் என்பதும் சரியில்லாத விதியாகும;- இது சரியென்றால், திருக்குர்ஆனப்- பதிப்பது, திருக்குர்ஆனுக்கு ஒலிக் குறியீடு اعراب வைத்தது, புகாரிஷரீப் பதிப்பது உள்ளிட்ட சகலதும். "சுன்னத்". என்பதற்கு ஆதாரமில்லை. ஆகவே,, இவையாவும் "மக்றூஹ்" என்று வரும்.

துர்ருல் முக்தார் இருபெருநாட்களின் தொழுகை என்ற பாடத்தில் தஷ்ரீக்குடைய நாளில் "தக்பீர் சொல்லுதல்" என்ற தலைப்பில் வருகின்றது.

ووقوف الناس يوم عرفة في غيرها تشبيها بالواقفين ليس بشيئ

அரபாவுடைய நாளில் அதுவல்லாத இடத்தில் மக்கள் தங்குவது, இருக்கின்றவர்களுக்கு சந்தேகத்தை ஏற்படுத்துமாதலால் அதில் ஒன்றும் கிடையாது.;

இதற்கு அடியில் ஷாமியில் எழுதுகின்றார்கள்.

وهو نكرة في موضع النفي فتعم انواع العبارة من فرض و واجب ومستحب فبقيت الاباحة قيل يستحب

மறுப்புக்கான இடத்தில் நடப்பதை குறிப்பில்லாமல் பொதுவாகச் சொல்லப்பட்டிருப்பதால், இபாதத்தின் வகைகளான பர்ளு, வாஜிபு; முஸ்தஹப்பு உள்ளிட்ட சகலதையும் அது பொதுவாக உள்ளடக்கும்; அவை தவிரவுள்ள "ஆகும்" என்பது, "முஸ்தஹப்பு" என்று கூறப்படும்.

ஹிதாயாவின் ஓரக்குறிப்பில் ليس بشيئ என்பதற்கு அடியில் கூறுகின்றார்கள்.

اي ليس بشيئ يتعلق به الثواب وهو يصدق علي الاباحة

அது ஒரு "விஷயமே இல்லை" என்பது, நன்மை கிடைக்கக் கூடியது அல்ல! ஆகவே, அது ஆகும் என்பதை உண்மைப் படுத்தும். இந்த வாசகங்கள் அது "ஒரு விஷயமில்லை" என்பது ஆகும் என்பதற்கும் சொல்லக் கூடிய வார்த்தை என்பது தெளிவாகின்றது .

**குற்றச்சாட்டு-: 4**

"அதான்" என்பது தொழுகையை அறிவிப்பதற்காகக் கூறப்படுவது. அழைப்புக் கொடுப்பதற்கு அடக்கம் செய்யும் போது நடக்கின்ற தொழுகை எது? ஆகவே, , அந்த அதான் வீணானதாகும். ஆகவே, கூடாது.

**பதில்:-**

அதான் தொழுகைக்கு அழைப்புக் கொடுப்பதற்காக மட்டும்தான் என்பது பிழையான கற்பனை! அதான் எத்தனை இடங்களில் கூறப்படுகின்றதன என்ற விளக்கத்தை முதல் அத்தியாயத்தில் குறிப்பிட்டுள்ளோம்,. இறுதியாக குழந்தையின் காதிலும் அதான் கூறப்படுகின்றது,; அங்கு எந்தத் தொழுகை நடக்கின்றது ?

றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் காலத்தில் றமழானில் சுப்ஹுக்கு இரண்டு அதான்கள் சொல்லப்பட்டன. அதில் ஒன்று ஸஹருக்கு எழுப்புவதற்கு; மற்றது பஜ்ருத் தொழுகைக்கு;.

## ஒரு சுவாரசியமான நிகழ்வு!

காட்டியாவாழ் என்ற பகுதியில் சுப்ஹுத் தொழுகைக்குப் பின் "முஸாபஹா"ச் செய்யும் வழக்கமும், உத்திரப்பிரதேசத்தில் பெருநாட்களில் "முஆனக்கா" (ஆலிங்கனம்) செய்யும் வழக்கமும் உண்டு.! "முஆனக்கா", அல்லது "முஸாபஹா" முதலில் சந்திக்கின்ற வேளையில் செய்வதா? தொழுது முடித்து விட்டு மக்கள் சென்று கொண்டிருக்கும் போது செய்வதா? இது ஏன்நடக்கின்றது? இந்த முஸாபஹாவும், முஆனக்காவும் "பித்அத்" ஆகவே ஹறாம் என்று ஒருவர் என்னிடம் கூறினார்.

அவருக்கு நாம் இப்படிப் பதிலளித்தோம்.

முஆனக்காச் செய்வது றஸூலுள்ளாஹி ஸல்லலலாஹு அலைஹி வஸல்லமவரகளின் காலத்தில் நடந்தது என்பதற்கு ஆதாரம் உண்டு! மிஷ்க்காத்தில் “அதப்” என்ற அத்தியாயத்தில் “முஸாபஹா”, “முஆனக்கா” என்று ஒருபாடத்தையே அமைத்திருக்கின்றார்கள்.

அதில் றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்கள் ஹளறத் ஸைது இப்னு ஹாரிதா றழியல்லாஹு அன்ஹு அவர்களிடம் "முஆனக்கா" செய்தார்கள் என்றுள்ளது. இந்த "முஆனக்கா" மகிழ்ச்சிக்குரியது. பெருநாள் தினம் மகிழ்ச்சிக்குரிய நாள் இதனால், மகிழ்ச்சியை வெளிப் படுத்துவதற்காகச் செய்கின்றார்கள் என்பதை ஹதீஸின் பாங்கு கூறுகிறது.

மேலும், துர்ருல் முக்தார் பாகம் 5, மக்றூஹ் என்ற பாடத்தில் எழுது கின்றார்கள்.

اي كما يجوز المصافحة ولو بعد العصر وقولهم انه بدعة اي مباحة حسنة كما افاده النووي في الاذكار

"முஸாபஹா" அஸருக்குப் பின்னாயினும் ஆகுமானதே! புகஹாக்கள் அஸறுக்குப்பின் "முஸாஹா"ச் செய்வதை "பித்அத்" என்று கூறுகின்றார்கள்;. அதாவது, இமாம் நவவி றஹ்மதுல்லாஹி அலைஹி அவர்கள் அல் அத்காருன் நவவியில் குறிப்பிடடிருப்பது போன்று அழகிய ஆகுமான பித்அத்தாகும்.

இதற்கு அடியில் ஷாமியில் எழதுகின்றார்கள்.

اعلم ان الصافحة مستحبة عند كل لقاء واما ما اعتاده الناس من المصافحة بعد صلوة الصبح والعصر علي عادة كانت في زمنه والا فعقب الصلوات كلها كذالك

சகல சந்திப்புக்களிலும் முஸாபஹாச் செய்வது"சுன்னத்" தாகும். சுப்ஹுத் தொழுகைக்குப் பின், முஸாபஹாச் செய்யும் வழக்கமிருக்கின்றது;. இதற்கு ஷரீஅத்தில் எதுவித அடிப்படை ஆதாரமும் இல்லை.; ஆயினும்; இதில் எந்தக் குற்றமும் கிடையாது;. சுப்ஹும், அஸரும் என்று மட்டுப்படுத்தியது மக்களின் வழக்கத்தில் வந்த விடயம்; . இல்லையென்றால், சகல தொழுகைக்குப் பின்பும் இதே சட்டம்தான்.

இதிலிருந்து சகல நிலையிலும் முஸாபஹாச் செய்வது ஆகும் என்று தெரிகின்றது. ஆனாலும் நாம் கூறிய விளக்கம் அவருக்குத் திருப்தியளிக்கவில்லை. முஸாபஹாவும், முஆனக்காவும் முதல் சந்திப்பில் செய்ய வேண்டியவை என்று மீண்டும் மீண்டும் கூறிக்கொண்டேயிருந்தர். முஸாபஹா யாருக்குச் செய்ய வேண்டும் என்பதை முதலில் கூறுங்கள் என்ற நாம் கேட்டோம்.மறைந்த பின் சந்தித்தால் என்றார். இதுதான் முதல் சந்திப்பு என்றார்.;

மறைந்து போவதற்கு இரண்டு முறையிருக்கின்றன,

1) உடல் ரீதியாக மறைவது .

2) மனதால் மறைவது.,

தொழும்போது இமாமும், இமாமைப் பின்பற்றித் தொழுபவரும் ஒரே இடத்தில் இருந்தாலும், மார்க்கத் தீர்ப்பின் பிரகாரம் ஒருவரை விட்டும் மற்றவர் மறைந்துதான் இருக்கின்றார்;. ஒருவருடனும் பேச முடியாது;. ஒருவருக்கும் உதவி செய்ய முடியாது.; இவர்கள் அனைவரும்

உலகத்திலிருந்து மறைந்துதான் இருக்கின்றனர். ;உண்பது, குடிப்பது,;நடப்பது;: சுற்றுவது உள்ளிட்ட உலகியல் செயல்கள் யாவும் ஹறாம்.

மேலும் தொழுகை முஃமினின் "மிஃறாஜ்" என்ற பாடம் அங்கே வருகின்றது, உலகத்தின் ஒட்டு மொத்த தொடர்புகளும் அங்கே துண்டித்துப் போய்விடுகின்றன.;அவன் அல்லாஹ்வின பக்கம் சேர்ந்து விடுகின்றான்.; ஸலாம் கொடுத்த பின்பு தான் மீண்டும் உலகத்திற்குள் வருகின்றான்;. இப்போது உலகத்தின் சகலதும் ஹலாலாகிவிடுகின்றன;. இது நேரம் மறைந்த பின் நிகழக் கூடியதாகும்.; ஆகவே ,முஸாபஹா ஆகும்.

நீங்கள் மன்திக்(தர்க்கம்) மூலம் விளங்கப்படுத்துகின்றீர்கள் என்றார்,. ஷரீஅத் சந்திப்புக்கான நேரம் இல்லை என்கின்றது என்றார்.; "ஷரீஅத்" ஏற்கின்றது என்று நாம் கூறினோம்;. இந்த நேரத்தில் யாருக்கு ஸலாம் கூறுவது? ஏன்சொல்கிறோம்?,

ஸலாம் கூறும் போது மலக்குகளுக்கும், பின்னால் தொழுபவர்களுக்கும் ஸலாம் கூறுவதாக இமாம் நினைக்க வேண்டும்,. இமாமைப் பின்பற்றித் தொழுபவர்கள் இமாமுக்கும், மலக்குகளுக்கும் ஸலாம் கூறுவதாக நினைக்க வேண்டும்;. தனியாகத் தொழுபவர் மலக்குக்கு மட்டும் ஸலாம் கூறுவதாக நினைக்க வேண்டும்;.

ஸலாம் சொல்வது சந்திப்பின் நேரத்திலா? அல்லது ஒன்றிலிருந்து விடுபட்டதற்குப் பிறகா? இந்த ஸலாம் எப்படியானது? சொல்லுங்கள்! என்றேன்.

இந்த மக்கள் எங்கிருந்தோ வருகின்றார்கள்,போகின்றார்கள். போனால் இருக்க மாட்டார்கள்;.ஏனெனில், இப்போது துஆக் கேட்பார்கள்; வழீபா ஓதுவார்கள்;. சிலர் இஷ்றாக் தொழுது விட்டு எழும்பி விடுவார்கள்;. இதனால், உலகமெல்லாம் சுற்றிக் கொண்டுவருகின்றார்கள்;. ஸலாம் கூறுகின்றார்கள்;. இதனால் முஸாபஹாச் செய்கின்றார்கள்.; இதில் என்ன குற்றமிருக்கின்றது.?

அப்படியானால், சகல தொழுகைக்குப் பின்னும் செய்ய வேண்டியது தானே!, என்றார். ஒவ்வொரு தொழுகையிலும் செய்தாலும் தடைவராது! அல்ஹம்துலில்லாஹ்! இப்போது அவருக்கு மனதில் நிம்மதி ஏற்பட்டது.; இவ்வாறுதான் கப்றில் அதான் சொல்லுகின்ற மஸ்அலாவுமாகும்.

இத்துடன் இந்த ஆய்வு நிறைவு பெறுகின்றது. அல்ஹம்துலில்லாஹ்.

இந்த ஆய்வில் இரண்டு அத்தியாயங்கள் உள்ளன, முதல் அத்தியாயத்தில் கந்தூரிக்கான ஆதாரங்களும்; அடுத்த அத்தியாயத்தில் அதற்கான குற்றச் சாட்டுக்களும்; பதில்களும் இடம்பெறும்

# அத்தியாயம்- 1

## கந்தூரிக்கான ஆதாரங்கள்.

(கந்தூரிக்கு அரபியில் “உருஸ்” என்பர்.) உருஸுக்கான அகராதிப் பொருள் திருமணம் ஆகவேதான் மணமகனையும், மணமகளையும் عروس உரூஸ் என்கின்றனர். வலிமார்கள் வபாத்தான தினத்தை "உரூஸ் தினம்" என்பதற்கான காரணம் வருமாறு,

மிஷ்க்காத்தில் “கப்றின் வேதனையயை உறுதிப்படுத்தல்” என்ற தலைப்பில் பின்வரும் ஹதீது இடம் பெறுகின்றது:

மரணித்தவர் முன்கர், நகீரின் விசாரணையில் வெற்றிபெற்றால்,

نم كنومة العروس الذي لا يوقظه الا احب اهله إليه

அவருக்கு விருப்பமானவர் தவிர வேறு எவராலும் எழுப்ப முடியாத விதத்தில் புது மணமகனைப்போன்று உறங்கு! என்று கூறுவார்கள். இத்தினம் முன்கர்; நகீரால் புது மாப்பிள்ளை என்று கூறப்பட்ட நாளாகும்; ஆகவேதான் இந்த நாளை "உரூஸ் நாள்" எனப்படுகின்றது; அல்லது, முன்கர், நகீர் றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களைக் காட்டி இவர்களைப் பற்றி என்ன கூறுகின்றீர்? என்று கேட்பார்கள்.

அப்போது இவர் றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்ல மவர்களின் பேரழகைப் பார்த்த நாள்; அன்னார் படைப்பின் மணமகன்;. உலகத்தின் சகல படைப்பின் உயிர்களும் அன்னாரின் ஒளியிருந்துதான் வந்தன; நபிகள் கோமான்ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் வபாத்தின் தினம்உருஸுக்கான தினம்; ஆகவே, இத்தினத்தை "உரூஸ் தினம்" எனப்படுகின்றது.

அல்லது, எதார்த்தத்தில் உரூஸுக்கான கால அளவு என்பது, வருடாவருடம் அவர் வபாத்தான தினத்தில் மட்டும் அவரைச் ஸியாறத் செய்வதும்; திருக்குர்ஆன் ஓதி, ஸதக்காச் செய்து அதன் தவாபை அவருக்குச் சேர்த்து வைப்பதனால் இப்பெயர் வந்தது;

இவ்வகையான உரூஸ் தினத்திற்குரிய ஆதாரம் ஹதீது, புகஹாக்களின் கூற்றுக்கள் உள்ளிட்டவையில் இருக்கின்றன.

ஷாமி பாகம் 1, ல் "கப்றுகளைத் தரிசித்தல்" என்ற பாடத்தில் பின்வரும் ஹதீது இடம் பெறுகின்றது,

روي عن ابي شيبة ان النبي صلي الله عليه وسلم كان ياتي قبور شهداء باحد علي راس كل حول

ஹளறத் இப்னு ஷைபா றழியல்லாஹு அன்ஹு அறிவிக்கின்றார்கள்.

ஒவ்வொரு வருடமும் உஹது ஷுஹதாக்களின் கப்றுக்கு றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்கள் செல்வார்கள்.

தப்ஸீர் கபீர்,, தப்ஸீர் துர்ருல் மன்தூரில் வருகின்றது.

كان النبي صلي الله عليه وسلم انه كان ياتي قبور الشهداء علي راس كل حول فيقول سلام عليكم بما صبرتم فنعم عقب الدار والخلفاء الاربعة هكذا كانوا يفعلون

றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் ஒவ்வொரு வருடமும் (உஹது) ஷுஹதாக்களின் கப்றுகளைத் தரிசித்து ஸலாம் கூறுவார்கள். நான்கு கலீபாக்களும் இவ்வாறே செய்வார்கள்.

ஷாஹ் அப்துல்அஸீஸ் முஹத்திதுத் திஹ்லவி கத்தஸல்லாஹு ஸிர்ரஹல் அஸீஸ் அவர்கள் தப்ஸீர் அஸீஸிய்யாவில் எழுதுகின்றார்கள்:

அதிகமான மக்கள் திரண்டு கத்முல் குர்ஆன் ஓதி உணவு, மற்றும் இனிப்புகளில் பாத்திஹா ஓதி சமுகமளித் திருப்பவர்களுக்குப் பகிருகின்ற வழக்கம் றஸூலுள்ளாஹி ஸல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் காலத்திலோ, குலபாஉர் றாஷிதீன்களின் காலத்திலோ நடைமுறையில் இருக்க வில்லை. ஆனால், எவராவது அவ்வாறு செய்தால், அதில் தவறில்லை.

உயிருள்ளவர்களிடமிருந்து மரணித்தவர்களுக்கு பிரயோசனம் கிடைக்கின்றது.

ஸுப்தத்துன் நஸாயிக் பீ மஸாயித்தபாயிகி (زبدة النصائح في مسئلة الذبائح ) என்ற நூலில் ஷாஹ் அப்துல் அஸீஸ் கத்தஸல்லாஹு ஸிர்றஹுல் அஸீஸ் அவர்கள் மௌலவி அப்துல் ஹக்கீம் ஸியாரத் கோட் றஹ்மதுல்லாஹி அலைஹி அவர்களுக்கு ஒரு கேள்விக்கு பதில் கூறும் போது கூறுகின்றார்கள்.

இப்படியான குறைகளெல்லாம் மக்களின் நிலைகளைப் பற்றிய அறிவில்லாததனால்தான் வருகின்றன. ஷரீஅத்தில் நிர்ணயிக்கப்பட்ட பர்ழைத்தவிர, மற்றவற்றை "பர்ழு" என்று எந்த ஒரு நபரும் கூறுவதில்லை; ஸாலிஹீன்களின் கப்றுகளிலிருந்து பறக்கத் பெறுவதும்; ஈஸாலுத் தவாபு செய்வதும்; திருக்குர்ஆன் ஓதுவதும்; உணவு மற்றும் இனிப்புகள் மூலம் அவர்களுக்கு உதவி செய்வதும்; உலமாக்களின் இஜ்மாஃவின் படி நல்ல காரியமாகும்;

உருஸுக்கான தினத்தை அவருடைய வபாத்துக்குரிய தினமாக அத்தினத்தை நினைவு படுத்துவதற்காகத்தான் அத்தினத்தை நிர்ணயிக் கின்றனர். அது இல்லையென்றால், எந்தத் தினத்தில் செய்தாலும் நல்லதுதான்.

ஹளறத் அப்துல் குத்தூஸ் கங்கோஹி மக்தூபாத் பக்கம் 282-ல், மௌலானா ஜலாலுத்தீன் என்பவருக்கு எழுதுகின்றார்கள்:

ஷைகுமார்களின் உருஸை ஷைகுமார்களின் தரீக்காவினடிப்படையில் கவ்வாலி, இன்னும்; பரிசுத்தத்தோடு நடைமுறைப்படுத்தவும்.

மௌலவி றஷீத் அஹ்மத் கங்கோஹி, மௌலவி அஷ்ரப் அலி தானவி ஆகிய இருவரின் ஷைகான ஹாஜி இம்தாதுல்லாஹ் ஸாஹிப் தனது “ஹப்த்து மஸ்அலா” என்ற நூலில் "ஆகும்" என்பதை வலியுறுத்திக் கூறுவதோடு தனது செயற்பாட்செயற்பாட்டையும் இவ்வாறு கூறுகின்றார்,

“இந்த விடயத்தில் அடியேனின் செயற்பாடு இதுதான்".

ஒவ்வொரு வருடமும் தன்னுடைய பீர் முர்ஷிதின் முபாறக்கான றூஹின் பெயரில் "ஈஸாலுத் தவாபு" செய்கின்றேன். முதலில் திருக்குர்ஆன் ஓதப்படும். நேரம் இடம் கொடுத்தால், மௌலிது ஓதுவோம்; பின்னர், வருகை தந்தவர்களுக்கு உணவு பரிமாறப்படும்; அதன் தவாபை அவர்களின் றூஹுக்குச் சேர்த்து வைக்கப்படும். மௌலவி றஷீத் அஹ்மத் ஸாஹிப் உருஸின் அடிப்படையை ஆகும் என்கின்றார்.

பதாவா றஷீதிய்யா பாகம் 1, பித்அத்துக்கள் பற்றிய பாடம் பக்கம் 92ல் கூறுகின்றார்.

அதிகமான விடயங்கள் ஆரம்பத்தில் ஆகுமாக இருந்தன. பின்னர், சில நேரத்தில் தடையாகிவிட்டன; உரூஸ், மௌலிது மஜ்லிஸுகளும் இவ்வாறு தான்.

அரபு நாட்டிலுள்ள மக்கள் ஹளறத் ஸெய்யித் அஹ்மத் பதவி றஹ்மதுல்லாஹி அலைஹி அவர்களின் உரூஸை மிகப் பிரமாண்டமாகச் செய்கின்றனர். குறிப்பாக மதீனா ஷரீபிலுள்ள உலமாக்கள் குறிப்பாக ஹளறத் அமீர் ஹம்ஸா றழியல்லாஹு அன்ஹு அவர்களின் உரூஸை செய்கின்றனர்; இவர்களின் மஸார் ஷரீப் உஹது மலையடிவாரத்தில் இருக்கின்றது.

உலகம் முழுவதுமாக வாழ்கின்ற முஸ்லிம்கள் குறிப்பாக மதினா வாசிகள் உரூஸைப் பேணி வருகின்றனர். முஸ்லிம்கள் எதை நல்லதாக நினைத்துச் செய்கின்றார்களோ அது அல்லாஹ்விடத்திலும் நல்லதுதான்.

வலிமார்களின் உரூஷ் ஒரு முக்கியமான விடயம் என்பதை பகுத்தறிவும் கூட ஏற்றுக் கொள்கின்றது.

1) உரூஸ் என்பது கப்றுகளைச் ஸியாரத் செய்வதும், நன்மையான தர்மங்களைக் கூட்டாகச் செய்வதற்குமான ஒன்று; ஸியாறத்துல் குபூரும்; ஸதக்காவும் சுன்னத்தான இரு அமல்கள;. இரண்டு சுன்னத்துக்களும் சேரும் போது எப்படி ஹறாம் வரும்.?

மிஷ்க்காத்தில் "ஸியாறத்துல் குபூர்" என்ற பாடத்தில் வருகிறது. றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் கூறினார்கள்.

ஸியாரத் செய்வதை நாம் தடுத்திருந்தோம். இப்போது ஸியாரத் செய்யுங்ஙள்! இதில் சகலவிதமான ஸியாறத்துல் குபூறுக்கும் அனுமதி உண்டு என்று தெரிகிறது; அது தினசரியோ; வருடத்திலோ; வருடத்திற்குப்பிறகோ; தனியாகவோ; அல்லது கூட்டமாகவோ எப்படியும் செய்வதற்கான அனுமதியுண்டு என்று தெரிகிறது.

கூட்டமாகச் ஸியாரத் செய்வதற்குத் தடை என்று தன்னிச்சையாக மட்டுப்படுத்தல், வருடத்திற்குப் பின் தேதியை நிர்ணயித்து ஸியாரத் செய்வது தடை என்றெல்லாம் கூறுவது அபத்தமாகும்; நாள் குறிப்பிட்டாலும் சரி, குறிப்பிடா விட்டாலும் சரி ஆகும்தான்.

2) தேதி குறிப்பிடுவதால் ஸியாரத் செய்பவர்களுக்கு ஒன்று சேர்வது

இலகுவாக இருக்கும். மக்கள் ஒன்று சேர்ந்து திருக்குர்ஆன் ஓதவும்; திக்ரு செய்யவும்; ஸலவாத்துக்கள் ஓதவும்; இன்னும், இதுவல்லாதவை செய்யவும் முடிகின்றது. ஆகவே, அதிகமான பறக்கத்துக்கள் கிடைக்கின்றன.

3) ஒரு ஷைகின் முரீதீன்கள் இந்த தேதியில் சிரமமில்லாமல் சந்திக்கின்ற வாய்ப்புக் கிடைக்கின்றது. இதில் ஒருவர் மற்றவரின் சுக, துக்கங்களை அறியும் வாய்ப்புக் கிடைக்கின்றது; இதனால் பரஸ்பரம் நட்பு வளர்கிறது.

4) மாணவர்களுக்கு ஷைகைத் தேடிக் கண்டு பிடிப்பதற்கு வசதியா கின்றது. ஏதாவது ஓர் உருஸுக்குச் சென்றால், பல்வேறு இடங்களில் உள்ள ஷைகுமார்கள் ஒன்று சேருகின்றனர்; உலமாக்கள்; ஸூபியாக்களின் கூட்டமே ஒன்று சேருகின்றது அனைவரையும் கண்டு எவரில் விருப்பமுள்ளதோ அவரிடம் "பைஅத்" பெற முடியும்.

இறுதியாக ஹஜ், மற்றும் மதீனா கரீபியன் ஸியாறத்திலும் தேதி குறிப்பிட்ட தால்தான் மேற்கண்டபிரயோசனங்களைப் பெற முடிகின்றது.

தேவ்பந்து பெரியார்களின் கப்றுகளையும்தான் நாம் பார்க்கின்றோம். அவர்களின் கப்றுகளில் எந்த ஒரு பிரகாசத்தையும் காணமுடிவதில்லை;. பாத்திஹாவோ, ஈஸாலுத் தவாபோ; எவராவது ஒருவரிலிருந்து அவர்களுக்கு ஏதும் உதவிகளோ; கிடைப்பதில்லை; நல்ல காரியங்களைச் தடை செய்ததால் வந்த வினைதான் இவை!.

# *அத்தியாயம் – 2*
# *குற்றச்சாட்டுக்களும், பதில்களும்.*

**குற்றச்சாட்டு: 1**

ஒருவர் மரணித்த பின், அவரை “வலி” என்று நம்பி அவருக்கு கந்தூரி எடுக்கின்றீர்கள். அவர் “வலி” தான் என்று உங்களுக்கு எப்படித் தெரியும்.?

முஸ்லிமாக மர்ணித்தாரா? இல்லை மார்க்கமில்லாமல் மரணித்தாரா? என்று எப்படித் தெரியும்? ஆகவே, ஒருவரின் இறுதி முடிவைப் பற்றி எதுவும் சொல்ல முடியாது; இப்படியிருக்க, மரணித்தவருக்கு "விலாயத்" இருப்பதை எப்படி அறிய முடியும்? பெரும் பெரும் ஸாலிஹானவர்களும் கூட காபிராக மரணிக்கின்றனரே!

**பதில்:-**

உயிர்வாழும் போதுள்ள சட்டங்கள் மரணத்தின் பின்பும் தொடரும். உயிருள்ளவரைமுஸ்லிம் என்று விளங்கித்தான் அவருக்கு ஜனாஸாத் தொழுகை ;கபன்; நல்லடக்கம்; அனந்தரப்பங்கீடு உள்ளிட்டவை நடக்கின்றன; வாழும் போது காபிராக இருந்தவருக்கு ஜனாஸாத் தொழுகை இல்லை; கபன், அனந்தரப் பங்கீடுகிடையாது ; ஷரீத்தின் சட்டம் வெளிப்படையை வைத்துத்தான் நடக்கும்;. ஊகங்கள் கவனத்தில் கொள்ளப்படுவதில்லை .

இவ்வாறு உயிரோடு இருக்கும்போது வலியாக இருந்தவர், மரணத்தின் பின்பும் வலிதான்;. வெறும் ஊகத்தினடிப்படையில் சட்டத்தை நடைமுறைப் படுத்துவதாயின், காபிர்களுக்கும் ஜனாஸாத தொழுங்களேன்? சிலநேரம் முஸ்லிமாகி மரணித்திருக்கவும் கூடும் தானே! முஸ்லிம்களுக்கு ஜனாஸாத் தொழுவிக்காமல் நெருப்பிலிட்டு எரிங்களேன்?அவர் முஸ்லிமாக இல்லாமல் காபிராகி மரணிக்கவும் கூடுமல்லவா?

மிஷ்க்காத்தில் ஜனாஸாவின் பாடத்தில் புகாரி, முஸ்லிமின் அறிவிப்பில் "ஜனாஸவோடு நடந்து செல்லல்" என்ற பகுதியில் வருகின்றது.

றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களுக்கு முன்னால் ஒரு ஜனாஸா சென்றது. மக்கள் அவரைப் புகழ்ந்தனர்; வாஜிபாகி விட்டது என்று நபியவர்கள் கூறினார்க;. மற்றுமொரு ஜனாஸாச் சென்றது; மக்கள் அவரை இகழ்ந்தனர்; வாஜிபாகி விட்டது என்றார்கள்; எது வாஜிபானது? என்று ஹளறத் உமர் பாறூக் றழியல்லாஹு அன்ஹு கேட்டார்கள; முந்தியவருக்கு சொர்க்கமும், பிந்தியவருக்கு நரகமும் என்று கூறியபின்,

انتم شهداءالله في الارض

பூமியில் நீங்கள் அல்லாஹ்வின் சாட்சியாளர்கள் என்றார்கள்.

முஸ்லிம் சமுகம் எவரை "வலி" என்று நம்புகின்றார்களோ, அவர் அலலாஹ்விடத்திலும் வலியாகவே இருப்பார் என்பதை இதன் மூலம் புரிகிறது;. அல்லாஹ்விடத்திலிருப்பது மக்களின் வாயால் வெளிப்படுகின்றது.

ஏதாவது ஒரு பொருளை முஸ்லிம்கள் நன்மையானது என்றும், ஹலால் என்றும்; கருதுவது அல்லாஹ்விடத்திலும் நன்மையானதும் ஹலாலனதாக ஆகுவதற்குரிய காரணம், முஸ்லிம்களின் சாட்சியம்தான்.

ما رأه المسلمون حسنا فهو عند الله حسن

"முஸ்லிம்கள் நல்லதாகக் காண்பவை அல்லாஹ்விடத்திலும் நல்லதுதான்". என்ற ஹதீது இதற்கு சான்று பகர்கின்றது.

திருக்குர்ஆன் கூறுகின்றது.

وَكَذَٰلِكَ جَعَلْنَاكُمْ أُمَّةً وَسَطًا لِّتَكُونُوا شُهَدَاءَ عَلَى النَّاسِ

***உங்களை நாம் நீதியாளர்களாக ஆக்கியுள்ளோம். நீங்கள் முஸ்லிம் களுக்கு சாட்சியாளர்களாக இருங்கள்; முஸ்லிம்கள் இந்த உலகத்திலும், மறு உலகத்திலும் சாட்சியாளர்கள்.***

*அல் குர்ஆன்: (02: 143).*

திருக்குர்ஆனின் சத்தியத்திற்கும், றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் றிஸாலத்தின் உண்மைக்கும்; ஹளறத் அப்துல்லாஹ் இப்னு ஸலாம்; மற்றும் ஏனைய பெரியோர்களின் சாட்சியத்தை அல்லாஹுத்தஆலா முன்வைத்துள்ளான்.

وَشَهِدَ شَاهِدٌ مِنْ بَنِي إِسْرَائِيلَ عَلَى مِثْلِهِ

***இஸ்றாயிலின் மக்களில் ஒரு சாட்சியாளர் இதன் மீது சாட்சி கூறி, பிறகு ஈமான் கொண்டுள்ளார்.***

*அல் குர்ஆன்: (46:10).*

ஸாலிஹான முஃமினின் சாட்சியத்தால் *"நுபுவ்வத்"* உறுதிப்படுகிறதென்றால், *"விலாயத்"* இதைவிட ஒருபடிமேல் உறிதியாக முடியும்;. இந்த சாட்சியத்தால், முழுக்குர்ஆனும் உறுதிப்படுத்தப்படும் போது, ஒருமஸ்அலாவை இதை விட ஒருபடி மேலே சென்று உறுதிப்படுத்த முடியாதா?

**முக்கிய குறிப்பு;-**

இந்தக் கேள்வியை மக்காவில் ஹறம் ஷரீபின் ஓர் இமாம் ஒரு சபையில் கூறினார், இதே பதிலை அவருக்குக் கூறினேன். அதற்கு அவர் இது ஸஹாபாக்களுக்குரியது என்றார்; அவர்கள் எதைப்பற்றி சாட்சி கூறு கின்றார்களோ அது அப்படியே நடக்கும்.; அதனால்தான் இங்கு *"நீங்கள்"* என்ற வார்த்தை பிரயோகிக்கப் பட்டிருக்கின்றது; இதில் நமக்கு வாய்ப்பில்லை என்றார்; காரணம், நாம் அப்போது அங்கிருக்கவேயில்லையே என்றார்.

இதே மிஷ்க்காத்தில் இதே இடத்தில் மற்றுமொரு அறிவிப்பில்,

المؤمنون شهداء الله في الارض

முஃமின்கள் பூமியில் அல்லாஹ்வின் சாட்சியாளர்கள். என்றுள்ளது. அதில் "நீங்கள்" என்ற வார்த்தை இல்லை என்றேன்.

திருக்குர்ஆனின் சகல சட்டங்களும் முன்னிலைப்படுத்தியே கூறப் பட்டுள்ளன. திருக்குர்ஆன் இறங்கும் போது நாம் இருக்கவில்ல;. ஆகவே, அத்தனை சட்டங்களிலுலிருந்தும் நாம் நீங்கி விடுகின்றோம்;.இவை யாவும் ஸஹாபாக்களுக்குரியதுதான்.

திருக்குர்ஆன், ஹதீதுகளில் முன்னிலைப்படுத்திக் கூறுவதில் கியாமத்நாள் வரை உள்ள முஸ்லிம்களும் உள்ளடங்குவார்கள். என்றேன;. அல்ஹம்துலில்லாஹ்! இந்தப் பதிலைக் கேட்டதும் இமாமவர்களுக்கு சினம் பொத்துக் கொண்டு வந்ததே தவிர, பதில் வரவில்லை.

**குற்றச்சாட்டு: 2**

لا تتخذوا قبري عيدا

என்னுடைய கப்றை பெருநாளாக்க வேண்டாம் என்று ஹதீஸில் வந்துள்ளது ,இதிலிருந்து கப்றில் மக்கள் ஒன்று கூடுவது, ஒருவரை ஒருவர்

சந்திப்பத. தடை என்று விளங்குகின்றத;. காரணம், பெருநாளின் நோக்கமே ஒருவரை ஒருவர் சந்திப்பது தான்; உரூஸில் கூட்டம் பெருகுவதும், ஒருவரை ஒருவர் சந்திப்பதும் நடக்கின்றது; ஆகவே ஹறாம்.!

**பதில்:-**

பெருநாளின் நோக்கம் மக்கள் ஒன்று சேர்வது, மக்கள் எனது கப்றுக்கு கூட்டமாக வரவேண்டாம;. தனித் தனியாக வாருங்கள் என்பதுதான் ஹதீதுக்கான பொருள் என்றெல்லாம் எங்கேயிருந்து விளங்கினீர்கள்?,

பெருநாளில் மகிழ்ச்சியாயிருப்பார்கள். இடங்களை அழகுபடுத்தி அலங்கரிப்பார்கள்; விளையாட்டுகளும் நடக்கும;. இதுதான் அந்த இடத்தின் நோக்கம்; அதாவது, எமது கப்றின் பக்கம் வருவதாயின், ஒழுக்கத்தோடு வரவேண்டும்; இங்கு வந்து கூச்சல் போடக்கூடாத;. விளையாட்டுக்களை வைத்துக் கொள்ளக் கூடாது.

கப்றில் ஒன்று கூடக்கூடாது என்றிருந்தால், இப்போது மதீனா ஷரீபுக்கு கூட்டம் கூட்டமாகப் போகின்றார்களே!

اللهم ارزقنا زيارته

யாஅல்லாஹ்! அன்னாரின் ஸியாறத்தை எங்களுக்கு நல்குயாக! என்று ஐவேளைத் தொழுகைக்குப் பின்பும் துஆக் கேட்டு ஸலாம் கூறுகின்றார்களே!

ஹாஜி இம்தாதுல்லாஹ் ஸாஹிப் "ஹப்த் மஸ்அலா" வில் "உரூஸ்" பற்றிய விளக்கத்தில் கூறுகின்றார்.

لا تتخذوا قبري عيدا

என்னுடைய கப்றை பெருநாளாக்க வேண்டாம் என்பதன் சரியான கருத்து இதுதான்.!, கப்றில் ஒருவரை ஒருவர் சந்திப்பது, மகிழ்ச்சி; அலங்காரம் உள்ளிட்ட குதூகலம்; ஆரவாரமிக்க கூட்டம் உள்ளிட்டவைக்குத் தடையுண்டு;

ஏதாவது ஒரு கப்றிலும் மக்கள் ஒன்று கூடுவது தடையென்றால், மதீனா

தைய்யிபாவுக்கு மக்கள் கூட்டம் கூட்டமாகப் போவதும் தடை என்று வரும். ஆகவே, இந்தக் கருத்து வீணானது;

உண்மை என்னவென்றால்,கப்றுகளை ஸியாரத் செய்வதற்காக தனியாகவோ, கூட்டமாகவோ எப்படியும் போகலாம். அல்லது ஹதீஸின் பொருள், எமது கப்றுக்கு அடிக்கடி விரைவாக வாருங்கள்.!, பெருநாளைப் போன்று வருடத்திற்கு ஒரு விடுத்தும் வரவேண்டாம்.

**குற்றச்சாட்டு: 3**

பொதுவாக கந்தூரி நாட்களில் ஆண், பெண் கலப்பு நடக்கின்றது. நாட்டியங்களும் அரங்கேறுகின்றன; கவ்வாலிப் பாட்டுக்களும் நிகழ்கின்றன;. பொதுவாக பெரியோர்களின் கந்தூரி என்ற பெயரில் நடப்பதெல்லாம் ஒட்டுமொத்தமான ஹறாம்களாகும்;. ஆகவே, கந்தூரி ஹறாமாகும்.

**பதில்:-**

இதற்கு சுருக்கமான பதில் இதுதான்.

சுன்னத்தான, அல்லது ஆகுமான வேளைகளில் ஹறாமான வஸ்த்துக்கள் கலப்பதால், ஹலால் என்ற அடிப்படைச் சட்டம் ஹறாமாகுவதில்லை. ஹறாம் ஹறாமாகாத்தானிருக்கும். ஹலால் ஹலாலாகத் தானிருக்கும்.

ஷாமியில் ஜனாஸா என்ற அத்தியாயத்தில் "ஸியாறத்துல் குபூர்" என்ற பாடத்தில் பின்வருமாறு எழுதுகின்றார்கள்.

ولا يترك لما يحصل عندها منكرات ومفاسد كاختلاط الرجال بالنساء وغيرها لان القربات لا تترك لمثل ذلك بل علي الانسان فعلها وانكار البدع قلت ويؤيده ما مر من عدم ترك اتباع الجنازة وان كان معها نساء نائحات

ஆண்கள், பெண்கள் கலக்கின்ற ஆகாத காரியங்கள் நடக்கின்றன என்பதற்காக ஸியாறத்துல் குபூரை நிறுத்தக்கூடாது. இப்படியான ஆகாத

வைக்காக சுன்னத்தானவையை விடக்கூடாது. கபுறுகளைச் ஸியாரத் செய்வது கொண்டு இப்படியான பித்அத்துக்களைத் தடுக்க வேண்டியது மனிதர்களுக்குக் கடமையாகும்.

இதற்கு முதல் கூறிய மஸ்அலா இதை ஊர்ஜிதம் செய்கின்றது. அதாவது, ஜனாஸாவோடு ஒப்பாரி வைப்பவர்களும் வருகின்றார்கள் என்பதற்காக ஜனாஸாவோடு செல்வதை நிறுத்தக் கூடாது.

மக்கா வெற்றிக்கு முதல் புனித கஃபத்துள்ளாஹ்வில் சிலைகள் இருந்தன. மேலும், ஸபா, மர்வா மலைகளிலும் சிலைகள் இருந்தன. ஆனால், சிலைகள் இருக்கின்றன என்பதற்காக முஸ்லிம்கள் தவாபு செய்வதையும், உம்றாச் செய்வதையும் நிறுத்த வில்லை; எப்போது முஸ்லிம்களுக்கு அல்லாஹுத்தஆலா ஆற்றலைக் கொடுத்தானோ அப்போது அவை உடைக்கப்பட்டன.

இப்போது கடைத் தெருக்களில், தொடர் ஊதி பயணங்களில், உலகியல் கூட்டங்களில், ஆண்-பெண் கலக்கத்தான் செய்கின்றன. ஹாஜிகள் பயணம் செய்யும் கப்பலிலும், சில வேளை தவாபு செய்யும் போதும் மினா, முஸ்தலிபா உள்ளிட்ட இடங்களிலும் ஆண் பெண் கலக்கத்தான் செய்கின்றன. அதற்காக அடிப்படைக் கடமையை எவரும் விட்டு விடுவதில்லை.

மார்க்கம் தொடர்பான கல்லூரிகளிலும் அதிகமான வேளைகளில் பேணுதல்களில்லாதவை நிகழத்தான் செய்கின்றன. இதற்காக மத்ரஸாவே ஹறாமாகிவிடாது!

கந்தூரியும் இவ்வாறுதான்.!. அங்கே பெண்கள் சென்று அன்னிய ஆண் களோடு கலப்பதும், நடன நாட்டியமாடுவதும் ஹறாம்தான்; ஆனாலும், இதைக் காரணம் காட்டி அஸல்விடயமான *"உரூஸ்"* எப்படி ஹறாமாகும்.? முடிந்தால் அங்கே சென்று ஆகாத காரியங்களை தடுங்கள். மக்களுக்கு விளங்கப்படுத்துங்கள்.

பாருங்கள்.! ஹத்து இப்னு கைஸ் என்ற முனாபிக் யுத்தத்தில் கலந்து கொள்ளவேண்டும் என்று கூற வேணடாம். ரூம், ஷாம் பெண்கள் அழகிகள். அவர்களை நான் கண்டால், அவர்களில் நான் கவரப்படுவேன். ஆகவே,, என்னை குழப்ப வேண்டாம் என்றான். இவன்கூறும் காரணத்தை மறுத்து பின்வரும் திருவசனம் இறங்கியது.

وَمِنْهُم مَّن يَقُولُ ائْذَن لِّي وَلَا تَفْتِنِّي ۚ أَلَا فِي الْفِتْنَةِ سَقَطُوا ۗ وَإِنَّ جَهَنَّمَ لَمُحِيطَةٌ بِالْكَافِرِينَ

*(போருக்கு வராதிருக்க) எனக்கு அனுமதி தருவீராக! என்னை நீர் குழப்பத்திலாக்க வேண்டாம். என்று கூறுபவரும் அவர்களில் (சிலர்) இருக்கின்றனர். அறிந்து கொள்ளுங்கள்.! ( நயவஞ்சகம் என்னும் பெருங்) குழப்பத்தில் அவர்கள் விழுந்து விட்டனர். நிச்சயமாக நரக நெருப்பாகிறது காபீர்களைச் சூழ்ந்து கொள்ளக் கூடியதாகவும் இருக்கின்றது.*

*அல் குர்ஆன்: (9: 49)*

இவர் கூறிய புகலை (காரணத்தை) குப்று என்றும், நரகத்திற்குச் செல்லும் வழி என்றும் அல்லாஹுத்தஆலா கூறியதைக்கவனியுங்கள்!.

*(பார்க்க, தப்ஸீர் றூஹுல் பயான்)*

இதே காரணத்தைத் தான் தேவ்பந்திகளும் ஸியாறம், உரூஸ் உள்ளிட்ட வையைத் தடுப்பதற்கும் கூறுகின்றனர்.

தற்காலத்தில் திருமணத்தில் ஹறாமான பல சடங்குகள் நடக்கின்றன. இதில் ஆபாசமான கருத்துள்ள பாடல்கள் இசைக்கபபடுகின்றன. பாவிகள், சிறுவர்கள் ஒன்று சேருகின்றனர்; பாட்டைக் கேட்டு நடனமாடுகின்றனர். இவை யாவும் ஹறாமேதான்.

எங்காவது சகல நிபந்தனைகளையும் உள்ளடக்கிய *"கவ்வாலி"* பாடுகின்றவர்களும், அதைக் கேட்கின்ற தகுதியுள்ளவவர்களும் இருப் பார்களாயின், கவ்வாலி ஹறாமென்று கூறமுடியாது! பெரும் பெரும் சங்கையான ஸூபிகள் குறிப்பான கவ்வாலியை ஆகும் என்று கூறியுள்ளனர். தகுதியற்றவர்களுக்கு ஹறாமாகும்.

இதற்குரிய அடிப்படை ஆதாரம் பின்னால் வரும் ஹதீதாகும்.

மிஷ்க்காத்தில் கிதாபுல் மனாகிப் என்ற பாடத்தில் *"மனாகிப் உமர்"* என்ற பாடத்தில் வருகின்றது.

றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களுக்கு முன்னால் ஒரு அடிமைப் பெண் தப் அடித்து பாடிக் கொண்டிருந்தாள, அப்போது ஹளறத் ஸித்தீக்குல் அக்பர் றழியல்லாஹு அன்ஹு வந்தார்கள். அவள்பாடிக்கொண்டிருந்தாள் . பின் ஹளறத் உதுமான் ங்னி றழியல்லாஹு அன்ஹு வந்தார்கள்; தொடர்ந்தும் பாடினாள்;. ஹளறத் உமர் றழியல்லாஹு அன்ஹு வந்ததும் தப்பை ஓரமாக்கி தனது ஆடைக்குள் மறைத் வைத்து விட்டு அமைதியாக அமர்ந்து விட்டார்.

உமரே! உம்மைக் கண்டு ஷைத்தான் அஞ்சுகின்றான் என்று றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்கள் கூறினார்கள்.

கேள்வி என்னவென்றால், தப் அடித்து பாடுவது ஷைத்தானின் வேலையா? இல்லையா? ஷைத்தானின் வேலைதான் என்றால், றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்ல மவர்களும், ஹளறத் அபூபக்கர், ஹளறத் உதுமான், றழியல்லாஹு அன்ஹுமா ஆகியோர்களுக்கு ஷைத்தான் அஞ்சவில்லை. இதில் றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்ல மவர்களும், ஹளறத் ஸித்தீக்குல் அக்பர், ஹளறத் உதுமான் ஙனி றழியல்லாஹு அனாஹுமா ஆகியோர் இதில் ஏன் கலந்து கொண்டார்கள்.?

இது ஷைத்தானின் வேலை என்றால், றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களும், கண்ணியமான சஹாபாக்களும் ஏன் கலந்து கொண்டார்கள்.? ஷைத்தானியத்தான வேலை இல்லை என்றால், றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் இந்த கூற்றின் பொருள் யாது?

இதற்கான பதில் வருமாறு,

ஹளறத் உமர் பாறூக் றழியல்லாஹு அன்ஹு வருவதற்கு முதல் ஷைத்தானின் செயலாக இருக்க வில்லை.! ஹளறத் உமர் பாறூக் றழியல்லாஹு அன்ஹு வந்ததும் ஷைத்தானியத்தான செயலாகி விட்டது. அதனால், நிறுத்தப்பட்டது.

இதனால்தான் ஸூபியாக்கள் இதற்கு ஆறு நிபந்தனைகளை கூறு கின்றார்கள்.

1) குறித்த சபையில் தகுதியற்றவர்கள் இருக்கக்கூடாது. இருந்தால், ஷைத்தான் அதில் பங்காளியாவான்.

உதாரணமாக, உண்ணும் சபையில் எவராவது ஒருவர் பிஸ்மில்லாஹ் கூறி ஆரம்பிக்கா விட்டால், ஷைத்தானும் அதில் பங்காளியாவான்.

இதனால், ஹளறத் பாறூக் றழியல்லாஹு அன்ஹு அவர்களின் தகுதி குறைவானது என்பது கருத்தல்ல!, சங்கையான சஹாபாக்களில் ஒவ்வொருவருடைய வழியும் தனித்தனியானது. சிலரிடம் (ஷரீஅத்தைப்) பின்பற்றுவது மிகைத்திருக்கும், சிலரிடம் மஹப்பத்தின் ஈர்ப்பு அதிகமாக இருக்கும். இதனால் அவற்றின் பிரதிபலிப்புக்களும் மாறுபட்டிருக்கும்

எவராவது ஒருவர் கௌது, அல்லது குத்பு பிஸ்மில்லாஹ் கூறாத உணவில்

கலந்து கொண்டால், அப்போதும் ஷைத்தான் அதில் பங்காளியாவான். இதனால், அந்த கௌதுக்கு தாழ்வு ஏற்படாது.

ஷாமி பாகம் 5- “கறாஹத்” என்ற பாடத்தில் எழுதுகின்றார்கள்.

ال اللهو ليست محرمة لعينها بل لقصد منها الا تري أن ضرب تلك الالة بعلتها احل تارة وحرم اخري وفيه دليل لساداتنا الصوفية الذين يقصدون بسماعها أمورا هم اعلم بها فلا يبادر المعترض بالانكار كي لا يحرم بركتهم فانهم السعادة الأخبار

கேளிக்கை விளையாட்டுக் கருவிகள் அது தன்னில் ஹறாமல்ல, அதிலிருந்து கேளிக்கையை நாடும் போதுதான் ஹறாமாகும்; அந்த கருவியை இயக்குவது சில நேரம் ஹலாலாகும்; வேறு சிலவேளை ஹறாமாகும; எங்களின் நாயகர்களாகிய கண்ணியத்திற்குரிய ஸூபியாக்கள் அதைக் கேட்பதன் மூலம் பல கருமங்களை நாடுகின்றார்கள்; அது பற்றி அவர்கள் நன்கு அறிவார்கள்; ஆவர்களின் பறக்கத்திலிருந்து பாக்கியமிழந்து போகாமலிருப்பதற்காக அவர்களை குறைகாண்பவன் அவசரப்பட்டு நிராகரிக்கக்கூடாது; நிச்சயமாக அவர்கள் மகான்களின் நாயகர்கள்..

தப்ஸீர் அஹ்மதி சூறா லுக்மானின் விளக்கத்தில் பின்வருமாறு எழுதுகின்றார்கள்.

وَمِنَ النَّاسِ مَن يَشْتَرِي لَهْوَ الْحَدِيثِ لِيُضِلَّ عَن سَبِيلِ اللَّهِ بِغَيْرِ عِلْمٍ وَيَتَّخِذَهَا هُزُوًا ۚ أُولَٰئِكَ لَهُمْ عَذَابٌ مُّهِينٌ

***மனிதர்களில் சிலர் அறிவின்றி அல்லாஹ்வுடைய பாதையை விட்டும் (மக்களை) வழி கெடச் செய்வதற்காக, வீண்பேச்சை விலைக்கு வாங்கு கின்றனர்; இன்னும், அவற்றை (வேத வசனங்களை)ப் பரிகாசமாக ஆக்கிக் கொள்கின்றனர் அத்தகையோர் இழிவு தரும் வேதனை அவர்களுக்கு உண்டு.***

*அல் குர்ஆன்: (31 : 6)*

என்ற திரு வசனத்தின்விளக்கத்தில் கவ்வாலியைப் பற்றி அதிகமாக உறுதிப் படுத்தியுள்ளார்கள். இறுதியாக, அதற்குத் தகுதியானவர்களுக்கு ஹலால்; தகுதியற்றவர்களுக்கு ஹறாம் என்ற தீர்வையும் குறிப்பிட்டபின்

கூறுகின்றார்கள்.

وبه نأخذ لأنا شهدنا انه نشاءمن قوم كانوا عارفين ومحبين لرسول الله وكانوا معذورين لغلبة الحال ويستكثرون السماع للغناء وكانوا يحسبون ذلك عبادة اعظم وجهادا أكبر فيحل لهم خاصة

ஹாஜி இம்தாதுல்லாஹ் ஸாஹிப் "ஹப்த்து மஸ்அலா" என்ற நூலில் உரூஸ் பற்றிய விளக்கத்தில் கவ்வாலி தொடர்பாக கூறுகின்றார். ஆகும் என்பதற்கான நிபந்தனைகள் யாவும் ஒன்றாகும் போது கூடும் என்பதுதான் நிபுணத்துவமுள்ளவர்களின் கூற்றாகும். இடையில் குறிக்கிடும் தடைகள் அகலும் போது ஆகுமாகும். இல்லையேல் ஆகாது.

மௌலவி றஷீத் அஹ்மத் கங்கோஹி பதாவா றஷீதியாவில் ஹலால் ஹராம் பற்றிய பாடத்தில் பக்கம் 61ல் பின்வருமாறு எழுதுகின்றார்:

நரம்பில்லாத இசைக் கருவிகளைக்கேட்பது ஆகும். பாடகர் குழப்பமான இடத்தில் இல்லையென்றால், பாட்டின் உள்ளடக்கம் ஷரீஅத்திற்கு எதிராக இல்லாதிருந்தால், இசையோடு கேட்பதில் எதுவித குற்றமுமில்லை! சுருக்கமான பேச்சு யாதெனில், தகுதிக்குரியவர்களுக்கு நிபந்தனையுடன் ஆகும். நிபந்தனை யின்றி தகுதியற்றவர்களுக்கு ஹறாம்.

ஷாமி அவர்கள் இதே நூலில் "தறாஹத்" என்ற பாடத்தில் கவ்வாலிக்குரிய நிபந்தனைகள் ஆறு என்று கூறுகின்றார்கள்.

1) சபையில் தாடியில்லாத எந்த ஒரு சிறுவர்களும் இருக்கக்கூடாது

2) தகுதியுள்வர்கள் சபையிலிருக்க வேண்டும். தகுதியற்றவர்கள் சபையில் இருக்க் ககூடாது.

3) கவ்வாலியின் நோக்கம் ஊதியம் பெறுவது என்றில்லாமல் இக்லாஸாக இருக்க வேண்டும்.

4) சாப்பிடுவது, வெறுமனே இரசிப்பது என்ற எண்ணத்தில் மக்கள் ஒன்று கூடக் கூடாது.

5) பரவசம் (ஜத்பு) மிகைக்காமல் எழும்பக் கூடாது.

6) பாடல்கள் ஷரீஅத்திற்கு விரோதமாக இருக்கக்கூடாது. கவ்வாலிக்குத் தகுதியானவர்கள் யாரென்றால், பரவசமான நேரத்தில் வாள் வீசினாலும் புரியாதவரார். ஆவார்.

சில ஸூபியாக்கள் தகுதியானவரைப் பற்றிக் கூறும் போது, ,ஏழு நாட்கள் உணவு கிடைக்காமலிருக்கும் போது ஒருபக்கத்தில் உணவு இருக்கின்றது,

மறுபக்கத்தில் கவ்வாலி நடக்கின்றது என்றால், இவர் ஊணவைத். தவிர்த்து விட்டு கவ்வாலியின் பக்கமே செல்வார்..

மேற்கண்ட நமது விளக்கத்தின் நோக்கம், இப்போது நடைமுறை யிலிருக்கின்ற கவ்வாலிகள் "ஹலால்"! என்பதோ, அல்லது, பாமரர்கள் கவ்வாலி கேட்கலாம் என்பதோ அல்ல! அதிகமான மறுப்பாளர்கள் கவ்வாலியை வைத்தே கண்ணியமிக்க பெரும் பெரும் ஸூபிகளை யெல்லாம் குறை கூறுவதைக் கேட்கின்றோம்.; கவ்வாலியை விபச்சாரத்தைப் போன்றுவஹாபிகள் "ஹறாம்" என்கின்றனர்..

ஆகவேதான், நாம் விளக்கம் கூற வேண்டியேற்பட்டது. நீங்களாகவே கவ்வாலியைக் கேட்க வேண்டாம்;. எங்கெல்லாம் வலிமார்கள் மூலமாக கவ்வாலி நிரூபணமானால், குறையும் கூறவும் வேண்டாம்.; கவ்வாலி என்பது , ஒருவலிக்கான மருந்தாகும்;. எவருக்கு *“வலி“* உண்டோ அவர்தான் மருந்தைக் குடிக்க வேண்டும்;. வலியில்லாதவர் தவிர்க்க வேண்டும்.

ஹளறத் முஜத்தித் அல்பதானி கத்தஸல்லாஹு ஸிர்ரஹூல் அஸீஸ் அவர்கள் கூறுகின்றார்கள்.

இசை கேட்பதை குறை கூறி ஹதீதுகளில் வந்துள்ளன. ஆகவே, இதற்கு மாற்றமாக காஜா அஜ்மீரி, இமாம் கஸ்ஸாலி உள்ளிட்டோரின் கூற்றுக்களை கவனத்தில் கொள்ளக் கூடாது என்று மக்கள் கூறுவதை என் காதால் நானே கேட்டுள்ளேன்;. இவர்கள் அனைவரும் பாஸிக்(பாவி)கள் ஆவார்கள். அல்லாஹ்தாஆலா பாதுகாக்க வேண்டும்; இந்த வார்த்தைகளைப் கேட்டு துக்கம் வந்தது. ஆகவே, சுருக்கமாக இந்தப் பிரச்சினையை எழுதினேன்.

## குற்றச்சாட்டு: 4

ஹறாம் கலப்பதால் ஹலால் ஹறாமாகாது என்ற சூத்திரம் சரியென்றால், தஃஸியா வைக்கின்றவர் (ஷீஆக்)கள்,;சிலை வணக்கத்தில் ஏற்படும் நெரிசல்; கேளிக்கைகள்; சினிமா படமாளிகை; உள்ளிட்ட சகலதும் ஹலாலாகிவிடுமே! அவற்றிலும் கூட ஆகுமானவைகள் கொஞ்சமாவது இருக்கத்தான் செய் கின்றன;. ஆகவே,, அங்கேயும் சென்று இவையெல்லாம் ஹறாமல்ல! அவற்றில் எது ஹறாமோ அதுதான் ஹறாம். எது ஹலாலோ அது ஹலால் என்று கூறுங்கள்.

வலிமாவிருந்தில் எங்காவது நடனம், நாட்டியம் இருக்குமாயின், அந்த உணவு பரிமாறப்படும் சபையில் கலந்து கொள்ளக்கூடாது என்று புகஹாக்கள் கூறுகின்றனர்;. ஆயினும், அந்த விருந்தின் அழைப்பை ஏற்பது சுன்னத் ஆகும்;. ஹறாமான செயல் கலப்பதனால் தான் ஹறாமாகின்றது;.

இவ்வாறுதான் உருஸுமாகும்;. இதுதான் மறுப்பாளர்களின் உச்சமான குற்றச்சாட்டு..

**பதில்:**

இங்கு இரண்டு விடயங்கள் கவனத்தில் கொள்ளப்படல் வேண்டும்.

1) ஹறாமான ஒரு பொருள் ஹலாலில் சேர்வது

.2) ஹறமுக்குள் நுழைவது. எங்காவது ஹறாமன ஒரு செயல் அதன் ஒருபகுதியாக ஆகுமானால், அதுவன்றி அச்செயல் ஆகவே ஆகாது என்றிருந்தால், அதைப் பிரித்தால், அல்லது உடைத்தால் இதன் பெயர் வராது என்றிருந்தால் ஹறாமான செயல் ஹலாலானதையும் ஹறாமாக்கும்.

ஆனால், ஹறாமான செயல் இவ்வாறு ஒரு பகுதியாகி உள்ளுக்குள் நுழையாவிட்டால், சில நேரம் அதில் சேரும். சில நேரம் சேராது என்றால், இதை "கலத்தல்" எனப்படும். இந்த வகையான ஹறாம் அதன் அஸல் நிலையான ஹலாலை ஹறாமாக்காது.

உதாரணமாக, சிறுநீர் ஆடையில் பட்டுவிட்டது. தண்ணீரிலும் பட்டுவிட்டது. துணியில் சிறுநீர் அதன் பகுதியாக வில்லை.! தண்ணியில் அதன் பகுதியாகிவிட்டது என்றால், சட்டத்தில் பாரிய வித்தியாசம் வரும்;. (துணியில் உள்ள நஜீஸ் நீங்கிய பின் சுத்தம். தண்ணியிலுள்ளதைப் பிரிக்க முடியாமல் நீருக்குள் நுழைந்து விட்டதால் ஹறாம்!)

திருமணம், பயணம், சந்தை உள்ளிட்டவையில் ஹறாம் கலக்கின்றது. ஆனாலும் இதன் ஒரு பகுதியாக ஆகுவதில்லை. அது இல்லாமல் திரு மணமே இல்லை என்று சொல்வதில்லை.

தஃஸியாவையை வைப்பவரிடத்தில் வீண்விரயம் உள்ளிட்ட ஆகாத காரியத்துக்கான ஒன்று கூடல் உள்ளிட்டவை அதன் ஒருபகுதியாக உள்ளே நுழைந்துவிட்டது. எந்த ஒரு தஃஸியாக்காறனும் இதை விட்டும் நீங்கியிருப்பதில்லை. அவை இல்லாதிருந்தால் அதை தஃஸியா என்று கூறுவதுமில்லை.

எவராவது ஒருவர் கர்பலாவிலுள்ள ஹளறத் இமாம் ஹுஸைன் றழியல்லாஹு அன்ஹு அவர்களுடைய மக்பறாவின் படத்தைச் செய்து வீட்டில் வைத்திருந்தால், அல்லது அதைச் செய்து நிலத்தில் புதைத்தால் இது ஒரு போதும் ஹறாமாகாது. ஆகுமாகும். ஏனெனில், ஆள் அடையாளமில்லாததின் கோலத்தைச் செய்வது ஆகும். அல்ஹம்துலில்லாஹ்!

உருஸில் நடன நாட்டியம் எதுவும் உள்ளே நுழையவில்லை. அநேகமான உரூஸுகள் இப்படியான ஹறாமானவையை விட்டும் நீங்கியே இருக்கின்றன. அவற்றை உருஸ் என்றுதான் கூறப்படுகின்றன.

ஸர்ஹிந்தில் ஹளறத் முஜத்தித் அல்பதானி றஹ்மதுல்லாஹி அலைஹி அவர்களுடைய உரூஸ் ஷரீப் முற்றிலும் ஹறாமானவையை விட்டும் நீங்கியே இருக்கின்றது.

பொதுவாக மக்கள் ஹளறத் பீவி ஆமினா நாயகி, ஹளறத் ஸெய்யிதுனா அப்துல்லாஹ் நாயகம், ஹளறத் இமாமுல் அஃழம் அபூ ஹனீபா றழியல்லாஹு அன்ஹும் அவர்களின் உரூஸை செய்து வருகின்றனர். அங்கே உபதேசமும், உணவும், இனிப்பும் பரிமாறப்படுகின்றன.

சகல விருந்துக்களையும் ஏற்பது சுன்னதல்ல! பருவமடையாத சிறுவனின் விருந்து, மைய்யித்தின் சடங்கான நடைமுறையிலுள்ள விருந்து, ஹறாம் மட்டும் வருமானமுள்ள வசதிபடைத்த செல்வந்தனின் விருந்து உள்ளிட்டவை ஒப்புக்கொள்வது ஆகாது.

இவாவாறுதான், நாட்டியம் நடனம் உள்ளிட்ட ஆகாதவை வலிமா உணவு பரிமாறும் சபையிலிருக்குமாயின், அந்த விருந்துக்கான அழைப்பை ஏற்பதும் ஆகாது ஸியாறத்துல் குபூர் இதற்கு மாற்றமாகும். அது சுன்னத்தான அமலாகும். அங்கு ஏதும் ஹறாமானவை இருக்குமாயின், இந்த சுன்னத் ஹறாமாகாது.

இது மிகவும் நுட்பமான விளக்கமாகும். இதை கவனத்தில் கொள்வது மிகமிக அவசியமாகும்.

## ஆய்வு-17

# ஸியாறத்திற்கான பயணம்

# ஓர் ஆய்வு!

வலிமார்களுக்கு கந்தூரி கொடுப்பதும், கப்றுகளைச் ஸியாரத் செய்வதற்காகப் பிரயாணம் செய்வதும் ஆகும். தவிர, நன்மையான காரியமுமாகும். தேவ்பந்திகளும், அவர்களல்லாதவர்களும் இதை ஹறாம் என்கின்றனர்.

ஆகவே, இந்த ஆய்வை இரு அத்தியாயங்களாக்கியுள்ளோம்; முதற்அத்தியாயத்தில் அதற்கான ஆதாரங்களும்; இரண்டாம் அத்தியாயத்தில் அது பற்றிய குற்றச்சாட்டுகளும், பதில்களும் இடம் பெறும் இன்ஷாஅல்லாஹ்.!

## அத்தியாயம்- 1

பயணம் செய்வதற்கான சட்டம், அதன் நோக்கத்தைப் பொறுத்திருக் கின்றது. அதாவது, ஹறாமானகாரியத்திற்காகப் பயணம் செய்வது ஹறாம்; ஆகுமான காரியத்திறகு ஹலால்; சுன்னத்தான காரியத்திற்கு சுன்னத்; பர்ளுக்குபர்ளு;

பர்ளான ஹஜ்ஜுக்குப் பயணம் செய்வதும்; சில வேளை ஜிஹாதுக்குச் செல்வதும் பர்ளாகும்; வர்த்தகத்திற்கு பிரயாணம் செய்வது சுன்னத். காரணம், இச்செயல் தன்னிலே சுன்னத்தாகும். முஸ்தபா மாநபி ஸல்லலலாஹுஅலைஹி வஸல்லமவர்களின் றௌழா ஷரீபுக்காகப் பயணம்செயவதும், (ஷாபியாக்களிடத்தில் சுன்னத் முஅக்கதா, ஹனபிகளிடத்தில்) ஸியாரத் செய்வதும் வாஜிபாகும்.

நண்பர்களைச் சந்தித்தல், திருமணம், கத்னாவில் உறவினர்களைச் சந்தித்தல் சிகிச்சைக்காக மருத்துவரைச் சந்திக்கச் செல்லல் ஆகுமானது. காரணம், இவைதன்னிலே ஆகுமானது. திருட்டு, கொள்ளை உள்ளிட்ட வைக்காகப் பயணம் செய்வது ஹறாம். காரணம், இவைதன்னிலே ஹறாம்!, ஆகவே, பயணம்செய்வதற்கான சட்டத்தை அறிய வேண்டுமாயின், அதன் நோக்கத்தின் சட்டத்தை பார்க்க வேண்டும்.

உரூஸ்– கந்தூரி– என்பது, குறிப்பான கப்றை ஸியாரத் செய்வதற்கான பெயர். ஸியாரத் செய்வது சுன்னத். ஆகவே, அதற்காகப் பயணம் செய்வதும் சுன்னத்தாகவே கணிக்கப்படும்

திருக்குர்ஆனில் கணிசமான பிரயாணங்களைப் பற்றிக் குறிப்பிடப்

பட்டுள்ளன.

وَمَنْ يَّخْرُجْ مِنْۢ بَيْتِهٖ مُهَاجِرًا اِلَى اللّٰهِ وَرَسُوْلِهٖ ثُمَّ يُدْرِكْهُ الْمَوْتُ فَقَدْ وَقَعَ اَجْرُهٗ عَلَى اللّٰهِ

***எவரேனும் தம்வீட்டை விட்டு அல்லாஹ்வின் பக்கமும், அவனுடைய ரஸூலின் பக்கமும் ஹிஜ்ரத் செய்து புறப்பட்டு, பின்னர் அவரை மரணம் வந்தடைந்துவிட்டால், அப்பொழுது அவருடைய (நற்)கூலி அல்லாஹ்வின் மீது திட்டமாகக் கடமையாகிவிட்டது.***

*அல் குர்ஆன்: (4:100)*

இதில் ஹிஜ்ரத்திற்கான பயணத்திற்கு ஆதாரமிருக்கின்றது.

لِاِيْلٰفِ قُرَيْشٍ اٖلٰفِهِمْ رِحْلَةَ الشِّتَآءِ وَالصَّيْفِ

***குறைஷியினருக்கு மாரிகாலம், இன்னும் கோடை காலத்தின் பிரயாணத்தில் அவர்களுக்கு ஆர்வத்தை உண்டாக்குவதற்காக (யானைப் படையினரிடமிருந்து அவர்களைக்காத்தான்.)***

*அல் குர்ஆன் (106 :1,2).*

இதில் வர்த்தகத்திற்கான பிரயாணத்திற்கு ஆதாரமிருக்கின்றது.

وَاِذْ قَالَ مُوْسٰى لفته لَآ اَبْرَحُ حَتّٰٓى اَبْلُغَ مَجْمَعَ الْبَحْرَيْنِ اَوْ اَمْضِيَ حُقُبًا

***மூஸாதம்முடைய (ஊழியரான) இளைஞரிடம் "இரு கடல்கள் சந்திக்கும் இடத்தை நான் அடையும் வரை (இப்பயணத்தில்) நான் நீங்காது (போய்க்கொண்டே) இருப்பேன்; அல்லது (அதை அடையும் வரை) நெடுங்காலத்துக்குநான் நடந்து கொண்டே இருப்பேன்" என்றுகூறியநேரத்தை (நபியே! நினைவு கூறுவீராக!).***

*அல் குர்ஆன் (18: 60),*

ஹளறத் மூஸா அலைஹிஸ்ஸலாம் ஹளறத் ஹிழ்று அலைஹிஸ்ஸலாம் அவர்களைச் சந்திப்பதற்காகவும், ஷைகுமார்களைச் சந்திப்பதற்காகவும் பயணம் செய்தததற்குரிய ஆதாரம் கிடைத்துவிட்டது.

اِذْهَبُوْا بِقَمِيْصِىْ هٰذَا فَاَلْقُوْهُ عَلٰى وَجْهِ اَبِىْ يَاْتِ بَصِيْرًا

***என்னுடைய இந்த சட்டையை நீங்கள் கொண்டு போய், என் தந்தையுடைய முகத்தின் மீது போடுங்கள்; பார்வையுள்ளவராய் அவர் ஆகிவிடுவார்.***

*அல் குர்ஆன்: (12: 93)*

இது சிகிச்சைக்காகப் பயணம் செய்வதற்குரிய ஆதாரமாகும்.

فَلَمَّا دَخَلُوْا عَلٰى يُوْسُفَ اٰوٰى اِلَيْهِ اَبَوَيْهِ

***யூஸுபிடம் அவர்கள் (அனைவரும்) வந்த போது, தம்தாய் தந்தையரை (கண்ணியத்துடன் வரவேற்று) தம்பக்கம் அவர் வைத்துக் கொண்டார்.***

*அல் குர்ஆன்: (12: 99)*

இது, மகனுக்காகப் பயணம் செய்வதற்குரிய ஆதாரமாகும்.

ஹளறத் யஃகூப் அலைஹிஸ்ஸலாம் அவர்களின் பிள்ளைகள் தந்தையிடம் இவ்வாறு ஒரு வேண்டுகோள்விடுத்தனர்.

فَاَرْسِلْ مَعَنَآ اَخَانَا نَكْتَلْ وَاِنَّا لَهٗ لَحٰفِظُوْنَ

***எங்களுடன் எங்களுடைய சகோதரரை அனுப்புங்கள்; (அவ்விதம் அனுப்பினால்) நாங்கள் தானியத்தை வாங்கிவருவோம். நிச்சயமாக நாங்கள் அவருக்கு உறுதியாகப் பாதுகாவலர்களாக இருப்போம்.***

*அல் குர்ஆன்: (12: 63).*

உணவைப் பெற்றுக் கொள்வதற்காகப் பயணம் செய்வது நிலைபெற்றுள்ளது.

ஹளறத் மூஸா அலைஹிஸ்ஸலாம் அவர்களுக்கு அல்லாஹுத் தஆலாவிடமிருந்து ஓர் ஆணை இப்படி வந்தது.

اِذْهَبْ اِلٰى فِرْعَوْنَ اِنَّهٗ طَغٰي

***ஃபிர்அவ்னிடம் நீர் செல்வீராக! நிச்சயமாக அவன் வரம்பு மீறி***

*விட்டான்.*

*அல் குர்ஆன்: ( 20: 24).*

மார்கத்தை எத்திவைக்கப் பயணம் செய்வதற்கு ஆதாரம் கிடைத்து விட்டது.

மிஷ்க்காத்தில் கிதாபுல் இல்மு என்ற பாடத்தில் பின்வரும் ஹதீது இடம் பெறுகின்றது.

من خرج لطلب العلم فهو في سبيل الله

எவர் அறிவைத் தேடி புறப்படுகின்றாரோ அவர் அல்லாஹ்வின் பாதையிலிருக்கின்றார்.

மேலும் ஹதீதில் வருகின்றது.

اطلبواالعلم ولوكان بالصين

சீனா சென்றாயினும் சரி அறிவைத் தேடிப் படியுங்கள்.

**பாரசீகக் கவிதை:**

அறிவைத் தேடுவது உமக்கு பர்ளு, அதற்கான பயணமும் அவசியம்;
அறிவைத் தேடி பயணம் செய்வதும் தரிபட்டுவிட்டது.

குலிஸ்த்தானில் வருகிறது.

மரணத்திற்கு முன் உலகைச் சுற்றிப்பார்! சுற்றிப் பார்ப்பதற்கும் ஆதாரம் கிடைத்துள்ளது.

திருக்குர்ஆன்கூறுகின்றது.

قُلْ سِيْرُوْا فِى الْاَرْضِ فَانْظُرُوْا كَيْفَ كَانَ عَاقِبَةُ الْمُجْرِمِيْنَ

***பூமியில் பயணம் செய்யுங்கள்; குற்றவாளி (களானகாபிர்)களின் முடிவு எவ்வாறு ஆனது என்பதையும் கவனியுங்கள் என்று (நபியே! காபிர் களிடம்) கூறுவீராக!***

*அல்குர்ஆன்: (27: 69)*

அல்லாஹ்வின் தண்டனை இறங்கியதைப் பார்த்து, படிப்பினைப் பெறுவதற்காக பயணம் செய்வது ஆகும் என்பதற்கு இது ஆதாரமாகும்.

இதற்கெல்லாம் பயணம் செய்வதற்கு ஆதாரமிருக்குமாயின், வலிமார்களின் கப்றுகளைச் ஸியாரத் செய்வதற்காகப் பயணம் மேற் கொள்வதற்கு ஒருபடி மேலே ஆதாரமிருக்கின்றது.

இவர்கள் ஆத்மீக வைத்தியர்கள். அவர்களின் அருளும் பலவிதங்கள். அவர்களின் ஸியாறங்களுக்கு போய்ச் சேர்ந்ததுமே அல்லாஹ்வின் மகத்துவம் தெரிகிறது.

அல்லாஹ்வுக்குரியவர்கள் மரணத்தின் பின்பும் உலகத்தை ஆண்டு கொண்டிருக்கின்றார்கள். அவர்களிடமிருந்து இபாதத்தில் ஆசை பிறக்கிறது. அவர்களின் கப்றடியில் வேகமாக துஆ கபூலாகின்றது.

ஷாமி பாகம்:1, கப்றுகளைச் ஸியாரத் செய்தல் என்ற பாடத்தில் பதிவாகியுள்ளது.

هل تندب الرحلة لها كما اعتيد من الرحلة الي زيارة خليل الرحمن وزيارة السيدالبدوي لم أر من صرح به من ائمتنا ومنع منه بعض ائْمة الشافعية قياسا علي منع الرحلة بغيرالمسجد الثلث ورده الغزالي بوضوح الفرق

தற்காலத்தில் வழக்கத்திலிருக்கின்ற படி, கலீலுள்ளாஹ் நபி இப்றாஹீம் அலைஹிஸ் ஸலாம் மற்றும், செய்யித் அஹ்மத் பதவி றஹ்மத்துள்ளாஹி அலைஹி உள்ளிட்டோரின் கப்றுகளைச் சியாறத் செய்வதற்காகப் பயணம் செய்வது சுன்னத்தா? என்றால், எங்களுடைய (ஹனபி) இமாம்களில் எவரும் இதைத்தடுத்ததாக தெளிவாக நான் காணவில்லை; மூன்று பள்ளிகளைக் தவிர, வேறு இடங்களுக்குப் பயணம் போகக் கூடாது என்பதை கியாஸ் பிடித்து ஷாபி மத்ஹபைச் சேர்ந்த சில உலமாக்கள் தடைசெய்திருப்பதைப் பார்த்துள்ளேன்; ஆயினும், இமாம் கஸ்ஸாலி றஹ்மத்துள்ளாஹி அலைஹி இரண்டுக்குமான வேறுபாட்டை நன்கு விளக்கி தெளிவுபடுத்தி மறுத்துள்ளார்கள்.

இதே இடத்தில் ஷாமி என்ற நூலில் எழுதுகின்றார்கள்.

وأما ا لاولياء فانهم متفاوتون في القرب الي الله ونفع ا لزائرين بحسب معارفهم واسرارهم

வலிமார்கள் அல்லாஹுத்தஆலாவை நெருங்கியிருப்பதிலும், ஸியாரத் செய்பவர்களுக்கு பிரயோசனம் செய்வதிலும்; அவர்களின் அறிவிலும், அவர்களின் இரகசியங்களிலும்உள்ள தக்க விதத்தில் பலவிதங்கள் உண்டு.

ஷாமியின் முன்னுரையில் இமாமுல் அஃழம் அபூஹனீபா றஹ்மத் துள்ளாஹி அலைஹி அவர்களின் மனாகிபைப் பற்றிக் கூறும் போது இமாம் ஷாபிஈ றஹ்மத்துள்ளாஹி அலைஹி அவர்களைத் தொட்டும் நக்லு செய்து எழுதுகின்றார்கள்.

آني لاتبرك بابي حنيفة واجيئ الي قبره فاذا عرضت لي حاجة صليت ركعتين سألت الله عند قبره فتقضي سريعا

நான் இமாம் அபூஹனீபாவைக் கொண்டு பறக்கத் பெறுகின்றேன், நான் அவர்களின் கப்றுக்குச் செல்வேன்; எனக்கு ஏதும் தேவைகள் ஏற்பட்டால், இரண்டு றக்காஅத் தொழுதுவிட்டு அவர்களின் கப்றுப்பக்கம் சென்று அல்லாஹ்விடத்தில் துஆக் கேட்பேன்; விரைவாக எனது தேவை நிறைவேறும்.

இதிலிருந்து சில விடயங்கள் நிரூபணமாகின்றன. இமாம் ஷாபிஈ றஹ்மத்துள்ளாஹி அலைஹி ஸியாரத் செய்வதற்காகப் பயணம் செய்திருக்கின்றார்கள்; கப்றாளியிடமிருந்து பறக்கத்தைப் பெற்றுள்ளார்கள்; இமாமவர்களின் கப்றடியில் நின்று துஆக் கேட்டுள்ளார்கள்; கப்றாளியின் மூலமாக தேவைகள் நிறைவேறியுள்ளது.

மேலும், றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்ல மவர்களின் புனித றௌழாவைச் ஸியாரத் செய்வதற்காகப் பயணம் செய்வது வாஜிபாகும்.

பதாவா றஷீதிய்யா பாகம் 1 ஹலால், ஹராம் பற்றிய பாடம் பக்கம் 59ல் எழுதுகின்றார்.

வலிமார்களின் கப்றுகளைச் ஸியாரத் செய்வதற்காகப் பயணம் மேற்கொள்வது பற்றி அஹ்லுல் சுன்னத் வல் ஜமாஅத்தாரிடத்தில் பல அபிப்பிராயங்கள் உள்ளன,சிலர் ஆகும் என்கின்றனர்; சிலர் தடுக்கின்றனர்; இருவருமே அஹ்லுல் சுன்னத் வல் ஜமாஅத்தைச் சேர்ந்தவர்கள்தான். ஆகவே, வீண்தர்க்கம் வேண்டியதில்லை.;முகல்லிதுகளாகிய நம்மிடமிருந்து தீர்வைத் தேடுவது சாத்தியமில்லை. (றஷீத்அஹ்மது).

ஸியாறத்திற்காகப் பயணம் செய்வதைத்தடுக்கும் உரிமை இனி தேவ்பந்திகளுக்கும் கிடையாது, காரணம், றஷீத் அஹ்மத் தர்க்கம் செய்வதைத் தடுக்கின்றார்; அதற்கான தீர்வையும் அவர் கூறவில்லை.

பகுத்தறிவும் கப்றைச் ஸியாரத் செய்வதை ஆகும் என்றே கூறுகின்றது, காரணம், ஒரு பிரயாணத்தில் ஹறாம், ஹலால் என்பது அதன் நோக்கத்தைப் பொறுத்தது; என்று ஏலவே குறிப்பிடுள்ளோம்; இந்த பயணத்தின் நோக்கம் ஸியாறதுல் குபூறாகும்; இதற்குத் தடை கிடையாது; ஸியாறத் செய்வதற்குப் ألا فزوروها என்பதில் பொதுவான அனுமதி உண்டு!

அப்படியாயின், பயணம் மேற்கொள்வது ஏன் ஹறாமாகின்றது? மார்க்க ரீதியாகவும், உலகியல் தொழிலுக்காவும் பயணம் செய்வது ஆகுமாக இருக்கின்றது; இந்த பாரபட்சமும் மார்க்க ரீதியானதுதான்; அப்படியிருக்க, ஹறாம் எப்படி வருகின்றது?

# *அத்தியாயம் – 2*
# *குற்றச்சாட்டுக்களும், பதில்களும்.*

**குற்றச்சாட்டு**: 1

மிஷ்க்காத் மஸாஜித் என்ற பாடத்தில் வருகின்றது.

لا تشد الرحال إلا إلى ثلاثة مساجد: المسجد الحرام، ومسجد الأقصى ومسجدي هذا

மூன்று பள்ளிவாசல்கள் தவிர்த்து வேறு எதற்கும் பிரயாணம் செய்யக் கூடாது.

1- மஸ்ஜிதுல் ஹறாம்,

2- பைத்துல் முகத்தஸ் பள்ளிவாசல்,

3- எனது இந்த பள்ளிவாசல்.

இந்த பள்ளிவாசல்கள் தவிர வேறு இடங்களுக்கு பிரயாணம் செய்வது கூடாது என்று இந்த ஹதீஸின் மூலம் தெரிகின்றது. கப்றுகளைச் ஸியாரத் செய்வது இந்த மூன்று பள்ளிகளில் அடங்கவில்லை.

**பதில்:**

இந்த ஹதீஸின் பொருள் இதுதான்,

இந்த மூன்று பள்ளிவாசல்களில் தொழுவதற்கு அதிக நன்மைகள் கிடைக்கும் பைத்துல் ஹறாமில் ஒரு நல்ல காரியத்திற்கான நன்மை ஓர் இலட்சம்.

பைத்துல் முகத்தஸ், மஸ்ஜிதுன் நபவிய்யி உள்ளிட்ட பள்ளிகளில் தொழுதால், 50,000 நன்மைகள் வீதம் கிடைக்கும்; ஆகவே, இந்த பள்ளிவாசல்களுக்கு தூரத்திலிருந்து வருவது பக்தர்களுக்கு ஆகுமாகும்; ஆயினும், இதுவல்லாத வேறு பள்ளிவாசல்களுக்கு நன்மை அதிகம் கிடைக்கும் என்று நம்பிக்கொண்டு பயணம் மேற்கொள்வது வீணானதும், ஆகாததுமாகும்; காரணம், இம்மூன்று பள்ளிவாசல்கள் தவிர்ந்த ஏனைய சகல பள்ளிவாசல்களுக்குமான நன்மைகள் சமனாகும்.

சிலர் டில்லி ஜாமிஆ ஜூம்மா பள்ளிவாசலுக்கு றமழானில் இறுதி ஜூம்மா தொழுவதற்காகப் பயணம் செய்கின்றனர், நன்மை அதிகம் கிடைக்கும் என்ற எண்ணத்தில்தான் அவ்வாறு செல்கின்றனர்; இது வீணானது; ஆகாதது; ஆகவே, நன்மை அதிகம் கிடைக்கும் என்ற எண்ணத்தில் ஏதாவது ஒரு பள்ளிவாசலுக்குச் செல்வது தடை செய்யப்பட்டுள்ளது.

(சிறப்பான மூன்று பள்ளி வாசல்கள் என்பது மஸ்ஜிதுகள் ஹறாம், மஸ்ஜிதுன் நபவி; டில்லி மர்கஸ் என்று அகில் உலக தப்லீக் ஹஸறத் ஜீ மௌலானா சஃதுல்லாஹ் காந்தலவி அண்மையில் கூறினார், இதை தேவ்பந்து முப்தி கடுமையாக விமர்சித்தார்; தவிர,

மேலும்; ஷரீஅத்தின் வரம்பு மீறிய பல கருத்துக்களை அவர் தொடர்ந்து கூறி வந்ததால், அவர் பேரில் குப்று பத்வா தேவ்பந்து மத்ரஸாவால் வழங்கப்பட்டது; இதன் பின் பல பகுதிகளிலும் பாரிய குழப்பங்கள் அவர்களுக்குள்ளே நடந்தன).

மேற்கண்ட ஹதீதுக்கு இவ்வாறு கருத்துரை வழக்காவிட்டால், திருக்குர்ஆனிலிருந்து நாம் முதல் பாடத்தில் எடுத்துக் காட்டிய சகல பயணங்களும் ஹறாமாகிவிடும்.

இப்பொழுது வியாபாரத்திற்காக, கல்விக்காக, உலகியல் மற்றும் தேவைகளுக்காக நூற்றுக் கணக்கான பிரயாணங்கள் செய்கின்றார்கள்; இவையாவும் ஹறாமாகிவிடும்.

மேற்கண்ட ஹதீதுக்கு அஷிஃஅத்துல்லம்ஆத்தில் பின்வருமாறு

விளக்கம் எழுதுகின்றார்கள்.

இங்கு பள்ளிகளுக்குப் பயணம் மேற்கொள்வதுதான் பேச்சு என்று சில அறிஞர்கள் கூறுகின்றனர்;

அதாவது, இந்த மூன்று பள்ளிவாசல்களையும் தவிர, வேற்று பள்ளி வாசல்களுக்குச் செல்வது ஆகாது; பள்ளிவாசல்களுக்கு அப்பால் வேறு இடங்கள் என்பதெல்லாம் இந்த ஹதீதின் நோக்கத்திற்கு அப்பாற்பட்டதாகும்.

மிஷ்க்காத்தின் விரிவுரை மிர்க்காத்தில் இந்த ஹதீதுக்கு அடியில் பின்வரும் விளக்கத்தைப்பதிவு செய்கின்றார்கள்.

في شرح المسلم للنووي قال ابو محمد يحرم شد الرجال الي غير ثلثة وهو غلط وفي الْاحياء ذهب بعض العلماء الي الاستدلا ل علي المنع من الرحلة لزيارة المشاهد وقبور العلماءوالصالحين وما تبين لي ان الْامر ليس كذلك بل الزيارة ماموربها لخبر الْا فزورها انما ورد نهيا عن الشد بغير الثلثة من المسجد لتماثلها، وأما المشاهد فلا تساوي بل بركة زيارتها علي قدر درجاتهم عندالله هل يمنع ذلك القائل عن شد الرجال بقبور الْانبياء كابراهيم وموسي ويحي والمنع من ذلك في غاية الْاحالة والْاولياء في معناهم فال يبعد ان ذلك من اغراض الرحلة كماان الزيارة العلماءفي الحيوة

ஷறஹு முஸ்லிமிலில் வருகின்றது, மூன்று பள்ளிவாசல்கள் தவிரவுள்ள இடங்களுக்குப் பயணம் மேற்கொள்ளக் கூடாது என்று அபூமுஹம்மத் கூறுவது சுத்த தவறாகும் இஹ்யா உலூமுத்தீனில் வருகின்றது.

சில அறிஞர்கள் பறக்கத்திற்குரிய இடங்களுக்கும், உலமாக்களின் கப்று களுக்கும் ஸியாரத் செய்யவதற்காகப் பிரயாணம் செய்வதைத் தடுக்கின்றனர். எனக்கு திட்டவட்டமாக விளங்கினபடிக்கு, இது அவ்வாறல்ல!

الافزورها

ஸியாரத் செய்யுங்கள் என்ற ஹதீதின் படி, ஸியாரத் செய்யுமாறு கட்டளையிடப் பட்டிருக்கின்றது.

மூன்று பள்ளிவாசல்களைத் தவிரவுள்ள ஏனைய பள்ளிவாசல்கள் நன்மையில் சமமானவை என்ற அடிப்படையில்தான் மூன்று பள்ளி வாசல்கள் அல்லாதவைக்காகப் பிரயாணம் செய்ய வேண்டாம் என்று

தடுக்கப்பட்டுள்ளது; பறக்கத்துக்குரிய இடங்கள் சகலதும் சமனானவையல்ல! அல்லாஹ்விடத்தில் அவர்களுக்கு இருக்கின்ற தகுதிகளுக்குத் தக்கவிதத்தில் உள்ளன.

ஹளறத் இப்றாஹீம், ஹளறத் மூஸா, ஹளறத் யஹ்யா அலைஹி முஸ்ஸலாம் அவர்களின் கப்றுகளுக்குப் பிரயாணம் மேற்கொள்வதற்கும் தடையுண்டு என்று எவருக்காவது கூற முடியுமா? இது மிகக் கஷ்டமானதாகும்; வலிமார்களும் நபிமார்களின் சட்டத்திற்குட்பட்டவர்கள்தான்; உயிரோடு இருக்கின்ற உலமாக்களைச் ஸியாரத் செய்வது போன்றுதான் இவர்களையும் ஸியாரத் செய்வதாகும். இவர்களை ஸியாரத் செய்வதற்காகப் பயணம் மேற்கொள்வதில் குறிப்பான வேறு நோக்கங்களும் இருப்பது தூரமாகாது.

**குற்றச்சாட்டு : 2**

அல்லாஹுத்தஆலா சகல இடங்களிலும் இருக்கின்றான். அவனுடைய றஹ்மத்தும் சகல இடங்களிலும் இருக்கின்றது; ஏதாவது ஒன்றைப் பெற்றுக் கொள்வதற்காக வலிமார்களின் கபுறுகளுக்குப் போகப்படுகின்றது. கொடுப்பது றப்புத்தஆலாதான். அவன் சகல இடங்களிலும் இருக்கின்றானே!

**பதில்:**

வலிமார்கள் அல்லாஹ்வின் றஹ்மத்திற்குரிய வாசல்கள், றஹ்மத் வாசல் மூலமாகத்தான் கிடைக்கும்.

தொடரூதி அதன் தண்டவாளத்தில் போய்க் கொண்டிருக்கும். ஆனால், அதனை தரிப்பிடத்தில் தான் பெற்றுக் கொள்ள முடியும். இதுவல்லாத இடத்தில் நின்றால், தொடர் ஊர்தி நம்மைக் கடந்து செல்லுமே தவிர, கிடைக்கமாட்டாது.

இப்போது உலகியல் நோக்கத்திற்காக, அதாவது, வர்த்தகம் உள்ளிட்ட வேறு விடயங்களுக்காவும் எதற்காக பயணம் செய்கின்றார்கள்.?, அல்லாஹுத்தஆலா றாஸிக் இரணமளிப்பவன் ஆயிற்றே! எல்லா இடங்களிலும் இருக்கின்றானே!

மருத்துவரிடம் நோயாளி எதற்காக பயணமாகின்றார்? நோய்களைச் சுகப்படுத்துவது அல்லாஹ்தானே! அவன்தான் சகல இடங்களிலும் இருக்கின்றானே! காற்று வாங்குவதற்கும், இடங்களைச் சுற்றிப்பார்பதற்கும் கஷ்மீர் உள்ளிட்ட மலை நாடுகளுக்கு உல்லாசப் பயணம் மேற்கொள்கின்றீர்களே!

எதற்கு? அங்குள்ள காற்றும், குளிர்ந்த நீரும் உங்களுக்கு உற்சாகத்தைத் தருகிறது; அதுதான் சகல இடங்களிலும் இருக்கின்றதே! வலிமார்களின் இடங்களிலிருந்து வருகின்ற நீரும், காற்றும் ஈமானுக்கு பயன் கொடுக்கின்றன.

ஹளறத் மூஸா அலைஹிஸ்ஸலாம் அவர்களை அல்லாஹுத்தஆலா எதற்காக ஹிழ்று அலைஹிஸ் ஸலாமவர்களிடம் அனுப்பினான்.? சகலதையும் அவர்களுக்கு இங்கேயே கொடுத்திருக்கலாம்தானே!

திருக்குர்ஆனில்

هُنَالِكَ دَعَا زَكَرِيَّا رَبَّهُ

அந்த இடத்தில் ஸக்கரிய்யா அவருடைய றப்பிடத்தில் துஆக் கேட்டார். என்று வருகின்றது. ஹளறத் ஸக்கரிய்யா அலைஹிஸ் ஸலாம் ஹளறத் பீவி மர்யமுக்குப் பக்கத்தில் நின்று கொண்டு குழந்தைக்காக துஆக் கேட்டார்கள். அதாவது, ஒருநபி ஒருவலியின் இடத்திலிருந்து கொண்டு துஆக் கேட்டது துஆ கபூலாகும் என்பதனாலாகும். இதிலிருந்து வலிமார்களின் இடத்திலிருந்து கொண்டு துஆக் கேட்பது அதிகமாக துஆ கபூலாகும் என்பதை விளங்கிக் கொள்கின்றோம்.

## குற்றச்சாட்டு: 3

பைஅத்துர் றிழ்வான் ஒருமரத்திற்குக் கீழால் நடந்தது, மக்கள் அதனை ஸியாறத்திற்குரிய இடமாக்கிக் கொண்டனர்; அதன் காரணமாகவே ஹளறத் உமர் றழியல்லாஹு அன்ஹு அதனை வெட்ட வைத்தார்கள்எனின்; கப்றுகளைச் சியாறத்திற்குரிய இடங்களாக்குவது ஹளறத் உமர் றழியல்லாஹு அன்ஹு அவர்களின் செயலுக்கு மாற்றமாகும்.

## பதில்:

இது தவறு! அந்த மரத்தை ஹளறத் உமர் றழியல்லாஹு அன்ஹு தறிக்கவைக்கவில்லை. பைஅத் நடந்த அசல்மரம் மக்களின் பார்வை யிலிருந்து மறைந்துவிட்டது; மக்கள் ஏமாந்து வேறு ஒரு மரத்தை ஸியாரத் செய்யத் தொடங்கினர்; இந்தத் தவறிலிருந்து பாதுகாப்பதற்காகத் தான் ஹளறத் பாறூக்குல் அஃழம் வேற்று மரத்தை தறிக்கவைத்தார்கள்.

ஹளறத் உமர் றழியல்லாஹு அன்ஹு பறக்கத்திற்குரிய இடங்களை ஸியாரத் செய்வதற்கு ஏதிரானவர்களாயின், றஸூலுல்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் புனித திருமுடி, புனிதசாறம்(கைலி)

நபியவர்களின் ஜோதிமயமான புனித கப்று ஷரீப் உள்ளிட்ட சகலதும் ஸியாறத்துக்குரிய இடங்களாக இருந்தன; அவற்றை எதற்காக அப்படியே விட்டு வைத்தார்கள்?

முஸ்லிம் ஷரீபில் "கிதாபுல் அமாறாத்" என்ற தலைப்பில் "பைஅத்துர் றிழ்வான்" என்ற பாடத்திலும், புகாரி ஷரீப் ஹுதைபிய்யா யுத்தம் என்ற தலைப்பிலும் ஹளறத் இப்னு முஸய்யிப் றழியல்லாஹு அன்ஹு அவர்களின் பின்வரும் அறிவிப்பு இடம் பெற்றுள்ளது.

كان ابي ممن بايع رسول الله صلي الله عليه وسلم عند الشجرة قال فانطقنا في قابل حاجين فخفي علينا مكانها

மற்றுமொரு அறிவிப்பில்,

فلما خرجنا من العام المقبل نسينا ها فلم نقدر عليه

றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களிடம் மரத்திற்குக் கீழால் பைஅத் எடுத்தவர்களுள் எனது தந்தையும் இருந்தார்; அடுத்த வருடம் நாங்கள் ஹஜ்ஜுக்குச் சென்ற போது அந்த மரம் எங்களுக்கு மறைந்துவிட்டது.

புகாரி ஷரீபில், அடுத்த வருடம் நாம் சென்ற போது, அதை மறந்து விட்டோம்; அதை காணமுடியவில்லை; உண்மை தெளிவாக இருக்க ஹளறத் உமர் றழியல்லாஹு அன்ஹு அசல் மரத்தை வெட்டவைத்தார்கள் என்று எதற்காக கூறுகின்றீர்கள்.?

# ஆய்வு-18

# கபனில் எழுதுவது பற்றி ஆய்வு!

# அத்தியாயம்- 1

மார்க்கப் பெரியார்களின் பறக்கததிற்குரிய பொருட்களையும், கஃபாவின் போர்வை; ஸில்ஸிலா; அஃது நாமா உள்ளிட்டவையும்; அல்லது, ஏனைய பறக்கத்திறகுரிய பொருட்களையும் மரணித்தவருடைய கப்றில் வைப்பது அவருக்கு மன்னிப்புக் கிடைப்பதற்கான வஸீலாவாகும்.

அல்லாஹுத்த ஆலா கூறுகின்றான்:

وَابْتَغُوا اِلَيْهِ الْوَسِيلَةَ

***அவனின் பக்கம் வஸீலாத் தேடுங்கள்.***

*அல் குர்ஆன்: (5:35)*

ஹளறத் யூஸுப் நபி அலைஹிஸ்ஸலாம் தனது சகோதரர்களிடம் கூறினார்கள்.

اِذْهَبُوْا بِقَمِيْصِىْ هٰذَا فَاَلْقُوْهُ عَلٰى وَجْهِ اَبِىْ يَاْتِ بَصِيْرًا

***எனது இந்த சட்டையை எனது தந்தையின் முகத்தில் போடுங்கள், பார்வை உள்ளவராகிவிடுவார்.***

பெரியோர்களின் ஆடை, நோய் நிவாரணம் கொடுக்கும் என்பதை இதன் மூலம் தெரிந்து கொள்கின்றோம்.

காரணம், இந்த ஆடை ஹளறத் இப்றாஹீம் அலைஹிஸ்ஸலாம் அக்கினிக் குண்டத்தில் ஹளறத் ஜிப்ரயீல் அலைஹிஸ்ஸலாமவர்களால் அணிவிக்கப்பட்டதாகும்; இதனை நபி யூஸுப் அலைஹிஸ்ஸலாமின் தந்தை வழியாகப் பெற்றுக் கொண்டார்கள்; ஆகவே, மகான்களின் திருநாமம் மரணித்தவரின் அறிவைத் திறந்து பதில்கள் நினைவுக்கு வரவைக்கும் என்று ஆதரவு வைக்க முடியும்.

மிஷ்க்காத்தில் “மைய்யித்தைக் குளிப்பாட்டுதல்” எனும் படத்தில் ஹளறத் உம்மு ஹதிய்யா றழியல்லாஹு அன்ஹா அவர்களின் அறிவிப்பில் வரும் பின்வரும் ஹதீது இடம் பெறுகின்றது.

றஸூலுள்ளஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்ளின் திருமகள் ஸைனப் றழியல்லாஹு அன்ஹா அவர்களைக் குளிப்பாட்டி முடித்த பின், தகவல் கொடுக்குமாறு றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்கள் கூறினார்கள்,

குளிப்பாட்டி முடித்த பின், றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களுக்குத் தகவல் கொடுத்தோம்; தங்களுடைய மேலாடையைக் கொடுத்து கபனுள்ளே உடலுடன் படக்கூடியதாக வைக்குமாறு கூறினார்கள்.

இந்த ஹதீதுக்கு அடியில் மிஷ்க்காத்தின் விரிவுரையான "லம்ஆத்தில்" எழதுகின்றார்கள்.

هذالحديث أصل في التبرك باثر الصلحين ولباسهم كما يفعله بعض مريدي المشائخ من لبس اقمصهم في القبر

ஸாலிஹீன்களின் பொருட்களையும், அவர்களின் ஆடைகளையும் பறக்கத் திற்காக எடுப்பதற்கு, சில ஷைகுமார்களின் முரீதீன்கள் கப்றில் ஷைய் குமார்களின் குர்தாக்களை அணிவிப்பது போல் இந்த ஹதீது மூலாதாரமாக விளங்கின்றது.

இந்த ஹதீதுக்கு அடியில் அஷிஃஃஅத்துல் லம்ஆத்தில் எழுதுகின்றார்கள்.

ஸாலிஹீன்களின் ஆடைகள், அவர்களின் பறக்கத்திற்குரிய பொருட்கள் உள்ளிட்டவையை மரணிப்பதற்கு முன் இருந்தது போன்று; மரணித்த பின்பும் கப்றில் பறக்கத்திற்காக வைப்பது முஸ்தஹப்பு என்று இந்த ஹதீதின் மூலம் தெரிந்து கொள்கின்றோம்.

ஷைகு அப்துல் ஹக் முஹத்திதுத் திஹ்லவி றஹ்மத்துள்ளாஹி அலைஹி தனது "அக்பாறுல் அக்யார்" என்ற நூலில், தனது தந்தை ஸைபுத்தீன் காதிரி கத்தஸல்லாஹு ஸிர்ரஹுல் அஸீஸ் அவர்களைப் பற்றிய வரலாற்றுக் குறிப்பில் மன்னிப்பு வழங்குவது தொடர்பான சில கவிதைகளை, அல்லது வசனங்களை காகிதத்தில் எழுதி தனது கபனில் வைக்குமாறு அவர்களின் வபாத்தின் நேரம் வஸிய்யத் செய்ததாக குறிப்பிட்டுள்ளார்கள்.

ஷாஹ் அப்துல் அஸீஸ் முஹத்திதுத் திஹ்லவி கத்தஸல்லாஹு ஸிர்ரஹுல் அஸீஸ் அவர்கள் தனது பதாவாவில் எழுதுகின்றார்கள்.

கப்றில் (தரீக்கின் ஷைகுமார்கள் பெயர் பட்டியலான) ஸில்ஸிலாவை

வைப்பது பெரியோர்களின் நடைமுறையில் உள்ளது, ஆயினும்; அதற்கு இரண்டு வழிகள் உண்டு.

1- மைய்யித்தின் நெஞ்சில் கபனுக்கு மேலால், அல்லது கீழால் வைப்பது, இதற்கு புகஹாக்கள் மறுப்புத் தெரிவிக்கின்றார்கள்

2- மைய்யித்தின் வலப்பக்கம் சிறிய குழியை ஏற்படுத்தி ஸில்ஸிலாவுக் குரிய காகிதத்தை வைப்பது. (மைய்யித்தின் ஊனம் இதில் படக்கூடாது என்பதுதான் நோக்கம். ஆகவே, பொலிதீனால் கவர் செய்வது நல்லது)

மிஷ்க்காத்தில் மைய்யித்தைக் குளிப்பாட்டுதல் என்ற பாடத்தில் ஹளறத் ஜாபிர் றழியல்லாஹு அன்ஹு அவர்களின் அறிவிப்பில் வருகின்றது.

றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்கள் அப்துல்லாஹ் இப்னு உபை அவர்களை கப்றுக்குள் வைத்த பின் அங்கு வருகை தந்தார்கள், அவரை வெளியே எடுத்து அவரில் தங்களது முபாறக்கான உமிழ் நீரைத் தடவினார்கள். தங்களது முபாறக்கான மேலாடையை அணிவித்தார்கள்.

ஒரு பெண் தன்கையால் நூல் கோர்த்து, துணியை நெய்து; ஆடை செய்து றஸூலுள்ளாஹி ஸல்லலலாஹு அலைஹி வஸல்ல மவர்களுக்கு வழங்கினார்; அப்போது அங்கிருந்த ஒருவர் றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமிடம் அதை தனக்கு வழங்குமாறு கேட்டார்; கேட்பவருக்கு இல்லை என்று கூறும் வழக்கம் இல்லாத றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்கள் அந்த நேரத்தில் ஆடை தேவையாக இடருந்தும் கூட, கேட்டவருக்கு கொடுத்து விட்டார்கள்.

ஸஹாபாக்கள் அவரைக் கடிந்து எதற்காகக் கேட்டீர்கள்? என்று கேட்டதற்கு,

والله ما سالته لالبسها انما سألته لتكون كفني قال سهل فكانت كفنه

அல்லாஹ்வின் மீது ஆணையாக! அணிவதற்காக வாங்க வில்லை, எனது கபனாக இது இருக்க வேண்டும் என்று (ஆசைப்பட்டுத்)தான் கேட்டேன் என்றார்; அதுவே அவர் கபனானது என்று ஹளறத் ஸஹ்லு றழியல்லாஹு அன்ஹு கூறுகின்றார்கள்.

அபூநுஐம் மஃரிபத்துஸ் ஸஹாபாவிலும், தைலமி முஸ்னதுல் பிர்தௌஸிலும் ஸஹீஹான ஸனதோடு அப்துல்லாஹ் இப்னு அப்பாஸ் றழியல்லாஹு

அன்ஹுமா அவர்களின் அறிவிப்புடன் பதிவு செய்கின்றார்கள்.

ஹளறத் அலி இப்னு அபீதாலிப் றழியல்லாஹு அன்ஹு அவர்களின் தாயார் ஹளறத் பாத்திமா பின்து அஸது றழியல்லஹு அன்ஹா அவர்களுக்கு றஸூலுள்ளாஹி ஸல்லலலாஹு அலைஹி வஸல்லம் தங்களுடைய மேலாடையை கபனுக்குக் கொடுத்தார்கள், சிறிது நேரம் கப்றிலும் படுத்தார்கள்; ஸஹாபாக்கள் காரணம் கேட்ட போது,

آني البستها لتلبس من ثياب الجنة واضطجعت معها في قبرها لاخفف عنها ضغضغةالقبر

அவர்களுக்கு சொர்க்கத்தின் ஆடை கிடைக்க வேண்டும் என்பதற்காக ஆடை அணிவித்தேன், அவர்களுக்கு கப்றின் நெருக்கடி வராதிருக்க கப்றில் படுத்தேன் என்றார்கள்.

ஹளறத் இப்னு அப்துல் பர்ரு "அல் இஸ்தீஆப் பீ மஃரிபத்திஸ் ஸஹாபா" என்ற நூலில் கூறுகின்றார்கள்.

ஹளரத் முஆவியா றழியல்லாஹு அன்ஹு வபாத் தாக்குவதற்கு சற்று முன், பின்வருமாறு வஸிய்யத் செய்தார்கள்.

எனக்கு றஸூலுளளாஹி ஸல்லலலாஹு அலைஹி வஸல்லமவர்கள் ஒரு மேலாடையை தந்தருளினார்கள், இதை எனது கபனுக்காகவே இத்தனை நாளாக பாதுகாத்து வைத்திருந்தேன்; ஆகவே, இப்புனிதமான மேலாடையை எனது கபனுக்குக் கீழால் வைய்யுங்கள்.

وخذ ذلك الشعر ، والاظفار فاجعله في فمي وعلي عيني ومواضع السجود مني

முபாறக்கான இந்த திருமுடிகளையும், நகங்களையும் எனது வாயிலும்; எனது கண்களிலும்; எனது ஸஜூது செய்யக்கூடிய உறுப்புக்களிலும் வைக்கவும்.

ஹளறத் ஹாக்கீம் முஸ்தத்றக்கில் ஹளறத் ஹமீது இப்னு அப்துர் ரஹ்மான் றவாஸி மூலம் நக்லு செய்கின்றார்கள்.

றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்கள் பாவித்த மீதி கஸ்த்தூரி கொஞ்சம் ஹளறத் அலி இப்னு அபீதாலிப் றழியல்லாஹு அன்ஹு அவர்களிடமிருந்தது; அதனை தனக்கு கபனில் மணம் பூசுமாறு வஸிய்யத் செய்தார்கள். இவை தவிர்ந்த பல ஆதாரங்களை முன்வைக்க முடியும், இத்தோடு சுருக்கிக் கொள்கின்றோம்; மேலதிக ஆதாரங்கள் தேவைப்படுவோர் அஃலா ஹளறத் அஹ்மத் ரிழாகான் றழியலலாஹு அன்ஹு அவர்களின் الحرف الحسن என்ற நூலைப் பார்க்கவும்.

மைய்யித்தின் நெற்றியில் அல்லது கபனில் கலிமாத் தைய்யிபாவை எழுதுவதும், இவ்வாறு அஃது நாமா عهد نامه வை எழுதி வைப்பதும் ஆகுமானதே; அதை விரலால் எழுதினாலும் சரி, வேறு எதனால் எழுதினாலும் சரிதான் ஆகும்.

இமாம் ஹகீம் திர்மிதி "நவாதிறுல் உஸூல்" என்ற நூலில் றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்கள் கூறியதாக பின்வருமாறு அறிவிக்கின்றார்கள்.

றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்கள் கூறினார்கள்.

من كتب هذا ا لدعاءوجعله بين صدر الميت وكفنه في رقعة لم ينله عذاب القبر ولا يري منكرا او نكيرا

எவராவது ஒருவர் இந்தத் துஆவை எழுதி மைய்யித்தின் நெஞ்சில், அல்லது கபனுக்கு மத்தியில் ஏதாவது ஒரு காகிதத்தில் எழுதி வைத்தால், அதற்கு கப்றின் வேதனை இருக்காது; முன்கரும், நகீரும் பார்க்க மாட்டார்கள்.

பதாவா குப்றாவில் இமாம் இப்னு ஹஜர் மக்கி றஹ்மத்துள்ளாஹி அலைஹி இந்த ஹதீதை நக்லு செய்த பின், கூறுகின்றார்கள்.

ان هذا الدعاء اصل وان الفقيه ابن عجيل كان يأمرهم ثم افتي بجواز كتابته قياسا علي كتابة الله في نعم الزكوة

இந்த (அஃது நாமா) துஆவுக்கு ஓர் அடிப்படை ஆதாரம் இருக்கின்றது, பகீர் இப்னு அஜீல் என்பவர்கள் இதை எழுதுவது ஆகும் என்று பத்வாக் கொடுத்து இதை வைப்பதற்கு கட்டளையுமிட்டார்கள்.

இதைக் கியாஸ் பிடித்து ஸக்காத்திற்குரிய ஒட்டகத்தில் “அல்லாஹ்” என்று எழுதப்படுகின்றது. துஆ இதுதான்.

لا اله الا الله والله اكبر، لا اله الا الله وحده لا شريك له لا اله الا الله له الملك وله الحمد لا اله الا الله ولا حول ولا قوة الا باالله العلي العظيم

இமாம் அஃலா ஹளறத் அவர்கள் حرف الحسن என்ற நூலில் இமாம் ஹகீம் திர்மிதி றஹ்மத்துள்ளாஹி அலைஹி அவர்கள் ஹளறத் அபூபக்கர்

சித்தீக் றழியல்லாஹு அன்ஹு அவர்கள் மூலமாக பின்வருமாறு றிவாயத் செய்துள்ளதாக எழுதியுள்ளார்கள்.

எவராவது அஃது நாமாவை ஓதினால், மலக்குள் அதற்கு முத்திரை பதித்து கியாமத் நாளுக்காக வைத்துக் கொள்வார்கள், அடியான் கப்றிலிருந்து எழுப்பும் போது அதை எடுத்து வந்து அஃது நாமாவுக்குரியவர் எங்கே? என்று அழைப்பார்கள்; அவருக்கு அந்த அஃது நாமா வழங்கப்படும்.

இமாம் திர்மிதி றஹ்மத்துள்ளாஹி அலைஹி கூறுகின்றார்கள்.

وعن طاؤس انه أمر بهذه الكلمات فكتب في كفنه

ஹளறத் தாவூஸ் றழியல்லாஹு அன்ஹு அவர்கள் மூலமாக அறிவிக்கப் படுகின்றது, கபனில் இதை எழுதுமாறு அவர்கள் கட்டளையிட்டார்கள்.

*ஆதாரம்: அல்ஹர்புல் ஹஸன்.*

இமாம் குர்துபி றஹ்மதுள்ளாஹி அலைஹி கூறுகின்றார்கள்.

ذكر الأمام الصفار لو كتب علي جبهة الميت أو علي عمامته او كفنه عهد نامه يرجي أن يغفر الله تعالي للميت ويجعله امنا من عذاب القبر

இமாம் ஸப்பார் றஹ்மத்துள்ளாஹி அலைஹி கூறுகின்றார்கள்.

மைய்யித்தின் நெற்றியில், அல்லது தலைப்பாகையில்; அல்லது கபனில் "அஃது நாமாவை" எழுதினால், அவரின் குற்றங்களை அல்லாஹுத்தஆலா மன்னிப்பான் என்று ஆதரவு வைக்கப்படும்.

துர்ருல் முக்தாரில் இதே இடத்தில் பின்வரும் ஒரு சம்பவம் பதிவு செய்யப்பட்டுள்ளது.

தனது நெஞ்சில், அல்லது நெற்றியில் "□□□ □□□□□□ □□□□□□ □□□□" என்று எழுதுமாறு யாரோ ஒருவர் வஸிய்யத் செய்தார், அவ்வாறே அவர் மரணித்த பின்செய்தனர்; பின்னர், ஒருவர் அவரைக் கனவில் கண்டு உமக்கு என்ன நடந்தது? என்று கேட்டார்; அதாபுக்குரிய மலக்குகள் வந்தார்கள்; "பிஸ்மில்லா ஹிர் ரஹ்மானிற் றஹீம்" என்று எழுதியிருந்ததைப் பார்த்துவிட்டு நரக வேதனையிலிருந்து தப்பிக்கொண்டாய் ! என்று கூறினார்கள்.

பதாவா பஸாஸியாவில் "கிதாபுல் ஜினாயாத்" என்ற பாடத்திற்கு சற்று மேலே எழுதுகின்றார்கள்.

وذكر الأمام الصفار لو كتب علي جبهته الميت أو علي عمامته او كفنه عهد نامه يرجي أن يغفر الله للميت ويجعله امنا من عذاب القبر قال نصير هذه روية في تجويز ذلك وقد روي انه كان مكتوبا علي افخاذ افراس في اصطبل الفاروق حبس في سبيل الله

மையயித்தின் நெற்றியில், அல்லது தலைப்பாகையில்; அல்லது கபனில்; "அஃது நமாவை" எழுதினால், அவரின் குற்றங்கள் மன்னிக்கப்பட்டு, அவருடைய கப்று வேதனையிலிருந்து பாதுகாக்கப்படுவார் என்று நம்பிக்கை வைக்கமுடியும்

இமாம் நஸீரி கூறுகின்றார்கள்.

இந்த அறிவிப்பிலிருந்து இதை எழுதுவது ஆகும் என்று தெரிகிறது. மேலும் அறிவிக்கப்படுகின்றது. ஹளறத் உமர் பாறூக் றழியல்லாஹு அன்ஹு குதிரைகளின் தொடைகளில் حبي في سبيل الله என்று எழுதினார்கள்.

இதைத்தவிர, இன்னும் ஏராளமான பகீஹ்களின் கூற்றுக்களை முன்வைக்க முடியும்; ஆயினும், இத்தோடு நிறுத்திக் கொள்கின்றோம். மேலதிக ஆதாரங்களுக்கு الحرف الحسن என்ற நூலைப் பார்க்கவும்.

கப்றில் عهد نامه அஃது நாமாவையோ, அல்லது அதுவல்லாததையோ வைப்பதோ; அல்லது எழுதுவதோ பல வழிகளில் ஆகுமானதுதான் என்று தான் பகுத்தறிவும் கூறுகின்றது.

1- கப்றுக்கு மேலால் இருக்கின்ற பசுமையானவை, இன்னும் புஷ்பங்கள் தஸ்பீஹ் செய்வதால் மையயித்திற்கு பயன் கொடுக்குமாயின், கப்றுக்கு உள்ளே எழுதப்பட்ட தஸ்பீஹ் உள்ளிட்ட ஏனையவையால் ஏன் பயன் போய் சேராது..?

2- கப்றுக்கு வெளியே மையயித்திற்கு *"தல்கீன்"* சொல்லிக் கொடுக்குமாறு கட்டளையிடப்பட்டுள்ளது, அல்லாஹ்வின் திருநாமம் மையயித்தின் காதுக்கும் போய் சேரும்போது அங்குள்ள சோதனையிலிருந்து விமோசனம் கிடைக்குமாயின், எழுதப்பட்ட வையைப் பார்த்து முன்கர், நகீரின் கேள்விக்கான விடையை நினைவு படுத்திக் கொள்வதற்கும் வாய்ப்புள்ளது;

ஒரு வகையில் இதுவும் கூட தல்கீனின் ஒரு வகைதான்.

ஹதீது ஷரீபில் வருகின்ற لقنوا موتاكم உங்களுடைய மௌத்தானவர்களுக்கு *"தல்கீன்"* சொல்லிக் கொடுங்கள் என்பது பொதுவானது, எந்த வகையென்றாலும் சரிதான்; எழுதினாலும் சரி, வாயால் சொல்லிக் கொடுத்தாலும் சரி!

3- அல்லாஹ்வின் சொந்த நல்லடியார்களின் நாமங்களின் பறக்கத்தினால் முஸீபத்துக்கள் அகலுகின்றன, பற்றி எரியும் நெருப்பு அணைகிறது; படபடக்கும் இதயம் அமைதியடைகின்றது;

அல்லாஹுத்தஆலா கூறுகின்றான்.

اَلَا بِذِكْرِ اللّٰهِ تَطْمَئِنُ الْقُلُوْبُ

***அல்லாஹ்வின் திக்றினால் மனம் அமைதியடைகின்றது.***

*அல்குர்ஆன்: (13:28).*

தப்ஸீர் நைஸாபூரி, றூஹுல் பயான் உள்ளிட்டவையில்.

ما يعلمهم الا قليل

என்ற திருவசனத்திற்கு அடியிலும், தப்ஸீர் ஸாவியில் இதே ஆயத்தின் விளக்கத்திலும் பின்வருமாறு எழுதுகின்றார்கள்.

அஸ்ஹாபுல் கஃபு வாசிகளின் திருநாமங்கள் பின் வரும் இடங்களில் பயன் கொடுக்கும்.

3- நெருப்பு எரிந்து கொண்டிருக்கும் போது ஒரு காகிதத்தில் எழுதி தீயில் போட்டால் தீ அணையும்.

4- குழந்தைகள் அழும்போது எழுதி தலைக்குத் கீழால் வைக்க வேண்டும்.

5- ஒரு தாளில் எழுதி ஒரு கம்பில் கட்டி வயலின் நடுவில் நட்டி வைக்கவும்.

6- காய்ச்சலுக்கு.

7, தலைவலிக்கு எழுதிக் கட்டவும்.

8- நீதிபதிக்கு முன் செல்லும் போது ஒரு காகிதத்தில் எழுதி வலது கால் தொடையில் கட்டிக் கொண்டு செல்லவும்.

9- பிள்ளை பெறுவது கஷ்டமாக இருந்தால், ஒரு காகிதத்தில் எழுதி

இடது கால் தொடையில் கட்டவும்.

10- பாதுகாப்புக்காக

11- நதியில் பயணம் செய்யும் போது,

12- கொலையிலிருந்து பாதுகாப்புப் பெறுவதற்காக,

*(ஆதாரம்: ஹர்புல்ஹஸன், தப்ஸீர் கஸாயினுல் இர்ஃபான். ஷமல்)*

அஸ்ஹாபுல் கஃபு என்பவர்கள் ஏழு நபர்கள் என்று ஹளறத் அப்துல்லாஹ் இப்னு அப்பாஸ் றழியல்லாஹு அன்ஹுமா கூறுகின்றார்கள். அவர்கள் வருமாறு,

يمليخا, مكشيلينا ، مشلينا مرنوش وبرنوش شاذر نوش مرطوش

தப்ஸீர் றூஹுல் பயானில் ஸூறத்துல் கஃபின் ما يعلمهم الا قليل என்ற திருவசனத்தின் கீழ் எழுதுகின்றார்கள்.

முஹத்திதீன்களில் ஸாஹீஹான சிலரின் *"இஸ்னாத்"* என்ற பெயர் பட்டியலை எழுதிவிட்டு கூறுகின்றார்கள்.

لو قرئت هذه الاسناد علي مجنون لبرئ من جنته

இந்த இஸ்னாதை ஒரு பைத்தியக்காரனில் ஓதினால் அவனுக்கு சுகம் கிடைக்கும். இஸ்னாதிலிருப்பது மார்க்கப் பெரியோர்களின் திருநாமங்கள் தான்..

பத்து ஸஹாபாக்களின் பெயர்களை தினமும் ஓதி வந்தால், வாழ்க்கையில் பயனுள்ளதாக அமையும்; இவர்கள் மரணித்த பின் பயனற்றவர்களாகுவதில்லை. நிச்சயமாக, அவர்களிலிருந்து பயன் கிடைக்கும். ஆகவே, மையயித்தின் கபனில் அவசியம் عهد نامه வை எழுதுங்கள். ,

# *அத்தியாயம் – 2*

# *குற்றச்சாட்டுக்களும், பதில்களும்.*

இதுதொடர்பாக பின்வரும் குற்றச்சாடுக்கள் காணப்படுகின்றன.

**குற்றச்சாட்டு:- 1**

1- கபனில் எழுதுவது பித்அத், பித்அத்கள் யாவும் ஹறாம்.;ஆகவே, இதுவும் ஹறாம்; இந்த குற்றச்சாட்டு வழக்கமாகக் கூறும் பழைய பல்லவி தான்!.

**பதில் :-**

எமது முந்திய பதில்களிலிருந்து இது பித்அத்அல்ல! என்று விளங்கி யிருப்பீர்கள். இதற்கான மூலாதாரம் உறுதியாகியுள்ளது;. "பித்அத்" என்றாலும் சகல பித்அத்தும் ஹறாமல்ல! பித்அத் பற்றிய எமது விளக்கத்தைக் பாருங்கள்.!

**குற்றச்சாட்டு:- 2**

கபனில் எழுதுவதை "தல்கீன்" என்று எண்ணுவது தப்பு, காரணம், மைய்யித்துக்குப் படிக்கத் தெரியாத; படிக்கத்தான் தெரியும் என்றாலும் கூட, விசாரணை நடக்கும் போது எழுதி வைத்திருப்பதை எப்படிப் படிக்க முடியும்?

**பதில்:-**

மரணத்தின்பின், சகலருக்கும் படிக்க முடியும், அறியாமை என்பது இந்த உலகத்தில் தான். அங்கு கிடையாது;. சொர்க்கவாதிகளின் மொழி அறபு என்று ஹதீதில் வந்துள்ளது.

*பார்க்க.: ஜாமி, (கிறாஹியத் என்ற பாடம்)*

அதிகமான சொர்க்கவாதிகள் இந்த உலகத்தில் அறபு மொழி தெரியா தவர்கள்; மலக்குகளும் ஒவ்வொரு மைய்யித்திடமும் அறபியில் தான் விசாரணை செய்வார்கள்; அதை அவர்கள் புரிவார்கள்;

அல்லாஹுத்தஆலா வாக்குறுதி வாங்கிய போது அறபியில் தான் வாங்கினான்; அப்படியாயின்,மைய்யித் மரணத்திற்குப்பின், ஏதும் மத்ர ஸாவுக்குச் சென்று அறபி படித்தாரா? இல்லையே! தானாகவே அங்கு மொழி

வரும்.

மறுமையில் சகலருக்கும் அவர்களுடைய ஏடு வழங்கப்படும், படித்தவர்கள், படிக்காதவர் சகலரும் அதைப் படிப்பார்கள்; மரணித்த பின், சகலரும் அறபியை விளங்கிக் கொள்வார்கள்; ஆகவே, எழுதி வைத்தவை இவர்களுக்குப் பயன்கொடுக்கும் என்பதை இதிலிருந்து புரிந்து கொள்கின்றோம்.

**குற்றச்சாட்டு:- 3**

அல்லாமா ஷாமி றஹ்மதுள்ளாஹி அலைஹி ஷாமி பாகம் 1ல் அத்தஹிய்யாத் பற்றிய பாடத்திற்குச் சற்று மேலே "*கபனில் எழுதுவது கூடாது*" என்று எழுதுகின்றார்கள். இவ்வாறுதான் ஷாஹ் அப்துல் அஸீஸ் முஹத்திதுத் திஹ்லவி றஹ்மதுல்லாஹி அலைஹி அவர்களும் தங்களுடைய பதாவாவில் இதை கூடாது என்று எழுதியுள்ளார்கள். காரணம், மைய்யித் ஊதி வெடித்து அதிலிருந்து வரும் ஊனம் எழுத்தில் படுமாயின், எழுத்துக்களுக்கு அவமரியாதையாகும். ஆகவே, கூடாது.

**பதில்:-**

இதற்கு பல விடைகளைக் கூறலாம்.

1- இந்த ஆதாரம் தனது வாதத்திற்கு சாதகமான ஆதாரமாக இல்லை. கப்றில் எந்தவிதமான எழுத்துக்களையும் வைக்கக்கூடாது என்பதுதான் வாதம்!

ஆனால், இந்த ஆதாரத்திலிருந்து, மையால் எழுதப்பட்டவையும், அல்லது, மண் பாத்திரத்தில் எழுதி கபனில் வைப்பதும் தான் கூடாது. தனது விரலால் மையித்தின் நெற்றியில் எழுதுவதும், அல்லது நெஞ்சில் எழுதி வைப்பதும், அஃது நாமாவை எழுதி கப்றின் ஓரத்தில் ஒரு மாடம் போன்று குழி தோண்டி அதற்குள் வைப்பதற்கும் தடையில்லை என்று விளங்க முடிகின்றது. ஆகவே, இந்த ஆதாரம் தனது வாதத்திற்கு போது மானதாக இல்லை.

2- இதே ஷாமியவர்கள் பொதுவாக எழுதக்கூடாது என்று கூறவில்லை. இதே இடத்தில் அவர்களே கூறுகின்றார்கள்.

نعم نقل عن بعض المحققين عن فوائد الشرجي ان مما يكتب علي جبهة الميت بغير مداد بالاصبع المسبحة بسم الله الرحمن الرحيم وعلي الصدر لا اله الا الله محمد رسول الله وذلك بعد الغسل قبل التكفين

மைய்யித்தின் நெற்றியில் சுட்டு விரலால் بسم الله الرحمن الرحيم என்றும், நெஞ்சில் لا اله الا الله محمد رسول الله என்றும் குளிப்பாட்டியதற்குப் பின் கபனுக்கு முன் எழுதவும் என்று பண்டிதர்களில் சிலர் "பவாயித் ஷர்ஜி" என்ற நூலி லிருந்து நக்லு செய்து கூறியுள்ளனர்.

இதிலிருந்து எழுதுவதை முற்றாகத் தடை செய்ய வில்லை என்று தெரியவருகின்றது. (இதே கருத்து ஷாபி மத்ஹபில் உள்ள "பத்ஹுல் முஈன், இஆனா, தர்ஷீஹ் உள்ளிட்ட நூற்களிலும் காணலாம்.)

3- இதே அல்லாமா ஷாமி அவர்கள் பதாவா பஸ்ஸாஸியாவிலிருந்து "ஆகும்" என்ற பத்வாவையும் நக்லு செய்திருக்கின்றார்கள்; இதிலிருந்து ஹனபியாக்களிடத்தில் இது "ஆகும்" என்றும் தெரிகின்றது.

அல்லாமா இப்னு ஹஜர்றஹ்மதுள்ளாஹி அலைஹி அவர்கள் தங்களது பதாவாவில் "ஹறாம்" என்று கூறியதை நக்லு செய்திருக்கின்றார்கள், இமாம் இப்னு ஹஜர் றஹ்மதுல்லாஹி ஷாபி மத்ஹபைச் சேர்ந்தவர்கள்; ஹனபி மத்ஹபின் தீர்ப்புக்கு மாறான ஷாபியாக்களின் பத்வாவின் படி அமல் செய்ய முடியுமா? நிச்சயமாக இல்லை. மேலும், "ஹறாம்" என்ற பத்வா அவர்களின் தனிப்பட்ட கூற்று! வேறு எந்த நூலிருந்தும் நக்லு செய்து கூற வில்லை.

4- மைய்யித் ஊதி வெடிக்கும் என்பது உறுதியானதல்ல! அதிகமான மைய்யித்துக்கள் ஊதாமலேயே இருக்கின்றன; ஒழுக்கமில்லாத வெறும் ஊகத்தை வைத்துக்கொண்டு மைய்யித்துக்குக் கிடைக்கக்கூடிய பிரயோ சனத்தைத் தடுப்பதில் என்ன நியாயமிருக்கின்றது.?

5- ஆரம்பத்தில் முதல் அத்தியாயத்தில் கண்ணியமிக்க ஸஹாபாக்களின் செயல்களிலிருந்து ஆதாரம் காட்டியுள்ளோம், அவர்கள் தங்களின் கபன்களில் றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம வர்களின் பறக்கத்திற்குரிய பொருட்களை வைக்குமாறு வஸிய்யத் செய்திருக்கின்றார்கள்; றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களும் தங்களுடைய முபாறக்கான மேலாடையை தங்களின் ஈரல் கொழுந்தான மகள் ஸைனப் நாயகிக்கு கபனில் வைக்க வைத்தார்கள்.

ஹளறத் தாவூஸ் றழியல்லாஹு அன்ஹு தனது கபனில் துஆக்கள் உள்ள வார்த்தைகளை எழுதி வைக்குமாறு வஸிய்யத் செய்தார்கள், இவற்றிலெல்லாம் இரத்தம் படுவதற்கான வாய்ப்பில்லையா? அல்லது, இவை கண்ணியமானதாக இல்லையா? என்று சொல்லுங்கள் பார்க்கலாம்?

6- இதில் ஷரியத்தின் சட்டம் இதுதான்.! பறக்கத்திற்குரியவையை நஜீஸில் போடுவது ஹறாம்! ஆனால், எவராவது ஒருவர் நல்ல எண்ணத்தில் சுத்தமான இடத்தில் வைத்தள்ளார். ஆயினும், அழுக்குகள் படும் என்பதற்கு வாய்ப்பு இருக்கலாம் என்று ஏதும் சாத்தியம் இருந்தாலும் அது ஆகாது என்று வராது. இதற்கு நிறைய ஆதாரங்கள் உண்டு.

ஸம்ஸம் நீர் பறக்கத்திற்குரியவையில் மிகச்சிறப்பானவை! அதனால், சிறுநீர் சுத்தம் செய்வது ஹறாமாகும். ஆனால், குடிப்பது ஆகும். திருக்குர்ஆன் வசனங்களை எழுதிக் கரைத்துக் குடிப்பதும் ஆகும்; றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்கள் சாப்பிட்ட, குடித்த மிச்சங்களை உண்பதும், குடிப்பதும் ஹலால்; ஆயினும், இவை வயிற்றுக்குள் சென்ற பின், சிறுநீர் பைக்குள் சென்று சிறுநீராக வெளியேற்றுகின்றது.

முதற் அத்தியாயத்தில் ஹளறத் உமர் பாறூக் றழியல்லாஹு அன்ஹு குதிரையின் தொடையில் حبس في سبيل الله என்று எழுதியிருந்ததைப் பற்றி குறிப்பிட்டிருந்தோம்,

உண்மையில் அந்த இடத்தில் எழுதுவதால் சிறுநீர் படுவதற்கான சந்தர்ப்பங்கள் பலமாகவே உண்டு; குதிரை நஜீஸான இடத்திலேயே உருண்டு புரளும் ;ஆயினும், அது கவனத்தில் கொள்ளப்படுவதில்லை. இதன் காரணமாகத்தான் ஹனபிகளுள் மிகச்சிறப்பான தகுதிக்குரியவர் காளான இமாம் நஸீர் இமாம் ஷிபான் உள்ளிட்டவர்கள் இவ்வாறு எழுதுவதை ஆகும் என்று கூறியுள்ளனர்.

ஹளறத் உமர் பாறூக் றழியல்லாஹு அன்ஹு குதிரையில் இவ்வாறு எழுதியது குதிரைகளிலிருந்து வேறுபடுத்தி அடையாளம் காண்பதற்காகத் தான். ஆகவே, அதற்கான சட்டம் வேறு! இமாம் இப்னு ஹஜர் மக்கி றஹ்மதுல்லாஹி அலைஹி அவர்களின் இக்கூற்று சரியல்ல!

காரணம், எந்த நோக்கத்திற்காக அந்த எழுத்துக்கள் உள்ளனவோ, அதுதான் அதன் சட்டமாகும், எண்ணங்களின் வேறுபாட்டால் எழுத்துக்களின் சட்டங்கள் மாறுபடுவதில்லை; ஆகவே, இந்தக் குற்றச்சாட்டுக்கள் முற்றிலும் வீணான தாகும்.

ஹதீது, ஸஹாபாக்களின் செயல்கள்; இமாம்களின் கூற்றுக்கள் உள்ளிட்ட வைக்கு முன்னால், ஷாபி மத்ஹபில் முஜ்தஹிதல்லாதவரின் கியாஸ் கவனிப்புக்குரியதல்ல! ஹனபியாக்களில் எவராவது ஓர் இமாமின் ஏதாவது ஒரு கூற்றை, அல்லது தெளிவான ஹதீஸை கூடாது என்பதற்கு ஆதாரமாக முன்வைய்யுங்கள்பார்க்கலாம்.! அதுதான் கிடைக்க மாட்டாதே!

7- உலமாக்களின் கூற்றுக்களிலிருந்து "முஸ்தஹப்பு", அல்லது "ஆகும்"

என்ற சட்டம் வரலாம். ஆனால், "மக்றூஹ்" என்பதற்கு தெளிவான ஆதாரம் காட்ட வேண்டியது அவசியமாகும்; இதுபற்றி ஏலவே தெளிவு படுத்தியுள்ளோம்; இப்படியான கூற்றுக்களிலிருந்து "முஸ்தஹப்பு" என்ற கூற்று ஏற்கத்தக்கதாகும். "மக்றூஹ்" என்ற கூற்று ஏற்கத்தக்கதல்ல! காரணம், அதற்குத் தக்க ஆதாரம் வேண்டும்.

**குற்றச்சாட்டு: 4**

அஃது நாமா, அல்லது ஸில்ஸிலா கப்றில் வைப்பது வீண்விரயமாகும், காரணம் அங்கிருந்து கொண்டு எந்த ஒரு வேலையும் நடக்கப் போவதில்லை; நாசமாகப் போகின்றது; ஆகவே, வீண்விரயம் ஹறாமாகும்.

**பதில்:**

இதில் மையத்திற்கு அதிகமான பிரயோசனங்கள் உள்ளன, மைய்யித்திற்கு அதனால் ஏதோ ஒரு வேலை நடக்கின்றது; ஆகவே, வீணாகிவிடுவதில்லை யென்றால் இஸ்றாபுமில்லை.

**குற்றச்சாட்டு: 5**

முனாபிக்கான அப்துல்லாஹ் இப்னு உபை மரணித்த பின், றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்கள் தங்களின் சட்டையை அணிவித்தார்கள், அவரின் வாயில் தங்களுடைய உமிழ்நீரை வைத்தார்கள்; அதிலிருந்து எந்தப் பிரயோசனமும் கிடையாது; அதனால் கபனும் வீணாகிவிட்டது;

றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கு இல்முல் ஙைபு (மறைவான அறிவு) இருந்திருந்தால், தங்களுடைய உமிழ் நீரையும், கபனையும் கொடுத்திருக்க மாட்டார்கள்; நபியின் பகுதிகள் நரகவாதியின் மேனியில் பட வேண்டியதாயிற்று; ஏனெனில், அப்துல்லாஹ் இப்னு உபை ஒரு முனாபிக், நரகவாதியாகும்; அவரில் வாயில் நபியவர்களின் உமிழ்நீர் இருந்தனால் உமிழ் நீரும் அங்கேதான் போய்ச் சேரும்.

**பதில்:**

இந்த நிகழ்வின் மூலமாக கபனைக் கொடுபதற்குரிய ஆதாரம் கிடைத்து விட்டது,ஏனெனில், றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்கள் ஒரு முனாபிக்குக்கு தங்களுடைய ஆடையை க்கபனாக அணிவித்தார்கள்;

ஈமான் இல்லாமல் இந்த தபற்றுக்காத்துக்கள் பயனளிக்காது என்று இதன் மூலம் விளங்குகிறது. முஃமினான மையயித்திற்குத்தான் கபன் பிரயோசனம் செய்யும். காபிருக்கல்ல என்று தான் நாங்களும் கூறுகின்றோம்.

அப்துல்லாஹ் இப்னு உபை முனாபிக் என்பது றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களுக்கு நன்கு தெரியும், அன்னார் கூறியதால்தான் நமக்கும் அவர் "முனாபிக்" என்று தெரிய வந்தது; ஈமான் இல்லாமல் "தபற்றுகாத்" பயனிக்காது என்று தகவல் சொன்னதும் அவர்கள்தான்.

இது அகீதாவுக்குரிய பிரச்சினை! இதுபற்றிய அறிவு நபிக்கு இருக்க வேண்டியது அவசியம்; ஒரு விவசாயி நன்கு பயிர் வளரக்கூடிய நிலத்தைப் பற்றி அறிந்திருக்கும் போது, ஈமானின் நிலமாகிய மனிதனின் மனதிலிருக்கக் கூடியதை ஒரு நபியால் அறிய முடியாதா?

மூன்று காரணங்களுக்காக அவருக்கு இந்த தபற்றுக்காத்துக்களை வழங்கினார்கள்.

1–அவரின் மகன் இக்லாஸான முஃமின்! அவர்மனதை திருப்திப்படுத்த வேண்டியது கவனத்தில் கொள்ளப்பட்டது.

2– ஒரு விடுத்தம் ஹளறத் அப்பாஸ் றழியல்லாஹு அன்ஹு அவர்களுக்கு இப்னு உபை ஒரு ஜுப்பாவை க் கொடுத்தார்; தனது பெரிய தந்தை அவரின் உபகாரத்திற்குக் கடமைப்பட்டவராகக்கூடாது என்பதற்காக பதிலுக்குக் கொடுத்தார்கள்.

3– தன் அகிலத்தின் அருட் கொடை என்பதை வெளிப்படுத்தியதாக இது அமைந்துள்ளது; நாம் ஒவ்வொருவரிலும் கருணை பொழிவதற்குத் தயாராகவே இருக்கின்றோம்; அவர் பயனடைந்தாலும் சரி, பயனடையா விட்டாலும் சரி! மழை சகல பூமியிலும் மழையைப் பொழிவிக்கின்றது. வாய்க்கால் உள்ளிட்டவையில்லாதிருக்கும் நிலம் அதிலிருந்து பயன் பெறுவதில்லை.

நபியின் உடலின் பகுதிகள் அதே நிலையிலிருக்கும் போது நரகம் செல்லமுடியாது, மலக்குகள் அந்த உமிழ் நீரை அவர் உதட்டில் ஒட்ட விட்டிருக்க மாட்டார்கள். அதை நீக்கியிருக்கக்கூடும்.

கன்ஆன் இப்னு நூஹ் நரகம் செல்வது மனித கோலத்தில்தான். அதாவது, நபியவர்களின் "நுத்பா" வேறு ஒரு விதமாக மாறியிருக்கின்றது. அதனால்தான் நரகம் புகுந்தான்; இல்லையென்றால், ஹழறத் தல்ஹா றழியல்லாஹு அன்ஹு றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களிடம் இரத்தம் குத்தி எடுத்து அதை குடித்த போது நரகம் உமது உடம்பைத் தீண்டுவது ஹறாம் என்று கூறியிருக்க மாட்டார்கள்

# ஆய்வு-19

# சத்தமாக திக்ரு செய்வது பற்றிய ஆய்வு!

இந்தியாவில் பஞ்சாப் உள்ளிட்ட பகுதிகளில் பஜ்ரு, இஷாத் தொழுகைக்குப் பின், சத்தமாக ஸலவாத் சொல்லும் வழக்கம் உண்டு, மறுப்பாளர்கள் இதை "ஹறாம்" என்கின்றனர்;

பல விதமான தந்திரங்களைப் பயன்படுத்தி அதை நிறுத்த முயற்சிக்கின்றனர்; இவ்வாறான அவர்களின் தந்திரங்களில் சத்தமாக திக்ரு செய்வது; பித்அத், ஹனபி மத்ஹபின் உஸூலுக்கு மாறானது; மக்கள் தொழுகையை மறந்து விடுகின்றனர். ஆகவே ஹறாமாகும்என்று கூறுவதும் ஒன்று !

சத்தமாக திக்ரு செய்வது ஆகுமானது, சில கட்டங்களில் அவசியமாகும்; ஆகவே,, இந்த ஆய்வை இரு அத்தியாயங்களாகக்கியுள்ளோம்; முதல் அத்தியாயத்தில் இதற்கான ஆதாரங்களும், மறு அத்தியாயத்தில் அதற்கான மறுப்பும், பதிலும் வரும்.

## அத்தியாயம்: 1

### சத்தமாகத் திக்ரு செய்வதற்கான ஆதாரங்கள்.

சத்தமாகத் திக்ரு செய்வது ஆகும், திருக்குர்ஆன், ஹதீது; உலமாக்களின் கூற்றுக்கள் இதற்கு ஆதாரமாக இருக்கின்றன.

திருக்குர்ஆன் கூறுகின்றது.

فَاذْكُرُوا اللّٰهَ كَذِكْرِكُمْ اٰبَآءَكُمْ اَوْ اَشَدَّ ذِكْرًا

***உங்களின் ஹஜ்ஜின் கிரிகைகளை நீங்கள் நிறைவேற்றி விட்டால், (இஸ்லாத்திற்கு முன்) உங்களுடைய தந்தையர்களை நீங்கள் நினைவு கூர்ந்தது போல், அல்லது, அதை விட அதிகமாக அல்லாஹ்வை நினைவு***

***கூறுங்கள்.***

*அல் குர்ஆன்: (2: 200).*

மக்காவிலுள்ள காபிர்கள் ஹஜ்ஜை முடித்தபின், அம்பலத்தில் தங்களின் சமுகத்தின் மகத்துவங்களை, குடும்ப பெருமைகளைப் பறைசாற்றுவார்கள், அதற்குத்.த டைவிதித்து அந்த இடத்தில் அல்லாஹுத்தஆலாவைத் திக்ரு செய்யுமாறு கட்டளையிடப்பட்டது;

இது சத்தமான திக்ரு என்பது வெளிப்படை; ஆகவேதான் தல்பியாவைச் சத்தமாகச் சொல்வது. குறிப்பாக கூட்டத்தைச் சந்திக்கும் போது சுன்னத்தாகும்.

அல்லாஹுத்த ஆலா கூறுகின்றான்.

وَاِذَا قُرِئَ الْقُرْاٰنُ فَاسْتَمِعُوْا لَهٗ وَاَنْصِتُوْا لَعَلَّكُمْ تُرْحَمُوْنَ

***திருக்குர்ஆன் ஓதப்பட்டால், நீங்கள் அருள் செய்யப்பட்டுவதற்காக, அதற்குச் செவி தாழ்த்துங்கள். வாய்மூடி இருங்கள்.***

*அல் குர்ஆன்: (7: 204).*

இதிலிருந்து சத்தமாகத் திருக்குர்ஆனை ஓதுவது ஆகும் என்பது தெரிய வருகின்றது, சத்தமான திக்றைத்தான் கேட்க முடியுமே தவிர, மெதுவான திக்றையல்ல என்று தப்ஸீர் கபீரில் இதே திருவசனத்தின் விளக்கத்தில் எழுதுகின்றார்கள்.

மிஷ்க்காத்தில் "தொழுகைக்குப் பின் திக்ரு" என்ற பாடத்தில் வருகின்றது.

كان رسول الله صلي الله عليه وسلم إذا سلم من صلوته يقول بصوته الاعلي لا اله الا الله وحده لا شريك له

றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் தங்களுடைய தொழுகையை ஸலாம் கூறி முடிக்கும் போதெல்லாம, உரத்த சத்தமாக لا الله الا الله وحده لا شريك له என்று கூறுவார்கள்.

இதே இடத்தில் ஹளறத் இப்னு அப்பாஸ் றழில்லாஹு அன்ஹுமா அவர்கள் கூறுகின்றார்கள்,

كنت اعرف انقضاء صلوة رسول الله صلي الله عليه وسلم بالتكبير

தக்பீர் சத்தமாகச் சொல்வதைக் கேட்டு தொழுகை முடிந்து விட்டது என்பதை தெரிந்து கொள்வேன்.

அதாவது, ஹளறத் இப்னு அப்பாஸ் றழியல்லாஹு அன்ஹுமா அவர்கள் சிறுவனாக இருந்ததால்( கத்னாச் செய்ய செய்யப்படாததால்) தொழுகையில் கலந்து கொள்ளவில்லை. தொழுகை முடிந்ததன் பின்னால் முஸ்லிம்கள் உரத்து சப்தமிட்டு சொல்வதை வீட்டிலிருக்கின்ற நாங்கள் கேட்டுத் தொழுகை முடிந்து விட்டது என்பதைப் புரிந்து கொள்வோம் என்கின்றார்கள்.

லம்ஆத்தில் ஷைகு அப்துல் ஹக் முஹத்திதுத் திஹ்லவி றஹ்மதுல்லாஹி அலைஹி இந்த ஹதீதுக்குக் கீழ் எழுதுகின்றார்கள்.

ان ابن عباس كان لم يحضر الجماعة لانه كان صغيرا ممن لا يواظب علي ذلك

ஹளறத் இப்னு அப்பாஸ் றழியல்லாஹு அன்ஹுமா அவர்கள் அப்போது சிறுவராக இருந்ததால்தான் ஜமாஅத்திற்கு முறையாக வருவதில்லை.

ஸஹி முஸ்லிமில் “தொழுகைக்குப் பின் திக்ரு செய்தல்” என்ற பாடத்தில் பதிவாகியுள்ளது.

ان رفع الصوت بالذكر حين ينصرف الناس من المكتوبة كان علي عهد النبي صلي الله عليه وسلم

பர்ழான தொழுகை முடிந்தபின், சத்தமாகத் திக்ரு செய்யும் வழக்கம் றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் காலத்தில் நடைமுறையில் இருந்தது.

மிஷ்க்காத்தில் “அல்லாஹ்வைத் திக்ரு செய்தல்” என்ற பாடத்தில் பதிவாகியுள்ளது.

அல்லாஹுத்த ஆலா கூறுகின்றான்.

فان ذكرني في نفسه ذكرته في نفسي وان ذكرني في ملأ ذكرته في ملأ خير منهم

எவராவது ஒருவர் தனது மனதில் திக்ரு செய்தால் நாமும் நமது நப்ஸில் திக்ரு செய்வோம், மேலும், எவராவது ஒருவர் சபையில் திக்ரு செய்தால், நாமும் அதைவிடச் சிறந்த (மலக்குகளின்) சபையில் திக்ரு செய்வோம்.

ஜாமிஉஸ்ஸஙீரில் ஹளறத் அனஸ் றழியல்லாஹு அன்ஹு அவர்களைத் தொட்டும் அறிவிக்கப்படுகின்றது.

ஜனாஸாவில் لا اله الا الله என்று கூறுங்கள்! என்று றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் கூறினார்கள்.

ஜனாஸாவை எடுத்துச் செல்லும் போது கலிமாத்தைய்யிபாவை கூறுவது சத்தமாகவோ, மெதுவாகவோ எந்த விதமானாலும் ஆகும்.

மௌலவி றஷீத் அஹ்மதின் உஸ்தாத் ஷைகு முஹம்மது தானவி அவர்கள் தலாயிலுல் அத்கார் பதிப்பு தில்லி ஹதீது இலக்கம் 79ல் பதிவு செய்கின்றார்.

ان النبي صلي الله عليه وسلم كان يجهر مع الصحابة بالاذكار والتهليل والتسبيح بعد الصلوة

றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் தொழுகைக்குப் பின்பு தஸ்பீஹ், தஹ்லீல் (லாஇலாஹ இல்லல்லாஹ்) ஸஹாபாக்களோடு சேர்ந்து சத்தமிட்டு கூறுவார்கள் .

தப்ஸீர் றூஹுல் பயானில்

رَبَّنَا مَا خَلَقْتَ هٰذَا بَاطِلًا سُبْحٰنَكَ فَقِنَا عَذَابَ النَّارِ

***எங்கள் றப்பே! இதை (யெல்லாம்) வீணாக நீ படைக்கவில்லை, நீ மகா துய்யவன்; ஆகவே,( நரக) நெருப்பின் வேதனையை விட்டும் எங்களை நீ காத்தருள்வாயாக!***

*அல் குர்ஆன்: (3: 191).*

என்ற திருவசனத்திற்கு அடியில் எழுதுகின்றார்கள்

فالذكر برفع الصوت جائز بل مستحب إذا لم يكن عن رياء ليغتنم الناس باظهار الدين ووصول بركة الذكر الي السامعين في الدور والبيوت ويوافق الذاكر من سمع صوته ويشهد له يوم القيامة كل

رطب ويابس سمع صوته

சத்தமிட்டு திக்ரு செய்வது ஆகும், எனினும், முகஸ்துதி இல்லையாயின், அதாவது, மார்க்த்தை வெளிப்படுத்துவது, திக்றின் பறக்கத்தால் வீட்டில் இருக்கின்றவர்களுக்கு கேட்கச் செய்வது; திக்றின் சத்தத்தைக் கேட் கின்றவர்கள் திக்றில் கவனம் செலுவத்துவது; அல்லது மறுமையில் திக்ரு செய்கின்றவரின் ஈமானுக்கு காய்ந்தவை, பசுமையானவை சகலதும் சாட்சி பகருவது என்றிருந்தால் முஸ்தஹப்பாகும்.

சத்தமிட்டு திக்ரு செய்வதால் ஏராளமான பயன்கள் இருக்கின்றன என்பதை இதன்மூலம் தெரிந்து கொள்ள முடிகின்றது.

தப்ஸீர் காஸின், தப்ஸீர் றூஹுல் பயான் உள்ளிட்டவையில்,

وَّاٰتَيْنَا دَاوٗدَ زَبُوْرًا

***இன்னும், தாவூதுக்கு ஸபூரையும் நாம் கொடுத்தோம்.***

*அல் குர்ஆன்: (17:55).*

என்ற திருவசனத்தின் விளக்கத்தில் பின்வரும் அறிவிப்பைப் பதிவு செய்துள்ளனர்.

இன்றிரவு நீர் திருக்குர்ஆன் ஓதுவதை செவிமடுத்தேன், தாவூதின் ஓசை கொடுக்கப்பட்டுள்ளீர்! என்று ஹளறத் அபூ மூஸா அஷ்அரி றழியல்லாஹு அன்ஹு அவர்களிடம் றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் கூறினார்கள். இதைக் கேட்டபின், ஹளறத் அபூமூஸா அஷ்அரி றழியல்லாஹு அன்ஹு கூறினார்கள்.

أما والله لو علمت انك تسمع لحبرته تحبيرا ، التحبير حسن الصوت

அல்லாஹ்வின் மீது ஆணையாக! எனது கிறாஅத்தை நீங்கள் கேட்கிறீர்கள் என்பதை நான் அறிந்திருந்தால், நான் இதை விட நன்றாக இராகமெடுத்து ஓதியிருப்பேன் என்றேன்.

இந்த ஹதீதில் இரு விடயங்கள் தெரியவருகின்றன.

1- ஸஹாபாக்கள் சத்தமிட்டு திக்று செய்துள்ளனர், அவர்களின் சத்தம்

வெளியில் வந்துள்ளது.

2- திருக்குர்ஆன் அல்லாஹ்வுக்குச் செய்கின்ற இபாதத்,

இபாதத்தின் நடுவிலும் றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களை சந்தோஷப்படுத்துவதில் ஸஹாபாக்கள் விருப்பம் கொண்டிருந்திருந்தினர்.

மிஷ்க்காத் அத்தியாயம் தொழுகை, பாடம் "இரவுத் தொழுகை"யில் பின் வரும் அறிவிப்பு இடம் பெறுகின்றது,

ஒரு தினம் இரவு வேளையில் தங்களுடைய அருமைத் தோழர்களின் இரவு வணக்கங்களை பரிசோதித்துப் பார்ப்பதற்காக றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் வெளியில் சென்றார்கள், ஹளறத் ஸித்தீக்குல் அக்பர் றழியல்லாஹு அன்ஹு மெதுவான குரலில் திருக் குர்ஆன் ஓதிக் கொண்டிருந்தார்கள்; பாறூக்குல் அஃழம் றழியல்லாஹு அன்ஹு நன்கு சத்தமிட்டு ஓதிக் கொண்டிருந்தார்கள்;

சுப்ஹு வேளையில் இவ்விருவரிடமும் கேட்டபோது,

اسمعت من يناجيت يارسول الله

அல்லாஹ்வின் திருத்தூதர் அவர்களே! எவனுக்குக் கேட்கவேண்டும் என்பது நோக்கமோ அவனுக்குக் கேட்க வைத்தேன் என்றார்கள்.

பாறூக்குல் அஃழம் கூறினார்கள்.

اوقظ الوسنان واطرد الشيطان

தூங்குவோரை எழுப்புகின்றேன், ஷைத்தானை விரட்டுகின்றேன் என்றார்கள்;

ஸுப்ஹானல்லாஹ்! இரண்டு பதில்களும் எவ்வளவு சிறப்பானவை!

எவரிடத்திலும் நபியவர்கள் கோபம் கொள்ள வில்லை; உங்கள் சத்தத்தை சற்று உயர்த்துங்கள் என்று ஸித்தீக்குல் அக்பரிடமும், உங்கள் சத்தத்தை சற்று தாழ்த்துங்கள் என்று பாறுக்குல் அஃழத்திடமும் கூறினார்கள்.

ஸல்லல்லாஹுத் தஆலா அலைஹி வ அலைஹிம் அஜ்ம ஈன்.

மிஷ்க்காத் அத்தியாயம் "அல்லாஹ்வின் திருநாமங்கள்" என்பதில்

ஹளறத் புரைதா றழியல்லாஹு அன்ஹு அவர்களின் அறிவிப்பில், பின்வரும் ஹதீது இடம் பெறுகின்றது.

ஒருதினம் இஷா வேளை அவருடன் சேர்ந்து பள்ளிவாசலுக்குச் சென்றார்கள். அங்கே ஒருவர் உரத்த சத்தமாக திருக்குர்ஆன் ஓதிக் கொண்டிருப்பதைக் கண்டார்கள், அல்லாஹ்வின் திருத்தூதரே! இவர் முகத்துதிக்காறர் என்றேன்;

இல்லை; بل مؤمن منيب தவ்பா செய்கின்ற முஃமின் என்றார்கள்.

ஆலம் கீரியில் கிதாபுல் கறாஹிய்யத் كراهية என்ற அத்தியாயத்தில், நான்காம் பாடமான "தொழுகையில் தஸ்பீஹ், கிறாஅத் ஓதுதல்" என்ற பாடத்தில் எழுதுகின்றார்கள்.

قاض عنده جمع عظيم يرفعون أصواتهم بالتسبيح والتهليل جملة واحدة لا بأس به

எவராவது ஒரு நீதிபதியிடத்தில் ஒரு பெருங்கூட்டம் சகலரும் சேர்ந்து உரத்த சத்தமாக சுப்ஹானல்லாஹ்! லாஇலாஹ இல்லல்லாஹ்! என்று கூறுவதில் குற்றம் இல்லை.

ஆலம்கீரியில் இதே இடத்தில் எழுதுகின்றார்கள்.

الافضل في قراءة القرأن خارج الصلوة الجهر

தொழுகைக்கு அப்பால் திருக்குர்ஆனை சத்தமிட்டு ஓதுவதுதான் நல்லது.

மேலும் ஆலம் கீரியில் இதே இடத்தில் வருகிறது.

أما التسبيح والتهليل لا بأس بذلك وان رفع صوته

சுப்ஹானல்லாஹ்! லாஇலாஹ இல்லல்லாஹ்! என்று சத்தமிட்டு கூறுவதில் குற்றமில்லை.

ஷாமி பாகம்-1 பள்ளிவாசலின் சட்டங்கள் என்ற பாடத்தில் எழுதுகின்றார்கள்.

أجمع العلماءسلفا وخلفا علي استحباب ذكر الجماعة في المسجد الا ان يوشوش جهرهم علي نائم او مصل او قارئ

பள்ளிவாசலில் ஜமாஅத்தினர் சேர்ந்து சத்தமிட்டு திக்ரு செய்வதால், தூங்குபவர்களுக்கும், தொழுவோருக்கும்; திருக்குர்ஆன் ஓதுவோருக்கும் இடையூறாக இல்லாதிருந்தால், "சுன்னத்" என்று. முன்னோர், பின்னோரிலுள்ள உலமாக்கள் சகலரும்இஜ்மாவாகக் கூறியுள்ளனர்.

ஷாமியில் இதே இடத்தில் வருகின்றது.

قال بعض العلم ان الجهر افضل لانه اكثر عملا ولتعدي فائدته الي السامعين ويوقظ قلب الغافلين فيجمع همه الي الذكر ويصرف سمعه إليه ويطرد النوم ويزيد النشاط

அறிர்களில் சிலர் பின்வருமாறு கூறுகின்றனர்.

சத்தமிட்டு திக்ரு செய்வது சிறப்பாகும், காரணம், இதில் நிறைய அமல்கள் உள்ளன; இதன் பயன் கேட்கின்றவரையும் சென்றடைகின்றது; மறதியாளர்களின் மனங்களை தட்டி எழுப்புகின்றது; அவர்களுடைய கவனங்களையும், செவிகளையும் திக்றின்பக்கம் கவர்கிறது; தூங்கியிருப்பவரை எழுப்பிவிடுகின்றது; சந்தோஷத்தை அதிகப்படுத்துகின்றது.

துர்ருல் முக்தாரில் "இரு பெருநாட்கள்" என்ற பாடத்தில் "தஷ்ரீக்கின் திக்றுகள்" பற்றிய பாடத்தில் எழுதுகின்றார்கள்.

ولا يمنع العامة من التكبير في الاسواق في الايام العشر وبه نأخذ

ஹஜ்ஜுப் பெருநாளின் பத்து நாட்களிலும் பொதுமக்கள் கடைத் தெருக்களில் சத்தமிட்டு தக்பீர் முழங்குவதை தடுக்க வேண்டாம், அவர்களுக்கு அதற்கான சுதந்திரத்தை நாம் வழங்குகின்றோம்.

அக்காலத்தில் பொதுமக்கள் கடைத் தெருக்களில் தக்பீர் சத்தமாக முழங்கும் வழக்கம் இருந்திருக்கின்றது போலும்.! இவ்வாறு கூறுவது பித்அத்தாக இருந்தாலும் அதைத் தடுக்க வேண்டாம் என்கின்றார்கள்.

இதே இடத்தில் ஷாமியில் எழுதுகின்றார்கள்.

قيل لابي حنيفة ينبغي لاهل الكوفة وغيرها ان يكبروا ايام المحشر في الاسواق والمسجد قال نعم قال الفقيه ابوا جعفر والذي عندي انه لا ينبغي ان نمنع العامة عنه لقلة رغبتهم في الخير وبه نأخذ فافاد ان فعله اولي

கூபாவில் துல்ஹஜ் பத்து நாட்களும் கடைத் தெருக்களில், பள்ளிவாசல் களில் தக்பீர் சொல்வது சுன்னத்தாகுமா? என்று இமாமுல் அஃழம் அபூ ஹனீபா றஹ்மத்துள்ளாஹி அலைஹியிடத்தில் கேட்கப்பட்ட போது இமாம் அபூ ஜஃபர் குத்திஸ ஸிர்ருஹு கூறினார்கள். தக்பீர் சொல்லுகின்ற பொது மக்களைத் தடுக்க வேண்டாம். ஏனெனில், அவர்கள் முதலில் இருந்ததை விட, இப்போது நன்மையான விடயங்களில் ஆர்வம் குறைவாக இருக்கின்றார்கள். ஆகவே, அவர்களுக்கு சுதந்திரத்தைப் கொடுத்துள்ளோம்.

இதிலிருந்து கடைத்தெருக்களில் தக்பீர் கூறுவது “சுன்னத்” என்று தெரிகின்றது

“அல்அத்கார்” என்ற நூலில் இமாம் நவவி றஹ்மத்துள்ளாஹி அலைஹி றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்கள் பேரில் “ஸலவாத் ஓதுதல்” என்ற பாடத்தில் எழுதுகின்றார்கள்.

يستحب لقارئ الحديث وغيره ممن في معناه إذا ذكر رسول الله صلي الله عليه وسلم ان يرفع صوته بالصلوة عليه والتسليم به وقد نص العلماء من اصحابنا وغيرهم علي انه يستحب ان يرفع صوته بالصلوة علي رسول الله صلي الله علي وسلم في التلبية

ஹதீது ஷரீப் மற்றும் அதுவல்லாதவையை ஓதுகின்றவர்கள் றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் திருப்பெயர் வரும் போது சத்தமிட்டு ஸலவாத்து, ஸலாம் கூறவேண்டும்; தல்பியாவில் சத்தமிட்டு றஸூலுளாளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் பேரில் ஸலவாத் ஓதுமாறு எங்களுடைய உலமாக்கள் மிகத் தெளிவாகக் கூறியுள்ளார்கள்.

இவை தவிர, இன்னும் மேலதிகமான பல ஹதீதுகளையும், புகஹாக்களின் கூற்றுக்களையும் முன்வைக்க முடியும்; ஆயினும், இத்துடன் சுருக்கிக் கொள்கின்றோம்.

அல்ஹம்துலில்லாஹ்! மறுப்பாளர்களின் குருபீடம் மௌலவி றஷீத் அஹ்மத் கங்கோஹியும் இது விடயத்தில் எம்மோடு ஒரே கருத்தில் இணைந்து கொள்கின்றார்.

பதாவா றஷீதிய்யாவில் ஹலால், ஹறாம் பற்றிய பாடத்தில் பக்கம் 104ல் ஒரு கேள்விக்கு பின்வருமாறு பதில் கூறுகின்றார்.

**கேள்வி:**

சத்தமிட்டு திக்ரு செய்வது, சத்தமிட்டு துஆக் கேட்பது; சத்தமிட்டு ஸலவாத் ஓதுவது; சத்தமிட்டு அல்லது சத்தத்தைக் குறைத்து ஓதுவது கூடுமா? கூடாதா?

**பதில்:**

இமாம் அபூஹனீபாவிடத்தில் குறிப்பிட்ட இந்த இடங்களைத் தவிர்த்து சத்தமிட்டு திக்ரு செய்வது ஆகும் என்று தெட்டத் தெளிவாக( நஸ்ஸாக) கூறியுள்ளார்கள், குறித்த இந்த இடங்களில் மக்றூஹ் ஆகும்; ஆனால், ஸாஹிபைன் (இமாம் அபூ யூஸுப், இமாம் முஹம்மத்) ஆகிய இருவரிடத்திலும் மற்றும் ஏனைய புகஹாக்களிடத்திலிலும்; முஹத்திதீன் களிடத்திலும் ஆகுமாகும்; எனதுமதுஹபும், ஷைகுமார்களின் வழி, ஸாஹிபைன்களின் மத்ஹபின் படியாகும்.

வஸ்ஸலாம்.

*16, றபீஉல் ஆகிர், ஹி, 1212,.*

*றஜீத் அஹ்மத்*

இதன் பிறகு அஹ்லுஸ் ஸுன்னத் முஸ்லிம்கள் சத்தமிட்டு திக்று செய்வதைத தடுக்கும் உரிமை தேவ்பந்து வஹாபிகளுக்குக் கிடையாது! மக்றூஹ் என்று கூட இல்லாமல் "ஆகும்" என்று அவர்களின் குரு பீடமே சீல் குத்தியுள்ளார். சத்தமிட்டு திக்ரு செய்வது ஆகும் என்பதை பகுத்தறிவும் கூட பின் வரும் சில நியாயங்களால் ஏற்றுக்கொள்கின்றது.

1- முயற்சிக்குத் தக்க அளவு நன்மை கிடைக்கும் என்பது ஷரீஅத்தின் கோட்பாடாடு. ஆகவேதான் குளிரில் வுழூச்செய்வது, இருட்டில் பள்ளி வாசல்களில் ஜமாஅத்தாகத் தொழுவதற்காக செல்வது; தூரத்திலிருந்து பள்ளிவாசலுக்கு வருவது உள்ளிடடவை அதிக நன்மைகளை ஈட்டித்தரக் கூடியவையாகும்.

*(பாரக்க: மிஷ்க்காத்)*

சத்தமிட்டு திக்ரு செய்வதில் மெதுவாகச் செய்வதை விட, அதிக முயற்சி

இருக்கின்றது. ஆகவே இது மேலாகும்.

2- மிஷ்க்காத்தில் அதானுடைய பாடத்தில் வருகின்றது.

முஅத்தினின் சத்தம் எந்தளவு சென்றடைகின்றதோ, அந்தளவு இருக்கின்ற சகல மரங்கள், இலைகள், ஜின், மனிதன் உள்ளிட்ட சகலதும் மறுமையில் அவரின் ஈமானைப் பற்றி சாட்சி பகரும் என்றிருப்பதால், சத்தமிட்டு திக்ரு செய்வதாலும் இந்தப் பிரயோசனம் கிடைக்கும் என்று ஆதரவு வைக்க முடியும்.

3- மெதுவாக திக்ரு செய்வதால் திக்ரு செய்பவருக்கு மட்டுமே நன்மை கிடைக்கும், சத்தமாகத் திக்ரு செய்வதால் திக்ரு செய்பவருக்கும் நன்மை கிடைக்கும்; அதே நேரம் திக்ரு, கலிமா உள்ளிட்டவை யை கல்பில் தாக்குவதால், மனம் விழித்துக் கொள்கிறது; கேட்கின்றவர்களுக்கும் திக்ரு செய்வதற்கான வாய்ப்பும் உள்ளது; திக்று செயயாவிட்டாலும் கூட கேட்கின்றவருக்கு தவாபு கிடைக்கும்; அவசியமான ஒன்றிலிருந்து கடக்கின்றதும் நல்லதாகவே இருக்கும்.

4- மிஷ்க்காத்தில் அதானுடைய பாடத்தில் பதிவாகியுள்ளது.

அதானின் சத்தத்தைக் கேட்டு ஷைத்தான் விரண்டோடுகிறான். இங்கு ஷைத்தானை விரட்டுகின்றேன் என்ற ஹளறத் உமர் றழியல்லஹு அன்ஹு அவர்களின் கூற்று நினைவு கூரத்தக்கதாகும்.ஆகவே, சத்தமாகப் திக்ரு செய்வது ஷைத்தானிடமிருந்து பாதுகாப்பு கிடைப்பதற்குரிய வழியாகும்.

5- சத்தமாகத் திக்ரு செய்வதால், தூக்கம், சோம்பல் தூரமாகின்றன. மெதுவாகத் திக்ரு செய்வதால் அதிகமாக தூக்கம்தான் வரும். இவையாவும் முகத்துதி இல்லாதவனுக்கே பொருந்தும்.

முகத்துதிக்காகத்தான் என்றால், முகத்துதியின் எண்ணத்தில் முறாக்கபாச் செய்வது, தொழுவது உள்ளிட்டவையும் பாவத்தை ஏற்படுத்தக் கூடிய வைதானே!.

நக்ஷ பந்தியாத் தரீக்கா வாதிகளின் திக்ரு மெதுவாகச் செய்வதாகும். அவர்கள் அதன்படியே அமல் செய்கின்றனர். ஏனைய ஸில்ஸிலாவுக்குரிய தரீக்காக்களில் சத்தமாகத் திக்ரு செய்வதாக இருக்கின்றது; அவர்களுடைய அமலும் இதன்படியே உள்ளது; இவர்கள் இருவருமே அல்லாஹ்வின் நேசர் களாகும்; நக்ஷபந்தி வாதிகள் ஜல்வத்தில் கல்வத் இருப்பவர்கள்; ஏனைய தரீக்கா வாதிகள் கல்வத்தில் ஜல்வத் இருப்பவர்கள்.

ஆனதால், كلا وعد الله الحسني அல்லாஹுத்த ஆலா சகலருக்கும் சொர்க்கத்திற்கு வாக்களித்துள்ளான்; இவர்களின் கருத்து வேறுபாடு ஹலால், ஹறாம் பற்றியதல்ல; தங்கள் தங்கள் தரீக்காவின் ஒழுங்கு முறைபற்றிய

தாகும்;

மெதுவாகத்திக்று செய்பவர் சத்தமாகத் திக்ரு செய்பவரை குறை சொல்வதில்லை,சத்தமாகத் திக்ரு செய்பவர் மெதுவாகத் திக்ரு செய்பவரைக் குறை சொல்லுவதுமில்லை; இந்த சகல விதமான பேச்சுக்களும் தேவ்பந்தி உள்ளிட்ட வஹாபிகளிடமே இருக்கின்றன.

# *அத்தியாயம் – 2*
# *குற்றச்சாட்டுக்களும், பதில்களும்.*

இந்தப் பிரச்சினையில் மறுப்பாளர்கள் இரண்டு விதமான குற்றச்சாட்டுக்களை முன்வைக்கின்றனர்.

1- நக்லி : மார்க்கரீதியானது.

2- அக்லி : பகுத்தறிவுரீதியானது.

முதலில் மார்க்கரீதியான குற்றச்சாட்டுக்களுக்குரிய பதில்களை முன்வைக் கின்றோம்.

**குற்றச்சாட்டு : 1**

وَاذْكُرْ رَّبَّكَ فِىْ نَفْسِكَ تَضَرُّعًا وَّخِيْفَةً وَّدُوْنَ الجهر مِنَ الْقَوْلِ بِالْغُدُوِّ وَالْاٰصَالِ

***(நபியே!) உம் மனதிற்குள் பணிவோடும், அச்சத்தோடும் ; சொல்லில் சத்தமின்றி காலையிலும், மாலையிலும் உம்முடைய ரப்பை நீர் திக்ரு செய்வீராக!***

*அல் குர்ஆன்: (07: 205).*

இதிலிருந்து சத்தம் கூட்டி அல்லாஹ்வைத் திக்ரு செய்யக்கூடாது என்று தெரிய வருகின்றது.

**பதில்:**

இதற்குப் சில பதில்கள் உள்ளன.

1-. இந்த திருவசனத்தில் “திக்ரு” என்பது தொழும்போது செய்வதைக் குறிக்கும், அதாவது, சத்தமில்லாமல் தொழுகின்ற தொழுகையில் இமாமைப் பின்பற்றித்தொழுபவர் "அத்தஹிய்யாத்" உள்ளிட்டவையை மனதால் ஓதவும்; இமாம் குறிப்பிட்ட அளவை விட அதிகமாக சத்தத்தை வெளியாக்க வேண்டாம்.

தப்ஸீர் றூஹுல் பயானில் இந்த திருவசனத்தின் கீழ் எழுதுகின்றார்கள்.

فمن ام في صلوة الجهر ينبغي له ان لا يجهر جهرا شديدا بل يقتصر علي قدر من خلفه قال في الكشف لا تجهر فوق حاجة الناس والا فهو مسئ

எவராவது ஒருவர் தொழுகையில் இமாமத் செய்தால், அதிக சத்தத்தில் கிறாஅத் ஓதக்கூடாது; பின்னால் இருப்பவருக்குக் கேட்குமளவுக்கு போது மாக்கிக் கொள்ளவும்.

“கஷ்பு” என்ற நூலில் கூறுகின்றார்கள். தேவைக்கு அதிகமாக சத்தமிடக் கூடாது. தவறினால் பாவியாவார்.

தப்ஸீர் கபீரில் இதே திருவசனத்தின் அடியில் எழுதுகின்றார்கள்.

والمراد منه ان يقع ذلك الذكر بحيث يكون متوسطا بين الجهر والمخافة كما قال الله تعالي ولا تجهر

இதன் கருத்து யாதெனில், சத்தத்தை உயர்த்துவதற்கும்; தாழ்த்துவதற்கும் இடைப்பட்டதாக திக்ரு செய்யவும்.

தப்ஸீர் காஸினில் இதே திருவசனத்தின் விளக்கத்தில் எழுதுகின்றார்கள்.

قال ابن عباس يعني بالذكر القرآن في الصلوة يريد اقرا سرا في نفسك

ஹளறத் இப்னு அப்பாஸ் றழியல்லாஹு அன்ஹுமா கூறுகின்றார்கள்.

இத்திருவசனத்தில் “திக்ரு” என்பது, தொழுகையில் ஓதப்படும் திருக் குர்ஆனாகும். இதன் நோக்கம் யாதெனில், மனதால் திருக்குர்ஆனை

ஓதவும்.

திருக்குர்ஆன் மற்றுமொரு இடத்தில் கூறுகின்றது.

ولا تجهر بصلوتك ولا تخافت بها وابتغ بين ذلك سبيلا

*(நபியே!) உம்முடைய தொழுகையில் நீர் சத்தமிட்டு ஓத வேண்டாம், அதில் மிக மெதுவாகவும் ஓதவேண்டா இவற்கிடையே (நடுத்தரமான) ஒரு வழியை தேடிக் கொள்வீராக!*

*அல் குர்ஆன்: (17: 110).*

திருக்குர்ஆனுக்கு திருக்குர்ஆன் கூறும் தப்ஸீர்தான் முன்னுரிமையானது என்று இந்த நூலின் முன்னுரையில் குறிப்பிட்டுள்ளோம்.

2- இத்திருவசனத்தின் நோக்கம் சொல்சார்ந்த திக்ரு மட்டுமல்ல, கல்பும் கவனம் செலுத்தும் சொல்லாலான திக்றாகும்; மனம் தொடர்பில்லாத திக்ரு வீணாகும்

தப்ஸீர் காஸினில் இதே திருவசனத்தின் அடியில் எழுதுகின்றார்கள் .

وقيل المراد بالذكر باللسان عاريا عن ذكر القلب كان عديم الفائدة لان فائدة الذكر حضور القلب

واستشعاره عظمة المذكور چل جلاله

கல்பு திக்ரு செய்யாமல் வார்த்தையால் வரும் திக்ரு பயனற்றதாகும்., காரணம், மனம் ஒன்றித்துச் செய்யும் திக்ரினாலும்; அல்லாஹ்வின் மகத்துவத்தை மனதில் கொண்டுவருவதனாலும் தான் திக்றின் பிரயோசனத்தைப் பெறலாம்.

அல்லது, இதன் நோக்கம், சில வேளைகளில் கல்பினால் செய்யும் திக்ரு சத்தமிட்டுச் செய்யும் திக்ரை விட மேலாகும்; அதாவது, இது சுன்னத்தான ஒரு கட்டளையாகும்.

“முஸ்தஹப்பு” என்பது சகல நேரத்திலும், சகல விதங்களிலும் இருப்பதில்லை; சில இடங்களில்தான் அதன் சட்டம் இருக்கும் ; ஆகவேதான் இத்திருவசனம் “திருக்குர்ஆன் ஓதப்பட்டால், அதற்குக் காதுதாழ்த்திக் கேளுங்கள்” என்ற திருவசனத்திற்கு அடுத்து வந்துள்ளது.

இவ்விரண்டு திருவசனங்களையும் இணைத்துப் பார்க்கும்போது சில வேளை சத்தமிட்டு திக்ரு செய்ய வேண்டும், மற்றும் சில வேளை மெதுவாகச் செய்ய வேண்டும் என்பது தெரிய வருகின்றது; சத்தமாக இருந்தால், அமைதியாக செவிமடுக்கவும்; அமைதியாக இருந்தால், ஆழ்ந்து சிந்திக்கவும்; சத்தமாகத் திக்ரு செய்வதால் முகத்துதிக்கான அச்சமிருந்தால் அமைதியாக திக்ரு செய்வது மேலாகும்.

ஷைத்தானை விரட்டுவது, மனதை விழிப்பாக்குவது; தூங்குவோரை தட்டியெழுப்புவது உள்ளிட்ட சகல பொருட்களும் மறுமையில் திக்ரு செய்பவருக்கு சாட்சி பகர்வது நோக்கமாயின், சத்தமாக திக்ரு செய்வது மேலாகும்.

தப்ஸீர் றூஹுல் பயானில் இத்திருவசனத்திற்கு அடியில் எழுதுகின்றார்கள்.

واذكر ربك في نفسك وهو الذكر بالكلام الخفي فان الاخفاء ادخل في الإخلاص واقرب من الاجابة وهذا يعم الاذكار كلها من القراءة والدعاء وغيرها

இதில் அடக்கமாக திக்ரு செய்வதுதான் நோக்கமாகும், காரணம், அடக்கமாகத் திக்ரு செய்வதில் அதிக இக்லாஸ் அடங்கியிருக்கின்றது; கபூலாவதற்கும் மிக நெருக்கமாக இருக்கின்றது; இந்த திக்ரு சகல திக்ருகள், கிராஅத்துக்கள்; துஆக்கள் உள்ளிட்ட சகலதையும் உள்ளடக்கியுள்ளது.

தப்ஸீர் றூஹுல் பயானில் இத்திருவசனத்திற்கு அடியில் எழுதுகின்றார்கள்.

بان الاخفاء افضل حيث خاف الرياء او تأذي المصلون او النائمون والجهر افضل في غير ذلك لان العمل فيه اكثر ولان فائدته تتعدي الي السامعين ولانه يوقظ قلب الذاكر ويجمع همه ويصرف سمعه إليه

முகத்துதி பற்றிய அச்சமிருந்தால், அல்லது தூங்குவோருக்கு இடைஞ்சலாக இருந்தால்; இன்னும் இதுவல்லாத ஏனைய இடங்களில் சத்தமாகத் திக்ரு செய்வது மேலாகும்; காரணம், அதில் அதிகமான அமல்கள் இருக்கின்றன; அதைக்கேட்கின்றவனுக்கும் அதன் பயன் சென்றடைகின்றது; காரணம், இது திக்ரு செய்கின்றவரின் கல்பை விழிப்பாக்கிறது; கவனங்களை குவிக்குகின்றது; திக்றின் பக்கமாக காதின் கவனத்தைத் திருப்புகின்றது

**குற்றச்சாட்டு: 2**

ادْعُوْا رَبَّكُمْ تَضَرُّعًا وَّخُفْيَةً اِنَّهٗ لَا يُحِبُّ الْمُعْتَدِيْنَ

***(மு ூமின்களே!), உங்களுடைய ரப்பைத் தாழ்மையாகவும், மெது வாகவும் நீங்கள் பிரார்த்தியுங்கள். நிச்சயமாக அவன் வரம்பு மீறுகிறவா களை நேசிக்க மாட்டான்.***

*அல் குர்ஆன்: (7: 5).*

இத்திருவசனத்தில் சத்தமாக திக்ரு செய்வது விரும்பத்தக்கதல்ல என்று தெரிகிறது.

**பதில்:**

இதற்கும் பல விதங்களில் பதில் கூற முடியும்.

1- இத்திருவசனத்தில் துஆவைப் பற்றித்தான் கூறப்பட்டுள்ளதே அன்றி, சகல திக்றுகளைப் பற்றியல்ல, உண்மையில் துஆவைத் தாழ்மையாகச் செய் வதே சிறப்பாகும்; ஆகவே, "இக்லாஸ்" பூரணமானதாக இருக்கும்.

தப்ஸீர் றூஹுல் பயானில் இந்த திருவசனத்திற்கு அடியில் எழுது கின்றார்கள்.

اي متضرعين متذللين مخفين الدعاء ليكون اقرب الي الإجابة اكون الاخفاء دليل الإخلاص والاحتراز عن الرياء

தாழ்ந்தவர்களாகவும், பணிந்தவர்களாகவும்; துஆவை மெதுவாகச் செய்யுங்கள். ஏனெனில், இது கபூலாவதற்கு மிக நெருக்கமாக இருக்கும்; மெதுவாகச் செய்யும் துஆவில் "இக்லாஸ்" இருக்கும்; முகத்துதியை விட்டும் தூரமாக இருக்கும் என்பதற்கான ஆதாரமாகும்.

தப்ஸீர் காஸினில் இந்த ஆயத்திற்கு விளக்கம் இப்படி எழுதுகின்றார்கள்.

والادب في الدعاء ان يكون خفيا لهذه الآية قال الحسن بين دعوة العلانية سبعون ضعفا

இந்த ஆயத்தின் அடிப்படையில் துஆவுக்கான வழி மெதுவாச் செய்வது தான், ஒரு தரம் மெதுவாகச் செய்யும் துஆ, சத்தமாக எழுபது விடுத்தம் கேட்கும் துஆவுக்குச் சமனாகும் என்று ஹஸன் றழியல்லாஹு அன்ஹு

கூறுகின்றாராகள்.

அல்லது, துஆக்கேளுங்கள்! என்பதன் நோக்கம், திக்றே இலாஹி! என்றிருக்குமாயின், சில நேரங்களில் மெதுவாகச் செய்வது மேலாகும் சிலநேரங்களைக் கவனித்துத்தான் இந்த முஸ்தஹப்பான கட்டளையும் இருக்கின்றது.

தப்ஸீர் காஸினில் எழுதுகின்றார்கள்.

فذهب بعضهم الي ان اخفاء الطاعات والعبادات افضل من اظهارها لهذه الآية ولكونها ابعد من الرياء وذهب بعضهم الي ان اظهارها افضل ليقتدي به الغير فيعمل مثل عمله وذهب بعضهم الي ان اظهار العبادات المفروضة افضل من اخفائها

சில முபஸ்ஸிரீன்கள் இந்த ஆயத்தை வைத்து இபாதத்துக்களை வெளிக்காட்டுவதை விட, மறைவாகச் செய்வது மேல் என்ற கருத்தைக் கொண்டுள்ளனர்; காரணம், முகத்துதியை விட்டும் அதிகம் தூரமாக இருக் கின்றது; மற்றும் சிலர் வெளிப்படையாகச் செய்வது மேல்! காரணம், அடுத்தவர்கள் இதைப் பார்த்துப் பின்பற்றுவார்கள் என்கின்றனர்; வேறு சிலர் பர்ழான வணக்கங்களை மறைப்பதை விட வெளிப்படுத்துவது மேல் என்கின்றனர்.

**குற்றச்சாட்டு : 3**

وَاِذَا سأَلَكَ عِبَادِىْ عَنِّىْ فَاِنِّىْ قَرِيْبٌ اُجِيْبُ دَعْوَةَ الدَّاعِ اِذَا دَعَانِ

***(நபியே!) உம்மிடம் என்னைப்பற்றி, என்னுடைய அடியார்கள் கேட்டால், "நிச்சயமாக நான் (அவர்களுக்கு மிகச்) சமீபமாகவே இருக் கிறேன், அழைப்பவரின் அழைப்புக்கு - என்னை அவர் அழைக்கும் போது நான் பதிலளிக்கிறேன். (என்று கூறுங்கள்.)***

*அல்குர்ஆன்: (2:186).*

அல்லாஹுத்தஆலா எமக்கு மிக நெருக்கமாகவே இருக்கின்றான், எமது சகல எண்ணங்களையும், இரகசியமான செய்திகளையும் அவன்

கேட்கின்றான்; என்பதை இத்திருவசனத்தின் மூலமாக அறிகின்றோம்; ஆகவே, சத்தமாகத் திக்ரு செய்வது அர்த்தமற்றதாகும்.

**பதில்:**

அல்லாஹுத்தஆலா எம்மை விட்டும் தூரமாக இருக்கின்றான், எமது பேச்சை அவன் கேட்பதில்ல என்று நம்பி சத்தமாகத் திக்ரு செய்பவர்களின் தவறான எண்ணங்கள் இத்திருவசனத்தில் பாழாக்கப்பட்டுள்ளன. மறதியால் உள்ளங்களை தட்டி எழுப்புவதற்காகத்தான் சத்தமாகப் திக்ரு செய்யப் படுகின்றது.

தப்ஸீர் றூஹுல் பயானில் இந்தத் திருவசனத்தின் அடியில் எழுது கின்றார்கள்.

وسبب نزوله ماروى أن اعرابيا قال لرسول الله صلي الله عليه وسلم اقريب ربنا فنناجيه ام بعيد فنناديه فقال تعالي واذا سألك

இந்தத் திருவசனம் இறங்கிய காரணம் வருமாறு, ஒரு கிராமவாசி நபியவர்கள் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களிடம் வந்து, அல்லாஹ்வின் திருத்தூதரே! அல்லாஹுத்தஆலா எமக்கு நெருக்கமாக இருப்பானாயின், அவனோடு நாங்கள் உரையாடுவோம்;அவன் தூரமாக இருப்பானாயின், சத்தமாக அழைப்போம் என்றார்; அப்போதுதான் அல்லாஹுத்தஆலா இவ்வாறு கூறினான்.

அல்லாஹுத்த ஆலா தூரத்திலிருப்பதாக எண்ணி சத்தமாக அழைப்பது தப்பானது என்பதை இதன் மூலம் தெரிந்து கொள்கின்றோம்.

இப்படியும் ஓர் அறிவிப்பு காணப்படுகின்றது.

கைபர் யுத்த நேரம் காஃபிர்களுக்குத் தெரியாமல் இரகசியமாக அங்கே போகவேண்டும் என்பது றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் நாட்டமாக இருந்தது, ஆனால், ஸஹாபாக்கள் உரத்த சத்தத்துடன் தக்பீர் முழங்கியவர்களாக உள்ளே நுழைந்தனர்; அப்போது இந்த திருவசனம் இறங்கியது

தப்ஸீர் றூஹுல் பயானில் இத்திருவசனத்திற்கு அடியில் எழுது கின்றார்கள்.

قال ابو موسي الاشعري لما توجه رسول الله صلي الله عليه وسلم الي خيبر اشرف الناس علي وادي فرفعوا أصواتهم بالتكبير فقال عليه السلام اربعوا علي انفسكم لا تدعون اصم ولا غائبا

றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்கள் கைபரின் பக்கமாகச் செல்லும் வழியில் ஸஹாபாக்கள் உயர்ந்த வனாந்திரத்தின் பக்கமாக ஏறிச்செல்லும் போது, சத்தமாகத் தக்பீர் முழங்கினார்கள்; அப்போது உங்கள் மூச்சை தாழ்த்திக் கொள்ளுங்கள்; நீங்கள் செவிடனையோ, தூரத்திலிருப்பவனையோ அழைக்கவில்லை என்று றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள்.

தப்ஸீர் றூஹுல் பயானில் எழுதுகின்றார்கள்.

وهذا باعتبار المشارب والمقامات والائق بحال اهل الغفلات الجهر لقلع الخواطر

இடத்தைக் கவனித்துப் பார்த்தே இதை செய்யவேண்டும், கெட்ட எண்ணங்களை நீக்குவதற்காக மறதியாளர்களுக்கு சத்தமாகத் திக்ரு செய்வது ஏற்றமாகும்.

**குற்றச்சாட்டு: 4**

மிஷ்க்காத் கிதாபுல் அஸ்மாஇ என்ற அத்தியாயத்தில் தஸ்பீஹ், தஹ்மீதின் தவாபு என்ற பாடத்தில் வருகின்றது.

فجعل الناس يجهرون بالتكبير فقال رسول الله صلي الله عليه وسلم يا ايها الناس اربعوا علي انفسكم انكم لا تدعون اصم ولا غائبا انكم تدعون سميعا بصيرا وهو معكم والذي تدعونه اقرب الي احدكم من عنق راحلته

சத்தமாகத் திக்ரு செய்த போது உங்கள் உயிரில் இரக்கம் காட்டுங்கள், நீங்கள் செவிடனையோ; தூரத்திலிப்பவனையோ அழைக்கவில்லை; கேட்கின்றவன், பார்க்கின்றவனையே அழைக்கின்றீர்கள்; அவன் உங்களுடனே இருக்கின்றான்; நீங்கள் அழைப்பவன் உங்களுக்கு முன்னால் உங்களுடைய மிருகங்களின் கழுத்தை விட நெருக்கமாக இருக்கின்றான்.

இந்த ஹதீதிலிருந்து சத்தமாகத் திக்ரு செய்வது கூடாது என்று தெரிகின்றது, மேலும், றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களுக்கு விருப்பமில்லாத செயலும்கூட.

**பதில் :**

இதற்கான பதில் 2ம் கேள்வியில் சொல்லப்பட்டுள்ளது, இந்த ஹதீது ஒரு யுத்தத்திற்கான பயணத்தில் நடந்தது; அந்த நேரத்தில் முஸ்லிம் படைகள் சத்தமில்லாமல் கைபருக்குள் நுழைய வேண்டிய அவசியமிருந்தது; சிலர் சத்தமிட்டு தக்பீர் முழங்கியது அந்த சூழலுக்கு மாற்றமாக இருந்தது; அதனால்தான் தடுத்தார்கள்.

இந்த ஹதீஸின் ஆரம்பத்தில் இவ்வாறு உள்ளது.

كنا مع رسول الله صلي الله عليه وسلم في سفر فجعل الناس يجهرون الخ

நாங்கள் ஒரு பயணத்தில் இருந்தோம், மக்கள் உரத்த சத்தத்தில் தக்பீர் முழங்கினார்கள்;

அல்லது,முஸ்லிம்களின் வசதிக்காக இப்படி ஓர் ஆலோசனை கூறியிருக்கலாம்; நீங்கள் பயணத்தின் சிரமத்திலிருக்கின்றீர்கள்; பின்னர், பேரொலி எழுப்புவதற்கு என்ன அவசியம் வந்துள்ளது?

லம்ஆத்தில் இந்த ஹதீதுக்கான விளக்கத்தில் எழுதுகின்றார்கள்.

فيه اشارة الي أن المنع من الجهر للتيسير والارفاق لا لكون الجهر غير مشروع

இங்கு சத்தமிடுவதற்கான தடை சௌகரிகத்திற்கானதாகும் என்று இதில் ஒருசைகை உள்ளது,சத்தமாகச் செய்வது தடை என்பதற்கல்ல!

அஷிஃஃஅத்துல் லம்ஆத்தில் எழுதுகின்றார்கள்.

இதில், சத்தமாகச் சொல்வதற்குத் தடையானது, ஆரோக்கியம், இரக்கம் என்பதின் பால் சைகையாக உள்ளது; சத்தமாகச் சொல்வது தடை என்தற்காக அல்ல! உண்மை என்னவென்றால், சத்தமாகத் திக்ரு செய்வது சில காரணங்களோடு சந்தேகமில்லாமல் அனுமதிக்கப்பட்டதாகும்; இதுபற்றிய ஆதாரங்களை “றிஸாலா அவ்றாது” என்ற நூலில் கூறியுள்ளோம்.

**குற்றச்சாட்டு: 5**

ஹிதாயா பாகம் 1 தஷ்றீக்கின் தக்பீர்கள் என்ற பாடத்தில் எழுதுகின்றார்கள்.

وأخذ يقول ابن مسعود واخذا بالاقل لان الجهر بالتكير بدعة

ஹளறத் இமாம் அபூ ஹனீபா றஹ்மத்துள்ளாஹி அலைஹி சத்தமிட்டுத் திக்ரு செய்வது "பித்அத்" என்பதனால் ஹளறத் ஸெய்யிதுனா இப்னு மஸ்ஊத் றழியல்லாஹு அன்ஹு அவர்களின் கூற்றை ஆதாரமாகக் கொண்டு சத்தத்தைக் குறைப்பதற்கு ஆதாரமாக எடுத்தார்கள், பித்அத்தைக் குறைப்பது தான் நன்றாகும்.

இமாம் அபூ ஹனீபா றஹ்மத்துள்ளாஹி அலைஹி அவர்களுக்கு மத்தியில் துல்ஹஜ் ஒன்பதாவது நாள் பஜ்ரிலிருந்து பத்தாம் நாள் வரை சகல தொழுகைகளிலும் தஷ்ரீக்குடைய தக்பீர் சொல்ல வேண்டும்

இமாம் அபூயூஸூப், இமாம் முஹம்மத் ஆகிய இருவரிடத்திலும் ஒன்பதாம் நாள் பஜ்ரிலிருந்து 13ம் நாள் அஸர் வரையிலும் சொல்லவேண்டும். இமாமவர்கள் சத்தமாகத் திக்ரு செய்வது "பித்அத்" என்றும்; பித்அத்தைக் குறைவாகச் செய்ய வேண்டும் ஆகவே, இரண்டு நாள் தக்பீர் கூற வேண்டும் என்று கூறுகின்றார்கள்.

இதிலிருந்து சத்தமாகத் திக்ரு செய்வது "பித்அத்" என்று தெரிய வருகின்றது.

இதே ஹிதாயாவில் தஷ்ரீக்கின் தக்பீர்கள் பாடத்தில் எழுதுகின்றார்கள்.

ولان الجهر بالتكبير خلاف السنة والشرع ورد به عند استجماع هذه الشرائط

சத்தமாகத் திக்ரு செய்வது சுன்னத்திற்கு மாற்றமாகும். நிபந்தனைகள் யாவும் ஒன்று சேரும் இடத்தில்தான் அதன் சட்டம் உள்ளது.

**பதில்:**

இமாமவர்களினதும், ஸாஹிபைன்களினதுமான கருத்து வேறுபாடு

இந்தத்தக்பீர் வாஜிப் என்பதில்மட்டும்;ஆகும் என்பதில்லை; இரு நாட்கள் தக்பீர் அவசியம் என்று இமாமவர்கள் கூறுகின்றார்கள்; ஸாஹிபைன் ஐந்து நாட்கள் என்கின்றனர்; இமாமவர்கள் இதை "பித்அத்" அல்லது, சுன்னத்திற்கு எதிர் என்று கூறி வாஜிப் என்பதை மறுக்கின்றார்கள்.

இந்த ஆய்வுக்கு முன்னர் ஷாமியிலிருந்து பின் வரும் நக்லைப் பதிவு செய்திருந்தோம்.

இமாமவர்கள் கூபாவில் கடைத் தெருக்களில் தஷ்ரீக்குடைய நாட்களில் சத்தமாகத் தக்பீர் சொல்வதற்கு அனுமதி வழங்கினார்கள், எதற்காக பித்அத்திற்கு அனுமதி வழங்கினார்கள் என்பதை சொல்லுங்கள்?

ஷாமியில் இரு பெருநாட்களின் தொழுகை என்ற தலைப்பில், "நோன்புப் பெருநாள்" என்ற பாடத்தில் எழுதுகின்றார்கள்.

والخلاف في الافضلية اما الكراهة فمنتفية عن الطرفين

"சிறப்பானது" என்பதில் மட்டும்தான் கருத்து வேறுபாடு உண்டு., "மக்ரூஹ்" என்பது எந்த விதத்திலும் இல்லை!

ஷாமியில் இதே இடத்தில் எழுதுகின்றார்கள்.

التكبير بالجهر في غير ايام التشريق لا يسن الا بازاء العدو او اللصوص وقاس عليه بعضهم الحريق والمخاوف كلها زاد القهستاني او علا شرفا

தஷ்ரீக்குடைய நாட்களைத் தவிர, வேறு தினங்களில் தக்பீர் முழங்குவது சுன்னத்தல்ல! ஆனாலும், திருடர்களோடு மோதும் போதும், சிலர் இதை கியாஸ் பிடித்து தீப்பிடித்து எரியும் போதும்; சகல பயங்கரமான கட்டங் களிலும்; கஹஸ்த்தானியவர்கள் சற்று அதிகப்படுத்தி உயர்ந்த இடங்களில் ஏறும் போதும் சுன்னத் ஆகும் என்று கூறுகின்றார்கள்.

துர்ருல் முக்தாரில் "இரு பெரு நாட்கள்" என்ற பாடத்தில் எழுதுகின்றார்கள்.

هذا للخواص اما العوام فلا يمنعون عن التكبير ولا تنفل اصلا

இந்தச் சட்டம் விஷேஷமானவர்களுக்காகும், பொதுமக்களை இந்தத் தக்பீரிலிருந்தும்; நபிலிலிருந்தும் தடுக்க வேண்டாம்.

ஷாமியில் இதே இடத்தில் எழுதுகின்றார்கள்.

لا في البيت أي لا يسن والا فهو ذكر مشروع

இதன்மூலம் ஹிதாயாவிலுள்ள சகல பேச்சுக்களும் சுன்னத் பற்றியது என்பது தானே தவிர, "ஆகும்" என்பது பற்றியல்ல என்று தெரிய வருகின்றது; ஆயினும்; இது விடயத்தில் "பத்வா" ஸாஹிபைனின் கூற்றுப்படியாகும்.

சத்தமாகத் திக்று செய்வது "ஆகும்" என்பதுதான் மௌலவி றஷீத் அஹ்மத் கங்கோஹியின் "பத்வா" என்று முதல் அத்தியாயத்தில் கூறியிருந்தோம். இந்த ஆயாத்துக்களுக்கும், ஹதீதுகளுக்கும் கருத்துக்கள் இவ்வாறு வைக்காவிட்டால், மறுப்பாளர்களுக்கும் கூட மறுப்பாகிவிடும். ஏனெனில், சில நிகழ்வுகளை அவர்களும் சத்தம் கூட்டிச்செய்கின்றனர்.

உதாரணமாக, அதான், ஹஜ்ஜுப் பெருநாட்களில் தஷ்ரீக்குடைய தக்பீர், ஹஜ்ஜின் தல்பியா, சபைகளில்" நாரே தக்பீர்" முழக்கம், குறிப்பிட்ட நபரைக் கூறி "ஸின்தாபாத்" உள்ளிட்டவையைக் குறிப்பிடலாம்;

ஏனெனில், அவர்கள் பொதுவாக சத்தமிட்டு திக்று செய்வதைத் தடை விதிக்கின்றனர்;

மேலும், ஆகாதான(முதவாதிறான ஹதீதுக்குரிய நிபந்தனைகளிலில்லாத) ஹதீதுகளை வைத்து திருக்குர்ஆனின் திருவசனங்களுக்கு நிபந்தனை விதிப்பது ஆகாது; ஆகவே, இதை இல்லையென்றும் கூறமுடியாது; ஏனெனில், இப்படியான இடங்களிலெல்லாம் சத்தமாகத் திக்ரு செய்வது பற்றி யெல்லாம் ஹதீதுகள் வந்துள்ளன ; ஆகவே, ஆகும் என்றும் கூறமுடியாது திருக்குர்ஆனுக்கு ஹதீதுகளைக்கொண்டு நிபந்தனையிடுவது ஆகும் என்று எங்கே இருக்கின்றது ?

மறுப்பாளர்களின் பகுத்தறிவிலான ஆதாரங்கள் மூன்று மட்டும்தான் உள்ளன.

1- அல்லாஹ் சமீபமாக இருக்கின்றான். உரத்துக் கூச்சலிடுவது ஏன்?

பதில்:

சத்தமிட்டு திக்ரு செய்வது அல்லாஹ்வுக்கு கேட்கவைப்பதற்கல்ல, வேறு பயன்களுக்காக என்று ஏற்கனவே கூறியுள்ளோம்.

2- ஸல்லல்லாஹு அலைக்க யாறஸூலல்லாஹ்! என்று கூறுமாறு ஹதீதில் வரவில்லை. அதனால் ஆகாது.

இதற்கான பதிலும் இதே நூலில் வேறு இடத்தில் கூறப்பட்டுள்ளது, மீண்டும் அதை எழுத வேண்டிய அவசியமில்லை; "கூடாது" என்ற வரையறைக்குள் வராவிட்டால், ஆகும்!

ஸலவாத்துக்களில் எந்த ஸலவாத் சிறப்பானது என்ற தெளிவான முழுமையான விளக்கம் எமது “ஷஃனே ஹபீபுர் றஹ்மான்” என்ற நூலில் பார்க்க முடியும்.

3- தொழுகைக்குப் பின் சத்தமாகத் திக்ரு செய்வதால், தொழுகின்ற வர்களுக்குப் பிரச்சினையாகும்; தொழுகையை அவர்கள் மறந்து விடுகின்றனர்; ஆகவே, கூடாது;

பதில்:

இதற்கு சில விடைகள் உண்டு!

1- இந்தக் குற்றச்சாட்டு , வாதத்திற்கு நேர்பட்டதல்ல! காரணம், சத்தமாகத் திக்ரு செய்வது பொதுவாகக் கூடாது என்பதுதான் உங்கள் வாதம். இதன்படி, ஏதாவது ஒரு தொழுகையாளிக்கு இடைஞ்சல் இருக்குமாயின், கூடாது; இல்லையென்றால் கூடும். அப்படியாயின், எவரும் தொழாத நேரத்தில் அப்போது ஆகும் என்றுதானே வரும் ?.

2-பஞ்சாப்பில் பஜ்ருத் தொழுகைக்கு சற்று நேரம் தாமதித்தும், மற்றும் இஷாவுக்குரிய சுன்னத்துக்கள் யாவும் தொழுது முடித்தபின், இந்த ஸலவாத் ஓதப்படுகின்றது; அந்த நேரத்தில் சகலரும் தொழுது முடித்து விடுவார்கள்;

3- ஸஹாபாக்கள் தொழுகைக்குப் பின் சப்தமிட்டு திக்ரு செய்வார்கள் என்ற ஹதீதுகளை இதற்கு முன்னுள்ள அத்தியாயத்தில் குறிப் பிட்டுள்ளோம்.

இன்றும் கூட சில பள்ளிவாசல்களில் குர்ஆன் மத்ரஸாக்கள் இருக்கின்றன, அங்கே மாணவர்கள் ழுஹர், இஷா தொழுகைகளுக்குப் பின், சத்தமாக இரைந்து திருக்குர்ஆன் மனனமிடுகின்றனர்.

சில வேளை பள்ளிவாசல்களில் இஷாவுக்குப் பின் மார்க்க உபதேசங்கள் நடக்கின்றன;அதிலே "நாரேத்தக்பீர்" முழங்குகின்றனர்; நோன்புப் பெருநாள் காலங்களில் பர்ழான ஜமாஅத் தொழுகைக்குப் பின், சுடச்சுட சகலரும் சத்தமிட்டு மூன்று விடுத்தம் தஷ்ரீக்குடைய தக்பீர் கூறுகின்றனர்; இவ்வாறெல்லாம் சத்தமாகத் திக்ரு செய்வது தொழுகின்ற வரை குழப்புமா? இல்லையா? இவை கூடுமா? கூடாதா? என்று கூறுங்கள்!

தொழுகையாளிக்கு இடைஞ்சலாக இருக்குமாயின், சத்தமாகத் திக்ருசெய்யக் கூடாது என்று புகஹாக்கள் கூறியுள்ளதன் நோக்கம் வெளிப் படையானது, தொழுகையின் நேரமான போது மக்கள் தொழுகையில் ஈடுபட்டிருக்கும் போதும்; ஒருவர் சத்தமிட்டு திக்ரு செய்வது கூடாது; தொழுகை முடிந்த பின்பு அல்ல!

தொழுகை முடிந்த பின், திக்ரு, திலாவத் உள்ளிட்டவையில் ஈடுபடுகின்றனர்; அப்போது ஜமாஅத்தைத் தவற விட்ட ஒருவர் வந்து நான் தொழ வேண்டும் நீங்கள் சகலரும் மௌனமாகுங்கள் என்று கூறினால், சகலருமே மௌனமாக வேண்டுமே!

சகலரும் கவனத்தில் கொள்ளுங்கள்!

பள்ளிவாசல்களில் அதிக முக்கியத்துவம் முதல்ஜமாஅத்திற்கு மட்டுமே! இதிலிருந்துதான் அதிகமான மார்க்க கிளைச் சட்டங்கள் வருகின்றன. மக்கத்துல் முகர்ரமாவில் முதல் ஜமாஅத்திற்கு மட்டும்தான் "*தவாபை*" நிறுத்தப்படும்; எப்போது ஜமாஅத் நிறைவடைகின்றதோ அப்போதே தவாஃப் ஆரம்பமாகிவிடும்; "*தவாபி*"ல் ஓதும் துஆக்களின் சத்தம் காதைக் கிழித்துக் கொண்டு செல்லும்; இப்போது அங்கே சத்தமாகத் திக்ரு செய் வதற்கான சட்டம் என்ன என்று சொல்லுங்கள்?. தொழுகையாளிகளுக்கு இடைஞ்சலாக இருக்கின்றது என்பதற்காக தவாபை நிறுத்துவதா? இல்லையா?

# ஆய்வு-20

# வலிமார்கள் பெயரில் மிருகங்கள் வளர்ப்பது பற்றிய ஆய்வு!

சிலர் கியார்வீன் பிறை 11ல் கௌதுல் அஃழம் அவர்கள் பேரில் பாத்திஹா, கந்தூரி அல்லது, மீலாத் ஷரீப் உள்ளிட்டவையை வழக்கமாகச் செய்து வருபவர்கள் அதற்கு முதல் ஆடு, அல்லது கோழி போன்றவையை நன்கு கொளுக்கும் வரை வளர்ப்பார்கள்; குறிப்பிட்ட தேதியில் "பிஸ்மில்லாஹ்" கூறி அறுத்து பாத்திஹா ஓதி ஏழைகளுக்கும், நல்லோர்களுக்கும் உணவளிப்பார்கள்.

இந்த எண்ணத்தில் அவை வளர்க்கப்படுவதால், அவற்றைக் "கியார்வீன்" அல்லது, கௌதுல் அஃழத்தின் மாடு; அல்லது ஆடு; கோழி என்பர்; வலிமாவின் மாடு போன்று இது ஷரீஅத்தில் அனுமதிக்கப்பட்டதுதான்; ஆனால், மறுப்பாளர்கள் இச்செயலை "ஹறாம்" என்றும், அதன் மாமிசத்தைச் செத்தவை என்றும்; அதைச் செய்பவர்களை "முர்தத்", "முஷ்ரிக்" என்றும் கூறுகின்றனர்; ஆகவே, இந்த ஆய்வையும் இருஅத்தியாயங்களாக ஆக்கினோம்.

முதற் அத்தியாயத்தில் அதற்கான ஆதாரங்களும், இரண்டாம் அத்தியாயத்தில் குற்றச்சாட்டுக்களும்; பதில்களும் இடம்பெறும்.

## அத்தியாயம்: 1

ஏதாவது, ஒரு பிராணியை "முஸ்லிம்", அல்லது "வேதக்காறர்கள்" அல்லாஹ்வின் பெயர்கூறி அறுத்தால், அது ஹலாலாகும்; (றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்குப்பின், மதம் மாறியவர்கள் வேதக்காறர்களாகுவதில்லை)

ஹலாலான ஒரு மிருகத்தை "முஷ்ரிக்" அல்லது "முர்தத்து" அறுத்தால், அது செத்த பிராணியாகும். ஒரு முஸ்லிம் அறுக்கும் நேரம் "பிஸ்மில்லாஹ்" சொல்வதைத் தவிர்த்தால், அல்லது அல்லாஹ் அல்லாதவரின் பெயர் கூறி அறுத்தால், உதாரணமாக, பிஸ்மில்லாஹி அல்லாஹு அக்பர் என்று கூறாமல் "யாகௌது" என்று அறுத்தால், இது ஹறாமாகும்.

இவ்வாறு அறுக்கும் போது அல்லாஹ்வின் பெயர் கூறுவதுதான் கடமை தவிர, முந்திப் பிந்தி பெயர் சூட்டுவது முக்கியமல்ல! ஹலால், ஹறாம்

என்பது, அறுக்கின்றவரைக் கவனித்தே தவிர, உடையவரைக் கவனித்தல்ல! என்பதை கவனத்தில் கொள்ள வேண்டும்.

ஒரு முஸ்லிமின் மிருகத்தை ஒரு "முஷ்ரிக்" அறுத்தால், அது செத்த பிணமாகும்; ஒரு முஷ்ரிக் விக்ரஹத்தின் பெயரால் வளர்த்ததை ஒரு முஸ்லிம் "பிஸ்மில்லாஹ்" கூறி அறுத்தால், அது ஹலால்;. இவ்வாறு அறுக் கின்ற நேரம்தான் முக்கியம். முன், பின் உயிரோடு இருக்கும் போது விக்ரஹத்தின் பேரில் இருந்து ;அறுக்கும் போது அல்லாஹ்வின் பெயர் கூறி அறுக்கப்பட்டால் நிச்சயமாக அது ஹலாலாகும்.

மிருகம் உயிரோடிருக்கும் போது குர்பானிக்குரியதாகவே இருந்தது, அறுக்கும் போது வேறு பெயர் கூறி அறுத்தால், அது "பிணம்" தான்;

இதைத்தான் திருக்குர்ஆன் இப்படிக் குறிப்பிடுகின்றது.

وما اهل به لغير الله

“அல்லாஹ் அல்லாதவரின் பெயர் கூறி அறுக்கப்பட்ட மிருகம் ஹறாம்.” “பெயர் கூறி” என்பது அறுக்கும் போது பெயர் கூறுவதைக் குறிக்கும்.

தப்ஸீர் பைழாவியில் இத்திருவசனத்திற்கு அடியில் எழுதுகின்றார்கள்.

اي رفع الصوت بغير الله به كقولهم باسم اللات والعزي عند ذبحه

அந்த மிருகத்தை அறுக்கும் போது காபிர்கள் லாத், உஸ்ஸா என்று அல்லாஹ் அல்லாதவர் பெயர் கூறுவது போன்றாகும்.

தப்ஸீர் ஜலாலைனில் இந்த திருவசனத்தின் கீழ் எழுதுகின்றார்கள்.

بان ذبح علي اسم غيره

அல்லாஹ் அல்லாதவர் பெயர் கூறி அறுப்பது.

தப்ஸீர் காஸினில் எழுதுகின்றார்கள்.

يعني ما ذكر علي ذبحه غير اسم الله وذلك ان العرب في الجاهلية كانوا يذكرون اسماء اصنامهم عند الذبح فحرم الله ذلك بهذه الاية وبقوله ولا تأكلوا مما لم يذكر اسم الله عليه

“அல்லாஹ்வின் பெயர் கூறாமல் அறுக்கப்படும் மிருகம் "ஹறாமா"கும். காரணம், ஜாஹிலியாக் காலத்தில் உள்ள அரபிகள் அறுக்கும் போது லாத், உஸ்ஸா போன்ற விகரகங்களின் பெயர் கூறி அறுப்பார்கள்; ஆகவே, அல்லாஹுத்தஆலா இந்த திருவசனத்தில் "அல்லாஹ் அல்லாதவர் பெயர் கூறி அறுக்கப்பட்டவையை உண்ணவேண்டாம்" என்று கூறி ஹறாமாக்கியுள்ளான்.

தப்ஸீர் கபீரில் எழுதுகின்றார்கள்.

وكانوا يقولون عند الذبح باسم اللات والعزي فحرم الله تعالي

“அரபிகள் அறுக்கும் போது லாத், உஸ்ஸாவின் பெயர் கூறி அறுப்பார்கள்; ஆகவே, அல்லாஹுத்த ஆலா ஹறாமாக்கினான்.”

தப்ஸீர் அஹ்மதியில் எழுதுகின்றார்கள்.

معناه ما ذبح به باسم غير الله مثل اللات والعزي واسماء الانبياء

“அல்லாஹ் அல்லாதவரின் பெயர் கூறி அறுக்கப்பட்டவை என்ற இத்திருத்திருவசனத்தின் பொருள் இதுதான்,” லாத், உஸ்ஸா மற்றும் நபிமார்களின் பெயர் கூறி அறுக்கப்பட்டவையாகும்.

தப்ஸீர் மதாரிக்கில் இத்திருவசனத்தின் விளக்கத்தில் எழுதுகின்றார்கள்.

اي ذبح للاصنام فذكر عليه غير اسم الله أي رفع به الصوت للصنم وذلك قول اهل الجاهلية باسم ألات والعزي

“அறுக்கும் போது ஜாஹிலியாக்காலத்தில் லாத், உஸ்ஸா போன்ற விக்ரஹத்தின் பெயரை சப்தமாகக் கூறி அறுக்கப்பட்டவை ஹறாமாகும்.”

லுபாபுத் தஃவீல் என்ற தப்ஸீரில் எழுதுகின்றார்கள்.

يعني ما ذبح للاصنام والطواغيت واصل الاهلال رفع الصوت وذلك أنهم كانوا يرفعون أصواتهم بذكر الهتهم ذبحوها

சிலைகள், விக்ரகங்களுக்காக அறுக்கப்பட்டவை “இஹ்லால்” என்பதன் மூலக்கருத்து, சத்தத்தை உயர்த்துவது. அவற்றை அறுக்கும் போது அவர்களின் விக்ரஹங்களின் பெயர்கூறி சத்தமிடுவார்கள்.”

தப்ஸீர் அபூ சுஊதில் எழுதுகின்றார்கள்.

اي رفع به الصوت عند ذبحه للصنم

“சிலைக்காக அறுக்கும் போது அதன் பெயரை சப்தமிடுவது.”

தப்ஸீர் ஹுஸைனியில் எழுதுகின்றார்கள்.

“அல்லாஹ் அல்லாதவர் பெயர் கூறி اهل به அறுப்பது என்பதன் பொருள், அறுக்கும் போது அலலாஹ் அல்லாதவர் பெயர் கூறுவதாகும்.”

தப்ஸீர் அஹ்மதியில் இந்த திருவசனத்திற்கு அடியில் பின்வருமாறு எழுதுகின்றார்கள்.

ومن ههنا علم أن البقرة المنذورة للاولياء كما هو رسم في زماننا حلال طيب لانه لم يذكر اسم غير الله وقت الذبح وان كانوا ينذرونها

“இதிலிருந்து புரிகின்றது.நமது காலத்தில் வழக்கத்திலிருப்பது போன்று வலிமார்களுக்கு நேர்ச்சை செய்யப்படுகின்ற மாடு சுத்தமான ஹலாலாகும்.” காரணம் அறுக்கும் போது அல்லாஹ் அல்லாதவரின் பெயர் அங்கே கூறப் படுவதில்லை. அவர்களுக்கு அது நேர்ச்சை செய்யப்பட்டிருந்தாலும் சரியே!

இதன்மூலம் "கியார்வீன் ஷரீபுக்கு" அறுக்கப்பட்டுகின்ற ஆட்டுக்கான தீர்ப்பை தெளிவாகக் கூறி விட்டார்கள், தப்ஸீர் அஹ்மதியின் ஆசிரியர் மௌலானா அஹ்மது ஜீவன் றஹ்மத்துள்ளாஹி அலைஹி இவர்கள் அரபு, அரபு அல்லாத உலமாக்களின் உஸ்தாதாவார்கள்; சகல தேவ்பந்திகளும் இவர்களை மதிக்கின்றனர்.

ஷாமியில் *“அறுத்தல்”* பற்றிய பாடத்தில் எழுதுகின்றார்கள்.

اعلم أن المدار علي القصد عند ابتداء الذبح

"ஹறாம், ஹலாலுக்கான அடிப்படை, அறுக்கும் போதுள்ள நிய்யத்தாகும்."

அறுப்பதற்கு முன்னுள்ள பெயர் கவனத்திற்குரியதல்ல என்பது மிகத் தெளிவாகிவிட்டது.

ஆலம் கீரியில் "அறுத்தல்" பற்றிய பாடத்தில் எழுதுகின்றார்கள்.

مسلم ذبح شاة المجوسي لبيت نارهم او لكفر لالهتهم توكل لانه سمي الله تعالي ويكره للمسلم كذا في التتار خانية ناقلا عن جامع الفتاوي

ஒரு முஸ்லிம் மஜூஸிகளின் நெருப்புக்காக, அல்லது காபிரின் சிலைகளுக்காக விடப்பட்டு இருந்ததை அறுத்தால், ஹலாலாகும்; காரணம், முஸ்லிம் அவற்றை அல்லாஹ்வின் பெயர் கூறி அறுத்துள்ளார்; ஆயினும்; இந்த வேலை முஸ்லிமுக்கு மக்றூஹாகும்.

இவ்வாறு "ஜாமிஉல் பதாவா" என்ற நூலிலிருந்து நக்லு செய்து பதாவா தாதார்கானியாவில் பதிவு செய்யப்பட்டுள்ளது.

பாருங்கள்! மிருகத்தை வளர்த்தவர் காபிர், அறுக்க வைத்ததும் அவர்கள்; வணங்குகின்ற நெருப்புக்கும், சாமிக்குமான எண்ணத்திலாலாகும்; ஆனாலும், அறுக்கும் போது முஸ்லிமுடைய வாயினால்" பிஸ்மில்லாஹ்". என்று கூறி அறுத்தனால் ஹலாலாகி விட்டது.

இப்போது கூறுங்கள்!.

கியார்வீன், மீலாத் உள்ளிட்டவைக்கான ஆடு இந்த விக்ரஹ வணக்கத்தை விட கேவலமானதா? அது ஹலால் ஆனால் இது ஹறாமா?

அல்ஹம்துலில்லாஹ்! கியார்வீன் (முஹ்யித்தீன் கந்தூரி) உள்ளிட்ட வைக்கான மிருகம் ஹலால்! இது நன்மையான செயல்! என்பது மிகத் தெளிவாகிவிட்டது.

# அத்தியாயம் – 2
# குற்றச்சாட்டுக்களும், பதில்களும்

**குற்றச்சாட்டு:- 1**

ما اهل لغير الله

"அல்லாஹ் அல்லாதவர் பெயர் கூறி அறுக்கப்பட்டவை "என்ற திரு வசனத்தில் வருகின்ற اهل என்ற சொல் اهلال என்ற சொல்லிருந்து பிறந்த சொல்லாகும்; اهلال என்ற சொல் அறுப்பதற்கு அல்ல! பொதுவாக அழைப்பதையே குறிக்கும்; ஆகவே, அல்லாஹ் அல்லாதவர் பெயரால் அழைக்கப்படும் மிருகம, அதை உயிரோடு அழைத்தாலும் சரி, அறுக்கும் போது அழைத்தாலும் சரி ;அது செத்த பிணம் தான்.! கௌதுல் அஃழம் அவர்கள் பேரில் விடப்பட்ட ஆட்டை அல்லாஹ்வின் பெயரால், அறுத்தாலும் ஹறாம்தான்.!

**குறிப்பு:** இந்த குற்றச்சாட்டு ஹளறத் ஷாஹ் அப்துல் அஸீஸ் முஹத்திதுத் திஹ்லவி கத்தஸல்லாஹு ஸிர்ரஹுல் அஸீஸ் அவர்களுக் குரியதாகும். இந்தப் பிரச்சினையில் கடுமையான தவறு நிகழ்ந்திருக்கின்றது.

**பதில்:**

பொதுவாக اهلال என்பதற்கு "அழைத்தல் "என்பதுதான் அகராதிப் பொருள்.! ஆனால், ஊர்வழக்கில் அறுக்கும் போது அழைத்தல் என்பதையே குறிக்கும்; இந்த இடத்திலும் ஊர் வழக்கிலுள்ள பொருளை நாடப்பட்டிருக்கின்றது.

பொதுவாக صلوة என்பதற்கு "பிரார்த்தனை" என்பதுதான் அகராதிப் பொருள். ஊர்வழக்கில்தான் "தொழுகை" எனப்படுகின்றது; اقيموا الصلوة. என் பதில் தொழுகைதான் கடமை தவிர, துஆ அல்ல!

தப்ஸீர் கபீரில் ما اهل என்பதற்கு,

الاهلال رفع الصوت هذا معني الاهلال في اللغة ثم قيل للمحرم الخ

அகராதியில் اهلال என்பது சப்தத்தை உயர்த்துவது என்ற பொருளைத் தான் குறிக்கும், இதன்பின் இஹ்றாம் கட்டுபவருக்குக் கூறப்பட்டது.

இதேபோன்று தப்ஸீர் ஹாஷியத்தல் பைழாவியில் اهل என்பதற்கு,

أي رفع به الصوت الخ هذا اصله ثم جعل عبارة عما ذبح لغير الله

அதை அழைக்கபடும் என்பது اهل என்பதற்கான அகராதிப் பொருளாகும். பின்னர், அல்லாஹ் அல்லாதவருக்காக அறுப்பது என்ற பொருள் எடுக்கப்பட்டுள்ளது; இங்கு اهلال என்பதற்கு அகராதிப்பொருள் கொள்ளப்பட்டால்,பின்வரும் பல பிரச்சினைகளுக்கு கண்டிப்பாக முகம் கொடுக்க வேண்டி வரும்.

1- இந்தக் கருத்து தப்ஸீர்களின் இஜ்மாஃவுக்கும், ஸஹாபாக்களின் கூற்றுக்களுக்கும் மாற்றமாகி விடும். முபஸ்ஸிரீன்களின் கூற்றுக்களை முதல் அத்தியாயத்தில் குறிப்பிட்டுள்ளோம். இப்போது ஸஹாபாக்களின் கூற்றுக்களைக் கவனியுங்கள்.!

தப்ஸீர் துர்ரு மன்தூரில் இந்த ஆயத்திற்கு அடியில் பின்வரும் ஹதீது பதிவாகியுள்ளது.

اخرج ابن المنذر عن ابن عباس في قوله تعالي وما اهل الاية قال ذبح واخرج ابن جمائر عن ابن عباس وما اهل يعني ما اهل للطواغيت واخرج ابن ابي حاتم عن مجاهد وما اهل قال ما ذبح لغير الله واخرج ابن حاتم عن ابي العالية وما اهل يقول ما ذكر عليه اسم غير الله

தப்ஸீர் மழ்ஹரியில் இத்திருவசனத்திற்கு அடியில் எழுதுகின்றார்கள்.

قال الربيع بن انس يعني ما ذكر عند ذبحه اسم غير الله

ஸஹாபாக்கள், தாபிஈன்களின் தீர்ப்பின்படி, இத்திருவசனத்தின் பொருள்,

அல்லாஹ் அல்லாதவரின் பெயர் கூறி அறுப்பது என்றுதான் முடிவு செய்யப்பட்டிருக்கின்றது.

2- நீங்கள் கூறும் இந்தப் பொருள் திருக்குர்ஆனுக்கே விரோதமாகும்.

திருக்குர்ஆன் கூறுகின்றது.

مَا جَعَلَ اللّٰهُ مِنْ بَحِيْرَةٍ وَّلَا سَآئِبَة وَّلَا وَصِيْلَةٍ وَّلَا حَامٍ وَّلٰكِن الَّذِيْنَ كَفَرُوْا يَفْتَرُوْنَ عَلَى اللّٰهِ الْكَذبَ

*பகீரா (காது பிளக்கப்பட்ட பெண் ஒட்டகம்) ஸாயிபா (சுயேச்சியாகத் திரியவிடப்பட்ட பெண் ஒட்டகம்.) வஸீலா (தாயுடன் குட்டியும் சேர்த்து விடப்பட்ட பெண் ஒட்டகம்) ஹாம் (வேலை வாங்காமல் பாதுகாப்பாக உள்ள ஒட்டகம் ஆகியவற்றை அல்லாஹ் (மார்க்கச் சின்னங்களாக) ஏற்படுத்தவில்லை; எனினும, காபிர்கள் அல்லாஹ்வின் மீது பொய்யைக் கற்பனை செய்கின்றனர்; அவர்களில் பெரும்பாலானவர்கள் அறிவு பெறாதவர்களாக இருக்கின்றனர்.*

*அல் குர்ஆன்: (5: 103).*

"பகீறா" உள்ளிட்ட மேற்படி நான்கு மிருகங்களையும் அரபுக் காபிர்கள் அவர்களின் விக்ரஹத்தின் பேரால் விட்டிருந்தனர், அதை உண்பதை ஹறாமாக்கினார்கள்; இவர்களின் இந்த விளக்கத்திற்கு திருக்குர்ஆன் மறுப்புத் தெரிவிக்கின்றது; இத்தனைக்கும் அவை உயிரோடிருக்கும் போது விக்கரகங்களின் பெயராலேயே அழைக்கப்பட்டன; அவற்றை உண்ணுமாறு ஆணையும் இடப்பட்டது.

كلوا مما رزقكم الله الخ ولا تتبعوا خطوات الشيطان الخ

அல்லாஹ் தந்ததை உண்ணுங்கள்.! ஷைத்தானின் அடிச்சுவட்டைப் பின்பற்ற வேண்டாம்.

தப்ஸீர் பத்ஹுல் பயானில்

ماجعل الله من بحيرة

என்ற திருவசனத்தின் விளக்கத்திலும், ஷறஹு முஸ்லிமில் இமாம் நவவி றஹ்மத்துள்ளாஹி அலைஹி كتاب الجنة وتعليمها باب للصفة التي يعرف بها في الدنيا اهل الجنة என்ற பாடத்திலும் பின்வருமாறு எழுதுகின்றார்கள்.

المراد انكار ما حرموا علي انفسهم من السائبة والبحيرة والحام وانها لم تصر حراما بتحريمه

இத்திருவசனத்தில் காபிர்கள் ஸாயிபா, பகீரா உள்ளிட்ட மிருகங்களை சாப்பிடுவதைத் தங்கள் மீது ஹறாமாக்கியதை நிராகரிப்பது தான் நோக்கமாகும், அவற்றை அவர்கள் ஹறாமாக்கியதால் இவை ஹறாமாகி விடுவதில்லை.

ஹிந்துக்கள் போன்றவர்கள் விக்ரகங்களின் பேரால் விட்டவை ஹறாமாக மாட்டாது, முஸ்லிம்கள் "பிஸ்மில்லாஹ்" கூறி அறுத்தால், ஹலாலாஹிவிடும்; என்பதை இதன் மூலம் புரிந்து கொள்கின்றோம்; ஆயினும், மற்றவரின் உரிமையில் அவை இருப்பதனால் அவ்வாறு செய்வதற்குத் தடை உண்டு.!

மேலும், அல்லாஹுத்த ஆலா கூறுகின்றான்.

وَقَالُوْا هٰذِهٖۤ اَنْعَامٌ وَّحَرْثٌ حِجْرٌ لَّا يَطْعَمُهَاۤ اِلَّا مَنْ نَّشَآءُ بِزَعْمِهِمْ

***மேலும் (தம் தெய்வங்களுக்கென ஒதுக்கிய சிலவற்றைக் குறித்து) இவை (புசிப்பதற்கு)தடுக்கப்பட்டுள்ள கால் நடைகளும், விவசாய (தானியங்களு) முமாகும். இவற்றை நாம் நாடியவரன்றி (வேறு எவரும்) சாப்பிடக் கூடாத என்று அவர்கள் கூறுகின்றனர். (இது) அவர்களுடைய தவறான எண்ணப்படியாகும்.***

*அல் குர்ஆன்: (6: 138).*

மேலும் கூறுகின்றான்.

وَقَالُوْا مَا فِىْ بُطُوْنِ هٰذِهِ الْاَنْعَامِ خَالِصَةٌ لِّذُكُوْرِنَا وَمُحَرَّمٌ عَلٰٓى اَزْوَاجِنَا‌ۚ

***இந்த கால்நடைகளின் வயிறுகளில் இருப்பவை எங்களின் ஆண் களுக்கு (மட்டும்) ஆகுமானவை; எங்களின் பெண்களுக்கு ஹறாமாக்கப் பட்டவை.***

*அல் குர்ஆன்: (6: 139).*

இவை விக்ரகங்களின் பெயரால் வக்பு செய்யப்பட்ட விவசாயத்திற்குரிய விலங்குகளாகும், காபிர்கள் அவற்றை ஹலாலாக்குவதில் கட்டுப்பாடு வைத்திருந்தனர்; இந்த கட்டுப்பாட்டுக்கு மறுப்புக் கூறப்பட்டுள்ளது; ஆயின்; விக்ரகங்களின் பேரால் விடப்பட்ட விலங்குகள் ஹறாம் இல்லையென்றால், வலிமார்களின் பேரால் பாத்திஹா ஓதுவதற்காக விடப்பட்டவை எப்படி ஹறாமாகும்?

3- புகஹாக்களான சட்ட அறிஞர்களின் தெளிவான கூற்றுக்கு மாறானதாகவே اهل என்பற்கு நீங்கள் கொடுக்கும் அர்த்தம் அமைந்திருக் கின்றது, நெருப்பு வணங்கி, அல்லது ஒரு முஷ்ரிக் நெருப்பை மூட்டுவதற்கு ஒரு முஸ்லிமை வைத்து மிருகத்தை அறுக்க வைத்தால், அந்த முஸ்லிமும் "பிஸ்மில்லாஹ்" கூறி அதை அறுத்தால், அது ஹலாலாகும் என்ற பதாவா ஆலம் கீரியின் வாசகத்தை முதல் அத்தியாயத்தில் முன்வைத்திருந்தோம்.

இதைப்போன்று வலிமார்களுக்காக நேர்ச்சை செய்யப்பட்டு வளர்க்கப்பட்ட மிருகம் "ஹலால்" என்று தப்ஸீர் அஹ்மதியில் கூறப்பட்டுள்ள சொற்றொடரையும் முன்வைத்திருந்தோம்.

4-இந்தக் கருத்தை அதாவது, اهل என்பதற்கு அகராதிப்பொருள் கொள்வதை புத்தியும் மறுக்கின்றது, அதாவது, அந்த மிருகம் உயிரோடு இருக்கும் போதும் சரி, அறுக்கும் போதும் சரி அல்லாஹ் அல்லாதவர் பெயர் கூறி அழைக்கும் மிருகத்தை ஹறாமாக்குவதால், மிருகம் தவிர்ந்த ஏனைய பொருட்களும் அல்லாஹ் அல்லாத வையில்சேருவதால் அவையும் கண்டிப்பாக ஹறாமாகி விடும்;ஏனெனில், وما اهل به غير الله அல்லாஹ் அல்லாதவர் பெயர் கூறப்பட்ட சகல பொருட்களும் என்பதில் “*மிருகம் மட்டும்*“ என்று குறிப்பிட்டுக் கூறப்படவில்லை.

அல்லாஹ்வை "நெருங்குதல்" என்ற எண்ணத்தில் அழைத்தாலோ, அல்லது, வேறு எண்ணத்தில் அழைத்தாலோ ஹறாமாகிவிடும்; இதன்படி, ஸைதின் ஆடு;உமரின் எருமை; ஸைதின் மாம்பழம்; பக்ரியின் மாம்பழத் தோட்டம்; இன்னாரின் மனைவி; உம்மு ஸஃதுக்கான கிணறு; இன்னா ருடைய பள்ளிவாசல்; என்னுடைய வீடு; தேவ்பந்து மத்ரஸா; இமாம் புகாரி அவர்களின் நூல்; உள்ளிட்ட சகல தொடர்புகளும் கூடாதவையாகி விடும்;அவற்றைப் பாவிப்பதும் ஹறாமாகிவிடும்.

புகாரி, திர்மிதி உள்ளிட்டவையில் அல்லாஹ் அல்லாத புகாரா, திர்மித்

என்ற பெயர்கள் இணைக்கப்பட்டுள்ளதால் அது கலப்பற்ற ஷிர்க்காகி விடும்.

ஒரு பெண்ணை அல்லாஹ்வின் அடிமை! என்று எவ்வளவு நேரத்திற்குத்தான் கூப்பிட முடியும்? அல்லாஹ் அல்லாதவர் பெயர் கூறப்படும் போதே சகலதும் ஹறாமாகி விடும்; மனைவியே! என்று கூப்பிட்டால் மட்டுமே அவள் ஹலாலாகுவாள்.

சில கட்டங்களில் அல்லாஹ் அல்லாதவருடன் சேர்க்கும் போது, அதன் பெறுமதி உயர்வடையும்; ஹைதராபாதில் கௌதுல் அஃழம் றழியல்லாஹு அன்ஹு அவர்களின் கையால் எழுதப்பட்ட திருக்குர்ஆன் இருந்தது; ஆங்கிலேயர்கள் அதனை இரண்டு இலட்சம் ரூபாய்க்கு விலை பேசினார்கள்; அதை அவர் கொடுக்கவில்லை; அமீர் அப்துர் றஹ்மான் அவர்களின் பாவனையிலிருந்ததை 50.000 ரூபாய்க்கு அமெரிக்கர்கள் வாங்கிச் சென்றனர்; பழைய (ஸர்க்கார் அலி பூரியின்) டிக்கெட்டுகள் பெறுமதியாகின்றன.

ஆகவே, اهل வுக்கான இந்தக் கருத்து பிழையாகும்; மார்க்கம், பகுத்தறிவு சகலத்திற்கும் விரோதமாகும்.

5- எவராவது ஒருவர் விக்ரஹத்தின் பேரால் ஒரு மிருகத்தை வளர்த்து, பின்னர் தவ்பாச்செய்தார்; தூய எண்ணத்தோடு அதை அறுத்தாராயின், கருத்து வேறுபாடில்லாமல் ஹலாலாகும்;

இது اهل என்பதற்குள்ளும் உள்ளடங்கி விடுகின்றது.ஒருவிடுத்தமாவது அல்லாஹ் அல்லாதவர் பெயர் கூறப்பட்டாலும் اهل என்ற வரம்புக்குள் வந்து விடும், ஆகவே, அறுக்கும் நேரத்தில் அல்லாஹ்வின் பெயர்கூறுவது *"கடமை"* என்பதை ஏற்கத்தான் வேண்டும்; அதற்கு முதல் அல்ல! ஒருவர் அறுக்கும் போது அல்லாஹ் அல்லாதவர் பெயர் கூறி அறுத்து, பின், இறைச்சியில் அல்லாஹ்வின் பேரில் நிய்யத் வைத்தால், எந்த வகையிலும் ஏற்க முடியாது.

இவ்வாறு, உயிரோடு இருக்கும் போது அல்லாஹ் அல்லாதவர் பெயர் கூறுவதுதான் கருத்தென்றால், ஒரு மனிதர் உயிரோடு இருக்கும் போது அல்லாஹ் அல்லாதவர் பெயர் கூறி பின்னர், அவர் தவ்பாச்செய்தபின், அல்லாஹ்வின் பெயர்கூறி அறுத்தால் கூட ஹறாமாகிவிடும்.

6- இதற்கு (اهل) அகராதிப் பொருள்தான் கொள்ளப்பட்டாலும், به என்பதன் மூலம் அழைப்பது குறிப்பாக்கப்படும். ஏனெனில் ب என்பது في உடைய கருத்தைக் கொடுக்கும்; இணைப்பு (مضاف) மறைந்திருக்கின்றது. அதாவது அறுக்கையிலே என்றாகும். இல்லையென்றால், به என்பதில் என்ன

பிரயோசனம் உண்டு? ب என்ற சொல் இல்லாமலேயே இந்த கருத்து اهل என்பதற்குள் வரத்தான் செய்யும். அறுக்கும் போது அல்லாஹ் அல்லாதவர் பெயர் கூறப்பட்டது "ஹறாம்" என்று தப்ஸீர் ஜமல் போன்றவையில் இந்த கருத்தில்தான் கூறப்பட்டுள்ளது. இதை மறுத்தால், தப்ஸீரின் கருத்தாக்கம் சுத்தம் பிழையாகி விடும்.

## குற்றச்சாட்டு - 2

ஒரு மிருகத்தை *"பிஸ்மில்லாஹ்"* கூறி அறுத்தார், அவர் மனதில் அல்லாஹ் அல்லாதவரிடம் நெருக்கத்தைப் பெறுதல் என்று இருந்தால்; அது ஹறாமாகும் என்பது ,பிக்ஹுப் பிரச்சினை (மஸ்அலா) ஆகும். ஆகவே, கியார்வீன் (முகைதீன் கந்தூரி, அல்லது பாத்திஹா) செய்பவர்களின் நிய்யத் கௌதுல் அஃழம் அவர்களைத் திருப்திப் படுத்துவதாகும், அறுக்கும் போது பிஸ்மில்லாஹ் கூறினாலும் கூட அல்லாஹ் அல்லாதவர் பால் நெருக்கம் ஏற்படுகின்றது; எனவே, இந்த விதியின் படி, ஹறாமாகின்றது. இந்த விதிக்கான திட்டவட்டமான விளக்கம் 3-ம் கேள்வியில் பின்னர் வரும்.

## பதில்:-

1- அறுப்பு நான்கு விதங்களில் இருக்கின்றன. அறுப்பின் பிரதான நோக்கம் குருதியை ஓட்டுவது. மாமிசம் அதைத் தொடர்ந்தது தான். குருதியை ஓட்டுவது றப்புடைய திருப்திக்காக இருந்தால் உதாரணமாக, குர்பானி, அகீக்கா, நேர்ச்சைக்கான மிருகம் இவற்றை அறுப்பது இபாதத் ஆகும். ஆயினும்; இவற்றில் இடம், நேரம் நிபந்தனையாகும்.

குர்பானியை குறித்த தேதியில் (துல்ஹஜ் 10, 11,12,13) தான் கொடுப்பது இபாதத் ஆகும். முந்திப் பிந்தி ஆகாது. ஹதிய்யி (ஹஜ்ஜில் ஹாஜி கொடுக்கும் மிருகம்) ஹறத்தில் மட்டுமே கொடுப்பது இபாதத் ஆகும். மாற்று இடத்தில் ஆகாது.

2- கத்தியின் கூர்மையைச் பரீட்சித்துப் பார்ப்பதற்காக அறுத்தல். இது இபாதத்துமல்ல! குற்றமுமல்ல! பிஸ்மில்லாஹ் சொல்லி அறுத்தால் ஹலால். இல்லையேல் ஹறாம்.

3- உண்பதற்காக அறுத்தல் உதாரணமாக, திருமண வலிமா, இறைச்சி வியாபாரத்திற்காக அறுத்தல். இதுபோன்று வலிமார்களுக்கு பாத்திஹா

ஓதுவதற்காக அறுத்தல். இவ்வகையான சகல அறுப்புக்களின் நோக்கம் மாமிசத்திற்காகும். இதைக்கூட "பிஸ்மில்லாஹ்" கூறி அறுத்தால், ஹலால். இல்லையேல் ஹறாம்.

4- அல்லாஹ் அல்லாத வரைத் திருப்திப்படுத்துவதற்காக குருதி ஓட்டுவதை மட்டும் நிய்யத் வைத்து அறுத்தல். இதில் மாமிசம் முக்கியமல்ல! உதாரணமாக, ஹிந்துக்கள் விக்ரகங்கள், அல்லது பிசாசுகளுக்குப் பலி கொடுத்தல்; இதில் குருதியை மட்டும் ஓட்டி விக்ரஹத்தைத் திருப்திப் படுத்துவது; இதை பிஸ்மில்லாஹ் என்று கூறி அறுத்தாலும் ஹறாமாகும். ஆனால், ஒரு நிபந்தனை. அறுப்பவரின் நோக்கம் பலிகொடுப்பது; அறுப் பதற்கு ஏற்பாடு செய்தவரின் நோக்கமல்ல! இந்த பிக்ஹு வாசகத்தின் நோக்கமும் இதுதான்.

திருக்குர்ஆன் கூறுகின்றது.

وَمَا ذُ بِحَ عَلَى النُّصُبِ

***இன்னும் நட்டப்பட் ட சிலைகளுக்காக அறுக்கப்பட்டவைகளும், (ஹறாம்).***

*அல் குர்ஆன்: (5: 3).*

தப்ஸீர் ஜமலில் கூறுகின்றார்கள்.

اي ما قصد بذبحه النصب ولم يذكر اسمها عند ذبحه بل قصد تعظيما بذبحه فعلي بمعني الام.
فليس هذا مكررا مع ما سبق من غير ذكره

அறுப்பதன் நோக்கம் விக்ரகங்களாகும், அறுக்கும் போது அதன் பெயரைக் கூறாதிருந்தாலும் சரிதான்! அல்லது விக்ரஹத்தைக் கண்ணியப்படுத்துவதற்காக என்று இருக்குமாக இருக்கும்; ஆகவே, அந்த மிருகம் ஹறாமாகும்.

இங்கு علي என்பதன் பொருள் لا மாகும். இதனால் இத்திருவசனத்தில் முதல் திருவசனத்தை மீண்டும் கூறியதாகாது. ஏனென்றால், وما اهل என்பதில் உள்ள நோக்கம் அறுக்கும் போது விக்ரஹத்தின் பெயரை உச்சரிப்பது.

இங்கே மிருகமே நோக்கமாகின்றது. இதை அறுப்பதன் நோக்கம் அதனைக் கண்ணகயப்படுத்துவது. அறுக்கும் போது அதன் பெயர்

கூறப்பட்டாவிட்டாலும் சரிதான்!

சுப்ஹானல்லாஹ்! எவ்வளவு முக்கியமான தீர்ப்பைக் கூறியுள்ளார்கள். விக்ரஹத்தின் பெயரைக்கூறி அறுப்பது وما اهل என்பதற்குள் அடங்கும். ஏதாவதொன்றை அறுக்கும் போது அல்லாஹ் அல்லாத வரைக் கண்ணியப் படுத்துவது நோக்கமாயின், وما ذبح علي النصب என்பதற்குள் அடங்கும்.

சில சட்ட அறிஞர்கள் இந்த இரண்டு விதங்களையும் அல்லாஹ் அல்லாதவர்களைக் கண்ணியம் படுத்துவதற்காக என்ற பொருளை வைத்து ما اهل என்பதிலிருந்து நிரூபித்திருக்கின்றார்கள். இந்த விதத்தில் தான் துர்ருல் முக்தாரின் வாசகம் அமைந்திருக்கின்றது.

இரண்டாவதாக, அல்லாஹ் அல்லாத வரைத் திருப்திப் படுத்துவதற்காக மிருகத்தின் குருதியை ஓட்டுவதன் தெளிவான நோக்கம் மாமிசம் நோக்கமல்ல! இதுதான் அல்லாஹ் அல்லாதவரின் நெருக்கமாகும்.. இதனை புகஹாக்கள் "ஹறாம்" என்று கூறியுள்ளனர்.

وذكر الروياني أن من ذبح للجن وقصد التقرب ألي الله ليصرف شرهم عنه فهو حلال وان قصد الذبح لهم فحرام

இமாம் றூயானி கூறுகின்றார்கள்.

ஜின்னின் தீங்கு நீங்க வேண்டும் என்பதற்காக அல்லாஹ்வின் நெருக்கத்தை நாடி ஜின்னுக்காக அறுத்தால் ஹலாலாகும், அறுப்பதை ஜின்களுக்கு என்று நாடினால் ஹறாம்.

*இத்திஹாப். பாகம்: 3 : பக்கம் : 407*

கியாராவீன் மற்றும் பாத்திஹாவுக்குரிய மிருகம் மூன்றாவது வகைக்குள் அடங்கும், நான்காவதில் அடங்காது;ஆகவே, ஹறாமல்ல! ஏனெனில், கியார்வீன் செய்பவரின் நோக்கம் இந்த மிருகத்தின் மாமிசத்தை சமைத்து பாத்திஹா ஓதி ஏழைகளுக்குப் பங்கிடுவதாகும்; இங்கு மாமிசம் தான் நோக்கமாகும். இந்த வேறுபாட்டை அவசியம் கவனத்தில் கொள்ள வேண்டும்.

சில தேவ்பந்திகள் கூறுகின்றார்கள்.

கியார்வீன் செய்கின்றவர்களின் நோக்கம் மாமிசமல்ல! ஏனென்றால்,

அவர்களுக்கு நிறைய மாமிசத்தைக் கொடுத்தாலும், அல்லது வேறு மிருகங்களைக் கொடுத்தாலும் அவர்கள் அதைப் பொருந்திக் கொள்வதில்லை என்பதைக் கண்கூடாகவே பார்க்கத்தான் செய்கின்றோம்.

அவர்களின் நோக்கம் மாமிசம் தான் என்றிருந்தால், பண்டமாற்றம் செய்யலாம்தானே! இதனால், கௌதுல் அஃலம் அவர்களின் பேரால், இரத்தம் ஓட்டுவது தான் அவர்களின் நோக்கம் என்பது தெரிய வருகின்றது.

இந்தக் கருத்து தவறானது! நிய்யத்தின் நிலையை நிய்யத் செய்பவன் தான் நன்கு அறிவான், ஆதாரமில்லாமல் முஸ்லிம்கள் மீது கெட்ட எண்ணம் வைப்பது ஹறாமாகும்.

ان بعض الظن حرام

நிச்சயமாக, சில எண்ணங்கள் ஹறாமாகும்.

பண்டமாற்றத்தை ஏற்காமலிருப்பதற்கான காரணம், இவன் பராமரித்து வளர்த்தது போன்று, அடுத்தவரின் மாமிசம் அமைவதில்லை என்பதனால் அதற்கு முக்கியத்துவம் கொடுப்பதில்லை; சிலர் வலிமாவுக்காக வேண்டி மிருகங்களை வளர்க்கின்றார்கள்; அங்கு மாமிசத்தைக் கொடுத்து பண்டமாற்றம் செய்யவதில்லை; சிலர் பாத்திஹாவுக்கு புதிய பாத்திரங்களை பாவிக்கின்றார்கள்; அந்த பாத்திரங்களில் பண்டமாற்றமில்லை.

எந்த மிருகத்தில் பாத்திஹா ஓதுவது என்று வாக்களித்தார்களோ அதை மாற்றக்கூடாது என்ற எண்ணம் சிலரிடம் இருக்கின்றது, உதாரணமாக, குர்பானிக்கான மிருகம்; இந்த எண்ணம் தவறு! தவறான எண்ணத்தால் அறுப்பு எப்படி ஹறாமாகும்.? முக்கியத்துவம் வேறு! பலி கொடுத்தல் வேறு!

சுருக்கம் வருமாறு, அல்லாஹ் அல்லாத வரைத் திருப்திப்படுத்துவது மட்டும் நோக்கமாயின், ஹறாம்.! அறுப்பு விருந்து, அல்லது பாத்திஹாவுக்காக இருந்தால், இன்னும் பாத்திஹா; அல்லது விருந்தில் எவராவது ஒருவரைத் திருப்திப்படுத்துவதற்காக என்றிருந்தால், ஹலால்.! ஏதாவது அல்லாஹ்வின் அடியானைத் திருப்திப் படுத்துவது என்று சட்ட அறிஞர்களின் வாசகத்தில் கிடையவே கிடையாது.

**குற்றச்சாட்டு : 3**

துர்ருல் முக்தார், ஆலம்கீரியில், அறுப்பு பற்றிய பாடத்திலும்; இமாம் நவவி றஹ்மத்துள்ளாஹி அலைஹி ஷறஹு முஸ்லிமிலும் தெளிவாக பின்வருமாறு கூறுகின்றார்கள்.

ذبح لقدوم الامير ونحوه كالواحد من العلماء يحرم لانه اهل عليه لغير الله ولو ذكر باسم الله

அரசர், அல்லது எவராவது ஒரு பெரிய மனிதரின் வருகைக்காக மிருகத்தை அறுப்பது ஹறாமாகும், அதில் அல்லாஹ் அல்லாதவரின் பெயர் கூறப்பட்டுள்ளது; அதில் அல்லாஹ்வின் பெயர் சொல்லப்பட்டாலும் சரிதான்.!

ஏதாவது ஒரு சந்தோஷத்துக்காக மிருகம் அறுத்தாலும் ஹறாம்தான்., அல்லாஹ்வின் பெயர்கூறி அறுத்தாலும் சரியே! என்பதை இதன் மூலம் தெரிந்து கொள்கின்றோம்;ஆகவே, கியார்வீனுக்கான மிருகம், கௌதுல் அஃழம் அவர்களை திருப்திப் படுத்துவதற்காகவே அறுக்கப்படுகின்றது; இதில் அல்லாஹ்வின் பெயர் கூறப்பட்டாலும் சரிதான்! ஆகவே, ஹறாமாகும்.

**பதில் :-**

இதற்குரிய முழுமையான பதில் 2ம் கேள்விக்கான பதிலில் கூறப்பட்டுள்ளது.

அரசர் அல்லது பலி பீடத்திற்குரிய நிய்யத்தில் அறுத்தால் ஹறாம் தான் என்பதை பலிபீடத்திற்கான சொல் விளக்கத்தில் விளக்கப்பட்டுள்ளது, அதாவது, குருதியை ஓட்டுவதில் அவரைத் திருப்திப் படுத்துவதுதான் நோக்கம்; மாமிசம் அதைத் தொடர்ந்ததாகும்; அரசர் அவரல்லாத வருக்கு விருந்தளிப்பதற்காக மிருகத்தை அறுத்தால், விருந்தின் நோக்கம் அரசரைத் திருப்திப்படுத்துவதாக இருந்தாலும் சரியே! மிருகம் ஹலால்!

துர்ருல் முக்தார் அறுத்தல் பற்றிய அதே பாடத்தில் கூறுகின்றார்கள்.

ولو للضيف لا يحرم لانه سنة الخليل واكرام الضيف اكرام الله والفارق انه أن قدمها ليأكل منها كان الذبح لله والمنفعة للضيف او للوليمةاو للربح وان لم يقدمها ليأكل منها بل يدفعها لغيره كان لتعظيم غير الله فتحرم

அறுப்பது விருந்தாளிக்காக என்றிருந்தால், ஹறாமாகாது.;காரணம், இது கலீலுள்ளாஹ் நபி இப்றாஹீம் அலைஹிஸ்ஸலாம் அவர்களின் வழியாகும்; விருந்தாளியைக் கண்ணியப்படுத்துவது அல்லாஹ்வைக் கண்ணியப்படுத்துவதாகும்;வித்தியாசத்துக்கான காரணம் இதுதான்; அதற்கான மாமிசத்தை விருந்தாளிக்கு முன்னால் வைத்து அதைச்சாப் பிட்டால், அறுப்பு அல்லாஹ்வுக்குரியதாகும்; அதன் பலன் விருந்தாளிக்கு

அல்லது, வலிமா, அல்லது வியாபாரம் உள்ளிட்டவைக்காகும்.

மாமிசத்தை விருந்தாளிக்கு முன்னால் வைக்காமல், யாரோ எவருக்காவது கொடுத்தால், இது அல்லாஹ் அல்லாதவரைக் கண்ணியப் படுத்துவதற்காகும்.; ஆகவே, ஹறாம்.! மாமிசத்தின் நோக்கம் இபாதத்தாகும்; இபாதத் அல்லாததில் வேற்றுமை உண்டு! ஆகவே, "ஹறாம்" என்பது இதன்மூலம் மிகத் தெளிவாகின்றது.

துர்ருல் முக்தாரில் வருகின்றது.

وفي صيد المنية أنه يكره ولا يكفر لأنا لا نسي الظن بالمسلم انه يتقرب الي الادمي بهذا النحر

இவ்வாறு செய்வது மக்றூஹ்! இதை அறுப்பவர் காபிராக மாட்டார்; காரணம், ஏதாவது ஒருமனிதருக்கு "இபாதத்" செய்கின்றார் என்று முஸ்லிம்கள் மீதுநாம் கெட்ட எண்ணம் வைக்கமாட்டோம்.

முஸ்லிம்கள் மீது கெட்ட எண்ணம் வைப்பது குற்றம் என்பது இதன் மூலம் தெரிய வருகின்றது, இதை விட விரிவான விளக்கம் "றத்துல் முக்தாரில்" உள்ளது;

இதுவரை கூறிய விளக்கத்தோடு போதுமையாக்கிக் கொள்கின்றோம்.

தப்ஸீர் றூஹுல் பயான் وما اهل به لغير الله என்ற திரு வசனத்திற்குக் கீழ் எழுதுகின்றார்கள்.

ما ذبح عند استقبال السلطان تقربا اليه افتي اهل البخاري بتحريمه وقال الرافعي هذا غير محرم لانهم انما يذبحونه استبشارا بقدومه فهو كذبح العقيقة لولادة المولود مثل هذا لا يوجب التحريم كذا في شرح المشارق

அரசரின் வருகையின் நிமித்தம் அவரின் நெருக்கத்திற்காக ஏதாவது ஒரு மிருகத்தை அறுத்தால், ஹறாம் என்று புகாராவைச் சேர்ந்தவர்கள் பத்வாக் கொடுத்துள்ளார்கள்.

இமாம் றாபிஈ றஹிமஹுல்லாஹ் அவர்கள் இது ஹறாமல்ல! என்று பத்வாக் கொடுத்துள்ளார்கள். காரணம், குழந்தை பிறந்த சந்தோஷத்தில் அகீக்கா கொடுப்பது போன்று, அரசரின் வருகையால் ஏற்பட்ட மகிழ்ச்சியால்தான் மிருகத்தை அறுத்துள்ளார்கள்; இப்படியான செயலால் மிருகத்தை ஹறாமாக்க முடியாது.

இவ்வாறு ஷறஹு மஷாறிக்கில் வருவதிலிருந்தும் தெரிய வருவது யாதெனில், அந்தக்காலத்தில் அரசரின் வருகைக்காக வீடுவீடாக மிருகங் களை அறுக்கின்ற சடங்கு இருந்திருக்கின்றது; இப்போது அந்த சடங்குகள் கிடையாது.

அரசருக்கான இபாதத் என்ற எண்ணத்தில் அறுத்தால் ஹறாம்; மகிழ்ச்சியை வெளிப்படுத்து வதற்காக மக்களுக்கு விருந்தளித்தால் ஹலால்; இந்த பத்வா காலத்தின் சடங்கின் வேறுபாட்டின் காரணத்தால் வழங்கப்பட்டதாகும்; கியார்வீன் பாத்திஹாவுக்கான மிருகத்தை அறுப்பதற்கும் அரசரின் வருகைக்காக அறுப்பதற்கும் எதுவித தொடர்பும் கிடையாது.

**குற்றச்சாட்டு: 4**

கியார்வீனின் நிய்யத்தில் மிருகம் வளர்ப்பவன்" முர்தத்" காரணம், அல்லாஹ் அல்லாதவருக்காக நேர்ச்சை செய்வது குப்றாகும்.;காபிர், முர்தத்தின் அறுப்பு ஹறாம். ஆகவே,, கியார்வீனை நம்புவனின் அறுப்பும் ஹறாமாகி விடும்.

ஷாமி பாகம் 2- அத்தியாயம் நோன்பு, மரணித்தவர்களுக்கு " நேர்ச்சை செய்தல்" என்ற பாடத்தில் எழுதுகின்றார்கள்.

والنذر للمخلوق لا يجوز لانه عبادة لا لمخلوق

**பதில் :-**

இதற்கான பதிலை ஏற்கனவே கூறியுள்ளோம்,இது ஷரீஅத்தினடிப் படையான நேர்சாசையல்ல; ஊர்வழக்கிலுள்ள நேர்ச்சையாகும்; அன்பளிப்பு, காணிக்கை என்பது இதன் பொருள்; நேர்ச்சை அல்லாஹ்வுக்குரியது; அதற்கான நோக்கம் இதுதான். இதில் எதுவித ஷிர்க்கும் கிடையாது; உஸ்தாதிடம் இது உங்களுக்கான நேர்ச்சைக்கான பணம் என்றால், அதன் பொருள் காணிக்கை, அன்பளிப்பு என்பதுதான்.

இத்துடன் இந்த ஆய்வு நிறைவு பெறுகின்றது. அல்ஹம்துலில்லாஹ்.! இன்ஷா அல்லாஹ் அடுத்த ஆய்வை எதிர்பாருங்கள்.!

# ஆய்வு-21
# பெரியோர்களின் கை, கால்களை முத்திமிடுவது பற்றிய ஆய்வு!

வலிமார்களின் கை, கால்களை முத்தமிடுவது போன்று அவர்களின் பறக்கத்திற்குரிய முடி, ஆடை உள்ளிட்டவையை முத்தமிடுவது, அதற்குக் மரியாதை செய்வது முஸ்தஹப்பாகும்.

இவை ஹதீதுகள், மற்றும் ஸஹாபாக்களின் செயல்கள் மூலம் நிரூபணமாயுள்ளது. ஆயினும்; சிலர் இதை மறுக்கின்றனர். ஆகவே,இந்த ஆய்வை இரு அத்தியாயங்களாக்கியுள்ளோம். முதற் அத்தியாயத்தில் அதற்கான ஆதாரங்களும், இரண்டாம் அத்தியாயத்தில் அதற்கான மறுப்புக்களும், பதில்களும் இடம் பெறும்.

## அத்தியாயம்-1

### முத்தமிடுவதற்கான ஆதாரங்கள்:

பறக்கத்தானவையை முத்தமிடுவது ஆகும்.

திருக்குர்ஆன் கூறுகின்றது.

وَّادْخُلُوا الْبَابَ سُجَّدًا

***இஸ்ரவேலர்களே! பைத்துல் முகத்தஸின் வாசலில் சுஜூது செய்தவர் களாகவும், எங்களுடைய பாவங்களை மன்னித்தருள்வாயாக! என்று கூறியவர்களாகவும்; நுழையுங்கள்.***

*அல் குர்ஆன்: (2: 58).*

இத் திருவசனத்திலிருந்து பைத்துல் முகத்தஸ், நபிமார்கள் துயில் கொள்ளும் இடம்; உள்ளிட்ட இடத்திற்கு "சுஜூது" செய்தவர்களாக நுழைந்து கண்ணியம் செய்யுமாறு பனூ இஸ்ரவேலர்களுக்குக்

கட்டளையிடப்பட்டுள்ளதை இதன் மூலம் அறிய முடிகின்றது; இதைப் போன்று பறக்கத்திற்குரிய இடங்களில் கேட்கப்படும் "தவ்பா" விரைவாக அங்கீகரிக்கப்படும் என்பதையும் அறியமுடிகின்றது.

மிஷ்க்காத் ஷரீபில் முஸாபஹா, முஆனக்கா பற்றிய பாடம்: பிரிவு 2-ல் பின்வரும் ஹதீது இடம்பெறுகின்றது.

وعن ذراع وكان في وفد عبد القيس قال لما قدمنا المدينة فجعلنا نتبادر من رواحنا فنقبل يد رسول الله صلي الله عليه وسلم و رجله

ஹளறத் திறாஃ றழியல்லாஹு அன்ஹு அறிவிக்கின்றார்கள், இவர் அப்துல் கைஸின் குழுவில் இடம் பெற்றவர்.

நாங்கள் மதீனா வந்து எங்கள் வாகனத்திலிருந்து இறங்கியதும்; விரைவாகச் சென்று றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் கையையும், காலையும் முத்தமிட்டோம்.

மிஷ்க்காத்தில் "பெரும் பாவங்கள்" என்ற அத்தியாயத்தில், "நயவஞ் சகத்தின் அடையாளங்கள்" என்ற பாடத்தில்" ஹளறத் ஸப்வான் இப்னு அஸால் மூலமான அறிவிப்பில் பின்வருமாறு பதியப்பட்டுள்ளது.

فتقبل يديه ورجليه

றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் இருகைகளையும், இருகால்களையும் முத்தமிட்டோம்.

மிஷ்க்காத் ஷரீபில், "மரணவேளையில் சொல்லப்பட வேண்டியது" என்ற பாடத்தில், திர்மிதி, அபூதாவூதின் அறிவிப்பில் பின்வருமாறு பதியப் பட்டுள்ளது.

عن عائشة قالت قبل رسول الله صلي الله عليه وسلم عثمان ابن مظعون وهو ميت

ஹளறத் உத்மான் இப்னு மழ்னூன் மைய்யித்தாக இருக்கும் போது, றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்கள் முத்தமிட்டார்கள்.

ஷிபா ஷரீபில் வருகிறது.

كان ابن عمر يضع يده علي المنبر الذي يجلس عليه رسول الله صلي الله عليه وسلم في الخطبة ثم يضعها علي وجهه

றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்கள் கொத்பா ஓதிய மிம்பரில் ஹளறத் இப்னு உமர் றழியல்லாஹு அன்ஹுமா அவர்கள் தனது கையை வைத்து முகத்தில் தடவி முத்தமிடுவார்கள்.

ஹளறத் இப்னு ஹஜர் அஸ்க்கலானி றஹ்மத்துள்ளாஹி அலைஹி பத்ஹுல் பாரி பாகம்: 6 பக்கம்: 115ல் பின்வருமாறு எழுதுகின்றார்கள்.

استنبط بعضهم من مشروعية تقبيل الاركان جواز تقبيل كل من يستحق العظمة من ادمي وغيره نقل عن الإمام احمد انه سئل عن تقبيل منبر النبي عليه السلام وتقبيل قبره فلم ير به بأسا ونقل عن ابن الصنف اليماني احد علماء مكة من الشافعية جواز تقبيل المصحف واجزاء الحديث وقبور الصالحين ملخصا.

கஃபத்துள்ளாஹ்வின் தூண்களை முத்தமிடுவதை அடிப்படையாக வைத்து மார்க்கப் பெரியார்கள், மற்றும் ஏனையோர்களின் பறக்கத்தான பொருட்களை முத்தமிடுவதை உறுதிப் படுத்தியுள்ளார்கள;

றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் மிம்பரை முத்திமிடுவது பற்றி இமாம் அஹ்மத் இப்னு ஹன்பல் றஹ்மத்துள்ளாஹி அலைஹி அவர்களிடத்தில் ஒருவர் கேட்டதற்கு, அதில் எவ்வித குற்றமுமில்லை என்று விடை பகர்ந்தார்கள்.

மக்காவில் ஷாபி மத்ஹபுடைய உலமாக்களில் ஒருவரான ஹளறத் இப்னு அபீ ஸின்புல் யமானி அவர்களிடமிருந்து பின்வரும் சொற்றோடர் நக்லு செய்யப்படுகின்றது.

திருக்குர்ஆன், ஹதீது உள்ளிட்டவையின் காகிதங்கள், மார்க்கப் பெரியார் களின் கப்றுகள் முதலியவையை முத்தமிடுவது ஆகும்.

தவ்ஷீஹ் என்ற நூலில் ஹாபிழ் ஜலாலுத்தீன் சுயூத்தி றஹ்மத்துள்ளாஹி அலைஹி எழுதுகின்றார்கள்.

استنبط بعض العارفين من تقبيل الحجر الاسود تقبيل قبور الصالحين

ஹஜருல் அஸ்வத் கல்லை முத்தமிடுவதிலிருந்து ஸாலிஹானவர்களின்

கப்றுகளை முத்தமிடலாம் என்று சில ஆரிபீன்கள் சட்டம் வகுத்திருக் கின்றார்கள்.

மேற்கண்ட ஹதீதுகள், முஹத்திதீன்கள்,; முபஸ்ஸிரீன்கள் உள்ளிட்ட வர்களின் ஆதாரங்களிலிருந்து பின்வருபவை உறுதியாகின்றன.

மார்க்கப் பெரியார்களின் கை, கால்; அவர்களின் ஆடை; பாதணிகள்; முடி மற்றும் சகல பறக்கத்தான பொருட்கள்; இவ்வாறே மகத்துவமிக்க கஃபா; திருக்குர்ஆன், ஹதீது நூற்களின் காகிதங்கள் உள்ளிட்டவையை முத்த மிடுவது ஆகும். இவை பறக்கத் மிக்கவையாகும்.

வலிமார்களின் முடி, ஆடை இன்னும்; சகல தபர்ருக்காத்துக்களையும் கண்ணியப்படுத்துவது; அவற்றை முன்வைத்து யுத்தம்; மற்றும் சோதனைனயான வேளைகளில் உதவி தேடுவது உள்ளிட்டவை திருக்குர்ஆன் மூலம் உறுதியாகியுள்ளது.

திருக்குர்ஆன் கூறுகின்றது.

وَقَالَ لَهُمْ نَبِيُّهُمْ اِنَّ اٰيَةَ مُلْكِهٖۤ اَنْ يَّاْتِيَكُمُ التَّابُوْتُ فِيْهِ سَكِيْنَةٌ مِّنْ رَّبِّكُمْ وَبَقِيَّةٌ مِّمَّا تَرَكَ اٰلُ مُوْسٰى وَاٰلُ هٰرُوْنَ تَحْمِلُهُ الْمَلٰٓٮِٕكَةُ ؕ

***இன்னும், அவர்களுடைய நபி அவர்களை நோக்கி "நிச்சயமாக அவருடைய ஆட்சி (அதிகாரத்து)க்குரிய அடையாளமாகிறது, உங்களிடம் ஓரு "தாபூத்" (பேழை) வரும்; அதில், உங்களுடைய றப்பில் நின்றும் (உங்களுக்குமன) அமைதி (அளிக்கக்கூடியது) இருக்கும்; அன்றியும், மூஸாவின் குடும்பத்தினரும், ஹாரூனின் குடும்பத்தினரும் விட்டுச் சென்றவற்றில் மீதியுள்ளதும் அதிலிருக்கும்; அதனை மலக்குகள் சுமந்து வருவார்கள்;***

*அல் குர்ஆன்: (2: 248).*

இத்திருவசனத்தின் விளக்கத்தில் தப்ஸீர் காஸீன், றூஹுல் பயான், தப்ஸீர் மதாரிக், ஜலாலைன் இன்னும் இதுவல்லாத தப்ஸீர்களிலும் பின்வருமாறு எழுதப்பட்டுள்ளது.

"தாபூத்" என்பது, தேக்கு மரத்தால் செய்யப்பட்ட பெட்டி; அதில் நபிமார்களின் உருவங்கள், (இவை மனிதனால் வரையப்பட்டவையல்ல! இறையாற்றலால் ஆனவை) அவர்களின் வீடுகளின் படம்; ஹளறத் மூஸா

அலைஹிஸ்ஸலாம் அவர்களின் கைத் தடி; இன்னும், அவர்களின் ஆடை; அவர்களின் இரு பாதரட்சைகள்; மேலும், ஹாரூன் அலைஹிஸ்ஸலாம் அவர்களின் கைத்தடி; அவர்களின் தலைப்பாகை இவைத் தவிர்ந்தவை இருந்தன.

பனூ இஸ்ரவேலர்கள் எதிரிகளோடு யுத்தம் செய்யும் போதெல்லாம், பறக்கத்திற்காக இவற்றை முன்னால் வைத்து துஆக் கேட்பார்கள்; இதன்மூலம் பெரியோர்களின் தபர்ருக்காத்துக்களிலிருந்து உதவி பெறுவதும்; அதற்கு மகத்துவம் வழங்குவதும் நபிமார்களின் வழி! என்பது உள்ளங்கை நெல்லிக்கனி போன்று தெளிவாகி விட்டது.

தப்ஸீர் காஸின், தப்ஸீர் மதாரிக், றூஹுல்பயான், தப்ஸீர் கபீர் உள்ளிட்ட தப்ஸீர்களில் فَلَمَّا ذَهَبُوا بِه என்ற திரு வசனத்தின் விளக்கத்தில் பின்வரும் குறிப்பைப் பதிவு செய்துள்ளார்கள்.

ஹளறத் யஃகூப் அலைஹிஸ்ஸலாம் ஹளறத் யூஸுப் நபி அலைஹிஸ்ஸலாம் அவர்களை அவர்களின் சகோதரர்களோடு அனுப்பி வைக்கும் போது, பாதுகாப்புக்காக, ஹளறத் இப்றாஹீம் நபி அலைஹிஸ்ஸலாம் அவர்களின் ஆடையை "தஃவீதாக" ஹளறத் யூஸுப் நபியின் கழுத்தில் கட்டி அனுப்பினார்கள்.

சகல தண்ணீரும் அல்லாஹுத்த ஆலா படைத்ததுதான். அப்படியிருக்க, ஸம்ஸம் நீருக்கு மட்டும் எதற்காக தனியான கண்ணியம்.? இது ஹளறத் இஸ்மாயீல் நபி அலைஹிஸ்ஸலாம் அவர்கள் காலடியிலிருந்து ஊற்ற றெடுத்ததனாலாகும்.

நபி இப்றாஹீம் அலைஹிஸ்ஸலாம் அவர்களோடு தொடர்பு பட்டதால் தான்" மகாமு இப்றாஹீம்" தொழுமிடமாக ஆகி அதன் கண்ணியம் உயர்ந்தது.

றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் தொடர்பினால் தான் மக்கத்துத் முக்கரமாவின் பக்கமாக சகலரின் தலை களையும் தாழ்த்த வேண்டி வந்தது.

لَآ اُقْسِمُ بِهٰذَا الْبَلَدِ وَاَنْتَ حِلٌّ بِهٰذَا الْبَلَدِ

***நபியே! நீர் இந்த நகரத்தில் இருக்கும் நிலையில் இந்த நகரத்தின் மீது சத்தியம் செய்கின்றேன்.***

*அல் குர்ஆன்: (90: 1, 2)*

மேலும், இந்த நகரத்தின் மீது சத்தியமாக! என்று அல்லாஹுத்த ஆலா சத்தியம் செய்ததும் நபியவர்களின் தொடர்பினால் தான்.

ஹளறத் அய்யூப் நபி அலைஹிஸ் ஸலாமவர்களைப் பார்த்து அல்லாஹுத்தஆலா கூறினான்.

اُرْكُضْ بِرِجْلِكَ هٰذَا مُغْتَسَلٌ بَارِدٌ وَّشَرَابٌ

***உம்முடைய காலால் (பூமியில்) அடியும், என்று கூறினோம்;) அவ்வாறு அவர் அடித்த போது ஓர் ஊற்று பொங்கியது;) இது குளிர்ந்த குளிக்கும் நீராகும்; இன்னும் குடிப்பதற்குமாகும்.***

*அல் குர்ஆன்: (38: 42).*

ஹளறத் அய்யூப் நபி அலைஹிஸ்ஸலாம் அவர்களின் காலிருந்து ஊற்றெடுத்த நீர் நோயைச் சுகப்படுத்தக் கூடியதாயிற்று,நபிமார்களின் காலிலிருந்து பொங்கிவரும்; நீர் மகத்தானதும், சுகம் கொடுக்க வல்லதும் என்பதை இதன்மூலம் புரிகிறோம்.

மிஷ்க்காத் “ஆடைகள்” என்ற அத்தியாயத்தின் ஆரம்பத்தில் பின்வரும் ஹதீது பதிவாகியுள்ளது.

ஹளறத் அஸ்மா பின்து அபீபக்கர் றழியல்லாஹு அன்ஹுமா அவர்களிடம் றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் முபாறக்கான ஒரு ஜுப்பா இருந்தது, மதீனா ஷரீபில் எவருக்காவது நோய் வந்தால், அதைக் கழுவி அந்த நீரைக் கூடிக்கக்கொடுப்பார்கள்.

இதே மிஷ்க்காத்தில் “உணவுகள்” என்ற அத்தியாயத்தில் “குடிப்பு” என்ற பாடத்தில் வருகிறது.

றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்கள் ஹளறத் கப்ஷா றழியல்லாஹு அன்ஹு அவர்களின் இல்லம் வருகை தந்த போது, அவர்களின் வீட்டிலிருந்த தோல்பையில் புனித வாயை வைத்து நீர் அருந்தினார்கள்; உடனே ஹளறத் கப்ஷா றழியல்லாஹு அன்ஹு அவர்கள் அந்தத் துண்டை வெட்டி பறக்கத்திற்காக வைத்துக் கொண்டார்கள்.

இதே மிஷ்க்காத்தில் தொழுகை பற்றிய அத்தியாயத்தில் மஸ்ஜிதுகள் என்ற பாடத்தில் இரண்டாம் பிரிவில் வருகின்றது.

ஒரு கூட்டத்தினர் றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்ல மவர்களிடம் வந்து இஸ்லாத்தைத் தழுவினார்கள், அதன் பின் கூறினார்கள். எங்கள் நாட்டில் (யூதர்களுக்கான) ஓர்ஆலையம் இருக்கின்றது; அதை

இடித்து விட்டு அந்த இடத்தில் பள்ளிவாசலைக் கட்டுவதற்கு விரும்பு கின்றோம் என்றதும்; றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல் லமவர்கள் ஒரு பாத்திரத்தில் நீரை எடுத்து அதில் கொப்பளித்து விட்டு; அந்த இடத்தை இடித்து தரைமட்டமாக்கிய பின், இந்த நீரை அங்கே தெளித்தபின் பள்ளிவாசலைக் கட்டச்சொன்னார்கள்.

இதிலிருந்து றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்ல மவர்களின் புனித உமிழ் நீர் குப்றுடைய அசுத்தங்களைத் தூரமாக்க வல்லது என்று விளங்க முடிகின்றது.

ஹளறத் காலித் இப்னு வலீத் றழியல்லாஹு அன்ஹு தனது தொப்பியில் றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் திரு முடியை வைத்திருந்தார்கள், யுத்தங்களுக்குச் செல்லும் போது அதை கண்டிப்பாக அணிந்து கொள்வார்கள்.

மிஷ்க்காத் ஷரீபில் "சுத்றா" பற்றிய பாடத்தில் வருகிறது.

றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்கள் வுழுச் செய்த போது ஹளறத் பிலால் றழியல்லாஹு அன்ஹு அதைக் கைதாங்கி எடுத்தார்கள். ஸஹாபாக்கள் அவரின் கையில் பட்ட நீரைத் தொட்டு தங்கள் முகத்தில் தடவிக் கொண்டனர்; நீர்கிடைக்காதவர்கள் அடுத்தவரின் கையிலிருந்த ஈரத்தைத் தடவி முகத்தில் தடவிக் கொண்டார்கள்.

மேற்கண்ட ஹதீதுகளிலிருந்து மார்க்கப் பெரியார்கள் பாவித்த பொருட்களிலிருந்து பறக்கத் பெறுவது ஸஹாபாக்களின் சுன்னத்தாகும்.

அடுத்து புகஹாக்களின் கூற்றுக்களை அவதானியுங்கள்.!

பதாவா ஆலம்கீரி அத்தியாயம் "கறாஹிய்யாத்", அரசர்களைச் சந்தித்தல் என்ற பாடத்தில் எழுதுகின்றார்கள்.

ان قبل يد عالم او سلطان عادل بعلمه وعدله لابأس به

ஒரு ஆலிம், அல்லது நீதியான அரசர் உள்ளிட்டவர்களை அவர்களின் அறிவுக்கும், நீதிக்குமாக கையை முத்தமிடுவதில் குற்றமேதுமில்லை.

இதே ஆலம்கீரியில் இதே அத்தியாயத்தில், "கப்றுகளைச் ஸியாரத் செய்தல்" என்ற பாடத்தில் எழுதுகின்றார்கள்.

ولا بأس بتقبيل قبر والديه وكذا في الغرائب

தனது தாய், தந்தையின் கப்றை முத்தமிடுவதில் குற்றமில்லை.

மேலும், இதே நூலில் “அரசர்களைச் சந்தித்தல்” என்ற பாடத்தில் எழுது கின்றார்கள்.

ان التقبيل علي خمسة اوجه ، قبلة الرحمة كقبلة الوالد ولده ، وقبلة التحية كقبلة المؤمنين بعضهم لبعض ، وقبلة الشفقة كقبلة الولد لوالديه ، وقبلة المودة كقبلة الرجل اخاه وقبلة الشهوة كقبلة الرجل امرأته وزاد بعضهم قبلة الديانة وهي قبلةالحجر الأسود

முத்தமிடுவது ஐந்து விதங்களில் உள்ளன.

1- இரக்கத்தில் முத்தமிடுவது,

உதாரணம், தந்தை தனது பிள்ளைய முத்தமிடுவது.

2- சந்திக்கும் போது முத்தமிடுவது.

உதாரணம், முஸ்லிம்கள் சிலர் சிலரை முத்தமிடுவது.

3-அன்புக்காக முத்தமிடுவது,

உதாரணம், பிள்ளை தனது பெற்றோரை முத்தமிடுவது.

4- நட்புக்காக முத்தமிடுவது,

உதாரணம், ஒருவர் தனது நண்பரை முத்தமிடுவது.

5- காமத்திற்காக முத்தமிடுவது,

உதாரணம். கணவன் மனைவியை முத்தமிடுவது.

ஒரு மார்க்கவாதியின் முத்தம் உதாரணம் ஹஜருல் அஸ்வத் கல்லை முத்தமிடுவதை சிலர் மேலதிகமாகச் சேர்த்துள்ளனர்.

துர்ருல் முக்தார் பாகம் 5- கறாஹத் அத்தியாயம், "முஸாபஹாச் செய்தல்" பற்றிய பாடத்தில், எழுதுகின்றார்கள்.

ولا بأس بتقبيل يد العالم والسلطان العادل

ஆலிம், நீதியான அரசர் உள்ளிட்டவர்களின் கையை முத்தமிடுவதில் குற்றமில்லை.

இதே இடத்தில் றத்துல் முக்தாரில் ஹாகிமின் ஒருஹதீதைப் பதிவு செய்கின்றார்கள். அதன் இறுதியில்,

قال ثم إذن له فتقبل رأسه ورجليه وقال لو كنت امرااحدا أن يسجد لأحد لامرت المرأة ان تسجد لزوجها وقال صحيح الاسناد

பின்னர், அவருக்கு அனுமதியளித்தார்கள், அவர் நபியவர்களின் சிரசையும்; இருகால்களையும் முத்தமிட்டார்; பின்னர், எவருக்காவது சுஜூது செய்வதாக இருந்தால், கணவனுக்கு மனைவி சுஜூது செய்யுமாறு அனுமதித்திருப்பேன் என்றார்கள்.

துர்ருல் முக்தாரில் இதே இடத்தில் ஆலம் கீரியைப் போன்று, ஐந்து வகை முத்தகங்களையும் கூறிய பின், மேலதிகமாக பின்வருபவற்றையும் சேர்த்துள்ளார்கள்.

قبلة الديانة : للحجر الأسود ، وتقبيل عتبة الكعبة ، وتقبيل المصحف ،قيل بدعة لكن روي عن ابن عمر انه كان يأخذ المصحف كل غداة ويقبله وأما تقبيل الخبز فجوز الشافعية انه بدعة مباحة وقيل حسنة.ملخصا

1- மார்க்க ரீதியான முத்தம். உதாரணமாக, ஹஜறுல் அஸ்வத் கல்லை முத்தமிடுவது, கஃபத்துல்லாஹ்வின் வாசற்படியை முத்தமிடுவது.

2- திருக்குர்ஆனை முத்தமிடுவது, சிலர் இதை "பித்அத்" என்கின்றனர், ஹளறத் இப்னு உமர் றழியல்லாஹு அன்ஹுமா அவர்கள் தினமும் காலையில் திருக்குர்ஆனை கையிலெடுத்து முத்தமிடுவார்கள் என்று அறிவிக்கப்படுகின்றது.

3- ரொட்டியை முத்தமிடுவது, ஷாபி மத்ஹபைச் சேர்ந்தவர்கள் *"ஆகும்"* அதாவது ஆகுமான பித்அத் என்றும்; சிலர் *"நல்ல பித்அத்"* என்றும் கூறு கின்றனர்.

மேலும், அல்லாஹுத்த ஆலா கூறுகின்றான்.

وَاتَّخِذُوا مِن مَّقَامِ اِبْرَاهِيمَ مُصَلًّي

"மகாமு இப்றாஹீம்" என்பது, ஹளறத் கலீலுள்ளா நபி இப்றாஹீம் அலைஹிஸ்ஸலாமவர்கள் கஃபாவைக் கட்டும் போது நின்று கட்டிய கல்லாகும், நபியவர்களின் திருப்பாதங்கள் அவற்றில் பதிந்ததால், இந்த சிறப்பு இதற்குக் கிடைத்தது; உலகம் முழுவதிலுமுள்ளவர்கள் இதை நோக்கி "சுஜூது" செய்கின்றனர்.

மேற்கண்ட சொற்றொடர்களின் மூலமாக "முத்தம்" பல விதங்களில் இருக் கின்றன, பறக்கத்திற்குரிய பொருட்களை முத்தமிடுவது மார்க்கவாதியின் அடையாளமாகும்; இதுவரை கூறியவை சாதகமானவர்களின் கூற்றுக்களாகும்.

மறுப்பாளர்களின் நாயகர் றஷீத் அஹ்மத் கங்கோஹி தனது பதாவா றஷீதிய்யா பாகம்-1 ஹலால், ஹராம் என்ற அத்தியாயம் பக்கம்-54ல் கூறுகின்றார்.

ஒரு மார்க்க வாதியைக் கண்ணியப் படுத்துவதற்காக எழுந்து நிற்றல் நல்லது; அவ்வாறுதான் அவரின் இருகால்களையும் முத்தமிடுவதும் சரிதான்; இது ஹதீதில் உறுதியாகியுள்ளது.

றஷீத் அஹ்மத். இதுதொடர்பான இன்னும் அதிகமான ஹதீதுகள், பிக்ஹு ஆதாரங்கள் இருக்கின்றன, அவற்றையும் முன்வைக்க முடியும்; இந்தளவு போதும் என்று நம்புகின்றோம்.

# *அத்தியாயம்: 2*
# *குற்றச்சாட்டுக்களும், அதற்கான பதில்களும்.*

பெரியார்களின் கை, கால்களை முத்தமிடுவது பற்றியும், தபற்றுக்காத்துக் களைக் கண்ணியப் படுத்துவது பற்றியும் பின்வரும் குற்றச்சாட்டுக்கள் முன்வைக்கப்படுகின்றன. இது தவிர, இன்ஷாஅல்லாஹ் வேறு குற்றச் சாட்டுக்கள் கிடைக்கவில்லை!

**குற்றச்சாட்டு**: 1

உலமாக்களுக்கு முன்னால் பூமியை முத்தமிடுவது "ஹறாம்" என்று

புகஹாக்கள் கூறுகின்றனர், மேலும், குனிந்து கண்ணியம் செய்வதும் ஹறாம்தான்;

காரணம், இது றுகூஉக்கு ஒப்பாக இருக்கின்றது; கண்ணியத்திற்காக சுஜூது செய்வது எப்படி ஹறாமோ, அப்படியே றுகூஉ மூலமாக கண்ணியம் செய்வதும் ஹறாமாகி விட்டது; குனிந்து ஒருவரின் காலை முத்தமிடுவதற்காக முகத்தை வைப்பது, றுகுஉ என்ன சுஜூதே நிகழ்கிறது.ஆகவே, இது ஹறாமாகும்.

துர்ருல் முக்தார் அத்தியாயம் “கறாஹத்” முஸாபஹா பற்றிய பாடத்தில் பின்வருமாறு பதிவு செய்கின்றார்கள்.

وتقبيل الأرض بين يدي العلماء والعظماء فحرام لانه يشبه عبادة الوثن

உலமாக்கள் மற்றும், பெரியோர்களுக்கு முன்னால் பூமியை முத்த மிடுவது ஹறாமாகும்; காரணம், இது சிலை வணக்கத்தை ஒத்திருக்கின்றது.

இதற்கு அடியில் றத்துல் முக்தாரில் பின்வருமாறு எழுதுகின்றார்கள்.

الايماء في السلام الي قريب الركوع كالسجود في المحيط أنه يكره الانحاء للسلطان وغيره وظاهر كلامهم علي اطلاق السجود علي هذا التقبيل

ஸலாம் கூறும் போது றுகூஉ வரை குனிந்து சுஜூது செய்வதைப் போன்றாகும், அரசர் உள்ளிட்டவர்களுக்கு முன்னால் குனிவது "மக்றூஹ்" என்று “முஹீத்” என்ற நூலில் கூறப்பட்டுள்ளது.

புகஹாக்களின் வெளிப்படையான கருத்து இதுதான்.!

அதாவது, இந்த முத்தமிடலை ஸஜ்தா என்றுதான் கூறுகின்றனர்,ஆகவே, ஒரு மனிதனுக்கு முன் குனிவது ஸஜதாவாகும்; அல்லாஹ் அல்லாதவருக்கு சுஜூது செய்வது ஷிர்கு! இதன்படி, எவராவது ஒருவரின் காலை முத்தமிடுவதும் ஷிர்க்காகும்.

ஹளறத் முஜத்தித் அல்பதானி ஸாஹிபவர்கள் அக்பர் சக்ரவர்த்தியின் அவைக்கு அழைக்கப் பட்டார்கள், உள்ளே நுழைபவர் குனிந்து வரவேண்டும் என்பதற்காக வாசல் குறுகியதாக இருந்தது; ஹளறத்தவர்கள் அங்கே பிரசன்னமாகிய போது முதலில் வாசலில் காலை நுழைத்து

குனியாமல் உள்ளே நுழைந்தார்கள்.

(இந்த குற்றச்சாட்டைத்தான் தேவ்பந்திகள் பரவலாகப் பேசுகின்றனர். ஆகவே இது முக்கியமானதாகும்.)

**பதில்:**

முதலில் ஸஜதாவுக்கான வரைவிலக்கணத்தையும், அடுத்து ஸஜதாவுக் கான சட்டங்கள், தொடர்ந்து ஒருவருக்கு முன்னால் குனிவது பற்றிய சட்டங்கள் உள்ளிட்டவையை கவனிக்கும் போது இந்தக் குற்றச்சாட்டு இருந்த இடம் தெரியாமல் மாயமாகி விடும்.

ஷரீஅத்தில் "ஸஜ்தா" என்பதில், "ஏழு உறுப்புக்கள்" தொடர்பு படவேண்டும், அதாவது, இரு பாதங்கள், இரு முட்டுக்கால்கள்; மூக்கு;இருக்கைகள்; நெற்றி; இத்துடன் ஸஜதாவின் நிய்யத்தும் அவசியமாகும்; இதை பொதுவாக சகல பிக்ஹு நூற்களிலும் தொழுகையின் பாடத்தில் ஸஜ்தாவைப்பற்றிய விளக்கத்தில் காணமுடியும்.

ஸஜ்தாவின் நிய்யத் இல்லாமல் ஒருவர் குப்புறப்படுத்தால், ஸஜ்தாவாகாது. உதாரணமாக, சில வேளை நோயாளிகள், அல்லது குளிர்காலத்தில் கட்டிலில் போர்த்திக்கொண்டு உருண்டு படுக்கும் போதும் இவ்வாறு நடப்பதுண்டு;

ஸஜ்தா இருவகைப்படும்.

1- ஸஜ்தா தஹிய்யத் (காணிக்கையான ஸஜதா)

2-வணக்கத்திற்கான ஸஜதா.

காணிக்கையான "ஸஜ்தா" என்பது, ஒருவரைச் சந்திக்கும் போது செய்கின்ற ஸஜதா,மற்றது; ஒருவரை தெய்வீகத்திற்குரியவராக நம்பிக் கொண்டு ஸஜதாச் செய்வது.

இபாதத்திற்கான ஸஜதாவை அல்லாஹ் அல்லாத வருக்கும் செய்வது ஷிர்க்காகும்; இது எந்த நபிமார்களினுடைய ஷரீஅத்திலும் ஆகுமானதாக இருக்க வில்லைஃ; காரணம், சகல நபிமார்களும் தவ்ஹீதையே கொண்டு வந்துள்ளனர்; ஷிர்க்கை எந்த நபியும் பரப்பவில்லை.

காணிக்கைக்குரிய "ஸஜ்தா" ஹளறத் நபி ஆதம் அலைஹிஸ்ஸலாம் தொட்டு றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் காலம் வரை அனுமதிக்கப்பட்டிருந்தது, மலக்குகள் ஹளறத் ஆதம் அலைஹிஸ்ஸலாமவர்களுக்கு சுஜூது செய்தார்கள்; ஹளறத் யஃகூப் அலைஹிஸ்ஸலாம் அவர்களும், ஹளறத் யூஸுப் அலைஹிஸ்ஸலாம்

அவர்களின் சகோதரர்களும்; நபி யூஸுப் அலைஹிஸ்ஸலாமவர்களுக்குச் சஜதாச் செய்தனர்.

தப்ஸீர் றூஹுல் பயானில்,

وَقِيْلَ بُعْدًا للقوم الظّٰلِمِيْن

*அநியாயக்காறர்களின் கூட்டத்திற்கு அழிவுதான் என்று கூறப் பட்டது.*

*அல் குர்ஆன்: (11:44).*

என்ற திரு வசனத்தின் விளக்கத்தில் ஹளறத் அபுல் ஆலியா மூலமாக ஒரு நக்லைப்பதிவு செய்து பின்வருமாறு எழுதுகின்றார்கள்.

ஹளறத் நூஹ் அலைஹிஸ்ஸலாமவர்களின் காலத்தில் ஷைத்தான் தவ்பாச் செய்ய விரும்பினான், ஹளறத் ஆதம் அலைஹிஸ்ஸலாமவர்களின் கப்றில் சுஜூது செய்யுமாறு ஷைத்தானுக்கு கூறுங்கள் என்ற கட்டளை ஹளறத் நூஹ் அலைஹிஸ்ஸலாம் அவர்களுக்கு வந்தது.

ஆதம் நபி உயிரோடு இருக்கும் போதே ஸஜதாச் செய்யாத நான் அவருடைய கப்றிலா சுஜூது செய்யப்போகின்றேன்? என்று இப்லீஸ் கூறினான்.

இஸ்லாம் இவ்வகையான ஸஜ்தாவை ஹறாமாக்கி விட்டது, ஆகவே, எந்தவொரு முஸ்லிமும் ஒருவருக்குக் காணிக்கையாக ஸஜதாவைச் செய்தால் பாவியாவான்; ஹறாமான ஒன்றைச் செய்த குற்றவாளியாவான்; முஷ்ரிக், காபிராக மாட்டான்.

மறுப்பாளர்கள் துர்ருல் முக்தாரிலிருந்து காட்டிய வாசகத்திலேயே பின்வரும் வாசகமும் உண்டு,

ان على وجه العبادة والتعظيم كفر وان علي وجه التحية لا وصار اثما مرتكبا للكبيرة

பூமியை முத்தமிடுவது இபாதத், மற்றும் கண்ணியமாக இருந்தால், குப்றாகும்; காணிக்கையாக இருந்தால், குப்றாகாது; பெரும்பாவத்தைச் செய்த குற்றவாளியாவான்.

இந்த வாசகத்திற்கு அடியில் றத்துல் முக்தாரில் இன்னும் தெளிவுபடுத்தி

யுள்ளார்கள்.

இதன்படி, ஒருவருக்கு முன்னால் "குனிதல்" இரு வகைப்படும்.

1- மரியாதைக்காக குனிவது, உதாரணமாக, "ஸலாம்" கூறும் போது குனிவது. அல்லது, கண்ணியமான ஒருவருக்கு முன்னால் நிலத்தை முத்தமிடுவது; இது றுகூஉடைய எல்லையைத் தொடுமாயின், ஹறாமாகும்; புகஹாக்கள் இதை ஹறாமாக்கியுள்ளார்கள்.

2- ஏதாவது வேலை நிமித்தம் அது கண்ணியத்திற்குரியதாக இருக்குமாயின், உதாரணமாக, ஒரு பெரியவரின் பாதணியை ஒழுங்கு செய்வது அல்லது, அவரின் பாதத்தை முத்தமிடுவது இவ்வகையான செயல்கள் அப்பெரியவரைக் கண்ணியப்படுத்துவது என்பதனால் ஆகுமாகும்; இந்த விதமாக கருத்து வைக்காவிட்டால், நாம் முன்வைத்த ஹதீதுகள், பிக்ஹு வாசகங்களில் நிலை என்னவாகும்.? இந்த குற்றச்சாட்டு தேவ்பந்திகளுக்கும் கூட பாதகமானதுதான்.

இவர்களின் குருபீடமான றஷீத் அஹ்மத் கங்கோஹி பெரியோர்களின் கால்களை முத்தமிடுவது ஆகும் என்று பத்வாக் கொடுத்திருக்கின்றார், ஹளறத் முஜத்தித் அல்பதானி கத்தஸல்லாஹு ஸிர்ரஹுல் அஸீஸ் அவர்களின் இச்செயல்அவர்களின் அதி உச்ச தக்வாவைக் காட்டுகின்றது.

அக்பர் அவருக்கு முன்னால் தன்னை ஸஜதாச் செய்ய வைக்கப் போகின்றார்; இந்த நோக்கத்தில் தான் அவருக்கு முன்னால் குனிந்து வருவதற்கு நாடுகிறார் என்று அவர்கள் புரிந்து கொண்டதால் தான் அவர்கள் குனிந்து செல்லவில்லை; இல்லை யென்றால்; குறுகிய வாசலில் குனிந்து கொண்டு நுழைவதால் எந்த விதமான மர்க்க ரீதியான குற்றமும் அவர்களைப் பிடிக்க மாட்டாது; இவ்வாறு அன்னார் குனிவது அக்பரைக் கண்ணியப்படுத்துவது அல்ல!

**குற்றச்சாட்டு : 2**

ஹளறத் அமீறுல் முஃமினீன் உமர் இப்னு கத்தாப் றழியல்லாஹு அன்ஹு ஹஜறுல் அஸ்வத் கல்லை முத்தமிட்ட பின், இவ்வாறு கூறினார்கள்.

آني اعلم أنك حجر لا تنفع ولا تضر ولولا آني رأيت رسول الله صلي الله عليه وسلم ما قبلتك

ஹஜறுல் அஸ்வதே! நீ நன்மையோ, தீமையோ செய்ய முடியாத ஒரு "கல்" என்பது எனக்குத் தெரியும், றஸூலுல்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் உம்மை முத்தமிட்டதை நான் காணாதிருந்திருந்தால், உன்னை முத்தமிட மாட்டேன் என்று கூறியது, மிகத்தெளிவாக ஹதீதுகளில் வந்துள்ளது.

இதிலிருந்து ஹளறத் உமர் றழியல்லாஹு அவர்களுக்கு ஹஜருல் அஸ்வத் கல்லை முத்தமிடுவதற்கு விருப்பமில்லை; நிர்பந்தத்தால் முத்தமிட்டார்கள் என்பது தெரியவருகின்றது; தபற்றக்காத்துக்களை முத்தமிடுவது பற்றி திட்டவட்டமான ஆதாரம் கிடையாது. ஆகவே, முத்தமிடாமல் இருப்பதுதான் பொருத்தமாகும்.

**பதில்:**

மௌலவி அப்துல் ஹை ஸாஹிப் ஹிதாயாவின் முன்னுரையான "மதீலியத்துல் ஹிதாயா" என்ற நூலில், "ஹஜருல் அஸ்வத்" என்பதற்கு அடியில் இதே ஹதீதை நக்லு செய்து பின் இவ்வாறு கூறுகின்றார்கள்.

ஹாகீமின் அறிவிப்பில், ஹளறத் அலி றழியல்லாஹு அன்ஹு அவர்கள் ஹளறத் பாறூக்குல் அஃழமைப் பார்த்து ஹஜருல் அஸ்வத் கல் நன்மையும் செய்யும், தின்மையும் செய்யும்

وَ اِذْ اَخَذَ رَبُّكَ مِنْۢ بَنِىْٓ اٰدَمَ مِنْ ظُهُوْرِهِمْ ذُرِّيَّتَهُمْ

***நீங்கள் உம்முடைய ரப்பு, ஆதமுடைய மக்களில் அவர்களுடைய முதுகு களிலிருந்து அவர்களுடைய சந்ததிகளை வெளியாக்கி, அவர்களைத் தங்களுக்கே சாட்சியாக்கி வைத்த பொழுது.***

*அல் குர்ஆன்: (7: 172).*

என்ற திருவசனத்தின் தப்ஸீரின் பக்கம் நீங்கள் கவனம் செலுத்தி யிருக்கலாம்; அந்த உறுதி மொழியை ஒரு தாளில் எழுதி ஹஜருல் அஸ்வத் கல்லில் வைத்துள்ளான்; ஹஜருல் அஸ்வத் கல் கியாமத் நாளில் வரும்; அதற்கு கண்ணும், நாவும், உதடும் இருக்கும்; இன்னும், முஸ்லிம்களுக்கு சாட்சி பகரும். ஆகவேதான் அல்லாஹ்வின் நம்பிக்கைக்குரியதும், امين الله முஸ்லிம்களுக்கான சாட்சியாகும். என்று பதில் கூறினார்கள்.

இதைக் கேட்ட ஹளறத் உமர் பாறூக் றழியல்லாஹு அன்ஹு அவர்கள்

لا ابقاني بارض لست فيها يا ابا حسن

அலியே! நீங்கள் இல்லாத இடத்தில் அல்லாஹ் என்னை அங்கு வைக்காமலிருப்பானாக! என்றார்கள்.

ஹஜருல் அஸ்வத் கல் நன்மை, தீமை செய்யும்; அதற்குக் கண்ணியம் செய்வது மார்க்கத்திற்கான கண்ணியமாகும் என்பதும் இதிலிருந்து தெரிய வருகின்றது.

ஹளறத் உமர் பாறூக் றழியல்லாஹு அன்ஹு ஹஜறுல் அஸ்வத் கல்லைப் பார்த்து அதை முத்தமிடுவதை வெறுத்துக் கூறியதல்ல! சுன்னத் தான ஒன்றை வெறுத்து சினமடைவது குப்றாகும்; . இவ்வாறு கூறியதன் நோக்கம் இதுதான்.!

அரபிகள் ஆரம்பத்தில் சிலை வணங்கிகளாக இருந்தனர், இஸ்லாம் பல சிலைகளை தகர்த்து விட்டு ஒரு கல்லின் பக்கம் எமது கவனத்தைத் திருப்பியுள்ளது என்று தப்பாக விளங்கிவிடுவார்களோ என்று பயந்து இவ்வாறு கூறினார்கள்.

இவ்வாறு கூறியதால், கல்லை வணங்குவது வேறு! முத்தமிடுவது வேறு! என்ற வேறுபாடு புரிந்து விட்டது.

ஹளறத் அலி றழியல்லாஹு அன்ஹு அவர்களின் இக்கூற்றை மறுக்கவில்லை. நன்மையோ, தின்மையோ செய்யாது என்ற கூற்றால் கேட்கின்றவர்கள் குழப்பமடையக் கூடாது என்பதற்காக இவ்வாறு தெளிவாகக் கூறினார்கள்.

அரபிகள் "கல்" சுயமாக நன்மை தின்மை செய்யும் என்று நம்பி யிருந்தனர்,. அவ்வாறில்லாமல் "கல்" சுயமாக நன்மை, தின்மை செய்யாது என்பது தான் ஹளறத் உமர் பாறூக் றழியல்லாஹு அன்ஹு அவர்களின் நோக்கமாகும்; ஆகவே, "கல்" மொத்தமாக நன்மை, தின்மை செய்யாது என்பது கருத்தல்ல! ஹளறத் உமர் பாறூக் றழியல்லாஹு அன்ஹு அவர்களும், ஹளறத் அலி றழியல்லாஹு அன்ஹு அவர்களும் மக்களுக்கு புரிய வைப்பதற்காகத்தான் இவ்வாறு கூறினார்கள்.

நமது இந்த விளக்கத்தினால் தேவ்பந்திகள், றாபிழிகள் உள்ளிட்டோரின் வாதம் தவிடு பொடியாகிவிட்டது.

ஹளறத் உமர் பாறூக் றழியல்லாஹு அன்ஹு அவர்கள் ஹஜருல் அஸ்வத் கல்லை முத்தமிடுவது தொடர்பான கூற்றுக்கு உங்களுடைய மறுப்பு ஆச்சரியமாக இருக்கின்றது.

மகாமுல் இப்றாஹீமை தொழுமிடமாக ஆக்கினார்கள், அதற்கு முன் ஸஜதாச் செய்தார்கள்; அதாவது,. நபில் தொழுதார்கள்.

وَاتَّخِذُوْا مِنْ مَّقَامِ اِبْرٰهٖمَ مُصَلًّى

என்ற திரு வசனம் அவர்களின் விருப்பப்படியே இறங்கியது, மகாமு இப்றாஹீமும் கல்லுதான்; அதற்கு முன் தொழுவதும், ஸஜதாச் செய்வதும் அவர்களுக்கு விருப்பமானதாகவே இருந்தது

**குற்றச்சாட்டு : 3**

றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களோடு தொடர்பு படுத்தப்பட்டு இப்போது நடைமுறையிலிருக்கின்ற தபர்ருக்காத்துக்கள் போலியானவையா? இல்லை உண்மையானவையா? என்று தெரியாது;. இவை உண்மையானவை தான் என்பதற்கு எந்த ஆதாரமும் கிடையாது; ஆகவே, அதை முத்தமிடுவதும், அதை மகத்துவப் படுத்துவதும் கூடாது.!

இந்தியாவில் பல்வேறு இடங்களில் றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் புனித திருமுடியைத் தரிசிக்கப் படுகின்றது. இது றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்வர்களின் புனித திருமுடி தான் என்பதற்கு எந்தவிதமான ஆதாரங்களும் கிடையாது.!

**பதில்:**

தபர்ருக்காத்துக்களைச் சியாறத் செய்வதற்கு அது றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் "தபர்ருக்காத்துக்கள்" என்று பிரபல்யமாக இருப்பதுவே போதுமானதாகும்; இதற்கு திருக்குர்ஆன் வசனங்கள், புகாரி ஷரீப் ஹதீதுகள் அவசியமில்லை, ஒவ்வொரு பொருளுக்குமான ஆதாரங்களும் ஒரே மாதிரியானவையல்ல!

விபச்சாரத்தை நிரூபிப்பதற்கு நான்கு தக்வாதாரிகளான முஸ்லிம்களின் சாட்சியம் அவசியமாகும்,ஏனைய கொடுக்கல், வாங்கல் விடயங்களுக்கு இரண்டு சாட்சிகள் போதுமாகும்; றமழான் தலைப்பிறைக்கு ஒரு பெண்ணின் சாட்சியும் கூட கவனத்தில் கொள்ளப்படும்; திருமணம், பரம்பரை, நினைவிடங்கள், நேரங்கள் உள்ளிட்டவைக்கு பிரபல்யமும், குறிப்பிட்ட அடையாளங்களும் போதுமாகும்.

எவராவது வழிப்போக்கர்களான ஒரு ஆணும், பெண்ணும் கணவன், மனைவியாக இருந்தால், அதைவைத்து இவர்கள் திருமணம் செய்தவர்கள் என்று சாட்சியம் பகர முடியும்.

சாதாரணமாக ஒருவரை இவர் இன்னாருடைய மகன், இன்னாருடைய பேரன் என்றெல்லாம் கூறுகின்றோம்; இதற்கெல்லாம் திருக்குர்ஆன், ஹதீஸ்களிலிருந்தோ, பெற்றோரின் திருமணப் பதிவைப் பார்த்தோ தீர்மானிப்பதில்லை. முஸ்லிம்கள் மத்தியில் பிரபல்யமாக இருப்பது தான் அதற்கான ஆதாரமாகும்; இவ்வாறு தான் நினைவிடங்களுக்கும் அதன் பிரபல்யமே போதுமான சான்றாகும்.

அல்லாஹுத்தஆலா கூறுகின்றான்.

اَفَلَمْ يَسِيْرُوْا فِى الْاَرْضِ فَيَنْظُرُوْا كَيْفَ كَانَ عَاقِبَةُ الَّذِيْنَ مِنْ قَبْلِهِمْ

***பூமியில் அவர்கள் பயணம் செய்து, தங்களுக்கு முன்னர் (வாழ்ந்து) இருந்தவர்களின் முடிவு எப்படி இருந்தது? என்பதை அவர்கள் பார்க்க வில்லையா?***

*அல்குர்ஆன்: (40: 82).*

கடந்த காலத்தில் வாழ்ந்த ஊர்களில் காஃபிர்களின் நினைவிடங்களைப் பார்த்து, சொற்கேளாமல் மறுதழித்தவர்களுக்கான முடிவு இதுதான் என்பதை எடுத்துக் கூறி அவ்விடங்களைச் சுற்றிப் பார்க்குமாறு மக்கத்துக் காபிர்களுக்கு இத்திருவசனத்தில் ஆர்வமூட்டப் பட்டுள்ளது, இந்த இடங்களில் இது இன்னாரின் வாழ்விடம், இன்ன சமுகம் வாழ்ந்த இடம் என்பதையெல்லாம் எப்படி அறிந்து கொள்வது? திருக்குர்ஆனும் இதற்கான முகவரியை வழங்கவுமில்லை; ஆகவே, பிரபல்யம் மட்டும் தான் கவனத்தில் எஞ்சியிருக்கின்றன.

இதன்மூலம் திருக்குர்ஆனும் பிரபல்யத்தைக் கவனத்தில் கொள் கின்றது என்பதைப் புரிந்து கொள்கின்றோம்.

“ஷிபா” என்ற நூலில் இமாம் காழி இயாழ் றஹ்மத்துள்ளாஹி அலைஹி எழுதுகின்றார்கள்.

ومن اعظامه واكباره اعظام جميع اسبابه واكرام مشاهده وامكنته ومعاهده وما لمسه عليه السلام او عرف به

றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களைக் கண்ணியப் படுத்தக் கூடிய வகையில், அவர்களோடு தொடர்பான காரணங்கள், இடங்கள்; அன்னாரின் திருமேனியைத் தொட்டவை; றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களோடு தொடர் பானவை என்று பிரபலமான ஏதாவதொன்று உள்ளிட்டவையையும் கண்ணியப்படுத்த வேண்டும்.

ஷறஹுஷ்ஷிபாவில் இதற்கு அடியில் அல்லாமா முல்லா அலி காரி றஹ்மத்துள்ளாஹி அலைஹி எழுதுகின்றார்கள்.

ان المراد جميع ما نسب إليه ويعرف به عليه السلام

இதன் நோக்கம் யாதெனில், எந்தப் பொருள் றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களோடு தொடர்பாக உள்ளதோ அதைக் கண்ணியப்படுத்த வேண்டும்.

மௌலானா அப்துல் ஹலீம் ஸாஹிப் லக்னவி றஹ்மதுல்லாஹி அலைஹி “நூறுல் ஈமான்” என்ற நூலில் எழுதுகின்றார்கள்.

اي ولو كان علي وجه الاشتهار من غير ثبوت اخبار في اثاره كذا قال ملاً علي قاري

இந்தப் பிரபலம் ஹதீதுகளில் இல்லாமல் பிரபலமாக இருந்தாலும் சரியே! இதுபோன்ற ஒரு வாசகத்தை அல்லாமா முல்லா அலி காரி றஹ்மத்துள்ளாஹி அலைஹி அவர்களும் தங்களுடைய “மஸ்லக் முதகஸ்ஸித்” என்ற நூலில் இதே விளக்கத்தைக் கூறியுள்ளார்கள்,. இதே போன்று ஹஜ்ஜின் சட்டங்களை எழுதியுள்ள உலமாக்கள் ஹறம் ஷரீபைனில் மக்கள் ஸியாரத் செய்து கண்ணியப்படுத்துகின்ற ஒவ்வொரு இடங்களையும் எழுதிவைத்துள்ளார்கள்.

பழாயில்(சிறப்புக்)கள் தொடர்பான அமல்களுக்கு ழயீபான ஹதீதுகளை ஆதாரமாகக்க கொள்ள முடியும் என்று புகஹாக்கள் சட்டம் கூறுகின்றனர்; ஆனால், கண்ணியத்துக்குரிய தபர்ருக்காத்துக்களுக்களை உண்மைப் படுத்துவதற்கு புகாரி ஷரீபிலிருந்து ஆதாரம் காட்டுமாறு மறுப்பாளர்கள் கேட்பதுதான் வியப்பிலும், வியப்பாக இருக்கின்றது.

**ஒரு சுவாரசியம்:**

"துவாறாஜீ காட்டியாவார்" என்ற ஊரில் "நகீனா" என்ற பள்ளிவாசலில் றபீஉல் அவ்வல் 12ம் நாளில் பயான் செய்தோம்,அங்கே றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் புனித "திருமுடி" ஸியாரத் செய்யப்படுகின்றது. முஸ்லிம்கள் ஸியாரத் செய்வார்கள்; ஸலவாத்துக்கான விர்தும் நடக்கும்; அந்த சந்தர்பத்தில் சிலர் அழுவார்கள்; சிலர் துஆக் கேட்பார்கள்; பார்பதற்கு ஆச்சரியமான காட்சியாக இருக்கும்.

இந்தச் சூழலில் ஒருநபர் மூலையில் அமர்ந்து கொண்டு முகத்தைச் சுழித்துக் கொண்டு கோபத்திலிருப்பது தெரிந்தது;அவருடைய முகம் துடித்துக் கொண்டிருந்தது.;அவரை நெருங்கி நீங்கள் கோபமாக இருப்பதற்கான காரணம் என்ன என்று கேட்டேன்.? பள்ளிவாசலில் "ஷிர்க்" நடக்கிறது என்றார்;

இது றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் திருமுடி தான் என்பதற்கும், இதைக் கண்ணியப்படுத்த வேண்டும் என்பதற்கும் என்ன ஆதாரமிருக்கின்றது என்றார்?. அவருக்கு நான் பதில் கூறாமல் உங்களின் பெயர் என்ன என்று கேட்டேன்.? அப்துர் ரஹ்மான். தயவு செய்து தந்தையின் பெயரைக் கூறமுடியுமா என்றேன்.? அப்துர்றஹீம் என்றார்; அதற்கு என்ன ஆதாரமிருக்கின்றது என்று கேட்டேன்.?

முதலில் தந்தை நிகாஹ் செய்ததற்கு சாட்சியில்லை; எவராவது இருந்தால், திருமண ஒப்பந்தம் நிகழ்ந்ததற்கு சாட்சி கூறலாம்; உங்களின் பிறப்பு அவருடைய கருவில்தான் தரித்தது என்பதற்கு என்ன ஆதாரம் என்றேன்? நான் அவரின் மகன்தான் என்று முஸ்லிம்கள் சாட்சி சொல்கின்றனர்;முஸ்லிம்களின் சாட்சியம் ஏற்கத்தக்கது தானே என்றார்.

இது றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் *"திரு முடி"* என்று முஸ்லிம்கள் சாட்சி பகர்கின்றனர்,அதுவும் ஏற்கத்தக்கது தானே! என்றேன்; இதைக் கேட்டதும் வெட்கித் தலைகுனிந்தவர் இது வேறு விடயம் என்று கூறி சமாளித்துக் கொண்டார்.

றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களை "ஹுளூர்" என்று கூறுவது பித் அத்! அவர்களின் பெயரையே கூறவேண்டும்;காரணம், *"ஹுளூர்"* என்று கூறுவதற்கு ஆதாரம் கிடையாது என்று மௌலானா குத்புத்தீன் பர்ஹிஜாரி கத்தஸல்லாஹு ஸிர்ரஹுல் அஸீஸ் அவர்களிடம் ஒரு தேவ்பந்தி கூறினார்;

அதற்கு ஆந்தையே! பொத்துவாயை என்று பதில் கூறினார்கள்; (வடநாட்டில் தேவ்பந்திகளை இவ்வாறு கூறுவார்கள்) இது என்ன பேச்சு?

என்று தேவ்பந்தி கேட்டார்? உங்களுக்கு “ஜனாப்” என்றும், “தாங்கள்” என்றும் கூறுவதும் பித்அத்துத்தான்;இதற்கு எங்கும் ஆதாரம் கிடையாது என்று பதில் கூறினார்கள்.

மறுமையில் தேவ்பந்திகளுக்குக் கடுமையான தண்டனை காத்திருக்கும் என்று நான் உறுதியாக நம்புகின்றேன்.

றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் மகாமன் மஹ்மூதாவில் கொலு வீற்றிருக்கும் போது அப்போது அன்னாரின் சம்பூரணமான அதி உச்ச தகுதி உலகத்தில் உள்ள அனைவருக்கும் வெளியாகும்.

اللهم ارزقنا شفاعته صلي الله عليه وسلم

யாஅல்லாஹ்! றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர் களின் ஷபாஅத்தை எங்கள் அனைவருக்கும் நஸீபாக்கித் தந்தருள்வாயாக! ஆமீன்.!

**குற்றச்சாட்டு: 4**

றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் புனித இரு பாதரட்சையின் மாதிரிப்படம் உண்மையானதல்ல! இது உங்களின் பேனாவால் வரையப்பட்ட போட்டோவாகும். பின்னர், அதற்கு கண்ணியம் எதற்காகச் செய்கின்றீர்கள்.?

**பதில் :**

இது உண்மையான இரு பாதரட்சையின் பிரதிதான்! ஆகவேதான், இது அதற்கான ஹிகாயத்தாகும்; ஹிகாயத்திற்கும் மரியாது செய்யத்தான் வேண்டும்; லாகூரில் அச்சிடப்பட்ட திருக்குர்ஆன் ஷரீப், அதற்கான காகிதம், மை உள்ளிட்டவை வானத்திலிருந்து இறங்கியவையல்ல; நமது தயாரிப்புத்தான். ஆ யினும்; அஸலுக்கான கண்ணியம் நகலுக்கும் கொடுக்க வேண்டியது வாஜிபாகும்.

ஒவ்வொரு றபீஉல் அவ்வல் மாதமும், ஒவ்வொரு திங்களும் கண்ணியம் பொருந்திய அஸலின் பிரதிகள் தான், அதனால் தான் அசலான்

கண்ணியத்தை பிரதிக்கும் வழங்குகின்றோம்.

இத்துடன் இந்த ஆய்வு நிறைவடைகிறது

# ஆய்வு-22

# அப்துன் நபி, அப்துர் றஸூல் என்று பெயர் வைப்பது பற்றிய ஆய்வு

அப்துன் நபி, அப்துர் றஸூல், அப்துல் முஸ்தபா, அப்துல் அலி (عبد العلي) உள்ளிட்ட பெயர்கள் வைப்பது ஆகும், இவ்வாறு தன்னை றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் அடிமை என்று கூறுவதும் ஆகுமானதுதான்.

இதற்கு திருக்குர்ஆன், ஹதீதுகள், புகஹாக்களின் கூற்றுக்கள் ஆதாரங்களாக இருக்கின்றன, ஆயினும்., சிலர் இதை மறுக் கின்றனர்; ஆகவே, இவ்வாய்வை இரு அத்தியாயங்களாக்கியுள்ளோம்; முதல் அத்தியாயத்தில் இதற்கான ஆதாரங்களும்; இரண்டாம் அத்தியாயத்தில் மறுபாளர்களின் குற்றச்சாட்டுக்களும்; பதில்களும் இடம் பெறும்.

## அத்தியாயம்: 1

திருக்குர்ஆன் கூறுகின்றது.

وَاَنْكِحُوا الْاَيَامٰى مِنْكُمْ وَالصّٰلِحِيْنَ مِنْ عِبَادِكُمْ وَاِمَآئِكُمْ

***இன்னும் உங்களில் (ஆணோ,பெண்ணோ திருமணமாகாதவர் களுக்கும், உங்களுடைய அடிமை ஆண்கள், அடிமைப் பெண் களிலிருந்து நல்லவர்களுக்கும் நீங்கள் திருமணம் செய்து வையுங்கள்;***

*அல் குர்ஆன்: (24: 32).*

இத்திருவசனத்தில் "உங்களின் அடிமை" என்று குறிப்பிடப்பட்டுள்ளது.

قل ياعبادي الذين اسرفوا علي انفسهم  لا تقنطوا من رحمة الله

***“தம் ஆத்மாக்களின் மீது (பாவங்கள் செய்து) வரம்பு மீறி விட்ட என்னுடைய அடியார்களே! அல்லாஹ்வுடைய ரஹ்மத்தை விட்டும் நீங்கள் நிராசையடைய வேண்டாம்.***

*அல் குர்ஆன்: (39: 52).*

எனது அடியார்களே! என்பதில் இருவிதமான கருத்துப் பொருத்தம் உள்ளன.

1) எனது அடியார்களே! என்று றப்புத் தஆலா கூறுவது.

2) என்னுடைய அடியார்களே! என்று றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களுக்குக் கூறுமாறு கட்டளையிடப்பட்டுள்ளது.

இரண்டாவது கருத்தின்படி, றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் அடிமைகள் என்பது கருத்தாகும்.; அதாவது, றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் அடிமை, அடிமைப் பெண் என்றாகும்; இரண்டாவது கருத்தையே அதிகமான முபஸ்ஸிரீன்கள் தேர்வு செய்துள்ளனர்.

மஸ்னவி ஷரீபில் மௌலானா ரூமி றஹ்மத்துள்ளாஹி அலைஹி அவர்கள் பாடுகின்றார்கள், றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்கள் திருக்குர்ஆனில் "குல் யா இபாதீ" என்று கூறிய படி, உலகத்தில் உள்ள சகலர்களையும் தனது அடிமை என்று கூறியுள்ளார்கள்;

ஹாஜி இம்தாதுல்லாஹ் ஸாஹிப் “ஸாலிபா நபஹாமக்கியா தர்ஜமா ஷமாயில் இம்தாதியா” என்ற நூலில் பக்கம்: 135ல் எழுதுகின்றார்.

அல்லாஹ்வின் அடியார்களை "றஸூலின் அடிமைகள்" என்று கூற முடியும். அல்லாஹுத்தஆலா கூறுகின்றான். “என்னுடைய அடியார்களே! என்று கூறுங்கள்” என்று வந்துள்ளது. இத்திருவசனத்தில் கூறுங்கள், என்பது றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களைக் குறிக்கும்.

அஷ்ரப் அலி தானவியும் கூட “எனது அடியார்களே! கூறுங்கள்” என்று தான் தன்னுடைய தர்ஜமாவில் மொழிபெயர்த்துள்ளார்.

ஷாஹ் வலியுள்ளாஹ் கத்தஸல்லாஹு ஸிர்ரஹுல் அஸீஸ் அவர்கள் தனது “இஸாலத்துல் கபா” ( ازلة الخفا ) என்ற நூலில் الرياض النضرة என்ற நூலிலிருந்து மேற்கோள் காட்டி கூறுகின்றார்கள்.

ஹளறத் அமீறுல் முஃமினீன் உமர் றழியல்லாஹு அன்ஹு அவர்கள் மிம்பர் மேடையில் கொத்பாப் பிரசங்கம் நிகழ்த்தும் போது இவ்வாறு கூறினார்கள்.

قد كنت مع رسول الله صلي الله عليه وسلم فكنت عبده وخادمه

நான் றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களோடு இருந்துள்ளேன், எனவே, நான் அவர்களின் அடிமை, அவர்களின் ஊழியன் ஆவேன்.

மஸ்னவி ஷரீபில் பின்வரும் நிகழ்வை நக்லு செய்கின்றார்கள்.

ஹளறத் அபூபக்கர் றழியல்லாஹு அன்ஹு அவர்கள் ஹளறத் பிலால் றழியல்லாஹு அன்ஹு அவர்களை பணம் கொடுத்து வாங்கி, றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கு முன்னால் நிறுத்தி விட்டு, நாங்கள் இருவரும் தங்களுக்கு முன்னால் அடிமைகள். நான் இவரை உங்களுக்கு முன்னால் உரிமை விடுகின்றேன் என்றார்கள்.

துர்ருல் முக்தார் நூலில் அதன் ஆசிரியர் முன்னுரையில் தனது அறிவுக் கானஆசிரியர்களின் பெயர் சங்கிலித் தொடரைக் குறிப்பிடும் போத

فاني ارويه عن شيخنا الشيخ عبد النبي الخليلي

நான் அதனை எனது ஷைகாகிய அப்துன் நபி கலீலிய்யி என்பவரைத் தொட்டும் அறிவிக்கின்றேன் என்று குறிப்பிட்டுள்ளார்கள்; இதிலிருந்து துர்ருல் முக்தார் நூலின் ஆசிரியரின் பெயர் "அப்துன் நபி" என்று தெரிய வருகின்றது.

றஷீத் அஹ்மத் கங்கோஹி அவர்களைப்பற்றி மஹ்மூதுல் ஹஸன் பாடிய இரங்கப்பாவில் பின்வருமாறு உள்ளது.

அங்கீகாரம் அவரிலிருந்து தான் கூறப்படுகின்றது, அங்கீகரிக்கப்பட்டதும் இவ்வாறு தான் அமைகிறது; கறுத்த அடிமையாகிய அவரின் பெயர் இரண்டாவது யூஸூபாகும்.

இதிலிருந்து றஷீத் அஹ்மத் கங்கோஹிக்கு "கறுத்த அடிமை" என்றும், இரண்டாவது யூஸூப் என்றும் கூறப்படும்.

இதன்படி, "அடிமை" என்பதை அல்லாஹ் அல்லாதவர்களுடன் சேர்க்கப்பட்டு திருக்குர்ஆனிலும், ஹதீஸிலும் புகஹாக்களின் நூற்களிலும்,

மறுப்பாளர்களின் மூலமும் நிரூபணமாகியுள்ளது; அரபிகள் சாதாரணமாகவே எனது அடிமை என்று கூறுவார்கள்.

சுவாரசியமானது விடயம்என்னவென்றால், தக்வியத்துல் ஈமான், (பிஹிஷ்தி ஜேவர்) என்ற நூற்களில், அலிபக்ஷ், பீர்பக்ஷ், குலாம் அலி, மதார் பக்ஷ் அப்துன் நபி உள்ளிட்ட பெயர்களை வைப்பது ஷிர்க் என்று கூறி யுள்ளார்.ஆனால், தத்கிறதுர் றஷீதிய்யா பாகம்:1 பக்கம்:13ல் றஷீத் அஹ்மதின் குடும்ப ஸில்ஸிலா இவ்வாறு எழுதப்பட்டுள்ளது;

தந்தை வழி: றஷீத் அஹ்மத்பின், மௌலானா ஹிதாயத் அஹ்மத் பின் காழி பீர்பக்ஷ், பின்குலாம் ஹஸன் பின் குலாம் அலி .தாய் வழியில், றஷீத் அஹ்மத் பின் கரீமுன்நிஸா பின்து, பரீத் பக்ஷ் இப்னு குலாம் காதிர் இப்னு முஹம்மது ஸாலிஹ் இப்னு குலாம் அஹ்மது தேவ்பந்தி

இதன்படி, றஷீத் அஹ்மதின் குடும்பத்தின் பெரியோர்கள் முர்தத், முஷ்ரிக்குகளா? இல்லையா? இல்லையென்றால், ஏன்? உண்டு என்றால், முர்தத்தின் பிள்ளைகள் ஹலாலானவர்களா? ஹறாமிகளா?

# *அத்தியாயம். : 2*

# *குற்றச்சாட்டுக்களும், பதில்களும்.*

**குற்றச்சாட்டு : 1**

அப்து என்றால், இபாதத் செய்பவன் ( عابد ) என்பது பொருள, இதன்படி,"அப்துன் நபி " என்றால், "நபிக்கு இபாதத் செய்பவன்" என்பது கருத்தாகும்; இந்தக் கருத்து சுத்தமான ஷிர்க்காகும்; ஆகவே, இவ்வாறு பெயர் வைக்கக்கூடாது.

**பதில்:**

"அப்து" என்பதற்கு "ஆபித்" என்றும், "காதிம்" என்றும் பொருள் உண்டு.! "அப்து" என்பதை அல்லாஹ்வின் பக்கம் சேர்த்தால், "இபாதத் செய்பவன்" என்று பொருள்; அல்லாஹ் அல்லாதவர்களின் பக்கம் சேர்த்தால், "ஊழியன்" "தொண்டன்" என்று பொருள் வரும்.ஆகவே,"அப்துன்நபி" என்றால் "நபியின் ஊழியன்" என்பது அகராதிப் பொருளாகும்.

பதாவா ஆலம் கீரியில் كتاب الكراهيت، باب تسمية الاولاد என்ற பாடத்தில் பின்வருமாறு எழுதுகின்றார்கள்.

والتسمية باسم يوجد في كتاب الله تعالي جائزة كالعلي والرشيد ، والبديع ، لانه من الاسماء المشتركة ويراد في حق العباد ما لا يراد في حق الله تعالي كذا في السراجية

திருக்குர்ஆனில் வருகின்ற பெயர்களைச் சேர்த்து வைப்பது ஆகுமானதே! உதாரணமாக, அலி, றஷீத், பதீஃ காரணம், இவை இருவருக்கும் கூட்டான வையில் நின்றுமானவை; இதில் அடியாருக்கு வரும் கருத்து அல்லாஹ்வுக்கு வரமாட்டாது.

இதிலிருந்து அல்லாஹ்வின் பெயரும் அலி, ஹளறத் அலி றழியல்லாஹு அன்ஹு அவர்களின் பெயரும் “அலி” இதுபோன்று அல்லாஹ்வுக்கும் றஷீத், பதீஃ என்று பெயர்கள் உள்ளன.

இதே பெயர்கள் அடியார்களுக்கும் இருக்கின்றன;இப்பெயர்கள் அல்லாஹ்வுக்குக் கூறும் போது இதன் பொருள் வேறு! அடியார்களுக்குக் கூறும் போது பொருள்வேறு! இதன்படி, அப்துல்லாஹ் என்றால், அல்லாஹ் வின் அடிமை! அப்துன்நபி என்றால், நபியின் ஊழியன் என்று பொருள் வரும்; இவ்வாறு பொருள் வைக்கா விட்டால், من عبادكم “*உங்களின் அடிமையிலிருந்து*“ என்ற திருமறை வசனத்திற்கு என்ன பொருள் வரும்?

**குற்றச்சாட்டு : 2**

மிஷ்க்காத்தில் كتاب الادب باب الاسامي என்ற பாடத்திலும், ஸஹி முஸ்லிம் பாகம்: 2, كتاب الالفاظ من الادب وغيره என்ற பாடத்திலும் பின்வரும் ஹதீது பதிவாகியுள்ளது.

لا تقولن احدكم عبدي وامتي كلكم عبيد الله وكل نسائكم اماء الله ولكن ليقل غلامي وجاريتي

என்னுடைய அப்து(அடிமை) என்று உங்களில் எவரும் கூறக்கூடாது. நீங்கள் அனைவரும் அல்லாஹ்வின் அடிமைகள்தான்; உங்களுடைய சகல பெண்களும் அல்லாஹ்வின் அடிமைப் பெண்கள்தான்; ஆகவே, குலாமீ, ஜாரியத்தீ என்று அழையுங்கள்! இதிலிருந்து அல்லாஹ் அல்லாத வரை "அப்து" என்ற சொல்லோடு சேர்த்துக் கூறுவது ஹதீதுகளுக்கு எதிராகும்;

ஆகவே,இவ்வாறு பெயர் வைப்பது ஹறாமாகும். அப்துன் நபியிலும் இதே விடயம் உள்ளதால் கூடாது.

**பதில்:**

இந்த தடை மக்றூஹ் தன்ஸீஹின் அடிப்படையிலுள்ளது, *"அப்தீ"* என்பது நல்லதல்ல! குலாமீ என்பது மேலானது!

மேற்கண்ட ஹதீஸுக்கு அடியில் இமாம் நவவி றஹ்மதுல்லாஹி அலைஹி ஷறஹு முஸ்லிமில் எழுதுகின்றார்கள்.

فان قيل قد قال النبي عليه السلام في اشراط الساعة ان تلد الامة ربتها ،فالجواب: من وجهين
احدهما ان الحديث الثاني لبيان الجواز وان النهي في الاول للادب وكراهة التنزيه لا لتحريم

கியாமத்தின் அடையாளத்தைப் பற்றி றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்கள் "அடிமை எஜமானைப் பெறுவது!" என்று கூறியுள்ளார்களே! என்று வினா எழுப்பினால், (அதாவது எஜமானை "றப்பு" என்று கூறப்பட்டுள்ளது) இதற்கு இரண்டு விதத்தில் பதில் கூறமுடியும்;

இரண்டாவது ஹதீது ஆகும் என்பதை விளக்குவதற்குரியது. முதலாவது ஹதீது "ஒழுக்கம்" பற்றியது; இது "மக்றூஹ் தன்ஸீஹ்" தவிர, ஹறாமல்ல!

இதே இடத்தில் ஸஹி முஸ்லிமில் இவ்வாறும் பதிவாகியுள்ளது.

لا يقولن احدكم العنب الكرم فان الكرم الرجل المسلم ،وايضا،لاتسموا العنب الكرم فان الكرم المسلم

திராட்சையை "கறம்" என்று அழைக்க வேண்டாம், காரணம்; "கறம் என்பது, முஸ்லிமாகும்.

மிஷ்க்காத்தில் باب الاسامي ،كتاب الادب என்ற பாடத்தில் வருகின்றது.

ان الله هو الحكم واليه الحكم لم تكني ابا الحكم

"ஹகம்" என்பது, அல்லாஹ்! உமது பெயரை "ஹகம்" என்று எதற்காக வைத்தீர்? என்று றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி

வஸல்லமவர்கள் கேட்டார்கள்.

மிஷ்க்காத்தில் இதே இடத்தில் பின்வருமாறு உள்ளது

لا تسمين غلامك يسارا ولا رباحا ولا نجيحا ولا افلح

தன்னுடைய அடிமைக்கு யஸார், றபாஹ், அப்லஹ் என்று பெயர்களை வைக்க வேண்டாம்.

இதுபோன்ற ஹதீதுகளில் உள்ள பெயர்களுக்கான தடைகள் மக்றூஹ் தன்ஸீஹினடிப் படையிலாகும். இல்லையென்றால், திருக்குர்ஆனிலும், ஹதீதுகளிலும் பாரிய முரண்பாடுகள் வரும்.

"றப்பு" رب என்பது அல்லாஹ்வின் திருநாமம், இதே நாமம் ، كماربياني صغيرا فارجع الي ربك என்று அடியார்களுக்கும் கூறப்பட்டுள்ளது;

ஆகவே, எவராவது ஒருவரை தனது "முறப்பி" என்றோ, றப்பு என்றோ கூறினால் ஒருபோதும் முஷ்ரிக் ஆகமாட்டார்; இப்படியான பெயர்கள் வைப்பதைத் தவிர்பதால் எந்தக் குறையும் வரப்போவது மில்லை; காரணம், இவ்வாறு பெயர் வைப்பது வாஜிபல்ல!

இக்காலத்தில் தேவ்பந்தி, வஹாபிகளுக்கு கவலையேற் படுத்துவதற் காகவும், எரிச்சலை யூட்டுவதற்காகவும் "அப்துன் நபி", "அப்துர் றஸூல்", உள்ளிட்ட பெயர்ளை வைப்பது நன்மைக்குரியதாகும்; உதாரணமாக, இந்தியாவில் மாட்டைக் குர்பானி கொடுப்பது போன்று! இதைப் பற்றிய திட்டவட்டமான விளக்கத்தை "பாத்திஹா ஓதுவது" பற்றிய ஆய்வில் கூறியுள்ளோம்; முஸ்தஹப்பான எந்த ஒரு காரியத்தையும் எதிரிகள் தடுக்க முயற்சித்தால், அதை கண்டிப்பாகச் செய்ய வேண்டும்.

# ஆய்வு-23
# இஸ்காத் (اسقاط) மீட்டல் பற்றிய ஆய்வு!

**பாடம்: 1**

இந்த ஆய்வில் பின்வரும் மூன்று விடயங்கள் குறிப்பிட வேண்டியாகும்.

*1) இஸ்காத்திற்கான பொருள்.*

*2) இஸ்காத் செய்வதற்கான சரியான வழி,*

*3) இஸ்க்காத்திற்கான ஆதாரம்.*

சிலர், "இஸ்காத்தை" முழுமையாக மறுக்கின்றனர்; அவர்கள் விதம், விதமான குற்றச்சாட்டுக்களையெல்லாம் முன்வைக்கின்றனர்; ஆகவே, இந்த ஆய்வையும் இரு அத்தியாயங்களாக்கப்பட்டுள்ளன. முதல் அத்தியாயத்தில் மேற் கூறப்பட்ட மூன்று விடயங்களும் கூறப்படும்; இரண்டாம் அத்தியா யத்தில் கேள்வி, பதில் இடம்பெறும்.

## அத்தியாயம் : 1

**விடுவித்துக் கொள்வதற்கான வழியும், அதற்கான ஆதாரங்களும்.**

இந்தப் அத்தியாயத்தில் நான்கு விடயங்கள் குறிப்பிட வேண்டியுள்ளன.

1) விடுவித்துக்கொள்வதற்கான (اسقاة) பொருள் என்ன?

2) விடுவித்தல் செய்வதற்கான சரியான வழி எது?

3) விடுவித்தல் செய்வதனால் கிடைக்கும் நன்மை யாது?

4) விடுவித்தல் செய்வதற்கான ஆதாரங்கள் எவை?

இஸ்காத் (اسقاط) என்பதற்கான அகராதிப் பொருள் விழுத்தாட்டல் ஆகும். இஸ்திலாஹ் என்ற பரிபாஷையில், மைய்யித்தின் பொறுப்பிலிருக்கும் ஷரீஅத்தின் சட்டங்களை அதன் பொறுப்பிலிருந்து விடுவிப்பதைக்றிக்கும்.

“வஜீறத்துஸ் ஸிறாத்” என்ற நூலில் பின்வருமாறு எழுதப்பட்டுள்ளது.

இஸ்காத்தின் நன்மை யாதெனில், முஸ்லிம்களில் அதிகமானவர்கள் ஷரீஅத்தின் சட்டங்களைத் தெரிந்து கொண்டோ, மறதியாகவோ நிறைவேற்றாமல் விட்டு விடுகின்றனர்; அந்தக்கடமைகள் அவர்கள்மீது கழாவாகத் தங்கி விடுகின்றன; அதை அவர்களின் ஜீவிய காலத்தில் நிறைவேற்ற முடியாமல் விட்டவையால் மரணித்த பின். அவர்கள் தண்டனைக் குரியவர்களாகி விட்டார்கள்.

இப்போது அவர்களால் அதை நிறைவேற்றுவதற்கான ஆற்றல் இல்லை; அதிலிருந்து அவர்கள் விடுதலை பெறுவதற்கான வழியை ஷரீஅத்தின் கடமைகளால் பாதிக்கப்பட்ட நிலையில் அந்த மைய்யித்துக்கு உதவக் கூடிய வழியை ஷரீஅத் ஏற்படுத்திக் கொடுக்கவும் இல்லை;

ஆனால், மைய்யித்தின் "வலிகாறன்" அந்த மைய்யித்தின் சார்பாக அந்த கடமைகளைச் செய்தால், மரணித்தவர் தண்டனையிலிருந்து விடுவிக்கப்படுவார்; இந்த வழிக்குப் பெயர்தான் “இஸ்க்காத்” اسقاط ஆகும்.

ஒருவகையில் இது மைய்யித்திற்குச் செய்கின்ற உதவியாகும், வஹாபிகளும், தேவ்பந்திகளும் உயிரோடு இருக்கும் போதும் முஸ்லிம்களுக்கு விரோதிகளாக இருந்தார்கள்; அதே போன்று மரணித்தவர்களுக்கும் நன்மைகள் போய்சேருவதை விட்டும் மக்களைத் தடுக்கின்றார்கள்; மரணித்த பின்பும் கூட அவர்கள் விமோசனம் பெறுவதற்கு தடையாக இருக்கின்றார்கள்.

## இஸ்க்காத்திற்கான வழி!

இஸ்க்காத்திற்கான வழி இதுதான்! மைய்யித்தின் வயதைக் கணக்கெடுங்கள்; அதில் பெண்ணுக்கு ஒன்பது வயதும், ஆணுக்கு பன்னிரண்டு வயதையும் கழியுங்கள்; இவை பருவ வயதைத் தொடும் காலம்; இதன்பின், அவர்கள் தொழாமல், நோன்பு நோற்காமல் விடுபட்ட காலத்தைக் கணியுங்கள்; அதில் எந்தளவு கூடுதலாக உள்ளதோ அந்தளவு ஒவ்வொரு தொழுகைக்கும், நோன்புக்கும் தனித்தனியாக ஒவ்வொரு முத்து (அரைக்கொத்து) அரிசியைக் கொடுக்க வேண்டும்.(சுமார் 600கிறாம்)

தினமும் ஐந்து வேளை தொழுகை பர்ளு. வித்ரு வாஜிப் (ஹனபி) மொத்தம் ஆறு வேளையாகின்றன; இதன்படி தினமும் 12ஷோ (முத்துக்)கள் கொடுக்கவேண்டும்; இவ்வாறு, மாதம், வருடங்களைக் கணிக்கவும்.

ஒருவர் 10,12 வருடங்கள் தொழாமல், நோன்பு நோக்காமல் விடுபட்டிருந்தால், அவருக்கான பித்யாவின் அளவு அதிகமாக இருக்கும்; இதை ஒரு வசதிபடைத்தவரால்தான்நிறைவேற்றுவது சாத்தியமாகும்; ஏழைகளுக்கு கஷ்டமாகிவிடும்.

இதை நிறைவேற்றுவதற்கான வழியாகின்றது.

ஒருமாதத்திற்கான "பித்யாத்" தொகையை மொத்தமாகச் சேர்த்து ஒரு ஏழைக்கு கொடுக்கவேண்டும், அப்போது அவர் அதற்கு உரித்தானவராகி விடுவார்; பின்னர், அவர் மற்றுமொரு ஏழைக்கு அதை நன்கொடையாகக் கொடுக்க வேண்டும்; பின்னர், அவர் அதே ஏழைக்கு பித்யாவாக மீண்டும் கொடுக்க வேண்டும்; அவர் இவருக்கு நன்கொடையாகக் கொடுக்க வேண்டும்; இவ்வாறு செய்வதால், குறைந்தளவான பித்யாவில் பலவருட கடமை களுக்கான "பித்யா" நிறைவேறிவிடும்.

ஆகவே, அல்லாஹுத்த ஆலாவின் பேரருளினால் மைய்யித்தின் கடமையும் நிறைவேறிவிடும்; மைய்யித்தின் பாவமும் மன்னிக்கப்பட்டு விடும்; இஸ்க் காத்துக்கான இந்த முறை சரியானதுதான்.

பஞ்சாப்பில் பொதுவான ஒரு நடைமுறை உள்ளது, பள்ளிவாசலிருந்து ஒரு திருக்குர்ஆன் பிரதியைத் தருவித்து, அதில் ஒரு ரூபாவை வைத்தபின், பலர் அதில் கையை வைத்து விட்டு மீண்டும் பள்ளிவாசலுக்கு அந்தப் பிரதியை கையளித்து விடுவார்கள்; இதன்மூலம் தொழுகைக்கான பித்யா நிறைவேற மாட்டாது;

திருக்குர்ஆனுக்கு விலையைத் தீர்மானிக்க முடியாது; ஆகவே, புதிதாக திருக்குர்ஆன் பிரதியை வாங்கி சதக்காக் கொடுத்தால், சிலருடைய தொழுகையின் "பித்யா" நிறைவேறி விடும் என்று சிலர் கூறுகின்றனர்; இதுவும் தவறானதுதான்.

ஏனெனில், இங்கு கொடுக்கப்படும் பணத்தின் பெறுமதி திருக்குர்ஆனின் அச்சிடப்பட்ட தாளுக் குரியதாகும்; அதன் பெறுமதி இரண்டு ரூபாவாக இருந்தால் (மூல நூலாசிரியரின் காலத்தில்) இரண்டு ரூபாய் தர்மம் கொடுத்த கூலிதான் கிடைக்கும்;

இது தவறில்லையென்றால், வருடத்திற்கு பல ஆயிரம் ரூபாய் ஸக்காத் கொடுக்க வேண்டிய செல்வந்தர் ஒரு திருக்குர்ஆனை வாங்கி தர்மம் செய்தால் போதுமே! அதனால் இந்த முறை சரியல்ல!

இது சரியல்ல என்பதற்கான காரணம் யாதெனில், இதில் “இஸ்காத்” திற்கான நோக்கம் உண்டாக வில்லை, இப்படிச் செய்வது ஹறாமல்ல; ஆதாரமில்லாமல் தனது சுய விருப்பத்தில் எதையும் "ஹராம்" என்று கூறக்கூடாது; இவ்வாறு பொறுப்பற்று பத்வாக் கொடுப்பது தேவ்பந்திகளின் வேலை; எந்தளவு தர்மம் செய்கின்றாரோ அந்தளவுதான் நன்மை கிடைக்கும்.

**குறிப்பு:**

ஒரு நாளைக்கு ஆறு வேளைத் தொழுகைக்கு 12 ஷேர் உமி நீக்கிய கோதுமை (அரிசி) யின் பெறுமதி 175 ரூபாய் என்று நாம் நிர்ணயித்ததில் மாநிலத்துக்கு மாநிலம் வேறுபடலாம். ஆகவே, அந்தந்த மாநிலத்தின் கணக்குப்படி விலை யைத் தீர்மானிக்கவும்.

இஸ்க்காத்தின் ஆதாரங்களை மூன்று விதமாக ஆய்வுகள் செய்ய வேண்டி யுள்ளன..

1) ஹறாத்திலிருந்து தவிர்த்து ஹலாலாக ஆக்கிக் கொள்வது, அல்லது, ஷரீஅத்தில் அவசியமானதை நிறைவேற்றுவதற்கு ஷரீஅத்ரீதியான ஒரு தந்திரம் செய்வது “ஆகும்” என்பதற்கான ஆதாரம்.

2) தொழுகை, நோன்பு உள்ளிட்டவைக்கான பித்யா பொருளால் நிறை வேறும்.

3) இஸ்க்காத்திற்கான ஆதாரம் என்ன?

## இயல்- 1

## ஷரீஅத் ரீதியான தந்திரம் ''ஆகும்'' என்பதற்கான ஆதாரம்.

அவசியத் தேவைக்காக ஷரீஅத் ரீதியில் தந்திரத்தைக் கையாள்வது ஆகுமானது, திருக்குர்ஆன், ஹதீது; புகஹாக்களின் கூற்றுக்கள் உள்ளிட்ட வையில் இதற்கான ஆதாரம் இருக்கின்றது.

ஹளறத் அய்யூப் அலைஹிஸ்ஸலாம் தனது மனைவிக்கு நூறு கம்பால் அடிப்பேன் என்று சத்தியம் செய்தார்கள், நூறு குச்சிகள் உள்ள ஒரு கத்தை யால் அவருக்கு அடியும்! உமது சத்தியத்தை முறிக்க வேண்டாம் என்ற பாடத்தை அல்லாஹுத்த ஆலா ஹளறத் அய்யூப் நபி அலைஹிஸ்ஸலாம் அவர்களுக்குக் கற்றுக் கொடுத்தான்.

திருக்குர்ஆன் இந்த நிகழ்வை பின்வருமாறு எடுத்துக் கூறுகின்றது.

وَخُذْ بِيَدِكَ ضِغْثًا فَاضْرِب بِّهِ وَلَا تَحْنَثْ

***ஒரு பிடி குச்சிகள் உள்ள கத்தைகளை உம்முடைய கையால் எடுத்து, அதனைக் கொண்டு (உம் மனைவியை) அடிப்பீராக! உமது சத்தியத்தை முறிக்க வேண்டாம். (என்று கூறினோம்).***

*அல் குர்ஆன்: (38: 44.).*

ஹளறத் நபி யூஸூப் அலைஹிஸ்ஸலாம் அவர்கள் தனது சகோதரர் புன்யாமீனை தன்னோடு வைத்துக்கொள்ளவும் வேண்டும், அது வெளியில் தெரியவும் கூடாது; அதற்காக ஒரு தந்திரத்தைக் கையாண்டார்கள்; இதன் முழு விபரம் திருக்குர்ஆனில் சூறத் யூஸூபில் வருகின்றது.

என்னால் முடியுமாக இருந்தால் ஹாஜறாவின் உறுப்பை சிதைப்பேன் என்று ஹளறத் சாறா அம்மையார் சத்தியம் செய்தார்கள், அவ்விருவருக்கு மிடையில் சமாதானத்தை ஏற்படுத்துமாறு ஹளறத் இப்றாஹீம் அலைஹிஸ் ஸலாம் அவர்களுக்கு அல்லாஹுத்தஆலாவிடமிருந்து வஹி வந்தது; இதைக் கேட்ட ஸாறா அவர்கள் எனது சத்தியத்தை எவ்வாறு நான் பூர்த்தி செய்வேன்? என்று கேட்டார்கள்; ஹாஜறாவின் காதில் துளையிடுமாறு அவர்களுக்குக் கற்றுக்கொடுக்கப்பட்டது .

மிஷ்க்காத்தில் வர்த்தகம் பற்றிய அத்தியாயத்தில் வட்டி பற்றிய பாடத்தில் பின் வரும் ஹதீது பதிவாகியுள்ளது.

ஹளறத் பிலால் றழியல்லாஹு அன்ஹு அவர்கள் உயர்ரகமான ஒரு ஸாஃ கோதுமையை றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்ல மவர்களிடம் கொண்டுவந்தார்கள், இது எப்படிக் கிடைத்தது? என்று றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் கேட்டார்கள்; என்னிடம் மட்டமான இரண்டு ஸாஃ கோதுமையிருந்தன;அதைக் கொடுத்து ஒரு ஸாஃ உயர்ரக கோதுமையை வாங்கினேன் என்று ஹளறத் பிலால் றழியல்லாஹு அன்ஹு கூறினார்கள்;

இதுவட்டியாயிற்றே என்றே றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறிவிட்டு எதிர்காலத்தில் இவ்வாறு செய்து கொள்ளுங்கள் என்று கூறினார்கள்;அதாவது, மட்டமான கோதுமையை இருபது ரூபாய்க்கு விற்பனை செய்யுங்கள்; பின்னர் அந்த இருபது

ரூபாய்க்கு உயர்ரக கோதுமையை வாங்குங்கள் என்றார்கள்; பாருங்கள்! இது வட்டியிலிருந்து தப்புவதற்கான தந்திரமாகும்.

பதாவா ஆலம் கீரியில் كتاب الحيل என்று தனிப்பாடத்தையே எழுதி வைத்துள்ளார்கள், அதில் பின்வருமாறு எழுதுகின்றார்கள்.

كل حيلة يحتال بها لابطال حق الغير او لادخال شبهة فيه او لتمويه باطل فهي مكروهة وكل حيلة يحتال بها الرجل ليتخلص بها عن حرام او ليتوصل بها الي حلال فهي حسنة والاصل في جواز هذا النوع من الحيل قول الله تعالي ، "خذ بيدك ضغثا "وهذا تعليم المخرج لايوب النبي وعامة المشائخ علي ان حكمها ليس بمنسوخ وهو الصحيحة من المذهب

எந்த ஒரு தந்திரமும் அடுத்தவரின் உரிமையை அழிப்பதாக அல்லது, அதில் சந்தேகங்களை உருவாகுவதாக இருந்தால், அல்லது, பிழையான ஒன்றால் சதி செய்வதாக இருந்தால், அது மக்றூஹ் ஆகும்.

ஒரு மனிதன் ஹறாமானதிலிருந்து தப்பித்துக் கொள்வதற்காக அல்லது, ஒரு ஹலாலை அடைந்து கொள்வதற்காக தந்திரத்தைப் பாவித்தால், அது நல்லது; இந்த வகையான தந்திரங்களைப் பாவிப்பது ஹலால் ஆகும் என்பதற்கான ஆதாரம்; ஹளறத் அய்யூப் நபி அலைஹிஸ்ஸலாம் அவர்கள் சத்தியத்திலிருந்து தன்னைப் பாதுகாப்பதற்காக ஒரு குச்சிக்கட்டால் மனைவிக்கு அடிக்குமாறு அல்லாஹுத்த ஆலா கற்றுக்கொடுத்ததை திருக்குர்ஆனில் கூறுகின்றான்;

இந்தக் கூற்றுத்தான் இதற்குரிய ஆதாரமாகும்;:சகல ஷைகுமார்களும் இதை அங்கீகரிக்கின்றனர்;இந்தத் திருவசனத்திற்கான சட்டம் மாற்றப்பட வில்லை. இதுதான் சரியான மத்ஹபாகும்.

"ஷறஹு அஷ்பாஹ், தாதார்கானியா" உள்ளிட்ட நூற்களில் ஹமவியவர்கள் "தந்திரம்" பற்றி மிகப் பெறுமதியான பல விளக்கங்களைக் கூறுகின்றார்கள், அந்த விளக்கத்தின் நடுவில் பின்வருமாறு எழுதுகின்றார்கள்.

عن ابن عباس انه قال وقعت وحشة بين هاجرة وسارة فحلفت سارة ان ظفرت بها قطعت عضوا منهافارسل الله جبريل الي ابراهيم عليه السلام ان يصلح بينهما فقالت سارة ما حيلة يميني ؟ فاوحي الله الي ابراهيم عليه السلام ان يامرسارة. تثقب اذني هاجرة فمن ثم تثقب الاذن

ஹளறத் இப்னு அப்பாஸ் றழியல்லாஹு அன்ஹுமா அறிவிக்கின்றார்கள்.

ஒரு தினம் ஹாஜறா, ஸாறா றழியல்லாஹு அன்ஹுமா ஆகிய இருவருக்குமிடையில் பிணக்கு ஏற்பட்டது, ஹளறத் ஸாறா தனக்கு வாய்ப்புக்கிடைத்தால், ஹாஜறாவின் ஏதாவது ஓர் உறுப்பை சிதைப்பேன் என்று சத்தியம் செய்தார்கள்; அல்லாஹுத்தஆலா ஹளறத் ஜிப்ரியீல் அலைஹிஸ்ஸலாம் அவர்களை அனுப்பி இருவருக்குமிடையில் சமாதானம் செய்யுமாறு வஹி அறிவித்தான்.

அப்படியென்றால் எனது சத்தியத்தின் நிலை என்னாவது என்று ஸாறா கேட்டார்கள்.? ஹாஜறாவின் காதில் ஓட்டை போடுமாறு ஸாறாவுக்குக் கூறுமாறு வஹிவந்தது; இந்த தினத்திலிருந்து தான் பெண்களுக்கு காதுகுத்தும் வழக்கம் வந்தது.

மேற்கண்ட திருக்குர்ஆன் வசனங்கள், ஸஹீஹான ஹதீதுகள்; பிக்ஹு வாசகங்கள் மூலமாக ஷறயிய்யத்தான தந்திரம் ஆகும் என்று விளங்க முடிகின்றது.

## இயல்- 2

## நோன்பு, தொழுகை உள்ளிட்டவையை விட்டதற்கான "பித்யா" பற்றிய விளக்கம்.

நோன்புக்கான பித்யாவைப் பற்றித் திருக்குர்ஆன் பின் வருமாறு கூறுகின்றது.

وَعَلَى الَّذِينَ يُطِيقُونَهُ فِدْيَةٌ طَعَامُ مِسْكِينٍ

*அதற்கு (நோன்பு நோற்பதற்கு)ச் சக்தியில்லாதவர்கள் மீது (ஒவ்வொரு நோன்பிற்கும்) ஓர் ஏழைக்கு உணவளிப்பது "பித்யா" (என்னும் பரிகாரம்) ஆகும்;*

*அல் குர்ஆன்: (2: 184).*

பலவீனமான முதியவர்கள், நோன்பு நோற்க முடியாத நோயாளிகள் தினமும் ஒரு ஏழைக்கு உணவளிக்க வேண்டும் என்பது இதிலிருந்து புரிகின்றது, நோன்பிற்கு முன்னால் ஒப்பிட்டுப் பார்த்தால் தொழுகை அதிக முக்கியத்துவம் வாய்ந்ததாகும்; ஆகவே, தொழுகையையும் நோன்பின் சட்டத்தில் சேர்க்க வேண்டியுள்ளது.

இந்த திருவசனத்திற்கு அடியில் தப்ஸீர் அஹ்மதியில் முல்லா அஹ்மத் ஜீவன் கத்தஸல்லாஹு ஸிர்ரஹுல் அஸீஸ் அவர்கள் பின்வருமாறு எழுதுகின்றார்கள்.

والصلوة نظير الصوم بل اهم منه فامرناه بالفدية احتياطا ورجونا القبول من الله تعالي فضلا

தொழுகையும் நோன்பைப் போன்றதுதான், எனினும் அதைவிட முக்கியமானதாகும். ஆகவேதான் பேணுதலுக்காக அதற்கும் ஃபித்யாவுக்கான சட்டத்தைக் கொடுத்தோம்; அல்லாஹ்வின் அருளால் ஒப்புக்கொள்ளப்படும் என்று ஆதரவு வைக்கின்றோம்.

“மனார்” என்ற நூலில் எழுதுகின்றார்கள்.

ووجوب الفدية في الصلوة للاحتياط

தொழுகையில் ஃபித்யா "வாஜிப்" என்பது பேணுதல் அடிப்படையிலானதாகும்.

ஷறஹு விகாயாவில் எழுதுகின்றார்கள்.

وفدية كل صلوة كصوم يوم وهو الصحيح

ஒவ்வொரு தொழுகைக்கான ஃபித்யாவும் ஒவ்வொரு நாளுக்கான நோன்பைப் போன்றதாகும், இது ஸஹீஹாகும்;

ஷறஹு இல்யாஸில் எழுதுகின்றார்கள்.

ويعتبر فدية كل صلوة فائتة كصوم يوم اي كفدية يوم

ஒவ்வொரு தப்பிப்போன தொழுகைக்கான ஃபித்யாவுக்கான கணிப்பு ஒருநோன்பை ஒத்துள்ளது, அதாவது, ஒரு நோன்பைப் போன்றுள்ளது.

பத்ஹுல் கதீரில் எழுதுகின்றார்கள்.

من مات وعليه قضاء رمضان فاوصي به عنه وليه لكل يوم مسكينا نصف صاع من بر او صاع من تمر او شعير لانه عجز عن الاداء وكذلك إذا اوصي بالاطعام عن الصلوة

றமழான் நோன்பு கழாவாக இருக்கும் ஒருவர், அதற்கான ஃபித்யாவைக்

கொடுக்க வேண்டும் என்று வஸிய்யத் செய்த நிலையில் மரணித்தால்; அவருக்கான வலிகாறா் தினமும் ஏழைக்கு அரை ஸாஃ மணிக்கோதுமையும், ஒரு ஸாஃ தொலிக் கோதுமையும் கொடுக்க வேண்டும்.

காரணம், மரணித்தவர் இப்போது அதை நிறைவேற்ற முடியாதவராகி விட்டார்; இவ்வாறுதான் தொழுகைக்கும் உணவளிக்குமாறு வஸிய்யத் செய்தாலும் கொடுக்க வேண்டும்.

“தஹ்தாவி ஆலா மறாக்கில் பலாஹி” என்ற நூலில் வருகின்றது.

اعلم انه قد ورد النص في الصوم باسقاطه بالفدية واتفقت كلمة المشائخ علي ان الصلوة كالصوم استحسانا واذا علمت ذلك تعلم جهل من يقول ان اسقاط الصلوة لا اصل له اذ هذا ابطال للمتفق عليه من المذهب

மேற்கண்ட வாசகங்களின் மூலமாக தொழுகைக்கு நோன்பின் ஃபித்யாவைக் கொடுப்பது ஆகுமாகும், மேலும் ஒப்புக்கொள்ளப்படும் என்று ஆதரவுவைக்கப்படும்; ஹதீதுகளும் இதை உறுதிப்படுத்துகின்றன.

ஹளறத் அப்துல்லாஹ் இப்னு அப்பாஸ் றழியல்லாஹு அன்ஹுமா அவர்களின் அறிவிப்பை “கிதாபுல் வஸாயா” வில் அப்துர் றஸ்ஸாக்கும், சுனன்நஸாயி குப்றாவில் இமாம் நஸாயி அவர்களும் பின்வரும் ஹதீஸை அறிவிக்கின்றனர்.

لا يصلي احد عن احد ولا يصوم احد عن احد ولكن يطعم عنه مكان كل يوم مدين من حنطة

எவரும் எவருக்காகவும் நோன்பு நோற்கவோ, தொழுவோ வேண்டாம்; அவரின் தரப்பில் தினமும் இரண்டு முத்துக்கள் கோதுமையை தர்மம் செய்யவும்.

மிஷ்க்காத்தில் நோன்பு பற்றிய அத்தியாயத்தில் "கழாச்செய்தல்" பற்றிய பாடத்தில் பின்வரும் ஹதீது இடம்பெறுகின்றது.

قال من مات وعليه صيام شهر رمضان فليطعم عنه مكان كل يوم مسكينا

ஒருவர் மரணித்தால், அவர் பொறுப்பில் றமழான் மாதத்து நோன்பு (கழாவாக) இருக்குமாயின், அவர் தரப்பிலிருந்து தினமும் ஒரு ஏழைக்கு

உணவளிக்கவும். தொழுகை, நோன்பு உள்ளிட்டவைக்கு பொருள் ரீதியாக ஃபித்யாக் கொடுப்பதற்கு ஷரீஅத்தில் ஆதாரம் உள்ளது. இதை மறுப்பது முட்டாள்தனமாகும்.

## இயல்- 3

## இஸ்க்காத் கூடும் என்பதற்கான ஆதாரங்கள்.

இஸ்க்காத்திற்கான வழியை முன்னால் குறிப்பிட்டுள்ளோம், இதற்கான ஆதாரம் பெரும்பாலும் பிக்ஹு நூற்களிலேயே இருக்கின்றது.

“நூறுல் ஈழாஹ்” என்ற நூலில் இந்த பிரச்சினைக்கு فصل في اسقاط الصوم والصلوة என்று ஒரு தனியான பகுதி ஒதுக்கப்பட்டிருப்பது குறிப்பிடத்தக்கது.

இதில் பின்வருமாறு கூறுகின்றார்கள்.

ولا يصح ان يصوم ولا ان يصلي عنه وان لم يف ما اوصي به عما عليه يدفع ذلك المقدار للفقير فيسقط عن الميت بقدره ثم يهبه الفقير وهكذا حتي يسقط ما كان علي الميت من صيام وصلوة ويجوز اعطاء فدية صلوات لواحد جملة بخلاف كفارة اليمين

இதன் மொழிபெயர்ப்பு இஸ்க்காத்துக்கான வழியைப் பற்றி முன் பதிவில் கூறப்பட்ட அதே கருத்துத்தான் இதிலும் கூறப்பட்டுள்ளது.

ஷாமி என்ற நூலில் இதை விட விரிவான விளக்கம் கூறப்பட்டுள்ளது.

والاقرب ان يحسب ما علي الميت ويستقرض بقدره بان يقدر عن كل شهر او سنة او بحسب مدة عمره بعد اسقاط اثني عشر سنة للذكر واسع سنين للانثي لانها اقل مدة بلوغهما فيجب عن كل شهر نصف غرارة (فتح القدير بالمد الدمشقي ) مد زماننا ولكل سنة شمسية ست غرائر فيسقرض قيمتها ويدفعها لفقير ثم يستوهبها منه ويتسلمها منه ليتم الهبة ثم يدفعها لذلك الفقير او لفقير آخر وهكذا فيسقطفي كل مرة كفارة سنة بعد ذلك يعيد الدور بكفارة الصيام ثم الاضحية ثم الاسنان لكن لا بد في كفارة الايمان من عشرة مسكين بخلاف فدية الصلوة فانه يجوز اعطاء فدية صلوات للواحد

இதற்கான இலகுவான வழியாகிறது. மரணித்தவரின் கழாவாக இருக்கக்கூடிய தொழுகை, நோன்பு எவ்வளவு என்பதைக் கணியுங்கள்,

ஒருமாதம்; அல்லது ஒரு வருடத்திற்கு ஒரு கணிப்பினடிப்படையில் கடன் வாங்குங்கள்; அல்லது, மரணித்தவரின் முழு வயதையும் கணியுங்கள்; முழு ஆயுளில் ஆணுக்கு 12 வயதையும், பெண்ணுக்கு 9 வயதையும் கழித்துவிட்டு எஞ்சிய வயதைக் கணியுங்கள்;

ஒவ்வொரு மாதத்திற்குமான தொழுகைக்கான பித்யா அரை மூடை வரும்; (அதாவது, உமிநீக்கிய கோதுமை 1/2 ஸா௸= 1210 கிறாம் .ஹ30=36.300 கிறாம். ஷாபி மத்ஹபில் பித்யாவுக்கான அளவு ஒரு முத்தாகும். இதன்படி 605 கிராம் என்ற அடிப்படையில் மாதம், வருடத்தைக் கணிக்கவும்.) ஒவ்வொரு ஆண்டுக்குமுரிய கப்பாறா 36.300ஹ12= 435.6 கி.கிஆகும்.

அதை வாரிசானவர் கடன் பெற்று, இஸ்காத்துக்காக அதை ஏழைக்கு கொடுக்கவும்; பின்னர், அந்த ஏழை அதை ஹிபாவினடிப்படையில் வாரிசுக்குக் கொடுக்கவும்; அதை அவர் ஏற்று தனது உடமையாக்கிக் கொண்ட பின்னர், அதே தொகையை அதே ஏழைக்குக்கு இரண்டாவதாக பித்யாவாகக் கொடுக்கவும்; இவ்வாறு தொடர்ந்து மடக்கி மடக்கி செய்வதால், ஒருவருடத்தின் "பித்யா" நிறைவேறிவிடும்; இவ்வாறு நோன்பு, குர்பானிக்கான கப்பாறாவையும் நிறைவேற்றுங்கள்.இதன்பின், சத்தியத்திற்கான கப்பாறாவையும் நிறைவேற்றுங்கள்.

சத்தியத்திற்கான கப்பாறாவுக்கு பத்து ஏழைகள் இருப்பது அவசிய மாகும்,தொழுகைக்கான பித்ராவுக்கு இத்தொகை அவசியமில்லை; இந்த வழி முறையைத் தான் நாமும் ஏற்கனவே குறிப்பிட்டிருந்தோம்.

“அஷ்பாஹ் வன்நழாயிர்” என்ற நூலில் எழுதுகின்றார்கள்.

اراد الفدية عن صوم ابيه او صلوته وهو فقير يعطي منوين من الحنطة فقيرا ثم يعطيه وهكذا الي أن يتم

மறாகில் பலாஹ் ஷறஹ் நூறுல் அன்வார். என்ற நூலில் வருகிறது.

فحيلته لابراء ذمة الميت عن جميع ما عليه ان يدفع ذلك المقدار اليسير بعد تقديره بشئ من صيام او صلوة او نحوه ويعطيه للفقير بقصد اسقاط ما يرد عن الميت ثم بعد قبضه يهبه الفقير للولي او للاجنبي ويقبضه ثم يهبه الفقير للولي (الي ان قال), وهذا هو المخلص ان شاء الله تعالي

மேற்கூறியவைதான். இங்கும் கூறுகின்றார்கள்.

பதாவா ஆலம் கீரியில் எழுதுகின்றார்கள்.

وان لم يترك مالايستقرض ورثته نصف صاع ويدفع الي مسكين ثم يتصدق مسكين علي بعض ورثته ثم يتصدق حتي يتم الكل كذا في الخاصة

இதே போன்று பஹ்ருர் றாயிக், ஐனி ஷறஹுகன்ஸுத் தகாயிக், ஜாமிஉரர்றுமூஸ், முஃதமது ழஹீர், ஷறஹு முக்தஸருன் நிகாயா, பதாவா காழிகான் பறாயித், ஜவாஹிருல் கௌலுல்முக்தஸர், உள்ளிட்ட அநேகமான நூற்களில் இதுவிடயம் குறிப்பிடப்பட்டுள்ளது; விரிவஞ்சி வாசகங்களைக் சுருக்கிக் கொண்டுள்ளோம்.

(இதுவரை கூறப்பட்ட சகல நூற்களும் ஹனபி மத்ஹபுக்குரியதாகும், ஷாபி மத்ஹபிலும் இதே சட்டம் உண்டு;வாசகர்களின் நன்மை கருதி அல்லாமா அல்ஆலிமுல் அரூஸ் மாப்பிள்ளை லெப்பை ஆலிம் றஹ்மத்துள்ளாஹி அலைஹி அவர்களின்" மஙானி" என்ற நூல் பக்கம் 328 ல் வருவதை இங்கே தருகின்றேன்.

இறந்துவிட்டவருக்காக நோன்பு வைப்பது உறவினருக்கும், அவன் வஸிய்யத்துச் செய்து சென்ற அந்நியருக்கும் கூடும்; மற்றுமொரு சொற்படி, சொத்திருக்குமானால் அவன் விட்ட நோன்பையும், தொழுகையையும் வலியாக உள்ளவன் அந்த சொத்திலிருந்து ஃபித்யா கொடுத்து கடமையை நிறைவேற்றுவது வாஜிப்;

இறந்து விட்டவருக்காகச் செய்யப்படுகின்ற அமல்கள் ஃபர்ளாக இருந்தாலும், சுன்னத்தாக இருந்தாலும் அது அவருக்குப் போய்ச் சேரும் என முஹிப்புத் தப்ரி றஹ்மத்துள்ளாஹி அலைஹி அவர்கள் கூறுகின்றார்கள்.

ஒருவன் தன்னுடைய தொழுகை, நோன்பு போன்ற அமல்களுடைய நன்மை போன்றதை மற்றவருக்கு ஹதியாச் செய்யலாம் என்பதும், அது அவனுக்குப் போய்ச் சேருமென்பதும் சுன்னத்து வல் ஜமாஅத்தின் அகீதாவாக இருக்குமென்று ஷரஹுல் முக்தார் என்ற நூலில் கூறப்பட்டுள்ளது.)

நியாயமான பார்வையில் பார்க்கின்றவருக்கு இது போதும் அடுத்து மறுப்பாளர்களான தேவ்பந்திகளின் ஷைகான மௌலவி றஷீத் அஹ்மத் கொங்கோஹி பதாவா றஷீதியாவ பாகம் -1 பித்அத்துக்கள் பற்றிய பாடம் பக்கம் :103 ல் எழுதுகின்றார்.

இஸ்காத்துக்கான தந்திரத்தை வசதி இல்லாமல் திவாலானவருக்காக உலமாக்கள் அமைத்துக் கொடுத்த முறையாகும், இப்போது இந்த ஹீலா حيلة தந்திர முறை கொஞ்சப் பணத்தைப் பெற்றுக் கொள்வதற்கான ஒரு வழியாக ஆகிவிட்டது;

ஹக்குத் தலா எண்ணங்களை நன்கு அறிந்தவனாக இருக்கின்றான்; இந்த தந்திரம் அங்கே பிரயோசனத்தைக் கொடுக்காது; வசதி இல்லாமல் திவாலானவரின் தூய நல்லெண்ணம் என்ற நிபந்தனையின் அடிப்படையில் இது பயனளிக்கும் என்பதில் என்ன ஆச்சரியம் இருக் கின்றது? தூய எண்ணமில்லை யென்றால் வீணாகிவிடும்; ஹீலாவின் மூலமாக ஒன்றைப் பெற்றுக்கொள்வது என்றாகிவிடும்.

*(ஒப்பம்: றஜீத் அஹ்மத்).*

இதில் அதிகமான உருட்டும் புரட்டுக்கள் இருந்தாலும் கூட ஆகும் என்பதை ஒப்புக் கொண்டுள்ளார், ஆகவே, இஸ்க்காத் கூடாது என்று கூறுவதற்கான யோக்கியதை இப்போது தேவ்பந்திகளுக்குக் கிடையாது.

முப்லிஸ் திவாலான ஏழை என்ற நிபந்தனை மௌலவி றஷீத் அஹ்மதின் தன் கைச்சரக்காகும். நாம் பல பிக்ஹு நூற்களின் வாசகங்களை மேற்கோள் காட்டியுள்ளோம். அவற்றில் எந்த இடத்திலும் (இந்த ஹீலா முறை) திவாலான ஏழைக்குரியது என்று ஒரு வார்த்தையும் கிடையாது.

வசதிபடைத்தவர் விட்டுச் சென்றதை முழுமையாக செலவழித்தால் வாரிசுகளுக்கு என்னதான் மிஞ்சப்போகின்றது.?

எவராவது ஒருவர் மரணிக்கும் நேரத்தில் தனது சகல பித்யாக்களையும் கொடுக்குமாறு வஸிய்யத் செய்தாலும் கூட, மூன்றில் ஒரு பங்குதான் செல்லுபடியாகும். இதற்கு மேல் கூடாது; மூன்றில் ஒரு பங்கால் அவரின் முழு பித்யாவை நிறைவேற்ற முடியாது விட்டால், "ஹீலா" செய்வதில் என்ன குறை இருக்கின்றது? தந்திரத்திற்குத் தந்திரம் பாவிப்பது வீணிலும் வீணாகும்.

தேவ்பந்து மத்ரஸாவில் ஓதிக் கொடுக்கின்ற மௌலவிமார்களுக்கு ஊதியம் கொடுப்பதற்காகத்தான் இந்த ஹீலா முறையை கூறுகிறார்கள் என்று எவராவது சொல்லக்கூடுமல்லவா ? அதனால்தான் இது “வீண்” என்று கூறுகின்றார்

*(றஜீத் அஹ்மது ஸாஹிபு)*

# *அத்தியாயம் : 2*
# *குற்றச்சாட்டுக்களும், பதில்களும்!*

இந்தப் பிரச்சினையில் காதியானி, தேவ்பந்து ஜமாஅத்தார்களுக்கு மத்தியில் சில குற்றச்சாட்டுக்கள் உள்ளன, அறிவு ரீதியான எந்த ஒரு குற்றச்சாட்டும் கிடைக்கவில்லை என்பதுதான் எதார்த்தமாகும்; வெறுமனே வார்த்தை ஜாலத்தாலே காரியம் சாதிக்கின்றனர்; அப்பாவி முஸ்லிம்கள் சந்தேகத்திற்குள் மாட்டிவிடக்கூடாது என்பதற்காகவே இவற்றுக்குப் பதில் எழுதுகின்றேன்.

**குற்றச்சாட்டு : 1**

“ஹீலா” செய்வது அல்லாஹ்வுக்கும், முஸ்லிம்களுக்கும் செய்யும் துரோகமாகும்.

அல்லாஹுத் தஆலா கூறுகின்றான்.

يُخَادِعُونَ اللَّهَ وَالَّذِينَ آمَنُوا وَمَا يَخْدَعُونَ إِلَّا أَنْفُسَهُمْ وَمَا يَشْعُرُونَ

***(இவ்வாறு கூறி) அல்லாஹ்வையும், ஈமான் கொண்டோரையும் அவர்கள் ஏமாற்றுகின்றார்கள்; ஆனால், (உண்மையில்) தம்மைத் தாமே தவிர அவர்கள் ஏமாற்ற வில்லை; எனினும் அவர்கள் (இதை) உணர்ந்து கொள்ளவில்லை.***

*அல் குர்ஆன்: (2: 9).*

சொற்பளவு பொருளுக்குப் பதிலாக வாழ்நாள் முழுக்க உள்ள தொழுகைகள் மன்னிக்கப்படும் என்பது எப்படி சாத்தியமாகும்.?

**பதில்:**

ஹீலாவை "மோசடி" என்பது, கடைந்தெடுத்த அறியாமையாகும்;

ஹீலாவின் நோக்கம், ஷரீஅத்தின் கண்டிப்பான கடமைகளை முழுமையாக நிறைவேற்றுவதற்குரிய ஷரீஅத்தின் அடிப்படையிலான வழிமுறையாகும்.

ஷரிய்யத்தினடிப்படையிலான ஹீலாவை திருக்குர்ஆனும், றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களும்தான் நமக்குக் கற்றுத் தந்துள்ளார்கள்; இதற்கான மேற்கோள்களை முதற் அத்தியாயத்தில் பதிவிட்டுள்ளோம்.

ஒருவருக்கு மோசடி செய்வதற்காக ஹீலா செய்வது குற்றம் என்று பதாவா ஆலம் கீரியில் குறிப்பிடப்பட்டுள்ளதை ஏலவே குறிப்பிட்டுள்ளோம், ஷரீஅத்தின் கண்டிப்பான கடமைகளை அல்லது ஹறாத்திலிருந்து தப்புவதற்கு ஹீலாவைப் பயன்படுத்துவது நன்மையான காரியமாகும்; எங்காவது ஓர் இடத்தில் பள்ளிவாசல் கட்டப்படுகின்றது என்று வைத்துக் கொள்வோம்; இப்போது அவர்களுக்கு பணம் அவசியம் தேவைப்படுகின்றது.

சக்காத்தின் பணத்தை பள்ளி வாசலுக்கு எடுக்க முடியாது;(ஹறாம்) இந்தக் கட்டத்தில்,ஸக்காத் பணத்தை ஓர் ஏழைக்குக் கொடுத்து, அதற்கு அவரை உரிமையாக்கியபின், அவர்தரப்பில் அதற்கான செலவைச் செய்தால், இதில் யாருக்குமோசடி செய்யப்பட்டுள்ளது? யாருடைய பணத்தை யார் வீணடித்திருக்கின்றார்கள்? ஷரீஅத்தின் ஓர் அவசியத்தேவை நிறைவேறியிருக்கின்றது.

பணத்தை, தானே பெறுவதற்காக ஹீலா செய்வது இழிவானதுதான்.! ஆனால், கொடுப்பதற்காக *"ஹிலா"* செய்வது நல்லகாரியம்; இதில் ஏழை களுக்கு கொடுப்பதில் ஹீலா உண்டு! அதே நேரம் அல்லாஹ்வின் றஹ்மத்தை இழுத்து வருவதில் ஹீலாவுக்குப் பங்கிருக்கின்றதுஎன்பதையும் நினைவில் கொள்ள வேண்டும்.

அல்லாஹ்வின் றஹ்மத் கூலி கேட்பதில்லை; அல்லாஹ்வின் றஹ்மத்தை விரட்டப் பார்க்கின்றனர், (இந்த சண்டாளர்கள் கூட்டம்). மேற்கண்ட திருவசனம் முனாபிக்குகள் விஷயத்தில் இறங்கியது; அதாவது ,தனது சுயநலனுக்காக கலிமாவை மொழிந்தனர்; மனதில் அவர்கள் காபிர்கள்;

முஸ்லிம்களின் முக்கியமான மார்க்க செயல்களில் அவர்களைக்கொண்டு வந்து ஒட்டுப் போடுவது கடுமையான ஹறாமாகும்.

இஸ்காத்தின் பொருளின் காரணமாக தொழுகை மன்னிக்கப்படமாட்டாது, எனினும், உயிரோடு இருந்த காலத்தில் தொழாமல் பொடுபோக்காக இருந்து காலத்தை முடித்துக் கொண்டுள்ளார்; இப்போது அதற்கு பரிகாரம் செய்ய மரணித்தவரால் சாத்தியமில்லை; இதில் மரணித்தவர் மாட்டிக்கொண்டார்; அவரின் தவறுக்கு மன்னிப்பைப் பெற்றுக் கொடுப்பதற்குரிய ஒரு மார்க்கம்தான் இந்த ஹீலா முறையாகும்; காரணம், தர்மம் அல்லாஹ்வின்

கோபத்தைத் தணிக்கும்.

الصدقة تطفئ غضب الرب

மிஷ்க்காத்தில் ஜும்ஆவுடைய பாடத்தில் பின்வரும் ஹதீது இடம்பெறுகின்றது.

எவருக்காவது ஜும்ஆத் தவறினால் ஒரு தீனார் தருமம் கொடுக்கவும்.

இதே மிஷ்க்காத்தில் "ஹைழு" பற்றிய பாடத்தில் பின்வரும் ஹதீது

இடம்பெறுகின்றது.

எவராவது ஒருவர் ஹைழுடைய நிலையில் தனது மனைவியோடு உறவு கொண்டால், ஒரு தீனார், அல்லது அரை தீனார் ஸதக்காக் கொடுக்கவும்; இந்த ஸதக்கா அவற்றிற்குப் பதிலாக ஆகாது; ஆனால், அந்தப் பாவத்திற்கான (கப்பாறா) அபராதமாக ஆகும்.

ஒரு மனிதன் உயிர் வாழும் காலத்தில் எதிர்கால தொழுகைக்கான பித்யாவை கொடுக்கலாம், தொழத்தேவையில்லை என்று நாம்கூறியிருந்தால்தான் பொருளால் தொழுகை மன்னிக்கப்படும் என்று கூறமுடியும்.

**குற்றச்சாட்டு : 2**

தொழுகையும், நோன்பும் உடல் சார்ந்த இபாதத், ஃபித்யா பொருளினால் நடக்கின்றது; உடல் சார்ந்த பாவத்திற்குப் பொருள் சார்ந்த கப்பாறா எந்த வகை யிலும் சாத்தியமாகாது; ஆகவே, இந்த "ஹீலா" வீணாகும்.

**பதில்:**

இந்த "கியாஸ்" திருக்குர்ஆன் வசனத்திற்கு முரண்படுகின்றது.

திருக்குர்ஆன் கூறுகின்றது.

وَعَلَى الَّذِينَ يُطِيقُونَهُ فِدْيَةٌ طَعَامُ مِسْكِينٍ

*நோன்பு பிடிக்க முடியாதவர்மீது ஃபித்யா ஒரு மிஸ்க்கீனுக்கு உணவளிப்பதாக உள்ளது,*

அல்லாஹ்வின் தீர்ப்புக்கு எதிராக கியாஸ் பிடிப்பது ஷைத்தானின் வேலையாகும்.

ஹளறத் ஆதம் அலைஹிஸ்ஸலாம் அவர்களுக்கு சுஜூது செய்யுமாறு அல்லாஹுத்தஆலா கட்டளையிட்டான், இதற்கு எதிராக இப்லீஸ் கியாஸ் பிடித்தான்; அதன் காரணமாக அவன் விரட்டப்பட்டான்; உடல் உழைப்புக்குப் பதிலாக பொருளைப் பெறுவது பகுத்தறிவுக்கு உடன்பாடானது தான்; ஒருவரிடம் வேலை வாங்கி விட்டு அவருக்குக் கூலியாக பொருளை வழங்குகின்றோம்; இன்னுமொரு வகையில் உயிருக்கு, உயிர் பழிக்குப் பழிவாங்காமல் பொருளாலும் பதில் நிறைவேற்றலாம்.

ஷரீஅத்தில் சில கப்பாறாக்கள் கியாஸுக்கு மாறாகவும் இருக்கின்றன, ஒருவர் தொழுகையில் முதல் அத்தஹிய்யாத்தை மறந்தால், ஸஜ்தா ஸஹ்வு செய்யவேண்டும்;

எவராவது ஒருவர் மனைவியை தாயோடு ஒப்பிட்டால் ழிஹார் ஏற்படும்; இதற்குக்கான கப்பாறாவில் ஒன்று, அறுபது ஏழைகளுக்கு உணவளிக்க வேண்டும்;

ஹாஜி இஹ்றாம் அணிந்த நிலையில் வேட்டையாடினால், பணத்தால் கப்பாறாவை நிறைவேற்று வதாயின், ஆட்டின் கூலியைக்கொடுக்க வேண்டும்; தவறினால் நோன்பு நோற்க வேண்டும்; இவையனைத்தும் கியாஸுக்கு மாற்ற மாவைதான்; ஷரீஅத் எதை நிர்ணயித்துள்ளதோ அதை கண்ணை, வாயைப் பொத்திக் கொண்டு மூச்சு விடாமல் செயல்படவேண்டும்.

**குற்றச்சாட்டு : 3**

இஸ்க்காத்துக்கான ஹீலாவால் மக்கள் தொழாமல் சோம்பேறி களாகிவிடுவார்கள், காரணம், நாம் மரணித்த பின்னால் இஸ்க்காத்தின் மூலமாக நமது தொழுகை நிறைவேறிவிடும் என்று தெரிந்ததன் பின், எதற்காக சிரமமெடுத்து தொழ வேண்டும்? ஆகவே, இந்த முறையை நிறுத்த வேண்டும்.

**பதில்:**

இந்த குற்றச்சாட்டு சக்காத்தின் மூலமாக முஸ்லிம்கள் மத்தியில் வேலை யற்றவர்கள் உருவாகின்றார்கள், தவ்பாவின் மூலமாக மக்கள் அச்ச மற்றவர்களாகின்றார்கள்; ஏனெனில், தனக்கு ஸக்காத் மூலமாக கஷ்டப்

படாமலே பணம் கிடைக்கின்றது; எதற்காக கஷ்டப்பட வேண்டும்.? என்று ஆரியர்கள் முன் வைக்கும் குற்றச்சாட்டை ஒத்திருக்கின்றது.

இதேபோன்று தவ்பாவால் பாவம் மன்னிக்கப்படும் என்று மனிதனுக்கு விளங்கினால், நிறையப் பாவம் செய்வான்; இவ்வாறுதான் இந்தக் குற்றச்சாட்டும் இருக்கின்றது; ஆகவே, இது ஒரு அபத்தமான குற்றச்சாட்டாகும்.

ஒருவன் தொழுகைக்கான ஃபித்யாவால் அச்சமற்று தொழுகையை அவசியமற்றதாகக் கருதினால், அவன் காபிராகி விடுவான்; இந்த ஃபித்யா தொழுகைக்கான தாகுமே தவிர, குப்றுக்கானதல்ல! ஒருவர் மஸ்அலாவை சரியாகப் புரிந்து கொள்ள வேண்டும்; சரியான ஒரு மஸ்அலாவை பிழையாகக் கையாண்டால், அந்தத் தவறு பிழையாகக்கையாண்டவர் மீது உண்டாகுமே தவிர, மஸ்அலா மீதல்ல!

இந்த "மஸ்அலா" முஸ்லிம்கள் மத்தியில் காலம்காலமாக பிரபலமாக இருந்து வருகின்றது, இதுவரை இஸ்க்காத்தினால் தொழுகையை கைவிட்ட ஒரு முஸ்லிமைக் கூட சந்திக்க முடியவில்லை.!

## குற்றச்சாட்டு: 4

சில இஸ்ரவேலர்கள் தந்திரம் (ஹீலா) செய்துதான் மீன் பிடித்தார்கள், இதன்காரணமாகவே அவர்களுக்கு தண்டனை இறங்கியது; குரங்குகளாக உரு மாற்றப்பட்டனர்; ஆகவே, இது அல்லாஹ்வின் தண்டனையை வலிந்து இழுக்கும் படுமோசமான குற்றம் என்று தெரிகின்றது.

## பதில்:

"ஹீலா" செய்வது ஹறாமாக இருந்ததும் பனூ இஸ்ரவேலர்களுக்கு தண்டனை தான்! அதிகமான மாமிசங்களும் அவர்களுக்கு ஹறாமாக இருந்தன; இவ்வாறு ஹீலா செய்வது இந்த உம்மத்திற்கு றப்புத் தஆலாவின் றஹ்மத்தாகும். பனூ இஸ்ரவேலர்கள் ஹறாத்தை ஹலாலாக்க ஹீலாச் செய்தார்கள், சனிக் கிழமை மீன் பிடிப்பது அவர்களுக்கு ஹறாமாக்கப்பட்டிருந்தது; இப்படியான ஹறாமான ஹீலா இப்போதும் தடுக்கப்பட்டதுதான்.

## குற்றச்சாட்டு: 5

திருக்குர்ஆன் கூறுகின்றது.

لَيْسَ لِلْإِنسَانِ إِلَّا مَا سَعَىٰ

***மனிதனுக்கு அவன் முயற்சி செய்ததுதான் கிடைக்கும்.***

மரணித்தவர் தொழாமல் விட்டிருந்தால், அவருடைய பிள்ளைகள் பணம் செலவழித்து அவரைப் பாதுகாக்கின்றனர், இஸ்காத்தின் ஃபித்யா மூலமாக இதுதான் நடக்கின்றது; இது திருக்குர்ஆனுக்கு எதிரானதாகும்.

**பதில்:**

இதற்கான பதில் ஃபாத்திஹா ஓதுவது பற்றிய ஆய்வில் கூறப்பட்டுள்ளது.

இந்த ஆயத்திற்கு சில விளக்கங்கள் இருக்கின்றன.

1) இந்த ஆயத்தில் வரும் لا க்கு , உரிமையானது (ملكية) என்ற பொருள் வரும்; அதாவது, மனிதன் தனது சம்பாத்தியத்திற்கு உரித்துடையவன்; அடுத்தவரின் உதவி தனக்குக் கிடைக்கும் என்பதற்கு எதுவித உத்தரவாதமுமில்லை;

அவர் உதவி செய்யலாம், செய்யாமலுமிருக்கலாம்; ஆகவே, மற்றவரின் கொடையிலுள்ள பாத்திஹா, கத்தம் உள்ளிட்வைக்காக தன்னுடைய முயற்சியை மறப்பது அறிவுக்குப் பொருத்தமில்லாத சங்கதியாகும்; அல்லது, இத்திருவசனம் உடல் ரீதியான இபாதத் பற்றி வந்ததாகும். அதாவது,

எவராவது ஒருவர் அடுத்தவருக்காக தொழுகை, அல்லது நோன்பு உள்ளிட்டவையை நிறை வேற்றினால், அவரின் பொறுப்பிலிருந்து கடமை நிறைவேறாது; இவ்வாறு இத்திருவசனத்திற்கு கருத்துக்கள் வைக்காவிட்டால், அதிகமான திருவசனங்களுக்கும், ஹதீததுகளுக்கும் முரண்பட வேண்டியது அவசியமாகும்.

தனது முஃமினான பெற்றோர்களுக்கு துஆச் செய்யுமாறு திருக்குர்ஆன் ஆணையிடுகின்றது, ஜனாஸாத் தொழுகை மரணித்தவருக்கும், மற்றும் சகல முஸ்லிம்களுக்குமான துஆவாக இருக்கின்றது; மரணித்தவரின் தரப்பில் ஸதக்காக் கொடுக்குமாறு ஹதீதுகள் கட்டளையிடுகின்றன; இதுபற்றிய முழு விளக்கம் நமது பத்வாக்களில் காணமுடியும்.

## முக்கிய வழிகாட்டல்:

ஜும்மாஅல்லாத நாட்களில் எவராவது மரணித்தால், அவர்களின் வாரிசுகள் அவரின் கப்றடியில் ஹாபிழ்களை நியமித்து திருக்குர்ஆன் ஓதுவிக் கின்ற வழக்கம் சில ஊர்களில் நடை முறையிலிருக்கின்றது, தேவ்பந்திகளில் சிலதுகள் இதை ஹறாம் என்று கூறுகின்றனர்; இதை ஹறாம் என்பது கடைந் தெடுத்த தவறாகும்; கப்றுக்குப் பக்கத்திலிருந்து கொண்டு திருக்குர்ஆன் ஓதுவது அதிக நன்மை தரும் நல்லமலாகும்; இதற்கான ஆதாரம் வருமாறு,

மிஷ்க்காத்தில் "கப்றின் வேதனை" என்ற பாடத்தில் பின்வரும் ஹதீது இடம் பெறுகின்றது.

கப்றில் மையயித்தை நல்லடக்கம் செய்து விட்டு போனதன் பின்பு இரண்டு மலக்குகள் விசாரணைக்காக அவனிடம் வருவார்கள்,

وتولي عنه اصحابه اتاه ملكان

இதிலிருந்து அடக்கம் செய்தவர்கள் இருக்கும் வரை கப்றில் விசாரணை நடக்காது என்று தெரிகிறது.

ஷாமி பாகம்- 1 "ஜனாஸாத் தொழுகை" என்ற பாடத்தில் எழுதுகின்றார்கள்.

எட்டு வகையானர்களுக்கு கப்று விசாரணை நடக்காது.

1) ஷஹீது

2) ஜிஹாதுக்காக தயாரானவர்.

3) கொள்ளை நோயில் மரணித்தவர்.

4) கொள்ளையில் வேறு நோயால் மரணிப்பவர்,(இவ்விரண்டிலும் பொறுமையாளராக இருப்பது நிபந்தனை

5) சித்தீக்.

6) பருவமடையாதவர்.

7) ஜும்ஆவுடைய நாளில், அல்லது ஜும்ஆவுடைய இரவில் மரணிப்பவர்.

8) தினமும் இரவில் சூறா முல்க் ஓதுபவர். அல்லது, மரணநோய் காலத்தில் தினமும் சூறா இக்லாஸை ஓதுபவர். (சிலரின் கூற்றின்படி

நபிமார்களுக்கும் இல்லை).

ஜும்ஆவுடைய நாளில் மரணிப்பவருக்கு கப்றின் விசாரணை இல்லை என்பது இதன்மூலம் தெரிகின்றது.

ஒருவர் ஞாயறன்று மரணித்து, அவரை அடக்கம் செய்ததிலிருந்து அங்கே ஒருமனிதர் இருந்து கொண்டேயிருந்தால், கப்றின் விசாரணை அங்கே நடக்காது; ஜும்ஆவுடைய நாள் வந்து விட்டால், விசாரணைக்கான நேரம் முடிந்து விடும்; கியாமத் நாள் வரை விசாரணை நடக்காது; அவர் கப்றின் வேதனையை விட்டும் தப்பித்துக் கொள்வார்.

கப்றின் வேதனையிலிருந்து பாதுகாப்பதற்கான ஒரு மார்க்கம் இதுவாகும்; அல்லாஹ்வின் றஹ்மத்தில் ஆதரவு வைப்போம்; அவர்மீது அல்லாஹுத்தஆலா றஹ்மத் செய்வானாக! அங்கே இருப்பவர் பயனின்றி இருப்பதை விட திருக்குர்ஆனை ஓதிக் கொண்டிருந்தால் மைய்யித்திற்கும், ஓதுகின்றவருக்கும் பிரயோசனமாகும்,

இமாம் நவவி றஹ்மத்துள்ளாஹி அலைஹி அவர்கள் அல்அத்காருன் நவவி என்ற நூலில் அடக்கத்திற்குப் பின் ஓதுதல் என்ற பாடத்தில் எழுதுகின்றார்கள்.

قال الشافعي ويستحب ان يقرءوا عنده شيئا من القرآن قالوا فان ختموا كله كان حسنا

கப்றுக்குப் பக்கத்தில் திருக்குர்ஆன் ஓதுவது சுன்னத்; முழுக்குர்ஆனையும் ஓதினால் மிகவும் நல்லது என்று இமாம் ஷாபிஈ றஹிமஹுல்லாஹ் அவர்கள் கூறுகின்றார்கள்.

கப்றின் மேல் பச்சைக்கொத்துக்களை நட்டுவதால் அது தஸ்பீஹ் செய்யும்; அதன் பறக்கத்தால் மைய்யித்திற்கு பிரயோசனம் கிடைக்கும் என்றால், திருக்குர்ஆன் ஓதுவதால் கண்டிப்பாக அதைவிடக் கூடுதலான நன்மை கிடைக்கவே செய்யும் இன்ஷாஅல்லாஹ்! இந்த விளக்கத்தை “*கப்றில் அதான் கூறுதல்*“ என்ற ஆய்வில் குறிப்பிட்டுள்ளோம்; விரும்பினால் கட்டம் கட்டமாக கப்றில் தொடர்ந்து இருந்து கொண்டே இருக்கலாம்.

**முக்கிய குறிப்பு:**

றமழானில் கடைசி வெள்ளிக்கிழமையன்று வாழ்நாளில் விடுபட்ட தொழுகைக்காக கொஞ்சம் நபில் தொழும் வழக்கம் சில பகுதிகளில் இருக்கின்றது, சிலர் இதை ஹறாம், பித்அத் என்று கூறி மக்களைத் தடுக்கின்றனர்.

திருக்குர்ஆன் கூறுகின்றது.

اَرَءَيْتَ الَّذِىْ يَنْهٰي , عَبْدًا اِذَا صَلّٰى

*நபியே! தொழுகின்ற அடியாரை தடுக்கினறவனை பார்த்தீர்களா?*

*அல் குர்ஆன்: (96: 9,10.).*

எந்தவொரு தொழுகையாளியையும் அவர் தொழுகையிலிருந்து தடுப்பது கடுமையான குற்றமாகும் என்று தெரிய வருகின்றது, வாழ்நாள் கழா என்பதும் தொழுகை தான்; அதைத் தடுப்பது ஒருபோதும் கூடாது; வாழ் நாள் கழாவுக்கான அடிப்படை ஆதாரம் வருமாறு,

தப்ஸீர் றூஹுல் பயானில் 6:55 வது திருவசனத்தின் விளக்கத்தில் பின்வரும் ஹதீதை எழுதுகின்றார்கள்.

ايما عبد او امة ترك صلوته في جهالته لو تاب وندم علي تركها فاليصل يوم الجمعة بين الظهر والعصر اثنتي عشرة ركعة يقرأ في كل منها الفاتحة وأية الكرسي والاخلاص والمعوذتين مرتين لا يحاسبه الله تعالي يوم القيمة ذكره في مختصر الاحياء

எவராவது ஒரு ஆண், அல்லது பெண் மடத்தனத்தால் தொழுகையை விட்டு விட்டால், பின்னர் அதற்காக தௌபாச் செய்தால், இன்னும் தவறிப்போன தொழுகையை எண்ணி வெட்கப்படுவாராயின், ஜும்ஆவுடைய நாளில் ஜும்ஆவுக்கும், அஸருக்குமிடையில் 12 றக்காஅத்துக்கள் நபில்தொழ வேண்டும்.

ஒவ்வொரு றக்காஅத்திலும் சூறத்துல் பாத்திஹா ஆயத்துல் குர்ஸி; குல்குஹுவல்லாஹு அஹது; சூரத்துல் பலக்; சூறத்துன் நாஸ் உள்ளிட்ட வையை ஒவ்வொருவிடுத்தம் ஓத வேண்டும்; இவ்வாறு செய்தால் அல்லாஹுத்த ஆலா மறுமையில் விசாரணை செய்ய மாட்டான்;

இந்த ஹதீதை "முக்தஸறுல் இஹ்யா" என்ற நூலில் கூறப்பட்டுள்ளது.

றூஹுல் பயான் ஆசிரியர் அவர்கள் இந்த ஹதீதின் நோக்கத்தை விளக்கப்படுத்தும் போது, தவ்பாச்செய்ய வேண்டும், வெட்கப்படவேண்டும் என்பதன் கருத்து, அடியான் விடுபட்ட தொழுகைக்காக வெட்கப்பட்டு கழாத் தொழுகைகளை தொழ வேண்டும்; இதற்காகத்தான் இந்த வார்த்தையை கூறினார்கள்; பின்னர் கழாவாக்கியதற்கான குற்றத்தை இந்த நபில் தொழுகையின் பறக்கத்தால் மன்னிக்கப்படும்; தவிர, கழாத்

தொழத் தேவையில்லை என்பது கருத்தல்ல! இந்தத் நபில் தொழுகையைத் தொழுதால் சகலதும் கழா இல்லாமல் நிறைவேறிவிடும் என்று றாபிழிகள் கூட கூறியது கிடையாது; இவர்களிடத்தில் சில நாட்களின் தொழுகைகளை ஒரே நாளில் தொழ முடியும்; வருடம் முழுவதும் தொழாமலிருந்து விட்டு றமழானில் 12றக்காஅத் தொழுதால் சகல மன்னிக்கப்படும் என்பது எந்த வகையில் கூடுமாகும்?

இந்த ஹதீஸின் நோக்கம் றூஹுல் பயான் ஆசிரியர் கூறியதுதான். இதற்கான ஓர் உதாரணத்தை மிஷ்க்காத்தில் அத்தியாயம் ஹஜ் "அரபாவில் தரித்தல்" என்ற பாடத்தில் வருகின்ற ஹதீதைக் குறிப்பிடலாம்.

றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் அறபா தினத்தில் ஹாஜிகளின் பாவங்களுக்காக மன்னிப்புக் கேட்டு துஆச்செய்தார்கள், அடியார்களுக்குச் செய்த அநியாயங்கள் தவிர்ந்த பாவங்களை மன்னித்து விட்டதாக அல்லாஹ்விடமிடமிருந்து பதில் வந்தத பின்னர் மினாவில் வைத்து அடியார்களுக்குச் செய்த பாவங்களையும் ஹாஜிகளுக்கு மன்னிக்குமாறு றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் மீண்டும் துஆக்கேட்டார்கள்.

இதன் கருத்து எவரிடத்திலாவது கடன் பட்டுவிட்டு அவனுக்கு மண்ணைப்போடுங்கள்; யாரையாவது கொல்லுங்கள்; அடுத்தவரின் பொருளைச் சூறையாடுங்கள்; திருடுங்கள்; பின்னர், ஹஜ்ஜுக்குச் செல்லுங்கள் சகலதும் மன்னிக்கப்பட்டு விடும். என்பது இதன் பொருளல்ல!

கடனைத் திருப்பிக் கொடுப்பதில் கொடுத்த வாக்கை நிறை வேற்ற முடியாமலிருந்திருக்கும்; அல்லது காலம் தாழ்த்தியிருக்கக்கூடும்; இப்படியான குற்றங்கள் மன்னிக்கப்படும்; அடியார்களுக்குச் செய்ய வேண்டியதை எப்படியும் நிறைவேற்றியே ஆக வேண்டும்; எவராவது வாழ் நாள் கழாத் தொழுகை பற்றித் தவறாக விளங்கியிருந்தால், அதை விளக்கி வைய்யுங்கள்! தொழுகின்றவர்களை எதற்காக தடுக்கின்றீர்கள்.! அல்லாஹ் தவ்பீக் செய்வானாக! இந்த ஹதீது ழயீபாக இருந்தாலும் பழாயில் அஃமாலுக்கு ஆதாரமானதுதான்.!

# ஆய்வு-24

# அதானில் கைநகம் கண் தொட்டு முத்தமிடுவது பற்றிய ஆய்வு!

இந்த ஆய்வை எழுதும் நோக்கம் எனக்கு இருக்க வில்லை. இந்நிலையில் றமழானில் ஒரு கனவு கண்டேன், அதில் ஒரு பெரியார் தனது இந்த நூலில், "கைநகம் கண்தொட்டு முத்தமிடுவதையும்" சேருங்கள், அப்போதுதான் புத்தகம் பூரணமாகும் என்றார்; ஆகவே, இந்த ஆய்வை இதோடு இணைத்துக் கொண்டேன்; றப்புல் ஆலமீன் ஒப்புக்கொள்வானாக! ஆமீன்!.

இந்த ஆய்வையும் இரு அத்தியாயங்களாக்கியுள்ளோம், முதல் அத்தி யாயத்தில் இதற்கான ஆதாரங்களும், இரண்டாவது அத்தியாயத்தில் மறுப்புக்களும், அதற்கான பதில்களும் இடம் பெறும்.

## அத்தியாயம் : 1

### விரல்களால் முத்தமிடுவதற்கான ஆதாரங்கள்.!

முஅத்தின் அதானில் “அஷ்ஹது அன்ன முஹம்மதர் றஸூலுள்ளாஹ்!” என்று கூறும் போது, இரு பெருவிரல்களையும் கண்ணில் தடவி முத்தமிடுவது முஸ்தஹப்பாகும். இதில் உலகியல்,மற்றும் மார்க்கம் தொடர்பான பல நன்மைகள் இருக்கின்றன;

இதுதொடர்பாகப் பல ஹதீதுகள் வந்துள்ளன; பொதுவாக முஸ்லிம்கள் சகல இடங்களிலும் இதை “முஸ்தஹப்பு”! என்று நம்பி செய்து வருகின்றனர்.

ஸலாத்துல் மஸ்ஊதிய்யா பாகம் 2, பாடம் 20ல் “தொழுகை” பற்றிய பகுதியில் பின்வரும் ஹதீது இடம் பெறுகின்றது.

عن النبي صلي الله عليه وسلم انه قال من سمع اسمي في الاذان ووضع ابهاميه علي عينيه فانا طالبه في صفوف القيمة وقائده الي الجنة

றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் கூறினார்கள்.

எவராவது ஒருவர் அதானில் எனது பெயரைக் கேட்டு தனது விரல்களை கண்ணில் வைத்தால், கியாமத்தின் வரிசைகளுக்கிடையில் அவரைத் நாம் தேடுவோம்; நமக்குப் பின்னால் அவரைக் கூட்டிக்கொண்டு சொர்க்கம் செல்வோம்.

“தப்ஸீர் றூஹுல் பயானில்” பின்வரும் திருவசனத்திற்கு அடியில் எழுது கின்றார்கள்.

اِذَا نَادَيْتُمْ اِلَى الصَّلٰوةِ اتَّخَذُوْهَا هُزُوًا وَّلَعِبًا

***இன்னும், (அவர்களைத்) தொழுகைக்கு நீங்கள் அழைத்தால், அதனைப் பரிகாசமாகவும், விளையாட்டாகவும் அவர்கள் ஆக்கிக் கொள் கின்றனர்;***

*அல்குர்ஆன்: (5: 58).*

وضعفت تقبيل ظفري ابهاميه مع مستبحتيه والمسح علي عينيه عند قوله محمد رسول الله صلي الله عليه وسلم لانه لم يثبت في الحديث الضعيف المرفوع لكن المحدثون اتفقوا علي ان الحديث الضعيف يجوز العمل به في الترغيب والترهيب

அதானில் முஹம்மதுர் றஸூலுள்ளாஹ்! என்று கூறும் போது, தனது இரு பெருவிரல் நகங்களையும் முத்தமிட்டு கலிமாவோடு இரு கலிமா விரல்களையும் முத்தமிடுவது பலவீனமானதுதான்;

காரணம், மர்பூஆன ஹதீதின் மூலம் இது நிரூபணமாக வில்லை; ஆயினும், ஆசையூட்டுவதற்கும், அச்சமூட்டுவதற்கும் ழயீபான ஹதீஸின் படி அமல் செய்யலாம் என்று சகல முஹத்திதீன்களும் ஏகோபித்துக் கூறியுள்ளார்கள்.

ஷாமியில் பாகம்1, “*அதானு*“டைய பாடத்தில் பின்வருமாறு எழுதுகின்றார்கள்.

يستحب ان يقال عند سماع الاولي من الشهادة صلي الله عليك يا رسول الله وعند الثانية منها قرت عيني بك يا رسول الله ثم يقول اللهم متعني بالسمع والبصر بعد وضع ظفري الابهامين علي العينين فانه عليه السلام يكون قائد له الي الجنة كذا في كنز العباد قهستاني ونحوه في الفتاوي الصوفية وفي كتب الفردوس من قبل ظفري ابهاميه عند سماع اشهد ان محمدا رسول الله في الاذان انا قائده ومدخله في صفوف الجنة وتمامه في حواشي البحر للرملي

அதானில் முற்தடவை “அஷ்ஹது அன்ன முஹம்தர் றஸூலுள்ளாஹ்”! என்று சொல்லும் போது," ஸல்லல்லாஹு அலைக்க யாறஸூலல்லாஹ்! "என்றும், இரண்டாவது தடவை "குர்ரத்து ஐனீ பிக யாறஸூலல்லாஹ்!" என்றும் கூறி பெருவிரலை முத்தமிட்டு கண்ணில் தடவிய பின், அல்லாஹும்ம மத்திஃனி பிஸ்ஸம்இ வல்பஸரி என்று கூறுவதும் முஸ்தஹப்பாகும்; இவ்வாறு கூறிய வரை றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் பின்னால் அழைத்துச்சென்று சொர்க்கத்தில் சேர்த்து வைப்பார்கள். இவ்வாறு “கன்சுல் இபாத்” என்ற நூலில் குறிப்பிடப்பட்டுள்ளது.

“கிதாபுல் பிர்தௌஸ்” என்ற நூலில் பின்வருமாறு பதியப்பட்டுள்ளது.

அதானில் அஷ்ஹது அன்ன முஹம்மதர் ரஸூலுள்ளாஹ் என்பதைக் கேட்ட பின், பெருவிரல் நகங்களை முத்தமிட்டால், அவரை பின்னால் அழைத்துச் சென்று சொர்க்கத்தின் வரிசைகளில் நுழைத்து விடுவேன்.

இதற்குரிய முழுமையான விளக்கம் “பஹ்ருர் றாயிக்கின்” ஆசிரியரான இமாம் றமலிக்குரிய ஓரக்குறிப்பில் உள்ளது.

மேற்கண்ட வாசகத்தில், ஷாமி, கன்சுல் இபாதி; பதாவா ஸூபிய்யா; கிதாபுல் பிர்தௌஸ்; கஹஸ்தானி; பஹ்ருர் றாயிக்கின் ஹாஷியா உள்ளிட்ட ஆறு நூற்கள் உள்வாங்கப் பட்டுள்ளன; இவையாவற்றிலும் “முஸ்தஹப்பு” என்றே குறிப்பிடப்பட்டுள்ளது.

مقاصد حسنةفي احاديث الدائرة என்ற நூலில் இமாம் ஸகாவி றஹ்மத்துள்ளாஹி அலைஹி அவர்கள் கூறுகின்றார்கள்.

ذكره الديلمي في الفردوس من حديث ابي بكر الصديق رضي الله عنه انه لماسمع قول المؤذن اشهد أن محمدرسول الله قال هذا وقبل باطن الاملتين السبابتين ومسح عينيه فقال صلي الله عليه وسلم من فعل مثل ما فعل خليلي فقد حلت له شفاعتي ولم يصح

இமாம் தைலமி றஹ்மத்துள்ளாஹி அலைஹி அவர்கள் "பிர்தௌஸ்" என்ற நூலில் ஹளறத் அபூபக்கர் றழியல்லாஹு அன்ஹு அவர்கள் மூலமாக அறிவிக்கின்றார்கள்.

முஅத்தின் "அஷ்அஹது அன்ன முஹம்மதர் றஸூலுள்ளாஹ்"! என்று கூறும்போது தனது இரண்டு கலிமா விரல்களின் உட்பகுதியை முத்தமிட்டு கண்ணில் தடவினார்கள்; எனது அன்பிற்குரிய நண்பரைப்போன்று செய்கின்றவருக்கு எனது ஷபாஅத் வாஜிபாகி விடும் என்று றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் கூறினார்கள்.

இந்த ஹதீது ஸஹீஹ் என்ற தரத்தை அடையவில்லை.

இதே நூலின் ஆசிரியர் அபுல் அப்பாஸ் அஹ்மத் அபீபக்கர் றதாத் மூலமாக நக்லு செய்யப்படுகின்றது.

عن الخضر عليه السلام انه قال من قال حين يسمع المؤذن يقول اشهد أن محمدا رسول الله مرحبا بحبيبي وقرة عيني محمد ابن عبد الله ثم يقبل ابهاميه ويجعلهما علي عينيه لم يرمد ابدا

ஹளறத் நபி ஹிழ்ரு அலைஹிஸ்ஸலாம வர்களைத் தொட்டும் அறிவிக்கின்றார்கள்.

முஅத்தின் அஷ்ஹது அன்ன முஹம்மதர் றஸூலுள்ளாஹ்! என்று கூறியதைக் கேட்டதும், "மர்ஹபன் பி ஹபீபி வகுர்ரத்து ஐனீ முஹம்மத் இப்னி அப்தில்லாஹி" என்று கூறி, தனது இரு பெரு விரல்களையும் முத்தமிட்டு கண்ணில் தடவினால், அவருக்கு ஒருபோதும் கண்வியாதி வரமாட்டாது.

தொடர்ந்து கூறுகின்றார்கள். பகீஹ் முஹம்மத் இப்னு பாபா தனக்கு நடந்த ஒரு அனுபவத்தைப் பதிவு செய்கின்றார்,

ஒரு தடவை காற்று வேகமாக வீசியதால் கண்ணில் மண்துகள்கள் விழுந்து விட்டன, அது வெளியேறாததால் கடுமையான வலியேற்பட்டது; அது நேரம் முஅத்தினார் "அஷ்ஹது அன்ன முஹம்மதர் றஸூலுள்ளாஹ்"! என்று கூறியதைக் கேட்டதும் இதைக்கூறினார்; கண்ணில் விழுந்த மண்துகள்கள் வேகமாக வெளியேறிவிட்டன.

இதே நூலில் ஷம்ஷு முஹம்மத் இப்னு ஸாலிஹ் மதனீ என்பவரிடமிருந்து அறிவிக்கின்றார், அவர் இமாம் அம்ஜதுக்குக் கூறியதை காதால் கேட்டார்; (இமாம் அம்ஜத் என்பவர் மிஸ்ரில் உள்ள ஆரம்பகால உலமாக்களைச் சேர்ந்தவர்.)

எவராவது, அதானில் றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்ல மவர்களின் திருநாமத்தைக் கேட்டால், தனது இரு பெரு விரல்களையும் முத்தமிட்டு அவையிரண்டையும் இரு கண்ணிலும் தடவினால், ஒரு போதும் கண்நோய் வராது.

மீண்டும் கூறுகின்றார்கள். இவ்வாறு செய்தால், அவருக்குக் கண் வியாதி வராது என்று இராக்கிலும், அரபல்லாத நாடுகளிலும் உள்ள சில ஷைகுமார்களும் கூறுகின்றனர்.

وقال لي كل منهما منذ فعلته لم يرمد عيني

நான்இவ்வாறு செய்யத் தொடங்கிய காலம் முதல் எனக்கு கண்வியாதி வரவில்லை என்றும் கூறுகின்றார்.

இதே நூலில் சற்று பின்னால் சென்று கூறுகின்றார்கள்.

قال ابن صالح وأنا منذ سمعته فلا ترمد عيني وارجوا أن عافيتها تدوم وآني اسلم من العمي أن شاء الله

இப்னு ஸாலிஹ் கூறுகின்றார்,

இதை எப்போது கேட்டேனோ அன்றிலிருந்து கடைப்பிடிக்கின்றேன்; எனது கண்ணில் எந்த வியாதியும் வரவில்லை; நான் எப்போதும் ஆரோக்கியமாக இருப்பேன் என்றும்; குருடு வராமல் பாதுகாக்கப்படுவேன் என்றும் ஆதரவு வைக்கின்றேன்.

அடுத்து கூறுகின்றார்கள்,

இமாம் ஹுஸைன் றழியல்லாஹு அன்ஹு அவர்கள் மூலமாக அறிவிக்கின்றார்கள்.

எவராவது ஒருவர் "அஷ்ஹது அன்ன முஹம்மதர் றஸூலுள்ளாஹ்!" என்று கூறுவதைக் கேட்டு மர்ஹபன் பிஹபீபி வகுர்ரத்து ஐனீ முஹம்மதிப்னி அப்தில்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் என்பதை தனது விரல்களில் கூறி அதை கண்ணில் தடவினால் ஒருபோதும் கண் வியாதி வராது.

“மகாஸிதுல் ஹஸனா” என்ற நூலில் ஏராளமான இமாம்களின் அமல்களை குறிப்பிட்டுள்ளார்கள்.

ஷறஹுன்நிகாயா என்ற நூலில் பின்வருமாறு பதிவாகியுள்ளது.

واعلم انه يستحب ان يقال عند سماع الاولي من الشهادة الاولي صلي الله عليك يارسول الله وعند الثانية منها قرت عيني بك يارسول الله بعد وضع ظفري الابهامين علي العينين فانه عليه السلام يكون له قائدا الي الجنة كذا في كنز العباد

அறிந்து கொள்! அதானின் ஷஹாதத்தில் முதலாவதைக் கேட்ட பின், “ஸல்லல்லாஹு அலைக் யாறஸூலல்லாஹ்!” என்றும், இரண்டாவது ஷஹாதத்தைக் கேட்ட பின், “குற்றத்து ஐனீ பிக யாறஸூலல்லாஹ்!” என்றும் கூறி இரு பெரு விரல்களின் நகங்களை கண்ணில் வைப்பதுதான் முஸ்தஹப் பாகும், இவ்வாறு செய்தால், றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்கள் அவரை தனக்குப் பின்னால் சொர்க்கத்திற்கு அழைத்துச் செல்வார்கள்.

மௌலானா ஜமால் இப்னு அப்துல்லாஹ் இப்னு உமர் மக்கி கத்தஸல்லாஹு ஸிர்ரஹுல் அஸீஸ் அவர்கள் தனது பத்வாவில் கூறுகின்றார்கள்.

تقبيل الابهامين ووضع هما علي العينين عند ذكر اسمه عليه السلام في الاذان جائز بل مستحب صرح به مشائخنا

அதானில் றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்ல மவர்களின் திருநாமம் கேட்ட பின், இரு பெருவிரல்களின் நகங்களை முத்தமிட்டுக் கண்ணில் வைப்பது ஆகும், எனினும், "முஸ்தஹப்பு" என்று எங்களுடைய ஷைகுமார்கள் மிகத் தெளிவாகக் கூறியுள்ளார்கள்.

அல்லாமா முஹம்மது தாஹிர் றஹ்மத்துள்ளாஹி அலைஹி “தக்மிலா மஜ்மஃ பிஹாருல் அன்வார்” என்ற நூலில் இந்த ஹதீஸை لا يصح அது ஸஹி அல்ல என்று கூறிய பின் கூறுகின்றார்கள்.

وروي تجربة ذلك عن كثير ين

இதை அனுபவ ரீதியாகக் கண்டதாக பல றிவாயத்துக்கள் அநேகரிட

மிருந்து வந்துள்ளன என்று கூறியுள்ளார்கள். இதுவல்லாத பல வாசகங்களையும் முன்வைக்க முடியும். ஆயினும், இத்தோடு சுருக்கிக் கொள்கின்றோம்.

எனது உஸ்தாதும், முரிஷிதுமான ஹளறத் ஸத்றுல் அபாழில் மௌலானா அல்ஹாஜ் அஸ்ஸெய்யித் முஹம்மது நயீமுத்தீன் ஸாஹிப் கிப்லா முறாதாபாதி றஹ்மத்துள்ளாஹி அலைஹி அவர்கள் கூறுகின்றார்கள்.

இஞ்ஜீலின் மிகப் பழைய "பர்னபாஸ்" என்ற பெயரிலான ஓர் ஏடு கிடைத்தது, இப்போது அது சாதாரணமாக கிடைக்கின்றது; சில மொழிகளிலும் அதன் மொழிபெயர்ப்புக்கள் வந்துள்ளன;அதிலுள்ள அதிகமான சட்டங்கள் இஸ்லாத்தோடு ஒத்துப் போகின்றன; அதில் பின்வருமாறு எழுதப்பட்டுள்ளது.

ஹளறத் ஆதம் அலைஹிஸ்ஸலாமவர்கள் றூஹுல் குத்ஸின் (முஸ்தபா நபியவர்களின்) நூரைப் பார்ப்பதற்கு ஆசைப்பட்டதும், அது அவர்களின் பெருவிரல் நகத்தில் ஜொலித்தது;உடனே அவர்கள் ஆசைமீறி அந்த நகங்களை முத்தமிட்டு கண்ணில் ஒத்திக் கொண்டார்கள்;

றூஹுல் குத்ஸை நாம் முஸ்தபா நபியின் நூர் என்று ஏன் மொழி பெயர்தோம் என்பதற்கான விளக்கத்தை எமது "ஷஃனே ஹபீபுர் றஹ்மான்" என்ற நூலில் பார்த்துக் கொள்ளுங்கள்!. (இந்த நூலை "மாமறை போற்றும் முஸ்தபா மாநபி! ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம்" என்ற பெயரில் தமிழ் படுத்தியுள்ளோம்;)

ஈஸா நபி அலைஹிஸ்ஸலாம் அவர்களின் காலத்தில் றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹிவ:ஸல்லமவர்களின் திருநாமம் "றூஹுல் குத்ஸு " என்ற பெயரில்தான் பிரபலமாக இருந்தது.

ஹனபி மத்ஹபுடைய இமாம்களுக்கு அப்பால் ஷாபிஈ, மாலிக்கி மத்ஹபுடைய இமாம்களும் "கைநகம் கண் தொட்டு முத்தமிடுவதை சுன்னத்" என்று கூறுவதில் ஒன்று பட்டுள்ளார்கள்.

ஷாபி மத்ஹபின் பிரபலமான நூலான இஆனத்துத் தாலிபீன் என்ற நூல் பாகம் 1 பக்கம் 247 ல் எழுதுகின்றார்கள்.

ثم يقبل ابهاميه ويجعل هما علي عينيه لم يعم ولم يرمدابدا

பின்னர், இரு பெரு விரல்களையும் முத்தமிட்டு, இரு கண்ணிலும் வைத்தால், ஒருபோதும் கண்நோயோ, கண்குருடோ வராது.

மாலிக்கி மத்ஹபின் பிரபலமான நூலான “கிபாயத்துத் தாலிபுர் றப்பானி” என்ற நூல் இப்னு ஸைதுல் கீர்வானி மிஸ்ரி என்பவர்களுக்குரியதாகும். அதில் பாகம்: 1 பக்கம்: 269 ல் இது தொடர்பாக நிறையவே எழுதிய பின் இவ்வாறு எழுதுகின்றார்கள்.

ثم يقبل ابهاميه ويجعل هما علي عينيه لم يعم ولم يرمد ابدا

பின்னர், தனது இருபெருவிரல் நகங்களையும் முத்தமிட்டு இரு கண்ணிலும் வைத்தாராயின், அவருக்கு கண்நோயோ, குருடோ ஒருபோதும் வராது.

இதற்கான விரிவுரையில் அல்லாமா ஷைகு அலி ஸயீதி அதவி பாகம் 17ல் பின்வருமாறு கூறுகின்றார்கள்.

لم يبين موضع التقبيل من ابهامين الا انه نقل عن الشيخ العالم المفسر المحدث نور الدين الخرساني قال بعضهم لقيته وقت الاذان فلما سمع المؤذن يقول اشهد ان محمدا رسول الله قبل ابهامي نفسه ومسح بالظفرين اجفان عينيه من الماق الي ناحية الصداع ثم فعل ذلك عند كل تشهد مرة مرة فسألته عن ذلك فقال كنت افعله ثم تركته فمرضت عيناي فرأيته صلي الله عليه وسلم مناما فقال لم تركت مسح عينيك عند الاذان أن اردت أن تبرء عيناك فعد فاستيقظت ومسحت فبرءت ولم يعاود في مرضها الي الآن

நூலாசிரியர் கைநகம் கண் தொட்டு முத்தமிடும் இடத்தைப் பற்றி விளக்கிக் கூறவில்லை, ஆயினும், ஷைகு அல்லாமா முபஸ்ஸிர் நூறுத்தீன் குறாஸானி அவர்களிடமிருந்து பின்வருமாறு நக்லு (பிரதி) செய்யப்பட்டுள்ளது.

சிலர் அதான் சொல்லும் வேளை முஅத்தின் அஷ்ஹது அன்ன முஹம்மதர்ர றஸூலுள்ளாஹ் என்று கூறுவதைக் கேட்கும்போது அவர்கள் தங்களுடைய பெரு விரல்களை முத்தமிட்டு நகங்களை தனது கண்ணின் இமையின் கீழ்கோழையிலிருந்து ஆரம்பித்து இமையின் தொங்கல் வரை தடவுவார்கள்; பின்னர், ஒவ்வொரு ஷஹாதத்திலும் ஒவ்வொரு விடுத்தம் செய் வார்கள்.

இதுபற்றி அவரிடம் நான் கேட்டதற்கு அவர் இவ்வாறு கூறினார்.

ஆரம்பத்தில் கைநகம் கண் தொட்டு முத்தமிட்டு வந்தேன், பின்னர் விட்டு விட்டேன்;. அப்போது எனது கண்ணில் நோய் வந்தது;அந்த சந்தர்பத்தில் தான் றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களைக் கனவில் பார்த்தேன்; நீர் அதானில் கை நகம் கண் தொட்டு முத்தமிடுவதை எதற்காக நிறுத்தினாய்? என்று என்னிடம் கேட்டார்கள்.

உமது கண் நோய் சுகமாக வேண்டும் என்று நீ விரும்பினால், கைநகம் கண் தொட்டு முத்தமிடுவதை தொடரும் என்றார்கள்; காலை கண் மலந்ததும் கண்ணில் தடவுவதை தொடர்ந்தேன்; சுகம் கிடைத்தது. இதுவரைஅந்த நோய் மீண்டும் வரவில்லை.

மேற்கண்ட உரையாடலின் முடிவு யாதெனில், அதானிலும் அதுவல்லாத நேரத்திலும் கைநகம் கண் தொட்டுத்தடவி முத்தமிடுவது" முஸ்தஹப்பு" என்ற தீர்வு கிடைத்துவிட்டது.

இது ஹளறத் ஆதம் அலைஹிஸ்ஸலாம், ஹளறத் அபூபக்கர் சித்தீக் றழியல்லாஹு அன்ஹு, ஹளறத் இமாம் ஹஸன் றழியல்லாஹு அன்ஹு உள்ளிட்டவர்களின் சுன்னத்துமாகும்; புகஹாக்கள், முபஸ்ஸிரீன்கள் சுன்னத் என்பதை ஏகோபித்துக் கூறியுள்ளார்கள்.

ஷாபி, மாலிக் மத்ஹபுடைய இமாம்களும் இதை "சுன்னத்" என்று மிகத் தெளிவாகக் கூறியிருக்கின்றார்கள்; சகல காலத்திலும் அனைத்து நாடுகளிலும் வாழுகின்ற முஸ்லிம்கள் இதை "சுன்னத்" என்று நம்பியே செய்து வருகின்றனர்; தவிர, இதில் பின்வரும் நன்மைகளும் உள்ளன என்றும் நம்பியுள்ளனர்.

இதைச் செய்து வருகின்றவர்களுக்கு கண் நோயோ, குருடோ இன்ஷா அல்லாஹ் ஒருபோதும் வரவே வராது, ஒருக்கால் கண்நோய் வந்தால், இவ்வாறு கண்ணில் தடவி முத்தமிடுவது மிகச் சிறந்த பரிகாரமாகும்; இதை பலமுறை அனுபவத்தில் பார்க்கப்பட்டுள்ளது; இதைத் தொடர்ந்து செய்பவருக்கு றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின்" ஷபாஅத்" கிடைக்கும்; மறுமையில் றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்கள் இவரை வரிசைகளில் (ஸப்பில்) தேடிக்கண்டுபிடித்து தனக்குப் பின்னால் அழைத்துச் சென்று சொர்க்கத்தில் சேர்த்து விடுவார்கள்.

யாஅல்லாஹ்! சங்கையான உனது ஹபீபின் ஷபாஅத்தை எங்களுக்கும் தந்து நல்லருள் புரிந்திடுவாயாக! ஆமீன்! ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்.

இதைச் செய்யக்கூடாது என்று கூறுவது முட்டாள்தனமாகும். தெளிவான தடை வராதிருக்கும் வரை இதைத் தடைசெய்ய முடியாது; ஒரு செயல் "முஸ்தஹப்பு" என்று ஆவதற்கு முஸ்லிம்கள் ஒன்றை "முஸ்தஹப்பு"

என்று அறிந்து கொள்வது மட்டுமே போதுமாகும்; ஆனால், "மக்றூஹ்" என்று கூறுவதற்கு குறிப்பான ஆதாரத்தைக் காட்ட வேண்டியது அவசியமாகும்; இதுபற்றிய விரிவான விளக்கத்தை” பித்அத் பற்றிய ஆய்வில்” கூறியுள்ளோம்.

**குறிப்பு:-**

“அதான்” தொடர்பாக இருக்கின்ற தெளிவான அறிவிப்புக்கள், மற்றும் ஹதீதுகள் கூறப் பட்டுள்ளன, தக்பீரும் கூட அதானைப் போன்றதுதான்; ஹதீதுகளில் தக்பீருக்கு அதான் என்றும் கூறப்பட்டிருக்கின்றது.

بين كل اذانين صلوة

ஒவ்வொரு இரண்டு அதானுக்குமிடையிலும் தொழுகையுண்டு.!

அதாவது, அதான், தக்பீருக்கிடையிலாகும்,

ஆகவே, தக்பீரில் اشهد ان محمدا رسول الله என்று கூறும் போதும் கைநகம் முத்துவது பறக்கத் பொருந்தியதாகும்.

அதான், தக்பீர் தவிர்ந்தவையில் கூட ஒருவர் றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் திருநாமம் கேட்டு கைநகம் முத்தமிட்டால், அதில் எந்தக் குறையும் கிடையாது;எண்ணம் நல்லதாயின், நன்மை கிடைக்கவே செய்யும்; ஆதாரமில்லாமல் எதையும் தடுக்கக்கூடாது; றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களை எந்த விதத்திலாயினும் சரி கண்ணியப் படுத்தினால் அதற்கு நன்மை இருக்கவே இருக்கின்றது.

# அத்தியாயம் : 2
# குற்றச்சாட்டுக்களும், பதில்களும்.

**குற்றச்சாட்டு**: 1

கைநகம் கண்தொட்டு முத்தமிடுவது பற்றி வந்துள்ள சகல அறிவிப்புக்களும் ழயீபானவை,. ழயீபான ஹதீதிலிருந்து ஷரீஅத்தின் சட்டத்தை எடுக்க முடியாது! இதோ மகாஸிதுல் ஹஸனா என்ற நூலில் வருவதைக் கவனியுங்கள்.

لا يصح في المرفوع من كل هذا شئ

இதில் ஸஹீஹான எந்த ஒரு மர்பூஆன ஹதீதும் கிடையாது.

முல்லா அலி காரி றஹ்மதுல்லாஹி அலைஹி அவர்கள் *"மௌழூஆத்துல் கபீரில்"* இதுதொடர்பான ஹதீதுகளைப் பற்றிக் கூறும் போது,

كل ما يروي في هذا فلا يصح رفعه

இது தொடர்பில் வந்துள்ள ஹதீதுகளில் எதுவும் "மர்பூஆன" தரத்தில் இல்லை.

அல்லாமா ஷாமி அவர்களே அதானில் இதுபற்றிய விளக்கத்தில் இவ்வாறுதான் கூறுகின்றார்கள்.

لم يصح من هذا شئ

இவற்றில் எந்த ஒருஹதீதும் "மர்பூஆன" தரத்தில் உள்ள ஸஹீஹான ஹதீதாக இல்லை.

தப்ஸீர் றூஹுல் பயான் ஆசிரியரும் கூட இந்த ஹதீதுகள் ஸஹீஹானவை என்பதை நிராகரித்திருக்கின்றார், இதன் பின்பும் இவ்வகையான ஹதீதுகளை முன் வைப்பது வீணாகும்.

**பதில் :**

இதற்கு பல விதங்களில் பதில்களைக் கூறலாம்.

1- மேற்கண்ட சகல அறிஞர்களும் இந்த ஹதீதின் அறிவிப்பாளர் தொடர் றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்கள் வரை போய்ச் சேர்ந்த "மர்பூஃஆன" ஸஹீஹான ஹதீதைத்தான் மறுக்கின்றார்கள்; இதிலிருந்து இந்த ஹதீது, அதற்கடுத்த தரத்திலுள்ள ஸஹீஹான "மௌகூப்" என்று தெரிய வருகின்றது.

அல்லாமா முல்லா அலி காரி றஹ்மத்துள்ளாஹி அலைஹி அவர்கள் "மௌழூஆத்துல் கபீர்" என்ற நூலில் இவ்வாறு எழுதுகின்றார்கள்.

قلت واذا ثبت رفعه الي الصديق رضي الله تعالي عنه فيكفي للعمل به لقوله عليه الصلوة والسلام عليكم بسنتي وسنة الخلفاء الراشدين

நான் கூறுகின்றேன். இந்த ஹதீது ஹளறத் அபூபக்கர் சித்தீக் றழியல்லாஹு அன்ஹு அவர்கள் வரை போய் சேருவது உறுதியாகின்றது, ஆகவே, அமல் செய்வதற்கு அது போதுமாகும்; காரணம்,"எனது சுன்னத்தையும், குலபாஉர் றிஷிதீன்களின் சுன்னத்தையும் பின் பற்றுங்கள்"!என்று றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்கள் கூறியுள்ளார்கள்.

இந்த ஹதீது "மௌகூப்" என்பது (சஹாபாக்கள் வரை அதன் அறிவிப்பாளர் தொடர் வந்ததைப் குறிக்கும், இது) ஸஹீஹாகும். அமல் செய்வதற்கு மௌகூபான ஹதீது போதும்.

2- சகல உலமாக்களும் இது தொடர்பாகக் கூறப்பட்ட சகல ஹதீதுகளும் றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்கள் வரை போய்ச் சேர்ந்தவை என்றும், ஸஹி அல்ல என்றும் தான் கூறியுள்ளார்கள்; ஸஹி இல்லை என்றால், அது ழயீபாக இருக்க வேண்டும் என்பது அவசியமில்லை; ஏனெனில்,"ஸஹி" என்பதற்கு அடுத்ததாக "ஹஸன்" என்ற நிலை இருக்கின்றது; இந்த ஹதீது ஹஸனாக இருந்தால் அதுவே போதுமாகும்.

3- இது உஸூல் ஹதீது, உஸூல் பிக்ஹு தொடர்பான பிரச்சினை; ஒரு

ழயீபான ஹதீது பலவழிகளில் அறிவிக்கப்படுமாயின், அந்த ஹதீது "*ஹஸன்*" என்ற தரத்தை அடையும்.

**இதோ கவனியுங்கள்!**

துர்ருல் முக்தார் பாகம் 1- "வுழுவின் முஸ்தஹபாத்" என்ற பகுதியில் வுழுவின் உறுப்புக்களில் ஓதப்படுகின்ற துஆக்கள் பற்றிய விளக்கத்தில் கூறுகின்றார்கள்.

وقد رواه ابن حبان وغيره عنه عليه السلام من طرق عليه السلام

இந்த ஹதீஸை இப்னு ஹிப்பான் அவர்களும், அவரல்லாதவர்களும் பல அறிவிப்பாளர்கள் மூலமாக அறிவிக்கின்றார்கள்.

இதற்குக் கீழே ஷாமியில் கூறுகின்றார்கள்.

اي يقوي بعضها بعضا فارتقي الي مرتبة الحسن

சில இஸ்னாதுகள் சிலதை பலப்படுத்துகின்றன, ஆகவே, இந்த ஹதீது "*ஹஸன்*" என்ற தரத்திற்கு உயருகின்றது.

4- இந்த ஹதீஸை "ழயீப்" என்றுதான் ஏற்றுக் கொண்டாலும் கூட, பழாயிலான அமல்களில் ழயீபான ஹதீது ஏற்கத்தக்கது தானே!

இதே அல்லாமா ஷாமி அவர்கள் இதே றத்துல் முக்தாரில் பாகம்-1 "அதான்" பற்றிய பாடத்தில் அதானைப்பற்றிய விளக்கத்தில் கூறுகின்றார்கள்.

علي أنه في فضائل الأعمال يجوز العمل بالحديث الضعيف كما مر في أول كتاب الطهارة

பழாயிலான அமல்களில் ழயீபான ஹதீஸின் படி அமல் செய்வது ஆகுமானது, இதுவெல்லாம் ஹறாம், ஹலால் உள்ளிட்டதைத் தீர்மானிக்கின்ற பிரச்சினை இல்லையே!

"கைநகம் கண்தொட்டு முத்தமிடுவதில்" இன்ன சிறப்பு உண்டு என்றுதானே கூறப்படுகின்றது. ஆகவே இதில் ழயீபான ஹதீது கூட

அமலுக்கு ஏற்கத்தக்கதுதான். முஸ்லிம்களின் செயல்கள் ளயீபான ஹதீதை உறுதிப்படுத்துகின்றன.

"அத்காறுன் நவவிவி" யில் அதன் ஆசிரியர் இமாம் நவவி றஹ்மதுல்லாஹி அலைஹி அவர்கள் மைய்யித்திற்கு தல்கீன் கூறுவது பற்றிய விளக்கத்தில் எழுதுகின்றார்கள்.

وقد روينا فيه حديثا من حديث تلقين الميت من حديث ابي امامة ليس بقائم اسناده ولكن اعتضد بشواهد وبعمل اهل الشام

மைய்யித்திற்கு "தல்கீன்" ஓதுவதற்குரிய ஹதீது பலமான இஸ்னாதுள்ளதல்ல! ஆயினும், ஷாம் நாட்டவர்களின் அமலும், மற்றும் ஏனைய ஆதாரங்களினாலும் பலமானதாகின்றது.

கைநகம் முத்துவதும் உம்மத்துக்களின் அமலினால் பலமாகின்றது,ஆகவே, இந்த ஹதீதும் பலமானதுதான்; இதைவிட மேலதிகமான உஸூல் தொடர்பான விளக்கம் "நூறுல் அன்வார்", "தவ்ழீஹ்" இன்னும் இவை தவிர்ந்த நூற்களில் காணமுடியும்.

5- இது தொடர்பாக எந்த ஒரு ஹதீதும் வரவில்லை என்றாலும் கூட, முஸ்தபா ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் உம்மத் "முஸ்தஹப்பு" என்று ஏற்றிருப்பது ஒன்றே போதுமான ஆதாரமாகும்.

ஹதீது ஷரீபில் வந்துள்ளது.

ما راه المؤمنون حسنا فهو عند الله حسن

எந்தக் காரியத்தை முஃமின்கள் நல்லதாகக் காண்கின்றார்களோ, அது அல்லாஹ்விடத்திலும் நல்லதுதான்.

6- அதானில் கைநகத்தை கண் தொட்டு முத்தமிடுவது கண்நோயைச் சுகப்படுத்துகின்ற ஓர் அமலாகும். அமலில் ஸூபியாக்களுடைய அனுபவமே போதுமாகும்.

ஷாஹ் வலியுள்ளாஹ் கத்தஸல்லாஹு ஸிர்ரஹுல் அஸீஸ் அவர்கள் கூறுகின்றார்கள்.

தொழில் துறைகளில் ஆய்வுக்கான வாசல் திறந்தே இருக்கின்றது,

உதாரணமாக, மருத்துவர்கள் சிகிச்சைக்கான பல கண்டுபிடிப்புக்களை உருவாக்குகின்றார்கள்; ஷாஹ் வலியுள்ளாஹ் கத்தஸல்லாஹு ஸிர்ரஹுல் அஸீஸ் அவர்களே தனது “கௌலுல் ஜமீல்” என்ற நூலிலும், மற்றும் இதுவல்லாத நூலிலும் ஜின்களை விரட்டுவதற்கும்; ஜின்களிலிருந்து பாதுகாப்புப் பெறுவதற்கும்; கற்பத்தில் குழந்தையின் பாதுகாப்புக்கும் பல நூற்றுக்கணக்கான தஃவீதுகளை குறிப்பிட்டுள்ளார்கள்.

அதாவது, இன்ன துஆவை மானின் தோலில் எழுதி பெண்ணின் கழுத்தில் மாலையைப்போன்று அணிந்து கொண்டால், கரு விழாது! இதுபோன்று எத்தனையோ முறைகளைக் கூறுகின்றார்கள்; இவை தொடர்பாக ஏதும் ஹதீதுகள் இருக்கின்றனவா கூறுங்களேன் பார்க்கலாம்.?

இவ்வாறுதான் ஷாமி அவர்கள் கூட சூனியத்திலிருந்து பாதுகாப்புப் பெறுவதற்கும், தவறிப்போனது கிடைப்பதற்கும் அதிகமான வழிகளைக் கூறுகின்றார்கள். இவற்றுக்கெல்லாமான ஹதீதுகள் எங்கே இருக்கின்றன என்று கூறுங்களேன்.?

கைநகம் கண் தொட்டு முத்தமிடுவது கண்நோய்க்கு அனுபவ ரீதியான பரிகாரம் என்று ஏற்கனவே குறிப்பிட்டுள்ளோம்; அதை எதற்காகக் தடுக்கின்றீர்கள்?

7- முதல் பாடத்தில் ஷாமி, ஷறஹுன் நிகாயா; தப்ஸீர் றூஹுல் பயான் உள்ளிட்ட நூற்களில் கைநகம் கண் தொட்டு முத்தமிடுவது "முஸ்தஹப்பு" என்று கூறப்பட்டுள்ளன என்பதை கூறியுள்ளோம். “முஸ்தஹப்பு” என்று இவர்கள் கூறியதைப் பற்றி வாய் திறக்காமல் ஹதீது மர்பூஃ என்பது ஸஹி அல்ல என்பதை மட்டும் தூக்கிப் பிடிக்கின்றனர்; இதன்படி "முஸ்தஹப்பு" என்ற சட்டம் சரிதான் என்பதை ஒப்புக் கொள்கின்றனர்;எனவே, இவர்களின் வாதம் ஹதீதைப் பற்றித்தான் என்று தெரிய வருகின்றது.

இந்த வகையான சுன்னத்திற்கு ஹதீது ஸஹீஹாக இருக்க வேண்டும் என்பது அவசியமில்லை.

8- சுன்னத்தை உறுதி செய்வதற்கு ழயீபான ஹதீதால் முடியாது என்றால், எந்த ஸஹீஹான ஹதீஸின் மூலமாக "மக்றூஹ்" என்று தீர்மானித்தீர்கள்?

கைநகம்கண்தொட்டு முத்தமிடுவது "மக்றூஹ்" என்பதற்கு இன்ஷா அல்லாஹ் ஸஹீஹான ஹதீது இருக்கட்டும்! ழயீபான ஹதீதைக்கூட அவர்களால் காட்டமுடியாது ;

திருவாளர்களின் ஆய்வு றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி

வஸல்லம வர்கள் பேரிலான விரோதமே தவிர, வேறு எதுவுமில்லை.

அல்ஹம்துலில்லாஹ்! இந்த குற்றச்சாட்டுக்களுக்கான பத்திரங்களெல்லாம் காற்றில் பறந்துவிட்டன. சத்தியம் பட்டவர்த்தனமாகி விட்டது!.

**குற்றச்சாட்டு; 2**

ஹளறத் ஆதம் அலைஹிஸ்ஸலாம் அவர்கள் முஸ்தபா நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் நூறை பெருவிரல் நகங்களில்ப் பார்த்து அதை அவர்கள் முத்தமிட்டார்கள் என்றால், நீங்கள் எந்த நூறைப் பார்த்தீர்கள்.? முத்தமிடுவதற்கான காரணம் அங்கே இருந்தது இங்கே இல்லையே !

**பதில்:-**

ஹளறத் ஹாஜறா நாயகி ஹளறத் இஸ்மாயீல் அலைஹி வஸல்லமவர்களை சுமந்து கொண்டு மக்காவின் வனாந்திரத்திற்கு வந்தார்கள், இரு மலைகளுக்கு மத்தியில் ஓடியோடி தண்ணீர் தேடினார்கள்; இப்போதும் அங்கே ஏன் ஓடு கின்றீர்கள்.? இப்போதும் அங்கே ஓடுவது தண்ணீருக்கான தேடுதலா?

ஹளறத் இஸ்மாயீல் அலைஹிஸ்ஸலாமவர்களை குர்பான் கொடுக்கப் போகும் வழியில் ஷைத்தானுக்கு மூன்று இடங்களில் ஹளறத் இப்றாஹீம் அலைஹிஸ்ஸலாம் கல் எறிந்தார்கள்; இப்போதும் அங்கே எதற்காக கல் எறி கிறீர்கள்.? இப்போது எந்த ஷைத்தான் உங்களுக்கு அங்கே சதி செய்கிறான்?

றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் முக்கியமான ஓர் அவசியத் தேவைக்காகவேண்டி மக்கத்துக் காபிர்களுக்குக் காட்டுவதற்காக தவாபில் (றம்லு) புயத்தை அசைத்து குதித்து தனது வீரத்தை வெளிக்காட்டினார்கள்; இப்போது தவாபுல் குதூமில் எதற்காக றம்லு செய் கின்றீர்கள்.? இப்போது அங்கே காபிர் எங்கே பார்க்கின்றார்கள்.?

கண்ணியத்திற்குரிய நபிமார்களின் ஒப்புக் கொள்ளப்பட்ட சில அமல்கள் அங்கே நிரந்தரமாக இருப்பது அவசியமில்லா விட்டாலும் சரி, தொடர்ந்தும் அங்கே நிரந்தரமாக நினைவு கூறப்படுகின்றன. இதையும் இவ்வாறுதான் புரிந்து கொள்ளுங்கள்.!

**குற்றச்சாட்டு: 3**

றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் திருநாமத்தின் பேரில் பெரு விரல் நகத்தை முத்தமிடுகின்றனர், வேறு ஒரு பொருளை ஏன் முத்தமிடுவதில்லை? நகத்திலிருக்கும் தனித்துவம் யாது? கை, கால், ஆடைகள் போன்றவற்றையும் முத்தமிடலாம் தானே!

**பதில்:**

ஹதீஸின் அறிவிப்பில் நகங்களைப் பற்றித்தான் கூறப்பட்டுள்ளது, இதனால்தான் முத்த மிடப்படுகின்றது;

தெளிவாக வந்தவையில் காரணம் தேட வேண்டிய அவசியம் கிடையாது; அதன் நுட்பத்தை அறிய வேண்டுமாயின், தப்ஸீர் காஸின், தப்ஸீர் றூஹுல் பயான் இன்னும் இதுவல்லாத வேறு தப்ஸீர்களிலும்

بَدَتْ لَهُمَا سَوْاٰتُهُمَا

***(ஆதம், ஹவ்வா) அவ்விருவரின் வெட்கத் தலங்கள் அவ்விருவருக்கும் வெளியாயின;***

*அல் குர்ஆன்: (7:22).*

என்ற திரு வசனத்தின் விளக்கத்தில் கூறுகின்றார்கள்.

சொர்க்கத்தில் ஹளறத் ஆதம் அலைஹிஸ்ஸலாமவர்களின் நகம்தான் அவர்களின் ஆடையாக இருந்தது, அதாவது உடல் முழுவதுமாக நகம் தான் இருந்தது; அது மென்மையாகவும், அழகாகவுமிருந்தது.

அவர்கள் மீது அல்லாஹ்வின் தண்டனை வந்த போது, அந்த ஆடை உரியப்பட்டது; ஆனாலும், விரல்களிலிருந்த நினைவிடங்கள்யாவும் அப்படியே நிரந்தரமாக இருந்தன; இதன் மூலம் நமது நகம் சொர்க்கத்தின் ஆடையாகும்; றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் அருளினால் சொர்க்கம் நமக்குக் கிடைத்திருக்கின்றது ; இதனால்தான் அவர்களின் திருநாமத்தின் பேரில் சொர்க்கத்தின் ஆடையை முத்தமிடுகின்றோம்.

கஃபத்துள்ளாஹ்விலிருக்கின்ற “ஹஜருல் அஸ்வத் கல்”

சொர்க்கத்திலிருந்து வந்தது; அதனால் அதை முத்தமிடுகின்றோம்; கஃபாவின் ஏனைய இடங்களை நாம் முத்தமிடுவதில்லை; ஏனெனில், அது ஹளறத் ஆதம் அலைஹிஸ்ஸலாம் அவர்கள் சொர்க்கத்திலிருந்து வரும் போது கொண்டு வந்த சொர்க்கத்து வீட்டின் நினைவுச் சின்னமாகும்;;நூஹ் அலைஹிஸ்ஸலாம் அவர்களின் காலத்தில் ஏற்பட்ட பிரளயத்தில் இக்கல் உயர்த்தப்பட்டது;; இந்த கல் அதற்கான நினைவுச் சின்னமாகும்; இதுபோன்று தான் நகமும் சொர்க்கத்தின் ஆடையின் நினைவுச் சின்னமாகும்.

# ஆய்வு-25

# ஜனாஸாவைச் சுமந்து செல்லும் போது கலிமாச் சொல்வது பற்றிய ஆய்வு!

மைய்யித்தை மைய்ய வாடிக்கு எடுத்துச்செல்லும் போது முன்னால் கலிமாவை எல்லோரும் சேர்ந்து சப்தமிட்டு கூறுவது, அல்லது "நஃது ஷரீப்" பாடுவது சில இடங்களில் அடையாளமாக இருக்கின்றது ; இதை எவராவது எதிர்ப்பார்கள் என்று எனக்கு கற்பனையிலும் சந்தேகம் வரவில்லை; நான் பஞ்சாப் சென்ற போது, தேவ்பந்திகள் இதை ஹறாம், பித்அத் என்று கூறு வதாக அறிய முடிந்தது.

இந்தளவு வெளிப்படையான பிரச்சினைகளைப் பற்றி எழுதும் எண்ணம் எனது மனதில் இருக்கவில்லை, சில அன்பர்களின் வற்புறுத்தலுக்காக சுருக்கமாக எழுதுகின்றேன்; ஆகவே, இதையும் இரு அத்தியாயங்களாக் கியுள்ளோம்;

முதல் அத்தியாயத்தில் இதற்கான ஆதாரங்களும்; இரண்டாம் அத்தியாயத்தில் குற்றச்சாட்டுக்களும், அதற்கான பதில்களும் இடம்பெறும்; இதற்கான "தவ்பீக்" அல்லாஹுத்த ஆலாவைக் கொண்டே ஆகும்.

## அத்தியாயம் - 1

ஜனாஸாவுக்கு முன் கலிமா, அல்லது "நஃது ஷரீப்" பாடுவதற்கான ஆதாரங்கள்:

ஜனாஸாவுக்கு முன்னால், கலிமாத் தைய்யிபா, அல்லது தஸ்பீஹ்; தஹ்லீல்; ஸலவாத், அல்லது நஃது ஷரீப் மெதுவாக, அல்லது சப்தமிட்டு கூறுவது ஆகுமாகும்; தவிர, இது மைய்யித்திற்கும், கேட்போரும் நன்மை தரக்கூடியது மாகும்.

இதைப்பற்றி திருக்குர்ஆன், ஸஹீஹான ஹதீதுகள், புகஹாக்களின் கூற்றுக்கள் தக்க ஆதாரங்களாக இருக்கின்றன.

அல்லாஹுத்த ஆலா கூறுகின்றான்.

الذين يذكرون الله قياما وقعودا وعلي جنوبهم

***அவர்கள் எத்தகையோரென்றால்- நின்ற நிலையிலும், இருந்த இருப்பிலும், தங்களின் விலாப்புறங்களின் மீது (படுத்த நிலையிலு)ம் அல்லாஹ்வைத் திக்ரு செய்வார்கள்;***

*(அல்குர்ஆன்: 3 : 191).*

இதற்குரிய விளக்கத்தைக் தப்ஸீர் றூஹுல் பயானில் பின்வருமாறு எழுதுகின்றார்கள்.

اي يذكرونه دائما علي الحالات كلها قائمين وقاعدين ومضطجعين فان الانسان لا يخلو من هذه الهيئات غالبا

இத்திருவசனத்தில் பொருள், சகல நிலையிலும் எப்போதும் எழுந்து நின்றும், உட்கார்ந்து கொண்டு அல்லாஹ்வை திக்ரு செய்து கொண்டிருப்பார்கள்; காரணம், மனிதன் அநேகமான நிலைகளில் இந்த நிலைகளை விட்டும் தவிர்ந்திருப்பதில்லை.

தப்ஸீர் இப்னு சுஊதில் இதற்குக் கீழ் எழுதுகின்றார்கள்.

والمراد تعميم الذكر للاوقات وتخصيص الاحوال المذكورة ليس لتخصيص الذكر بها بل لانها الاحوال المعهودة التي لا يخلوا عنها الانسان

மேற்கண்ட தப்ஸீரின் அதேகருத்து இதிலும் இருக்கின்றது.

தப்ஸீர் கபீரில் எழுதுகின்றார்கள்.

المراد كون الانسان دائم الذكر لربه فان الاحوال ليست الا هذه الثلثة ثم لما وصفهم بكونهم ذاكرين فيها كان ذلك دليلا علي كونهم مواظبين علي الذكر غير فاترين عنه

அதே கருத்தையே தப்ஸீர் கபீரிலும் எழுதியுள்ளார்கள்.

இப்னு அதிய்யி என்பவர், "காமில்" என்ற நூலிலும், இமாம் ஸைலஈய்யி "நஸ்புர் றாயா லிதகறீஜி அஹாதீதில் ஹிதாயா" என்ற நூலிலும் பாகம்- 2 பக்கம்-292ல் எழுதுகின்றார்கள்.

عن ابن عمر قال لم يكن يسمع من رسول الله صلي الله عليه وسلم وهو يمشي خلف الجنازة الا قول لا اله الا الله مبديا وراجعا

றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்கள் ஜனாஸாவுக்குப் பின் நடந்து செல்லும் போதும், திரும்பி வரும் போதும் "லாஇலாஹ இல்லல்லாஹ்" என்ற திருக்கலிமாவை மொழிந்தே தவிர, வேறு எதனையும் கேட்க வில்லை.

இந்த ஹதீது ஒருக்கால் ழயீபாக இருந்தால் கூட, பழாயிலுல் அஃமாலில் அமல் செய்வதற்கு ஆதாரமாக ஏற்கப்படும்.

"அத்தஹ்ருல் முக்தார் ஆலா றத்தில் முக்தார் " என்ற நூல் பக்கம் 123ல் பின்வருமாறு எழுதுகின்றார்கள்.

ولكن اعتادالناس كثرة الصلوة علي النبي صلي الله عليه وسلم ورفع أصواتهم بذلك وهم أن منعوا ابت نفوسهم عن السكوت والتفكر فيقعون في كلام دنيوي وربما وقعوا في غيبة وانكار المنكر إذا قضي الي ما اعظم منكرا كان تركه أحب لانه ارتكاب باخف المضرتين كما هو القاعدة الشرعية

அதிக சத்தத்தோடு றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்வர்களின் பேரில் ஸலவாத் ஓதிக் கொண்டு (ஜனாஸாவோடு) செல்லும் வழக்கம் மக்களுக்கு மத்தியில் இருக்கின்றது, இதைத் தடுத்தால், அமைதியாகவும், மரண சிந்தனையோடும் செல்வதற்கு அவர்களின் மனம் இடங்கொடுக்காது; உலக விவகாரங்களைப் பேசிக் கொண்டு செல்வார்கள்; அதில் புறமும்; வெறுக்கத்தக்கவையும் இடம் பெறலாம்; ஆகவே, அதைத் தவிர்ப்பதற்கு இரு தவறில் இலேசானதைச் செய்வது விரும்பத்தக்கது என்ற ஷரீஆவின் விதிப்படி இது ஆகும்.

மேற்கண்ட திருவசனம், அதற்கான தப்ஸீர் உள்ளிட்டவைகளிலிருந்து

இரு விடயங்கள் தெரிய வருகின்றன.

1- சகல நிலைகளிலும், அல்லாஹ்வைத் திக்ரு செய்வதற்கு அனுமதி உண்டு; அதை சப்தமிட்டோ; அமைதியாகவோ எவ்விதத்திலும் சொல்லவும் அனுமதி உண்டு.

2- எதாவது ஒரு சந்தர்பத்தில் திக்ரு செய்யக்கூடாது என்று தடுப்பதாயின், குறைந்தபட்சம் "மஷ்ஹூறான ஹதீது" அவசியமாகும். ஏனெனில், ஒரு ஹதீது, அல்லது ஒரு முஜ்தஹிதின் கியாஸினால் திருக்குர்ஆனின் பொதுமையான ஒன்றை குறிப்பாக்க முடியாது.

புகஹாக்கள் ஜனாபத், மாதவிலக்கு உள்ள சந்தர்பங்களில் திருக்குர்ஆன் ஓதுவது தவிர்ந்த ஏனைய திக்ருகளை அனுமதித்துள்ளார்கள்; திருக் குர்ஆனின் ஆயத்துக்களை திருக்குர்ஆனின் நாட்டமில்லாமல் (துஆவின் எண்ணத்தோடு உதாரணமாக, பிஸ்மில்லாஹ்) ஓதுவதை ஆகுமாகும்,

இதை சகல பிக்ஹு நூற்களிலும் காணமுடியும்.

மைய்யித்தை மைய்ய வாடிக்கு எடுத்துச் செல்வதும் ஒரு நிலைதான், இந்த நிலையிலும் சகல விதமான திக்ருகளும் ஆகுமானதுதான்;

திருக்குர்ஆன் கூறுகின்றது.

الا بذكر الله تطمئن القلوب

***அறிக! அல்லாஹ்வை திக்ரு செய்வதால் மனம் அமைதியடைகிறது.***

தப்ஸீர் றூஹுல் பயானில் இதற்கான விளக்கத்தை இவ்வாறு எழுது கின்றார்கள்.

فالمؤمنون يستأنسون بالقران وذكر الله الذي هو الاسم الاعظم ويحبون استماعها والكفار يفرحون بالدنيا ويستبشرون بذكر غير الله

திருக்குர்ஆன், இஸ்முல் அஃழமாகிய *"அல்லாஹ்"* என்ற திக்ரு உள்ளிட்ட வையால் முஸ்லிம்கள் நெருங்குகின்றனர், அதைக் கேட்க விரும்புகின்றனர்; காபிர்கள் உலகத்தின் காரியாதிகளால் மகிழ்சியடைகின்றனர்; ஆகவே, அல்லாஹ் அல்லாதவையில் ஆனந்தமடைகின்றனர்.

இத் திருவசனம், அதற்கான தப்ஸீர்களின் வாசகங்கள் உள்ளிட்டவையின் மூலமாக விளங்குவது யாதெனில்,

அல்லாஹ்வைத் திக்ரு செய்வது முஸ்லிம்களுக்கு மகிழ்ச்சியையும், ஆனந்தத்தையும் தூண்டுகின்றது.

காஃபிர்களுக்கு அதனால் கவலையேற்படுகின்றது; அல்ஹம்துலில்லாஹ்! மைய்யித்தும் முஸ்லிமாகவே இருக்கின்றது; சகலரும் ஒரே இடத்திலேயே பிரசன்னமாயிருக்கின்றனர்; ஆகவே, சகலருமே ஆனந்தமடைகின்றனர்.

மைய்யித்திற்கு இந்தக் கட்டத்தில் தனது குடும்பம், பிள்ளை குட்டிகளைப் பிரிந்த கவலை இருக்கும்; இந்த திக்ரினால் அதற்கு அக்கவலை நீங்கி விடும்; இந்த ஆயத்தும் கூட பொதுவான திக்றைத்தான் கூறுகின்றது; அதை மெதுவாகச் செய்தாலும் சரி, சப்தமிட்டுச் சொன்னாலும் சரி எந்த விதத்திலும் ஆகும்தான்; தனது சொந்த கற்பனையை வைத்து இதற்கு வரையறைகள் விதிக்கக் கூடாது;

முன்தகப் கன்ஸுல் ஈமான் பாகம் 6 பக்கம் 99ல் ஹளறத் அனஸ் றழியல்லாஹு அன்ஹு அவர்களின் றிவாயத்தில் பின் வரும் ஹதீது இடம் பெறுகின்றது.

اكثروا في الجنازة قول لا اله الا الله

ஜனாஸாவில் லாஇலாஹ இல்லல்லாஹ்! என்ற கலிமாவை அதிகமாகக் கூறுங்கள்.

مشكوة كتاب الدعوات باب ذكر الله என்ற பாடத்தில் வருகின்றது.

ان لله ملئكة يطوفون في الطرق يلتمسون اهل الذكر فاذا وجدوا قوما يذكرون الله تنادوا هلموا الي حاجتكم الخ

அல்லாஹ்வுக்குரிய சில மலக்குகள் அல்லாஹ்வைத் திக்ரு செய்கின்றவர்களைத் தேடிக் கொண்டு தெருக்களில் சுற்றிக் கொண்டிருப்பார்கள், அல்லாஹ்வைத் திக்ரு செய்கின்றவர்களை அவர்கள் கண்டு கொண்டால், ஒருவர் மற்றவரை நமது நோக்கத்தின் பக்கம் வாருங்கள்! என்று அழைப்பார்கள்; பின்னர், திக்ரு செய்கின்றவர்களை சூழ்ந்து கொள்வார்கள்.

மைய்யித்தோடு செல்கின்றவர்கள் அல்லாஹ்வை திக்ரு செய்வார்களாயின், மலக்குகள் வழியில் அவர்களைச் சந்தித்து அவர்களைத் தங்களுடைய இறக்கைக்களால் சூழ்ந்து கொள்வார்கள்; மைய்யித்தும் கூட மலக்குகளின் இறக்கையின் நிழலில் மைய்யவாடி வரை செல்லும்.

இந்த ஹதீஸிலும் கூட, அமைதியாக இருந்தாலும் சரி, சப்தமாக இருந்தாலும் சரி பொதுவாக திக்றைப்பற்றிக் கூறப்பட்டுள்ளது என்பதைக் கவனத்தில் கொள்க!

மிஷ்க்காத்தில் இதே பாடத்தில் வருகின்றது.

إذا مررتم برياض الجنة فارتعوا قالوا وما رياضة الجنة قال خلق الذكر

றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் கூறினார்கள்.

اذامررتم برياض الجنة فارتعوا قالوا وما رياضة الجنة قال حلق الذكر

சொர்க்கத்தின் நந்தவனத்தின் பக்கம் நீங்கள் சென்றால், அதில் சொற் பளவு சாப்பிட்டுக் கொள்ளுங்கள்! சொர்க்கத்தின் *"நந்தவனம்"* என்பது எது? என்று ஸஹாபாக்கள் கேட்டனர். "திக்றுக்கான வட்டம்" என்று கூறினார்கள்.

மைய்யித்தோடு அல்லாஹ்வைத் திக்ரு செய்து கொண்டு சென்றால், மைய் யித்தும் சொர்க்கத்தின் நந்தவனத்தில் மைய்ய வாடி வரை பயணிக்கும்; இங்கும் கூட திக்ரு என்று பொதுவாகத் தான் கூறப்பட்டுள்ளது;மெதுவாக, சப்தமிட்டு என்று எந்த விதமான வரையறையும் கூறப்படவில்லை.

இதே மிஷ்க்காத்தில் இதே பாடத்தில் வருகிறது.

الشيطان جاثم علي قلب ابن ادم فان ذكر الله خنس

ஷைத்தான் மனிதனின் மனதைக் கொத்திக் கொண்டிருக்கின்றான், மனிதன் அல்லாஹ்வைத் திக்ரு செய்வதால் அகன்று விடுகின்றான்.

மைய்யித்தை எடுத்துச் செல்லும் வேளை அல்லாஹ்வைத் திக்ரு செய்வதால், ஷைத்தானிடமிருந்து மைய்யித் பாதுகாப்புப் பெறும்,

இங்கும் திக்ரு அமைதியாக, சப்தமிட்டு என்று வரையறை செய்யப்பட வில்லை.

இதுவரை ஜனாஸாவிற்கு முன்னால் சப்தமிட்டு திக்ரு செய்வதற்கான ஆதாரங்கள் திருக்குர்ஆன், ஹதீதுகள் மூலமாக நிரூபிக்கப்பட்டன,

அடுத்து, புகஹாக்களின் கூற்றுக்களை அவதானியுங்கள். இதில் தெளிவு கிடைக்கும்.

"ஹகீக்கத்துன் நதிய்யா ஷறஹு தரீக்கத்து முஹம்மதிய்யா" என்ற நூலில், ஆரிபு பில்லாஹ் அப்துல் கனி நாபுலிஸி றஹ்மத்துள்ளாஹி அலைஹி அவர்கள் இந்தப் பிரச்சினை தொடர்பாக நிபுணத்துவ விளக்கத்தை கூறுகின்றார்கள்;

ஜனாஸாவோடு செல்லும் போது சப்தமாகத் திக்ரு செய்வதை புகஹாக்கள் தடுத்தது மக்றூஹ் தன்ஸீஹ்! என்ற அடிப்படையிலாகும்; அல்லது மக்றூஹ் தஹ்ரீம் என்ற அடிப்படையில் என்று கூறிய பின், கூறு கின்றார்கள்.

لكن بعض المشائخ جوزوا الذكر الجهري ورفع الصوت بالتعظيم قدام الجنازة وخلفها لتلقين الميت والاموات والاحياء وتنبيه الغفلة والظلمة وازالة صداع القلوب وقسادتها بحب الدنيا ورياستها .

ஜனாஸாவுக்கு முன்போ, அல்லது பின்போ சப்தமிட்டு திக்று செய்வதை சில ஷைகுமார்கள் ஆகுமாக்கியுள்ளார்கள், இதில் உயிரோடுள்ளவர்களுக்கும், மையித்திற்கும் "தல்கீன்" உள்ளது; அல்லாஹ்வை மறந்தவர்களின் உள்ளங்களில் கடுமையான மறதியையும்; உலகத்தின் பிரியத்தையும்; அதன் தலைமைத்துவ மோகத்தையும் தூரமாக்குகின்றது.

"லவாக்கிஹுல் அன்வாறில் குத்ஸிய்யா" என்ற நூலில் குத்புர் றப்பானி அப்துல் வஹாபுஷ் ஷஃறானி கத்தஸல்லாஹு ஸிர்ரஹுல் அஸீஸ் அவர்கள் கூறுகின்றார்கள்.

كان سيدي علي الخواص رضي الله عنه يقول إذا علم من الماشين مع الجنازة أنهم لا يتركون اللغو في الجنازة ويشتغلون باحوال الدنيا فينبغي أن نأمرهم بقول لا اله الا الله محمد رسول الله فان ذلك افضل من تركه ولا ينبغي للفقيه أن ينكر ذلك الا بنص او اجماع فان للمسلمين الأذن العام من الشارع بقول لا اله الا الله محمد رسول الله كل وقت شاؤا ولله العجب من عمي قلب من ينكر مثل هذا

ஹளறத் அலிய்யுல் கவாஸ் றழியல்லாஹு அன்ஹு அவர்கள் கூறியுள்ளார்கள்.

ஜனாஸாவோடு செல்பவர்கள் வீண்பேச்சுக்களைத் தவிர்க்காமல் உலக விவகாரங்களில் கவனம் செலுத்திக் கொண்டு செல்வார்களாயின், கலிமாவை மொழிந்து கொண்டு செல்லுமாறு கட்டளையிடுவதுதான் பொருத்தமாகும்; அதைக் கூறுவது, கூறாதிருப்பதை விடச் சிறப்பாகும்.

இதைத் மார்க்க அறிஞா ்திட்டவட்டமான ஆதாரம், அல்லது முஸ்லிம்களின் இஜ்மாஃ தவிர்த்து தடுக்கவே கூடாது!. ஷாரிஃ அலைஹிஸ்ஸலாம் அவர்களின் தரப்பில் முஸ்லிம்களுக்கு அவர்கள் விரும்பிய நேரத்தில் கலிமாவை மொழிவதற்கு பொதுவான அனுமதி வழங்கப்பட்டுள்ளது; இதை "கல்புக்கண் கபோதிகள்" மறுப்பது கடுமையான ஆச்சரியமாக இருக்கின்றது.

இமாம் அப்துல் வஹாபுஷ் ஷஃறானி கத்தஸல்லாஹு ஸிர்ரஹுல் அஸீஸ் அவர்கள் தனது "உஹூதுல் மஷாயிக்" என்ற நூலில் கூறுகின்றார்கள்.

ولا نمكن احدا من اخواننا ينكر شيئا ابتدعها المسلمون علي جهة القرية وراوها حسنا لا سيما ما كان متعلقا باالله ورسوله كقول الناس امام الجنازة لا اله الا الله محمد رسول الله او قراءة احد القران امامها نحو ذلك فمن حرم ذلك فهو قاصر عن فهم الشريعة

மேலும் கூறுகின்றார்கள்.

وكلمة لا اله الا الله محمد رسول الله أكبر الحسنات فكيف يمنع وتامل احوال غالب الخلق الآن في الجنازة تجدهم مشغولين بحكايات الدنيا لم يعتبروا بالميت وقلبهم غافل عن جميع ما وقع له بل رؤيت منهم من يضحك واذا تعارض عندنا مثل ذلك وكون لك لم يكن في عهد رسول الله صلي الله عليه وسلم قدمنا ذكر الله عز وجل بل كل حديث لغو اولي من حديث أبناء الدنيا في الجنازة فلو صاح كل من في الجنازة لا اله الا الله محمد رسول الله فلا اعتراض

முஸ்லிம்கள் நன்மையான நல்ல காரியம் என்று கருதி புதிதாக தோற்றுவித்திருக்கும் குறிப்பாக அல்லாஹ்வோடும், அவனது திருத் தூதரோடும் தொடர்பானதைத் தடுப்பதற்கு எவருக்கும் வாய்ப்பைக் கொடுக்க மாட்டோம்; அமைதியாக இருந்தாலும் சரி, சப்தமாக இருந்தாலும் சரி.

உதாரணமாக, ஜனாஸாவுக்கு முன்னால், கலிமாவை ஓதுவது , அல்லது ஜனாஸாவுக்கு முன்னால் திருக்குர்ஆனின் ஏதாவது திருவசனங்களை ஓதுவது; எவராவது இவற்றை ஹறாம் என்று கூறினால், அவர் ஷரீஅத்தைப் பற்றிய விளக்கத்தில் குறையுள்ளவராகவே இருப்பார்.

மேலும் கூறுகின்றார்கள்.

லாஇலாஹ இல்லல்லாஹ் என்பது, நன்மையான வகையில் அதிக

நன்மையானது; அதை எதற்காகத் தடை செய்யவேண்டும்.?

இப்போது ஜனாஸாவோடு செல்பவர்களின் அநேகரின் நிலையை நீங்கள் உற்றுக் கவனித்துப் பார்ப்பீர்களாயின், அவர்கள் ஜனாஸாவோடு செல்லும் போது உலக விவகாரங்களைப் பேசுவதில் கவனம் செலுத்திக் கொண்டிருப்பதைப் பார்ப்பீர்கள்! . அவர்களின் மனம் மைய்யித்திலிருந்து பாடம் கற்றுக்கொள்வதாக இல்லை; அங்கு என்ன நடந்ததோ அதுபற்றி எந்தவிதமான உணர்ச்சியும் அவர்களிடம் காணப்படுவதில்லை; பலர் சிரித்துக் கொண்டு செல்வதை நானே பார்த்திருக்கின்றேன்;

இந்தக்காலத்தில் இப்படியான வேலைகளைச் செய்து கொண்டு இவ்வாறு கலிமாவை இரைந்து மொழிந்து செல்வது முந்திய காலத்தில் கிடையாது என்று கூறி, இது கூடாது என்று கூறுவது நல்லதல்ல!

இதற்கு ஆகும் என்று தீர்ப்புக் கூற வேண்டும்; ஜனாஸாவில் நன்மை யில்லாத உலகவாதிகளின் பேச்சை விட, சகல மக்களும் உரத்த சப்தமாக லாஇலாஹ இல்லல்லாஹ் முஹம்மதுர் ரஸூலுள்ளாஹ் என்று திக்ரு செய்து கொண்டு செல்வதில் எந்த விதமான ஆட்சேபனையும் கிடையாது.

மேற்கண்ட வாசகங்களிலிருந்து ஜனாஸாவோடு செல்லும் போது சத்தம் உயர்த்தி திக்ரு செய்வது ஆகும். ஜனாஸாவோடு செல்லும்போது உலகப் பேச்சுக்கள் பேசிக் கொண்டும், சிரித்துக் கொண்டும்.

செல்கின்ற இக்காலத்தில் சகலரும் ஒன்று சேர்ந்து சப்தமிட்டு கலிமாவை ஓதிக்கொண்டு செல்வது மிகமிக ஏற்றமாகும். இவ்வாறு செய்வது உலகப் பேச்சை விட மேல்தான்.

# *அத்தியாயம் – 2*
# *குற்றச்சாட்டுக்களும், பதில்களும்.*

இதுபற்றி மறுப்பாளர்களிடம் பின்வரும் குற்றச்சாட்டுக்கள் காணப் படுகின்றன., இன்ஷாஅல்லாஹ் இதைவிட மேலதிகமான வேறு குற்றச் சாட்டுக்கள் கிடையாது.

**குற்றச்சாட்டு: 1**

ஜனாஸாவோடு செல்லும் போது சத்தமிட்டு கலிமாச் சொல்வதை புகஹாக்கள் தடைசெய்திருக்கின்றார்கள்.,

எடுத்துக்காட்டாக,

பதாவா ஆலம் கீரி பாகம்-1 ஜனாஸா பற்றிய அத்தியாயத்தில் "ஜனாஸாவைச் சுமந்து செல்வது" பற்றிய பாடத்தில் இவ்வாறு வரை கின்றார்கள்.

وعلي متبعي الجنازة الصمت ويكره لهم رفع الصوت بالذكر وقراءة القران فان اراد أن يذكر الله يذكره في نفسه كذا في فتاوي قاضي خان

ஜனாஸாவோடு செல்பவர் மௌனமாகச் செல்வது வாஜிபாகும், சப்தமிட்டு திக்ரு செய்வது, திருக்குர்ஆனை ஓதுவது "மக்றூஹ்" ஆகும்; அல்லாஹ்வை திக்ரு செய்ய விரும்பினால், தனது மனதுக்குள் செய்து கொள்ளவும்.

பதாவா ஸிறாஜிய்யாவில் ஜனாஸாவை சுமந்து செல்லல் என்ற பாடத்தில் எழுதுகின்றார்கள்.

ويكره النياح والصوت خلف الجنازة وفي منزل الميت رفع الصوت بالذكر وقراءة القران وقولهم كل حي ميت ونحو ذلك خلف الجنازة بدعة ،

ஜனாஸாவுக்குப் பின்னாலும், மைய்யித்தின் வீட்டிலும் ஒப்பாரி வைப்பது; சப்தத்தை வெளிப்படுத்துவது; இன்னும், சப்தமிட்டு திக்ரு செய்வது; திருக் குர்ஆன் ஓதுவது "மக்றூஹ்" ஆகும்,

ஜனாஸாவுக்குப் பின்னால், "உயிருள்ள ஒவ்வொருவரும் மரணித்தே ஆகவேண்டும்." என்று கூறிக்கொண்டு செல்வதும் பித்அத்தாகும்.

துர்ருல் முக்தார் பாகம்-1 ஜனாஸா பற்றிய அத்தியாயம் "மைய்யித்தை அடக்கம் செய்தல்" பற்றிய பாடத்தில் எழுதுகின்றார்கள்.

كما كره فيها رفع الصوت بذكره او قراءة

ஜனாஸாவுக்குப் பின்னால் சப்தமிட்டு திக்ரு செய்வது, திருக்குர்ஆன் ஓதுவது *"மக்றூஹ்"* ஆகும்.

இதற்கு அடியில் ஷாமியில் எழுதுகின்றார்கள்.

قلت واذا كان هذا في الدعاء فما ظنك بالغناء الحادث في هذالزمان

துஆவிலேயே இந்தளவு கடுமை இருக்கும் போது, இந்தக் காலத்தில் புதிதாக உருவாக்கிய பைத்துக்களைப் பாடிக் கொண்டு செல்வது பற்றி நீ என்ன நினைக்கின்றாய்?

இப்னு முன்திர் என்பவர் "அஷ்றாப்" என்ற நூலில் நக்லு செய்கின்றார்கள்.

قال قيس ابن عبادة كان اصحب رسول الله صلي الله عليه وسلم يكرهون رفع الصوت عند ثلث عند القتال ، وفي الجنازة ، وفي الذكر ،

கண்ணியமான ஸஹாபாக்கள் ஜிஹாத், ஜனாஸா; திக்ரு உள்ளிட்ட மூன்று இடங்களிலும் சப்தத்தை உயத்துவதை விரும்ப வில்லை.

மேற்கண்ட பிக்ஹு தொடர்பான வாசகங்களிலிருந்து மைய்யித்தோடு செல்லும் போது சப்தமிட்டு திக்ரு செய்வது கூடாது என்று தெரிய வரு

கின்றது, குறிப்பாக இக்காலத்தில் *"நஃதுகானி"* என்று கூறப்படுகின்ற பாடல்கள் படு மோசமாகும். மறுப்பாளர்களின் உச்சமறுப்புக்கள் இவைதான்.

**பதில்:**

புகஹாக்களின் இந்த வாசகங்களில் சில விதங்களிலான பேச்சுக்கள் இருக்கின்றன.

1- ஜனாஸாவோடு செல்லும் போது சப்தமிட்டு திக்ரு செய்வதை "மக்றூஹ்" என்று இவர்கள் எழுதியிருப்பது மக்றூஹ் தன்ஸீஹ், அல்லது மக்றூஹ் தஹ்ரீமி ஆகும். (மக்றூஹ் தன்ஸீஹ் ஆகும் என்ற வட்டத்திற்குள் வரும். இதைச் செய்வது ஆகும். ஆனால் செய்யாதிருப்பது நல்லது)

2- இந்த சட்டம் அந்தக் காலத்திற்குரியது. அல்லது எல்லாக் காலத்திற்கு முரியது.

3- பொதுவாகக் கூறுவதே தடை , அல்லது, குறிப்பான திக்ரை சப்தமிடுவது, அல்லது ஒப்பாரி இன்னும் இதுவல்லாதது.

4- சப்தமிட்டு திக்ரு செய்வது சகலருக்கும் தடை அல்லது குறிப்பான நபர்களுக்கு இந்த நான்கு விடயங்களும் தீர்மானமாகிவிட்டால் பிரச்சினை மொத்தமாக தெளிவாகிவிடும்.

உண்மை என்னவென்றால், மைய்யித்தோடு செல்லும் போது சப்தமிட்டு திக்ரு செய்வதை புகஹாக்கள் "மக்றூஹ்" என்று கூறியிருக்கின்றார்கள், இதன்நோக்கம் "மக்றூஹ் தன்ஸீஹ்" ஆகும்.

ஷாமியில் அவர்கள் காட்டிய வாசகத்தோடு கூறுகின்றார்கள்.

قيل تحريما وقيل تنزيها كما في البحر عن الغاية وفيه عنها وينبغي لمن تبع الجنازة أن يطيل الصمت

இது மக்றூஹ் என்று கூறப்படுகின்றது. இன்னும் மக்றூஹ் தன்ஸீஹ் என்றும் கூறப்படுகின்றது;

பஹ்ருர் றாயிகில் ஙாயாத் என்ற நூலிலிருந்து நக்லு செய்திருப்பது போல, எவராவது ஒருவர் ஜனாஸாவோடு செல்வதாயின், மௌனத்தைக் கடைப்பிடிக்க வேண்டும்.

இதிலிருந்து மௌனத்தைக் கடைப்பிடிப்பது நல்லது திக்ரு செய்வது நல்லதல்ல; ஆகும் என்று தெரிகின்றது .

மக்றூஹ் தஹ்ரீமையும், மக்றூஹ் தன்ஸீஹையும் வேறுபடுத்தி அறிவதற்கான முறையை அல்லாமா ஷாமி அவர்களே மக்றூஹின் வரை விலக்கணத்தைக் கூறும் போது இவ்வாறு விளக்குகின்றார்கள்.

فحينئذ إذا ذكروا مكروحا فلا بد من النظر في دليله فان كان نهيا ظنيا يحكم بكراهة التحريم الا بصارف النهي عن التحريم الي الندب فان لم يكن الدليل نهيا بل كان مفيدا للترك الغير الجازم فهي تنزيهية

புகஹாக்கள் மக்றூஹ் என்று கூறினால், மக்றூஹுக்கான ஆதாரத்தை நோட்டமிடுவது அவசியமாகும், அந்தத்தடைக்கான ஆதாரம் ழன்னியத் தானதாக இருந்து வேறு தடைகள் வராதிருந்தால், *"மக்றூஹ் தஹ்ரீமி"* என்று கூறுவது அவசியமாகும்; தடைக்கான ஆதாரமில்லாமல் அதைத் தவிர்ப்பது அவசியமில்லாமல் நன்மையாக இருக்குமாயின், "மக்றூஹ் தன்ஸீஹ்" ஆகும்.

இதிலிருந்து விளங்குவது யாதெனில், புகஹாக்களின் மக்றூஹுக்கான ஆதாரத்தில் ஷரீஅத் ரீதியான நடையைக் கூறியிருந்தால், மக்றூஹ் தஹ்ரீமி ஆகும். இல்லையேல் மக்றூஹ் தன்ஸீஹ் ஆகும்.

சப்தமாக திக்ரு செய்வதை மக்றூஹ் என்று கூறிய புகஹாக்கள் தடைக் கான ஆதாரத்தை ஹதீதிலிருந்தோ, ஆயத்திலிருந்தோ முன்வைக்க வில்லை. அவ்வாறானவர்களில் ஷாமி அவர்கள் மட்டும்.

انه لا يحب المعتدين

***நிச்சயமாக அவன் வரம்பு மீறுபவர்களை நேசிக்க மாட்டான்.***

*(அல் குர்ஆன்: 7: 55).*

என்ற ஒரே ஒரு ஆதாரத்தை மட்டும் கூறுகின்றார்கள்.

இதற்கு அவர்கள் இவ்வாறு மொழிபெயர்த்துள்ளார்கள்.

اي المجاهرين بالدعاء

அதிக சப்தத்தோடு துஆக் கேட்கின்றவர்கள்.

இதிலிருந்து இதற்குத் தெளிவான எந்த ஆதாரமும் கிடைக்க வில்லை என்பது உறுதியாகி விட்டது, ஆகவே, இது மக்றூஹ் தன்ஸீஹ் ஆகும்.

மக்றூஹ் தன்ஸீஹ் என்பது ஆகும் என்பதையே குறிக்கும்.

இமாம் அப்துல் வஹ்ஹாப் ஷஃறானி றஹ்மத்துள்ளாஹி அலைஹி அவர்கள் "உஹூது மஷாயிக்" என்ற நூலில் ஜனாஸாவோடு திக்ரு செய்து கொண்டு செல்வது பற்றிய விளக்கத்தில் கூறும்போது,

وقد رجح النووي ان الكلام خلاف الاولي

ஜனாஸாவோடு செல்லும் போது பேசாமல் செல்வது நல்லது என்ற இமாம் நவவி றஹ்மதுல்லாஹி அலைஹி அவர்களின் கூற்றை முதன்மைப் படுத்துகின்றார்கள்.

ஷறஹு தரீக்கத்து முஹம்மதிய்யா என்ற நூலில் கூறுகின்றார்கள்.

وهو يكره علي معني انه تارك الاولي

ஜனாஸாவோடு செல்லும் போது சப்தமாக திக்ரு செய்வது நல்லதல்ல என்ற பொருள் கொண்ட மக்றூஹ் ஆகும். ஆகவே, புகஹாக்கள் இதை *"மக்றூஹ்"* என்று கூறியிருப்பதன் கருத்து மக்றூஹ் தன்ஸீஹ்தான் என்பதை ஏற்றுத்தான் ஆகவேண்டும்.

2- ஜனாஸாவை கொண்டு செல்லும் போது மௌனமாகச்செல்ல வேண்டும்; சப்தமிட்டு திக்ரு, கலிமா உள்ளிட்டவையைச் செய்யக் கூடாது என்பது அந்தக் காலத்திற்குரியதாகும். இக்காலத்தில் மக்களுடைய மனநிலைகள் மாறிவிட்டன. ஆகவே, *"மக்றூஹ்"* என்ற சட்டமும் மாறிவிட்டது; காரணம்,

அக்காலத்தில் ஜனாஸாவோடு செல்பவர் மௌனமாக மரணத்தைக் கொண்டு பாடம் கற்றுச் செல்வார், மைய்யித்தின் வீட்டார்களோடு சேர்ந்து கவலையிலும், துக்கத்திலும் பங்கு கொள்வார்; மரணவீட்டாருடன் சேர்ந்து கவலையிலும், துக்கத்திலும் பங்கு கொள்ள வேண்டும் என்றுதான் ஷரீஅத்தும் வலியுறுத்துகின்றது.

ஸெய்யிதினா அலி றழியல்லாஹு அன்ஹு அவர்கள் கூறியுள்ளார்கள்.

واذا حملت الي القبور جنازة. فاعلم بانك بعدها محمول

ஜனாஸாவை மைய்யவாடிக்கு நீ எடுத்துச் சென்றால், நீயும் ஒருநாள் இவ்வாறுதான் எடுத்துச் செல்லப்படுவாய்! என்பதை கவனத்தில் கொள்!

இப்படியான மனநிலை இருக்கும் போது பேசுவது தத்துவத்திற்கு எதிரானதாகும், பேசுவதினால் சிந்தனைகள் சிதறும்; மனம் வேறுபக்கம் கவனத்தைத் திருப்பும்; இதனால்தான் புகஹாக்கள் இப்படியான நிலையில் அமைதியாக இருக்குமாறு கூறினார்கள்.

இமாம் நவவி றஹ்மதுல்லாஹி அலைஹி அவர்களின் "அல்அத்கார்" என்ற நூலில் ஜனாஸாவோடு நடந்து செல்பவர் சொல்ல வேண்டியது என்ன? என் பாடத்தில் பின் வருமாறு எழுதுகின்றார்கள். .

والحكمة فيه ظاهرة وهي انه اسكن لخاطره واجمع بفكره فيما يتعلق بالجنازة وهو المطلوب في هذا الحال

அமைதியாகச் செல்லவேண்டும் என்பதில் உள்ள தத்துவம் வெளிப்படையானது தான், அதுவாகிறது மனதுக்கு அமைதியைக் கொடுக்கும்; ஜனாஸாவோடு தொடர்பான சிந்தனையைக் குவிக்கும்; இந்த நிலையில் இதைத்தான் எதிர்பாக்கப்படுகின்றது.

மிஷ்க்காத்தில் "மைய்யித்தை அடக்கம் செய்தல்" என்ற பாடத்தில் பதிவாகியுள்ளது.

நாங்கள் மைய்யவாடிக்கு மைய்யித்தை அடக்கம் செய்வதற்காகச் சென்றால்,

وجلسنا معه كان علي رؤسنا الطير

கப்றை ஒழுங்கு செய்வதில் தாமதமானால், எங்கள் தலைகளில் பறவை இருப்பது போன்று அமைதியாக இருப்போம் என்று ஸஹாபாக்கள் கூறுகின்றனர்; அதாவது, பறவையை வேட்டையாடுபவன் வலையை விரித்து விட்டு சப்தமில்லாமல் சப்தமிட்டால் பறவை பறந்துவிடும் என்ற அச்சத்தில் முழுமையாக நிசப்தமாக இருப்போம்; இது அந்தக்காலத்தில் இருந்த சூழல். ஆனால்,

தற்காலத்தில் ஜனாஸாவோடு செல்பவன் உலகப் பேச்சுக்களைப்

பேசிக்கொண்டும், சிரித்துக் கொண்டும் முஸ்லிம்களைப் பற்றி புறம் பேசிக் கொண்டும் இருக்கின்றனர்.

மைய்ய வாடியில் சற்று நேரம் இருக்க வேண்டிவந்தால், சந்தோஷத்தைத் தூண்டக் கூடியவாறு நடந்து கொள்கின்றனர், இப்படியான காட்சி களை நானே பார்த்துள்ளேன்; விளையாட்டுப் பராக்கில் இருப்பவர்களின் மனத்தை அல்லாஹ்வின் திக்றின் பக்கம் கவனத்தைத் திருப்புவது வீண்பேச்சுக்களை விட மேலானதாகும்; ஆகவே,

இந்த செயல் இப்போது "முஸ்தஹப்பா"கும். மைய்யத்தோடு சகலரும் கலிமா, உள்ளிட்ட மற்றவையையும் சப்தமிட்டு ஓதிக் கொண்டு செல்ல வேண்டும்; சூழல்கள் மாறும் போது சட்டங்களும் மாறும். தான் வாழும் காலத்தைக் கவனத்தில் கொள்ளாத முப்தி முட்டாளாவான்.

இமாம் அப்துல் வஹாபுஷ் ஷஃறானி கத்தஸல்லாஹு ஸிர்ரஹுல் அஸீஸ் அவர்கள் தனது உஹூதுல் மஷாயிக் என்ற நூலில் கூறுகின்றார்கள்.

وانما لم يكن الكلام والقراءة والذكر امام الجنازة في عهد السلف لأنهم كانوا اذ مات لهم الميت اشتركوا كلهم في الحزن عليه حتي كان لايعرف قرابة الميت من غيرها فكانوا لا يقدرون علي النطق الكثير لما هم عليه من ذكر الموت بل خرست السنتهم عن كل الكلام فاذا وجدنا جماعة بهذه الصفة فلم يا أخي علينا أن لا نامرهم بقراءة ولا ذكر

கடந்த காலங்களில் ஜனாஸாவுக்கு முன்னால் பேசுவது, கிறாஅத் ஓதுவது இல்லாததற்கான காரணம், எவராவது மரணித்தால், சகலருமே கவலையிலும், துக்கத்திலும் பங்காளிகளாகிவிடுவார்கள்; மைய்யித்திற்குரியவர்களையும் மற்றவர்களையும் வேறுபடுத்திப் பார்க்க முடியாத அளவு கவலையில் தோய்ந்திருப்பார்கள்; பேசுவதற்கும் கூட முடியாதவர்களாக மரணத்தின் கவலை அவர்களை வாட்டியிருக்கும்; இந்தக் காலத்தில் அப்படியான பண்புள்ளவர்களை நாம் கண்டால், அவர்கள் திருக்குர்ஆன் ஓதவேண்டும், திக்ரு செய்ய வேண்டும் என்று அவர்களுக்கு கட்டளையிடக் கூடாது.

சுப்ஹானல்லாஹ்! என்ன அருமையான தீர்ப்பு! இந்தக் காலத்திலும் இப்படியான சூழல் இருக்கின்றதா? சொல்லுங்களேன் பார்க்கலாம்.?

ஹளறத் ஷைகு உத்மான் புஜைறமி அவர்கள் ஷறஹுஇக்னா உடைய ஹிஷியாவில் எழுதுகின்றார்கள்.

(قوله وكره لفظ في الجنازة ) قوله أي رفع صوت ولو بقران او ذكر او صلوة علي النبي صلي الله عليه وسلم وهذا باعتبار ما كان في الصدر الأول والا فالان لا بأس بذلك لانه شعار الميت لانه تركه مزدرية به ولو قيل بوجوبه لم يبعد كما نقله المدابغي

ஜனாஸாவுக்கு முன்னால் உரத்த சத்தம் போடுவது "மக்றூஹ்" ஆகும், இது திருக்குர்ஆன் ஓதுவதோ, நபிகள் நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் பேரில் ஸலவாத் ஓதுவதோ; அல்லாஹ்வை திக்ரு செய்வதோ எதுவாக இருந்தாலும் மக்றூஹ்தான்!.

இந்தச் சட்டம் ஆரம்ப காலத்தில் முஸ்லிம்கள் இருந்த நிலையை கவனத்தில் கொண்டு கூறப்பட்டதாகும்; ஆனால், இந்தக் காலத்தில் இவற்றைச் செய்வதில் எந்தக் குற்றமும் கிடையாது; காரணம், சத்தமாகத் திக்ரு செய்வது மைய்யத்தின் அடையாளமாகிவிட்டது; இதை விடுவது மைய்யத்திற்கு அவமானமாகும்; ஆகவே, இதை "வாஜிப்" என்று கூறினாலும் கூட தூரமல்ல! இவ்வாறு இமாம் முதாபிஙி றஹ்மத்துள்ளாஹி அலைஹி அவர்கள் கூறியுள்ளார்கள்.

இமாம் அப்துல் வஹாபுஷ்ஷஃறானி றஹ்மத்துள்ளாஹி அலைஹி அவர்கள் "உஹூது மஷாயிக்" என்ற நூலில் கூறுகின்றார்கள்.

فمما احدثه المسلمون واستحسنوه قولهم امام الجنازة لا لله الا الله محمد رسول الله او وسيلتنا يوم العرض علي لا اله الا الله محمد رسول الله ونحو ذلك فمثل هذا لايجب انكاره في هذا الزمان لانهم أن لم يشتغلوا بذلك اشتغلوا بحديث الدنيا وذلك لان قلبهم فارغ من ذكر الموت بل رايت بعضهم يضحك امام الجنازة ويمزح

முஸ்லிம்கள் ஜனாஸாவுக்கு முன்னால் "லாஇலாஹ இல்லல்லாஹ் முஹம்மதுர் றஸூலுள்ளாஹ்!" என்று கூறுகின்ற நல்ல செயலை தோற்றுவித்திருக்கின்றார்கள்; நாளை மறுமையில் அல்லாஹ்வுக்கு முன்னால் நம்மிடமிருக்கின்ற வஸீலாவாக "லாஇலாஹ இல்லல்லாஹ் முஹம்மதுர் றஸூலுள்ளாஹ்!" என்பது இருக்கின்றது;அல்லது, இதுபோன்று இருக்கின்றன.

இந்தக் காலத்தில் இதனைத் தடுப்பது அவசியமில்லை; ஏனெனில்,

இவர்கள் இதுபோன்ற திக்றுகளில் கவனம் செலுத்த வில்லையென்றால், உலக விவகாரங்களைப் பேசிக் கொண்டிருப்பார்கள்; காரணம், அவர்களின் மனம் மரணத்தைப் பற்றிய சிந்தனையிலிருந்து வெறுமையாகி இருக்கின்றது; ஜனாஸாவுக்கு முன்னால் சிலர் சிரித்துக் கொண்டும், பரிகாசம் செய்து கொண்டும் செல்வதை நானே பார்த்திருக்கின்றேன்.

இமாம் அப்துல் வஹ்ஹாப் ஷஃறானி கத்தஸல்லாஹு ஸிர்ரஹுல் அஸீஸ் அவர்கள் அவர்களுடைய காலத்தின் சூழலைக் தான் கூறினார்கள்,ஆனால்; நமது காலம் அதை விட படு மோசமாக இருக்கின்றது;

சில இடங்களில் கப்றின் வேலை சற்று தாமதமானால், சிறு சிறு கூட்டமாக ஆங்காங்கு அமர்ந்து கொண்டு கதைகள் பேசிக்கொண்டிருப்பார்கள்; ஏதோ சந்தை நடப்பது போல காட்சிதரும்; வேறு சிலர் நிலத்தைக் கிளறிக்கொண்டு கல்லெடுத்து விளையாடிக் கொண்டிருப்பார்கள்; இந்த நிலையைக் கவனித்த நான் அவர்களை ஒன்று திரட்டி உபதேசம் செய்வேன்; மைய்யித்திற்குச் செய்ய வேண்டிய கடமைகள் பற்றிய சட்டங்களை உபதேசிப்பேன்; அதைவிட இது பயன்மிக்கதுதானே!

மறுப்பாளர்கள் ஜனாஸாவோடு செல்லும்போது அல்லாஹ்வை திக்ரு செய்வதை ஹறாம், பித்அத் என்று கூறுகின்றனர், ஆனால், பேசுவதையும், சிலவேளை சட்டப்பிரச்சினைகளை பயான் செய்வதையும், ஷிர்க், பித்அத்பத்வாக் கொடுப்பதையும், மக்கள் சிரித்து பரிகாசம் பண்ணுவதையும் அவர்கள் தடுப்பதில்லை; அவற்றை குறை கூறுவதில்லை;

இப்படியான நிலையில் மௌனமாக இருக்க வேண்டும் என்று கட்டளையிடுகின்றார்கள்; இதுபற்றிய அவர்களின் குற்றச்சாட்டில் கூட இதுபற்றிய வாசகங்களை அவர்கள் குறிப்பட்டிருந்தார்கள்.;அப்படியிருக்க எதற்காக தலைகீழான காரியங்களைச் செய்கிறீர்கள்.?

பேச்சு, ஸலாம், சிரிப்பு, பரிகாசம் , உபதேசம், பத்வா உள்ளிட்ட சகலதும் ஹலால்! அல்லாஹ்வை திக்ரு செய்வது மட்டும் ஹறாம்! அல்லாஹ்தான் அவர்களுக்கு விளக்கத்தைக் கொடுக்க வேண்டும்.

இஸ்லாமிய சட்டம் ஒருபோதும் மாற்றப்படுவதில்லை, பின்னர், இது எப்படி மாற்றப்பட்டது? என்று சிலவேளை சிலர் கேட்கக் கூடும்; இதற்கான பதிலை இதற்கு முன்னரே கூறியுள்ளோம்.

எதாவது சட்டங்கள் ஏதாவது காரணங்களால் வருமாயின், அந்தக்காரணங்கள் மாறும்போது சட்டமும் மாறிவிடும்;

உதாரணமாக,

ஆரம்ப காலத்தில் தொழுவிப்பதற்கும், திருக்குர்ஆனைக் கற்றுக் கொடுப்பதற்கும் ஊதியம் பெறுவது ஹறாமாக இருந்தது,இப்போது ஆகுமாகும்.

இவ்வாறுதான் வலிமார்களின் மக்பறாக்களில் போர்வை போடுவதும்; இந்தக் காலத்தின் சூழலைக் கவனித்து ஆகுமாகும்.

றமழான் மாதத்தில் கத்முல் குர்ஆனில் துஆக் கேட்பது ஆகுமாக்கப் பட்டிருக்கின்றது, திருக்குர்ஆனில் ஆயத்துக்கள், றுகூஉ, சூறத்துக்களுக்கான பெயர்கள் எழுதுவது ஆரம்ப காலத்தில் இருக்கவில்லை; இப்போது பாமரர்களின் நன்மையைக் கருத்தில் கொண்டு ஆகுமாக்கப்படுள்ளது;

ஆலம்கீரியில் கறாஹத் என்ற அத்தியாயத்தில் "முஸ்ஹபின் ஒழுக்கங்கள்" என்ற பாடத்தில் பின்வருமாறு எழுதுகின்றார்கள்.

لا بأس بكتابة اسامي السور وعد الاي وهو وان كان احداثا فهو بدعة حسنة ،وكم من شيئ كان احداثا وهو حسن وكم من شيئ يختلف باختلاف الزمان والمكان .

சூறத்துக்களுக்கான பெயர், ஆயத்துக்களின் எண்ணிக்கையை குறிப் பிடுவது பித்அத்தாக இருந்தாலும் சரி, அதில் எவ்வித குற்றமும் இல்லை; ஆயினும், அது நல்ல பித்அத்தாகும். அதிகமான விஷயங்கள் காலமும், இடங்களும் மாறுவதால் சட்டங்களும் மாறுகின்றன. இதற்கான நிறைய உதாரணங்களை கடந்த ஆய்வுகளில் குறிப்பிட்டுள்ளோம்.

3- "காட்டியாதாழ்" போன்ற ஊர்களில் மைய்யித்தை எடுத்துச் செல்லும் போது முன்னால் செல்பவர்கள் நஃது ஷரீபை பாடிக்கொண்டு செல்வார்கள்,அதைக்கேட்கின்றவர்கள் ஜனாஸா ஒன்று போகின்றது என்பதைப் புரிந்து கொள்வார்கள்; இதனால்,

வீடுகளில் நடப்பவை (நஃது ஷரீப்) ஜனாஸாவுக்காக வெளியில் வருகின்றது. இந்த நஃது ஷரீப் மைய்யித்துக்கான அடையாளமாகும்; மக்கள் ஜனாஸாத் தொழுகையிலும், அடக்கத்திலும் கலந்து கொள்ள வேண்டும் என்ற நிய்யத்தில் ஜனாஸாவை அறிவிப்பது ஆகுமானதே!

துர்ருல் முக்தாரில் மைய்யித்தை "அடக்கம் செய்தல்" என்ற பாடத்தில் பின்வருமாறு எழுதுகின்றார்கள்.

ولا بأس بنقله قبل دفنه وبالاعلام صوته وبارثه بشعر او غيره

மைய்யித்தை அடக்கம் செய்வதற்கு முன் அதை இடம் மாற்றுவது ,அந்த ஜனாஸாவை அறிவிப்பது; மைய்யித்துக்காக இரங்கப்பா பாடுவது அது பாடல்களாகலாம், அல்லது அதுவல்லாததாகவுமாகலாம் ஆகுமானதே!

இதன் ஷறஹான ஷாமியில் எழுதுகின்றார்கள்.

اي اعلام بعضهم بعضا ليقضوا حقه وكره بعضهم ان ينادي عليه في الازقة والاسواق والاصح انه لا يكره إذا لم يكن معه تنويه بذكره

மைய்யித்தின் ஹக்கை நிறைவேற்றுதல் என்ற எண்ணத்தில் சிலர் சிலருக்கு அறிவித்தல் கொடுப்பது ஆகுமானது, இந்த அறிவித்தலை சந்தி களிலும், கடைத்தெருக்களிலும் விளம்பரம் செய்வதனால் தான் சிலர் இவ்வறிவித்தலை "மக்றூஹ்" என்கின்றனர்; இந்த அறிவித்தலால் மைய்யித் திற்கு "அதிக புகழ் பாடுதல்" இல்லையாயின் சரியான கூற்றின்படி மக்றூஹ் ஆகாது.

மைய்யித்தை விளம்பரப்படுத்துவதற்காக மர்தியாப் பாடுவதும், மைய்யத்திற்கான அறிவிப்பும் ஆகுமாக இருந்தால், மைய்யித்தை அறிவிப்பது என்ற எண்ணத்தில் நஃது ஷரீப், கலிமாவை சப்தமிட்டு கூறுவது எப்படி ஹறாமாகும்.?

இதில் மைய்யித்திற்கான அறிவித்தல்கள் உண்டு!

றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் புகழ் பாக்களும் இருக்கின்றன. புகஹாக்கள் நன்மையில்லாத திக்றுகளைத்தான் தடுத்தார்கள் என்பதை இதன் மூலம் தெரிந்து கொள்கின்றோம், இதில் ஏதும் குறிப்பான நன்மைகள் இருக்குமாயின், அது ஆகுமானதுதான்.

இதனால்தான் அல்லாமா ஷாமி அவர்கள் தாதார்கானியா என்ற நூலிலிருந்து நக்லு செய்து பின்வருமாறு குறிப்பிடுகின்றார்கள்

واما رفع الصوت عند الجنائز فيحتمل ان المراد منه النوح او الدعاء الميت بعد ما افتتح الناس الصلوة او الافراط في مدحه كعادة الجاهلية بما هو يشبه المحال وانا اصل الثناءعليه فغير مكروه .

ஜனாஸாவுக்கு முன்னால், அதிக சப்தமிடுதல் என்பதன் நோக்கம் மையித்துக்காக "ஒப்பாரி" வைத்தல் என்பதற்கான வாய்ப்புமுள்ளது;

மையித்துக்கான தொழுகை ஆரம்பமானதன் பின், துஆக் கேட்பது, அல்லது, மையித்தை அதிகம் புகழ்வது ஜாஹிலியாக்காலத்து வழக்கமாகும்.ஆயினும், சாதாரணமாக மையித்தை புகழ்வது இந்த மக்றூஹ் என்பதற்குள் வராது. சுருக்கமாகக் கூறுவதாயின்,

நன்மையில்லாத விதத்தில் சப்தமிடுவது கூடாது, நன்மையுள்ள விதத்தில் சப்தமிடுவது மக்றூஹ் இன்றி ஆகும். இந்தக் காலத்தில் சப்தமாக திக்ரு உள்ளிட்டவையைச் செய்வதால் ஏற்படுகின்ற அதிகமான நன்மைகளை பற்றி ஏற்கனவே கூறப்பட்டுள்ளது.

4- சப்தமிட்டு திக்ரு செய்வதற்கான தடை விஷேடமாக அறிஞர் களுக்காகும்; தவிர, பாமரர்களுக்கல்ல! இவர்கள் சப்தமாக திக்ரு செய் வதற்குத் தடையில்லை.

சங்கையான புகஹாக்கள் பின்வருமாறு கூறுகின்றார்கள்.

முஸ்லிமான பாமரர்கள் ஏற்கனவே திக்ரு செய்வதில் ஆர்வமில்லாதவர் களாகவே இருக்கின்றனர், அவர்கள் விரும்பியளவு திக்ரு செய்ய விட்டு விடுங்கள்.

துர்ருல் முக்தாரில் இருபெருநாட்தொழுகைகள் என்ற பாடத்தில் பின்வருமாறு எழுதுகின்றார்கள்.

ولا يكبر في طريقها ولا يتنفل قبلها مطلقا وكذا لا يتنفل بعدها في مصلاها فانه مكروهة عند العامة

ஈத்காஹ்வுக்குரிய தெருக்களில் தக்பீர் கூற வேண்டாம், பெருநாள் தொழுகைக்கு முன் நபில் தொழ வேண்டாம்; பெருநாள் தொழுகைக்குப் பின்பும் ஈத்காஹாவில் நபில் தொழ வேண்டாம்; காரணம், பொதுவாக சகல புகஹாக்களிடத்திலும் இது மக்றூஹாகும்.

அடுத்து கூறுகின்றார்கள்.

هذا للخواص اما العوام فلا يمنعون من تكبير ولا تنفل اصلا لقلة رغبتهم في الخيرات

இந்த சட்டம் விஷேஷமானவர்களுக்காகும,. பொது மக்களை தக்பீர் சொல்வதிலிருந்தோ, நபில் தொழுவதிலிருந்தோ தடுக்கக்கூடாது; காரணம், அவர்கள் நன்மையான காரியங்களைச் செய்வதில் குறைவான விருப்ப முள்ளவர்களாகவே காணப்படுகின்றனர்..

இதற்கு அடியில் ஷாமியில் எழுதுகின்றார்கள்.

اي لا سرا ولا جهرا في التكبير

பாமரர்கள் ரகசியமாகவோ, பரகசியமாகவோ தக்பீர் கூறுவதைத் தடுக்கக்கூடாது.

பெருநாட்களில் கடைத் தெருக்களில் சப்தமாக திக்ரு செய்கிறார்கள். அது தடுக்கப்பட வேண்டியதா? என்று இமாமுல் அஃழம் அபூ ஹனீபா றஹ்மத்துள்ளாஹி அலைஹி அவர்களிடம் ஒருவர் கேட்டதற்கு, இல்லை, தடுக்க வேண்டாம்! என்று பதில் கூறினார்கள்.

இதற்கான மூலாதாரத்தை சப்தமிட்டு திக்ரு செய்வது பற்றிய ஆய்வில் ஏலவே குறிப்பிட்டுள்ளோம்.

மேற்கண்ட சகல வாசகங்களின் படி, சில இடங்களில் குறிப்பான வர்களுக்கு திக்ரு செய்வதற்குத் தடையுள்ளது. ஆனால், பாமரர்கள் திக்ரு செய்வதைத் தடுப்பதற்கு எங்கும் சட்டம் கிடையாது;

ஜனாஸாவோடு செல்லும் போது சப்தமிட்டு திக்ரு செய்யாதீர்கள், ஆயினும், திக்ரு செய்பவர்களைத் தடுக்கவும் செய்யாதீர்கள் என்று புகஹாக்கள் இதனால்தான் கூறினார்கள்.

இதுவரை நாம் கூறியதின் சாரம் வருமாறு,

1- ஜனாஸாவோடு செல்லும் போது சப்தமிட்டு திக்ரு செய்வதற்கான தடை மக்றூஹ் தன்ஸீஹ் என்ற அடிப்படையிலானதாகும்.

2- இத்தடை ஆரம்காலத்திற்குரியது, இந்தச் சட்டம் இப்போது மாற்றப்பட்டுள்ளது; காரணம், சட்டத்திற்கான காரணம் மாறிவிட்டது.

3- இவ்வாறு திக்ரு செய்வது மையித்துக்கான அறிவித்தலாகும,. ஆகவே, நன்மையுண்டு. அதனால் ஆகும்.

4- இத்தடை விஷேஷமானவர்களுக்காகும். பாமரர்கள் திக்ரு செய்வதைத் தடுக்கக்கூடாது

**குற்றச்சாட்டு:** 2

ஜனாஸாவுக்கு முன்னால் சப்தமிட்டு திக்ரு செய்வது ஹிந்துக்களுக்கு ஒப்பாக இருக்கின்றது, அவர்கள் *"ராம், ராம்"* என்று கூச்சல் போட்டுக் கொண்டு செல்கிறார்கள்; காபிர்களுக்கு ஒப்பாகக்கூடாது. ஆகவே, கூடாது.

**பதில்:**

காபிர்கள் அவர்களின் தெய்வங்களின் பெயரை கூறுகின்றார்கள்,. நாங்கள் அல்லாஹ்வின் பெயரை உச்சரிக்கின்றோம்; பின்னர், '*ஒப்பு*' எங்கே இருக்கின்றது.?

காபிர்கள் சிலைகளின் பெயர் கூறி மிருகத்தை அறுக்கின்றனர,. நாம் அல்லாஹ்வின் பெயர்கூறி அறுக்கின்றோம்; காபிர்கள் கங்கா நதி நீரை எடுத்து வருகின்றனர்; நாம் மக்கத்துல் முகர்ரமா சென்று ஸம்ஸம் நீரை கொண்டு வருகின்றோம்; இது ஒப்புமையில்லையா?

காபிர்கள் எந்தக் காரியத்தை அவர்களின் சமுக கலாச்சாரமாக, அல்லது, மார்க்கமாகக் கருதிச் செய்கின்றார்களோ, அதில் ஒப்பாகக்கூடாது; சகலகாரியத்திலும் அல்ல!.

காபிர்களும் அவர்களுடைய ஜனாஸாவுக்கு முன்னால் கலிமாவைக் கூறுவார்களாயின், ஆசையோடு சொல்லுங்கள்!. இது நல்ல செயல். நல்ல செயலில் ஒப்புமை தீயதாகுவதில்லை.

**குற்றச்சாட்டு:** 3

பாதைகளில் சப்தமிட்டு திக்ரு செய்வது ஒழுங்கீனமாகும், காரணம், அங்கே ஊத்தைகள், அழுக்குகள் இருக்கின்றன. ஆகவே, கூடாது.

**பதில்:**

இதுவீணான குற்றச்சாட்டு!. பாதையில் செல்லும் போது திக்ரு செய்வது ஆகுமானது என்று புகஹாக்கள் கூறியிருக்கின்றார்கள், ஊத்தைகள் நஜீஸ்கள் போடுவதற்கு ஒதுக்கப்பட்ட இடத்தில் சப்தமிட்டு திக்ரு செய்யக்கூடாது என்பது உண்மைதான்;. உதாரணமாக, மலசலகூடம்.

ஷாமியில் மைய்யித்திற்கு முன்னால் கிறாஅத் ஓதுவது பற்றிய விளக்கத்தில் எழுதுகின்றார்கள்.

وفي القنيةلا بأس بالقراءة راكبا او ماشيا إذا لم يكن ذلك الموضع معدا للنجاسة

வாகனத்திலோ, நடந்தோ செல்லும் போது திருக்குர்ஆன் ஓதுவது குற்றமல்ல! அந்த இடம் நஜீஸானவைக்காக ஒதுக்கப்பட்ட இடமாக இருக்கக் கூடாது.

மேலும், ஹஜ்ஜுப்பெருநாளில் பாதையில் செல்லும் போது தக்பீர் முழங்கியவர்களாகச் செல்லவேண்டும் என்று சட்டமாகக் கூறப்பட்டுள்ளது.

துர்ருல் முக்தாரில் பெருநாட்களின் தொழுகை என்ற பாடத்தில் எழுதுகின்றார்கள்.

ويكبر جهرا لتفاقا في الطريق

பாதையில் சப்தமிட்டு தக்பீர் கூறவும்.

பாதையில் பொதுவாக நஜீஸ்களும், அழுக்குகளும் இருக்கத்தான் செய்யும், குளியலறையில் சப்தமிட்டு தஸ்பீஹ், தஹ்லீல் ஆகும் என்றே புகஹாக்கள் கூறுகின்றனர்; அந்த இடம் அதிகம் ஊத்தைகள் புழங்கும் இடமாகவே இருக்கின்றது என்பதும் கவனிக்கத்தக்கது.

ஆலம்கீரியில்

كتاب الكراهية باب الصلوة والتسبيح والتهليل ميں عمدة الابرار، مجموع النوازل خانية ،سراجية، ملتقط، تنجيس،

உள்ளிட்ட நூற்களில் இவ்வாறு எழுதுகின்றார்கள்.

واما التسبيح والتهليل لا بأس بذلك وان رفع صوته

குளியலறையில் தஸ்பீஹ்,, தஹ்லீல் சப்தமிட்டு திக்ரு செய்வது ஆகுமானது.

**குற்றச்சாட்டு - 4**

ஜனாஸாவுக்கு முன்னால் இரைந்து திக்ருசெய்து கொண்டு செல்வதால், வீட்டிலிருக்கின்ற பெண்கள், குழந்தைகள் பயப்பிடுகின்றனர்,காரணம், அவர்களுக்கு மரணத்தின் நினைவு வருகின்றது; இதன் காரணமாக நோயாளியாகின்றார்கள்;இந்தக் காரணத்திற்காக மருத்துவமும் தடை செய்கின்றது.

**பதில்:**

திருக்குர்ஆன் கூறுகின்றது.

الا بذكر الله نطمئن القلوب

***அறிக! திக்றினால் இதயங்கள் அமைதி அடைகின்றன.***

*(அல் குர்ஆன்: 13: 28).*

முஸ்லிம்களுக்கு இரைந்து திக்ரு செய்வதால் மனதுக்கு ஆறுதல் கிடைக்கின்றது, காபிர்கள் அச்சப்படுவது உண்மையாக இருக்கலாம்; அவர்கள் அச்சப்படட்டும்.! விட்டுவிடுங்கள்!. காபிர்கள் அதானைக் கேட்டும் அச்சப்படுகின்றனர்;அதற்காக அதான் கூறுவதையும் நிற்பாட்டலாமா?

நிபுணத்துவமிக்க ஒரு முஸ்லிம் வைத்தியர் சப்தமிட்டு கலிமாத் தைய்யிபாவைக் கூறுவது நோய் வருவதற்கான காரணங்களில் உள்ளது என்று கூறிய ஒருவரின் அறிக்கையை முன்வைய்யுங்கள் பார்க்கலாம்.?

நீங்கள் காட்டும் மருத்துவ நிபுணர் முஸ்லிமாக இருந்தாக வேண்டும், தேவ்பந்தி மற்றும் போலி வைத்தியராக இருக்கக்கூடாது! இப்படியான போலி வாதங்கள் கவைக்குதவாதவையாகும். ஆகவே,

மையயித்திற்கு முன்னால் சப்தமிட்டு திக்ரு செய்வது மிக்க நல்லது, பறக்கத் பொருந்தியது; மறுப்பாளர்களிடத்தில் தவறான புரிதல்மட்டுமே இருக்கின்றது; வலுவான எந்த குற்றச்சாட்டும் கிடையாது; அனைத்து புகழும் அல்லாஹ்வுக்கே!

இத்துடன் இந்த ஆய்வு நிறைவடைகின்றது.

# தேவ்பந்து அகீதா!
# -
# இஸ்லாமிய அகீதா!
# ஒப்பீடு

தேவ்பந்திகள் முரண்படுகின்ற பிரச்சினைகளை இதுவரை அல்லாஹுத் தஆலாவின் பேரருளால் தக்க ஆதாரத்துடன் விளக்கிவிட்டோம். ஆயினும்,

இப்பிரச்சினைகளில் அதிகமானவை ஈமானின் அடிப்படையோடு சார்ந்தவையாக இல்லை; அவை. மக்றூஹ்; சுன்னத் தொடர்பானவையாகும்.

புனித மக்கா, புனித மதீனா ஷரீபுகளிலுள்ள உலமாக்கள் தேவ்பந்து உலமாக்களுக்கு எதிராக வழங்கிய "பத்வா" இஸ்லாமிய அகீதா பற்றியதாகும்.

இது விடயத்தையும் முஸ்லிம்கள் தெரிந்திருக்க வேண்டும் என்பதற்காக அவர்களின் அகீதாக்களைப் பற்றிய பட்டியலைத் தருகின்றோம். அத்தோடு அதற்கு எதிரான இஸ்லாமிய அகீதாவையும் விளக்குவோம்.

நாம் பட்டியலிடுகின்ற அவர்களின் சகல அகீதாக்களும், அவர்களால் பதிப்பிக்கப்பட்டுள்ள அவர்களின் நூற்களில் இருக்கின்றன.

எவராவது நாம் கூறியது தவறானவை என்று நிரூபித்தால் அவர் மகத்தான சன்மானத்திற்கு உரித்துடையவராவார்; இவர்களின் அபத்தமான அகீதாக்களுக்கும் மறுபெழுது மாறு பல அன்பர்கள் என்னை வற்புறுத்தினார்கள். ஆனாலும், இந்த நேரத்தில் காகிதம் இடம் கொடுக்கவில்லை. ஆகவே,

இன்ஷாஅல்லாஹ் மற்றுமொரு பாகத்தை ஏற்பாடு செய்து அதில் இவை பற்றி ஆராய்வோம்.. இப்போது பட்டியல் மட்டும் தருகின்றோம்.

**தேவ்பந்திகள் அகீதா:**

1- அல்லாஹுத் தஆலாவுக்கு பொய் கூற முடியும்.

*ஆதாரம் : பறாஹீனே காதிஆ: கலீல் அஹ்மத் அம்பேட்டி.*
*ஷஹ்துல் முகில்லு: மௌலவி மஹ்மூது ஹஸன் ஸாஹிப்.*

**இஸ்லாமிய அகீதா:**

பொய் சொல்வது திருட்டு, விபச்சாரம் போன்று இழிவானது; அல்லாஹுத் தஆலா சகல இழிவான பண்புகளை விட்டும் பரிசுத்தமானவன்.

ومن اصدق من الله حديثا

***அல்லாஹ்வை விட அதிக உண்மையான செய்தி யாருடையது?***

*(அல்குர்ஆன். 4: 87).*

மேலும், அல்லாஹ்வுடைய பண்புகள் வாஜிபானவை; மும்கின் (சாத்தியமானது) அல்ல. ஆகவே, அல்லாஹ்வுக்கு இழிவான பண்புகள் "சாத்தியம்" என்ற வார்த்தையைப் பாவிப்பது ஒழுக்கம் கெட்ட செயலாகும்.

**தேவ்பந்திகள் அகீதா:**

2- அல்லாஹ்வின் கருமமாகிறது. அவன் எப்போது நாடுகின்றானோ அப்பொழுது அறிந்து கொள்வான், எந்த ஒரு வலிக்கும், நபிக்கும்; ஜின்னுக்கும்; பிசாசுக்கும் அல்லாஹுத் தஆலா இந்த ஆற்றலை வழங்கவில்லை;

*ஆதாரம்: தக்வியத்துல் ஈமான்: (இஸ்மாயீல் திஹ்லவி).*

## இஸ்லாமிய அகீதா:

அல்லாஹுத்தஆலா எல்லா நேரங்களிலும் மறைவானவற்றை அறிந்தவனாக இருக்கின்றான், அவனுடைய அறிவு அவனுடைய பண்பு; அது அவனுக்கு வாஜிபு; எப்போது விரும்புகின்றினோ அப்போது அறிந்து கொள்வான் என்பதன் கருத்து, அவன் நாடாவிட்டால் மடையனாக இருக்கின்றான் என்று பொருள் வரும்;

இவ்வாறு கூறுவது குப்று; அல்லாஹ்வின் பண்புகள் அவனது விருப்பத்திற் குரியவையல்ல; அவனுக்கு அவை வாஜிபாகும்; மேலும், அல்லாஹுத்தஆலா அவனுடைய நேசர்களுக்கு மறைவான ஞானத்தை வழங்கியுள்ளான். (அல்குர்ஆன்.)

## தேவ்பந்திகள் அகீதா:

3) அல்லாஹுத்தஆலாவுக்கு இடம், காலம், மற்றும் பல பாகங்களால் இணைந்திருக்கும் (مركب) மூலப்பொருள் உள்ளிட்டவையை விட்டும் பரிசுத்தமானவன் என்று நம்புவது பித்அத்தாகும்.

*ஆதாரம் : ஈழாஹுல் ஹக்:*
*(இஸ்மாயீல் திஹ்லவி)*

## இஸ்லாமிய அகீதா:

அல்லாஹு சுப்ஹானஹு வத ஆலா இடம், காலம்; இணைப்ப; ,(تركيب) மூலப் பொருள் உள்ளிட்டவற்றை விட்டும் பரிசுத்தமானவன்; அவன் எந்த இடத்திலும் உள்ளவனல்ல; அவனுக்கு வயதில்லை; அவன் பாகங்களால் ஆனவனல்ல; இதை தேவ்பந்திகளும் கூட அறியாமலேயே "குப்று" என்று எழுதியுள்ளார்கள்.

*பார்க்க : இல்முல் கலாம் நூல்கள்.*

## தேவ்பந்திகள் அகீதா:

4). அல்லாஹுத்தஆலாவுக்கு அடியார்களின் செயல்களைப் பற்றி ஆரம்பத்தில் தெரியாது, எப்போது அவன்(அடியான்) நல்லது, கெட்டது செய்கின்றானோ; அப்போதுதான் அதுபற்றி அறிகிறான்.

*ஆதாரம் : புல்நத்துல் ஜீறான். பக்கம்: 57*

وَمَا مِنْ دَآ بَّةٍ فِى الْاَرْضِ اِلَّا عَلَى اللّٰهِ رِزْقُهَا وَ يَعْلَمُ مُسْتَقَرَّهَا وَمُسْتَوْدَعَهَا كُلٌّ فِىْ كِتٰبٍ مُّبِيْنٍ

***எந்த பிராணிகளும் அதற்கான உணவு அல்லாஹ்வின் மீது பொறுப்பாக இருந்தே தவிர, பூமியில் (வாழ்வது) இல்லை; அவை தங்கு மிடத்தையும் அவன் அறிவான்; அனைத்தும் தெளிவான புத்தகத்தில் (பதிவு செய்யப்பட்டே) இருக்கின்றன***

*(அல் குர்ஆன்: 11:06).*

என்ற திருவசனத்தின் விளக்கத்தில், மேற்கண்ட வாசகத்தை எழுதியுள்ளார்.

மௌலவி ஹுஸைன் அலி ஸாஹிப், சீடர் றஷீத் அஹ்மது கொங்கோஹி.

**இஸ்லாமிய அகீதா:**

அல்லாஹுத்தஆலா எப்போதும் அனைத்து விடயங்களையும் அறிந் தவனாக இருக்கின்றான், அவனுடைய அறிவு அவனுக்கு வாஜிபானது; பூர்வீக மானது! ஒரு நொடியாவது அல்லாஹ் ஏதாவதொன்றைப் பற்றி அறியா திருந்தான் என்று நம்பினால், அவன் மார்க்கமற்றவனாகும்.

*ஆதாரம்: சகல அகீதா நூற்களும்.*

தேவ்பந்திகள் அல்லாஹ்வுக்கே "இல்முல் ஙைபு" மறைவான அறிவு இல்லையென்று கூறும் போது, றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களுக்குக் கூறுவதில் என்ன ஆச்சரியமிருக்கின்றது?

**தேவ்பந்திகள் அகீதா:**

5) றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களை "காத்தமுன் நபி" என்பதற்கு "கடைசி நபி" என்று பொருள் கூறுவது தப்பு!

அதன் சரியான பொருள்:

றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்கள் அசல் நபி ஏனையோர் தற்காலிக நபிகளாவார்கள்; ஆகவே, றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களுக்குப் பின் வேறு ஒரு நபி வந்தாலும் கூட, காத்தமுன் நபி என்பதில் எந்த மாற்றமும் வராது.

*ஆதாரம்: தஹ்தீருன் நாஸ்: காஸீம் நானோத்தவி*

*தேவ்பந்து மத்ரஸா நிறுவனர்.*

## இஸ்லாமிய அகீதா:

"காத்தமுன் நபி " என்பதற்கான பொருள், றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்கள் கடைசி நபியாகும; . அவர்களின் காலத்தில் அல்லது அவர்களுக்குப் பின், எவரையாவது ஒருவரை அசல் நபி; ஒரு நாளுக்கான நபி என்று விளையாட்டாகவோ; சித்தம் கெட்டோ ஒருவரை நபியாக்குவது அசாத்தியம்;

காத்தமுன் நபி என்றால், இறுதி நபி; அவர்களுக்குப் பின் வேறு நபி இல்லை; என்பதில் சகல முஸ்லிம்களும் இஜ்மாஃவாக இருக்கின்றனர்; இக்கருத்தை எவராவது நிராகரித்தால் (காதியானி, தேவ்பத்திகள் போன்று) முர்தத்தாவார்கள்.

## தேவ்பந்திகள் அகீதா:

6- அமல்களில் உம்மத்துக்கள் நபிக்கு நிகராக முடியும், சில வேளை மிகைக்கவும் செய்யலாம்.

*ஆதாரம் : தஹ்தீருன் நாஸ்: காஸீம் நானோத்தவி.*

## இஸ்லாமிய அகீதா:

நபியல்லாத ஒரு வலி, கௌது, ஸஹாபி உள்ளிட்டவர்களில் எவரும் பூரணமான அறிவிலும், அமலிலும் நபிக்கு நிகராக முடியாது! ஸஹாபியல்லாதவர் ஸஹாபிக்கு நிகராக முடியாது; ஸஹாபியின் சொற்பமான கோதுமை ஸதக்கா ஸஹாபியல்லாதவரின் பலநூறு கிலோ தங்கத்திற்கும் நிகராது; அது இதைவிட உயர்வாகும். (ஹதீது)

## தேவ்பந்திகள் அகீதா:

7- றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களுக்கு நிகராக, அவர்களைப் போன்று ஒருவர் இருப்பது சாத்தியம்.

*ஆதாரம் : எக்ரோஸி, இஸ்மாயீல் திஹ்லவி*

*பக்கம்: 144 பதிப்பு : பாறூக்கி.*

**இஸ்லாமிய அகீதா:**

அல்லாஹுத்தஆலா நிகரற்ற படைப்பாளன், அவனுடைய நேசரும் நிகரற்ற நல்லடியாராகும். அவர்கள் அகிலத்தின் பேரருள்; ஷபீஉல் முத்னிபீன் உள்ளிட்ட பண்புகளைக் கொண்டவர்களாக இருப்பதால், அவர்களைப் போன்ற ஒருவர் இருப்பது அசாத்தியமாகும்.

*பார்க்க: இம்தினா உன் நழீர்: பஸ்லுல் ஹக் கைறாபாதி)..*

**தேவ்பந்திகள் அகீதா:**

8- றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களை சகோதரர் என்று கூறமுடியும். காரணம், அவர்களும் மனிதர்தான்;;

*ஆதாரம் ,பறாஹீனே காத்திஆ: மௌலவி கலீல் அம்பேட்டி.,*

*தக்வியத்துல் ஈமான்: மௌலவி இஸ்மாயீல் திஹ்லவி.*

**இஸ்லாமிய அகீதா:**

றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களை எல்லோருக்கும் பொதுவான வார்த்தைகளால் அழைப்பது ஹறாமாகும், மரியாதைக்குறைவான வார்த்தைகளால் அழைத்தால் காபிராகி விடுவான். :(திருக்குர்ஆன்)

யாறஸூலல்லாஹ்! யாஹபீபல்லாஹ்! என்று கூறுவது அவசியமாகும்.

**தேவ்பந்திகள் அகீதா:**

9- ஷைத்தான், மலக்குல் மௌத், ஆகியோருக்கு றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களை விட, அறிவு அதிகமாகும்.

*ஆதாரம் , பறாஹீனே காத்திஆ:*

*மௌலவி கலீல் அஹ்மத் அம்பேட்டி*

**இஸ்லாமிய அகீதா:**

எவராவது ஒருவரை றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களை விட அறிவில் கூடியவர் என்று நம்பினால், காபிராகி விடுவான்.

*பார்க்க: ஜிபா ஜரீப்*

**தேவ்பந்தி அகீதா:**

10- றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களுடைய அறிவு, சிறு குழந்தை, பைத்தியங்கள், மிருகங்கள் உள்ளிட்டவைக்கு இருப்பது போன்ற சமனான அறிவுதான் இருக்கின்றது.

*ஆதாரம், ஹிப்ழுல் ஈமான்*

*அஷ்றாப் அலி தானவி*

**இஸ்லாமிய அகீதா:**

றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்கள் சகல படைப்புக்களை விடவும் மிகப் பெரிய ஆலிமாகும், றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் ஏதாவது ஒரு பண்பை அற்பத்தனமான பொருளோடு ஒப்பிடுவது; அல்லது சமப்படுத்துவது தெளிவான அவமரியாதையாகும்; இது குப்றாகும்.

**தேவ்பந்திகள் அகீதா:**

11- றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்கள் தேவ்பந்து மத்ரஸாவுக்கு வந்துதான் உருதைக் கற்றுக் கொண்டார்கள்.

*ஆதாரம் , பறாஹீனே காத்திஆ:*

*மௌலவி கலீல் அஹ்மது அம்பேட்டி*

**இஸ்லாமிய அகீதா:**

சகல மொழிகளையும் அல்லாஹுத்த ஆலா ஹளறத் நபி ஆதம் அலைஹி ஸ்ஸலாம் அவர்களுக்குக் கற்றுக்கொடுத்தான்,

றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் அறிவு ஞானம் அவர்களை விட எத்தனையோ மடங்கு அதிகமாகும்;

தேவ்பந்து மத்ரஸாவுக்கு வந்த பின்புதான் நபியவர்களுக்கு உருது மொழி வந்தது என்று கூறுபவன் மார்க்கமில்லாதவனாகும்.

## தேவ்பந்திகள் அகீதா:

12- படைப்பில் சிறியதோ, பெரியதோ (நபி, நபியல்லாதவர்) எவராயினும் அல்லாஹ்வின் தகுதிக்கு முன்னால், செம்மானை (சக்கிலியனை) விட இழிவானவானவனாகும்.

*ஆதாரம் : தக்வியத்துல் ஈமான்.*

*மௌலவி இஸ்மாயீல் திஹ்லவி.*

## இஸ்லாமிய அகீதா:

அல்லாஹுத்த ஆலா கூறுகின்றான்.

وَكَانَ عِنْدَ اللّٰهِ وَجِيْهًا

***அவர் அல்லாஹ்விடத்தில் மதிப்புக்குரியவராக இருந்தார்.***

*அல் குர்ஆன்: (33: 69).*

وَلِلّٰهِ الْعِزَّةُ وَلِرَسُوْلِهٖ وَلِلْمُؤْمِنِيْنَ

***கண்ணியம் என்பது, அல்லாஹ்வுக்கும், அவனுடைய றஸூலுக்கும்; முஃமின்களுக்கும் உரியதாகும்.***

*அல் குர்ஆன்: (63: 8).*

நபியை அல்லாஹ்வுக்கு முன்னால் செம்மானை விட, தாழ்ந்தராக பார்ப்பவன் தான் சக்கிலியனாவான்.

## தேவ்பந்தி அகீதா:

13- தொழுகையில் றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் நினைவு வருவது, தனது கழுதை, மாடு போன்றவையின் நினைவில் மூழ்குவதைவிட மோசமானதாகும்.

*ஆதாரம் , ஸிறாத்தே முஸ்தகீம்.*

*மௌலவி இஸ்மாயீல் திஹ்லவி.*

## இஸ்லாமிய அகீதா:

எவருடைய தொழுகையில் றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்வர்களின் நினைவு கண்ணியத்தோடு வரவில்லையாயின், அவருடைய தொழுகை அங்கிகரிக்கப்படமாட்டாது;:

தொழுகையில் அத்தஹிய்யாத்தில் றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் மீது ஸலாம் கூறுகின்றோம்; இது தொழுகைக்கு உள்ளேயா? அல்லது தொழுகைக்கு வெளியேவா?

*பார்க்க: ஹாழிர், நாழிர் ஆய்வை*

## தேவ்பந்திகள் அகீதா:

14- கனவில் றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்கள் ஸிறாத்துல் முஸ்தகீம் பாலத்தில் என்னை அழைத்துச் செல்கிறார்கள்., றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லவர்கள் பாலத்திலிருந்து வழுக்கிச் செல்கிறார்கள்; நான் அன்னாரை வழுக்கிச்செல்லாமல் பாதுகாப்பது போன்று கனவில் கண்டேன்.

*புல்ஙத்துல் ஷீறான், முபஷ் ஜிறாத்:*

*மௌலவி ஹுஸைன் அலி ஸாஹிப்.*

*சீடர் றஜீத் அஹ்மத் கொங்கோஹி*

## இஸ்லாமிய அகீதா:

றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் சிலதொண்டர்கள் மின்னல் வேகத்தில் ஸிறாத்துல் முஸ்தகீம் பாலத்தைக் கடப்பார்கள்,

பாலத்தைக் கடக்கமுடியாமல் அவதிப்படும் முஃமின்கள் றஸூலுள்ளாஹி

ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் உதவியால் றப்பி ஸல்லிம், ஸல்லிம் என்று கூறிக் கொண்டே கடப்பார்கள்.

றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்கள் ஸிறாத்துல் முஸ்தகீம் பாலத்தைக் கடக்கும் போது சறுக்கியபோது பாதுகாத்ததாகக் கூறினால் அவன் ஈமானில்லாதவனாகும்.

## தேவ்பந்திகள் அகீதா:

15- மௌலவி அஷ்றப் அலி ஸாஹிப் கிழடான போது, அவரிடம் முரீதான ஒரு கன்னிப் பெண்ணைத் திருமணம் முடித்தார்,

திருமணத்திற்கு முன்பு அஷ்றப் அலி தானவியின் வீட்டுக்கு அன்னை ஆயிஷா ஸித்தீக்கா றழியல்லாஹு அன்ஹா அவர்கள் வருவதாக அவரின் ஒரு சீடர் கனவு கண்டார், இக்கனவுக்கு அஷ்றப் அலி தானவி ஸாஹிபு சொன்ன விளக்கம் இதுதான்.

ஒரு கன்னிப் பெண் என் கரத்தில் வந்து சேருவார், காரணம், ஹஸறத் ஆயிஷா ஸித்தீக்கா றழியல்லாஹு அன்ஹா அவர்கள் றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களை திருமணம் செய்யும் போது அன்னாருக்கு வயது ஏழுதான். அதே தொடர்பை இங்கும் காணுங்கள். அதாவது, நானோ கிழவன், எனது மனைவியோ கன்னிப் பெண்.!

*ஆதாரம், றிஸாலா இம்தாத்:*

*அஷ்றப் அலி தானவி, ஹிஜ்ரி 1335.*

## இஸ்லாமிய அகீதா:

றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் சகல பீவிமார்களும் முஸ்லிம்களின் அன்னையர்களாகும், குறிப்பாக ஹஸறத் ஸித்தீக்கா அவர்களின் அதி உயர் தகுதிக்கு முன்னால் உலகம் முழுவது முள்ள அன்னையர்களும் குர்பானாக வேண்டும்.

எந்த ஒருமனிதனும் தனது தாயைக் கனவில் கண்டு அவர்களை மனைவிகளோடு ஒப்பிட மாட்டான்; இது ஹஸறத் ஆயிஷா ஸித்தீக்கா றழியல்லாஹு அன்ஹா அவர்களுக்குச் செய்யும் அவமரியாதையாகும்; .இதைவிட ஈமான் கெட்ட, வெட்கங்கெட்ட தனம் வேறு என்னதான் இருக்க முடியும்? தாயை மனைவியோடு ஒப்பிட்டவன் அயோக்கியனாவான்.

மேற்கண்டவை தேவ்பந்திகளின் அகீதாவுக்குரிய ஒரு நமூனா மட்டுமே! அவர்களின் முழு அகீதாக்களையும் எழுதுவதாயின், அதற்கு இங்கு இடம்

போதாது; தனியான ஒரு வால்யூம் எழுத வேண்டிவரும்.

உண்மை என்னவென்றால், றாபிழிகள், காறிஜிகளிடமிருந்து வந்த அம்புகள் ஸஹாபாக்கள், அஹ்லுல் பைத்துக்களையே குறிவைத்தன, ஆனால் தேவ்பந்திகளின் பேனாவால் அல்லாஹ்வும் தப்பவில்லை, அல்லாஹ்வின் றஸூல்; ஸஹாபாக்கள்;அஹ்லுல்பைத்துக்கள்;உம்முஹாத்துல் முஃமினீன்கள் உள்ளிட்ட சகலருமே அவமானப்பட்டனர்.

நான் உங்கள் தாயைக் கனவில்கண்டேன், அதன்பொருள் எனது மனைவியாவார் என்று கருத்து வைத்தேன் என்று கண்ணியமான ஒருவரைப் பார்த்து எவராவது ஒருவர் கூறினால், நிச்சயமாக அதை அவர் பொறுத்துக் கொள்ள மாட்டார்;

நாம் நபியவர்களின் அடிமைகளின் அடிமைகள்; நமது தாயாகிய ஆயிஷா ஸித்தீக்கா றழியல்லாஹு அன்ஹா அவர்களைப் பற்றிக் கூறிய கேவலங்கெட்ட இந்த வார்த்தைகளை எப்படிப் பொறுத்துக் கொள்ள முடியும்?

பேனா அவர்கள் கையிலிருக்கின்றது,நாங்கள் முஸ்லிம்களை விட்டும் வேறு குழுவாகப் பிரிந்து விட்டோம் என்று மக்களுக்கு இதன் மூலமாக பிரகடனப்படுத்துகின்றார்கள்; இல்லையென்றால், இவ்வாறு கூறியதற்காக அவர்கள் தவ்பாச் செய்ய வேண்டும்.

இக்பால் அஸீஸி அவர்களின் புதல்வர் செய்யித் மஹ்மூதுஷாஹ் ஸாஹிப் ஸல்லமஹுல்லாஹ் அவர்கள் “அல்லாஹ்வுக்கு பொய் சொல்ல முடியும்” என்ற அவர்களின் வாதத்திற்கும், மற்றும் ஏனைய தேவ்பந்திகளின் அகீதாக்களுக்கும் தக்க மறுப்பு எழுத வேண்டும் என்று என்னை வற்புறுத்தினார்கள்; ஆனாலும், அதற்கான சூழல் இப்போது இல்லை; ஆகவேதான் அவர்களின் அகீதாக்களின் பட்டியலை மட்டும் இங்கே குறிப்பிட்டோம்.

இன்ஷாஅல்லாஹ் மற்றுமொரு பாகத்தில் மேற்குறிப்பிட்ட வகைகளுக்கு தனியான ஒரு பாகத்தில் பதில் எழுதுவோம்; அதன்மூலம் அவர்களின் தர்க்கக்கலையில் உள்ள அவர்களின் திறமைகளும் வெளிச்சத்திற்கு வரும்.

மௌலவி ஹுஸைன் அஹ்மத் ஸாஹிப், மௌலவி முர்தழா ஹஸன் ஸாஹிப் உள்ளிட்டோர் இவை பற்றி முன்வைத்த சப்பைக் கட்டுக்களின் வண்டவாளங்களையும் இன்ஷாஅல்லாஹ் தோலுரித்துக் காட்டப்படும்.

அஹ்லுல் ஸுன்னத் வல்ஜமாஅத்தாராகிய நாங்கள் குருபக்தர்கள், றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களையும், ஷைகுமார்களையும் அல்லாஹ்வோடு சேர்த்துப் பார்ப்பதாக ஒரு குற்றச்

சாட்டை முன்வைக்கின்றனர்;

இதன் காரணமாக எம்மை "முஷ்ரிக்" என்கின்றனர்; தேவ்பந்திகள் எந்தளவு குருபக்தர்கள் என்பதை நாங்கள் எடுத்துக் காட்டுவோம்; தங்களுடைய ஷைகுமார்களைப் பற்றி இவர்கள் விளங்கி வைத்தவை என்ன? என்பதை பாருங்கள்.!

மௌலவி மஹ்மூது ஹுஸைன் ஸாஹிப் தனது ஷைகான றஷீத் அஹ்மது கொங்கோஹியைப் பற்றி இவ்வாறு பாடுகின்றார்.

تمھارے تربث انور کو دےکر سے تشبہ - کہوں ہوں بار بار ارنی مری دیکھی بھی نادائی

உங்களுடைய பிரகாசமான கப்று மண்ணைப் பார்த்த பின், தூர்ஸீனாய் மலையை ஒப்பிட்டு அடியேனுக்கு முகத்தைத் காட்டுக! என்று அடிக்கடி கூறுவேன்.

மௌலவி றஷீத் அஹ்மதின் கப்று தூர்ஸீனாய் மலையாகிவிட்டது. ارني எனக்கு உன்முகத்தைக் காட்ட! என்று கூறிய மூஸா அலைஹிஸ்ஸலாம் அவர்களாக மஹ்மூது ஹஸன் ஆகிவிட்டார்; றஷீத் அஹ்மத் "றப்பாக" ஆகிவிட்டார்.

அதே மர்தியாவில் பாடுகிறார்.

زبان پر اہل اہواکی ھےکیوں اغل ہبل شاید - اڈھادنیا سے کوئی بانی اسلام کا ثانی

மனோ இச்சைவாதிகளில் உஙலும், ஹுபலும் எதற்காக இருக்க வேண்டும்? உலகத்திலிருந்து எதையும் விடாமல் எடுத்து விடு! என்று இஸ்லாத்தின் இரண்டாவது நிறுவனரின் நாவிலிருந்து வெளிவந்தது!

இதில் மௌலவி றஷீத் அஹ்மத் கொங்கோஹியை இஸ்லாத்தின் நிறுவனரான முஹம்மதுர் ரஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் இரண்டாவது நபர் என்று கூறப்பட்டுள்ளது.

மீண்டும் கூறுகின்றார்.

وہ تھے صدیق اور فاروق پھر کہئے عجب کیاہے - شہادت نے تہجد میں قدم پوسی کی گرڈھاتی

அவர் ஸித்தீக்காகவும், பாறூக்காகவுமிருந்தார். (அதனால்) தஹஜ்ஜுது